# தேடுவோம் தேடிப் பெறுவோம்

## (கபீர்)

ஓஷோ

தமிழில் :

**சி. எஸ். தேவநாதன்**


Since 1976

**கவிதா பப்ளிகேஷன்**

8, மாசிலாமணி தெரு,
பாண்டி பஜார்,
தியாகராய நகர்,
சென்னை - 600 017.

044-4216 1657
+91-7402222787
kavitha_publication@yahoo.com
kavithapublication@gmail.com
www.kavithapublication.in

தேடுவோம் தேடிப் பெறுவோம்

முதற்பதிப்பு : டிசம்பர் 2011
இரண்டாம் பதிப்பு : டிசம்பர் 2016
மூன்றாம் பதிப்பு : ஜூன் 2019

விலை : Rs. 450/-

Theduvom Thedi Peruvom (Tamil)
Originally published in English as
**FISH IN THE SEA IS NOT THIRSTY**



| | | |
|---|---|---|
| Translated by | : | **C. S. Devanathan** |
| Publishing Editor | : | **Sethu Chockalingam** |
| First Edition | : | December 2011 |
| Second Edition | : | December 2016 |
| Third Edition | : | June 2019 |
| Pages | : | **528** |
| Price | : | **Rs. 450/-** |
| ISBN | : | 978-81-8345-202-1 |
| Printed a | : | Sree Durga Printers, Chennai |



Published by :
**KAVITHA PUBLICATION**
8, Masilamani Street, Pandy Bazaar,
T. Nagar, Chennai - 600 017
Ph: 044-4216 1657 what'sapp : +91-7402222787
e-mail: kavitha_publication@yahoo.com
Website : www.kavithapublication.in

சில ஆண்டுகளுக்கொரு முறை, தம்மைச் சுற்றியுள்ள மாற்ற முடியாத உலகை மாற்றுவதற்கென்றே ஒருவர் தோன்றுகிறார். பெரிய அளவில் கண்டுணர முடிந்தாலன்றி, உடனே அத்தனைத் தெளிவாகப் புரிந்துகொள்ள முடியாத வழிகளில் அதை மாற்றுகிறார் அவர்.

அத்தகைய தனித்தன்மை கொண்டவர்களில் ஓஷோவும் ஒருவர். அவருடைய வார்த்தைகள் இனி வரும் காலங்களிலும் அதிர்வை ஏற்படுத்திக் கொண்டிருக்கும்.

அவருடைய வார்த்தைகள் அனைத்தும் இதுபோன்ற நூல்களில் பார்த்து எழுதி, பதிவு செய்யப்பட்டிருக்கின்றன. அப்படி எழுதப்பட்ட வார்த்தைகள் மாற்றத்தை உண்டுபண்ணும் செய்தியை வாசகர்களிடம் கொண்டு செல்கின்றன.

ஓஷோவைப் பொறுத்தவரை எல்லா மாற்றங்களுமே தனியொருவர் பற்றியதுதான். மாற்றுவதற்கு சமூகம் என்பதாய் எதுவுமில்லை. அது நம் எல்லாருக்குமே ஒரு நேரத்தில் நிகழக் கூடும்.

எனவே, இந்த நூலின் ஆதாரப் பொருள் எதுவாயினும் அது முக்கியமில்லை. ஓஷோவின் வார்த்தைகளினூடாக உள்ளதே அந்தச் சரடு, ஒரு காதல் பாட்டு போன்றது. சற்றும் எதிர்பாராத விதமாய் தக்க தருணத்தில் நாம் அதைக் கேட்கக்கூடும். அந்த வார்த்தைகள் எதைக் குறிப்பிடுவதாயிருந்தாலும் உண்மையில் அவை நமக்காகவே குறிப்பிடப்பட்டதுபோல் இருக்கும் என்பது வியத்தற்குரியது.

இது ஒன்றும் சாதாரண காதல் பாட்டல்ல, அதற்கும் மேலே. வார்த்தைகளுக்கப்பால், இதயத்திற்குமப்பால் அத்தனை புரிதல் களுக்குமப்பால் உள்ள ஒரு மவுனத்தை கேட்பதற்கு நம் இதயத்தைத் திறந்து வைக்கிற ஓர் அழைப்பு அது.

# பொருளடக்கம்

*பக்கம்*

தண்ணீரில் மீனுக்குத் தாகமென்றால்
சிரிப்பு வருகிறது எனக்கு
உன்னுள் ஒளிந்திருக்கிறது
அனைத்திலும் துடிப்பு மிக்க ஒன்று
அந்த உண்மையைப் புரிந்து கொள்ளும்
ஆர்வம் உனக்கில்லை, அதனால்தான்
ஒவ்வொரு புனிதத் தலமாய்
நீ ஓடிக் கொண்டிருக்கிறாய்
உனது ஆன்மாவின் உறைவிடத்தை
நீ கண்டறியாவிடில்
கல்கத்தா, திபெத் என்று
எங்கு வேண்டுமானாலும் செல்
நீ மெய்ப்பொருளை அறிய விரும்பினால்
அதை கபீரிடம் கேள்.
இந்த உலகம் ஒருபோதும்
நிஜமானதல்ல
நாம் விவாதிக்கிற கடவுளைப்பற்றி
நான் அறிய மாட்டேன்
இருள்கவியும் நேரத்தில் யாரோ
உரத்த குரலில் அழைக்கிறார்கள்
புனிதமானவரின் காதில், அது
விழாமல் போகாது
ஊர்ந்து செல்கிற பூச்சியின் காலில்
கொலுசின் இனிய ஒலி கேட்கும்
நீ மேலும் மேலும் ஜெபித்தபடி
உன்விந்தைமிகு எண்ணங்களை
நெற்றியிலே வரைபடமாய் தீட்டிவை

கடல் மீனுக்குத் தாகமில்லை, ஆனால் மனிதனுக்கு உண்டு. தான் வாழ்கிற பிரபஞ்சத்தைப் பற்றி அவன் முழுமையாய் அறிந்தவனல்லன். அவன் பிறந்ததும் சுவாசிப்பதும் ஒருநாள் கரைந்து மறைவதும் அந்தப் பிரபஞ்சத்தில்தான். கடவுள் என்கிற மனத்திண்மை கொண்ட மனிதனிடம் கடவுட்தன்மை இருக்கிறது, அவன் அதை மறந்தாலும்கூட.

கடலில் வாழும் மீனுக்குத் தாகமில்லை, ஆனால் மனிதன் தாகத்தோடு இருப்பவன். கடவுள் ஒரு கடல். அவர் உங்களுக்கு உள்ளேயும் வெளியேயும், உங்களைச் சுற்றிச் சூழ்ந்தும் இருக்கிறார். கடவுள் ஒரு நபரல்லர், அவர் எல்லாப் பக்கங்களிலும் நிரம்பி வழிகிற ஓர் இருப்பு நிலை. ஒளியாகவும், பிரபஞ்ச அழகாகவும், கம்பீரமாகவும், அற்புதமாகவும், மறைபொருளாகவும் அவர் வெளிப்பட்டுக் கொண்டிருக்கிறார். வாழ்வின் ஒட்டுமொத்த ஜாலத்திலும் (மாயவித்தை) கடவுட்தன்மை இருக்கிறது.

கடவுட்தன்மை வாழ்ந்து பார்க்கப்பட வேண்டியதேயன்றி, வழிபடுவதற்கானதல்ல. கடவுட் தன்மையை வாழ்ந்து பார்க்க நீங்கள் எங்கேயும் போக வேண்டியதில்லை, நீங்கள் முன்பே அது வாக இருக்கிறீர்கள். கடவுட் தன்மை கொள்வதற்காக உங்களுடைய பண்பையோ நடத்தையையோ நீங்கள் மேம்படுத்துகிற அவசிய மில்லை. அது முன்பே செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அது உங்கள் பிரக்ஞை (consciousness) அன்றி வேறேயென்ன?

இறையுணர்வைப் பெறுவதற்காக நீங்கள் ஓர் இந்துவாகவோ, இஸ்லாமியராகவோ அல்லது ஒரு கிறிஸ்தவராகவோ மாற வேண்டியதில்லை. நீங்கள் முன்பே அதைக் கொண்டிருக்கிறீர்கள். அது முன்பே உங்களில் இருக்கிறது, அது என்றோ நிகழப் போவதல்ல, இறையுணர்வு என்பது இந்தக் கணத்திலேயே

உங்களுக்குள் வர்ஷித்துக் கொண்டிருப்பதுதான். ஆனால் நீங்கள் விளைவுகளுக்கு மனதை ஆட்படுத்தாதவராயிருக்கிறீர்கள். அது உங்களிடம் வருகிறது. ஆனால் நீங்கள் அதை வரவேற்றுக் கொள்ளவில்லை. அது உங்கள் கதவைத் தட்டுகிறது. ஆனால் நீங்கள் அதைக் காதில் போட்டுக்கொள்ளவில்லை. அது கால காலமாய் தட்டிக்கொண்டேயிருக்கிறது.

பைபிளில் (Bible) இடம் பெற்ற கதையொன்று -

ஆதாம் கடவுளுக்குக் கீழ்ப்படியாமல், அச்சத்தோடு இருந்தான். கடவுள் அவனைத் தேடிக் கொண்டு வந்தார். கடவுளிடம் இருந்து தன்னை மறைத்துக் கொள்வதற்காக அச்சமுள்ள ஆதாம் ஒரு புதரின் பின்னால் ஒளிந்துகொண்டான். அவரை எதிர்கொள்ளும் துணிவில்லை அவனுக்கு. ஏடன் தோட்டத்தில் நுழைந்த கடவுள், 'ஆதாம், நீ எங்கே இருக்கிறாய்?' என்று குரல் கொடுப்பதாகக் கதையில் சொல்லப்படுகிறது.

ஆதாமிற்குக் காதில் விழுகிறது. ஆயினும் அவன் பதிலளிக்கவில்லை.

இது ஒன்றும் கதையல்ல, கடந்த காலத்தில் நிகழ்ந்த ஏதோ ஒரு நிகழ்வல்ல. உங்கள் ஒவ்வொருவர் வாழ்விலும் நடந்து கொண்டிருப்பதுதான். பிரபஞ்சம் உங்களை அழைக்கிறது, நீங்கள் அதைக் கேட்பதில்லை, அப்படியே கேட்டாலும் அதற்குப் பதிலளிப்பதில்லை. நீங்கள் ஒளிந்து கொண்டு விடுகிறீர்கள். உங்கள் இருப்புணர்வின் உண்மைத் தன்மையிடம் இருந்தே உங்களை ஒளித்துக் கொள்கிறீர்கள், உங்களிடமிருந்தும் உங்கள் அசலான முகத்தைப் பார்க்க உங்களுக்கு விருப்பமில்லை. கடவுட்தன்மையே உங்களுடைய நிஜமான முகம். உங்களுடைய நிஜமுகத்தை நீங்கள் பார்க்காவிடில், நீங்கள் துன்பத்தில் வாழும்படியாகும். தன்னுடைய விழிப்புணர்வை ஒருவர் அறியாதிருப்பது பெருந்துன்பம். கவனமுடன் இருப்பதும், தன்னுணர்வோடு இருப்பதும், உங்களுக்கு வழங்கப்பட்டவற்றை, உங்களுக்குள் மறைந்து கிடக்கிற பொக்கிஷங்களைத் தெரிந்து கொண்டிருப்பதும் பரம சுகத்தையளிக்கும்.

மனிதன் ரொம்பவும் ஆச்சரியமானவன், உலகிலேயே அதிவிசித்திரமான மிருகம் அவன். வேறெந்த மிருகமும்

அவனைப்போல் அத்தனை வேதனையைச் சுமந்திருக்கவில்லை. மரங்கள்கூட மட்டற்ற பரமசுகத்துடன் காணப்படுகின்றன. பாறைகளுக்கும் மனிதனைவிட அதிக உணர்ச்சியிருக்கிறது. அவை பிரபஞ்சத்துடன் அல்லது முழுமையுடன் இசைவாயிருக்கின்றன. மனிதன்தான் இருந்த பாலத்தையே உடைத்தெறிந்து விட்டான்.

ஏன் அப்படியாயிற்று? அதைப் புரிந்துகொள்ள வேண்டும். எப்போதே ஒருமுறை கடவுளுடன் தன்னை இணைத்துக் கொள்கிற வேலையை இயேசு, புத்தர், கபீர் போன்றவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். ஓரோரு சமயத்தில் அப்படி நடக்கிறது. அவர்கள் மிகச் சிலர்தான், அவர்கள்மீது நம்பிக்கை வைக்கப் படுவதில்லை.

இயேசு, புத்தர், ஜராதுஷ்ட்ரர், முகமது பற்றியெல்லாம் மக்கள் தொடர்ந்து பேசவே செய்கிறார்கள். ஆனால் அடியாழத்தில் அவர்களுக்குச் சந்தேகம் இருக்கிறது. அவர்களுடைய பிரபஞ்ச இருப்பு குறித்த சந்தேகம். அவர்கள் ருசித்த தேனின் ருசியை – அமிர்தத்தின் சுவையை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள். உங்கள் வாழ்க்கை கசப்பு நிரம்பியதாய், அருவருக்கத்தக்கதாயிருக்கிறது. உங்கள் வாழ்க்கை ஒரு பிணியாகிவிட்டது. அவர்கள் பரம் பொருளைப் பற்றியும், பரமசுகத்தைப் பற்றியும், சாசுவதமான அமைதி குறித்தும் பேசுகிறார்கள். அதையெல்லாம் நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள்.

நச்சுத்தன்மையுள்ள ஒரு வாழ்க்கையைத்தான் உங்கள் அனுபவத்தில் நீங்கள் உணர்ந்திருப்பீர்கள். அந்த மிகச் சிலர் கூறிச் சென்றவற்றுக்கு மிகவும் எதிரிடையானது உங்கள் அனுபவம். அவர்களை எப்படி உங்களால் நம்பமுடியும்? நீங்கள் பெரும் பான்மையாக இருப்பவர். இந்த வாழ்க்கை ஒரு நரகம் என்பது உங்கள் அனுபவம். உங்கள் அனுபவத்தை இலட்சக்கணக் கானவர்கள் ஆதரிப்பார்கள்.

தன்னுடைய புல்லாங்குழலில் தேவகானங்களை இசைக்கிறார் கிருஷ்ணர். நம்பவே முடியாதவை கபீரின் பாடல்கள். ஒரு மரியாதைக்காக நீங்கள் அவற்றைக் கேட்டு வைப்பீர்கள். சம்பிரதாயத்தின் காரணமாக நீங்கள் எதுவும் சொல்லாமலிருக்கலாம். ஓர் இயேசு, கபீர் அல்லது ஒரு பயாஸித்தின் இருப்பு உங்களை

ஈர்த்திருக்கலாம். உங்களை ஆடக்கியாளக்கூடிய வசீகரத்தன்மை கொண்டவர்கள் அவர்கள். நீங்கள் வாய் மூடிப் போகிறீர்கள். உங்களால் எதையுமே மறுக்க முடிவதில்லை. நீங்கள் மறுக்க வில்லை என்பதால் இசைவாகி விட்டீர்கள் என்றாகி விடாது. இரண்டுமே வெவ்வேறு செயல்கள்.

மறுக்காமல் இருப்பதும், ஏற்பதும் வெவ்வேறு நடப்புகள். மறுக்காமல் இருப்பது உங்களை எவ்விதத்திலும் மாற்றிவிடாது. அந்த மறுப்பு உங்களுக்குள் வார்த்தையின்றி, மவுனமாய் இருந்து கொண்டிருக்கும். அந்த மறுப்பு ஒளிவுமறைவற்ற (எளிதில் புலப் படத்தக்க) ஓர் உறையைப்போல் உங்கள் இருப்புணர்வைச் சுற்றிச் சூழ்ந்திருக்கும். அதை நீங்கள் பார்க்காமலிருக்க முடியாது. அதன்மூலம் நீங்கள் பார்க்கக்கூடும். ஆனால், அது பிரபஞ்சத் துடன் உங்களை இரண்டறக் கலக்கவிடாது. நீங்கள் இசைவாகிற வரை அது அப்படித்தான் இருக்கும். 'ஆம்' என்கிற ஒற்றைச் சொல்லில், ஒப்புதலைத் தெரிவிக்கிற சொல்லில் இருக்கிறது அத்தனை மதங்களும். எல்லா வேதங்களையும், விவிலியங் களையும், மறைநூல்களையும் 'ஆம்' என்கிற அந்த ஒற்றைச் சொல் தன்னுள் கொண்டிருக்கும்.

அதுவே, தங்கள் பிரார்த்தனையின் முடிவில் கிறிஸ்த வர்களும் இஸ்லாமியர்களும் பயன்படுத்துகிற சொல்லின் பொருள். ஆமென்! 'ஆம், இறைவனே! நான் உம்மை முழுமையாக ஒப்புக் கொள்கிறேன்' என்கிற பொருள் கொண்டது ஆமென்.

நீங்கள் கபீருடன் வாதிட மாட்டீர்கள். கபீர் மாதிரி ஒருவருடன் வாதிடுவது கடின காரியம். அவருடைய இருப்புக்கு அப்படியொரு அதிகாரம் இருக்கிறது. அவரது கண்களும், மகிழ்ச்சிகரமான தோற்றமும் உங்களை வசியப்படுத்துகிற வலிமை கொண்டவை. நீங்கள் அவருடன் வாதிட விரும்பினாலும், உங்களுக்கு வாதிடத் தோன்றாது. ஆனால், வாதத்தின் மையக்கருத்து அப்படியே இருக்கிறது. கபீர் போனதும், இயேசு போனதும், அந்த விவாத நடைமுறை' மேற்பரப்புக்கு வந்து விடுகிறது. மறுக்கும் தன்மை மேலெழுகிறது. சம்பிரதாயமாக அதுவரை காத்திருந்த அமைதி மவுனம் செயலற்று, விளைவை இழக்கிறது.

மக்கள் தேவாலயங்களுக்குச் செல்வதும், கோயில்களுக்கும் மசூதிகளுக்கும் சென்று வருவதும் எல்லாம் ஒரு சம்பிரதாயத் துக்குத்தான். அது வார விடுமுறை நம்பிக்கை. அது மற்றவர் களுடன் கலந்து பழகுவதற்கான ஒரு நடப்பு. அவர்கள் தனிப்பட்ட முறையில் தங்களை ஒப்புவித்துக் கொள்ளவோ, உட்படுத்திக் கொள்ளவோ செய்யவில்லை. ஒரு மாற்றத்தைப் பெறவேண்டி அவர்கள் கோயிலுக்கும் தேவாலயத்துக்கும் போய்க் கொண்டி ருக்கவில்லை. அதில் சமூக ரீதியான ஒரு பயன்பாடு இருக்கிறது. அது ஒரு 'க்ளப்' (விளையாட்டு பொழுது போக்கிற்கான சங்கம்) மாதிரி. அதனை ஒரு 'ரிலிஜியஸ் க்ளப்' (religious club) என்று நீங்கள் அழைக்கலாம். அங்கே அவர்கள் ஒன்றுகூடி, வம்பளப்பு களில் ஈடுபடுவார்கள். அது சந்தித்துக் கொள்கிற ஓர் இடம். ஆனால் அது உங்களுக்கும் கடவுளுக்கும் இடையே சந்திப்பை ஏற்படுத்துகிற இடமல்ல. அதற்கானதாய் கருதப்பட்டாலும் அப்படி இருக்கவில்லை.

நீங்கள் வெறும் கையோடு கோயிலுக்குச் சென்று, வெறுங் கையராய் திரும்புகிறீர்கள். அங்கே எதுவும் நிகழ்வதில்லை. அந்த முறையில் எதுவும் நிகழ முடியாது. இறையுணர்வு என்பது ஒப்பு வித்தலில் ஈடுபாட்டில் வரவேண்டும். இறையுணர்வு உங்களுடைய முழுமையை, சரணாகதியை, ஒப்புதலை வேண்டுகிறது.

எவ்வித நிபந்தனையும் பிணைப்பும் இல்லாமல் உங்கள் ஒப்புதலை நீங்கள் தெரிவிக்கிறபோது, அந்த ஒப்புதல் அச்சுறுத்தலால் தெரிவிக்கப்படவில்லை என்கிறபோது மிகவும் நேர்த்தியாக அது அமைந்து விடும். அதில் மிகப்பெரிய ஆற்றலும் இருக்கும். அந்த வேக உணர்வு உங்களை மூல உலோகத்தில் (base metal) இருந்து தங்கமாக்கி விடும், வெகுசாதாரண மனிதனான உங்களுக்குத் தெய்விக உணர்வைத் தந்துவிடும்.

ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். எவ்வித உடல், மன அச்சுறுத்தலின் விளைவாகவும் நீங்கள் அப்படியாகி விடக் கூடாது. கிறிஸ்தவராக இருக்கிற ஒருவர் அவருடைய குழந்தைப் பருவத்தில் இருந்தே அப்படியாகும்படி அச்சுறுத்தப்பட்டிருப்பார். அதே கதைதான் ஒரு யூதரின் விஷயத்திலும். நீ யூதனாக இருந்தாக வேண்டும் என்று தொடக்கத்தில் இருந்தே அவர்

அச்சுறுத்தப்பட்டிருக்கலாம். ஓர் உளவியல் சார்ந்த கட்டுப்படுத்தும் நிலை தொடர்கிறது. குழந்தைகள் ஏமாற்றப்படுகிறார்கள். குழந் தைகள் இந்துக்களாகும்படி, ஜைனர்களாகும்படி, புத்தர்களாகும்படி கட்டாயப்படுத்தப்படுகிறார்கள். தங்கள் குழந்தைகளுக்கு தாங்கள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதே பெற்றோர்களுக்குத் தெரிவதில்லை. தங்கள் குழந்தைகளின் கடமை உணர்வை, மதத்தொடர்பை அவர்கள் தடுத்து விடுகிறார்கள் என்றே சொல்ல வேண்டும். ஆம், அதைத்தான் தங்கள் பிள்ளைகளுக்கு அவர்கள் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்தக் களங்கமற்ற ஆத்மாக் களுக்கு மதத்தின் பெயரால் அவர்கள் நஞ்சூட்டிக் கொண்டிருக் கிறார்கள். தங்கள் குழந்தைகளை இறையுணர்வு பெறச் செய்வதற்குத் தாங்கள் உதவுவதாக அவர்கள் எண்ணுகிறார்கள். அப்படி நம்பவும் செய்கிறார்கள். ஆனால் உண்மை என்னவோ முற்றிலும் வேறாயிருக்கிறது: அவர்கள் மிகப்பெரிய தடைகளை யல்லவா ஏற்படுத்திக் கொண்டிருக்கிறார்கள்.

மிரட்டலுக்கஞ்சி ஒப்புதலளிக்கிற ஒருவன் தன்னுடைய ஆற்றலை இழந்து விடுகிறான். நீங்கள் அவனை வலுக்கட் டாயப்படுத்தி பணிய வைக்கிறபோதே அவனுடைய திறனைப் பாழ்பண்ணி விடுகிறீர்கள் எப்போதைக்குமாய். அச்சுறுத்தப்பட்ட நிலையில் அவன் தன்னுடைய இசைவைத் தெரிவித்து விடுகிறான்.

குழந்தைகள் உதவியற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் உங்களைச் சார்ந்திருக்கிறார்கள் - நீங்களில்லாமல் அவர்களால் தாக்குப்பிடிக்க முடிவதில்லை. அவர்களுடைய ஊறுபடுந்தன்மை (vulnerability)யை நீங்கள் பயன்படுத்திக் கொள்கிறீர்கள். அவர் களுடைய கையாலாகாத்தனத்தை உங்களுக்குச் சாதகமாக்கிக் கொண்டு விடுகிறீர்கள். காலகாலமாக அதுதானே இங்கு நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் கடவுளைப் பற்றி நிறையப் பேசினாலும் அவரை உங்களால் காணமுடியாது. மதத்தைப் பற்றியும் இறைமையியல் (theology) பற்றி நிறைய் பேசப்படுகிறது. ஆனால் வாழ்தல் குறித்து எதுவும் பேசப்படுவதில்லை.

ஏதாவதொரு வகையில் எல்லாருமே சமயப் பற்றுடையவர் களாக இருக்கிறார்கள். ஒருவர் இந்துவாக இருக்கிறார், ஒருவர் முகமதியராக, ஒருவர் கிறிஸ்தவராக இருக்கிறார். ஆனால்

நடைமுறையில் யாரிடமும் கடமை உணர்வு இருப்பதாய் தெரியவில்லை. நாம் சமயப்பற்றுடன் இருப்பதுபோல் ஒரு புனைவை (கற்பனை)த் தோற்றுவித்துக் கொள்கிறோம். அந்தப் புனைவு ரொம்ப மலிவானது. எளிதில் உதவக்கூடியது. அப்படி யிருக்க இறைவனைத் தேடிப்பிடிக்கிற சாகசத்தில் யார் ஈடுபடப் போகிறார்கள்? அது கடினமான வேலை. அதற்காக தற்பெரு மையை அவர் விடவேண்டியிருக்கும். தற்பெருமையை இழப்பதென்பது வாழ்க்கையில் மிகவும் கடின காரியமாயிற்றே.

அகந்தையை முடிவுக்குக் கொண்டு வராவிட்டால் மீன் தாகமாகவே இருக்க வேண்டியிருக்கும். அகந்தை இல்லை யென்றாகி விட்டால் அத்தனை தாகமும் மறைந்து விடுகிறது. காரணம் அகந்தைக்கு நீங்கள் முற்றுப்புள்ளி வைக்கிற பொழுதில் உங்களுக்கும் கடலுக்கும் இடையிலான சுவர் காணாமல் போய் விடுகிறது. அந்நிலையில் கடலின் ஒரு பகுதியாகி விடுகிறீர்கள் நீங்கள். பிறகெப்படி நீங்கள் தாகமாயிருப்பீர்கள்?

கடுமையான மனவேதனையில் கண்டிப்பாய் தாகமும் பசியும் ஏற்படுகிறது மனிதனுக்கு. மனிதன் உண்மையோ, நம்பிக்கையோ இல்லாத வாழ்க்கையை வாழ்கிறான். வாழ்வதுபோல் பாசாங்கு செய்கிறான், அவன் உண்மையிலேயே வாழ்ந்து கொண்டிருக்க வில்லை. அது பொருளற்ற அசைவுகளைக் கொண்டது அவனு டைய வாழ்க்கை. மனிதர்களைக் கூர்ந்து கவனியுங்கள், ஏன் உங்க ளையும் ஆராய்ந்து பாருங்கள். ஒரு நடனத்தைப் போல் நளின மாய் எதையும் காணமாட்டீர்கள். மனிதர்கள் இழுபடுகிறார்கள், வாழ்க்கை ஒரு சுமையாய், கடுமையான சுமையாயிருக்கிறது. எப்படியோ சகித்துக்கொள்கிறார்கள். வாழ்க்கை ஒரு கொண் டாட்டமாய், எப்படியிருக்க வேண்டுமோ அப்படி இல்லை.

நீங்கள் எடுத்து வைக்கிற அடிகளில் நடனத்தின் துள்ளல் இல்லை. உங்கள் இதயம் பரவசத்தில் அதிரவில்லை. நீங்கள் ஒன்றும் வெற்றிக்களிப்பிலோ, ஆனந்தத்திலோ ஆடிக்கொண் டிருக்கவில்லை. உங்களுக்குள் சக்தி வெள்ளப்பெருக்கெடுத்தோட வில்லை. என்ன வாழ்க்கையிது திரும்பத் திரும்ப அதே வட்டங்களில் சுழல்வது, மந்தத்தன்மை அறிவற்ற நடைமுறைகள் என்றல்லவா போய்க் கொண்டிருக்கிறது. 'நாளை குறிப்பிடத்தக்க

ஒன்று நிகழக்கூடும்' என்ற நம்பிக்கை... அந்த 'நாளை' என்பது ஒருபோதும் வருவதில்லை, நினைக்கிறபடிக்கு எதுவும் நடப்ப தில்லை.

மரணம் வந்தாலும் நிம்மதி என்கிற அளவிற்கு வாழ்க்கை அத்தனை மோசமாயிருக்கிறது. வாழ்வின் சூன்யத்தை மறைத்துக் கொண்டு விடும் முயற்சியாய் நாம் எதையாவது செய்தபடி யிருக்கிறோம்: உள்ளாக இருக்கும் வெற்றிடத்தை, இருளை (தெளிவின்மை) நாம் காண்பதில்லை.

நீங்கள் கவனித்துப் பார்த்தீர்களானால் தெரியும் மனிதன் வேதனையோடும், பதற்றத்தோடும் வாழ்ந்து கொண்டிருப்பது. அவன் முன்பே நரகத்தில்தான் உழன்று கொண்டிருக்கிறான். யாரேனும் என்னிடம், 'ஓஷோ, உங்களுக்கு நரகத்தில் நம்பிக்கை உண்டா' என்று கேட்டால், நான் எப்போதுமே சொல்கிறேன், 'நம்பிக்கை என்கிற கேள்விக்கே இடமில்லை, நீங்கள் அதில்தானே வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்' என்று. நரகம் குறித்து சந்தேகப்பட வேண்டியதில்லை. சொர்க்கம் பற்றிய சந்தேகம் வரலாம், நரகத்தைப் பற்றியல்ல. நரகம் அன்றாட நடைமுறை. ஆனால் ஏன்? அது எதற்காக அப்படி இருக்க வேண்டும்? மனிதர் களின் தனிப்பட்ட தன்மைகளைப் பற்றி நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

இந்த உலகில், உண்மையில் பிரபஞ்சத்திலேயே மனித மிருகத்திடந்தான் இரட்டைத்தன்மை இருக்கிறது. மற்றவற்றிடம் அந்த இரட்டைத்தன்மை கிடையாது. அவை இருக்கிறபடிக்கே இருப்பதால் பிரச்சினை இல்லை. புலி புலியாகவும், மயில் மயிலாகவும், நாய் நாயாகவுமே இருக்கின்றன. மனிதனிடம் மட்டுமே தனிப்பட்ட தன்மை என்பது இருக்கிறது. நாம் அதைப் புரிந்து கொண்டால் அது பெருமை, நாம் அதைப் புரிந்து கொள்ளா விடில் பெரும் வேதனைதான்.

மனிதன் இருக்கிறபடிக்கே இருந்து விடுவதில்லை. தன்னுடைய தன்மைகளை அவன் அதிகரித்துக் கொள்ள முடியும். அவனுடைய வளர்ச்சிக்கு அளவில்லை, அது தொடர்ந்தபடி இருக்கும். பிரபஞ்சத்தில் மனிதன் மட்டுமே வளர்ச்சி காண்கிற உயிரினம். மனிதனுக்குள் ஆற்றல் மறைந்து கிடக்கிறது.

தன்னுடைய ஆற்றலை அவன் செயல்படுத்தாவிடில் அவனுடைய வாழ்க்கையே சூன்யந்தான். விதையில் வெற்றிடம் இருக்கிறது. விதை எப்போதுமே விதையாக இருந்துவிட்டால் வேதனைதான். தன் பணியை முடிப்பதால் உண்டாகும் மகிழ்ச்சியை அது அனுபவிப்பதில்லை. விதை மரமாகி, மரம் பூச்சொரிகிற போதுதான் நிறைவு.

மனிதன் ஒரு விதையாக - இறையுணர்வின் தொடக்கமாக இருக்கிறான். அவன் மலர்ச்சியடைகிறபோது இறையுணர்வு வெளிப்படுகிறது. அதனால்தான் புத்தரை பகவான் என்கிறோம். மகாவீரரையும், கிருஷ்ணரையும் பகவான் என்கிறோம். அவர்களுடைய விதை (seed) அதன்பிறகும் விதையாகவே இருந்து விடவில்லை என்பதே அதன் பொருள். அவர்கள் நிறைவாக அடையக்கூடிய வளர்ச்சியை அடைந்து விட்டவர்கள். அவர்களுக்குள் இறையுணர்வு முழுமையுற்றது. கடவுட் தன்மை என்கிற நறுமணம் (மகிழ்ச்சி) வெளிப்பட்டது. அவர்கள் நிறைவு பெற்றவர்களாக இருக்கின்றனர். மகிழ்ச்சியால் நிரம்பியவர்கள். தங்கள் வீட்டுக்குத் திரும்பிய மகிழ்ச்சி, இனி வேறெங்கும் செல்வதற்கில்லை.

மனிதன் என்கிற பிராணி மட்டுமே முழுமையடையாத பொருளாயிருப்பது. இயற்கை மனிதனை ஒரு குறிப்பிட்ட புள்ளியில் கொண்டு நிறுத்தியிருக்கிறது. அந்தப் புள்ளியில் இருந்தே அவன் பொறுப்புணர்வு கொண்டவனாகிறான். உங்கள் வளர்ச்சிக்கு நீங்களே பொறுப்பு. இயற்கையால் இதற்குமேல் எதுவும் செய்ய முடியாது. தனக்குச் சாத்தியமானதை அது செய்து விட்டது. அது உங்களை நுழைவாயிலில் கொண்டு சேர்த்திருக் கிறது. தற்போது பயணத்தைத் தொடர வேண்டியது நீங்கள்தான். நீங்கள் ஒரு யாத்ரிகனாகிவிட வேண்டும்.

நீங்கள் ஒரு யாத்ரீகனாகாவிடில், உங்கள் வாழ்க்கை தீரச் செயலுக்கான தேடல், விசாரணை போன்ற தன்மைகளைக் கொள்ளவில்லை என்றால் நீங்கள் வெற்றாகவே இருப்பீர்கள். தாகமும், பசியும் கொண்டவராகவே இருந்து விடுவீர்கள். நீங்கள் ஆன்மா சார்ந்த வகையில் பசித்திருப்பீர்கள். எதையும் உங்களுக்கு வழங்கப்பட்டதாய் கருதிக் கொள்ளாதீர்கள். அதுதான்

பிரச்சினை, உண்மையில் அதுவே பிரச்சினையின் முக்கியக்கூறு எனலாம். நாம் எப்படி இருக்கவேண்டும் என்று கருதப்படுகிறதோ அப்படி இருப்பதாய் எண்ணிக் கொள்கிறோம். உய்த்துணராமலே உண்மையென முடிவு கட்டி விடுகிறோம்.

மனிதன் முரண்பாடுகளின் தொகுப்பு. தான் எப்படி இருப்பதாய் அவன் எண்ணுகிறானோ, அதைவிடவும் மிகுதியான அளவினன் அவன். அவனுடைய அறிவுத் திறனும், செய்திறனும் மிகப்பெரியது. உண்மையில் மனிதனின் வளர்ச்சிக்கு அளவே யில்லை. ஒருவர் தொடர்ந்து போய்க்கொண்டேயிருக்க முடியும்... அது முடிவற்ற பயணம், குறிக்கோளற்றது. அந்த யாத்திரைக்குத் தொடக்கம் உண்டு, முடிவு இல்லை.

வாழ்க்கை ஒரு முடிவற்ற புனிதப்பயணம் என்பதை அறிந்து கொள்ளவே எங்கும் பரவியிருக்கும் இறையுணர்வைப்பற்றி அறிந்து கொள்வது. அதனால்தான் இறையுணர்வை எல்லையற்றது என்று கூறுகிறோம். நீங்கள் தொடர்ந்து பயன் பெறுவீர்கள். ஆனால், முற்றான முடிவு வந்து விட்டது என்று ஒருபோதும் உங்களால் சொல்ல முடியாது.

இதுவே பிரபஞ்சத்தின் அழகு! அது மேலும் மேலும் வாய்ப்புகளை உங்களுக்கு வழங்கிக் கொண்டேயிருக்கும். ஒரு சிகரத்தில் நீங்கள் ஏறியதும் இன்னொரு சிகரம் உங்களுக்குச் சவால் விடுக்கும்.

தான் எப்படி இருக்க வேண்டும் என்று கருதப்படுகிறதோ அப்படியே இருப்பதாக எண்ணிக் கொள்வதுதான் மனிதனின் துன்பம். தான் எப்படி இருக்கக் கூடுமோ அப்படி முன்பே இருப்பதாக அவன் எண்ணுகிறான். மேலோட்டமானவற்றிலேயே மனிதன் திருப்தியடைந்து விடுகிறான். ஆனால் அடியாழத்தில் ஒரு நிறைவின்மை இருக்கவே செய்யும். அது ஆன்மாவின் நிறைவின்மை. கபீர் அதைத்தான் சொல்ல முயல்கிறார்.

உலகில் நடமாடிய மிகப்பெரிய புரட்சியாளர்களில் கபீரும் ஒருவர். அவருடைய மனதால் அறியும் திறன் மகத்தானது. நீங்கள் அவரது பார்க்கும் திறனுடன் பாலமிட்டுக் கொண்டால் (இணக்க மாதல்) உங்களுடைய வளம் பெருகும். உங்கள் எதிர்பார்ப்பு களுக்கு மேலாகவே வளம் பெற்று விடுவீர்கள்.

கபீர் கூறுவார் -

'தண்ணீரில் மீனுக்குத் தாகம் என்றால் எனக்குச் சிரிப்புதான் வருகிறது...' என்று. அவர் உங்களைப்பற்றியே பேசுகிறார், மீனைப் பற்றியல்ல. கபீர் சொல்கிறார். 'எனக்குச் சிரிப்பு வருகிறது' என்று. புத்தர்கள் எப்போதும் சிரித்தபடி இருக்கிறார்கள்.

ஹோடெய் ஒரு ஜப்பானிய புத்தத்துறவி. அவரை, 'சிரிக்கும் புத்தர்' என்பார்கள். தாம் ஞானம் பெற்ற நாளில் சிரிக்கத் தொடங்கியவர், பிறகெப்போதுமே சிரிப்பதை நிறுத்தவில்லை. அவர் பல காலம் வாழ்ந்தார். ஓர் ஊரிலிருந்து இன்னோர் ஊருக்கு, ஒரு சந்தையில் இருந்து இன்னொன்றிற்கு என்று சிரித்தபடி அவர் போய்க் கொண்டிருப்பார். அவர் சந்தையில் நின்று சிரிப்பார். அந்தச் சிரிப்பு கவர்ச்சியானது, அப்படியே தொற்றிக் கொள்வது. மக்கள் அங்கே கூடிவிடுவார்கள், அவர்களும் சிரிக்கத் தொடங்கு வார்கள். சிரிப்பலை எங்கும் பரவி, வெகு சீக்கிரமே ஒட்டுமொத்த கிராமமும் அதில் பங்கேற்கும்.

மக்கள் ஹோடெயிடம் கேட்பார்கள், 'ஐயனே, தாங்கள் கூறும் செய்தி என்ன?' என்று.

'சிரிப்புதான் என்னுடைய செய்தி' என்பார் அவர்.

'ஏன் இந்த அளவு சிரிக்கிறீர்கள்?' என்று மக்கள் கேட்பதுண்டு.

அவர் கூறுவார், 'நான் வேறென்ன செய்ய முடியும்? மனிதன் அவ்வளவு நகைப்பிற்கிடமாய், முட்டாள்தனமாய் இருக்கிறானே!' என்று.

மிகச் சரியாகச் சொல்கிறார் கபீர்:

'தண்ணீரில் மீனுக்குத் தாகம் என்று கேட்டதுமே நான் சிரித்து விடுகிறேன்.'

வாழ்க்கை ஏராள மகிழ்ச்சியை, எண்ணற்ற சாத்தியங்களை, வாய்ப்புகளைக் கொண்டு உங்களைச் சுற்றி வளைக்கிறது. நீங்கள் அழுது அரற்றுகிறீர்கள். உங்களுக்கு வயதேறுகிறபோது உங்கள் வேதனையின் ஆழம் அதிகரிக்கிறது. குழந்தைகளால் சிரிக்க முடியும். ஆனால் உங்கள் வயது கூடக்கூட உங்களுடைய சிரிப்பு குறைகிறது. மறைகிறது. நீங்கள் சிரிக்கிறபோதெல்லாம் அது

ஏமாற்றுச் சிரிப்பாகவே இருக்கிறது. அது எழுதி வைத்த சித்திரம் போல் இருக்கிறது. அந்தச் சிரிப்புக்கு உங்கள் இதயத்தில் வேர்கள் கிடையாது.

மக்கள் ஏன் இவ்வளவு சிந்தனையோடு இருக்கிறார்கள்? தாங்கள் குறிப்பிடத்தக்க ஒன்றை இழந்து விட்டதை அவர்கள் அறிவார்கள். வாழ்க்கை அவர்களுடைய கையில் இருந்து நழுவிக் கொண்டிருப்பது அவர்களுக்குத் தெரியும். இது அப்படி இருக்கக்கூடாது என்பது அவர்களுக்குத் தெரிந்ததுதான், ஆனால் அப்படித்தானே அது இருக்கிறது: அவர்கள் பெருந்துன்பத்தில் இருக்கிறார்கள். கபீரைப் போல் ஞானம் பெற்ற யாரோ ஒருவர் தான் சிரிக்க முடிகிறது.

ஒரு மீன் உங்களிடம் வந்து, 'எனக்குத் தாகமாய் இருக்கிறது' என்று சொன்னால் நீங்கள் என்ன செய்வீர்கள்? அந்த மீனுக்காகச் சிறிதேனும் இரக்கப்படுவீர்களா? நீங்கள் பட்டென்று சிரித்து விடுவீர்கள், 'நீ தாகமாயிருந்தால் அது உன்னுடைய முட்டாள் தனம். தாகத்தோடு இருப்பதற்கு அவசியமில்லை. முன்பே நீ கடலில் தான் இருக்கிறாய். நீ எதற்காக தாகத்தில் தவிப்பது?' என்பீர்கள்.

மனிதன் துக்கத்தில், பெருந்துக்கத்தில் இருக்கிறான். நாம் அதை மறைத்தபடி இருக்கிறோம். காரணம், மற்றவர்களிடம் வெளிக்காட்டி என்னவாகப் போகிறது என்பதுதான். யாரும் உதவப் போவதில்லை. துயரம் படிந்த இரவுகளை, மிகப்பெரிய கொந்தளிப்பை, வேதனையை, காயங்களை நாம் சுமந்து கொண்டிருக் கிறோம். தொடர்ந்து மறைத்தபடி இருப்போம். யாரிடமும் சொல்வதில் அர்த்தமில்லை, யாராலும் உதவ முடியாது. இந்த ஆன்மா சுமந்திருக்கும் புண்களைப் பற்றி யாரிடமும் பேசா திருப்பதே நல்லது. அந்தக் காயங்களை அப்படியே மறந்து விடுவதுதான் நல்லது.

அதனால் அல்லவா நீண்ட காலமாகவே போதைப் பொருள் களுக்கு முக்கியத்துவம் ஏற்பட்டிருப்பது. தன்னுடைய மனப் புண்ணை மறப்பதற்கும், வாழ்வின் அபத்தங்களை மறப்பதற்கும் மனிதன் ஏதாவதொரு போதைப் பொருளைப் பயன்படுத்தாத காலம் ஒன்று ஒருபோதும் இருந்ததில்லை. மக்கள் மதுவிற்கெதிராக

போதை மருந்துகளுக்கெதிராகப் பேசிக்கொண்டுதான் இருக்கிறார்கள். ஆனால், அதன் பின்னணியில் இருக்கும் உளவியலை அவர்கள் புரிந்து கொண்டிருக்கவில்லை. அவற்றுக்கெதிராய் பேசுவது மக்களைத் தடுத்துவிடாது. நீங்கள் சட்டப்படி செல்ல வைக்கவோ, தடை செய்யவோ முடியும். ஆனால்,அப்போதும்கூட மதுபானப் பயன்பாடு அதிகரிக்கவே செய்யும்.

மனிதன் பரம சுகத்தை அடையாதவரை அவற்றைத் தடுக்க முடியாது. துன்பத்தில் உள்ளவனுக்குத் துன்பத்தை மறக்க ஏதாவதொன்று தேவைப்படும். இல்லையேல் அது மிக அதிகமாகி விடும். உண்மையில் என்னுடைய அறிவுக்கு எட்டியது இதுதான்: அத்தனை மது வகைகளையும், போதை மருந்துகள்ளயும் இந்த உலகில் இருந்து ஒழித்து விட்டால், மனிதன் அந்தக் கணமே பைத்தியமாகி விடுவான். ஒட்டுமொத்த உலகமும் பைத்தியக்கார விடுதியாகி விடும்.

மக்கள் எப்படியாவது ஒரு குழுவாக இணைந்து கொண்டு விடுகிறார்கள். அவர்கள் மதுவருந்துவதன் மூலம் சில மணி நேரத்துக்கு இந்த உலகத்தை மறக்கக்கூடும். உலகம் தங்களிடம் கொண்டு வருகிற துன்பத்தையும், தங்கள் சுயங்களையும் அவர்கள் மறக்கக்கூடும். அவர்கள் சூழ்நிலையை மறந்து மயக்கத்தில் ஆழ்ந்து விடுவார்கள். எந்த வகையிலும் எதுவும் மாறப்போவதில்லை என்பது அவர்களுக்கு நன்றாகவே தெரியும். எல்லாவற்றையும் சில மணி நேரமாவது ஒருவர் மறந்திருக்க முடிகிறதே!

தியானம் உலக அளவிலான நிகழ்வாகிறபோது போதைப் பொருள்கள் இந்த உலகில் இருந்து மறைந்து விடும். ஒவ்வொருவரும் தங்கள் இருப்புணர்வில் கொஞ்சமாவது தியானத் தன்மையை தோற்றுவித்துக் கொள்கிறபோது ஒவ்வொருவரும் எச்சரிக்கையடைகிறபோது அது சாத்தியம். 'துன்பப்படத் தேவையில்லை. என்னால் உண்டான துன்பமிது. வாழ்க்கை துன்புறுவதல்ல. வாழ்வின் இயல்பு பேரின்பம். அதைத் துன்பகரமாக்கியது என்னுடைய முட்டாள்தனம்' என்று அவர்கள் உணரவேண்டும்.

பேரின்ப நிலை என்பது இயற்கையானது, உங்களால் அதைத் தோற்றுவிக்க முடியாது. உங்களால் துன்பத்தை மட்டுமே தோற்றுவிக்க முடியும். நீங்கள் துன்பத்தை உண்டுபண்ணாவிட்டால்.

பேரின்பம் இசைவாக வந்து விடும். அது முயற்சியில்லாமலே வருவது - நீங்கள் அதை நடைமுறைக்கேற்ற செயலாக்கிக் கொள்ள முடியாது. ஆனால், துன்பத்திற்கோ பெரிய அளவில் முயற்சிகள் செய்யும்படி இருக்கும். உங்கள் துன்பத்தில் நீங்கள் நிறையவே முதலீடு செய்திருக்கிறீர்கள்.

கபீர் மிகச் சரியாகவே சொல்கிறார்:

'நான் சிரிக்கிறேன்...' கபீரைப் போன்ற ஒருவர் இப்படிச் சொல்வது கொஞ்சம் கடுமையாய், குரூரமாய் தெரியலாம்.

'தண்ணீரில் உள்ள மீனுக்குத் தாகம் என்றால் எனக்குச் சிரிப்பு வருகிறது.' ஆனால் அது ஒன்றும் கடுமையானதோ, வலியையும் வேதனையையும் உண்டுபண்ணக் கூடியதோ அல்ல. எப்படி இருக்க வேண்டுமோ, அப்படித்தான் அது இருக்கிறது. புத்தத் துறவிகள் எல்லாரும் சிரித்துக் கொண்டிருப்பார்கள். அவர்கள் அப்படிக் கூறியிருக்கலாம், கூறாமலும் இருக்கலாம். ஹோடெய் பகிரங்கமாய் சிரித்தார். கவுதம புத்தர் வேண்டுமானால் தனிமையில் சிரித்திருக்கலாம். ஆனால் அங்கே சிரிப்பு இருக்கவே செய்தது.

நான் அதைச் சொல்வதற்குக் காரணம், அது என்னுடைய சொந்த அனுபவமாகவும் இருப்பதுதான். நீங்கள் துன்பச் சுமையோடு என்னிடம் வருகிறபோது, நான் மிகுந்த பரிவுடன் கேட்டுக் கொள்வேன், சிரிக்க மாட்டேன். ஆனால், அடியாழத்தில் சிரிப்பு இருக்கவே செய்யும். வெகு பொறுமையாகவும், கவனமாகவும் கேட்டுக் கொள்வேன். உங்கள் உணர்ச்சியைப் புண்படுத்த நான் விரும்பவில்லை. உங்களிடம் நாகரிகமற்ற முறையில் நடப்பதையும் நான் விரும்ப மாட்டேன். ஆனால் நீங்கள் உண்மையை அறிய விரும்பினால் நீங்கள் நகைக்கத்தக்கவராய், முட்டாளாக இருப்பதே உண்மை.

உங்கள் முட்டாள்தனத்துக்கு உலகம் பொறுப்பாகாது. அது உங்களுடைய செயல். பிரபஞ்சம் ஒவ்வொருவரையும் சிறந்த அறிவுத்திறனோடுதான் படைத்திருக்கிறது. ஒவ்வொரு குழந்தையின் கண்களிலும் அறிவின் ஒளியை நீங்கள் காண முடியும். எல்லாக் குழந்தைகளுமே நுட்ப அறிவு கொண்டவர்கள்தாம். ஒரு முட்டாள் குழந்தையைக் காண்பது கடினம்.

அறிவில்லாத ஒரு குழந்தையை நீங்கள் கண்டுபிடித்தீர்கள் என்றால் அது முன்பே வயதேறியதாகத்தான் இருக்கும்.

குழந்தைகளிடம் அறிவுத்திறன் நிரம்பி வழிகிறது. அத்தனை அறிவும் எங்கே மறைந்து போகிறது? அந்த அறிவுக்கு என்ன வாகிறது? சமூகம் அறிவுக்கு எதிராயிருக்கிறது. தன்னைச்சுற்றி அறிவாளிகள் இருப்பதை அது விரும்பவில்லை. அறிவாளிகள் என்றாலே சமூகத்துக்கு ஆபத்தானவர்களாய் தெரிகிறார்கள்.

சமூகம் முட்டாள்களை விரும்புகிறது. முட்டாள்களை எளிதாய் நிர்வகிக்க முடியும். அவர்களுக்கு உத்தரவிடுவதும், அவர்களைக் கையாள்வதும் அவர்கள்மீது அதிகாரம் செலுத்து வதும் எளிது. முட்டாள்கள் கீழ்ப்படிகிறவர்களாகவே இருக் கிறார்கள், கீழ்ப்படிவது குற்றம் என்றால்கூட அவர்களால் கீழ்ப்படியாமல் இருக்க முடியாது. அவர்களைக் கட்டாயப்படுத்தி எந்திரங்களாக்கி விட முடியும். சமூகத்துக்குத் தேவை எந்திரங் களேயன்றி மனிதர்களல்லர். சமூகம் உங்கள் மீது ஆர்வப்படுவ தில்லை, உங்களுடைய மீறல் மீதுதான் அதற்கு அக்கறை. எந்திரங்களுக்கு மனிதர்களைவிட திறமை அதிகம் அல்லவா. எந்திரம் ஒரு மாதிரி, அந்த மாதிரி (model)யை மனிதன் பின்பற்ற வேண்டும். மனிதனை மேலும் மேலும் முட்டாளாக்கினால் அவன் கிட்டத்தட்ட எந்திரமாகி விடுவான். அவன் ஒரு நல்ல எழுத்தராக, ஒரு நல்ல நிலைய அதிகாரியாக, பள்ளிக்கூடத்தில் நல்ல ஆசிரி யராக, நல்ல நிர்வாகியாக இருப்பான் – ஆனால் அறிவற்றவனாக.

அவன் நுண்ணறிவு உடையவனாக இருந்தால் எவ்வகை யிலும் ஓர் எழுத்தராக இருக்கக் சம்மதியான். அபத்தமான ஆவணங்ளை எழுதியபடி வாழ்க்கையை வீணடிக்க மாட்டான், கோப்புகளில் குப்பைகளைச் சேகரித்துக் கொண்டிருக்க மாட்டான். தன்னுடைய இருப்புணர்வின் மீது மதிப்பு வைத்திருப்பான். தான் வாழ்வதற்கு வேறொரு வழியை அவன் தேர்ந்து கொண்டிருப்பான். அவன் ஒரு துணை நிலை ஆட்சியராக இருக்க மாட்டான். ஓர் அறிவாளியை எப்படி நீங்கள் ஒரு காவலனாக இருக்கும்படி கேட்க முடியும்? உங்கள் படைகளுக்குத் தேவையான ஆட்களை ஆயிரக்கணக்கில் நீங்கள் எங்கே கண்டுபிடிப்பீர்கள்? அறிவாளி கள் ஒன்றும் கால்நடைகளல்ல. அறிவாளிகளை முட்டாள்தனமான

காரியங்களுக்கு ஏவ முடியாது. அவர்கள் 'முடியாது' என்று சொல்லி விடுவார்கள்.

சிந்தியுங்கள், ஹிரோஷிமா மீது குண்டு வீசியவன் ஓர் அறிவாளியாக இருந்திருந்தால், அவன் முடியாது என்று மறுத்திருப்பான். தன்னுடைய உயிரே போவதாயிருந்தாலும் அவன் முடியாது என்றுதான் சொல்லியிருப்பான். 'நீர் என்னை கொல்ல விரும்பினால் கொன்றுபோடும். ஆனால், ஒரு லட்சம் பேரைக் கொன்று குவிக்கிற காரியத்தை நான் செய்ய மாட்டேன்' என்று மறுத்திருப்பான். 'பாவம் அவர்கள் அப்பாவிகள், எந்தவொரு குற்றத்தையும் செய்யாதவர்கள், சின்னக் குழந்தைகள், வயசாளிகள்! போருக்கு அவர்கள் காரணமல்ல, எந்தவிதத்திலும் அவர்கள் பொறுப்பாவதில்லை. நான் எதற்காக அணுகுண்டை வீச வேண்டும்? ஒரு லட்சம் பேரைக் கொல்வதைவிட நான் ஒருவன் செத்துப்போவது மேல்' என்றுதான் சொல்லியிருப்பான்.

அந்த மனிதன் அறிவுள்ளவனாயிருந்தால் அவன் 'மாட்டேன்' என்று மறுத்திருப்பான். ஆனால் அவன் படுமுட்டாளாக இருக்கக் கொண்டுதான் அணுகுண்டு வீசியிருக்கிறான். அன்று இரவு நன்றாக உறங்கியுமிருக்கிறான். அவனுடைய உறக்கம் கெடவில்லை.

மறுநாள் காலையில் அவனிடம், 'ராத்திரி உன்னால் தூங்க முடிந்ததா?' என்று கேட்டபோது, அவன் சொன்னான், 'நிச்சயமா, நான் நல்லாத்தான் தூங்கினேன். என்னுடைய கடமையைத்தானே செய்தேன். என் வேலை முடிந்தது, நல்லா தூங்கினேன். என்னுடைய வேலையை சரிவரச் செய்து முடிக்கிற போதெல்லாம் நான் நிறைவா தூங்க முடியுது' என்று.

ஐந்தே ஐந்து நொடிகளில் ஒரு லட்சம் பேர் எரிந்து கருகி யிருக்கிறார்கள். அவனுக்கு ஒரேயொரு கெட்ட கனவு கூட வரவில்லை. எண்ணிப் பாருங்கள், அவனுடைய அறிவை நாம் முற்றாக அழித்திருக்கிறோம். அவனுடைய தன்மையை ஓர் எந்திரத்தின் அளவிற்குத் தாழ்த்தியிருக்கிறோம். எந்திரங்களுக்கு மனசாட்சி கிடையாது, எந்திரங்களுக்கு ஏது உணர்வு? எந்திரங் களுக்கு இதயம் கிடையாது. சமூகத்துக்கு தேவைப்படுவதெல்லாம் எந்திரங்கள்தாம், மேலும் மேலும் திறமைமிக்க எந்திரங்கள். பல்கலைக்கழகங்கள் அதனால்தான் மக்களை அறிவற்ற

மக்களாக்கிக் கொண்டிருக்கின்றன. நீங்கள் ஒரு பி.ஏ. பட்டதாரி என்றால், உங்கள் அறிவுத்திறனை நீங்கள் அதிக அளவில் இழந்ததற்கான அத்தாட்சி அது. நீங்கள் ஓர் எம்.ஏ. என்றால் இன்னும் அதிகமாய் ஒரு பிஎச்.டி. என்றால் தீர்ந்தது. நம்பிக்கை யூட்டும்படியாய் எதுவும் மிஞ்சாது.

ஹென்றி தோரு (Henry Thoreau) பல்கலைக்கழகத்தில் இருந்து திரும்பியபொழுது அவரைக் காணவந்த கிராமத்தான் ஒருவன் ரொம்பவே ஆச்சரியப்பட்டான். அவனுடைய முகத்தில் தெரிந்த திகைப்பையும் குழப்பத்தையும் கண்டு தோரு கேட்டார். 'தங்களுக்கு என்ன குழப்பம்? ஏன் திகைத்து நிற்கிறீர்கள்?' என்று.

அவன் சொன்னான். உண்மையிலேயே ஒரு சிறந்த காரியத்தை நீ செய்திருப்பதில் எனக்கு ஆச்சரியம். உன்னுடைய அறிவை நீ காப்பாற்றிக் கொண்டிருக்கிறாய். பல்கலைக் கழகத்துக்குப் போய் வந்தபிறகும், நீ அறிவாளியாகத்தான் தெரிகிறாய். ஒரு பல்கலைக்கழகத்தில் இருந்து, அறிவு கெடாமல் திரும்பி வருவது உண்மையில் அரிதாகும். கல்வியின் மொத்த செயல்முறையுமே உங்களை எந்திரத்தனமாக்குவதுதான்' என்று.

உங்களை மேலும் பிரக்ஞையுடையவராக்குகிற புதிய கல்விமுறை தேவை உலகிற்கு. அது உங்களை மேலும் அறிவிற் சிறந்தவராக்க வேண்டும் என்பதில்லை. அது உங்களை நேசிக்கிறவராக்கினால் போதும், தர்க்கம் பண்ணுகிறவராக்கத் தேவையில்லை. தர்க்கவியல் நல்லதுதான். அன்பு ஓர் எஜமான னாக இருந்தால், தர்க்கம் (விவாதம்) ஒரு நல்ல வேலைக்காரனாக இருக்கும். ஆனால், தர்க்கம் எஜமானனாகி விடக்கூடாது. அன்பும் ஒரு பணியாளாகி விடக்கூடாது.

தன்னுணர்வு (consciousness) கட்டுப்பாட்டில் இருந்தால், அறிவு நல்லது செய்யும். ஆனால், அறிவைக் கட்டுப்படுத்தி வைத்தால், அப்போது இதயம் அழிந்துவிடும். சமூகம் சார்ந்த, மதம் சார்ந்த, அரசியல் சார்ந்த, கல்வி சார்ந்த கட்டுப்பாடுகளை விதிக்கிற சமூகத்திற்கு அறிவாளிகள் தேவைப்படுவதில்லை.

உங்களைச் சந்தைச்சரக்காக மாற்றக்கூடிய சிறந்த உளவியல் உத்திகள் காலந்தோறும் கண்டறியப்படுகின்றன. அவை உங்களை

ஒரு பொருளின் அளவிற்குத் தாழ்த்தி, பொய்யான தோற்றத்தை உங்களுக்குக் கொடுத்து விடும்.

நீங்கள் எச்சரிக்கையோடு இருக்க வேண்டும். காரணம், உங்கள் அறிவுக்கு எதிரான சமூகத்தில் அல்லவா நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள்.

தங்களுக்குள் இருந்தவற்றில் எதையெல்லாம் சமூகம் அழித்ததோ அதையெல்லாம் புதுப்பிக்கவே எனது சந்நியாசிகள் முயன்று கொண்டிருக்கிறார்கள். சமூகம் செய்து வைத்திருப்பன வற்றைத் தலைகீழாக மாற்றவே அவர்கள் முயல்வது. சந்நியாசியின் மொத்த வேலையும் அதுதான். அதுவே ஓர் உண்மையான மதத்தின் கடமையாக இருந்து வந்திருக்கிறது.

'கபீர் சொல்கிறார்'

**'நான் சிரித்துவிடுகிறேன்.**
**தண்ணீரில் மீனுக்குத்**
**தாகம் என்றதும்**
**விழிப்புமிக்க ஒன்று உங்கள்**
**வீட்டில் இருந்தும் அதைப் பற்றாமல்**
**ஒவ்வொரு புனித நகரமாய்**
**நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள்**
**குழப்ப முற்றவராய்'**

விழிப்புமிக்க ஒன்று உங்கள் வீட்டிலேயே இருந்தும் நீங்கள் அதைப் பற்றிக்கொள்ளவில்லை... உங்களுக்கு அது தெரிவிக்கப் படவில்லை. அந்த இரகசியம் உங்களிடம் இருந்து மறைக்கப் பட்டது. உங்களை அடியாழத்துக்குச் செல்லும்படி யாரும் கூறவில்லை. அந்தச் சந்தர்ப்பத்தை அவர்கள் உங்களுக்கு வழங்க வில்லை. 'சில நேரங்களில் அப்படியே இருந்தால் போதும், எதையும் செய்ய வேண்டாம். ஒரு மரத்தடியில் அமைதியாக அமர்ந்து, உள்ளே தேடிப்பார் 'நான் யார்?' என்கிற கேள்வியை எழுப்பு' என்று பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளிடம் சொல்வதில்லை.

எந்தவொரு பள்ளிக்கூடமோ, கல்லூரியோ, பல்கலைக் கழகமோ உங்களைத் தியானம் செய்யும்படி கூறவில்லை.

உண்மையில் தியானத்துக்கும் கல்விக்கும் சம்பந்தம் எதுவும் இல்லை என்றே அவை கருதுகின்றன.

இந்திய அரசு ஒரு கடிதம் எழுதியிருந்தது. இந்த கொம்யூனை கல்வி சார்ந்ததாகவே அது ஏற்றிருக்கவில்லை. நான் அவர்களுக்குக் கூறிக்கொள்வேன், கல்விக்கும் தியானத்துக்கும் தொடர்பில்லை என்றால், உண்மையான கல்விக்கு எது அடித்தளமிடுகிறது? என்று.

ஆனால், ஏதோவோர் அலுவலகத்தில் உள்ள முட்டாள்தான் அதை எழுதியிருக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியும். தியானம் என்பது உங்களுடைய முழுமையான தனிமையில் நீங்கள் இருந்து கொண்டிருப்பதையே குறிக்கிறது. தியானத்தில் உங்களோடு நீங்கள் இருக்கிறீர்கள்.

வாழ்விற்கான என்னுடைய கோட்பாட்டில் இரண்டு விஷயங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. ஒன்று தியானம், மற்றொன்று நேசம். இரண்டுமே நிறைவே ஏற்படுத்துபவை. தியானம் - தனித்திருப்பதில் ஆனந்தம் கொள்வதைக் குறிக்கும். நேசம் - யாரோ ஒருவருடன் ஒன்றாக இருப்பதில் உண்டாகிற ஆனந்தம். இவை உண்மையான கல்வியின் இரண்டு சிறகுகள். தியானம் தடையற்றிருப்பதை, சுதந்திரத்தைக் குறிப்பதாகும். அது யாருக்கும், நேசிப்பவருக்கும் அடிமைப்படுவதில்லை. காரணம், உங்கள் நேசத்துக்குரியவரின் இருப்பும் உங்களுடைய இடத்தை ஆக்கிரமிப்பு செய்வதாயிருக்கும். இப்போதைக்கு இதுதான் நல்லது. ஒன்றின் மீது ஒன்றாய் உங்களுடைய இடத்தில் யாரோ ஒருவருடன் கவிந்து கொண்டிருப்பது. எதிர்கொள்வதும், இணைந்து கொள்வதும் நல்லதுதான். ஆனால், அடிப்படையிலும் முடிவிலும் நீங்கள் தனியாகவே இருக்கிறீர்கள். அத்துடன், தனித்திருபபதற்கு நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். தனியாக இருப்பதற்கு மட்டுமல்ல, பரவசமாயிருப்பதற்கும்.

தியானம் எதையும் செய்யாமல் சும்மா இருப்பது, அமைதியாய் அமர்ந்திருப்பது, முழுக்கவும் செய்கைகளால் நிரம்பிய உலகமிது. இந்தச் சமூகம் 'அதைச் செய், இதைச் செய்' என்று எதற்காக உங்களுக்குக் கற்பிக்கிறது? காரணம், நீங்கள் ஒன்றைச் செய்துவிட்டு அதற்காக இன்னொன்றைப் பெறுகிறீர்கள்.

நீங்கள் இதைச் செய்யாவிட்டால் அதைப் பெற மாட்டீர்கள். நிறைய பெறுவதற்கு ஒரு வழி செய்து கொண்டிருப்பது. மேலும் மேலும் பெறும்படியான ஒரு நிலைக்கு நாம் உட்படுத்தப்பட்டிருக்கிறோம். நிறைய பெறுவதன் மூலம் நாம் உண்மையிலேயே திருப்தியும், மனநிறைவும் கொண்டவராகி விடுவோம். அது உண்மையிலேயே நம்மைப் பணக்காரராக்கி விடும்.

நிஜம் என்னவோ அதற்கு நேர்மாறாக இருக்கிறது. நீங்கள் எவ்வளவுக்கு பெறுகிறீர்களோ, அவ்வளவுக்கு உள்ளே வறுமையாய் உணர்வீர்கள். புறவுலகில் வளமாக இருந்தாலும், உள்ளுக்குள் வறண்டு விடுவீர்கள். புறவுலகில் நீங்கள் பெற்ற செல்வம் ஒன்றும் உள்ளிருக்கும் வெறுமையைப் போக்கிவிடாது. வெளியில் இருந்து எதையும் உள்ளே எடுத்துச் செல்வதற்கில்லை. உங்களால் முடிந்த அளவு செல்வத்தை நீங்கள் பெற்றுவிட முடியும். ஆனால், அது உங்களுக்கு வெளியேதான் குவிந்து கொண் டிருக்கும். குவியல் எந்த அளவு பெரிதாகிறதோ, அந்தஅளவு உங்களுக்குள் வெறுமையை நீங்கள் காண்பீர்கள். அந்த வெற்றிடம் உங்களை மிகுந்த துயரத்திற்குள்ளாக்கி விடும்.

அதனால்தான் செல்வம் கொழிக்கிற சமூகம் சமயத்தில் (மதம்) ஆர்வத்தை அதிகரித்துக் கொண்டிருப்பது. ஏழைச் சமூகங்கள் சமயப்பற்றுடையதாய் இருக்க முடியாது. கிட்டத்தட்ட அது சாத்தியமேயில்லை. ஓர் ஏழையிடம் சமய நம்பிக்கை இருக்காது என்று நான் சொல்லவில்லை. அவனுக்கு அது முடியும், ஏழைச் சமூகத்திற்குத்தான் அது முடியாது என்கிறேன். ஏழை ஒரு விதிவிலக்கு. கபீர் ஓர் ஏழை என்கிறபோதும் மிகப்பெரிய உச்சத்தை அவர் அடைந்தார். ஏழையொருவர் புத்தராவது சாத்தியம். ஆனால் ஓர் ஏழைச்சமூகம் சமயத்தில் ஈடுபாடு கொண்டிருப்பது இயலாத காரியம்.

ஏழைச் சமூகத்துக்கு மேலும் மேலும் பெறுவதில் ஆர்வம் இருக்கும். நீங்கள் அதிகம் பெற விரும்பினால் அதிகமாய் செய்ய வேண்டியிருக்கும். உங்களுடைய ஒட்டுமொத்த சக்தியையும் நீங்கள் செயலில் கொண்டு வருவீர்கள். செய்கைக்கு எதிரிடை யானது தியானம். தியானம் என்பது எதையும் செய்யாமல் இருக்கும் நிலை. அது முற்றிலும் அமைதியான நிலை. அது வெறுமனே ‘இருத்தல்’ ஆகும். அந்த இருத்தலில் ஒருவர்

மகிழ்ச்சி கொள்கிறார். அதன்பிறகு ஏதோ ஒன்று உள்ளாக நிகழத் தொடங்குகிறது. அதற்காக நீங்கள் எதையும் செய்யம்படி இருக்காது.

**'எதையும் செய்யாமல் அமைதியாய் இருந்து கொண்டு வசந்தம் வருகிறது; தானாகவே புல் வளர்கிறது; உங்களுக்குள் ஏதோ ஒன்று வளரத் தொடங்குகிறது.'**

வாழ்க்கையில் மிகவும் முக்கியமான கருத்து தியானம். உண்மையான கல்வி என்று எந்தக் கல்வியையும் சொல்ல முடியாது. கல்வி என்கிற சொல்லின் பொருள், 'உங்களுக்குள் என்ன இருக்கிறதோ அதை வெளிக்கொண்டு வருவது' என்பதாகும். இந்த 'கொம்யூன்' கல்வி சார்ந்தது. காரணம் உங்களுக்குள் எது இருந்தாலும் அதை வெளிக்கொண்டு வரவே நாங்கள் முயற்சிக்கிறோம். ஆனால், நீங்கள் பல்கலைக்கழகம் என்று அழைக்கிற இடங்கள் கல்வி சார்ந்தவையல்ல. கல்வி சார்ந்த தேவைகளை அவை பூர்த்தி செய்வதில்லை. அவை திணிப்பு வேலையைச் செய்கிறதேயன்றி, எதையும் வெளிக்கொண்டு வருவதில்லை. நேர்ச்சரியாகச் சொல்வதெனில் அவை அறிவு மேம்பாட்டிற்கானவையல்ல.

நீங்கள் கல்வி நிலையங்களாய் கருதுகிற இடங்களில் தெரிந்தவற்றின் தொகுதிகளையே திணித்துக் கொண்டிருக் கிறார்கள். மேலும் திறமையாகச் செயல்படுவதற்கு அவை உதவும் என்பதே காரணம். அதைத்தான் அவர்கள் கல்வி என்கிறார்கள். அது உண்மையான கல்வி ஆகாது.

'நான் தனியாக இருக்கிறேன். தனியாக வந்தேன், நான் தனியாகவே செல்வேன்' என்கிற அடிப்படை உண்மையை ஒருவருக்குப் போதிப்பதே உண்மையான கல்வி. வருகைக்கும் திரும்புகைக்கும் இடையில், 'நான் தனியாக இல்லை' என்று என்னை நான் ஏமாற்றிக் கொள்ள முடியும். இயல்பில் நான் தனியாகவே இருக்கிறேன். தனியாக இருப்பது என்னுடைய இயல்பாகி விட்டபடியால் நான் அதனுடன் பொருந்திக் கொண்டுதானே ஆகவேண்டும். அதன் அடியாழத்துக்குப் பாய்ந்து மூழ்கி, தனிமை என்றால் என்னவென்று மிகச் சரியாக தெரிந்து கொள்வேன்.

அது குறிப்பிடத்தக்க அளவிற்கு இனிமையானது. நம்ப முடியாத அளவிற்கு இன்பம் பயப்பது. உங்கள் தனிமைக்குள் நீங்கள் பிரவேசித்ததும் இறையுணர்வை அறியத் தொடங்கு கிறீர்கள். உங்களுக்குள் மறைந்து கிடக்கும் பொக்கிஷத்தை அறிந்து கொள்கிறீர்கள். உங்களுக்குள் இருக்கும் கடவுளின் ராஜ்யத்தை தெரிந்துகொள்ள முடிகிறது.

கபீர் சொல்கிறார்:

> **உங்கள் வீட்டினுள் இருக்கும் உண்மையை, விழிப்பு மிக்க ஒன்றை நீங்கள் பற்றாமல் இருக்கிறீர்கள்.'**

ஆனால், யாரும் உங்களுக்குக் கற்பிக்கவில்லை. ஒட்டு மொத்த போதனையும் இதுதான்: 'போங்கள். பணத்தை, அதிகாரத்தை, மதிப்பைத் தேடிக் கொள்ளுங்கள்.' அவை உள்ளே காணக் கிடைக்காது. அமைதியை உள்ளே காண முடியும். மவுனமும், சமாதானமும் இறையுணர்வும் உள்ளே கண்டு கொள்ளப்படுகின்றன. அவை உங்கள் குறிக்கோளல்ல, அவை உங்களின் குறியீட்டிலக்கல்ல.

பயாஸித் என்கிற சுஃபி ஞானி பற்றி இப்படிச் சொல்லப் பட்டிருக்கிறது.

ஒருநாள் ஷேக் பயாஸித் வீட்டுக்கதவைத் தட்டிக்கொண்டு சிலர் வந்து நின்றார்கள். அவர் தம்முடைய மாடி சன்னலைத் திறந்து பார்த்து, 'உங்களுக்கு என்ன வேண்டும்?' என்றார்.

'நாங்கள் பயாஸித்தைப் பார்க்க வேண்டும்' என்று அவர்கள் சொன்னார்கள்.

அவர் சொன்னார். 'நல்லது, நான் பத்து வருஷங்களாக பயாஸித்தைக் காண முயற்சி செய்கிறேன். ஆனால் இன்னும் அந்த ஆளைக் கண்ட பாடில்லை' என்று.

தியானம் என்பது இதுதான். தன்னை ஒருவர் கண்டடைய முயல்வது.

மற்றொரு முக்கியக் கருத்து, அன்பு. அன்பு என்பது, மற்றவரிடம் பிரதிபலிக்கிற தன்னைக் கண்டடைய முயல்வது. நேசம் ஒரு கண்ணாடி. தியானம் என்பது கண்ணாடி இல்லாமல்

காண முற்படுவது. நேசம் என்பது நீங்கள் நேசிக்கிற ஒருவருடைய கண்களில் உங்களைக் கண்டுகொள்வது, அவருடைய இருப் புணர்வில் தன்னுடைய பிம்பத்தைக் காண்பது. ஒன்றாக இருப்பதில் உண்டாகும் மகிழ்ச்சி!

நாம் தனியாக இருக்கிறோம். ஆனால் தனியாக இருப்பது, தனியாக வாழ்கிறோம் என்கிற பொருளிலல்ல. நாம் தனியாக இருக்கிறோம், ஆனால் நம்மைச் சுற்றி மற்றவர்களும் இருக் கிறார்கள். தனியாக இருக்கிற பலருடன் நாம் இருந்து கொண்டிருக் கிறோம். பாலமிடல் வேண்டும். இரண்டு தனிமைகள் சந்தித்துக் கொள்கிறது நேசித்தல். ஒரு தனிமை மிகவும் அழகானது. இரண்டு தனிமைகள் சந்தித்து, இரண்டறக் கலக்கிற பொழுது அதைப்பற்றி என்ன சொல்வது? ஓர் உன்னதமான மலர்ச்சி நிகழ்கிறது, வாழ்க்கை மேலும் புதராக, மகிழ்ச்சி மிக்கதாகி விடுகிறது.

மேலும், தனிமையில் இருக்கிற ஒருவர் ஒரு சீர்மையைக் கண்டுகொள்கிறார். சில சமயங்களில் தனித்திருந்து பழகுங்கள், மகிழ்ச்சியாயிருங்கள். சில சமயங்களில் ஒன்றாக இருந்து நட்பில் மகிழ்ச்சியை அனுபவியுங்கள். சேர்ந்திருப்பதில் சலிப்பு தட்டினால் உங்கள் உள்ளார்ந்த இருப்புணர்வில் மூழ்கி விடுங்கள். தனித்திருப்பது சலிப்பூட்டினால் மற்றோர் இருப்புணர்வை நோக்கி ஓடுங்கள்.

அது இறுகக்கட்டிய கயிற்றின் மீது நடக்கிற மாதிரி. சில நேரம் நீங்கள் இடதுபக்கம் சாய்கிறீர்கள். அதற்கு மேலும் சாய்ந்தால் விழ நேரிடும் என்பதை அப்போது அறிந்து கொள்கிறீர்கள். எனவே, வலது பக்கம் சாய முற்படுகிறீர்கள். அப்போது மறுபடியும் ஒரு கருத்து வருகிறது, நாம் இதற்கு மேலும் வலப்பக்கம் சாய்ந்தால் விழுந்து விடுவோம் என்கிற கருத்து. எனவே, இடப்பக்கம் சாயத் தொடங்குகிறீர்கள். கயிற்றில் நடப்பவரின் அந்தச் சமநிலைதான் மனிதனுக்கு நற்பலனைக் கொடுக்கிறது.

ஆனால் ஞாபகமிருக்கட்டும், முதன்மையான விஷயம் தியானம். நீங்கள் யாரென்று அறியாதவரை உங்களால் நேசிக்க முடியாது. உள்ளிருக்கும் பேரின்பத்தை அறியாவிட்டால், அதை மற்றவர்களுடன் உங்களால் பகிர்ந்துகொள்ள முடியாது.

ஆனால் மனிதர்கள் உள்நோக்கிச் செல்வதில்லை. அவர்கள் இங்கும் அங்குமாய் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். உள்நோக்கிச் செல்வதைத்தவிர மற்றதையெல்லாம் அவர்கள் செய்கிறார்கள். இந்த ஓட்டம் கனவன்றி, விரும்புதலன்றி வேறில்லை. உங்கள் மனதை அப்படியே உற்றுக் கவனியுங்கள். உங்கள் மனம் என்ன செய்து கொண்டிருக்கிறது. அது இரவும் பகலும் கனவு காண்கிறது. ஓடிக்கொண்டேயிருக்கிறது. வட்டங்களில் சுழல்கிறது. அந்த வட்டங்கள் கனவுகளே.

உண்மை உங்களுடைய பிரக்ஞையாக (தன்னுணர்வு) இருக் கிறது, உங்களுடைய மனதல்ல அது. உங்கள் மனம் சமூகத்தால் படைக்கப்பட்டது. உங்களுடைய உணர்வு பிரபஞ்சத்தின் விளைவாய் பெறப்பட்டது. உங்கள் பிரக்ஞையை நோக்கிச் செல்லுங்கள். gestaltஐ மாற்றுங்கள். உங்கள் கவனத்துக்குரியதை மாற்றிக்கொள்ள வேண்டும், சமய நம்பிக்கை குறித்ததுதான் அது. அறிவில் இருந்து உணர்வுக்கு மாறுவது - நிலை மாற்றம்.

மனம் சமூகம் சார்ந்த துணைப்பொருள் - இந்து மனம், கிறிஸ்தவ மனம், கம்யூனிஸ்டு மனம், கத்தோலிக்க மனம். இவை சமூகம் சார்ந்த துணைப் பொருள்கள். சமூகம் சிந்தனையை உங்கள் மூளைக்குள் வைக்கிறது. அதுவே உங்களுடைய மனம். உங்கள் உணர்வை கவனத்தை பிரபஞ்சப் படைப்பின் மீது திருப் புங்கள். இல்லையேல் நீங்கள் கனவில்தான் வாழும்படி இருக்கும். கனவுகள் கனவுகள்தாம் அவை உண்மையானவையல்ல.

பல வருடங்கள் பார்த்துக் கொள்ளாமல் இருந்த நண்பர் களிருவர், சாலையில் சந்தித்துக் கொள்கிறார்கள். 'எப்படி இருக்கே?' வழக்கமான விசாரிப்பு. தான் அச்சகத்தில் இருப்பதாக சால் சொல்ல முற்படுகிறான். ஒரு கெட்ட கனவால் அவன் துன்புறுத்தப்படுகிறான். ஒவ்வோர் இரவிலும், தூங்க ஆரம்பிக்கிற போதே தான் டெல்அவிவ் என்கிற இடத்தில் ஹெய்ஃபா என்கிற இடத்துக்கு இரயிலில் செல்வதாய் கனவு வந்து விடுகிறது. இரயில் ஹெய்ஃபாவைச் சென்றடைகிறது. ஆனால் அவன் இறங்கு வதில்லை. அவன் டெல்அவிவிற்குத் திரும்புகிறான். திரும்பியது அவனுக்கு விழிப்பு வந்துவிடுகிறது. பொழுது விடிந்திருக்கக் காண்கிறான். அந்தப் பயணம் அவனுக்குச் சோர்வைத் தருகிறது.

தானும் அதே காரணத்தில், அதே அனுபவத்தைப் பெறுவ தாக மாரிஸ் கூறி வியக்கிறான். ஒவ்வோர் இரவிலும் அவனுடைய படுக்கையறைக்கு இடப்பக்கமாய் உள்ள கதவு திறக்கிறது. அந்த வழியே சோஃபியாலோரைன் (ஆலிவுட் நடிகை) உள்ளே வருகிறாள். அவள் தன்னுடைய ஆடைகளை அவிழ்த்து நிர்வாணமாகிறாள், விறைப்பாக நடந்து அவனுடைய படுக்கையில் ஏறிப் படுக்கிறாள். அந்த நேரம் அறையின் வலப்பக்கக் கதவைத் திறந்து ராக்வெல் வெல்ச் என்கிற நடிகை உள்ளே வருகிறாள். அவளும் நிர்வாணமாகி படுக்கையின் மறுபக்கத்தில் ஏறிப் படுக்கிறாள். அவன் ராக்வெல் பக்கம் திரும்புகிறான், அப்போது சோஃபியா அவனுடைய தோளைத் தட்டுகிறாள். இரவு நெடுகவும் அவன் ஒரு பக்கத்தில் இருந்து மறுபக்கம் திரும்பியபடி இருக்கிறான். அவனுக்குப் படுக்கையில் இருந்து எழுகிறபோது அடித்துப் போட்டமாதிரி ஆகிவிடுகிறது.

சால் உடனே சொல்கிறான், 'கர்த்தரின் பெயரால் கேட்கிறேன், நீ ஏன் எனக்கு போன் செய்திருக்கக் கூடாது? நண்பர்கள் எதற்காக இருக்கிறார்கள். எந்த நேரத்திலும் உனக்கு உதவுவது எனக்கு மகிழ்ச்சியளிக்கிற காரியமல்லவா' என்று.

மாரிஸ் சொல்கிறான். 'நான் பலமுறை உனக்குப் போன் செய்தேன். ஆனால், நான் உன்னை அழைத்த ஒவ்வொரு முறையும் நீ ஹெய்ஃபாவிற்கு இரயிலில் போவதாய் எனக்குச் சொல்லப்பட்டது' என்று.

மனம் தொடர்ந்து கனவு காண்கிறது. நீங்கள் யாரென்பதே உங்களுக்குத் தெரியாதபடிக்கு மனம் தடை செய்து விடுகிறது. அந்த நிலையில் உண்மை தொலைந்து போகிறது. உங்கள் இருப்புணர்வு என்கிற வைரம் கனவுகள் என்கிற குப்பையால் மூடி மறைக்கப்பட்டு விடுகிறது.

கபீர் சொல்கிறார்:

> **'உங்கள் வீட்டினுள் இருக்கிற விழிப்புணர்வை நீங்கள் பற்றிக்கொள்ளவில்லை. அதனால்தான் ஒவ்வொரு புனிதத்தலமாய் நீங்கள் போய்க் கொண்டிருக்கிறீர்கள் குழப்பம் நிரம்பியவராய்' – என்று.**

எல்லா முகங்களிலும் குழப்பம் பரவியிருக்கிறது - நீங்கள் அதைப் பார்க்க முடியும். எளிதாய் புலப்படுகிற மாதிரி, ஒரு தெளிவுத்தன்மை கொண்ட முகத்தைக் காண்பது அரிதாயிருக்கிறது. தெளிவாக, ஒளிவுமறைவு இல்லாமல் இருக்கிற முகம் அழகாயிருக்கும். சரீர அழகு மட்டுமல்ல அதற்குமப்பால் உள்ளிருந்து வெளிப்படுகிற அழகையும் அது கொண்டிருக்கும்.

ஆனால், குழப்பமுற்ற, மன உபாதைக்குள்ளான முகங்களைப் பாருங்கள். அந்த முகங்கள் அவர்களுடைய இருப்புணர்வை யல்லவா பிரதிபலித்துக் கொண்டிருக்கின்றன. முகங்கள் கண்ணாடிகள், உங்கள் இருப்புணர்வின் ஒரு பகுதி வடக்கில் போக விரும்பும், மற்றொரு பகுதி தெற்கில் போக விரும்பும். இன்னொன்று கிழக்கிலும், வேறொன்று மேற்கிலும் போக விரும்பும். நீங்கள் அமைதிக்குலைவிற்குள்ளாவீர்கள். உங்கள் முகங்களில் குழப்பம் பரவும்.

நீங்கள் யார், எங்கிருக்கிறீர்கள், எதற்காக இருக்கிறீர்கள் என்பதெல்லாம் உங்களுக்குத் தெரிந்திருக்காது. எல்லாமே தற்செயலாய் நடப்பது போல் தெரியும். காற்றில் அலைப்புறுகிற மரத்தைப்போல் திக்குதிசை தெரியாமல் திண்டாடுவீர்கள். நீங்கள் எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள். ஏன்? எதற்காக? ஒவ்வொரு முகங்களிலும் கேள்விக்குறி, காரணம்? உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியை நீங்கள் கூர்ந்து கவனிப்பதில்லை என்கிறார் கபீர். ரொம்பச் சரி. அங்கே ஒரு வெற்றிடம் இருக்கிறது. அது புயலின் மையம். அதை நீங்கள் பிரித்துப் போட முடியாது. அது ஒரே துண்டுதான். அதை மேலும் துண்டுகளாக்க முடியாது.

ஒவ்வொருவருக்குள்ளும் அந்த மையம் இருக்கிறது. ஆனால் உங்கள் இருப்புணர்வு மையத்திற்குள் நீங்கள் செல்வதில்லை. உள்ளே தேடிப் பார்க்கிற விருப்பம் எப்போதாவது உண்டாகும் என்றாலும், நீங்கள் தேடிக் கொண்டிருப்பதென்னவோ வெளியில்தான். சிலர் *'காபா' (Kaaba)விற்குச் செல்கிறார்கள். காரணம், தான் யார் என்பதை அறிந்து கொள்கிற விருப்பம்

---

*** காபா - இப்ரகீம் என்பவராலும் அவருடைய மகன் இஸ்மாயில் என்பவராலும் மெக்காவில் எழுப்பப்பட்ட சதுரக்கல். சொர்க்கத்தில் இருந்து ஆதாமுடன் கீழிறங்கியது.**

அவர்களுக்குள் எழுந்திருக்கும். நீங்கள் ஏன் காபாவிற்குச் செல்கிறீர்கள்? சிலர் காசிக்குச் செல்கிறார்கள். சிலர் மதுராவிற்கும், சிலர் திபெத்திற்கும்... மக்கள் போய்க்கொண்டே இருக்கிறார்கள். ஆனாலும், தேடல் என்னவோ வெளியில்தான்.

உங்களுக்குள் எழுகிற கேள்வி சரியானதாய் இருந்தாலும், நீங்கள் தவறான போக்கையே மேற்கொள்கிறீர்கள். உண்மையிலேயே நீங்கள் யார் என்று தெரிந்துகொள்ள விரும்பினால், மற்றவர்களிடம் கேட்காதீர்கள். யாரும் அதற்கு பதிலளிக்க முடியாது.

அப்படியே சிலர் பதிலளித்தாலும், அந்தப் பதில் உங்களுக்கானதாயிருக்காது. அது வெறும் தகவலாயிருக்கும், புரிந்துகொள்ள முடியாது. அந்தத் தகவலால் எந்தப் பயனும் இல்லை. காரணம் அதை உங்கள் புத்திக்கு எட்டிய அளவில்தான் நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். நீங்கள் கீதையைப் படிக்கலாம், குர்ஆன் படிக்கலாம், மிகப்பெரிய போதகர்களின் உரைகளைக் கேட்கலாம். ஆனால், உங்கள் சிந்தனைக்குத் தக்கவாறே உங்களுடைய புரிதல் இருக்கும். உங்கள் இருப்புணர்வின் நிலைக்கேற்பவே விஷயங்களை நீங்கள் விளங்கிக் கொள்வீர்கள். அப்படியாக எல்லாமே தொலைந்து விடும்.

தகவல் உங்களுக்குப் பயன்படாது என்பதோடு அது உங்களுக்குள் பெருமளவு குழப்பத்தையும் உண்டுபண்ணி விடும். ஒருவர் எத்தனைக்குக் கற்றுணர்ந்திருக்கிறாரோ அத்தனைக்குக் குழப்பமாகி விடுவார். நீங்கள் வேதங்களை, குர் ஆனை, பைபிளை, தம்மபதத்தைப் படித்தால் மேலும் மேலும் குழப்பந்தான். காரணம் ஒரே உண்மையை அவரவரும் தங்களுக்கே உரிய விதத்தில் சொல்லியிருப்பார்கள். இலட்சோபலட்சம் வழிகள்! ஆனால், உங்களால் உண்மையை அறிந்துகொள்ள முடியாது. காரணம், எது உண்மை என்று உங்களுக்குத் தெரியாது.

உண்மையில் சரியான செயல்முறை முதலில் உள்ளிருப்பதை அறிவதுதான். அதன்பிறகே வேதங்களை, குர்ஆனை, கீதையைக் கற்றறிவது. அவையெல்லாம் உங்களுடைய அனுபவத்திற்கு சாட்சியாகிறவை. உங்கள் அனுபவத்தை உண்மையென உறுதி செய்பவை. நீங்கள் தகுதியாக இருக்கிறீர்களா என்பதற்கு அவை சாட்சியாயிருக்கும். அவை தகுதியானவையா என்பதற்கு நீங்கள்

சாட்சியாயிருப்பீர்கள். இல்லையேல் படித்தலும், சிந்தித்தலும் மேலும் மேலும் குழப்பதையே உண்டுபண்ணும்.

தன்னுடைய நண்பன் ஆல்பர்ட்டிடம் அந்த மனிதன் சொன்னான். 'கவனி, கொஞ்ச நாள் முன்பு ஒரு பெண் *கொரில்லாவை நான் வாங்கி வந்தேன். நிறைய விலை கொடுத்து வாங்கினேன். ஆனால், அதனடன் இணை சேர்க்க ஓர் ஆண் கொரில்லா (gorilla) கிடைக்கவில்லை என்பதுதான். நான் நூறு டாலர் கொடுத்தால் என்னுடைய கொரில்லாவுடன் சேர ஒப்புக் கொள்வாயோ. அது என்னை வியப்பிலாழ்த்தும்.

'ம்... நான் அதுபற்றி யோசிக்கிறேன்' என்றான் ஆல்பர்ட்.

மறுநாள் ஆல்பர்ட் அவனுடைய நண்பனின் வீட்டுக்குச் சென்றான். 'நான், சில நிபந்தனைகளின் பேரில் அதைச் செய்ய முடியும்' என்றான்.

'என்ன நிபந்தனைகள்?' நண்பன் கேட்டான்.

'நிபந்தனை ஒன்று தழுவிக்கொள்ளவோ, முத்தமிடவோ, முன்விளையாட்டுகளில் (foreplay) ஈடுபடவோ மாட்டேன். இரண்டாவது, பிறக்கிற எல்லாக் குழந்தைகளுமே திருச்சபை அங்கத்தினர்களாக வளர்க்கப்பட வேண்டும். அந்த நூறு டாலர்களுக்கு நான் இரண்டு வாரந்தான் வந்து போவேன்.'

யார் விளக்குவது? உங்களுக்குத் தெரிந்த அளவே நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் அறிந்ததைவிட அதிகமாய் உங்களால் புரிந்துகொள்ள முடியாது. எனவேதான், உண்மையான குரு வெறும் தகவல்களைத் தெரிவிப்பது கிடையாது. அவர் இருப்புணர்வை வழங்குகிறார். அவர் உங்களுடைய புலமையை அதிகரிக்க மாட்டார். உங்களை ஆழ்ந்து சிந்திக்கச் செய்வார். அவர் உங்களை அமைதியானவராக்கி விடுவார். அவர் கோட்பாடு களையோ, தற்காலிக ஆதாரமாய் (வாதத்தில்) கொள்ளப்படும் கருத்துகளையோ, தத்துவங்களையோ வழங்க மாட்டார். திரும்பத் திரும்ப உங்களை உள்நோக்கி அனுப்புகிற வேலையையே செய்வார். உங்களுக்கு எதிராக இருந்தபோதும் அதனை அவர் செய்வார். உங்களுக்குப் பற்றிக்கொள்ள ஏதேனும் ஒரு தத்துவம்

* கொரில்லா - மனிதக் குரங்கு

இருந்தால் போதும், நம்பக்கூடியதாய் ஒரு கருத்து வேண்டும். அப்படி எந்தவொரு கருத்தையும் உண்மையான குரு உங்களுக்கு வழங்கமாட்டார். பதிலாக உங்களிடமுள்ள அத்தனை கருத்துகளையும் அவர் அகற்றி விடுவார். கத்தோலிக்கர், ப்ராட்டஸ்டெண்ட், இந்து, இஸ்லாமியர் என்கிற மதம் சார்ந்த கருத்துகளை அவர் உங்களிடமிருந்து எடுத்து விடுவார். அவர் மெள்ள மெள்ள உங்களை வெறுமை (naked) யானவராக்கி விடுவார். அபபோது உங்களுடைய 'உண்மையான நான்' (சுயம்) உங்களுக்குப் பிடிபடும். அது எந்தவொரு கருத்தையும் அடிப்படையாய் கொண்டிருக்காது. உங்களை இருக்கிறபடிக்கே அது உணரச் செய்யும். அது வெளிப்படுத்துகை (revelation) என்பது. அது உங்களுக்குள்ளேயே நிகழ முடியும். நீங்கள் வேறெங்கும் செல்லத் தேவையில்லை.

கபீர் உண்மையென்னவென்று உங்களுக்குச் சொல்வார்:

> **'கல்கத்தாவோ, திபெத்தோ நீங்கள் விரும்பிய இடத்துக்குப் போங்கள். உங்கள் ஆத்மாவின் மறைவிடத்தை நீங்கள் கண்டறியவில்லை என்றால், உலகம் உங்களுடைய செயல்முறைக்கு ஏற்றதாயிருக்காது'**

நீங்கள் கனவில் வாழ்ந்து கொண்டிருந்தால், உங்கள் உலகம் கனவுகளாக இருக்கும், உண்மையற்றதாகவே இருக்கும்.

கிழக்கில் உள்ள புத்தத்துறவிகள் உலகை மாயை என்கிறார்கள்- இல்லாத ஒன்று (illusion), மாயாஜாலம், எதுவும் உண்மையானதில்லை, எதுவும் உறுதியாய் கட்டப்பட்டதல்ல. அது புத்தரின் அறைக்கு வெளியே உள்ள மரங்கள் உண்மையானவை அல்ல என்று அவர்கள் குறிப்பதாகாது. சுவர் உண்மையானதல்ல, நீங்கள் சுவரினூடே நடந்து செல்ல முடியும் என்று அவர்கள் குறிப்பிடவில்லை. கல்லும், ரொட்டியும் நிஜமல்ல என்பதால் நீங்கள் எதை வேண்டுமானால் உண்ணலாம் என்று அவர்கள் பொருள் கொள்ளவில்லை.

அவர்கள் கருத்தில் கொள்வது முற்றிலும் மாறுபட்டது. இந்த உலகம் உண்மையானதல்ல என்று அவர்கள் கருதவில்லை. உங்கள் கனவுகளை நீங்கள் விட்டாலன்றி உங்களுக்கென்று ஒரு மாய உலகையே நீங்கள் படைத்துக் கொண்டு விடுவீர்கள் என்பதே

அவர் குறிப்பிட்டுக் காட்டுவது. நிஜ உலகம் ஒரு திரையாகச் செயல்படும், அதில் உங்கள் கனவுகளை நீங்கள் படமாக விழும் படிச் செய்கிறீர்கள். உண்மையான உலகை ஒருபோதும் நீங்கள் காண்பதில்லை. உண்மையான உலகம் கடவுள் நம்பிக்கையுடன் கூடியது. ஆனால் நீங்களோ உங்கள் கனவுகளையோ படம் காட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் இல்லாத ஒன்றில், மாயையில் இருந்து கொண்டிருக்கிறீர்கள்.

மனம் என்பது மாயை, உலகமல்ல. உலகெங்கிலும் ஒரு தவறான புரிதல் இருக்கிறது - உலகம் மாயை என்று கிழக்கு போதிப்பதாக - அது தவறு. கிழக்கு, மனமே மாயை என்றுதான் போதிக்கிறது. மனம் தோற்றுவிக்கிற உலகம் வேண்டுமானால் மாயையாக இருக்கலாம். தவறான எண்ணம் தோற்றுவிக்கிறது தவறாகத்தானே இருக்க முடியும்.

உண்மையான உலகம் மாயையாகாது. ஆனால் அதை நீங்கள் இன்னமும் அறிந்தபாடில்லை. நீங்கள் கனவு காண்பதை விட்டொ ழித்தால் மட்டுமே அதை அறிந்துகொள்ள முடியும்.

கோட்ஸ்கர் என்கிற யூதகுரு, டொமாஷோவைச் சேர்ந்த கிர்ஷ் என்கிற போதகரும் நகரத்துக்கு வெளியே காரில் சென்று கொண்டிருந்தனர். வழியில் ஒரு பாலத்தைக் கடக்கிறபோது பல பெண்கள் அவர்கள்மீது கற்களை வீசத் தொடங்கினர்.

• கோட்ஸ்கர் சொன்னார், 'பயப்பட வேண்டாம், அவர்கள் நிஜத்தில் பெண்களல்லர் (ஆவியுருக்கள்) அந்தக் கற்களும் நிஜமான கற்களல்ல. அவை வெறும் மாயை' என்று.

போதகர் கிர்ஷ் ஒரு கணம் மவுனமாயிருந்து விட்டுச் சொன்னார். 'நாமும் கூட மாயைதான் இலலையா?' என்று.

'இல்லை, நம்முடைய தவறுகளுக்காக நாம் உண்மையில் வருந்த நேரிடுகிற நிலையில் இருக்கிறோமே' என்றார் கோட்ஸ்கர்.

'தவறுகளுக்காக வருந்துகிற' (repent) என்கிற சொல் புரிந்துகொள்ளப்பட வேண்டியது. இயேசு இந்த 'repent' என்கிற சொல்லை திரும்பத் திரும்பப் பயன்படுத்தியிருக்கிறார். 'வருந் துங்கள்! உங்கள் தவறுகளுக்காக வருந்துங்கள், 'உலகம் தனது முடிவை நெருங்கிக் கொண்டிருக்கிறது' என்று இயேசுவின்

வாக்கினை கிரேக்கத்தில் இருந்து ஆங்கிலத்தில மொழி பெயர்த்தபோது பெரிய அவப்பேறு நேர்ந்துவிட்டது. பல சொற்களுக்கு துரதிர்ஷ்டம் பிடித்தது. அவற்றில் ரொம்பவும் மோச கதியை அடைந்த சொல் **'repent'** ஆகும். **'metanoia'** என்கிற கிரேக்கச் சொல்லின் வடிவமாற்றுதான் அது. **'metanoia'** என்றால் 'உள்நோக்கித் திரும்புதல்'. **'metanoia'** என்றால் தியானம். **'repent'** என்பதும் திரும்புதல் என்று பொருள்படும். மூலத்துக்குத் திரும்புதல். உங்கள் தேவாலயங்களில் குருமார்களில் உங்களுக்குப் போதிக்கப்படுகிற **'repentance'** (நீதிக் கோட்பாடுகளை மீறுவதால் வரும் துயரம்)ற்கும் இதற்கும் தொடர்பில்லை. **'Repent'** என்றால் உள்நோக்கித் திரும்புதல், உங்கள் இருப்புணர்வின் மூலத்தைச் சென்றடைதல், உங்கள் இருப்புணர்வின் மையத்துக்குப் போய்ச் சேர்தல்.

கோட்ஸ்கரின் பதில் மிகவும் நேர்த்தியானது, அதிமுக்கியத் துவமுடையது. 'இல்லை – நம் தவறுகளுக்காக நாம் வருந்துகிற நிலை இருக்கும்வரை...' என்கிறார் அவர். நமக்குள் ஆழ்ந்து சிந்திப்பதற்கான தியானிப்பதற்கான உந்துதல் ஏற்பட்டால்கூட நாம் உண்மையானவர்கள் (செயல்முறைக்கு ஏற்றவர்) தாம். ஆனால் ஆழ்ந்து சிந்திக்க வேண்டும், தியானிக்க வேண்டும். இல்லையேல் நாமும் அந்த ஆவிகளைப்போல் பொய்யாகி (மாயை) விடுவோம். தியானத்தின்போது கனவு காண்பது நின்று விடுகிறது – தியானம், கனவு காண்கிற மனதை நிறுத்துவது. கனவுகளில்லை, எண்ணங் களில்லை, முற்றான அமைதி. எதுவும் கிளர்ந்தெழுவதில்லை. முழுக்கவும் அமைதி. ஒரு சிற்றலைகூட கிடையாது. உட்பொதி வாய் **(content)** எதுவுமில்லை. சுத்த பிரக்ஞை மட்டுமே, நிலைக் கண்ணாடி போல. அந்தக் கண்ணாடி காட்டுவது உங்களுடைய உண்மையான தோற்றத்தையே. நீங்கள் காண்பது எதுவாயினும் அது நிஜம். உண்மையில் அதன்பிறகும் காண்பவர், காணப்படுவது என இரண்டில்லை. அந்தக் குறிப்பிடத்தக்க தருணத்தில் காண்பவரே காணப்படுவதாயும் இருக்கிறார். கவனிப்பவரே கவனிக்கப்படுவதாயும், அறிபவரே அறியப்படுவதாயும் இருக் கிறார். பொருளுக்கும், நோக்கிற்கும் இடையேயான வேறுபாடு மறைகிறது. அதுவே, 'கடவுளை முழுமையாக உணர்தல்' **(God-realization)** ஆகும்.

**'கபீர், உண்மை என்னவென்று உங்களுக்குச் சொல்வார் கல்கத்தாவோ, திபெத்தோ எங்கு வேண்டுமானாலும் போங்கள். உங்கள் ஆத்மாவின் உறைவிடத்தைக் கண்டறியாதவரை உலகம் உங்கள் செயல்முறைக்கு ஏற்றதாயிருக்காது'**

உள்ளே போங்கள், உள்முகமாய் உங்கள் பார்வையைத் திருப்புங்கள். நீங்கள் யாரென்பதைக் கண்டுகொள்வதோடு, இறை நம்பிக்கையை நோக்கி நகருங்கள்.

**நாம் எத்தகைய கடவுளைப் பற்றிப் பேசுகிறோம் என்று எனக்குத் தெரியாது.**

கபீர் சொல்கிறார்:

மக்கள் கடவுளைப் பற்றிப் பேசிக்கொண்டே இருக்கிறார்கள், ஆனால் எத்தகைய கடவுளைப் பற்றி நாம் பேசுகிறோம் என்று எனக்குத் தெரியாது - காரணம், உங்களை நீங்கள் அறிந்திருக்க வில்லை என்றால் கடவுளைப் பற்றிப் பேசுவதெல்லாம் உண்மை யாயிருக்காது. அவை பொருளற்றதாகவே இருக்கும். அவற்றை வீண் பேச்சு எனலாம்.

சந்தியா காலத்தில் புனிதமான ஒன்றை அழைப்பவர் உரத்த குரலில் அழைக்கிறார்.

இஸ்லாமிய மசூதிகளில் -

'அது உயிரற்றதல்ல என்பதால்தான்' அழைப்பவர் உரத்த குரலில் அந்தப் புனிதமான ஒன்றை அழைக்கிறார்.'

நம்முடைய தெய்வங்களை நாமே உருவாக்கிக் கொண்டோம். மெய்ம்மையைக் காண்பதற்குப் பதிலாக நம்முடைய தெய்வங் களைக் கற்பனை செய்யவும், கனவில் காணவும் முற்படுகிறோம். அதற்கான சடங்குகளை - நெறிமுறைகளை நாமே உருவாக்கிக் கொண்டோம். நாம் உரத்த குரலில் கடவுளை அழைக்கிறோமே, நம் கடவுளுக்குக் காது செவிடா என்ன? உண்மையில் உங்க ளுக்கும் கடவுளுக்கும் இடையே சொற்கள் தேவைப்படாது, காரணம், கடவுளுக்குத் தெரிந்தது ஒரே மொழிதான். அது ஜெர்மனோ, ஆங்கிலமோ, இந்தியோ, சம்ஸ்கிருதமோ அல்ல,

அரபியோ கிரேக்க மொழியோ அல்ல. மவுனம் என்கிற ஒரு மொழியே மகேசன் அறிந்த மொழி. அமைதியின் மொழியே அவனது மொழி!

**'ஏன்? அந்தப் புனிதன் ஒன்றும் செவிடல்ல, ஊர்ந்து செல்லும் பூச்சி தனது காலிலணிந்த கொலுசின் நுட்ப ஒலியும் அவனுக்கு நன்றாகவே கேட்கும்.'**

கூச்சலிடத் தேவையில்லை, கடவுளிடம் எதையும் சொல்லா மலிருப்பதே உண்மையில் பிரார்த்தனை ஆகும். அவரைக் கவனித்தபடி, அமைதியாய் கவனித்தபடி இருந்தாலே போதும். அவர் என்னிடம் சொல்வதற்கு ஏதேனும் அவரிடம் இருக்குமா? நீங்கள் செய்து கொண்டிருக்கிற அத்தனை வழிபாடுகளும் (வேண்டுகோள்கள்) அர்த்தமற்றவைதாம். நம்மிடம் சொல்வதற்குக் கடவுள் ஏதேனும் வைத்திருக்கிறாரா என்று கவனியுங்கள். உங்களுக்குள் சன்னமாய் ஒலிக்கும் அந்தக் குரலைக் கேட்ப தற்குக் கற்றுக்கொள்ளுங்கள். இரைச்சலை நிறுத்துங்கள். அந்த மவுனத்தில், நிசப்தத்தில் தானே உருவாகிறது வழிபாடு.

அமைதி நிரம்பிய இதயத்தின் நன்றியுணர்வே பிரார்த்தனை.

**'மணிமாலையை உருட்டுகிறீர்கள் புரிதற்கியலாத வடிவங்களை நெற்றியில் தீட்டிக் கொள்கிறீர்கள். நீளத் தலைமுடியைச் சடையாய் திரித்துக் கொள்கிறீர்கள் அடியாழத்திலோ வெடிக்கத் தயார்நிலையில் ஒரு துப்பாக்கி! பிறகெப்படி நீங்கள் பெற்றிருக்க முடியும்?'**

சமயச் சடங்குகளை நீங்கள் செய்தபடி இருக்கிறீர்கள். ஆனால் உங்கள் இதயம் முழுக்க வன்முறை இருந்தால், உங்கள் இதயத்தில் குண்டு நிரப்பிய துப்பாக்கி இருந்தால்... அதுதானே தற்போதைய நிலை.

முஸ்லிம்கள் இந்துக்களுடன் சண்டையிடுகிறார்கள், இந்துக்கள் முஸ்லிம்களுடன் சண்டையிடுகிறார்கள். கிறிஸ்தவர்கள் முஸ்லிம்களைக் கொல்கிறார்கள். முஸ்லிம்கள் கிறிஸ்தவர்களைக் கொன்று குவிக்கிறார்கள். மதம் என்பது உலகத்துக்கு பேராபத்து. தெய்வ அருளால் பெறப்படும் நலன் அல்ல. அது தவமல்ல, சாபம். நிறைய பேர் கொல்லப்படுவதை, கற்பழிக்கப்படுவதை, வெட்டிச்

சாய்க்கப்படுவதை நாம் காண்கிறோம்தானே. அவையெல்லாம் மதத்தின் பெயரால் நடக்கிறது. வேறெந்தப் பெயராலும் அல்ல.

இது ரொம்பவும் புரிந்துகொள்ள முடியாத ஒன்று. உதடுகளில் கடவுள் பிரார்த்தனை, இதயத்தில் குண்டு நிரப்பிய துப்பாக்கி.

உள்ளாக ஏன் இத்தனை வன்முறை? காரணம், போட்டி நிலவுகிறது. ஒவ்வொருவரும் மற்றவரை முந்திக் கொண்டு வெற்றி பெற முயல்கிறார்கள். 'பேரார்வம் உடையவராயிருங்கள்' அதுதானே உங்களுக்குப் போதிக்கப்பட்டிருக்கிறது. பேரார்வமே அத்தனை வன்முறைக்கும் மூலகாரணம். உங்களுடைய கல்வியும் பயிற்சியும் பதவி, புகழ், பெருஞ்செல்வம் இவற்றை அடைய வேண்டும் என்கிற ஆர்வத்தின் பாற்பட்டதே. 'முதல் ஆளாய் இருங்கள்! தங்கப்பதக்கத்தைப் பெறுங்கள்' அவ்வாறே உங்கள் வாழ்க்கை நெடுகிலும் முதல் இடத்துக்கு முயன்று பிரதமராகவோ குடியரசுத் தலைவராகவோ வரத் துடிப்பீர்கள்.

போட்டி, பேரார்வம் பற்றியெல்லாம் மக்களுக்கு நாம் போதிக்கிறோம். நீங்கள் பேராவல் கொண்டுவிட்ட நிலையில் உங்களிடம் பிரார்த்தனைக்கான பக்தியும் பதவிசும் இருக்க முடியும்? நீங்கள் பட்டம் பதவிகளில் ஆசை கொண்டிருக்கும் போது உங்கள் பார்வை எப்படி உள்நோக்கித் திரும்புமாம்? உங்கள் ஆசையை நிறைவேற்றிக் கொள்ளும் இடங்கள் வெளியே இருக்கின்றன. டில்லி, வாஷிங்டன், மாஸ்கோ என்று. இவைதாம் புதிய திருத்தலங்கள்.

பேராவல் கொண்டவர்களால் தங்கள் பார்வையை உள் நோக்கித் திருப்ப முடியாது. அது நடவாத ஒன்று. போட்டி மனப்பான்மை உள்ளவரால் உள்நோக்கித் திரும்ப முடியாது. அவர் எப்போதுமே அடுத்தவரையே பார்த்துக் கொண்டிருக்கும் நிலையில் அவரால் எப்படி தியானிக்க முடியும்? அவர் பகைமை யுணர்வோடு செயல்படுகிறவரல்லவா, தொடர்ந்து போரிடுகிற வராயிற்றே!

கபீர் நேரானவர், அவர் சொல்கிறார்:

நீங்கள் கடவுளைப் பற்றிப் பேசியபடி இருக்கிறீர்கள். மிகச் சிறந்த இறைமையியல் உருவாக்கப்பட்டது. தத்துவார்த்தமான விவாதம் தொடர்கிறது - கூடவே. இதயத்தில் ஒரு துப்பாக்கி?'

நிஜமான பிரச்சினை இதயத்தில் ஒரு மாற்றம் ஏற்பட வேண்டும் என்பதுதான். ஆனால் இதுவரைக்கும் அது நிகழ்ந்த பாடில்லை.

மிகவும் தகுதியான முதியவள் ஒருத்தி கிளியொன்றை விலைக்கு வாங்கினாள். அது பேசும் என்கிற உத்தரவாதத்துடன் அவளுக்கு விற்கப்பட்டது. ஆனால், அந்தக் கிளிக்கு ஒரேயொரு வார்த்தைதான் பேசமுடிந்தது. 'நான் ஒரு விபச்சாரி, நான் ஒரு விபச்சாரி' என்று சிறகடித்தபடி ஆர்வமாய் சொல்லிக் கொண்டிருக்கும். அந்தத் தகுதிமிக்க பெண்மணி தன்னுடைய மதகுருவிடம் அதுபற்றிக் குறைபட்டுக் கொண்டாள். ஒரு வழிபாட்டுக் கூட்டத்தின் போது, ஒழுங்காக வளர்க்கப்பட்ட இரண்டு பேசும் கிளிகளைப் பற்றி அவளிடம் அவர் தெரிவித்தார். 'ஒரு தம்பதிகளிடம் அந்த ஆண் கிளிகள் இருக்கிறது' என்றும் கூறினார். அவற்றால் அவளுடைய கிளியை வழிக்குக் கொண்டுவர முடியும் என்பது அவருடைய யோசனை.

மதகுரு அவர்களிடம் இருந்து அந்த இரண்டு ஆண் கிளிகளையும் இரவல் வாங்கி, அவளிடம் தந்தார். அவற்றை ஒரே கூண்டில் ஒன்றாக இருக்கச் செய்தாள் அவள். அவை சீக்கிரமே தங்கள் தலைகளைத் தாழ்த்தியபடி சன்னமான குரலில் பிரார்த்தனை செய்யத் தொடங்கின. பெண் கிளி தனது சிறகுகளை அடித்தபடி 'நான் ஒரு விபச்சாரி, நான் ஒரு விபச்சாரி' என்றது.

அதன்பேரில் ஓர் ஆண் கிளி தனது சிறகால் மற்றொரு கிளியை இடித்து, 'எங்கள் பிரார்த்தனைகள் ஏற்கப்பட்டது' என்றது.

இன்றைக்கு இது போதுமானது.

○

*முதலாம் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே! இதயத்தையும், சாட்சி பாவத்தையும் பற்றித் தாங்கள் தயவு செய்து ஓரளவேனும் தெரிவிக்க வேண்டும்... அவற்றை ஏக காலத்தில் அனுபவித்துணர முடியுமா?'*

இதயமும், சாட்சி பாவமும் ஒன்றுதான். சாட்சி பாவத்தில் இருப்பது மனமல்ல. மனம் ஒருபோதும் சாட்சியாக முடியாது. அது கவனிக்கப்படுவதேயன்றி கவனிப்பவரல்லர். நீங்கள் காணத் தொடங்கியதும் மனம் காணப்படுவதாகிறது.

ஒரு திரையில் நகரும் சினிமாக் காட்சிகளைப் போன்று உங்களுடைய எண்ணங்கள் நகர்வதை நீங்கள் காணலாம். உங்கள் விருப்பங்களும், உங்கள் கற்பனைகளும், நினைவுகளும், கனவு களும் அவ்வாறே நகர்ந்து செல்லும். ஆனால், அவற்றுடன் நீங்கள் அடையாளம் காணப்படுவதில்லை.

அப்படித் தொடர்பற்றிருப்பதே சாட்சி பாவம். அப்போது சாட்சி என்பது யார்? மனம் பார்க்கப்படுகிறது என்றால் பார்ப்பவர் யார்? அதுவே இதயம்.

ஆக சாட்சியும் இதயமும் வெவ்வேறல்ல. நீங்கள் சாட்சி யாயின் இதயத்தில் மையம் கொள்வீர்கள். அல்லது இதயத்தில் மையம் கொண்டால் நீங்கள் சாட்சியாவீர்கள். இவை ஒரே குறிக் கோளை அடைதற்கான இரண்டு செயல்முறைகள். ஒரு காதலரோ, பக்தரோ சாட்சி பாவத்தைப் பற்றி ஒருபோதும் நினைப்பதில்லை. அவர் அப்படியே இதயத்தை, தன் இருப்புணர்வின் மூலத்தைச் சென்றடைகிறார். இதயத்தைச் சென்றடைந்ததும் சாட்சி பாவம் தன்னுடைய சொந்த இசைவில் வந்துவிடுகிறது.

தியானிப்பவர் இதயம், நேசம் பற்றியெல்லாம் ஒருபோதும் எண்ணிக் கொண்டிருப்பதில்லை, அவர் சாட்சி பாவத்தை மேற்கொள்ளத் தொடங்குகிறார். அங்கே சாட்சி பாவம் வந்ததுமே இதயம் திறந்து கொள்கிறது, வேறு எங்கிருந்து கொண்டு அது காண முடியும்? தியானிப்பவரின் பாதையும், பக்தரின் பாதையும் வெவ்வேறானவை. ஆனால் அவை ஒரே அனுபவத்தைத்தான் அடைகின்றன. அவை ஒரே சிகரத்தின் உச்சியையே சென்றடைகின்றன.

வழியை நீங்கள் தேர்வு செய்து கொள்ள முடியும். ஆனால், குறிக்கோளை உங்களால் தேர்வு செய்துகொள்ள முடியாது. காரணம், இரண்டு குறிக்கோள்கள் கிடையாது. இருப்பது ஒரே குறிக்கோள் மட்டுந்தான். ஒரு பக்தரின் வழியை நீங்கள் பின்பற்றினால், அங்கே சென்று சேர்ந்ததும் சாட்சிபாவத்தைப் பற்றிப் பேசமாட்டீர்கள், அன்பைப் பற்றிதான்பேசுவீர்கள். தியானப் பாதையைப் பின்பற்றினால், அங்கே சென்று சேர்ந்ததும் நீங்கள் அன்பைப் பற்றிப் பேசாமல், சாட்சி பாவம் பற்றியே பேசுவீர்கள். வார்த்தைகள், மொழி, வெளியிடும் முறை இவையே வேறுபடும். ஆனால், வெளிப்படுவது மெய்ம்மை ஒன்றுதான்.

*இரண்டாம் கேள்வி:*

*ஓஷோ அவர்களே! எதுவென்று எப்படிக் காண்பது?*

**என்னவாயிருக்கிறது என்பதை அறிய எப்படி என்கிற சொல் தேவைப்படாது. அது எதுவாக இருந்தாலும் அதை அறிந்துகொள்ள எவ்வித செயல்முறையும், உத்தியும் அவசியமில்லை. அசைவற்றிருத்தலும், அமைதியும், எண்ணமற்ற மனமும் போதுமானது. எவ்வித உத்தியும் தேவைப்படாது. காரணம், எல்லா உத்திகளும் சிதைவை உண்டுபண்ணும் என்பது உறுதி.**

உண்மையில், எதுவென்று கண்டுகொள்ள மனமென்பது அவசியமில்லை. மனம் என்பது எண்ணங்கள். எண்ணங்களின் நெரிசலில் என்ன, எத்தகையது என்று உங்களால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடியாது. உங்கள் சிந்தனைகள் அனுமதிக்கிற அளவில்தான் எதையும் நீங்கள் புரிந்துகொள்ள முடியும். அதிக

அளவில் உங்களை வந்தடையாதபடி உங்களுடைய எண்ணங்கள் தடுத்துவிடும்.

நவீன உளவியல் ஆராய்ச்சியாளர்கள் எதைக் கண்டறிந் திருக்கிறார்கள் என்பது தெரிந்தால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். நடைமுறையில் தொண்ணூற்றியெட்டு சதவிகிதம் உங்கள் இருப்புணர்வில் நுழைய இடமளிக்கப்படுவதில்லை. மனம் இரண்டு சதவிகிதத்தை மட்டுமே அனுமதிக்கிறது. ஆக, நீங்கள் காண்பது எதுவாயினும் அதில் இரண்டு சதவிகிதத்தை மட்டுமே உண்மையில் புரிந்து கொள்கிறீர்கள். கடவுள் விஷயத்திலும் அப்படித்தான். இரண்டு சதவிகிதத்தைக் காட்டி இதுவே முழுமை என்கிற உணர்வை ஏற்படுத்துகிறது மனம். ஒரு போலியான உலகத்தில் நீங்கள் வாழ்கிறீர்கள். ஒரு பகுதியை முழுமை என்று நீங்கள் கருதிக் கொள்கிறீர்கள். அதற்கேற்பவே வாழ்கிறீர்கள் - உங்கள் ஒட்டுமொத்த வாழ்க்கையும் ஓர் ஏமாற்று ஆகிவிடுகிறது.

மனம் ஒரு நீதிபதி, தனக்குச் சரியென்று படுவதை மட்டுமே அது அனுமதிக்கும். தன்னுடன் பொருந்துகிறவற்றை மட்டுமே அது வளர்க்கும், வலுப்படுத்தும். தனக்கு எதிரானவற்றுக்கு அது இடமளிப்பதில்லை. உதாரணமாக - நீங்கள் என்னுடைய உரையைக் கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள் - உங்களுடைய கருத்துகளுக்கும், நம்பிக்கைகளுக்கும் வலு சேர்த்து உதவுகிறவற்றை மட்டுமே அது அனுமதிக்கும். நீங்கள் ஒரு கிறிஸ்தவராக இருந்தால் ஒரு கருத்தைக் கேட்டுக்கொள்வீர்கள், புத்த மதத்தைச் சேர்ந்தவராக இருந்தால் முற்றிலும் வேறான ஒன்றைக் கேட்டுக் கொள்வீர்கள். நீங்கள் ஒரு தவறான கருத்துடன் (prejudice) - சாதகமான அல்லது எதிரான ஊகத்துடன் இங்கே வந்தால் மாறுபட்ட விஷயங்களைக் கேட்பீர்கள். நான் ஒரே விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருந் தாலும் ஒரு கிறிஸ்தவர் தன்னுடைய வழியிலும், புத்த மதத்தவர் தன்னுடைய வழியிலும் விளக்கிக் கொள்வார்கள். பொதுவுடைமை வாதி தமக்குரிய வழியில் அதற்குப் பொருள் கொள்வார்.

என்னைத் தவறானவனாகக் கருதிக்கொண்டு வருகிற ஒருவர் தம்முடைய கருத்துக்கு உதவும் வாதங்களையே கவனத்தில் கொள்வார். ஒவ்வொரு தவறான கருத்தும் தனக்கு ஆதர வானவற்றையே கண்டடைய முற்படும். ஆக, எதுவென்றறிவதற்கு

ஒரு செயல்முறை தேவைப்படும் என்று நீங்கள் கருதினால் உங்கள் தொடக்கமே தவறாகிவிட்டிருக்கும். எதுவென்பது முன்பே இருப்பதுதான். நீங்கள் எவ்வித ஊகத்துக்கும், கருத்துக்கும் இடமளிக்காமல் அமைதியாக இருங்கள். ஆத்திக, நாத்திகக் கருத்துகளை உருவாக்கிக் கொள்ளாமல், எதற்கும் முந்துரிமை அளிக்காமல் இருங்கள். அறிந்திராத நிலையில் இருந்துகொண்டு இயங்குகிறபோது, எது, எத்தகையது என்பதை நீங்கள் புரிந்து கொள்ள முடியும்.

நீங்கள் அறிந்தவராயின் கருத்து திரிகிற (distort) நிலை இருக்கும். அறிந்திராத நிலை என்பது உங்கள் மனதை ஒருபுறமாய் ஒதுக்கிவைப்பதைக் குறிக்கும். தற்போது உங்கள் கண்களில் தூசியில்லை, உங்களுடைய நிலைக் கண்ணாடி தெளிவாயிருக் கிறது. அது பிரதிபலிக்கும், எது இருக்கிறதோ அதையே அது பிரதிபலிக்கும்.

இப்படித்தான் ஒருவர் நடைமுறையை எதிர்கொள்கிறார். எதிர்த்து நிற்றல் என்றாலே தூள் தூளாய் நொறுங்குகிற கதைதான். அது ஒருவிதத்திலும் உங்கள் சிந்தனைகளுக்கு உதவாது. நீங்கள் எது சரி என்று எப்போதும் எண்ணிக் கொண்டிருப்பீர்களோ அதையெல்லாம் அது அழித்துவிடும். இதுவரை நீங்கள் கனவில் வாழ்ந்து கொண்டிருந்ததை உங்கள் திட்டப்படி வாழ்ந்ததை மெய்ம்மை உங்களுக்குள் ஊடுருவிப் பரவ நீங்கள் இடமளிக் காததை அது காண்பித்து விடும். அதற்கு எதிராக, உங்களுடைய சொந்தக் கருத்துகளாலான ஓர் உலகை உங்களுக்கென்று நீங்கள் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். சன்னல் போன்ற அமைப்புகள் இல்லாத ஒரு சிறிய அடைப்புக்குள் (capsule) நீங்கள் வாழ்கிறீர்கள். அப்படித்தானே மக்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்.

மெய்ப்பொருள் இன்னதென்று ஒரு கிறிஸ்தவரால் அறிய முடியாது, ஓர் இந்துவும் அதை அறிய மாட்டார். முகமதியருந்தான். முக்கியத்துவமற்றவற்றை, பயனற்றவற்றை முழுமையாய் உதறும் ஒருவரால் மட்டுமே அதை அறியமுடியும். கள்ளம் கபடற்ற ஒருவருக்கே அது சாத்தியம். இயேசு தம் சீடர்களிடம் கூறுவர், 'நீங்கள் குழந்தைகளைப்போல் ஆகாவிடில் என் தேவனின் ராஜ்யத்தில் பிரவேசிக்க மாட்டீர்கள்' என்று. 'அறிந்திராத நிலையில் இருந்துகொண்டு செயல்படுங்கள்' என்கிறார் அவர்.

உபநிடதங்கள் சொல்கின்றன, 'யார் தங்களை அறிந்தவர் களாகக் காட்டிக் கொள்கிறார்களோ, அவர்கள் எதையுமே அறிந் திருக்க மாட்டார்கள். தாங்கள் ஒன்றையும் அறிந்திருக்கவில்லை என்பவர்களிடம் உங்களை ஒப்படைத்துக் கொள்ளுங்கள். காரணம், அவர்களால் தங்களைச் சுற்றியிருப்பவர்களிடம், தங்களோடு தொடர்பில் இருப்பவர்களிடம் மாற்றத்தைக் கொண்டுவர முடியும்.

விவேகம் மிக்க சாக்ரட்டீஸ் கூறுவார்,

'நான் ஒன்றை மட்டும் அறிவேன், எதையும் நான் அறிந்திருக்கவில்லை என்பதை' என்று.

எதையும் அறிந்திராத நிலையில் இருந்து கொண்டு செயல் படுங்கள், மிகப்பெரிய பரவசமூட்டும் அனுபவங்களை அது உங்களுக்கு வழங்கும். காரணம் எதையுமே அறிந்திராதவர் வியக்கும் திறனுடையவராக இருப்பார். தம்மை அறியாதவராய் காட்டிக்கொள்பவர் மரியாதை கலந்த அச்சத்தை உண்டுபண்ணு வார். ஒரு ரோஜா மலரைக் கண்டதுமே அவரால் ஆடமுடியும், நட்சத்திரங்களால் நிரம்பிய வானம் அவரைப் பாடத் தூண்டும். அவர் பிரபஞ்சத்தோடு தம்மைப் பொருத்திக் கொள்கிறவர். சூரிய அஸ்தமனத்தைக் கண்டதும் அவர் களிவெறி (பெருமகிழ்ச்சி) கொண்டு விடுவார் - காரணம் அவர் எதையும் அறிந்திருக்க வில்லை. மிகச்சாதாரணமானவையும் அவருக்கு அசாதாரண மானவையாகி விடும், காரணம் ஒவ்வொன்றும் அவருக்குப் புதிதாய் தெரியும்.

ஒவ்வொன்றுமே புரிந்துகொள்ள முடியாததும் விளக்கம் காண முடியாததுமான மறைபொருள்தான். உங்கள் அறிவில் உங்களு டைய அறிவின்மை (அறியாமை)யை நீங்கள் மறைத்துக்கொள்ள முடியும். அதே சமயம் மற்றவர்களை வியப்பிலாழ்த்தும் திறனை நீங்கள் இழந்து விடுவீர்கள். அறிவு இறைமையுடன் இணையும் பண்பை (mysticism) அழித்துவிடும். எனவேதான், காலகாலமாக மறைஞானிகள் ஒரேயொரு விஷயத்தைச் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள்: 'அறிவை விடுங்கள், எல்லா அறிவும் தேவையற்ற குப்பை' என்று.

அறிந்திராத நிலையில் இருங்கள். அந்த நிலையில் இருந்து கொண்டு செயல்படுங்கள். ஒரு குழந்தையைப்போல் மரங்களைப்

பாருங்கள், ஒரு கவிஞனைப் போல் நிலவைப் பாருங்கள், ஒரு கிறுக்கனைப்போல் வானத்தைப் பார்த்திருங்கள்.

என்ன, எத்தகையது என்பதை எப்படிப் புரிந்துகொள்வது என்று கேட்காதீர்கள். 'எப்படி' என்பது உங்களுக்கு ஓர் ஆராய்ச்சி முறை (**methodology**), குறிப்பிட்ட அறிவு, குறிப்பிட்ட தகவல் தேவைப்படுவதையே குறிக்கிறது. அதைக்கொண்டு மெய்ம் மையை விளங்கிக்கொள்ள முற்படுவீர்கள். ஆனால் மெய்ம்மை (**reality**) என்பது விளக்கிக்கொள்ள முடியாதது. உங்களுக்கு ஒன்று தேவைப்பட்டால், அதுபற்றி உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும் என்று நினைப்பீர்கள் - ஆனால், மெய்ம்மை வரை யறுத்துச் சொல்ல முடியாதது.

ஆச்சரியப்படக் கூடியவராயிருங்கள். நான் கேட்டறிந்த ஒன்று:

'சிஸ்டைன் தேவாலயக் கூரையில் ஓவியம் வரைந்து கொண் டிருந்தார் மைக்கேல் ஆஞ்செலோ. மல்லாந்து படுத்த நிலையிலும், புரண்ட நிலையிலும் சித்திரம் தீட்டியதில் அவர் களைத்துப் போனார். தற்செயலாகத் திரும்பியபோது, கீழே ஓர் இத்தாலியப் பெண் பிரார்த்தனை செய்வதைக் கவனித்தார். அந்தப் புகழ்பெற்ற ஓவியர் சின்னதாய் ஒரு குறும்பு செய்யத் தீர்மானித்தார். தாம் வேலை செய்து கொண்டிருந்த சாரக்கட்டின் விளிம்பில் அமர்ந்தபடி 'நான் இயேசு கிறிஸ்து. நான் இயேசு கிறிஸ்து! காது கொடுத்துக் கேள். நான் அற்புதங்களைச் செய்வேன்' என்று கூவினார்.

இத்தாலியப் பெண் அண்ணாந்து நோக்கினாள், தன்னுடைய ஜெப மாலையை இறுக்கிப் பிடித்தபடி, 'உம்முடைய வாயை மூடும். நான் உமது அம்மாவுடன் பேசிக் கொண்டிருக்கிறேன்' என்று பதிலளித்தாள்.

மைக்கேல் ஆஞ்செலோவிற்கு எப்படி இருந்திருக்கும்... வாழ்க்கை அப்படித்தான் இருக்கிறது. அது ஒவ்வொரு கணத்திலும் எதிர்பாராத அதிர்ச்சிகளைக் கொண்டு வரும். நீங்கள் தவறவிட்டுக் கொண்டேயிருக்கிறீர்கள் - நீங்கள் தவற விடுவதற்குக் காரணம் அந்த வியப்பிற்குரியவற்றை உங்களால் காண முடியாமல் போனதுதான். நீங்கள் எதிர்பார்ப்புகளால் நிறைந்திருக்கிறீர்கள். ஆயத்த விடைகளால் நிரம்பியிருக்கிறீர்கள். உங்கள் சொந்த

அறிவிற்கேற்ப எதையும் விளங்கிக் கொள்கிறீர்கள். ஓர் அற்புதமான, மந்த கதியிலான, செயலற்றுப் போன, இடையூறான உலகத்தை நீங்கள் கடந்து செல்கிறீர்கள். இந்த உலகம் எண்ணற்ற அற்புதங்கள்ளக் கணந்தோறும் நிகழ்த்திக் கொண்டிருப்பது. அந்த விஷயத்தில் பிரபஞ்சம் ஒன்றும் கருமித்தனமாய் நடந்துகொள்ள வில்லை. அற்புதங்கள் இங்கே வெள்ளமாய் பெருக்கெடுத்தோடு கிறது. ஆனால், நீங்கள் மீண்டும் ஒரு குழந்தையாகிவிட வேண்டும். மறுபடியும் கள்ளங்கபடற்றவராகி விடுங்கள்.

அது செயல்முறை பற்றிய கேள்வியல்ல, அது எப்படி என்பது பற்றிய கேள்வியுமல்ல. மனம் எப்படிச் செயல்படுகிறது என்பதைப் புரிந்து கொள்வதற்கான கேள்வி. மனம் எப்படி இயங்குகிறது என்பதை நீங்கள் புரிந்து கொண்டால் அதை ஒருபுறமாய் ஒதுக்கி வைத்து விடுவீர்கள். அந்நிலையில் உங்க ளுக்கும் மெய்ம்மைக்கும் இடையே எந்தத் தடையும் இருக்காது. தடையாய் எதுவும் இல்லை என்கிறபோது தொடர்பற்றிருக்கும் நிலை (விலகல்) என்பதும் கிடையாது. அப்போது நீங்களும் மெய்ம் மையும் ஒன்றுபட்டு விடுவீர்கள். அந்த ஒருமையில் மெய்ம்மை தன்னுடைய ரகசியங்களை உங்களுக்கு வெளிப்படுத்தும்.

*மூன்றாம் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே, என்னுடைய தற்பெருமையை இழப்பதற்கு நான் என்னையே மறக்க வேண்டுமா?'*

தன்னை மறப்பது பற்றிய கேள்வியல்ல இது. நினைத்துக் கொண்டிருப்பது பற்றியது. தற்பெருமை என்பது என்ன? உங்களை நீங்கள் மறப்பதன் காரணமாகத்தானே தற்பெருமை தலையெடுக் கிறது. காரணம் நீங்கள் யாரென்று உங்களை அறிந்திருக்கவில்லை. நீங்கள் யார் என்பது பற்றிய கருத்து எதுவும் இல்லையென்றால் வாழ்வதே கடினமாகி விடும். உங்கள் இருப்புணர்வை அறிந்திராத நிலையில், பொய்யான மாற்று (substitute) ஒன்றை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள்.

தற்பெருமை (ego) என்பது என்ன? உங்கள் சுயத்துக்குப் பதிலாக நீங்கள் உருவாக்கிக் கொண்ட பொய்யான மாற்றுதான் அது. அதுவே உங்கள் சுயமாகி விடாது. ஆனால் ஒரு சுயம் இல்லாமல் வாழ்வது சிரமம். அப்படி வாழ்வதும சாத்தியமல்ல.

ஏதோ ஒரு சுயம் இருந்தாக வேண்டியிருக்கிறது. இல்லையேல் நீங்கள் எப்படி ஒருமித்து இருக்க முடியும், ஊக்கத்தை இழந்து உருத் தெரியாமல் போயிருப்பீர்கள்.

உங்கள் மையம் போலி என்றாலுங்கூட அது உங்களுக்கு உதவக்கூடும். அது பொய்யானது என்றபோதும் ஒருமித்த தன்மையை ஒருவாறு உண்டுபண்ணவே செய்யும். உங்களை நீங்கள் ஒரேயடியாக மறந்து விடாதிருக்க, தற்பெருமையும் அவசியந்தான்.

உங்களை நினைவு கொள்ள உங்களால் முடியுமெனில் தற்பெருமை தேவைப்படாது.

ஏவா, நீ கேட்கிறாய் 'என்னுடைய தற்பெருமையை விடுவதற்கு நான் என்னை மறக்க வேண்டியிருக்குமா?' என்று. நீ இழப்பதற்கும், இழக்க முடியும் என்பதற்கும் தற்பெருமை ஒன்றும் உண்மையானதல்ல. அது ஒரு கருத்து, நிழல் அவ்வளவுதான். அது உயிரில்லாதது. உன்னுடைய பெயரைப் போன்றது. நீ பிறக்கும் போதே ஒரு பெயருடன் பிறந்து விடவில்லை. பிறகு, உன்னுடைய தந்தையோ தாயோ உனக்கு ஏவா என்று பெயரிட்டார்கள். உன் குடும்பத்தில் உள்ளவர்களும் மற்றவர்களும் அவ்வாறே அழைக்கிறார்கள். ஒரு பெயர் தேவைப்படுகிறது உன்னை அழைப்பதற்கு. அது பயனுடைமை சார்ந்தது (utilitarian).

உன்னுடைய பெயர்தான் முதலில் தோன்றியது. ஆதாம் தனியாக இருந்தபோது, தனிமையில் மனச் சோர்விற்குள்ளானபோது கடவுள் ஏவா (Eve)ளைப் படைத்தனுப்பினார். ஆதாமிடம் கடவுள் கேட்டார். 'நீ அந்தப் பெண்ணை எப்படி அழைப்பாய்?' என்று. தனித்திருந்த பொழுதில் தனக்குத் துணையாய் வந்தவளை எண்ணி அவன் பரவசப்பட்டான், தான் நேசிப்பதற்கு ஒருத்தி கிடைத்துவிட்ட மகிழ்ச்சி! அவளோடு அவன் பேசுவான், உறவாடுவான். அவன் கடவுளிடம் 'ஏவா, ஏவா, ஹவ்வா' என்றான்.

'ஏன் அப்படி?' கடவுள் கேட்டார்.

ஆதாம் சொன்னான். 'ஏவா அல்லது ஹவ்வா என்றால் உயிர். அவள் என்னுடைய உயிர். அவள் இல்லாவிட்டால் கிட்டத்தட்ட நான் செத்துப் போனவன்தான்' என்று.

ஆனால், ஏவாளைப் படைத்தபோது எந்தப் பெயரும் அவளுக்கு இடப்பட்டிருக்கவில்லை. ஆதாமிற்கு அவளை அழைக்கத் தேவைப்பட்டதால் ஒரு பெயர் வழங்கப்பட்டது. சில நேரங்களில் அவளை, 'நீ எங்கிருக்கிறாய்?' என்று அழைப்பான் அவன். சில நேரங்களில் அழைப்பதற்கு பெயர் தேவைப்படும். ஆனால், பெயர் என்பது உண்மையான ஒன்றல்ல. அது ஒரு முத்திரை (label) அவ்வளவுதான். அழைக்கவும், தொடர்பு கொள்ளவும், பேசுவதற்கும், உதவியாயிருக்கட்டுமே என்றுதான் மக்களை நாம் பெயரிட்டு அழைக்கிறோம். ஆனால், பெயர்கள் உண்மையானதல்ல. நீ அவற்றை விடவேண்டும் என்பதில்லை, விட்டாலும் அது ஓர் இழப்பாகி விடாது.

'ஏவா' என்கிற பெயரை நீ விட முடியும் - அவன் கடவுளின் 'ஏவா, ஏவா, ஹவ்வா' என்றான்.

'ஏன் அப்படி?' கடவுள் கேட்டார்.

ஆதாம் சொன்னான், 'ஏவா அல்லது ஹவ்வா என்றால் உயிர். அவள் என்னுடைய உயிர். அவள் இல்லாவிட்டால் கிட்டத்தட்ட நான் செத்துப்போனவன்தான்' என்று.

ஆனால், ஏவாளைப் படைத்தபோது எந்தப் பெயரும் அவளுக்கு இடப்பட்டிருக்கவில்லை. ஆதாமிற்கு அவளை அழைக்கத் தேவைப்பட்டதால் ஒரு பெயர் வழங்கப்பட்டது. சில நேரங்களில் அவளை, 'நீ எங்கிருக்கிறாய்?' என்று அழைப்பான் அவன். சில நேரங்களில் அழைப்பதற்கு பெயர் தேவைப்படும். ஆனால், பெயர் என்பது உண்மையான ஒன்றல்ல. அது ஒரு முத்திரை (label) அவ்வளவுதான். அழைக்கவும், தொடர்பு கொள்ளவும், பேசுவதற்கும், உதவியாயிருக்கட்டுமே என்றுதான் மக்களை நாம் பெயரிட்டு அழைக்கிறோம். ஆனால், பெயர்கள் உண்மையானதல்ல. நீ அவற்றை விடவேண்டும் என்பதில்லை, விட்டாலும் அது ஓர் இழப்பாகிவிடாது.

'ஏவா' என்கிற பெயரை நீ விட முடியும் - அதனால் எதுவும் ஆகிவிடாது. ஒரு சின்ன கருத்துரு (idea). மற்றவர்கள் உன்னை அழைப்பதற்காகத்தான் பெயர் இருப்பது. ஆனால் உன்னை நீயே அழைத்துக் கொள்வதற்கு வேறொன்று தேவைப்படும். அது தற்பெருமை. அதுவே 'நான்'.

உங்களைப் பற்றி நீங்கள் ஏதாவது சொல்ல விரும்பினால் அதற்கொரு சொல் தேவைப்படுமல்லவா. அந்தச் சொல் 'நான்'. மற்றவர்கள் உங்களைப் பெயர் சொல்லி அழைக்கிறார்கள். உங்களை நீங்கள் அழைத்துக் கொள்ளவும், உங்களைப் பற்றி விளக்கவும் 'நான்' என்கிற தற்பெருமை வேண்டியிருக்கும். அது பொய்யானது, அதற்கு உயிரில்லை. ஆனாலும், அதை நீங்கள் இழப்பதற்கில்லை. வேண்டுவதெல்லாம் அதை அறிந்து கொள்வதுதான். ஏன் இந்த 'நான்' என்பதற்கு இத்தனை முக்கியத் துவம்? தனிச்சிறப்பு? நிழலான ஒன்று நிஜமாகிறது (உறுதியாய் கட்டப்படுகிறது) - ஏன்? காரணம், உங்களுடைய உண்மையான சுயத்தை நீங்கள் அறிந்திருக்கவில்லை என்பதுதான்.

இயேசு 'நான்' என்கிறபோது அதே 'நான்' என்பதை அவர் குறிக்கவில்லை. 'நான் வாசலாயிருக்கிறேன், நான் சத்தியமாயிருக் கிறேன், நான் வழியாயிருக்கிறேன்' என்கிறபோது அவருடைய 'நான்' தற்பெருமையை பொருளாய் கொண்டிருக்கவில்லை. பகவான் கிருஷ்ணர் அர்ஜுனனிடம், 'என் பாதம் பணிந்து, என்னைச் சரணடை' என்றார். அந்த 'நான்' உங்களுடைய 'நான்' அல்ல.

புத்தர் தமது சீடர்களிடம் சொன்னார், 'உங்களிடத்தே ஒளியா யிருங்கள்' என்று. புகழ்பெற்ற அரசனான பிரசேனஜித் அவரைக் காணவந்தான். புத்தரிடம் பல சந்நியாசிகள் வந்து சிரம் தாழ்த்தி வணங்குவதைக் கண்டான். அவர்கள், 'புத்தம் சரணம் கச்சாமி' (நான் புத்தரின் பாதங்களில் இணைகிறேன்), 'சங்கம் சரணம் கச்சாமி' (நான் புத்தரின் திருக்கூட்டத்தில் இணைந்து கொள் கிறேன்), 'தர்மம் சரணம் கச்சாமி' (நான் முடிவான விதியுடன் இணைகிறேன்) என்றார்கள்.

பிரசேனஜித் தர்க்கவியல் கற்றவன். அவனுக்குக் கொஞ்சம் குழப்பம். சிறந்த கல்விமானும் வாதங்களில் தேர்ந்தவனுமான அந்த அரசன் புத்தரிடம் கேட்டான், 'ஐயனே, பொறுத்தருளும். ஆனால் நீங்கள் 'உனக்கு நீயே ஒளியாயிரு' என்று மக்களிடம் கூறு கிறீர்கள். ஆனால் அவர்கள் உங்களிடம் சரணடைகிறபோது, உங்கள் பாதங்களில் பணிகிறபோது நீங்கள் அவர்களைத் தடுக்க வில்லை. 'நீயே உனக்கு ஒளியாயிரு'என்று நீங்கள் சொல்வீர் களாயின், அடுத்தவர் காலில் விழுகிற அவசியமில்லையே.

பிறகெதற்கு அவர்கள் உங்களுடைய காலில் விழுந்து கொண் டிருக்கிறார்கள்?' என்று.

புத்தர் சிரித்தபடி சொன்னார். 'அவை என்னுடைய கால் களல்ல, அவர்கள் என்னிடம் சரணடையவுமில்லை. காரணம், உரிமை கொண்டாடக்கூடிய தற்பெருமை போல் எதுவும் எனக்குள் இல்லை. 'நான் வெறும் காரணம். என்னை ஒரு காரணமாய் வைத்துக்கொண்டு அவர்கள் சரணடைகிறார்கள். அவர்கள் என்னிடம் சரணடையவில்லை. அது சரணாகதி, அவ்வளவே. ஏதாவதொரு சாக்குபோக்கு இல்லாமல் அவர்களால் சரணடைய முடியாது. என்னை ஒரு சாக்காகக் கொள்கிறார்கள். என்னை அவ்வாறு அவர்கள் பயன்படுத்திக் கொள்ள நான் இடமளிக் கிறேன்.'

'புத்தர்' என்பதற்கு மிகச்சரியான பொருள் அதுவே. இல்லாத ஒருவர். தற்பெருமை என்கிற சொல்லிற்கு 'இல்லாத ஒன்று' என்றே பொருள் கொள்ள வேண்டும். பரமாத்மாவைப் பொறுத்தவரை அவர் இருக்கிறார், நீங்கள் இல்லை. தற்பெருமை ஒரு தவறான கருத்து. அது தேவைப்படக் காரணம் உண்மையான சுயத்தை நீங்கள் அறிந்திராததுதான்.

உங்கள் தற்பெருமையை விடுவதற்கு, உங்களை நீங்கள் இழந்தாக வேண்டும் என்பதில்லை. உண்மையில், உங்களை நீங்கள் நினைவில் கொண்டிருக்க வேண்டும், மறக்கக்கூடாது. நீங்கள் நிதானமும் கவனமும் உடையவராக வேண்டும். நீங்கள் விழிப்புடன் இருக்க வேண்டும். நீங்கள் யார் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். அது மற்றவர்கள் உங்களுக்குச் சொல்லியதுபோல் – நீ ஒரு பெண், நீ ஓர் ஆண், நீ ஓர் இந்து, ஒரு கிறிஸ்தவன், ஒரு வெள்ளையர், ஒரு கறுப்பர் என்பதல்ல.

உங்கள் இருப்புணர்வின் உள்ளார்ந்த மையத்தை நீங்கள் சென்றடைய வேண்டும். நீங்கள் யார் என்பதைக் கண்டறிய வேண்டும். அப்படிக் கண்டறிகிறபோது உங்களுடைய 'நான்' மறைந்து விடும். ஒளி வந்ததுமே இருள் மறைகிறது. உண்மையான சுயத்தைக் கண்டு கொண்டதும், பொய்யான ஒன்று அதற்குமேல் தேவைப்படாது.

ஆனால் நாமோ தற்பெருமையில்தான் வாழ்ந்து கொண்டிருக் கிறோம். அதை நிலைநிறுத்திக் கொள்வதற்கு, முடிந்தவாறெல்லாம்

ஆதாரங்களைத் தேடிப் பிடிக்கிறோம். அதை மனதில் இருத்திக் கொண்டே ஒவ்வொன்றையும் நாம் செய்கிறோம். செய்யாத வற்றைக்கூட, செய்வதாய் சொல்லிக் கொள்கிறோம்.

மக்கள் சொல்கிறார்கள், 'நான் சுவாசிக்கிறேன்' என்று. அதில் உள்ள அபத்தத்தைக் கவனியுங்கள். நீங்கள் மூச்சு விட்டுக் கொண்டிருந்தால், உங்களுக்கு ஒருபோதும் மரணமில்லை. சாவு உங்கள் முன்பாய் வந்து நிற்கும். நீங்கள் சுவாசித்தபடி சொல்வீர்கள், 'நான் மூச்சு விடுவதை நிறுத்தப் போவதில்லை' என்று. ஆனால், மரணத்தை உங்களுக்குக் கடமைப்படுத்த முடியாது.

நீங்கள் சுவாசிக்கவில்லை. சுவாசம் உங்களுடைய செயலல்ல. அது தன்னால் நிகழ்வது. உங்களால் சுவாசிக்க முடியாது. அது நின்றால் நின்றதுதான். அடுத்த சுவாசம் நிகழாவிடில் உங்களால் எதுவும் செய்ய முடியாது. சுவாசம் என்கிற நிகழ்வை மனிதன் தன்னுடைய செயலாக, தான் செய்வதாக நம்புகிறான்.

'நான் விரும்புகிறேன்' என்கிறீர்கள் நீங்கள். 'காதலிக்கிறேன்' என்று சொல்வதும் சுத்த முட்டாள்தனம். உங்களால் காதலிக்கவோ, காதலிக்காமல் இருக்கவோ முடியாது. காதல் ஒரு நிகழ்வு, செய்கையல்ல. காதலைப் பொறுத்தவரை நீங்கள் என்ன செய்ய முடியும்? அதுதானே நிகழ்கிறது அல்லது நிகழாதிருக்கிறது. நீங்கள் முயற்சி செய்தால் அதில் போலித்தனம் புகுந்து, அது செயற்கையாகி விடும். அப்போது அது எவ்வகையிலும் காதலாக இருக்காது, வெறும் நடிப்பாகவே இருக்கும்.

ஒரு பெண் அல்லது ஆணைக் காதலிக்கும்படி உங்களுக்கு உத்தரவிடப்பட்டால் நீங்கள் என்ன செய்வீர்கள்? எந்திர கதியில் அணைப்பது முத்தமிடுவது என்று சகலத்தையும் செய்து கொண் டிருப்பீர்கள். ஆனால், உங்கள் செய்கையில் காதல் இருக்காது. ஒட்டுமொத்த செயலும் உணர்ச்சியற்றதாகவே இருக்கும். உலகம் முழுக்க அதுதானே நடந்து கொண்டிருக்கிறது. கணவன் மனைவியை நேசிப்பதும், மனைவி கணவனை நேசிப்பதும் ஒரு கடமையாகத்தானே நடந்தேறுகிறது. அது ஓர் அரங்கக்காட்சி, நடிப்பு! அது நிஜமல்ல, எனவே, மனதுக்கு நிறைவளிப்பதில்லை.

தற்பெருமை என்பது அந்த முறையில் சூதானது (ஏமாற்றக் கூடியது)தான். தன்க்கு பக்கபலமானவற்றை, ஆதாரமானவற்றை

அது தேடிக் கண்டுபிடிக்கும். தன்னுடைய உணவிற்காக புதிய மேய்ச்சல் நிலங்களை அது கண்டுபிடிக்கும். நீங்கள் தோற்றால் சந்தர்ப்ப சூழ்நிலைகளைக் குறைகூறுவீர்கள். நீங்கள் வென்றால் அது உங்களால் கிடைத்த வெற்றி என்பீர்கள். நீங்கள் தோற்றால் அது விதியென்பீர்கள். நீங்கள் தோற்றால் சமூகத்தைக் காரண மாக்குவீர்கள். நீங்கள் தோற்றால் உங்களைச் சுற்றியிருப்பவர்களை ஏமாற்றுக்காரர்கள், உங்களுடன் போட்டியிடுபவர்களை தந்திரக் காரர்கள் என்பீர்கள். ஆனால், நீங்கள் வென்றால் அது நீங்க ளாகவே வென்றது!

சூஃபி கதையொன்று:

முல்லா நஸ்ருதீன் தனது சீடர்களை ஒரு கண்காட்சிக்கு அழைத்துச் சென்றிருந்தார். கண்காட்சியில் அநேக காரியங்கள் நடந்து கொண்டிருந்தன. ஓரிடத்தில் மக்கள், குறிப்பிட்ட இலக்கை நோக்கி அம்பு விடுகிற விளையாட்டில், பந்தயமாய் நிறையப் பணம் கட்டிக் கொண்டிருந்தார்கள். ‘வாருங்கள், நான் விரோதமான ஒன்றைக் காண்பிக்கிறேன்’ என்று தனது சீடர்களிடம் சொன்னார். அதுதான் சூஃபி மார்க்கத்தில் சீடர்களுக்குப் போதிக்கும் முறை. அவர் வில்லையும் அம்பையும் எடுத்தார். பெரிய அளவில் கூட்டம் கூடியது. ‘ஒரு சூஃபி குரு, சீடர்களுடன் வந்திருக்கிறார். ஏதோ நடக்கப் போகிறது!’ மக்கள் அமைதியாய் கவனிக்க லாயினர். முல்லா ரொம்பவும் பகட்டாக ஓர் அம்பைத் தொடுத்தார். அது குறியிலக்கை எட்டாமல் கொஞ்ச தொலைவிலேயே விழுந்தது. கூட்டம் சிரிப்பொலி எழுப்பியது. ‘நிறுத்துங்கள், முட்டாள்தனமாய் நடந்து கொள்ளாதீர்கள்’ என்றார் முல்லா. தனது சீடர்களை நோக்கி, ‘கவனித்தீர்களா, நீங்கள் தாழ்வு மனப்பான்மை யோடு வாழ்கிறபோது இப்படித்தான் ஆகும். தாழ்வு மனப்பான்மை யில் அவதிப்படுகிறவன் இப்படித்தான் நடந்து கொள்வான். தன்னுடைய இலக்கை ஒருபோதும் அவன் எட்டுவதில்லை. காரணம், அவன் ஈடுபாடில்லாமல் செயல்பட்டிருப்பான்.

மக்கள் கூட்டம், ‘ஆம், இதில் ஒரு படிப்பினை இருக்கிறது’ என்று அமைதியானது.

அடுத்த அம்பு... இலக்கையும் தாண்டி வெகு தொலைவு முன்னால் சென்றது. சொல்லப்போனால் அதுவும் ஒரு தோல்விதானே. மக்கள் மீண்டும் சிரித்தனர். முல்லா சொன்னார்.

'அமைதியாக இருங்கள். இந்த ரகசியங்களை நீங்கள் அறிய மாட்டீர்கள்' என்று. தனது சீடர்கள் பக்கம் திரும்பியவர், 'பாருங்கள், தன்னை மிக உயர்வாக எண்ணிக் கொள்பவன் இப்படித்தான் நடந்து கொள்வான். தன்னுடைய இலக்கை அவன் ஒருபோதும் அடைவதில்லை. இலக்கை அடைவதற்காக பக்கப் பாதையில் வேகமாய் சென்றதால் அவனால் நிற்க முடியாமல் போயிற்று. அவனுடைய நம்பிக்கை அதீதமானது. அவனும் சமநிலையற்றவன் தான்' என்றார்.

கூட்டம் மறுபடியும் 'கப்சிப்' ஆனது. 'ஆகா, இதிலும் ஒரு படிப்பினை இருக்கு'.

முல்லாவின் மூன்றாம் அம்பு, சரியாக இலக்கில் தைத்தது. தற்போது தன் சீடர்களுக்கு அவர் என்ன சொல்லப்போகிறார் என்று கூட்டம் ஆவலாயிருந்தது.

அவர் நேராக ஸ்டால் உரிமையாளரிடம் சென்று பணம் கேட்டார். சூதாட்டம் நடத்துகிறவன் கேட்டான் 'ஏன்?' என்று.

அவர் சொன்னார். 'இது என்னுடையது. முதலாம் அம்பை விட்டவன் தாழ்வு மனப்பான்மை கொண்ட ஒருவன். இரண்டாம் அம்பை விட்டவன் உயர்வு மனப்பான்மை கொண்ட இன்னொரு வன். இது முல்லா நஸ்ருதீனுடைய அம்பு. எங்கே பணம்?'

இதைத்தானே நாம் செய்து கொண்டிருக்கிறோம். கவனி யுங்கள், ஒவ்வொரு சந்தர்ப்ப சூழ்நிலையையும். நீங்கள் விழுகிறபோது தோற்கிறபோது அது கடவுளின் காரியம், விதியின் செயல், சமூகத்தின் சதி, சந்தர்ப்பங்கள் செய்த சூழ்ச்சி... ஆயிரத்தியோரு பெயரிடுவீர்கள். ஆனால், உண்மையில் இதுதான் செய்தி, உங்கள் தற்பெருமையை ஊறுபடுத்தும் என்பதால் அந்தப் பொறுப்பை நீங்கள் ஏற்க விரும்பவில்லை. ஆனால், நீங்கள் வெற்றி பெற்றாலோ அது எப்போதும் நீங்கள்தான். அது ஒருபோதும் கடவுளாகவோ, விதியாகவோ, சந்தாப்ப சூழ்நிலை யாகவோ இருக்காது. அது நீங்கள், அப்படியே உங்கள் திறமைகள், அறிவுநுட்பம் இவற்றால் அல்லவா வந்தது. வெற்றி பெற்றால் எப்போதுமே அது நீங்கள்தான்.

தற்பெருமையை உற்று கவனித்திருங்கள், உண்பிக்காதீர்கள். நீங்கள் அதற்கு உணவளிக்காவிடில் அது செத்துப் போகும்.

திருமதி. கோச்ரேன் தனது கணவரின் சவப்பெட்டி அருகே நின்றிருந்தாள். அவர்களுடைய மகன் முழங்கைப் பக்கம் நின்றிருந்தான். துக்கத்தில் பங்கேற்க வந்திருந்தவர்கள் ஒவ்வொருவராய் மதிப்பீட்டில் இறங்கினர்.

'தற்போது எந்த வேதனையும் இருக்காது அவருக்கு. ஆமாம், அவர் எப்படி செத்துப் போனார்?' திருமதி க்ராய்.

'பாவம் அவர். கனோரியா வந்து செத்துப் போனார்' என்றாள் திருமதி. கோச்ரேன்.

மற்றொரு பெண்மணி சடலத்தைப் பார்த்துவிட்டுச் சொன்னாள், 'தற்போது அதில் இருந்து அவர் நல்லபடியாகி விட்டிருப்பார். அவருடைய முகத்தில் அமைதியான புன்னகை தெரிகிறதே. அவருக்கு என்ன? எதனால் செத்துப் போனார்?'

'கனோரியா வந்து செத்துவிட்டார்' என்றாள் விதவை.

திடுதிப்பென்று அவளுடைய மகன் அவளை இழுத்துச் சொன்னான், 'அம்மா, அது பயங்கரம் அப்படிச் சொல்லாதே. அவர் 'டயரியா' (வயிற்றுப்போக்கு) வந்து செத்துப்போனார்' என்று.

திருமதி. கோச்ரேன் சொன்னாள், 'அது எனக்குத் தெரியும். அவர் பேதியில் போனார் என்பதைவிட, வீட்டுக்கு வெளியில் ஆட்டம் போட்டுச் செத்தார் என்று அவர்கள் எண்ணிக் கொள்ளட்டுமே. அதற்காகத்தான் அப்படிச் சொன்னேன்' என்று.

ஒவ்வொரு சந்தர்ப்ப சூழ்நிலையிலும் தற்பெருமை நிலையாக இருந்து கொண்டேயிருக்கிறது. தன்னை உண்பித்துக்கொள்ள ஒரு போதும் அது தவறுவதில்லை. தற்பெருமைக்கு உணவளிப்பதை நிறுத்துங்கள். செய்ய வேண்டிய முதல் காரியமே அதுதான்.

இரண்டாம் காரியம், மிகுந்த உணர்வோடு இருப்பது. நடைப் பயிற்சி. விழிப்புணர்வோடு நடந்து செல்லுங்கள். கவனியுங்கள் - விழிப்புணர்வோடு கவனியுங்கள். பேசுங்கள் - விழிப்புணர்வோடு பேசுங்கள். எதைச் செய்தாலும், உங்கள் வாழ்க்கையை விழிப்புணர்வால் அழகுபடுத்துங்கள். அந்த விழிப்புணர்வு மெல்ல மெல்ல உங்களுடைய உண்மையான சுயத்தை நீங்கள் காணும்படி செய்யும்.

ஆக, தற்பெருமை மீதான இரட்டைத் தாக்குதல் இது. முதலாவது - அதற்கு உணவளிக்காதீர்கள், இரண்டாவது - விழிப்போடு இருங்கள். அப்போது தற்பெருமை பட்டினியால் மரித்துப் போகும், சுயம் விழிப்புணர்வால் வெளிப்படும். தற்பெருமை என்கிற மேகங்கள் கலைந்ததுமே, சுயம் என்கிற சூரியன் மேலெழும். அந்தச் சுயத்துக்கும் உங்களுடைய 'நான்' (I) என்பதற்கும் தொடர்பில்லை. ஆயினும் அந்தச் சொல் பயன்படுத்தப்படுகிறது. புத்தர் அந்தச் சொல்லைப் பயன்படுத்தினார். தற்போது அது வேறுபட்ட பொருளைக் கொண்டு விட்டது. புத்தரின் உச்சரிப்பில் அல்லது கிருஷ்ணர் அல்லது இயேசு கிறிஸ்துவின் பிரயோகத்தில் அதன் உட்பொருள் வேறாக இருந்தது.

இருப்புணர்வு (being) மாற்றம் அடைகிறபோது எல்லாமே மாறிவிடுகிறது. புத்தர் பயன்படுத்திய சொல்கூட முற்றிலும் வேறான பொருளைக் கொண்டு விடுகிறது. அவருடைய வார்த்தைகள் அதே பொருளைக் கொண்டதாய் இருக்காது. காரணம், தற்போது உண்மை புதிய வடிவில் வெளிப்படுகிறது. புதிய வெளிச்சத்தில் எல்லாமே புதியதாய் தெரிகிறது.

நீங்கள் இருட்டில் வாழ்கிறீர்கள், இருட்டில் தடுக்கி விழுகிறீர்கள், இருட்டில் துழாவியபடி இருக்கிறீர்கள். விழிப்புணர்வு கொண்டவனோ வெளிச்சத்தில் இருக்கிறான். அவன் தடுக்கி விழுவதில்லை, துழாவிக் கொண்டிருப்பதுமில்லை. அவன் நேர்த்தியாகச் செயல்படுகிறான், அவனுடைய இருப்புணர்வின் தன்மை முற்றிலும் மாறுபட்டதாயிருக்கிறது. அவனுடைய வாழ்வும், நேசமும் கூட தனி அழகைக் கொண்டு விடுகிறது.

இரண்டு செயல்களைச் செய்யுங்கள். முதலாவது, உங்கள் தற்பெருமைக்கு. இதற்கு மேலும் தீனி போடாதீர்கள். இரண்டாவது அதிக விழிப்புடனிருங்கள். இதுதான் இரட்டைத் தாக்குதல், இரண்டு பக்கங்களிலும் இருந்து தாக்குவது. அது எப்போதும் வெற்றியைத் தரும், ஒருபோதும் தோற்பதில்லை.

*நான்காம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! இதற்கு முன் ஒருபோதும் இத்தனை அன்பையோ, தனிமையையோ நான் உணர்ந்திருக்கவில்லை. நன்றி ஐயனே!'***

தனிச்சிறப்பு கொண்ட விஷயமிது. ஆழ்ந்த புரிதல் தேவைப் படுவது.

அன்பு எப்போதுமே தனிமையைக் கொண்டு வரும், தனிமையும் அதுபோல் அன்பைக் கொண்டு வரும். அவை ஒரு போதும் பிரித்து வேறாக்கப்பட்டவை அல்ல.

மக்களோ நேர் எதிரிடையாகச் சிந்திக்கிறார்கள். 'நீங்கள் நேசிக்கிற போது எப்படித் தனியாக இருக்க முடியும்?' என்று நினைக்கிறார்கள். தனியாக இருப்பது ஏகாந்தம் (**aloneness**), மனிதத் தொடர்பில்லாமல் இருப்பது (**loneliness**) என்கிற இரண்டு சொற் களையும் அவர்கள் பிரித்துப் பார்ப்பதில்லை. அதனால் குழப்பம்.

நீங்கள் நேசிப்பவராயிருந்தால் உங்களால் மனிதத் தொடர் பில்லாமல் இருக்க முடியாது. அது உண்மை. ஆனால், காதல் கொள்கிறபோது நீங்கள் தனித்திருக்கும்படி ஆகும். நீங்கள் தனித்திருக்கிறீர்கள் என்றாலே ஒரு துணையை விரும்புகிறீர்கள் என்று அர்த்தம். தனித்திருப்பது என்பது நீங்கள் தெளிவற்று, கவலையில், நம்பிக்கையிழந்தவராய் இருப்பதைக் குறிக்கிறது. தனித்திருக்கிறபோது உங்களிடம் அச்சம் இருக்கும். தனித்து விடப்பட்ட உணர்வோடு இருப்பீர்கள். தனித்து விடப்பட்ட நிலை நீங்கள் யாருக்கும் தேவைப்படவில்லை என்பதைக் குறிக்கும். தனியாக இருப்பது ரணம் போல் வலியைத் தரும்.

தனிமை என்பது ஒரு பூ மாதிரி. உங்கள் அகராதியில் '**loneliness**', '**aloneness**' இரண்டுக்கும் ஒரே பொருளைத் தந்திருக் கக்கூடும். ஆனால், அப்படியில்லை. அவை முற்றிலும் வேறானவை. மனிதத் தொடர்பில்லாமல் (துணையற்றிருத்தல்) இருப்பது ஆறாத ரணம் புற்றாக (**cancer**) மாறுவதாகும். தனித்து விடப்பட்ட நிலையில் – நோய் பாதிப்பில்லாத போதும் அநேகம் பேர் இறந்து விட்டிருக்கிறார்கள். உலகம் தனித்து விடப்பட்ட, மகிழ்ச்சியற்ற மனிதர்களால் நிரம்பியிருக்கிறது. தங்களுடைய வெறுமையை, சூன்யத்தைப் போக்க ஏதோ ஒன்றைத் திணிக்கும் வேலையில் அவர்கள் ஈடுபடுகிறார்கள். முட்டாள்தனமான காரியம் என்றாலும் முழுமூச்சுடன் அவற்றைச் செய்து கொண்டிருக் கிறார்கள்.

மகிழ்ச்சியற்றவராய் தனித்திருக்கும் ஒருவர் நிறைய சாப் பிட்டு வைப்பதன் மூலம் நிறைவு காண முனைகிறார். தனித்

திருப்பவர் மதுவையோ எல்.எஸ்.டி. போன்ற போதைப்பொருள் களையோ தஞ்சமடைகிறார். காரணம், அவருக்குத் தன்னை மறக்க வேண்டும். தனித்து விடப்படும் நிலை ரொம்பவும் அருவருப்பான, அச்சத்தையும் திகிலையும் உண்டுபண்ணுகிற விஷயம். அது மரணத்தைப் போன்றது. ஒருவர் எப்படியாவது அதனிடமிருந்து நழுவி விடவே விரும்புவார். தனித்து விடப்பட்டவர், தனிமையின் கொடுமையில் இருந்து தப்புவதற்காக, மணிக்கணக்கில் தொலைக் காட்சிப் பெட்டியின் முன்பாய் அமர்ந்திருப்பார். சராசரி அமெரிக்கன் கண்கள் திருதிருவென்று எரிச்சலடைய ஆறு மணி நேரம் தொலைக்காட்சி முன்பாய் அமர்ந்திருக்கிறான். வேறெங்கு செல்வது? வேறென்ன செய்வது? யாரிடம் மனம் விட்டுப் பேசுவது?

கருத்துப் பகிர்வுகள் நின்று போயிற்று. மக்கள் ஒருவருக் கொருவர் பேசிக்கொள்வதில்லை. மிஞ்சிப் போனால் அவர்கள் பேசுவது மற்றவற்றுடன்தான், மற்றவர்களுடனல்ல. அடுத்தவரை எப்படி அணுகுவது என்பதே அவர்களுக்கு மறந்துவிட்டது. மக்கள் இணை கோடுகளாகி விட்டார்கள். அருகருகே ஓடிக்கொண்டிருந்தாலும் எங்கேயும் சந்தித்துக் கொள்வதில்லை, கணவன் மனைவியும், நண்பர்களும், ஏன் காதலர்களும்கூட இணைகோடுகளாய் இருக்கிறார்களே தவிர ஓரிடத்திலும், ஒரு போதும் சந்தித்துக் கொள்வதில்லை. நாளை சந்திப்பு நிகழக்கூடும் என்ற நம்பிக்கையுடன் அவர்கள் ஓடிக் கொண்டிருக்கிறார்கள். அது வெறும் நம்பிக்கை, அது தவறான எண்ணம். எப்படியோ அவர்கள் தொடர்ந்து போய்க் கொண்டிருக்கிறார்கள்.

நீங்கள் இரயில் பாதையைச் சென்று பார்த்தீர்களானால் தெரியும், இரண்டு தண்டவாளங்கள் இணையாய் ஓடிக் கொண்டிருக்கும். எங்கோ தொலைவில் அவை இணைந்து கொள்வதுபோல் தோற்றமளித்தாலும், அவை சந்தித்துக் கொள் வதேயில்லை. அவை சந்திப்பதுபோல் தோன்றிய இடத்துக்கே நீங்கள் சென்று பார்த்தாலும் அதில் மாற்றமிருக்காது. சந்திக்கும் புள்ளிகள் மேலும் தூரம் போகும். கடைசி வரை இணைவதே இல்லை.

உலகம் ரொம்பவே தனிப்பட்டுக் கிடக்கிறது. மக்கள் அதனால்தான் போதை மருந்திலோ பாலுறவிலோ நாட்டம்

கொண்டு விடுகிறார்கள். அல்லது சிறிது நேரமாவது தனிமையை மறந்திருக்க கேளிக்கைகளில் ஈடுபடுகிறார்கள். காயத்தில் ஊனீர் வடிந்து கொண்டிருக்கிறது. அதை நாம் பல வழிகளிலும் மறைக்க முயல்கிறோம் - விலைமிக்க உடைமைகள், பெரிய மாளிகை, நிறைய பணம் புதுப்புது கருவிகள் என்று - ஆனாலும் காயம் ஆறாத ரணமாய் தொடர்கிறது. கருவிகளால் அதை மறைக்க முடியாது. உலகிலேயே மிகப்பெரிய வீடு உங்களிடம் இருக்கலாம். ஆனால் சிறு குடிலில் நீங்கள் அனுபவித்திருந்த அதே தன்மையை அங்கேயும் அனுபவிப்பீர்கள். எதுவும் வேறுபாடாயிருக்காது. உடைமைகளால் உங்களுக்குள் இருக்கும் தனிமைத் துயரைப் போக்க முடியாது.

அந்நிலையில் மற்றவர்களிடம் தங்கள் துயரைப் பகிர்ந்து கொள்ள முற்படுவார்கள். அவர்கள் தனித்து விடப்பட்ட காரணத்தாலேயே அவர்களுக்குள் உறவு தோன்றிவிடாது. தேவைகளைப் பொறுத்து உண்டாவதல்ல உறவு. தேவையுள்ள இருவர், ஒருவரையொருவர் தங்களுடைய சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ளப் பார்ப்பார்கள். அவர்களிடையே உண்டாகிற தொடர்பு ஏமாற்றிச் சுரண்டுவதாயிருக்கும். அது அன்பையோ பரிவையோ அடிப்படையாய் கொண்டிருக்காது. அது நட்பாகாது. அது ஒருவகை வெறுப்பில் விளைந்ததாய், இனிப்புப் பூச்சுடன் கூடிய கசப்பாகவே இருக்கும். சற்று முன்பாகவோ, பின்பாகவோ, அந்த இனிப்பு மறைந்துவிடும். ஹனிமூன் முடிந்து, சலிப்புறும் நிலையே அனுபவமாகும். முன்பு அவர்கள் தனித்தனியே தனிமையின் கொடுமையை அனுபவித்துக் கொண்டிருந்தார்கள். தற்போது ஒன்றாக இருந்துகொண்டு அதே தனிமையை அனுபவிப்பார்கள். அது முன்பைவிட மனதை அதிகம் புண்ணாக்கி விடும். கணவன் தன்னுடைய தனிமையில் தொலைந்து போவான். மனைவி தன்னுடைய தனிமையில் தன்னை இழந்து கொண்டிருப்பாள். உலகிலேயே மிகவும் வருத்தத்திற்குரிய விஷயம் கணவன், மனைவி இருவரும் தனிமைத் துயரை சுமந்து கொண்டு இருக்கும் நிலை.

தனியாக (பக்கத்தில் யாருமில்லாமல்) இருப்பதென்பது முற்றிலும் வேறான ஒன்று. அது ஒரு பூ. உங்கள் இதயத்தில் பூக்கிற தாமரை. இந்தத் தனிமை நம்பிக்கையளிப்பது, ஆரோக்கியமானது.

பிறருடைய உதவியின்றி, பிறவற்றை ஒதுக்கி தான் மட்டு மாயிருப்பதில் உண்டாகிற மகிழ்ச்சி.

நீங்கள் காதல் கொண்ட நிலையில் தனிமை (ஏகாந்தம்) விரும்பத்தக்கதாயிருக்கும். ஆனால், காதலர்கள் மட்டுமே அதை உணர்ந்து அனுபவிக்க முடியும். காரணம், காதல்தான் தனித்திருப் பதற்கான துணிவை உங்களுக்குத் தருவது. தனியாக இருக்கும் சந்தர்ப்பத்தை காதல் மட்டுமே தோற்றுவிக்கிறது. காதல் கொண்டு விட்டால் உங்களால் தனித்திருக்க முடியும், அடுத்தவர் தேவைப் படாத அளவிற்கு அது உங்களை முழுமையாய் நிரப்பிவிடும். அது உங்களுக்குள் ஒருமித்த உணர்வை, பரவசத்தை உண்டுபண்ணும். காதலும் தனிமையும் ஒரே சக்தியின் எதிரெதிர் முனைகள். இரண்டுமே ஒப்பீட்டு அடிப்படையில் வேறுபடுகிறவை.

அதைப் புரிந்துகொள்வது நல்லது. சில சமயங்களில் காதலர்கள் ஒருவருக்கொருவர் தனித்திருக்க அவகாசமளிப்ப தில்லை. இடைவெளி இல்லையெனில் அந்தக் காதலே பாழாகி விடுகிற அபாயமிருக்கிறது. உங்கள் தனிமையில் காதலுக்கான புத்துணர்வு சக்தி கிடைக்கும். புதுத் தெம்பும், குதூகலமும் பெற்று விடுவீர்கள். நீங்கள் தனித்திருக்கும் போது, பொங்கி வழிந்தோடும் அளவிற்கு சக்தி சேகரமாகும்.

அந்த வெள்ளப் பிரவாகம் காதலாய் மாறும். அதை உங்கள் நண்பனிடமும், உங்கள் பெண்ணிடமும், நீங்கள் நேசிக்கிற எவரிடமும் பகிர்ந்து கொள்ள முடியும். பகிர்ந்து கொள்ள நிறைய இருக்கிறபோது, பகிர்ந்து கொள்ளத்தானே வேண்டும். அது உங்களை மற்றவர்களுக்கு கடமைப்பட்டிருக்கச் செய்யுமேயன்றி, மற்றவர்களை உங்களுக்குக் கடமைப்படுத்துவதாகாது. மேகம் திரண்டால் மழை பொழிகிறது. உலகம் நன்றியுணர்வுடன் மழையை வரவேற்றுக் கொள்கிறது. இதழ் விரிக்கும் பூக்கள் நறுமணத்தைப் பரப்பத்தானே வேண்டும். மணம் பரப்பும் பணியை ஏற்ற காற்றுக்கு அவை நன்றி கூறும்.

ஒருவர் தனியாக இருக்கும்போது சக்தியைச் சேகரிக்கிறார்.

சக்தி மகிழ்ச்சியில் இருக்கிறது. சக்தி அன்பில் இருக்கிறது. சக்தி ஆட்டத்திலும், கொண்டாட்டத்திலும் இருக்கிறது. சக்தி என்பது நம் வாழ்விற்கான ஆர்வம் என்றாலும் சரியே. சக்தி

இருந்தால் எதுவும் சாத்தியம். அது பாடலாகும், ஆடலாகும். அதுவே காதலுமாகும். மிதமிஞ்சிய சக்தி இருந்தால்தான் உச்சகட்ட இன்பத்தை உணர முடியும்.

பாலுறவு கொள்கிற பலருக்கும் இந்த உணர்வு பற்றிய அனுபவம் இருந்திருக்காது. காரணம் அவர்கள் முன்பே தங்கள் சக்தியை விரயம் செய்து, காலியாகி விட்டிருப்பார்கள். அவர்கள் உறவில் ஈடுபடுகிற பொழுது, பகிர்ந்து கொள்ள எதுவுமிருக்காது. அவர்கள் அடைகிற விந்துணர்வு (**orgasm**) பிறப்புறுப்பு சார்ந்த தாகவும், அற்ப அளவினதாகவும் இருக்கும். அது இரண்டாம் தரமானது. ஆன்மா சார்ந்த முக்கியத்துவமற்றது. அது ஒரு தும்மலைப் போன்றது. தும்மிய பிறகு நீங்கள் கொஞ்சம் நன்றாக உணர்வீர்களில்லையா, அப்படி. அல்லது முதுகைத் தேய்த்து விட்டுக் கொள்வதில் கிடைக்கிறதே அந்த 'அப்பாடா' உணர்வு.

உச்சகட்டம் (**orgasm**) அத்தகைய விடுபடும் உணர்வல்ல (**relief**). அது ஒரு கொண்டாட்டம். அது இணைவிழைச்சின் மூலம் நிகழும் சந்திப்பு. பரம்பொருளுடனான சந்திப்பு! உச்சகட்ட உணர்வு எப்போதுமே தெய்விகமானது. ஒருவர் மற்றொருவருக்கு வாசலாகி தெய்விகத்தில் பிரவேசிக்கிறார்கள். அந்த உச்சகட்டம் பால் சார்ந்ததல்ல, ஆன்மா சார்ந்தது. அதை பால் சார்ந்ததாய் எண்ணிக் கொள்பவர்கள் எதையும் எவ்வகையினும் புரிந்துகொள்ளாத வர்கள்தாம். அவர்கள் பால் சார்ந்த உறவு பற்றியோ, உச்சகட்ட உணர்வு பற்றியோ அறியாதவர்கள். உச்சகட்டம் என்பது பரவசநிலை, சமாதி அனுபவம். மக்கள் இதை அறிந்திராததற்குக் காரணம், அவர்களின் சங்கமம் தேவையின் அடிப்படையிலானதே யன்றி சக்திப் பிரவாகத்தின் பாற்பட்டதல்ல.

ஆக நீங்கள் காதல் வயப்பட்ட நிலையில் தனித்திருப்பதற் கான அவசியம் உண்டாகிறது. இது காதலில் மட்டுமே உண்டாகிற அவசியம் என்பதைக் கருத்தில் கொள்ளுங்கள். உண்மையான காதலர்கள் தங்கள் துணைக்கு அந்தச் சுதந்திரத்தை வழங்கு கிறார்கள். அவர்கள் முழுமையான சக்தியைப் பெற்றிருப்பவர்கள். இணைகிறபோது, பரஸ்பரம் ஒருவர் மீது ஒருவர் அதை வர்ஷிக்கிறார்கள். தனித்திருக்கும்போது பகிர்ந்துகொள்ளும் விருப்பம் பெருவிருப்பமாகிறது.

காதலர்கள் நெருங்குகிறார்கள். நெருங்கிப் பின் விலகு கிறார்கள். அதில் ஒரு சீர்த்தன்மை இருக்கும். விலகுவது ஒன்றும் உறவுக்கும் காதலுக்கும் எதிரானதல்ல. விலகிய நிலையில் தனிமையின் சுகத்தை மறுபடியும் அவர்கள் பெறுகிறார்கள். அதில் ஓர் அழகு இருக்கிறது, மகிழ்ச்சி இருக்கிறது. அதனை அவர்கள் அனுபவிக்கிறார்கள். நிரம்பி வழிகிற ஒன்றினை பகிர்ந்து கொள்கிற அவசியம் ஏற்படுகிறது. மகிழ்ச்சி ஒரு வெள்ளம். அதை உங்களுக்குள் தேக்கி வைத்துக்கொள்ள முடியாது. அதை யாருடனாவது நீங்கள் பகிர்ந்து கொண்டுதானாக வேண்டும்.

பாலுறவில் உங்களுக்கு நிகழ்வது, உயர்ந்த தளத்தில் புத்த நிலை அடைந்தவர்களுக்கும் நிகழ்கிறது. புத்தர் ஞானம் பெற்ற போது அவருடைய சக்தி முழுமையுற்றிருந்தது. அதைப் பகிர்ந்து கொள்ள வேண்டிய அவ்சியம் ஏற்பட்டது. நாற்பத்தியிரண்டு ஆண்டுகளாய் அவர் கிராமங்கள் தோறும் சென்று தன்னுடைய மகிழ்ச்சியை மற்றவர்களுடன் பகிர்ந்து கொண்டார்.

நானும் அதைத்தான் உங்களுடன் செய்து கொண்டிருக் கிறேன். நான் ஒன்றும் ஆசானல்லன். என்னிடம் போதிக்கக் கூடிய தாய் எதுவுமில்லை. அறிவிக்கும்படியாகவோ, கொடுக்கும்படி யாகவோ எந்தத் தகவலும் இல்லை. ஆனால், நான் இங்கிருப்பது என்னுடைய இருப்புணர்வை உங்களுடன் பகிர்ந்து கொள்வதற் காகத்தான். நான் மிகவும் நிறைந்திருக்கிறேன், கனத்த மேகத்தைப் போன்று. நீங்கள் என்னை மனத்தளவில் ஏற்றுக்கொண்டால் நான் எப்போதும் உங்களுக்கு நன்றியுடையவனாயிருப்பேன்.

மிதமிஞ்சிய அளவில் பகிர்ந்து கொள்கிறோம். ஞானம், புத்த நிலை, கிறிஸ்தவ உணர்வு இவையெல்லாம் பிரபஞ்சத்துடன் உங்களை இணைப்பது. சக்தியின் எண்ணற்ற தோற்றுவாய்கள் (sources) உங்களுக்கும் கிடைத்திருக்கின்றன. எப்போதும் வற்றாத ஊற்றுகள் உங்களுடையதாகி விட்டன. நீங்கள் பகிர்ந்தபடி இருங்கள். எத்தனைக்குப் பகிர்ந்து கொள்கிறீர்களோ அத்தனைக்கு உங்களிடம் வந்துகொண்டேயிருக்கும்.

தனிமை தனது உச்ச முனையை (peak) அடைகிறது. உலகிலேயே குருவானவர்தாம் மிகவும் தனித்திருப்பது. அதனால் தான் அவர் மிகவும் நேசிக்கப்படுபவராக இருக்கிறார். புத்தரை விடவும். இயேசுவை விடவும் உங்களை நேசிக்கக்கூடியவர்

இருக்கிறார்களா என்ன? தற்போது நேசம் பலதரப்பட்டதாகி விட்டது. நட்பு, பரிவு, ஒருவர் மற்றொருவரின் உணர்ச்சியை உணர்ந்து ஈடுபடுவது **(empathy)** என்று. உணர்ச்சியின் ததும்பல் (வேட்கை) மறைந்து விட்டது.

வேட்கை சிறிய அளவிலானது. பரிவு அளவற்றது. மிகப் பெரியது. எல்லை கடந்த விருப்பம் பரிவாகும்.

உங்கள் அனுபவம் நேர்த்தியானது. அந்த அழகை அதன் சிறப்பை நீங்கள் புரிந்து கொண்டிருக்க வேண்டும். எனக்கு நன்றி சொல்வது போன்ற உணர்வைப் பெறுவீர்கள்.

இதுபோன்ற காதலை, தனிமையை இதற்குமுன் எப்போதுமே உணரவில்லை என்பீர்கள். அவை இரண்டுமே ஒரு நாணயத்தின் இரண்டு பக்கங்கள்.

நீங்கள் சொல்கிறீர்கள் 'நன்றி, ஓஷோ' என்று.

தனிமைக்கும், காதலுக்கும் உள்ள தொடர்பை நீங்கள் புரிந்து கொண்டீர்கள். உங்களுக்கு அது புரிந்து விட்டது. இரண்டையுமே அனுபவித்து மகிழுங்கள். இரண்டில் ஒன்றை மட்டும் ஒருபோதும் தேர்வு செய்து விடாதீர்கள். காரணம் ஒன்றை நீங்கள் தேர்வு செய்தால் இரண்டுமே செயல்படாமல் நின்றுவிடும். இரண்டையுமே நிகழ விடுங்கள். தனிமை நிகழும்போது அதனுள் இருந்து இயங் குங்கள். காதல் உறவு நிகழும்போது அதனுள் சென்று விடுங்கள். தனிமை தனக்குள் இயங்குவது. உறவு புறத்தே இயங்குவது.

தனிமை என்பது மூச்சுக்காற்று உட்செல்வதுபோல, காதல் மூச்சை வெளியேற்றுவதுபோல. ஒன்றை நிறுத்தினாலும் நீங்கள் செத்துப் போவீர்கள். மூச்சை உள்ளாகவே நீங்கள் நிறுத்திவைக்க முடியாது. இரண்டையுமே நிகழ விடுங்கள். சுவாசம் ஒட்டுமொத்த செயல்முறை. அதில் உட்சுவாசம் வெளிச்சுவாசம் போலவே முக்கியத்துவம் உடையது. காதல் வெளிச்சுவாசம், தனிமை உட்சுவாசம். இப்படித்தான் உங்கள் ஆன்மா உங்களுக்குள் தங்கி வாழ்கிறது. இப்படித்தான் நீங்கள் உயிர்த்துடிப்பு மிக்கவராய் ஆழ்ந்த உணர்ச்சியுடன் (soulful) இருப்பது.

இரண்டுக்கும் இடமளியுங்கள். தேர்வு செய்யாதீர்கள். தேர்வு செய்யாது இரண்டுக்கும் இடமளியுங்கள். மூச்சு எங்கே சென்றாலும்

தொடருங்கள். தனிமை உட்புறமானது, காதல் வெளிப்புறமானது.

கார்ல் குஸ்டாவ் இந்த வார்த்தைகளைப் பிரசித்தமாக்கி விட்டார். அவர் மக்களை இரண்டு முக்கிய வகைகளாய் பிரித்திருக்கிறார். வெளியுலக ஈடுபாட்டாளர் (extrovert), தன் உள்ளத்தைத் தன்பால் திருப்பி ஆய்வு செய்பவர் (introvert) என்று. அது ஒரு தவறான பிரித்தல் (diversion). மக்களை அந்த முறையில் வகைப்படுத்த முடியாது. அவர்களை அப்படிச் சிறிய அறையில் – அஞ்சறைப் பெட்டியின் ஒரு பகுதியில் அடைத்துவிட முடியாது. நான் ஒருபோதும் அக ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கும் ஒருவனைக் கண்டதில்லை. அவன் உடனே செத்துப்போவான். அவன் உள்நோக்கிச் செல்லும் காற்றை மட்டுமே சுவாசிக்கிறவன் (உட்சுவாசம்). அதே போன்றுதான் புறப்பொருள்களில் மட்டும் அக்கறை காட்டுகிறவனும். அவன் வெளிச்சுவாசத்தை மேற் கொண்டவன். அவனும் உடனே செத்துப்போக நேரிடும். மக்கள் இரண்டுமாகத்தான் இருக்கிறார்கள்.

ஆக ஆராய்ச்சியைவிட புறப்பொருளில் ஈடுபாடு அதிகம் கொண்டவர்கள் இருப்பது சாத்தியந்தான். அதற்கு எதிர்மாறும் (vice versa) சாத்தியமே. அது உங்கள் ஆளுமையைச் சீரற்றதாக்கி விடும். ஒருவர் இரண்டையும் ஏக காலத்தில் கொண்டிருக்க வேண்டும். ஒருவர் சம நிலையில் இருந்தாக வேண்டும்.

என்னுடைய சந்நியாசிகள் அக ஆராய்ச்சியோடு புறவுலக அக்கறையும் கொண்டிருக்கிறார்கள். இது மிகவும் புரிந்து கொள்ளப்பட வேண்டிய முக்கியமான ஒன்று. காரணம், முற் காலத்தில் துறவிகள் அக ஆராய்ச்சியிலேயே கவனம் செலுத்தி யிருந்தனர். அவர்கள் வேற்றுலகவாசிகளாய் அறியப் பட்டனர். அவர்கள் உலகாயதமானவற்றைத் துறந்து, துறவிகளுக் கான மடங்களைத் தேடிச் சென்றார்கள். மலைகளிலும் பாலை வனங்களிலும் திரிந்தலைந்தார்கள். இறையுணர்வு பெறுவதற்கு அக ஆராய்ச்சியே சரியான வழி என்று அவர்கள் தீர்மானித் தார்கள். இறையுணர்வு வெளியே இல்லை என்று அவர்கள் கருதினர்.

உலகியல் சார்ந்தவர்களோ பூலவுலக அக்கறை கொண்ட வர்களாக இருந்தனர். உள்நோக்கித் திரும்புவதோ, தியானமோ வழி பாடோ அவசியமற்றது என்பது அவர்கள் கருத்து. அவர்களுடைய

ஆர்வம் பணத்திலும் அதிகாரத்திலும், கவுரவத்திலுமே இருந்தது. அவர்கள் மக்களிடம் உலகத்திடம் ஆர்வம் கொண்டார்கள்.

என்னுடைய சந்நியாசிகள் மனநோயாளிகளாக இருக்கக் கூடாது என்றே விரும்புகிறேன். இந்த உலகில் இருந்தாலும், இந்த உலகிற்குரியவராகி விடாதீர்கள். உங்கள் வீட்டுக்குள் குளிராக உணர்ந்தால்,வெளியே தோட்டப்பக்கம் வருகிறீர்கள். வெளியே வெயில் கடுமையாகிறபோது குளிர்ச்சிக்காக உள்ளே சென்று விடுகிறீர்கள். போவதும் வருவதுமாய் இருப்பது நீங்கள்.

பழைய சந்நியாசிகள் வெளியுலகைத் துறந்து, அகவுலகில் தங்கள் நிலையை உறுதிப்படுத்திக் கொள்ள முயன்றனர். வெளியுலகம் மறுக்கப்பட வேண்டியதல்ல என்பேன் நான். இரண்டுமே உங்களுக்கு உரியவைதாம்.

நீங்கள் அக் ஆராய்ச்சியிலேயே மூழ்கி விடாதீர்கள். அகம் சார்ந்தது, புறம் சார்ந்தது என ஒட்டுமொத்த பிரபஞ்சத்தையே நான் உங்களுக்கு வழங்கியிருக்கிறேன். நீங்கள் அக ஆராய்ச்சியி லேயே இருந்து கொண்டிருந்தால் உபாதைகளுக்குள்ளாவீர்கள், செயலற்றுப் போவீர்கள், தேக்கமடைகிற நிலை வரும், உள்ளுக்குள் அடைபட்டு, தொடர்பற்றுப் போக நேரிடும். வேரோடு பிடுங்கியெறியப்படுவதை நீங்கள் விரும்புகிறீர்களா? அக ஆய்வில் மூழ்கியவர்கள் (introverts) தேவையில்லாத துன்பத்தை வருவித்துக் கொள்பவர்கள். அவர்கள் சன்னல்களேயில்லாத வீட்டில் வாசம் செய்பவர்கள். அவர்களுக்கு தனிமையின் இனிமை தெரியாது. அவர்கள் தனித்திருப்பதில் உண்டாகும் துயரத்தை மட்டுமே அறிந்தவர்கள்.

புறவுலகில் மட்டுமே வாழ்ந்து கொண்டிருப்பவர்கள் தங்கள் பார்வையை உள்நோக்கித் திருப்புவதேயில்லை. அவர்கள் மற்றொரு கோடி (extreme)யில் இருப்பவர்கள். அவர்கள் காதலைப்பற்றி ஓரளவு அறிந்தவர்கள். அவர்களுடைய காதல் சிற்றின்பத்தோடு நின்றுவிடுவது. உங்களுக்குள் காதலைப்போல் தனிமையும் நிகழ்ந்தாலன்றி உண்மையான காதலை நீங்கள் அறிய முடியாது. அவர்கள் சிற்றின்பத்துக்கு காதல் என்கிற பெயரைச் சூட்டி மகிழ்பவர்கள். அவர்களுக்குத் துணை தேவைப்படுகிறது. அந்தத் துணையைத் தங்கள் சுயநலத்துக்காகப் பயன்படுத்து

வார்கள், தங்களுடையது என சுவாதீனப்படுத்திக் கொள்வார்கள். மக்கள் அடிமைகளாகிறார்கள்; நுகர் பொருள்களின் அளவிற்குத் தாழ்த்தப்படுகிறார்கள். மனிதர்கள் மனிதர்களாகவே இருக்க வில்லை.

தனக்குள் இருப்பதைக் கண்டு கொள்ளாமல் புறவுலகில் மட்டுமே கவனம் செலுத்துகிறவர் இரங்கத்தக்கவர். மிகவும் பரிதாப நிலையில் இருப்பவர் அவர். தனக்குள் இருக்கும் பொக்கிஷங்களை அவர் அறிய மாட்டார். தன்னுள் மட்டுமே தங்கிக் கொண்டவரின் நிலையும் மோசமானதுதான். காரணம் உலகின் அழகை, நீல வானத்து நட்சத்திரங்களை, கால் புதைய நடக்கும் மணற்பரப்பை, சூரியனை, மரங்களை, பறவைகளை அவர் அறிந்திருக்க மாட்டார்.

உட்பக்கம், வெளிப்பக்கம் என இரண்டில்லை. வெளிப் புறத்தின் உள்ளார்ந்த பகுதியே உட்பக்கம், உட்புறத்தின் விரிவே (புறப்பகுதி) வெளிப்பக்கம் எனது சந்நியாசிகள் இரண்டையும் ஒருசேரப் பெற்றவர்கள். கார்ல் குஸ்டாவ் ஜங் வகைப்படுத்த இயலாத ஒரு புதிய மனிதனைப் படைக்கவே நான் விரும்பு கிறேன். அவன் அக ஆய்வு, புறத்தேடல் இரண்டையும் ஒருங்கே பெற்றிருப்பவன். அவனுக்கு ஒரு புதிய பெயரைத்தான் அவர் சூட்ட வேண்டியிருக்கும். காரணம் அவன் முழுமையானவன். தனது சரீரத்தில் போலவே ஆன்மாவிலும் அவன் இருக்கிறான். அவன் பொருள் முதல் வாதக் கொள்கை (materialism)யில் போலவே ஆன்மிகத்திலும் நம்பிக்கை கொண்டவன். அவனு டைய மனதில் எவ்விதப் பிரிவும் (division) இல்லை, தேர்வு (choice) இல்லை. இரண்டு உலகங்களுக்குமானவன் அவன்.

வெகு நேர்த்தியான ஒன்று உங்களுக்கு நிகழ்ந்திருக்கிறது - அதேபோக்கில் போய்க் கொண்டிருங்கள். தவறான வழியில் போய் விடாதீர்கள். நெறியில் இருந்து விலகிச் செல்வது சுலபம். நம்முடைய பழைய பழக்கவழக்கங்கள், கருத்துகள் நம்மைப் பழைய அமைப்புகளுக்கே பின்னோக்கி இழுக்கும். இது தனிமையில் இருப்பதல்ல, துணையற்றிருப்பது என்று உங்கள் மனம் சொல்லும். அதைத் தனித்து விடப்பட்ட நிலை (loneliness) என்று அழைப்பதன் மூலம் தனிமையின் நல்ல தன்மையை அது அழித்து விடும். எச்சரிக்கையாயிருங்கள். உங்கள் மனதிடம்

எச்சரிக்கையாயிருங்கள். காரணம் மனதைவிடவும் பெரும் பகை வேறில்லை.

'மனம்' என்பதன் மூலம் உங்களுடைய கடந்த காலத்தையே நான் குறிக்கிறேன். கடந்த காலத்துக்கு முடிவு கட்டுங்கள், புதியவற்றைத் தொடர்ந்து கற்றிடுங்கள். மதிப்புமிக்க ஒன்றின்மீது நீங்கள் தடுக்கி விழுந்திருக்கிறீர்கள். காதல் தனிமையைக் கொண்டு வருகிறது. தனிமை காதலைக் கொண்டு வருகிறது. இரண்டும் நிகழக்கூடியவையே.

தற்போது நீங்கள் சொல்கிறீர்கள், 'இத்தனை காதலை, தனிமையை இதற்கு முன் ஒருபோதும் நான் உணர்ந்ததில்லை' என்று. என்னுடைய ஒவ்வொரு சந்நியாசியும் துரியத்தை - தனிமையையும், காதலையும் உணரவேண்டும் என்று நான் விரும்புகிறேன். இரண்டுக்கும் இடையே மோதலை உண்டு பண்ணாதீர்கள். இரண்டிலும் இருந்து ஒத்திசைவை (symphony) உருவாக்குங்கள். அரிதான வளமையை அதன்மூலம் பெறுவீர்கள்.

*ஐந்தாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! நான் தெளிந்த சிந்தனையும், புரிந்து கொள்ளும் ஆற்றலும் பெற்றுவிட்டால் உங்களைப் போல் எனக்கும் கிறுக்குப் பிடித்து விடுமா?***

உனக்கும் கிறுக்குப் பிடிக்கலாம், ஆனால் உனக்கே உரிய வழியில் நீ கிறுக்கனாகலாம். என்னைப்போல் உன்னால் ஆக முடியாது. ஒவ்வொருவரின் கிறுக்குத்தனமும் தனக்கேயுரிய தனித்தன்மையைக் கொண்டிருக்கும்.

கிருஷ்ணருக்கும் கிறுக்குப் பிடித்தது, ஒரேயொரு முறை. அது திரும்பவும் வரவில்லை. கிருஷ்ணர் புல்லாங்குழல் வாசிப்பதை உங்களால் எண்ணிப் பார்க்கமுடியும். ஆனால், இயேசு கிறிஸ்து புல்லாங்குழல் வாசிப்பதை உங்களால் கருத்துருவாக்கம் செய்ய முடியாது. அவர் தன்னுடைய வழியில் பித்துநிலையைப் பெற்றவர். அவர் சிலுவையைச் சுமந்தார். சரி, புல்லாங்குழலையும் சிலுவையையும் உங்களால் தொடர்புபடுத்திப் பார்க்க முடியுமோ? புல்லாங்குழலைச் சிலுவைக்குப் பக்கத்தில் வைப்பது அறிவுக்குப் பொருத்தமாய் தெரியாது. முழுக்க முழுக்க அபத்த காரியமாய் படும்.

மீராவிற்கு ஞானம் வாய்த்தது. அவர் எப்போதும் ஆடிக் கொண்டேயிருந்தார். தன் வாழ்க்கை நெடுகவும் கிராமம் கிராமமாய் சென்று ஆடினார், பிரபஞ்ச இருப்பை (existence)ப் பற்றிப் பாடினார். அவருடைய பதத்திலும், கீதத்திலும் கிருஷ்ண பிரேமையே இருந்தது. புத்தருக்கும் ஞானம் வந்தது. அவரோ அசைவின்றி, அமைதியாக, மவுனத்தில் இருந்தார். முதலில் வடிக்கப்பட்ட புத்தர் சிலைகள் சலவைக்கல்லில் அமைந்தது தற்செயல் அல்ல. அவர் ஒரு சலவைக்கல் போலவே காட்சி யளித்தார். சலவைக்கல்லாலான ஒரு சிலையைப் போலவே அவர் அமர்ந்திருப்பார். ஒரு மீராவின் சிலையை உங்களால் சலவைக் கல்லில் வடிக்க முடியாது. அது உங்களுக்குச் சாத்தியமல்ல. வெகு எளிதில் மாறும் இயல்புடையவர் அவர். மீரா ஓடுகிற நதியைப் போன்றவர், நீங்கள் அவரைச் சலவைக்கல்லில் சிலையாக்க முனைந்தால் அது ஏமாற்று வேலையாகி விடும். காரணம், சிலையால் ஆட முடியாது. நடனம் இல்லாத மீரா இல்லை. மீராவின் சிலையை ஊற்றுகளால்தான் உருவமைக்க முடியும்; சலவைக் கற்களாலல்ல. நீரூற்றில் வேகம் இருக்கிறது, அது நடனமாக முடியும்.

மீராவின் பித்துநிலை அவருக்கே உரிய முறையில் இருந்தது. இவர்களைப் பிரதியெடுக்க எவருக்கும் இயன்றதில்லை. ஞானம் பெற்றவர்கள் எல்லாருமே இணையற்றவர்கள். ஜப்பானைச் சேர்ந்த சிரிக்கும் புத்தர் பற்றி முன்பொரு முறை உங்களுக்குச் சொல்லி யிருக்கிறேன். தன் வாழ்க்கை முழுதும் அவர் சிரித்தபடி இருந்தார். சிரிப்பே அவர் விடுத்த செய்தி.

பிரபஞ்ச இருப்பு மீண்டும் அதே காட்சியை அரங்கேற்று வதில்லை. அது எப்போதும் புதிய உருவங்களை, புதிய நோக்கு தலை, புதிய வெளிப்படுத்துகை (revelation)யை நுழைத்தபடி இருக்கும். ‘இருந்தால்’, ‘அப்படியானால்’ (if) என்கிற சொல்லை ஒருபோதும் உபயோகிக்காதீர்கள். நீங்கள் ஞானம் பெறப் போகிறீர்கள். அச்சப்பட வேண்டாம். ‘இருந்தால்’ எதற்கு? ‘இருந்தாலும்’, ‘ஆனாலும்’ பற்றியதல்ல கேள்வி. நீங்கள் ஞானம் பெறப் போகிறீர்கள். அது ஒன்றும் ஒரு சாதனையல்ல, அது உங்களுடைய உண்மையான இயல்பு. ஏதேனும் ஒரு நாளில் உள்நோக்கித் திரும்புங்கள் ஞானம் பெற்று விடுவீர்கள். திங்கள்,

செவ்வாய் என்று எந்தக் கிழமையிலும் அது நடக்கும். அதேசமயம், இருப்பது ஏழு நாட்கள் மட்டுமே.

எந்தக் கணத்திலும் உள்நோக்கித் திரும்பலாம்.

ஞானம் பெறுவதென்பது ஒன்றும் தொலைதூரக் குறிக் கோளல்ல. அது நெருக்கத்தில், மிக நெருக்கத்தில் உள்ளது. உங்களுக்கும் ஞானத்திற்கும் இடையே தொலைவுமில்லை, வேறுபாடாக எதுவுமில்லை. அது மிக நெருக்கத்தில் இருப்பது என்று சொல்வதுகூட தவறு - அதுவே நீங்கள்தான் என்கிறபோது. உங்களை அறிந்து கொள்ளுங்கள் - ஞானம் பெற்றவராவீர்கள். நீங்கள் முன்பே அதுவாக இருக்கிறீர்கள். உங்கள் இருப்புணர்வில் புதிதாய் எதையுமே சேர்க்கத் தேவையில்லை. தேவைப் படுவதெல்லாம் ஒரு நூற்றியெண்பது டிகிரி திருப்பம்... பிறகு நீங்கள் கிறுக்கனாகி விடுவீர்கள்.

ஆம், ஞானிகளை கிறுக்கர்கள் என்று அழைப்பதும் நல்லதே, காரணம் உண்மையிலேயே அவர்கள் பித்து நிலையில் இருப்ப வர்கள்தாம். மிகுந்த ஆர்வத்தைப் பித்து என்றால் புத்தருக்கும் பித்து, கிறிஸ்துவிற்கும் பித்து, எனக்கும் பித்துதான். சற்று முன்பாகவோ பின்பாகவோ உங்களுக்கும் பித்துப் பிடித்துவிடும்.

ஆனால் ஒன்று நிச்சயம். நீங்கள் என்னைப்போல் இருக்க மாட்டீர்கள் - அப்படியிருக்க அவசியமுமில்லை. என்னைப்போல் நீங்கள் இல்லாமலிருப்பதும் நல்லதுதான். இல்லையேல் பாவனை கள் மேற்கொள்ளப்படும்; நடிகர்களும், பொய்யான தோற்றமுள்ள வர்களும் மலிந்து விடுவார்கள். பலரும் முயன்றிருக்கிறார்கள், அப்படித்தான் மதங்கள் தோன்றின. இலட்சோபலட்சம் பேர் கிறிஸ்துவைப்போல் ஆவதற்கு முயன்றார்கள். ஒருவர்கூட கிறிஸ்துவாக முடியவில்லை. இலட்சோப லட்சம் பேர் கிறிஸ்துவாக முயன்று, கிறிஸ்தவர்களாயினர்.

கிறிஸ்துவாகி விடுவது என்பது உண்மையில் குறிப்பிடத்தக்க ஒன்றுதான். ஆனால், கிறிஸ்துவாக விரும்புகிறவர் கிறிஸ்துவின் நடை உடை பாவனைகளை அப்படியே பின்பற்றக்கூடாது. அவரிடமிருந்து கற்றுணர வேண்டும், அவருடைய இருப்புணர்வை மனதில் வாங்கிக்கொள்ள வேண்டும். ஆனால், ஞாபகமிருக்கட்டும். கடவுள் முற்றிலும் வேறுபட்ட முறையில் உங்களிடம் வெளிப்படு

வார். அதை முன்னறிவிக்க முடியாது. இறை செயல்களுக்கு விளக்கம் கொடுப்பதும் இயலாத காரியம். அவர் உங்களில் எப்படி வெளிப்படுவார் என்று என்னால் கூறமுடியாது. உலகிலேயே மகா கிறுக்குப் பிடித்த ஆசாமி கடவுள்தான். அவரைப் பற்றிக் கணிக்க முடியாது. அவர் ஒரு வழியைக் கண்டுபிடிப்பார், புதிதாய் ஒன்றைக் கண்டுபிடித்துக் கொள்வார். அவர் புதிதாய் ஒன்றைக் கண்டு பிடிப்பது நல்லதே, காரணம் அந்தப் புதுமையின் உலகம் மேலும் மேலும் வளமடையும். எண்ணிப் பாருங்கள், புத்தர் கிறிஸ்துவைப் போல் இருக்கிறார். கிருஷ்ணரும் கிறிஸ்துவைப் போல்தான் இருக்கிறார். மகாவீரர், ஜராதுஷ்ட்ரர், லாவோட்சு, சுவாங்சு இவர்கள் எல்லாருமே கிறிஸ்துவைப் போல் இருக்கிறார்கள். உலகம் சலிப்புற்று விடும் இல்லையா. நீங்கள் எங்கு சென்றாலும் கிறிஸ்து எதிர்படுகிறார். உங்களுக்கு சோர்வு தட்டிவிடும். ஒருநேரம் சிலுவை சுமந்து, ஒரு நேரம் குழலூதிக் கொண்டு, ஒருசமயம் ஆடிக்கொண்டு, ஒருசமயம் மவுனக்கோலம் பூண்டு கடவுள் வந்தால் நன்றாக இருக்கும்.

மற்றவர்களைப் போலவே, இணையற்றவர்தாம் நீங்களும். இரண்டு பேர் ஒரே மாதிரி இருப்பதில்லை. இரண்டு புத்தர்கள் எப்படி ஒன்றுபோல் இருப்பார்கள்? இரண்டு நபர்கள் ஒரே மாதிரி இல்லை, கடற்கரையில் இரண்டு கூழாங்கற்கள்கூட ஒரே மாதிரி இருக்கவில்லை. உங்களுடைய விரல் ரேகைகள் உங்களுடையது மட்டுமே. உங்கள் உள்ளார்ந்த இருப்புணர்வின் பதிவுகள் பற்றி என்ன சொல்வது? அவை தனியானவை, ஒப்பற்றவை, ஒப்பிட முடியாதவை.

*கடைசிக் கேள்வி.*

***ஓஷோ அவர்களே! கடவுள் மனிதனுக்களித்த வாக்குறுதி பற்றி எனது கிறிஸ்தவ பெற்றோர்கள் பேசிக் கொள்வதுண்டு. இயேசு உலகைவிட்டுச் சென்றபோது தனது சீடர்களிடம், தாம் திரும்பி வந்து அவர்களைக் கடவுளின் ராஜ்யத்துக்கு அழைத்துச் செல்வதாக வாக்களித்தார். தாங்கள் இயேசு கிறிஸ்துவா? வாக்குறுதி உண்மையாகுமா?***

நான் எதற்கு இயேசு கிறிஸ்துவாக வேண்டும்? ஒருவர் போதும். நான் நானாகவே இருக்கிறேன். நான், என்னுடைய

இருப்புணர்வாக இருக்கிறேன். நான் இயேசு கிறிஸ்துவோ, கவுதம புத்தரோ, வர்த்தமானரோ மகாவீரரோ அல்ல. நான் ஏன் அப்படி இருக்க வேண்டும்? எப்படி அவ்வாறு இருக்க முடியும்? நான் ஒன்றும் அடுத்தவருடைய *கார்பன் காப்பியாக முடியாது. அசலான முகத்தை நான் பெற்றிருக்கிறேன்.

ஆனால், அத்தகைய கேள்விகள் எழவே செய்கின்றன. நீங்கள் இயேசு கிறிஸ்துவை நேசிக்கிறவர், தற்போது என்னிடமும் நேசம் கொண்டு விட்டீர்கள் - அதுதான் உங்கள் பிரச்சினை. தற்போது இரண்டு நேசத்தையும் எப்படியாவது இணைக்கப் பார்க்கிறீர்கள். உள்ளுக்குள் ஒரு மோதல் ஏற்பட்டிருக்கும். தற்போது என்ன செய்யலாம்? நீங்கள் இயேசுவை நேசித்தீர்கள், தற்போது என்னை நேசிக்கிறீர்கள். அடியாழத்தில் மனம் கேட்கும். 'என்ன, நீ இயேசுவிற்கு துரோகம் செய்துவிட்டு, இந்த மனிதரிடம் நேசம் கொண்டு விட்டாயா?' என்று. அதே சமயம் இயேசுவை ஏமாற்றவும் நீங்கள் விரும்பவில்லை. தற்போது உங்களால் என்னையும் ஏமாற்ற முடியாது. அதனால்தான் மோதல். 'நான்தான் இயேசு' என்று உங்களுக்கு நம்பிக்கையோடு அறிவித்தால், உங்கள் பிரச்சினை தீர்ந்துவிடும், இல்லையா?

நானும் அதே சத்தியமாக இருக்கிறேன். ஆனால் அதே சொற்களுடனல்ல. நான் அதே அனுபவத்தைத் தருவேன். ஆனால் அதே சொற்களிலல்ல. இயேசு எதை அறிந்திருந்தாரோ, அதை நானும் அறிந்திருக்கிறேன். அவர் அடைந்ததை நானும் அடைந்தேன். ஆனால் இயேசு இயேசுவாக இருக்கிறார். நான் நானாக இருக்கிறேன். அப்படித்தான் இருக்க வேண்டும்.

அமெரிக்க மான்ஹாட்டன் நகரின் ஒரு பகுதி பவேரி, கைவிடப்பட்டவர்கள் உறையும் இடம். அங்கே நடக்கும் தெருச் சண்டைகள் உலகப் பிரசித்தம். அங்கே அதிகாலை நான்கு மணிக்கு ஒரு குடிகாரன் தள்ளாடியபடி, பவேரி ஹவுஸில் நுழைந்தான்.

'நான்தான் இயேசு கிறிஸ்து! நான்தான் இயேசு கிறிஸ்து' என்று கூச்சலிட்டான்.

---

* **கார்பன் காப்பி - ஒரே சமயத்தில் பல பிரதிகள் எடுக்கப் பயன்படும் மை பூசிய காகிதத்தாலான படிவம்.**

தூங்கிக் கொண்டிருந்தவர்கள் விழித்துக் கொண்டனர். 'நான் இயேசு கிறிஸ்து! நான் இயேசு கிறிஸ்து'

'ஆ, வாயை மூடு. அமைதியாயிரு. ஓட்டலில் இருந்தவர்கள் ஊளையிட்டனர்.

'நான் இயேசு கிறிஸ்து, நான் இயேசு கிறிஸ்து' என்று வாயில் எச்சில் வடிய உளறிக் கொட்டினான் அந்தக் குடிகாரன்.

'எங்களைத் தூங்க விடு.'

'என்னை நீங்கள் நம்பாவிட்டால், கீழே வாருங்கள். நான் அதை உங்களுக்கு நிரூபிக்கிறேன்.'

சிலருக்குத் தூக்கம் ஒரேயடியாகப் போய்விட்டது. அவனைத் தொடர்ந்து அவர்களும் சென்றார்கள். அவன் இருண்டு கிடந்த ஒரு சலூனுக்கு (saloon)ச் சென்று, கதவை ஓங்கியடித்து, குரல் கொடுத்தான்.

மேல் தளத்தில் வசித்த கடைக்காரன் சப்தம் கேட்டு கீழே வந்தான். முன் வாசற்கதவைத் திறந்தான். அந்தக் குடிகாரனைப் பார்த்து, 'இயேசு கிறிஸ்துவே! மறுபடியும் நீயா?' என்று சப்தம் போட்டான்.

அந்தக் குடிகாரன், பின்னால் நின்றிருந்தவர்களிடம் 'நான் சொன்னேனே, பார்த்துக் கொண்டீர்களா?' என்று கேட்டான்.

இயேசு அருமையானவர். அவருக்கு மறுபடியும் இங்கே வருகிற அவசியமில்லை. அதற்கான துணிவு அவரிடம் இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. அவருக்கு நீங்கள் செய்தது என்ன, அவரிடம் எப்படி நடந்து கொண்டீர்கள், எண்ணிப் பாருங்கள். அவர் வாக்களித்திருந்தார் 'நான் மீண்டும் வருவேன்' என்று. ஆனால், நான் வாக்குறுதி கொடுக்கிறேன், அவர் ஒருபோதும் வரமாட்டார் என்று. காரணம், அவருக்கு என்ன செய்தீர்களோ அதைத்தான் தற்போதும் செய்வீர்கள். புதிது புதிதாய் ஞானம் பெற்றவர்கள் வருகிறார்கள், தங்களுக்கு என்ன நடக்கப் போகிறது என்றே தெரியாமல்...

இன்றைக்கு இது போதும்.

○

*முதல் கேள்வி:*

*ஓஷோ அவர்களே!*

முக்கியத்துவம் வாய்ந்த ஒரு கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. மிக உள்ளார்ந்த விதத்தில் நாம் அதை ஆராய வேண்டும். ஞானம் என்பது தற்செயலானது. அது நம்முடைய முயற்சிகளால் விளைவ தல்ல. அதற்காக உங்கள் முயற்சிகளை நிறுத்திக்கொள்ள வேண்டும் என்பதில்லை. காரணம், அப்போதும்கூட அது நிகழ்வதில்லை.

இந்தப் புதிர், முரண்பாடு போலத் தோன்றும் மெய்யுரை (paradox) ஆழப் புரிந்து கொள்ளப்பட வேண்டியது. தர்க்க மனதின் போக்கு, 'ஞானம் காரணம் தொடர்பானது முயற்சிகளின் பேரில் அடையப்பட வேண்டியது என்றோ அது தற்செயலானது, தன்னு டைய இசைவின் பேரில் நிகழ்வது' அந்நிலையில் முயற்சிகள் தேவைப்படாது' என்றோ தீர்மானிக்கும்.

இரண்டு முறைகளிலும் நீங்கள் தவற விடுவீர்கள். அது காரணம் தொடர்பானது (casual) என்று நினைத்து நீங்கள் முயற்சிகளை மேற்கொண்டால் அதைத் தவற விடுவீர்கள். அது தற்செயலானது என்ற நினைப்பில் முயற்சி செய்யாதிருந்தாலும் தவற விடுவீர்கள்.

உங்களால் முடிந்த அத்தனை முயற்சிகளையும் செய்ய வேண்டும். அது முயற்சிகளில் நிகழாது என்றாலும் செய்ய வேண்டும். ஆனால் அது நிகழும்போது அதை ஏற்பதற்கு, உங்கள் முயற்சிகள் உங்களைத் தயார்படுத்தும்.

அது தற்செயலானது. அது தன்னால் நிகழக்கூடியது. உங்கள் தரப்பில் எதுவும் செய்யப்பட வேண்டியதில்லை. ஆனால், அது நிகழும்போது அதைக் கண்டுகொள்ள நீங்கள் தயாராயிருப் பீர்களா? அதுதான் விஷயம், கவனிக்கப்பட வேண்டிய முக்கியக் கூறு (crux) ஆகும். அது நிகழும்போது அதற்காக உங்கள் இதயத்தைத் திறந்து வைத்து, உங்கள் இருப்புணர்வில் ஏற்றுக் கொள்ள அதை வரவேற்றுக் கொள்வீர்களா? அது உங்கள் கதவு களைத் தட்டும்போது, விருந்தாளியை உபசரிக்கும் விருந்தளிப்ப வரைப் போல் நீங்கள் தயாராயிருப்பீர்களா?

உங்கள் முயற்சிகளால் ஞானத்தைத் தோற்றுவிப்பதற்கில்லை. உங்களை அது பயன்படுத்திக் கொள்ளும்படியாய் அந்த முயற்சிகள் அமையும். உங்கள் இருப்புணர்வில் இருந்து ஒரு கருவறையை உருவாக்கி, அதை நீங்கள் கருக்கொள்ளும் விதத்தில் அந்த முயற்சிகள் நடைபெறும். அது அப்பால் (beyond) இருந்து நிகழும். எங்கோ வெகு தொலைவில் (காலவகையில் பிற்பாடு) அது நடக்கும் என்பதல்ல பொருள். மதிப்பில் உயர்ந்த, தன் வலிமைக்கும் அப்பாற்பட்ட என்னும் பொருளில் குறிக்கப் பட்டது அந்த 'அப்பால் இருந்து' (beyond). அது முன்பே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள்தான் தயாராயில்லை.

புத்தருக்கு அது நிகழ்ந்தபொழுது, ஒட்டுமொத்த உலகிற்கும், மனித இனம் முழுமைக்கும் அது நிகழக்கூடும்தானே. புத்தர் அதை ஏற்பதற்குத் தயாராக இருந்தார். அதே சமயம் மற்றவர்கள் அதை ஏற்பதற்கான தயார் நிலையில் இருக்கவில்லை. சூரியன் உதிக்கிறது, அது கண்கள் இருப்பவர்களுக்காகவே மெலெழுகிறது. கண்களால் பார்க்க முடியாதவர்களுக்கு அது மேலெழுவதில்லை.

நீங்கள் மருத்துவரிடம் சென்றால், பார்வையின்மையில் இருந்து உங்களை விடுபடச் செய்வார். அவருடைய மருந்துகள் சூரியனை மேலெழச் செய்யாது. சூர்யோதயத்தைப் பொறுத்தவரை மருந்துகளால் எந்தப் பயனுமில்லை. அது தன்னால் நிகழ்கிறது - அது முன்பே நிகழ்ந்து கொண்டிருக்கிறது, ஒவ்வொரு நாளிலும் - ஆனால் பார்வையிழந்தவர்களுக்கோ, பார்வையிருந்தும் கண்களை மூடியிருப்பவருக்கோ அது ஒருபோதும் நிகழ்வதில்லை.

உங்கள் முயற்சிகள் உங்களுடைய கண்களை மட்டுமே திறக்கச் செய்யும். இது - ஞானம் தற்செயலானது என்பதை உங்களுக்குப் புரிய வைப்பதற்காகவே.

நீங்கள் சொல்கிறீர்கள், 'ஞானம் அல்லது மனிதனின் இயல்பு நிலை என்பது காரணத் தொடர்பற்றது (a casual) என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன்...' நீங்கள் அதைக் கேட்டிருப்பீர்கள். 'அது தற்செயலானது என்பதை நீங்கள் உணராவிடில் அது உங்களுக்கு உதவாது. அது தற்செயலானது என்பதை எப்படி உணர்ந்து கொள்வீர்கள்? உங்களால் முடிந்த முயற்சிகளை யெல்லாம் செய்தும், திரும்பத் திரும்பத் தோற்றுக் கொண்டிருப் பீர்கள். திடுதிப்பென்று ஒருநாள் எல்லாவற்றையும் உணர்ந்து கொள்கிறீர்கள். முயற்சிகளால் அதைச் செய்ய முடியவில்லை. மெய்யாக உணர்ந்தபின், அந்த முயற்சிகளை நிறுத்த எண்ணி யிருக்க மாட்டீர்கள். உங்கள் மனதால் உணரும் திறன் (understanding) காரணமாய் அந்த முயற்சிகள் தானாகவே நின்றுவிடும், தன்னால் மறைந்துவிடும்.

கவுதம புத்தரின் விஷயத்தில் அப்படித்தான் அது நிகழ்ந்தது. அதை அடைவதற்காக ஆறு ஆண்டுகள் மனித சாத்திய முயற்சிகள் அனைத்தையும் அவர் மேற்கொண்டார். ஆனால் அது ஒன்றும் சாதனையல்ல என்பதால் அவரால் அதை அடைய முடியவில்லை. அவர் முயற்சிகளை அதிகரித்த அளவிற்கு ஏமாற்றமும் அதிகரித்தது. நீங்கள் எந்த முயற்சியும் செய்யா திருந்தால், ஏமாற்றமடைய மாட்டீர்கள். தன்னுடைய மொத்த வாழ்க்கையையும் அதற்காக அவர் பணயம் வைத்தார். ஆனால், அது நிகழவில்லை. அவர் எதையும் பற்றிக் கொண்டிருக்க வில்லை. பற்றிக் கொண்டிருந்தால் அந்தப் புரிதல் அவருக்குச் சாத்தியப்பட்டிருக்காது. அத்தனை முயற்சிகளும் வீணாகி யிருக்கும்.

எதையும் பற்றியிராதவர்களுக்குத்தான் அது நிகழ்கிறது. உங்களிடம் இருப்பதையெல்லாம் பணயமாக வைத்து, நீங்கள் முற்றிலும் வெறுமையாகிய பின்பும் அது நிகழாவிடில், அப்போது அறியும் திறன் (understanding) மேலெழுந்து, என்னுடைய

முயற்சிகள் பயனளிக்கவில்லை. எனது முயற்சிகள் அகங்காரத்துடன் கூடியவை - அகந்தை பயனளிக்காது. எனது முயற்சிகளெல்லாம் என்னுடைய மனதின் சூழ்ச்சிகள். மனமே தடையானது' என்கிறது.

ஆனால் இது உங்கள் சொந்த அனுபவமாக வேண்டும். நீங்கள் காதில் கேட்டது உதவாது. மிகப்பெரிய உண்மைகளை நீங்கள் கேட்டிருக்கக் கூடும். ஆனால் உங்கள் இருப்புணர்வில் இருந்து அவை மேலெழவில்லை என்றால் அவை உண்மையாகாது. கேட்டறிந்த உண்மை ஒரு பொய்தான். அனுபவித்தறிந்த உண்மையே உண்மையாகும். அனுபவ உண்மைதான் உங்களை விடுவிப்பது. அது எப்படி உங்களுக்கு அனுபவமாவது? நீங்கள் எவ்வித முயற்சியும் இல்லாமல் அதைப் பெறவேண்டும். புத்தருக்கு நிகழ்ந்ததுபோல் அது நிகழ வேண்டும் என்று விரும்புவீர்கள் - அதற்கு முந்தைய ஆறு ஆண்டுகளைக் கழித்துக் கொண்டு (குறைவாக).

அந்த ஆறு ஆண்டுகள் மிகமிக அவசியமாக இருந்திருக்கிறது. அதன்பிறகே ஒருநாள் திடுதிப்பென்று அந்தி சாயும் வேளையில் வெளிப்படுத்துகை (revelation) அவருக்கு நிகழ்ந்தது. 'என்னுடைய முயற்சிகளால் எனக்குமப்பால் என்னைக் கொண்டு செல்ல முடியவில்லை' இது மிகவும் இயல்பானது. உங்களுடைய காலணியின் நாடாவை (shoe string)க் கொண்டே உங்களை மேலே இழுப்பதைப் போன்றது அது. அதில் எந்தப் பயனும் இல்லை. ஆனால், அதை எப்படி ஒருவர் அறிந்து கொள்வது?

அந்த நீண்ட ஆறு வருஷங்கள்... அவை அறுபது வருஷங்களைப் போல் இருந்திருக்கும் அவருக்கு. காரணம், உண்மையிலேயே அவை வலியைத் தருபவை. துறவிற்கான பலவகைப் பயிற்சிகளை அவர் முயன்று பார்த்தார். சரீரத்தைத் துன்புறுத்தி யோகாப் பயிற்சிகள் செய்தார். தலைகீழாக நிற்றல் போன்ற உடலை வருத்தும் காரியங்களைச் செய்தார். அவற்றுள் பலதும் முட்டாள்தனமானவை. ஆனால், அவர் நம்பிக்கையுடன் அவற்றை நேர்ச்சரியாகப் பின்பற்றினார். பலதரப்பட்ட குருமார்களிடம் அவர் சாதனைகள் பயின்றார். அவர்களில் ஒருவர்கூட புத்தநிலை அடைந்திருக்கவில்லை. ஞானம் பெற்றிருக்கவில்லை. அவர்கள் அவருக்கு வழங்கிய திட்டங்கள் ஏமாற்றுத்திட்டங்கள்.

கவுதமர் அவற்றைச் சரியாகச் செய்யாதிருந்தால், அவர்கள், 'நீர் சரியாகச் செய்யவில்லை, அது உமக்குக் கிட்டாமல் போக நீரே காரணம்' என்று சமாளித்திருப்பார்கள். ஆனால், அவரோ உண்மையானவராக, பிழையின்றி எதையும் செய்பவராக, முழுமூச்சுடன் செய்து முடிப்பவராக இருந்தார். எனவே அந்த போலி ஆசிரியர்கள், 'மன்னிக்க வேண்டும், நீர் இதற்குமேல் எதுவும் செய்வதற்கில்லை. இவற்றால் உமக்கும் ஞானம் கிட்டவில்லை. எங்களுக்கும் ஞானம் கிட்டியதில்லை. நீர் வேறிடம் செல்லலாம்' என்று கூறிவிட்டனர். உண்மையில் அவர்களே அந்தப் பயிற்சிகளை முழுமையாய் செய்ததில்லை. அவர்கள் அவரிடம், 'உமக்கு எப்போதாவது ஞானம் கிடைத்தால் எங்களை மறந்துவிட வேண்டாம். நாங்களும் மெய்ம்மையைக் கண்டறியாத வர்கள்' என்று ஒப்புக்கொண்டனர்.

ஆறு ஆண்டு காலம் அலைந்து திரிந்தவர், ஒரு மாலை நேரத்தில், மரமொன்றின் கீழ் மவுனமாக அமர்ந்தார். அந்த நிரஞ்சனா ஆற்றின் கரையில் மனநிறைவான நிலையை அவர் அடைந்தார். ஞானம் என்பது தன்னால் நிகழவேண்டும், மனித முயற்சி பயன்படாது என்பது புரிந்தது. ஆறு ஆண்டு கால முயற்சிகள் அவரைத் தூய்மைப்படுத்தியிருந்தபடியால், தற்போது அவர் புடம் போட்ட தங்கம் போல் ஜொலித்தார். மனதின் பயனின்மையை அவர் கண்டுகொண்டார். தற்போது அவர் மவுனமாய், முயற்சியற்றவராய், இணக்கத் தன்மையோடு இருந்தார்.

அன்றிரவு எவ்விதத் தேடலுமின்றி அவர் உறங்கினார். காரணம் தேடல் ஆசைகளை உண்டுபண்ணும். ஆசைகளை முயற்சியின் மூலமே பூர்த்தி செய்ய வேண்டியிருக்கும். தேடல் மறைந்தது. ஆசைகள் மறைந்தன. முயற்சிகள் காணாதொழிந்தன. முதல் முறையாக எவ்வித கடுமைத்தன்மையுமின்றி, நிம்மதியாக உறங்கினார். உலகாயத ஆசைகளோ மேலுலகம் பற்றிய ஆசை களோ அவரை அவதிக்குள்ளாக்கவில்லை. அன்றிரவு அவருக்குக் கனவுகளில்லை. கனவுகளில்லாத இரவது. கனவுகள் நமது ஆசைகளால் விளையும் துணைப் பொருள்கள். உலகியல் சார்ந்த வர்கள் உலகாயதப் பொருள்களைப் பற்றியே கனவு காண்பார்கள். உலகாயதமானவர்கள் (worldly people) கனவுகளால் அதிகம் ஏமாறுவதில்லை. இரவில் வைரப்புதையல் அவர்களுடைய

கனவில் வரும். காலையில் 'ஓ, அது வெறும் கனவு' என்று தெரிந்து கொள்வார்கள். ஆனால் மேலுலகம் பற்றிக் கனவு காண்பவர்கள் தாம் தங்கள் கனவுகளால் பெரிதும் ஏமாற்றத்துக்குள்ளாகிறவர்கள்.

சிலர் கிருஷ்ணர் குழலூதுவதைக் காண்கிறார்கள். சிலர் இயேசுவையும், சிலர் இராமனையும் காண்கிறார்கள். அவையெல் லாம் கனவுகள் என்று அவர்கள் சொல்ல முடிவதில்லை. அவர்களைப் பொறுத்தவரை அவை முக்கியத்துவம் வாய்ந்தவை. அவற்றை மதிப்புமிக்க அனுபவமாக அவர்கள் கருதுகிறார்கள். உண்மையில் அவையும் கனவுகள்தாம், மற்ற கனவுகளைப்போல.

உலகாயதமானவன் பகலில் கண்களைத் திறந்து கொண்டும் கனவு காண்கிறான். இந்த உலகில் நீங்கள் பொருள்களுடன் வாழ்கிறீர்கள், நீங்கள் எதைக் காண்கிறீர்களோ அது நிஜம் என்று மற்றவர்களுக்கு நிரூபித்தாக வேண்டியநிலையில் இருக்கிறீர்கள். உங்கள் கனவுப் பொக்கிஷங்களின்மீது அவர்களுக்கு நம்பிக்கை பிறக்காது. உங்களைச் சுற்றியிருப்பவர்கள் பலரும் நம்பிக்கை யற்றவர்கள். அவர்களுக்கு நிரூபணங்கள் தேவைப்படும். உங்களால் தேவைப்படுகிற சான்றுகளை வழங்க முடியாது. எனவே நீங்கள் இரவில் மட்டும் கனவு காண்கிறீர்கள். மேலுலகம் பற்றிக் கனவு காண்பவர்கள் இமாலயக் குகைகளுக்குச் சென்று விடுகிறார்கள். அவர்கள் எதையும் நிரூபிக்க வேண்டிய நிலையில் இல்லை. அவர்கள் கண்களைத் திறந்து கொண்டும் பகற்கனவு காண முடியும்.

மக்கள் தனிமையில், தொடர்ந்து உண்ணாமையை மேற் கொண்டால் முதல் வாரத்திற்குப் பிறகு அவர்கள் பிரமைக்குள் ளாகி விடுவார்கள். அவர்களுக்கு மனத்தோற்றங்கள் ,உண்டாகும். அவை இல்லாதது இருப்பது போலத் தோன்றும் தோற்றம் - உருவெளித் தோற்றம் **(hallucination)**. மூன்றாம் வாரத்தில் எது நிஜம் எது நிஜமில்லை என்றே தெரியாமல் போய்விடும். உண்ணாநோன்பின் மூன்றாம் வாரத்திற்குப் பிறகு நிஜமும் கனவும் கலந்த அனுபவத்தை அவர்கள் பெறுவார்கள். இது உளவியல் நிறுவிய உண்மை.

சின்னக்குழந்தைகளைப் போலத்தான் அதுவும். சின்னக் குழந்தைகளுக்கு எது நிஜம், எது நிஜமில்லை என்று தெரியாது. சிலசமயம், விளையாட்டுக் கருவியைப் பற்றி கனவு காண்கிற

குழந்தை, விழித்துக் கொண்டதும் அது வேண்டும் என்று அழத் தொடங்கும். குழந்தையின் தாய் அது கனவு என்று சமாதானப் படுத்த முயல்வாள். ஆனால் குழந்தை கூறும், 'அது இங்கத்தானே இருந்திச்சி. அது எப்படி கனவாகும். நான் வச்சிருந்தேன். என் னோட பொம்மை எங்கே போச்சு? அதைக் கொண்டு வா' என்று.

தனிப்படுத்தப்பட்ட நிலையில் (isolation) அதேதான் நடக் கிறது. இமயமலைக் குகையில் தனியாக இருந்து, மூன்று வாரத் துக்கு மேல் உண்ணாமையை மேற்கொள்கிறவர் மருட்சியடையத் தொடங்குவார். அப்போது அவருக்கு கிருஷ்ணர் குழலூதுகிற காட்சி போன்றவை தோன்றும். அவர் உங்களோடு பலவாறு பேசவும் விளையாடவும் தொடங்கி விடுவார். அது ஒன்றும் ஆன்மா சார்ந்த சமாசாரமல்ல, வெறும் பித்துதான்.

ஆனால் அதை ஆன்மிகமாய் எண்ணிக்கொண்டு நீங்கள் மனநிறைவு கொள்கிறீர்கள். உங்களுடைய தற்பெருமையின் தேவை நிறைவேறிவிடுகிறது. கிருஷ்ணர் காட்சியளித்ததாக நீங்கள் தம்பட்டமடிப்பீர்கள். கிருஷ்ணருடன் பேசியதாகவும், விளையாடியதாகவும் அவர் குழலூதியதாகவும் அவருடன் நீங்களும் நடனமாடியதாகவும் என்று தற்புகழ்ச்சியில் இறங்கி விடுவீர்கள்.

அதையெல்லாம் நம்பக்கூடிய முட்டாள்களும் இருக் கிறார்கள். மூட நம்பிக்கை கொண்டவர்களால் நிரம்பிய உலகமிது.

இதுபோன்ற சங்கதிகளைக் கொண்டதுதான் புத்தரின் அந்த ஆறு ஆண்டுகால வாழ்க்கை. இவற்றை அனுபவிக்கிறவர்கள் ஒருநாள் அறிந்து கொள்வார்கள் சுத்த அபத்தம் என்பதை. நீங்கள் விடவேண்டியதில்லை, அவை தன்னால் மறைந்துவிடும்.

அன்றிரவு அவர் கனவுகளில்லாமல் உறங்கினார். அதி காலையில் அவர் கண் விழித்தபோது, வானில் கடைசி நட்சத்திரம் மறைந்து கொண்டிருந்தது. அவருக்குள் இருந்த ஏதோ ஒன்று - அகந்தை மறைந்தது. அவர் ஞானம் பெற்றார்.

இந்த ஞானம் எங்கோ வெளியில் இருந்து அவரை வந்த டைந்ததல்ல. அது உள்ளார்ந்த இயல்பு. அது உள்ளிருந்தே வரப்பெற்றது. அடியாழத்தில் இருந்து என்றாலும் அப்பாற்பட்டது என்றாலும் இரண்டும் ஒன்றே. அப்பாற்பட்டதே ஆழத்தில் ஊடுருவிப் பரவுகிறது.

அந்நிலையில் புத்தர் கூறினார், 'ஞானம் என்பது ஒரு சாதனையல்ல. அது பிரபஞ்சத்தில் இருந்து பெறப்படுகிற வெகுமதி' என்று. அந்த ஆறு ஆண்டுகளில் அதை ஏற்பதற்கான பக்குவம் அவருக்குக் கிடைத்திருந்தது.

அதை ஏற்பதற்கு உங்களைத் தயார்படுத்திக் கொள்ளுங்கள். அது தற்செயலானது, காரணத் தொடர்பு இல்லாதது. ஆனால் அதற்காக உங்களுடைய முயற்சிகளை நிறுத்திக்கொள்ள வேண்டும் என்று அர்த்தமல்ல, நிறுத்தினால் தவற விடுவீர்கள். அவை தன்னால் நின்று விட்டால், இதற்குமேல் முயற்சிகள் சாத்தியமில்லை என்பதை நீங்கள் புரிந்துகொண்டு விடுகிற நிலையில் உங்களுக்குள் இணக்கத்தன்மை வந்துவிடும். பிரபஞ்ச இருப்பை விருந்தாளியாக ஏற்று உபசரிக்கிறவராகி விடுவீர்கள்.

***இரண்டாம் கேள்வி:***

***ஓஷோ அவர்களே, என்னைப்பற்றி எதிர்மறையாகவே நான் உணர்கிறேன். தாங்கள் என்னை எப்படிப் பார்க்கிறீர்கள்?***

அது உன்னுடைய பிரச்சினை மட்டுமல்ல, கிட்டத்தட்ட எல்லாருக்குமே அந்தப் பிரச்சினை இருக்கிறது. உங்களைப் பற்றி எதிர்மறையாக உணரும்படிதான் எல்லாப் பண்பாடுகளும், மதங்களும் கட்டுப்படுத்தி வைத்திருக்கின்றன. இங்கே யாரும் நேசிக்கப்படவில்லை, பாராட்டப்படவில்லை. அவர்கள் தங்கள் இயல்பில் இருப்பதற்காக உங்கள் தகுதியை, பெறுமானத்தை நிரூபிக்கும்படி நீங்கள் வேண்டப்படுகிறீர்கள். 'பல்கலைக் கழகத்தில் இருந்து தங்கப்பதக்கங்களைக் கொண்டு வா, வெற்றியை, பணத்தை, அதிகாரத்தை, கவுரவத்தை, மரியாதையைப் பெற்றுக்காட்டு. நிரூபித்து விடு' என்று. உங்கள் தகுதி இயல்பானதல்ல, அது உங்களுக்குக் கற்பிக்கப்பட்டது. உங்கள் தகுதி நிரூபிக்கப்பட வேண்டியது.

இதன் காரணமாக ஒருவர் மீது விரோதம் உண்டாகிறது. 'என்னை நான் நிரூபிக்காவிட்டால் தகுதியற்றவனாகி விடுகிறேன்' என்கிற எண்ணம் வலுப்பெறுகிறது. போட்டிகள் நிறைந்த இவ்வுலகில் வெகு சிலரால் மட்டுமே வெற்றி பெற முடிகிறது. போட்டி போடுகிற இலட்சக்கணக்கானவர்களில் வெற்றி பெறுகிற வர்கள் எத்தனை பேர்? எத்தனை பேரால் அதிபர்களாகவும், பிரதம மந்திரிகளாகவும் வரமுடிகிறது? இலட்சோப லட்சம் பேர்

வாழ்கிற நாட்டில் ஒரேயொருவர்தான் குடியரசுத் தலைவராகிறார். ஆனால், எல்லாருக்குள்ளும் அடியாழத்தில் அந்த ஆசை இருக்கிறது. தாங்கள் அதற்கெல்லாம் தகுதியற்றவர் என்கிற உணர்வும் அவர்களிடம் இருக்கவே செய்கிறது.

எத்தனை பேரால் சிறந்த கவிஞர்களாக முடிகிறது? ஒரு ஷேக்ஸ்பியர், ஒரு மில்டன், ஒரு ஷெல்லி, ஒரு ரவீந்திரநாத் தாகூர் – எத்தனை பேரால் சிறந்த கவிஞராய் புகழ்பெற முடிகிறது? அதே சமயத்தில் ஒவ்வொருவருக்குள்ளும் கவித்துவம் இருக்கத்தான் இருக்கிறது. இந்த உலகத்திற்கு வழங்கக்கூடிய ஏதோ ஒரு கவிதை அவர்களிடம் இருக்கிறது. ஆனால், அது பேரார்வமாகி விடுகிற போது... பேரார்வம் கவித்தன்மைக்கு எதிரானது. எத்தனைபேரால் பிக்காஸோ அல்லது டாலியைப் போல் பெரிய ஓவியராக முடிகிறது?

வெற்றிக்கான சிந்தனை உங்களை வறுத்தெடுக்கிறது. மனித குலத்துக்கு நேரிடுகிற மிகப்பெரிய ஆபத்து அதுதான் – வெற்றிக்கான சிந்தனை, வெற்றி பெற்றாக வேண்டும். வெற்றிக்கு நீங்கள் போட்டி போடவும், போராடவும் பேண்டியிருக்கும். அதற்காக நியாயமான அல்லது நியாயமற்ற பல உபாயங்களை நீங்கள் கைக்கொள்ளும்படி இருக்கும். ஆனால் அதைப்பற்றிக் கவலைப்பட மாட்டீர்கள். வெற்றி பெற்றுவிட்டால் எல்லாம் சரியாகிவிடப் போகிறது. வெற்றி உங்கள் செயல்களின் தன்மையை – தரத்தை மாற்றி விடுகிறது. வெற்றி கெட்ட உபாயங்களையும் நல்ல உபாயங்களாக்கி விடும். எப்படி மேலே வருவது? இயற்கை யாகவே ஒருசிலரால்தான் உயரத்துக்கு வரமுடிகிறது. எல்லாருமே எவரெஸ்டு சிகரத்தில் ஏறிட முயற்சிக்கிறார்கள். ஆனால் அத்தனை பேருக்கும் இடமில்லை. ஒருவர் மட்டுமே அங்கு சவுகரியமாய் நிற்க முடியும். முயற்சி செய்கிற இலட்சோபலட்சம் பேரும் தோல்வியை உணர்வார்கள். அவர்களுடைய ஆன்மா நம்பிக்கையிழந்த நிலைக்குத் தள்ளப்படும். அவர்கள் எதிர் மறையாக உணரத் தலைப்படுவார்கள்.

இது ஒருவகை தவறான கல்வி. முழுக்கவும் நச்சுத்தன்மை யுடைய கல்வியே உங்களுக்கு வழங்கப்படுகிறது. உங்களுடைய பள்ளிக்கூடங்களும், கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் உங்களுடைய மனதை மாசுபடுத்திக் கொண்டிருக்கின்றன. அவை

உங்களைத் துன்பத்திற்குள்ளாக்குகின்றன. நரகங்களை உண்டு பண்ணும் தொழிற்சாலைகள் அவை. ஆனால் என்ன நடக்கிறது என்பதே உங்களுக்குத் தெரியாதபடி வெகு நேர்த்தியான முறையில் அவை செயல்படுகின்றன. தவறான கல்வி முறை காரணமாகவே ஒட்டுமொத்த உலகமும் ஒரு நரகமாகி விட்டிருக்கிறது. பேரார்வத்தை அடிப்படையாய் கொண்ட எந்தக் கல்வியும் மண்ணுலகில் நரகத்தைத் தோற்றுவிப்பதுதான்.

எல்லாருமே தாழ்வாக உணர்கிறார்கள், தாழ்வுணர்வில் அவதிப்படுகிறார்கள். இது உண்மையிலேயே ஒரு வினோதமான - புரிந்துகொள்ள முடியாத சூழ்நிலைதான். இங்கே யாரும் யாரை விடவும் தாழ்ந்தவரல்லர், யாரும் யாரை விடவும் உயர்ந்தவரல்லர். காரணம் ஒவ்வொருவரும் ஒருவிதத்தில் இணையற்றவர்தாம். ஒப்பிட்டுப் பார்ப்பது சாத்தியமில்லை. நீங்கள் நீங்களாக மட்டுமே இருக்கிறீர்கள், உங்களால் வேறொருவராக முடியாது. அதற்கு அவசியமுமில்லை. உலகின் பார்வையில் நீங்கள் புகழ் பெற்றாக வேண்டும் என்பதில்லை, நீங்கள் வெற்றியாளராய் திகழ வேண்டும் என்பதில்லை. அவையெல்லாம் முட்டாள்தனமான சிந்தனைகள்.

உங்களிடம் வேண்டப்படுவதெல்லாம் கற்பனைத் திறனும், நேசமும், விழிப்புணர்வும், ஆழ்ந்த சிந்தனை செய்பவராக நீங்கள் இருப்பதுந்தான். உங்களுக்குள் கவிதை ஊற்றெடுப்பதாக உணர்ந்தால், அதை எழுதுங்கள். உங்களுக்காகவும், உங்கள் பெண்டு பிள்ளைகளுக்காகவும், உங்கள் நண்பர்களுக்காகவும் - அதனோடு அதை மறந்து விடுங்கள். பாருங்கள், யாரும் கேட்வில்லையென்றாலும், தனியாகவென்றாலும் பாடுவதில் மகிழ்ச்சியடையுங்கள். மரங்களிடம் போங்கள். அவை கைதட்டி, பாராட்டும். அல்லது பறவைகளிடமும் விலங்குகளிடமும் பேசுங்கள். காலகாலமாக மனமாசு பிடித்த முட்டாள் மனிதர்களை விடவும் அவை நிறையவே கேட்டுக் கொள்ளும். மனிதர்கள் - வாழ்க்கை குறித்த தவறான கருத்துகளை தங்களுக்குள் நிரப்பிக் கொண்டவர்கள்.

பேரார்வம் உள்ள நபரிடம் நோய்க்குறி இருக்கும். நீ சொல்கிறாய், 'என்னைப்பற்றி நான் எதிர்மறையாக உணர்கிறேன்' என்று. எல்லாருமே அப்படித்தான். ஒவ்வொருவரும் தன்னைப் பற்றி எதிர்மறையாகவே உணர்கிறார், காரணம் அவருக்கு அது

பழக்கமாகி விட்டது. உங்கள் பெற்றோர் மூலம் அது உங்களுக்கு வந்தது. மரபுரிமை! உங்கள் ஆசிரியர்களும், குருமார்களும், அரசியல் தலைவர்களும் உங்களை அப்படி உணரச் செய்துவிட்டார்கள். 'நீங்கள் தகுதியற்றவர்' என்கிற கருத்து உங்கள் மனதில் பதிந்து விட்டிருக்கிறது. 'எவ்வித மதிப்பும் இல்லாதவன் நான், என்னிடம் குறிப்பிடத்தக்கதாய் எதுவுமில்லை' என்று எண்ண வைக்கும் கருத்து!

'உன்னுடைய தகுதியை நிரூபித்துக் காட்டு' என்று ஒவ்வொரு பெற்றோரும் தங்கள் குழந்தைகளிடம் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள். 'இருக்கிறோம், ஏதோ இருந்து கொண்டிருக்கிறோம்' என்பது போதாது - ஏதாவது செய்தாக வேண்டும், குறிப்பிடத்தக்க விதமாய்.

என்னுடைய அணுகுமுறையில், இருத்தலே இயல்பில் மதிப்பு மிக்கதுதான். நீங்கள் இருப்பதே பிரபஞ்சம் வழங்கிய வெகுமதி அல்லவா, வேறு என்ன வேண்டும் என்பீர்கள்? இந்த அழகான பிரபஞ்ச இருப்பில் சுவாசிக்கிறதே, பிரபஞ்சம் உங்களை நேசிப்ப தற்குச் சான்றிதழ் அல்லவா. பிரபஞ்சத்துக்கு நீங்கள் தேவை என்பதை அது உறுதிப்படுத்துகிறது. ஒரு வெற்றிடத்தை நீங்கள் நிரப்பியிருக்கிறீர்கள். நீங்கள் இல்லாதிருந்தால் பிரபஞ்சத்தில் ஏதோ ஒன்று குறைவுபட்டாற் போலத்தான். நான் இதனைச் சொல்கிறபோது உங்களுக்கு மட்டுமல்ல மரங்களுக்கும், பறவைகளுக்கும், கடற்கரையில் உள்ள கூழாங்கற்களுக்கும் சேர்த்தே சொல்கிறேன். ஒற்றைக் கூழாங்கல் குறைவுபட்டாலும் அந்தக் கடற்கரை அதேபோன்று இருக்காது. ஒற்றைப்பூ இல்லை யென்றாலும் உலகம் அதைத் தவறவிட்டதாகவே கருதவேண்டும்.

நீங்கள் மதிப்பு மிக்கவர் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். நான் எந்தவொரு தற்பெருமையையும் உங்களுக்குக் கற்பிக்வில்லை. உங்களுடைய உள்ளபடியான மதிப்பை உணர்கிற போது, மற்றவர்களின் மதிப்பையும் நீங்கள் உணர்வீர்கள்தானே. மனிதர்களை அவர்கள் இருக்கிறபடிக்கே ஏற்றுக் கொள்ளுங்கள். 'இருக்க வேண்டும், இருந்தாக வேண்டும்' என்பது போன்ற கடமைப்படுத்தல்களை விட்டுவிடுங்கள்.

'இதைச்செய், அதைச் செய்யாதே' என்பது போன்ற அறிவுரைகளை நீங்கள் சுமந்து கொண்டிருக்கிறீர்கள். 'செய்யக்

கூடியவை, செய்யக்கூடாதவை' என்று நீங்கள் சுமக்கிற சுமை அதிகம். அவை உங்கள் மனம்போல் உங்களை நடக்கவொட்டாமல் செய்துவிடும். எண்ணற்ற கருத்துகளும், குறிக்கோள்களும் உங்களுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. மிகச்சரியாக இருப்பது (perfection) பற்றிய கருத்துகள். உங்களால் பூர்த்தி செய்ய முடியாத கருத்துகள். அவற்றை நிறைவேற்றுவது என்பது நடவாத காரியம். எனவே, உங்களைக் குறைவாகத்தான் உணர்வீர்கள் எப்போதும்.

முழு நிறைவானவராயிருப்பது (perfectionist) என்பது மனநல நிபுணரின் ஆலோசனைக்குத் தயாராவது என்றே கொள்ளலாம். 'முழு நிறைவு' உங்களை நரம்புத்தளர்ச்சி நோயாளியாக்கி விடும்.

தன்னுடைய அத்தனை குறைபாடுகளோடும் அழகாகவே இருக்கிறது வாழ்க்கை. முழுமையானது என்று எதுவும் இல்லை. நான் உங்களுக்குச் சொல்வேன் - கடவுளே சரியாக இல்லை என்று. காரணம், கடவுள் எவ்விதக் குறைபாடும் இல்லாமல், மிகச் சரியானவராக இருந்தால், கடவுள் செத்துவிட்டார் என்று நீட்சே சொன்னது சரியாகிவிடும். முழுமை என்றாலே சாவுதான். முழுமை (perfection) என்பதன் பொருள், வளர்ச்சிக்கு இனி சாத்தியமில்லை என்பதுதான். 'முழுமை' என்பது அத்தோடு முடிந்து விட்டது என்பதாகும். 'முழுமையற்றது' (imperfect) என்றால் முடிவடையாதது, வளர்ச்சிக்கு இடமுண்டு என்று கொள்ளலாம். முழுமையின்மை புதிய மேய்ச்சலை, பரவசத்தை, தீரச்செயலைக் குறிக்கும். இவையெல்லாம் கிளர்ச்சியை உண்டுபண்ணக்கூடியவை. இன்னமும் வாழ்க்கை இருக்கிறது அதற்கான உயிர்த்துடிப்போடு நீங்கள் இருக்கிறீர்கள் என்பதையே நிறைவின்மை உணர்த்தும்.

வாழ்க்கை சாசுவதமானது. எனவே அதன் குறைபாடுகளும் மாறுதலின்றி எப்போதுமே நிலைத்திருக்கும் என்கிறேன். குறைகளோடு இருப்பது ஒன்றும் தவறல்ல. உங்கள் குறைபாட்டை ஏற்றிருங்கள். அந்நிலையில் எதிர்மறையாக உணர்வது பற்றிய கருத்து மறைந்து விடும். உங்களுடைய தற்போதைய நிலையை ஏற்றிடுங்கள், எதிர்கால நிலையுடன் அதை ஒப்பிடாதீர்கள். நீங்கள் எப்படி இருக்க வேண்டும் என்கிற நிபந்தனையுடன் சிந்திக்காதீர்கள். அத்தனை நோய்க் குணங்களுக்கும் இதுவே மூலகாரணம் - அதை விடுங்கள். இன்று நீங்கள் இருப்பதற்கும் நாளை இருக்கப் போவதற்கும் வித்தியாசம் இருக்கிறது. ஆனால், அதை

முன்கூட்டியே உங்களால் கூற முடியாது. அதுபற்றி திட்டமிடுவதும் அவசியமில்லை.

வாழ்க்கையை அதன் அழகோடும், மகிழ்ச்சியோடும், வருத்தத்தோடும், துயரோடும், பரவசத்தோடும் இன்று வாழுங்கள். இந்த நாளை அதன் முழுமையோடு - அதன் இருளோடும் (கலக்கம்) ஒளியோடும் (தெளிவு) வாழ்ந்து பாருங்கள். கோபத்தை அனுபவியுங்கள், பரிவை அனுபவியுங்கள். இந்தக் கணத்தில் கிடைப்பது எதுவாயினும் அதை அனுபவியுங்கள். என்னுடைய அணுகுமுறை முழுமை பற்றியதல்ல, முழுப்பகுதி (**totality**) பற்றியது. இந்தக்கணத்தை முழுசாக அனுபவியுங்கள், அதில் இருந்தே பிறக்கிறது அடுத்த கணம். இந்தக் கணத்தை மொத்தமாக வாழ்ந்து விட்டால், அடுத்தது ஒட்டுமொத்த தன்மையின் உயர் நிலையை அடைந்து விடும். அப்படியென்றால் அடுத்த கணம் என்பது எப்படித் தோன்றும். அது இந்தக்கணத்தில் இருந்து தோற்றம் பெறும். வருங்காலம் பற்றி மறந்து விடுங்கள், நிகழ்காலமே போதுமானது.

இயேசு கூறுவார்: 'அடுத்த நாளை பற்றிச் சிந்திக்காதீர்கள். மலர்ந்திருக்கும் அல்லி மலர்களைப் பாருங்கள். அவைதாம் எத்தனை அழகாயிருக்கின்றன. சாலமன் பேரரசன்கூட தன் ஆடையாபரணங்களுடன் அத்தனை பகட்டாய் தெரிவதில்லை!' என்று.

எந்த மதிப்பும் இல்லாத அல்லிப்பூக்களின் அழகு ரகசியந் தான் என்ன? அந்த ரகசியம் ரொம்ப எளிமையானது. அவை அடுத்தநாளைப் பற்றி நினைப்பதில்லை, எதிர்காலம் எதுவுமே தெரியாது அவற்றுக்கு. நாளை என்பது நிலையற்றது. இந்த நாள் அதற்குப் போதுமானது. இந்தக்கணமே அதற்குப் போதுமானதாய் தெரிகிறது.

உங்களைப் பற்றிய எதிர்மறை உணர்வு மறைந்து விடும். உங்களைப்பற்றி எதிர்மறையாக உணர்ந்தால், தானாகவே அடுத்தவரைப் பற்றியும் எதிர்மறையாக எண்ணத் தோன்றும். அது ஓர் இயல்பான விளைவு, அவசியப்படுவது. புரிந்து கொள்ளப்பட வேண்டியது.

தன்னைப்பற்றி எதிர்மறையாக எண்ணுகிறவர், மற்றவர்களைப் பற்றி எப்படி நேர்மறையாக எண்ணுவார்? அது முடியாது. காரணம், தன்னிடம் காண்கிற குற்றங்குறைகளை மற்றவர்களிடமும்

அவர் காண்பார். உண்மையில் மற்றவர்களுடைய குறைகளை அவர் பெரிதுபடுத்திப் பார்க்கவே செய்வார். அதில் பழிவாங்கும் போக்கு இருக்கும். உங்கள் பெற்றோர் உங்களை மறுத்த மாதிரி, உங்களிடம் எதிர்மறைப் பண்பை வளர்த்த மாதிரி, உங்கள் பிள்ளைகளிடம் நீங்கள் நடந்து கொள்வீர்கள்.

மறுக்கிற குணம் ஒவ்வொரு தலைமுறையிலும் கூடுதலாகிக் கொண்டே போகிறது. ஒவ்வொரு தலைமுறையும் மேலும் மேலும் நோய்க்குறி கொண்டு விட்டது. தற்காலத்திய மனிதன் அடைந் திருக்கும் உளவியல் பாதிப்புக்கு அவனைக் குற்றம் சொல்ல முடியாது. கடந்த காலம் முழுவதுமே தவறாகி விட்டிருக்கிறது என்பதையே அது காட்டுகிறது. அவனுடைய அத்தனை பாதிப்பு களும் கடந்த காலங்களில் அடுக்கடுக்காய் சேர்ந்தவை. மதபோதகர்கள் கூறுவதுபோல அவனுடைய பாவங்களின் விளைவல்ல அவை. காலகாலமாய் கூடிக் கொண்டே வந்த பாவங்கள், அவன் தலையில் விடிந்தது என்றே சொல்ல வேண்டும். தற்போது எல்லாமே ஒரு குறிப்பிட்ட முனையை வந்தடைந் தாயிற்று. ஒன்று, மனிதன் தன்னுடைய வாழ்க்கை குறித்த பார்வையையும், தன்னையும் முழுமையாக மாற்றிக்கொள்ள வேண்டும் அல்லது அவன் தற்கொலை செய்துகொள்ள வேண்டும்.

நீங்கள் கடந்த காலத்தைப் பின்பற்றினால், அப்போது உலகளாவிய தற்கொலை நிகழ்த்தும் விளிம்பிற்குப் போய் விடுவீர்கள். உங்கள் அரசியல்வாதிகள் அதைத்தான் செய்ய முயற்சிக்கிறார்கள். அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு என்று சக்திவாய்ந்த குண்டுகளைக் குவித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களிடம் முன்பே நிறைய உள்ளது. ஒவ்வொருவரையும் ஏழு முறை கொல்லும் அளவிற்கு, அவர்கள் பத்தாண்டுகளுக்கு முன்பே திறன் பெற்றிருந்தார்கள். ஒரு மனிதன் ஒருமுறைதான் இறக்கிறான். அவனை இரண்டாவது முறை கொல்கிற அவசியமில்லை. ஆனால், சில நிகழ்வுகளில் உயிர் பிழைப்பதும் உண்டு. அரசியல் வாதிகள் அதிலெல்லாம் அக்கறையுடன் கச்சிதமாகத் திட்டம் போட்டு விடுவார்கள். பத்தாண்டுகளுக்கு முன்பு இப்படியெல்லாம் நடந்தது.

தற்போது நீங்கள் வியப்பின் உச்சத்துக்கே போய்விடுவீர்கள். அவர்களால் இந்த உலகத்தை எழுநூறு முறை அழிக்க முடியும் -

ஒவ்வொருவரும் எழுநூறு முறை கொல்லப்படக்கூடும். இது ரொம்ப அதிகம், முற்றிலும் தேவையேயில்லை. ஏழுமுறை ஓ.கே. – சில தந்திரக்காரர்கள் இலேசில் சாக மாட்டார்கள். ஆனால் ஏழு நூறு முறை? இன்னும் பந்தயம் தொடர்கிறது. பந்தயத்தில் ஏழை நாடுகளும் பங்கேற்கின்றன. உணவுப் பற்றாக்குறை இருந்தாலும், அணுகுண்டு வேண்டும். பட்டினி கிடந்தாலும் கொல்லவும், அழிக்கவும் கூடுதல் அதிகாரம் தேவை அவர்களுக்கு.

ஒரு பறவை நோக்கில் (பொதுக் கண்ணோட்டம்) பார்த்தால் உலகமே தற்கொலைக்குத் தயாராகிக் கொண்டிருப்பதை நீங்கள் காண முடியும். ஆம், ஒட்டுமொத்த போருக்கு ஒரேயடியாய் அழிவதற்கு உலகம் தயாராகிக் கொண்டிருக்கிறது. நினைவிருக் கட்டும், இதில் தற்கால மனிதனுக்குத் தொடர்பில்லை. அவன் கடந்த காலத்தில் யாரோ செய்த தவறுகளுக்காகத் துன்பப்படு கிறவன் (victim). தற்கால மனிதனிடம்தான் எதுவோ சரியில்லை என்று குருமார்கள் கூறிக் கொண்டிருக்கிறார்கள், கடந்த காலத்தைப் புகழ்ந்து கொண்டிருப்பவர்கள் அவர்கள்.

கடந்த காலம் உருவாக்கிய துணைப்பொருள்தான் இன்றைய மனிதன். கிறிஸ்தவர்கள், முகமதியர்கள், இந்துக்கள், புத்த மதத்தினர் என்று எல்லா கலாசாரங்களும் இந்தச் சூழ்நிலைக்குப் பங்களித்திருக்கின்றன. அவர்களே பொறுப்பு. இந்தப் பிணியுற்ற கடந்த காலத்தைக் கைவிட்டு, எவ்வித கருத்துகளும், கட்டாயங் களும், கட்டளைகளும் இல்லாத புதிய நிகழ்காலத்தை உருவாக்கா விடில் மனிதன் அழிய வேண்டியதுதான்.

எல்லாருமே எதிர்மறையாக உணர்கிறார்கள். ஒருவர் ஒன்றைச் சொல்வார், இன்னொருவர் அதைச் சொல்லமாட்டார். ஒருவர் ஒன்றைப்பற்றி எதிர்மறையாக உணர்ந்தால், இன்னொருவர் மற்ற எல்லாவற்றையுமே மறுப்பவராகி விடுவார். எதிர்மறையான வரை ஒரு ரோஜாப்புதரிடம் அழைத்துச்சென்றால், ரோஜாக்கள் அவருடைய கண்ணில் படாது, அதில் உள்ள முட்களை எண்ணத் தொடங்கி விடுவார்.

ஒரு பெண்மணி வருத்தத்தில் இருந்தாள். அவளுடைய கணவனின் வியாதி மோசமாகி மருத்துவமனையில் கிடந்தான். அவளது மகன் போதை மருந்து வழக்கில் சிறைக்குச் சென்றிருந் தான். எனவே, அவள் புத்துணர்ச்சி பெறவேண்டி, சூரிய ஒளி படும்

படியாய் பூங்காவில் போய் உட்கார்ந்திருந்தாள். அவள் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சின்னப்பறவையொன்று ஒரு மரத்தின் கிளையில் இருந்து மற்றொரு மரத்தின் கிளைக்குப் பறந்து சென்றது. அவளுடைய தலைக்கு மேலாய் பறந்தபோது, அது அவளது நெற்றிமீது எச்சமிட்டுவிட்டது. அந்தப் பெண்மணி வானை நோக்கி கையை உயர்த்தியபடி சொன்னாள். 'கடவுளே பார்த்துக் கொள்ளும், மற்றவர்களுக்கென்றால் அவை பாடச் செய்கின்றன' என்று.

நீங்கள் எதிர்மறையாக உணரும்போது ஒட்டுமொத்த வாழ்க்கையும் இருண்டு இரவாகி விடுகிறது. பிறகு விடியல்கள் இல்லை, வெளிச்சமிக்க காலைப் பொழுதுகளில்லை. அந்நிலையில் அஸ்தமிக்கிற சூரியன் மீண்டும் உதிப்பதேயில்லை. இருண்ட இரவை நிரப்ப நட்சத்திரங்களின் மினுக்கலுமில்லை. நட்சத்திரங்களைப் பற்றிச் சொல்வானேன். உங்களிடம் சின்னதாய் ஒரு மெழுகுவர்த்திகூட இருக்காது.

எதிர்மறையானவர் இருட்டில் வாழ்கிறார், அந்த வாழ்க்கை ஒருவகை மரணம். அவர் மெல்லச் சாகிறார். சுய அழிப்பு வேலை அது. அவர் பல வழிகளிலும் தனக்கு நஞ்சேற்றிக் கொள்கிறார். (உள்ளத்தின் மகிழ்ச்சியைப் பாழாக்கிக் கொள்வது). அத்துடன், இயல்பாகவே தம்முடன் தொடர்பு கொள்கிற எவரையும் அவர் அழித்து விடுகிறார். எதிர்மறையான தாய் தன் மகனை அழிக்கிறாள். எதிர்மறையான கணவனால் மனைவி அழிகிறாள். அத்தகைய மனைவி தன் கணவனை அழிப்பாள். எதிர்மறை குணமுள்ள ஆசிரியர் தன் மாணவர்களை அழிவிற்குள்ளாக்குகிறார். அதுவே மதகுருமார்கள் செய்கிற காரியமும், மேலும், மதகுருமார்கள் எல்லாருமே எதிர்மறையானவர்கள்தாம். புத்தர், இயேசு, முகமது மாதிரி எதிர்மறைத் தன்மை இல்லாதவர்கள் அரிது. அவர்கள் வாழ்க்கை குறித்த புதிய பார்வையை வழங்கியவர்கள்.

மதகுரு ஒரு தீர்க்கதரிசியின் பார்வையைத் தன் சுயநலத்துக்குப் பயன்படுத்துகிறார், கருத்தை திரித்துக் கூறுகிறார். மக்களை அடக்கியாள்வதற்கு ஒரு திட்டமாகவே அதனை அவர் மாற்றிவிடுவார். ஞாபகமிருக்கட்டும், கிறிஸ்து ஒரு கிறிஸ்தவனாக இருக்கவில்லை. கிறிஸ்தவத்தைத் தோற்றுவித்தது மதகுருமார்கள். புனித பால் என்பவர் அந்த மதத்தைத் தோற்றுவித்தவர். அவரே கிறிஸ்தவத்தின் உண்மையான நிறுவனர் – இயேசுவல்ல.

புத்த மதத்தை நிறுவியது புத்தரல்ல, அவரைப் பின்பற்றிய குருமார்கள் அதைத் தோற்றுவித்தார்கள். அப்படித்தான் ஒவ்வொரு மதமும் தோற்றுவிக்கப்பட்டன. குறிப்பிடத்தக்க ஒருவரின் இருப்புணர்வில் ஓர் உண்மை பிரவேசிக்கிறபோதெல்லாம், யாரோ ஒருவர் இறையுணர்வைப் பெறுகிற போதெல்லாம் குருமார்கள் அவரைச் சுற்றிச் சூழ்ந்து கொள்கிறார்கள். அவர்கள் தந்திர மானவர்கள், அந்த வாய்ப்பை அவர்கள் தவறவிடுவதில்லை. அவர்கள் சந்தர்ப்ப சூழ்நிலையை தங்கள் சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொண்டு விடுகிறார்கள். ஞானம் பெற்றவர் மறைந்தவுடன் இவர்கள் தலைமைப் பொறுப்பில் அமர்ந்து, சகலத்துக்கும் உரிமை கொண்டாடுவார்கள்.

கடந்த காலத்தை உருவாக்கியவர்கள் குருமார்கள். அது எதிர்மறையான கடந்த காலம். அது வாழ்வை மறுப்பது, வாழ்க்கைக்கு எதிராக, காதலுக்கெதிராக மகிழ்ச்சிக்கும் கொண்டாட்டத்துக்கும் எதிராக இருப்பது. அது இரண்டே வகை மக்களைத் தான் உலகில் படைத்தது. நேர்மையானவர்கள் உங்களைப் போன்றவர்கள். அவர்கள் எதிர்மறைத்தன்மை, துயரம் நம்பிக்கையின்மை இவற்றால் அவதிப்படுகிறவர்கள். நேர்மையற்றவர்கள் பாசாங்குக்காரர்களாகி விடுகிறார்கள். அவர்கள் வாழ்க்கைக்கு எதிரான போதனைகளைச் செய்கிறார்கள். புழக்கடைப் பக்கம் முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கை வாழ்கிறவர்கள் அவர்கள். மேலுக்கு ஆன்மிகவாதிகளாயும், அடியாழத்தில் *இயற்பொருள் வாதம் (materialism) செய்பவர்களாகவும் அவர்கள் இருப்பார்கள்.

ஞாபகமிருக்கட்டும், நான் இயற்பொருள் வாதத்துக்கு எதிரானவனல்லன். நான் பாசாங்குக்கும் ஏமாற்று வேலைக்கும் எதிரானவன். உடலையும், ஆன்மாவையும் ஒருசேரப் பேணுகிறவர்களையே நான் விரும்புவேன். இறையுணர்வு என்பது இறையுணர்வோடு உலகாயதத்தையும் இணைத்துக் கொண்டதுதான். பிரபஞ்சம் கடவுட் தன்மையின் வெளிப்பாடு, உங்கள் உடல் ஆன்மாவின் வெளிப்பாடு.

கடந்த காலத்தில் மதங்கள் இயற்பொருள் வாதத்திற்கு எதிரான முறையில் இருந்ததால், அவர்கள் மக்களை இருவகைப்படுத்தினர்.

*** இயற்பொருள் வாதம் - காணும் பொருளே உண்மையென்பது இயற்பொருள் வாதுகள் ஆன்மத்துறை சாராதவர்கள், உடலுக்கே முக்கியத்துவம் அளிப்பவர்கள்.**

நேர்மையானவர்கள் ஆன்மிகப் பரிமாணத்துக்கு நெருக்கமாக இருந்தார்கள். நேர்மையற்ற தந்திரக்காரர்களோ இயற்பொருள் வாதிகளாக இருந்தார்கள். அது நீங்கள் நாட்டிலேயே பார்க்கக் கூடியதுதான். என்னுடைய சொந்த அனுபவத்தில் நான் எல்லா வகையினரையும் பார்த்திருக்கிறேன். உலகின் பல்வேறு நாடுகளிலும் இருந்து வந்த பல வகைப்பட்டவர்களும் இ ங்கே என்னுடன் இருக்கிறார்கள். இந்தியர்கள் இயற்பொருள்வாதிகள் (materialists) என்பதை என்னுடைய அனுபவத்தில் நான் அறிவேன். அவர்கள் ஆன்மிகத்தைப் பற்றிப் பேசுவார்கள், ஆன்மிகத்தைப் பற்றி வாய்கிழியப் பேசுவார்கள். அந்தப் புகழ்ச்சியெல்லாம் தங்கள் உண்மை நிலையை மற்றவர்கள் அறியாதபடி மூடிமறைப்பதற்குத்தான். அவர்கள் பாசாங்குக் காரர்கள் (Hypoerites).

ஒரு நாடு தன்னை மிகவும் சமய நம்பிக்கை கொண்டதாய் காட்டிக் கொள்ளுமளவிற்கு பாசாங்குத்தனமும் கொண்டதுதான். அது மேற்கொள்கிற இரண்டு மாற்றுகளுமே தவறானவைதாம்.

வாழ்க்கையை வலியுறுத்துகிற, வாழ்க்கையை நேசிக்கிற, அன்பை விரும்புகிற, இந்தப் பிரபஞ்ச இருப்பைக் கண்டு மகிழ்கிற, அத்தனை வரம்புகளோடும் வாழ்க்கையைக் கொண்டாடுகிற ஒரு புதிய மனிதன் தேவை.

அந்தப் புதிய மனிதனின் வரவை அறிவிக்கிறவர்கள் எனது சந்நியாசிகள். கடந்த காலத்தின் தொடர்பற்ற நிலையை, ஒரு புதிய தொடக்கத்தைத் தெரிவிப்பவர்கள் அவர்கள். நீங்கள் பாசாங்குக் காரர்களாக இருப்பதை நான் விரும்ப மாட்டேன். நீங்கள் உண்மையானவராக நம்பத்தக்கவராக இருப்பதையே நான் விரும்புவேன். உங்கள் உடம்பை நேசியுங்கள், சரீரானுபவத்தை முற்றாகப் பெறுங்கள். உங்களுடைய உள்ளுணர்வுகளை, விருப்பங்களை நேசியுங்கள், அவற்றை முழு அளவிற்கு வாழ்ந்து விடுங்கள்.

உங்களுக்கு வியப்பாக இருக்கும்; உங்கள் வாழ்க்கையை நீங்கள் நேசித்தால், வாழ்க்கை தனது வாசல்களை உங்களுக்காகத் திறந்து வைக்கும். நீங்கள் நேசிப்பவராயிருந்தால் புதிர்களும், ரகசியங்களும் உங்களிடம் கையளிக்கப்படும். உங்கள் உடம்பை நேசியுங்கள், சற்று முன், பின்னாக என்றாலும் அதில் தங்கி

யிருக்கும் ஆன்மா பற்றித் தெரிந்து கொள்வீர்கள். நீங்கள் மரங்களையும், இலைகளையும், ஆறுகளையும் நேசித்தால் சற்று முன்பின்னாக என்றாலும் அவற்றுக்குப் பின்னால் இருக்கும் கண்ணுக்குப் புலப்படாத கடவுள்தன்மையைக் கண்டு கொள்வீர்கள். ஒவ்வோர் இலையிலும் அதன் கையொப்பத்தைக் காணலாம். உங்களுக்குத் தேவைப்படுவதெல்லாம் கண்கள், நம்பிக்கையும் நிச்சயத் தன்மையும் கொண்ட (positive) கண்கள். எதிர்மறைக் கண்களால் அவற்றைக் காணமுடியாது. எதிர்மறைக் கண்கள் பார்வையிழந்தவை. அவற்றால் தவறானவற்றை மட்டுமே பார்க்க முடியும்.

'என்னைப் பற்றி நான் எதிர்மறையாகவே உணர்கிறேன். தாங்கள் எப்படி என்னைக் கண்டுகொள்கிறீர்கள்?' என்று நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள்.

நேர்த்தியான ஒருவரின் இருப்புணர்வாகவே உங்களை நான் காண்கிறேன். உங்களிடம் மகத்தான தகுதியை, தனிச்சிறப்பை நான் காணமுடிகிறது. பிரபஞ்சத்தின் மிகப்பெரிய தேவை ஒன்றைப் பூர்த்தி செய்யவே நீங்கள் பிறப்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். அதுவே போதிய நிரூபணமாகும். உங்களை நேசிக்கத் தொடங்குங்கள். அதுவே மற்றவர்களை நேசிக்கவும், பிரபஞ்சத்தை நேசிக்கவுமான ஒரே வழி. உங்களை உங்களால் நேசிக்க முடியாவிட்டால் பிறகெப் படி உங்களைப் படைத்தவரை நேசிப்பீர்கள்? நீங்கள் உங்களை வெறுத்தால் உங்களைப் படைத்தவரையும் வெறுப்பீர்கள். அது உங்களைப் போல் தகுதியற்றவரைப் படைத்திருக்கிறது. அது தவறான, கொடிய எண்ணங்களை ஆசைகளை உங்களுக்குக் கொடுத்திருக்கிறது. உங்கள் உள்ளுணர்வுகளையும், விருப்பங் களையும் உங்களுடைய சொந்த வாழ்க்கையையும் இழித்துப் பேசுவதன் மூலம் பிரபஞ்ச இருப்பையும் மறைமுகமாய் நீங்கள் இழிவு செய்கிறீர்கள்.

உங்களை நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள். இல்லையேல் ஒரு பாசாங்குக்காரராகி விடுவீர்கள். எதையும் அடக்கி வைக்க வேண்டும். எதிர்மறையாய் எதுவும் உங்களுக்குள் இருக்கவில்லை. பிரபஞ்ச இருப்பு நிச்சயத்தன்மை கொண்டது. முழுக்கவும் நம்பிக்கையும் உறுதியும் கொண்டதாய் (positive) இருக்கிறது. உங்க ளுடைய உள்ளார்ந்த மையப்பகுதி (core)யை வெளிப்படுத்துங்கள்.

உங்கள் பாடலை, அது எத்தகையதாயினும் கவலையின்றிப் பாடுங்கள். அதை யாரும் கைதட்டி வரவேற்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள் - அதற்கு அவசியமில்லை. பாடுவதே வெகுமதிதான்.

நீங்கள் பாசாங்குக்காரராக இருப்பதை நான் விரும்பவில்லை. பாசாங்குக்காரர் யார்? ஒன்றைச் சொல்லவும், ஒன்றை நம்பவும் செய்தபடி வேறொருவிதமாய் (முற்றிலும் மாறாத விதத்தில்) வாழ்கிறவர்கள்.

மதகுரு ஃப்ளானகன், திருமதி ஓ. ரூர்க்கியின் அழைப்பின் பேரில் அந்தக் கிராமத்துப் பக்கம் நடந்து சென்றார். 'தந்தையே! நாங்கள் சின்னதாய் ஒரு விருந்து நடத்துகிறோம். தாங்களும் அதில் கலந்து கொள்ள வேண்டும்' என்று அவள் அழைத்திருந்தாள்.

'என்னால் முடியுமென்றுதான் நினைக்கிறேன். ஆனால் நான் போய் பிரார்த்தனைக் கூட்டத்தில் கலந்துகொள்ள வேண்டுமே' என்றார் அந்தப் பண்பாளர்.

'அடப்பாவமே! அருமையான விருந்து அத்துடன் மகிழ்ச்சி தரக்கூடிய விளையாட்டுகளும் உண்டே. நாங்கள் பெண்களின் கண்களைக் கட்டிவிடுவோம், ஆண்கள் தங்களுடைய ட்ரவுசர்களைக் களைந்து விடுவார்கள். பெண்கள் அவர்களை யார் யார் என்று கண்டுபிடிக்க வேண்டும். குருவே தாங்கள் நம்புங்கள் உங்களுடைய பெயரை ஐந்து முறை சொல்லிவிட்டார்கள்' என்றாள் அந்தப் பெண்மணி.

எச்சரிக்கையாயிருங்கள். ஒருவர் எதிர்மறைப் பண்பிலேயே வாழ்ந்து கொண்டிருக்க முடியாது. ஒருவர் எதிர்மறையாகச் சிந்திக்க முடியும். ஆனால் நேர்மறையாகவே வாழவேண்டும். மறுப்புகளில் வாழ முடியாது. அது ஒன்றும் வாழ்க்கைக்கான ஊட்டச்சத்தைத் தன்னுள் கொண்டிருக்கவில்லை. மறுத்தல் (No) என்பது மரணம். அதில் நீங்கள் சாக முடியும், வாழமுடியாது.

நீங்கள் உண்மையிலேயே வாழ விரும்பினால் உங்கள் இதயத்தின் அடியாழத்தில் ஒப்புதல் (yes) இருக்க வேண்டும். அது உங்கள் வளர்ச்சிக்கான ஊட்டச்சத்தை வழங்கும். அது உங்கள் இயக்கத்திற்கு சவுகரியமான இடத்தை வழங்கும். வார்த்தையில் கவனமாயிருங்கள். 'ஆம்' என்கிற ஒற்றைச் சொல்லை நீங்கள்

திரும்பச் சொல்கிறபோது ஏதோ ஒன்று உங்களுக்குள் ஒரு வாசலைத் திறந்து வைக்கும்; புதிய தொடக்கத்தை ஏற்படுத்தும், புதியதோர் வாய்ப்புக்கு அது வழிவகுக்கும். 'இல்லை' என்று நீங்கள் சொல்கிறபோது ஏதோ ஒன்று சுருங்குகிறது. உங்களைப் பின்னுக்கு இழுத்து விடுகிறது. 'இல்லை' என்கிற சொல்லை நீங்கள் திரும்பத் திரும்பச் சொல்கிறபோது உங்களுக்கு நீங்களே முடிவு கட்டி விடுகிறீர்கள். ஒப்புதலை வழங்குகிறவராயிருங்கள், உங்களுக்குள் பொங்கி வழிவதாய் உணர்வீர்கள். 'ஆம்' என்று சொல்வதன் மூலம் நேசிக்கவும், வாழவும் நீங்கள் தயாராகி விடுகிறீர்கள்.

என்னைப் பொறுத்தவரை ஒவ்வொருவருமே மிகச்சிறந்தவர்தாம், இணையற்றவர்தாம். நான் யாரையும் ஒப்பிடுவதில்லை. ஒப்பீடு என்னுடைய வழியல்ல, காரணம் ஒப்பிடுதல் எப்போதுமே அருவருப்பான, கொடூரமான ஒன்று. நீங்கள் மற்றவர்களைவிட உயர்ந்தவர் என்று நான் சொல்ல மாட்டேன். நீங்கள் நீங்களாகத் தான் இருக்கிறீர்கள். இருக்கிறபடிக்குத்தான் நீங்கள் அவசியப்படுவீர்கள், மற்றெவரையும் போலவே நீங்கள் ஒப்பிட இயலாதவர்தாம்.

*கடைசிக் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! தாங்கள் கூறுகிறீர்கள், கிறிஸ்துவையோ, புத்தரையோ, தங்களையோ முன்மாதிரியாகக் கொள்ள வேண்டாம் என்று. முன்மாதிரியைப் பின்பற்றுவதன்மூலம் ஒருவர் கற்றுணர முடியாதா? பாவனைகளை மேற்கொண்டு ஒருவர் தெரிந்துகொள்ள முடியாதா? கிறிஸ்து, புத்தர் அல்லது தங்களுடைய ஒளி (தெளிவு)யைக் கொண்டு ஒருவர் தன்னுடைய உண்மையான சுயத்தைக் கண்டடைய முடியாதா?'***

பாவனைகளை மேற்கொள்வது (imitate) என்பது உங்க்ளுக்கு மாறாகச் செல்வதாகும். பாவனைகளை மேற்கொள்கிறபோது உங்களை மறுத்து ஒதுக்கி விடுகிறீர்கள், அத்துடன் வேறொருவரை உங்கள்மீது திணித்துக்கொண்டு விடுகிறீர்கள். கிறிஸ்துவை உங்களால் கண்டடைய முடிந்தால் அவரை நேசியுங்கள், அப்படியே அவருடைய நடை, உடை, பாவனைகளைப் பின்பற்றுகிற வேலை வேண்டாம். புத்தரைச் சந்திக்கிற வாய்ப்பு கிடைத்தால் அவரைப் புரிந்துகொள்ளப் பாருங்கள். ஆனால், அவருடைய போலியாக முயற்சிக்காதீர்கள். நீங்கள் என்னுடன் இங்கே

இருக்கிறீர்கள். ஆழ்ந்த அன்புடனும், அதிக நம்பிக்கையுடனும் இருங்கள். உங்கள் இதயத்துடன் நான் தோழமை கொள்ள இடமளியுங்கள். நம் இதயங்கள் சந்திக்கட்டும், இணையட்டும், இரண்டறக் கலந்து கொள்ளட்டும். ஆனால் தயவுசெய்து என்னை அப்படியே பின்பற்றாதீர்கள்.

உங்கள் வழியில் போங்கள், உங்களுக்கே உரிய முறையில் செயல்படுங்கள். உங்களுக்கு நீங்களே ஒளியாய் இருங்கள் (தெளிவைப் பெறுங்கள்). நீங்கள் நீங்களாகவே இருக்க வேண்டும். நீங்கள் கிறிஸ்துவைப் பார்த்துப் பின்பற்றினால் ஒரு கிறிஸ்த வராகலாம், கிறிஸ்துவாகி விடமுடியாது.

புத்தராவது என்பது உங்கள் மெய்யறிவை (light) நீங்கள் விழிக்கச் செய்வதாகும். யாரோ ஒருவரைப் பின்பற்றினால் நீங்கள் எப்படி விழிப்படைய முடியும்? என்னுடைய சந்நியாசிகள் என்னை அப்படியே பின்பற்றுகிறவர்களல்லர் (சீடர்கள்). அவர்கள் என்னுடைய தோழர்கள், என்னை நேசிப்பவர்கள். எப்படி வாழ்வது என்று நான் உங்களுக்கு அறிவுறுத்தவில்லை. எப்படி வாழ்வது என்பது குறித்து எந்தக் கட்டளையையும் நான் உங்களுக்குப் பிறப்பிக்கவில்லை. நீங்கள் வளர்த்துக் கொள்ளும்படியாய் எந்தவொரு பண்பையும் நான் உங்களுக்கு வழங்கவில்லை. என்னுடைய உள்ளுணர்வைத்தான் அப்படியே உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். என்னுடைய கதையைத்தான் உங்க ளுக்குச் சொல்கிறேன். நீங்கள் அதையெல்லாம் கவனமாய் கேட்பதற்கு எனது நன்றிகள்.

ஒத்தகால நிகழ்வு குறித்த விதி (Law of Synchronicity)யை நீங்கள் அறிந்துகொள்ள வேண்டும். கார்ல் குஸ்டாவ் ஜங்கின் மிகச்சிறந்த பங்களிப்பு அது. நவீன கால மனித இனத்துக்காகவே அவரால் வழங்கப்பட்டதுதான் அந்த விதி.

அறிவியலின் அடிப்படை, ‘காரண காரியத் தொடர்பு விதி’ (casuality)யாகும். இந்த விதி எந்திரகதியானது. நீங்கள் தண்ணீரை 100 டிகிரி அளவிற்கு சூடுபடுத்துகிறீர்கள் - அது ஆவியாகிறது. நீங்கள் அதை எங்கே சூடு பண்ணுகிறீர்கள் என்பது முக்கிய மில்லை. கோயிலில், தேவாலயத்தில், மசூதியில் - அது பொருட் டில்லை. இந்தியாவில், திபெத்தில் எங்கென்றாலும் முக்கியமில்லை. நீங்கள் நீரை 100 டிகிரிக்கு சூடேற்றினால், அது ஆவியாகிறது.

தண்ணீர் அதை மறுப்பதற்கில்லை. 'இன்று அப்படியொரு எண்ணமில்லை எனக்கு' என்று தண்ணீரால் சொல்லமுடியாது. அல்லது, 'இன்று ஞாயிற்றுக்கிழமை, எனக்கு விடுமுறை நாள், எனக்கு ஆவியாக விருப்பமில்லை என்று அது மறுக்க முடியாது. 'இன்று நான் சரியான மன நிலையில் இல்லை, நீங்கள் எவ்வளவு சூடேற்றினாலும் ஆவியாக மாட்டேன்' என்று தண்ணீர் வாதிடுவதற்கில்லை. அல்லது, 'இன்று நான் உங்களிடம் பெருந் தன்மையாக நடந்து கொள்ளப்போகிறேன். 50 டிகிரியிலேயே ஆவியாகி விடுகிறேன்' என்றும் சொல்ல முடியாது. தண்ணீருக்கு தேர்வு செய்யும் உரிமை கிடையாது. அது அனுகூலமாய் நடந்து கொள்வதற்கு, சட்டமும் விதிகளும் எந்திரகதியானவை, காரண காரியத் தொடர்புடையவை. நீங்கள் ஒரு காரணத்தைத் தோற்று வித்தால், அதற்கு விளைவும் இருந்தே தீரும். விதிவிலக்காய் எதுவும் கிடையாது.

காரணத் தொடர்பு விதி இருப்பதனால், ஆன்மாவின் இருப்பை அறிவியலால் நம்ப முடியவில்லை. பிரக்ஞை மற்றும் கடவுளின் இருப்பையுந்தான். ஏனெனில் அவை எந்திரத் தனமில்லாத, காரண காரியத் தொடர்புக்கு அடங்காத நடப்புகள். அறிவியலின் செய்முறை (methodology) அவற்றை ஏற்கவொட் டாமல் தடுக்கிறது. அவை அறிவியல் உலகில் உள்வாங்கிக் கொள்ளப்படுவதில்லை. அறிவியல் எழுப்பும் கம்பீரமான கட்டடத்தை அது சிதைத்துவிடும். கடவுள், ஆன்மா, பிரக்ஞை, அன்பு இவற்றையெல்லாம் அறிவியலின் ஆலயத்துக்கு வெளியே ஒதுக்கி வைக்கும்படி இருக்கும். அவற்றை உள்ளே அனுமதிக்க முடியாது. அவை ஆபத்தானவை. அதன் (அறிவியல்) ஒட்டு மொத்த அமைப்பையும் அவை தகர்த்து விடும். அவை காரண காரியத் தொர்டர்பற்றவை. ஆனால் வேறு விதிகள் எவற்றை யேனும் ஏற்றிருக்கக் கூடும்.

அதன் சிறப்பு கார்ல் குஸ்டாவ் ஐங்கையே சாரும். காலகாலமாய் அறியப்பட்டிருந்தும், யாரும் அதற்குச் சரியான பெயரிடவில்லை. அவர் சூட்டிய பெயர்தான் 'சம காலத்திய நிகழ்வு விதி' (The Law of Synchronicity) என்பது.

அது சற்றும் எதிர்பாராத விதமாய் ஒரு விஞ்ஞானிக்கு நிகழ்ந்தது.

நூறு ஆண்டுகளுக்கு முன், பழைய வீடொன்றில் அமர்ந் திருந்தார் ஒரு விஞ்ஞானி. அந்தப் பழைய வீட்டில் ஒரே சுவரில் இரண்டு பழைய கடிகாரங்கள் இடம் பெற்றிருந்தன. அவை எப்போதும் ஒரே நேரத்தைக் காட்டிக் கொண்டிருப்பதைக் கண்டு அவர் வியப்புற்றார். அவை ஒவ்வொரு நொடியிலும் மிகச்சரி யாகவே நேரம் காட்டின. 'பழைய கடிகாரங்கள்தான். ஆனால் ஒரு நொடி கூட வித்தியாசம் இல்லாமல் நேரம் காட்டுகின்றன.'

அவர் ஒரு விஞ்ஞானி என்பதால் தெரிந்து கொள்வதில் ஆர்வமாயிருந்தார். ஒரு கடிகாரத்தில் மட்டும் முள்ளை ஐந்து நிமிடம் பின்னுக்குத் தள்ளி வைத்தார். மறுநாள் காலையில் பார்த்த போது இரண்டு கடிகாரங்களும் ஒரே நேரத்தையே காண்பித்துக் கொண்டிருந்தன. தற்போது பெருங்குழப்பமாகி விட்டது.

அவர் விசாரணை மேற்கொண்டார். யாரும் மாற்றவில்லை. யாரும் எதையும் தொடக்கூட செய்யவில்லை. அவர் மறுபடியும், மறுபடியும் முயன்று பார்த்தார். அவை திரும்பத் திரும்ப அதே சீர்த்தன்மையைக் கொண்டிருந்தன. 'என்னதான் நடக்கிறது?' விசித்திரமாய் ஏதோ ஒன்று நடக்கிறது.

'பெரிய கடிகாரத்தின் திறன்மிக்க அதிர்வு சுவரில் பரவியதில் மற்றொரு கடிகாரம் இசைவுத் தன்மை பெற்றிருக்க வேண்டும். கண்ணுக்குத் தெரியாத, நுட்பமான சீர்த்தன்மை!' - அவர் ரொம்பவும் கருத்தூன்றிக் கவனித்தபின், இந்த முடிவிற்கு வந்தார்.

அதுவே ஒரு புதிய நடப்பின் தொடக்கமாயிருந்தது. பிறகு எண்ணற்ற செயல்கள் நடந்தேறின. சுத்த பிரக்ஞையில் செயல்கள் எப்படி நடக்கின்றன என்று கார்ல் குஸ்டாவ் ஆராயத் தொடங்கிய சமயத்தில், ஓர் இதயம் ஏற்படுத்துகிற அதிர்வு, போதிய ஆற்றல் உடையதாயிருந்தால், மற்றொரு இதயத்தின் சீர்த்தன்மையை அது மாற்ற முடியும் என்கிற முடிவிற்கு வந்தார், பெரிய கடிகாரம் சின்னக் கடிகாரத்தை மாற்றுகிற மாதிரி.

அதிர்வு பார்வைக்குப் புலப்படாது. அதை அளப்பதற்கு வழியும் இல்லை. ஆனால் அது இருக்கவே செய்கிறது. அதைத் தொட்டறிய முடியாது. ஆனால் அது செயல்படுகிறது. அது காரண காரியத் தொடர்புடையதல்ல.

சத் சங்கத்திலும் அதுதான் நடக்கிறது - குருவுடன் தோழமை ஏற்படுத்துதல். நீங்கள் கிறிஸ்துவுடன் இருந்தால், அவருடைய

ஆற்றல் மிகப்பெரியது. இறையுணர்வு மிக்கவர் அவர். அவர் கடவுள் நம்பிக்கைக்குச் சன்னலாயிருக்கிறார். இறையுணர்வு அவர் மூலமாய் பிரவகிக்கிறது. சீடத்துவம் என்பது குருவின் சேவையில் இருப்பது. நீங்கள் அவருக்குச் சமீபத்தில் - ஒரு குருவிற்கு சமீபத்தில் வந்தால், அவருடைய ஆற்றல், அவர் ஏற்படுத்துகிற அதிர்வு உங்கள் இதயத்தில் ஒரு சீர்த்தன்மையை உண்டுபண்ணும். குருவின் பக்கமாயிருப்பது என்பது இறையுணர்வு பாய்ந்து வரும் ஒரு சன்னலுக்குப் பக்கமாய் இருப்பது போன்றது. காலகாலமாய் இப்படித்தான் நடந்து வருகிறது.

நீங்கள் கவனித்ததுண்டா, இரண்டு காதலர்கள் உண்மையி லேயே அவர்கள் காதலர்களென்றால், ஆழ்ந்த நெருக்கத்தில் மெல்ல மெல்ல ஒன்று போல் தெரியத் தொடங்கி விடுவார்கள். அது சமகால நிகழ்வு. (sychronicity). அவர்களிடையே உண்டாகிற நெருக்கத்தில் அவர்கள் பார்ப்பதற்கு ஒரு சகோதரனும் சகோதரியும் போல் தெரிவார்கள். அவர்களுக்குள் இருக்கிற ஏதோ ஒன்று ஏக காலத்தில் நிகழ்வதாகி, ஒரே சீர்த்தன்மையை அவர்கள் பெற்று விடுகிறார்கள்.

ஒரு தாய்க்கும் அவளுடைய குழந்தைக்கும் உள்ள சீர்த்தன்மை, தற்போது உண்மையென்று ஒப்புக்கொள்ளப்பட்டு விட்டது. அறிவியல் அதை நிரூபித்து விட்டது. ஒரு குழந்தை தன் தாயிடமிருந்து ஆயிரக்கணக்கான மைல்களுக்கு அப்பால் கொல்லப்பட்டாலும் அதன் தாயின் இதயத்தில் ஏதோ ஒரு வேதனை ஏற்படும். அவளால் அதை இன்னதென்று அறிய முடியாதிருக்கலாம், அவளால் அதை விவரிக்க முடியாமல் போகலாம். தன் குழந்தைக்கு என்னவாயிற்று என்று அவளுக்குத் தெரிந்திருக்காதுதான். ஆனால், ஆயிரக்கணக்கான மைல்களுக் கப்பால் அவளுடைய குழந்தைக்கு எது நடந்திருந்தாலும், அந்தத் தாயின் இதயம் உடனே அதை உணரத் தொடங்குகிறது. அவளுடைய இதயம் நொறுங்குகிறது.

அன்றொரு நாள் ஒரு சந்நியாசி தன்னுடைய தாய் இறந்து போனதாக எனக்கொரு கடிதம் எழுதியிருந்தார் - அப்போதுதான் தாயின் மரணச்செய்தி ஒரு தந்தியாய் அவருக்கு வந்திருந்தது. அவருக்குக் குழப்பம். அவள் இறந்த நாளில், அவர் பெரிய அளவில் துக்கப்பட்டிருந்தார். உடல் சார்ந்த வகையிலோ, மனம் சார்ந்த வகையிலோ எவ்வித பிரச்சினையும் இல்லாத நிலையில்

அந்தத் துயரம் ஏற்பட்டிருந்தது. அதற்கு முன் எவ்வித காரணமுமில்லாமல் அப்படியொரு வேதனை அவருக்கு ஏற்பட்டதில்லை.

அதுவே சமகாலத்திய நிகழ்வென்பது. தாயும் குழந்தையும் ஒன்பது மாத காலம் ஒன்றாக வாழ்ந்திருக்கிறார்கள். குழந்தை தாயின் கருப்பையில் இருந்திருக்கிறது. அவனுடைய இதயம் தாயின் இதயத்தோடு ஒரே சீரில் துடித்திருக்கிறது. தன் தாயின் இரத்தத்தோடு அவனுடைய இரத்தமும் எவ்வித வேறுபாடுமின்றி சீராகப் பாய்ந்திருக்கிறது - எவ்வகையிலும் அவன் வேறுபடவில்லை. தன் தாயுடன் ஒன்றாகவே இருந்திருக்கிறான் அவன். அந்த ஒருமை தொடர்கிறது.

இரண்டு காதலர்கள் உண்மையிலேயே நெருங்கிப் பழகியதும் அவர்களிடம் எந்த ஒளிவுமறைவும் இருக்காது. அவர்கள் ஒருவருக்கொருவர் வெளிப்படையாக இருப்பார்கள். ஒருவரிடம் ஒருவருக்கு அச்சமில்லாது, இரகசியம் இல்லாது இருப்பது நெருக்கம். எங்கே எதிராளியின் மனம் புண்படுமோ என்கிற அச்சம் இருந்து, எல்லா விஷயங்களையும் அவர்களால் பேச முடியாதபொழுது... அவர்களிடையே முழுமையான நெருக்கம் ஏற்படவில்லை எனலாம். ஆனால் இரண்டு காதலர்களிடம் தங்களுக்குள் மறைப்பதற்கு எதுவுமில்லை, எல்லாவற்றையும் பேச முடியும் என்கிற அளவிற்கு ஆழ்ந்த நம்பிக்கை உண்டாகிற பொழுது, ஒன்றை நீங்கள் சொல்லாமலே அடுத்தவர் புரிந்துகொள்கிற நிலையில் அவர்கள் ஒன்றாகி விடுகிறார்கள். ஒரு சகோதரன் சகோதரி போல் அவர்கள் மாறி விடுவார்கள்.

ரொம்பப் பேருக்குக் குழப்பம்...

சில இரவுகளுக்கு முன் ஒரு தம்பதி என்னிடம் வந்தனர். கணவன் மிகுந்த குழப்பத்தில் இருந்தான். அவன் சொன்னான், 'எங்களுக்கு என்ன ஆச்சு தெரியுமா? நாங்கள் கணவன் மனைவியாக இருக்கவில்லை - எங்களிடையே பாலுறவு நின்றுவிட்டது. ஆனால் ஓர் ஆழ்ந்த நெருக்கத்தை நாங்கள் உணர்கிறோம். நான் அவனிடம் சொன்னேன், 'அதிமுக்கியமான ஒன்று நிகழ்ந்திருக்கிறது. நீங்கள் சகோதரனும், சகோதரியுமாகி விட்டீர்கள். உங்களிடையே இருந்த காதல் ஒரு புதிய பரிமாணம் கொண்டுவிட்டது, ஓர் உயர்நிலை கண்டுவிட்டது - பாலினப் பண்பு என்பது மறைந்து, புனிதம் பெற்று விட்டீர்கள்' என்று.

அதைக் கேட்டதும் எல்லாமே அவனுக்குத் தெளிவாகி விட்டது. அவளுக்குந்தான். அவர்கள் ஒருவரையொருவர் தழுவிக் கொண்டார்கள். அவர்களுடைய கண்களில் இருந்து கண்ணீர் வழிந்தோடியது. அது காண்பதற்கு இனிய காட்சி. அவர்கள் மேற்கில் இருந்து வந்தவர்கள். அதனால் கவலைப்பட்டார்கள். கிழக்கு எப்போதுமே அதை அறிந்திருக்கிறது. ஆழ்ந்த அன்பு உறவில் மாற்றத்தை உண்டாக்கும் என்பது அதற்குத் தெரியும். கணவர்களும் மனைவிமார்களும் சகோதர சகோதரிகளாகி விடுகிறார்கள் என்பது... அவர்களிடையே ஒருமைத்தன்மை உண்டாகி அவர்கள் ஒன்றாகி விடுகிறார்கள்.

இதுவே ஒத்த நிகழ்வு. ஒரு குருவிற்கும் சீடருக்குமிடையே இதுதான் நிகழ்கிறது - வேறெந்த உறவிலும் இருப்பதைவிட மிக உயர்ந்த நிலை. வேறெந்த நெருக்கத்திலும் இல்லாத ஒரு மேலான தளத்தை அவர்கள் அடைகிறார்கள். நீங்கள் புத்தரைப் பின்பற்றுகிற அவசியமில்லை. என்னைப் பின்பற்றவும் அவசிய மில்லை, நீங்கள் கிருஷ்ணரையோ, முகமதுவையோ, கிறிஸ்து வையோ நடையுடை பாவனைகளில் காப்பியடிக்க வேண்டாம். விழிப்புள்ள ஒரு குருவோடு இருக்கிற அதிர்ஷ்டம் உங்களுக் கிருந்தால், ஊறுபடத் தக்கவராகி (vulnerable) விடுங்கள். உங்களுடைய தற்காப்பு, கவசம் போன்றவற்றை உதறிவிட்டு, அவரிடம் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். அவருடைய சக்திவாய்ந்த மின்னோட்டத்தை உண்டாக்கும் பொறி (dynamo), காந்தப்புலம் புத்தவெளி உங்களை மாற்றம் பெறச் செய்துவிடும். அவர் உங்களுக்கு எந்தவொரு கட்டளையும் பிறப்பித்திருக்க மாட்டார். அவர் ஏற்படுத்துகிற மாற்றம் உங்கள் மீது திணிப்பாக இருக்கும். உங்களுக்குள் ஏதோ ஒன்றைத் தூண்டி உங்கள் இருப்புணர்வு சுறுசுறுப்படையச் செய்வதாயிருக்கும்.

நிஜ வாழ்வில் நடிப்பேது? பாவனைகளை மேற்கொள்வதென் பது நடிப்பு. பாவனைகள் எப்போதுமே மேலோட்டமானவைதான்.

கொஞ்ச காலம் நடிக்காமல் இருந்த ஒரு நடிகருக்கு, வசனத்தில் ஒரு வரியை மாற்றம் செய்திருந்தார்கள். அந்த வசனத்தை அரங்கிற்குப் போகிற வழியெங்கும் அவர் சொல்லிப் பார்த்துக் கொண்டிருந்தார். 'அந்தப் பீரங்கியெழுப்பும் பேரொலியை நான் கேட்கிறேன்...' 'அந்த பீரங்கியெழுப்பும் பேரொலியை நான் கேட்கிறேன்.'

அவர் அரங்கிற்குச் சென்றதும், அவருடைய வசனம் பேசவேண்டிய காட்சி வருகிறது, தயாரா என்று கேட்டார்கள். அவரும் தயார் என்றார். அவர் மேடையில் பிரவேசித்ததும், பீரங்கி முழக்கம் கேட்டது. அந்த நடிகர் ஒரேயடியாகப் பயந்து போனார். 'கிறிஸ்துவே, இதென்ன இத்தனை கொடூர சத்தம்' என்று துள்ளிக் குதித்தார்.

வாழ்க்கை இடையறாத வியப்பைக் கொண்டது. நீங்கள் ஒரு கிறிஸ்தவராகவோ, இந்துவாகவோ, முகமதியராகவோ இருந்தால் அதைத் தவற விடுவீர்கள். நீங்கள் ஒத்திகைகளிலோ, மேலோட்டமாய் விளையாடும் விளையாட்டுகளிலோ நம்பிக்கை வைக்க மாட்டீர்கள். அதுதான் நடக்கிறது. கிறிஸ்துவர்களாக இருக்கும் ஆட்டத்தை தேவாலயங்களில் ஆடிக்கொண்டிருக்கிறார்கள். நிஜ வாழ்க்கையில் கிறிஸ்துவுடன் எந்தத் தொடர்பும் இருப்பதில்லை.

கவனியுங்கள்... கிறிஸ்து சொல்கிறார், 'பணிவுடையவர்கள் பாக்கியவான்கள், கடவுளின் ராஜ்யம் அவர்களுடையது' என்று. ஆனால் கிறிஸ்தவர்களைப் பாருங்கள். உலகிலேயே பெரும் வலிமை கொண்ட மதம் அவர்களுடையது. மத குரு ஒன்றும் சாதுவாக, அடக்கமாக இருக்கவில்லை, உலகிலேயே மிகப்பெரிய சாம்ராஜ்யம் போப்பினுடையது. ராக்பெல்லர்களும், மார்கன்களும், ஃபோர்டுகளும் அவருடன் ஒப்பிட்டால் ஒன்றுமேயில்லை. அப்படியொரு பெரிய வாய்ப்பை யூதர்கள் எப்படித் தவறவிட்டார்கள் என்பதுதான் என்னுடைய குழப்பம். என்ன வேலை பாருங்கள், அந்த மோசமான இத்தாலியர்கள் அவர்களை முட்டாள்களாக்கி விட்டனர்.

நீங்கள் அடுத்தவரைப் பின்பற்றினால் உங்களுடைய நேர்த்தியை இழந்து விடுவீர்கள், சிதைந்து போவீர்கள்.

உங்களுக்குத் தெரியுமா, கிறிஸ்துவை கூனராக - கூன் விழுந்த ஒருவராக புனித நூல்கள் சித்திரித்திருப்பது? அவருடைய உயரத்தை நீங்கள் அறிவீர்களா? நான்கடி ஐந்தலங்கும். அந்த மறை நூல்களில் கூறப்பட்டிருக்கிறது. இயேசு மனிதர்களிலேயே மிகவும் அவலட்சணமானவர் என்று. தற்போது, கிறிஸ்துவைப் போல் ஆவதற்கு முயற்சி செய்து பாருங்களேன்.

ஒருவன் தையற்கடைக்குச் சென்றான். விளையாட்டு வீரர்கள் அணியும் கைகளுள்ள மேலங்கி (sports jacket)யை போட்டுப்

பார்த்தான். தையற்காரன் ஒரு மடிப்பு மடித்தான். அந்த மனிதனின் தோள்பட்டைப் பகுதி மூன்று அங்குலம் மேலே போனது. தையற்காரன் சொன்னான்: 'அருமை! நான் பொருத்து கிறேன்' என்று. மற்றொரு முறை சரிசெய்தான். அந்த மனிதனின் கைப்பகுதி கோணலாகி விகாரமாய் காட்சியளித்தது. ஒரு மணி நேரத்துக்குப் பிறகு தன்னுடைய புதிய உடையில் அவன் வெளியே வந்தான்.

இரண்டு கிழவிகள் அவனைப் பார்த்தார்கள். சாலையின் குறுக்கே வரும்போது ஒருத்தி சொன்னாள், 'பார்க்கச் சகிக்கலை, ஓர் அழகான இளைஞன் இப்படி முடமாகி விட்டிருக்கிறானே...'

அவளுடைய சிநேகிதி தலையசைத்தபடி சொன்னாள், 'ஆமா, ஆனால் அந்தச் சட்டை அவனுக்கு அழகா பொருந்தி யிருக்கு' என்று.

அத்தகைய சட்டைகளையும், ஒத்திகைகளையும் விடுங்கள்.

கிராக்ஸெவ்ஸ்கி கப்பல்களைச் செப்பனிடுவதில் கைதேர்ந்த வர். தொலைதூரப் பயணம் செல்லும் கடலோடிகள் பேசிக்கொள் வார்கள், 'அந்த போலந்துக்கார ஆசாமி காதல் விவகாரத்தில் படுகில்லாடி' என்று. ஒரு மணி நேரத்தில் இருபது பெண்களுடன் உறவு கொள்ளும் சக்தி அவருக்கு உண்டு என்றும் அவர்கள் அடித்துச் சொல்வார்கள். கடலோடிகளில் சிலருக்கு அதில் நம்பிக்கையில்லை. அவர்கள் பந்தயம் கட்டத் தயாராயினர். மறுநாளிரவு பண்டக சாலைக்கு இருபது பெண்கள் அழைத்து வரப்பட்டனர்.

அந்த போலந்துக்காரர் செயல்படத் தொடங்கினார். முதல் பன்னிரண்டு பெண்களுடன் உறவு கொண்டதும் களைப்புற்று தரையில் விழுந்தார். அவரது நண்பர்கள் ஓடிவந்து, 'என்ன ஆச்சு?' என்று வீறிட்டலறினர்.

'எனக்குத் தெரியலை, சாயந்தரம் ஒத்திகையின்போது சரியாத்தான் செஞ்சேன்' என்றார் கிராக்ஸெவ்ஸ்கி.

இந்த அளவில் இன்று நிறுத்திக் கொள்வோம்.

○

தோழி! எழுந்து கொள் இன்னுமேன் தூக்கம்? இரவு முடிந்துவிட்டது, பகலையும் அதுபோல் இழக்கப் போகிறாயா? முன்பே விழித்துக்கொண்ட மற்ற பெண்கள் யானை அல்லது ஆபரணத்தைக் கண்டார்கள். இதுவரை உறங்கிக் கிடந்ததால், நீ இழந்தது ஒன்றல்ல, மிகப்பல. உன்னை நேசிப்பவர்கள் அறிவர் உனக்கேனோ தெரியவில்லை. உன் படுக்கையில் உனதருகே ஓர் இடம் போட ஏன் மறந்தாய்? ஏனோ வாழ்க்கையை விளையாட் டாகவே நீ வாழ்ந்து பார்க்கிறாய். இருபது வயதானால் என்ன? நீ இன்னும் வளரவில்லை உன் தலைவன் யாரென நீ அறிந்திருக்கவில்லை. எழுந்துகொள், எழுந்துகொள். எவருமில்லை உன் படுக்கையில் நீண்ட இரவின் ஏதோ ஒரு புள்ளியில் அவன் நீங்கிப் போனான் உன்னைவிட்டு. கபீர் சொல்கிறார்: யார் விழித்திருக்கிறாளோ அவளே குழலோசையைக் கேட்கிறாள் பத்து ஆண்டுகளாய் என் வயதொத்த பெண்களோடு நான் ஆடியிருக்கிறேன் ஆனால் தற்போதோ நான் அச்சத்தில் இருக்கிறேன். பல படிகளைக் கடந்து நான் மேனோக்கிச் செல்கிறேன், இந்தக் காதல் விளையாட்டில் பங்கேற்பதற்கு கட்டாயம் அச்சத்தை விடவேண்டும். பாதாதிகேசம் மூடிமறைத்த ஆடை களைந்து என் தேகம் அவனுடன் சேர்ந்து கொள்ளும். என் கண்கள் மெழுகுவர்த்தியாய் அன்புச்சுடர் வீசும். கபீர் சொல்கிறான்: காதல் கொண்ட ஆணும் பெண்ணும் இந்தக் கவிதையைப் புரிந்துகொள்வார்கள் அவர்மீது ஆசை உனக்கில்லை யெனில் அக்கறையோடு உடுத்துவதில் வெகுநேரம் மெனக்கெட்டு நீ விழியோரம் மைதீட்டி ஆவதென்ன?

தோழி விழித்துக்கொள்! விழித்துக்கொள்!

புத்த மார்க்கத்தினர் காலகாலமாய் விடுக்கிற அழைப்பு இது. அவர்கள் வீட்டுக் கூரைமீது இருந்துகொண்டு இப்படிக் கூவு கிறார்கள். எல்லாரும் அதைக் கேட்கிறார்கள், ஆனால் எவருமே அதைக் கூர்ந்து கவனிப்பதில்லை. எல்லாரும் அறிவார்கள். ஆனால் யாரும் அதைப் புரிந்து கொள்வதில்லை. அறிவு பலனற்றது, புரிந்து கொள்ளும் திறனே விடுவிக்கிறது. நீங்கள் கவனமாய் கேட்காவிடில் கேட்டல் பயனற்றது.

கேட்கும் திறன் உள்ள எல்லாருமே கேட்கிறார்கள், ஆனால், கவனமாய் கேட்பதென்பது முற்றிலும் வேறான விஷயம். தரம் சார்ந்த வேறுபாடு இருக்கிறது. உங்கள் செவிகளுக்கும் அதற்கும் சம்பந்தமில்லை. அது உங்கள் இதயத்தோடு தொடர்புடையது. கவனமாய் கேட்டல் என்பது உங்கள் செவிகளோடு இதயமும் சேர்ந்து கொள்வதால் நிகழ்வது. இதயம் காதுகளுடன் இணைந்து கொள்ளாவிடில் கேட்பது உங்களுக்கு உதவாது. அது உங்களுடைய அறிவை வளர்க்கும் அதிக அளவிற்கு. ஆனால் அதிகம் அறிந்திருப்பது உங்களுக்கும் உங்கள் பிரியத்திற்குகந்த விருக்கும் இடையே பல தடைகளை உண்டுபண்ணி விடும்.

அறிவு ஒருபோதும் பாலமாக முடியாது, அது எப்போதும் ஒரு சுவராகவே இருக்கும். அது உங்களைத் தொலைவில் இருக்கிற, வெகு அருகில் இருக்கிற பரம்பொருளிடம் இருந்து பிரித்து வைத்துவிடும். அது உங்களை இணைத்து வைக்காது. அன்பு மட்டுமே இணைக்கும் வேலையைச் செய்வது. ஆனால் அன்பு இதயத்திற்குரியது. அது மூளையோடு (புத்தி) தொடர்புடையதல்ல. அறிவுதான் மூளையில் சேர்கிறது, நினைவில் குவிகிறது. அகந்தை அதை அனுபவிக்கிறது.

புரிதலுக்கு மறுபெயர் அன்பு. அந்த அன்பு இதயத்தில் ஊற்றெடுப்பது. அன்புடைய கண்களே பார்க்கக்கூடும், அன்புடைய காதுகள்தான் கவனமாய் கேட்டிருக்கும்.

பிரபஞ்ச இருப்பு (வாழ்தல்) ஒரு பிரச்சினையல்ல, மூளை அதைத் தீர்த்துவிடும் என்பதற்கு. அது ஒன்றும் புதிரல்ல கற்பனை செய்யவும், கணக்கிடவும். அது ஒரு கீதம் பாடப்பட வேண்டியது.

அது ஒரு நடனம், ஆடிப்பார்க்க வேண்டியது. அது ஒரு காதல் விவகாரம்.

பிரபஞ்ச இருப்பு விளங்கிக்கொள்ள முடியாத பெரும் ரகசியம். அதை விளங்கிக்கொள்ள வழியேது. அது பிரச்சினையாய் இருந்தாலல்லவா தீர்வினைக் கண்டறிவதற்கு. அதற்குத் தீர்வு காண முடியாது. அது வாழ்ந்து பார்க்கப்பட வேண்டியது.

புத்தத் துறவிகள் 'விழித்துக் கொள்', 'விழித்துக் கொள்' என்கிறார்களே, அதன் பொருள் என்ன? உங்கள் இதயம் உறங்கிக் கொண்டிருப்பதையே அவ்வாறு குறிப்பிடுகிறார்கள். உங்கள் இதயம் விழித்துக் கொள்ளாதவரை நீங்கள் கனவு மட்டுமே காண்கிறீர்கள் – கனவுகள், கனவுகள், கனவுகளும் விழிப்படைவது, சமய நம்பிக்கை பெறுவது, துறவிகளாவது, புனிதம் பெறுவது பற்றிய கனவுகளாகவே இருக்கும்.

மக்கள் தெய்வ நம்பிக்கை பற்றி சிந்திக்கிறார்கள். அது ஒரு பொருந்தாத செய்கை. தங்கள் இறை நம்பிக்கையை விவாதங் களின் மூலம் அவர்கள் நிரூபித்துக் காட்ட முயல்கிறார்கள். இறை நம்பிக்கையை நிரூபிக்க முடியாது. காரணம் நிரூபிக்கக்கூடிய எதுவுமே மறுக்கக்கூடியதாகவும் இருக்கும் (தவறென்று நிரூ பித்தல்). இறை நம்பிக்கை தர்க்கத்தைச் சார்ந்திருப்பின் அப்போது தர்க்கமே இறை நம்பிக்கையாகும், அது இறை நம்பிக்கையைவிட மேலானதாகவும் கூடும். இல்லை. அது தர்க்கத்தைச் சார்ந் திருக்கவில்லை. நீங்கள் மிகவும் தர்க்கம் சார்ந்தவராயிருந்தால் பிரபஞ்சத்தில் கடவுளின் இருப்பை உங்களால் உணர முடியாது. இழப்பு உங்களுக்குத்தான். வாழ்வில் இறையுணர்வு பெறாதவர் வாழ்க்கையின் முக்கியக் கருத்தையே தவறவிடுகிறார்.

மனிதன் எண்ணங்களில், வாதங்களில், கொள்கைகளில், கோட்பாடுகளில் வாழ்கிறவன். நீங்கள் இறை நம்பிக்கை பற்றி நிறைய பேசுவதும் நிறைய படிப்பதும், நிறையவே விவாதிப்பதும் உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்கிற காரியமாகத்தான் இருக்கும். இந்த முறையில்தான் இலட்சோபலட்சம் பேர் தங்களைத் தாங்களே ஏமாற்றிக் கொண்டது.

மதகுருக்களுக்கான பயிற்சி நிலையத்தில் கடவுளைப் பற்றிய வேதாந்தம் பயில்கிற ஒருவன் பளபளக்கிற ஷூக்களும்,

வெள்ளை நிற கழுத்துப் பட்டையும், கறுப்பு நிற கோட்டும் அணிந்து நிலைக்கண்ணாடி முன் நின்றான். கண்ணாடியில் தெரிகிற தனது உருவத்தையே தியானப் பொருளாய்க் கொண்டு தியானித்தான். தான் கண்டறிந்ததில் திருப்தியுற்றவனாய், உலகிற்கான தனது சேவையை இனி செய்ய வேண்டியதில்லை என்று தீர்மானித்தான். கடவுளின் உத்தரவை தலையில் தாங்கியவனாய் நியூயார்க் நகரின் வடக்கு அவென்யூவிற்குச் சென்றான்.

தன்னுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொண்டு, காற்சட்டைப் பைகளில் கைகளை நுழைத்தபடி என்ன செய்வதென்று தெரியாமல் நின்றான். குடிகாரன் ஒருவன் எதிர்பட்டான். அவர்களுடைய கண்கள் சந்தித்துக் கொண்டன. குடிகாரன் கேட்டான், 'மகனே! கடவுளைப் பற்றி உனக்கு என்ன தெரியும்?' என்று.

அந்த இளைஞன் ஏதும் சொல்லத் தோன்றாதவனாய், தனது அறைக்குத் திரும்பினான். தன்னுடைய மதகுருவிற்கான அங்கியைக் கழற்றினான். தனக்குக் கடவுளைப் பற்றி என்ன தெரியும் என்று ஐயப்பட்டான். நீங்கள் பல்கலைக்கழகம் சென்று படிக்க முடியும், இறைமையியல் கல்லூரிகளில் மதக் கோட்பாடு பற்றிப் படித்து பட்டம் பெற முடியும். ஆயினும் இறையுணர்வு பற்றி அறிந்திருக்க மாட்டீர்கள். அது வழியல்ல - அது தடை.

இறையுணர்வு என்பது இதயத்தின் வழியே தெரிந்து கொள்ளப்படுவது. அதை உங்கள் இருப்புணர்வில் திளைக்க விடுங்கள். இறையுணர்வை இதயத்தின் மூலமே அறிய முடியும். அதனால்தான் புத்தத் துறவிகள் 'விழித்துக் கொள்' என்கிறபோது, உங்கள் இதயத்தை விழிக்கச் செய் என்பதைக் கருத்தில் கொள்கிறார்கள். இதயம் விழித்திருப்பதற்கு என்ன பொருள்? மூளை (அறிவு) விழிப்புற்ற நிலையில் அது சிந்திக்கும், நேர்த்தியான எண்ணங்களை நூற்கும் நெசவு செய்யும். விழித்திருக்கும் இதயமோ அன்பெனும் பாடலைப் பாடும். அது கொண்டாடும். இருத்தலில் உண்டாகும் மகிழ்ச்சியே கொண்டாடப் போதுமானது. அது நேசிக்கும் - குறிப்பாக இன்னாரென்று கருதாமல் நேசிக்கும். இதயம் விழித்திருக்கும் போது எல்லாப் பக்கங்களிலும் பாய்ந்தோடும். அது முழுமை நேசிக்கும் - அதுவே அன்பு.

தற்போது கபீர் அதைத்தான் உங்களுக்குத் தெரிவிக்கப் போகிறார். அவருடைய சூத்திரங்கள் மிகவும் நேர்த்தியானவை. ஒவ்வொரு சொல்லும் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. நான் சிந்தியுங்கள் என்று சொல்லவில்லை, 'ஆழச் சிந்தியுங்கள்' என்கிறேன். மவுனமாய், அசைவற்றிருங்கள். அவருடைய பாடலை உங்கள் இதயத்தில் மூழ்க விடுங்கள். அது உங்கள் இதயத்தைக் கிளர்ந் தெழச் செய்யட்டும், உங்களுக்குள் உறங்கிக் கொண்டிருக்கும் அன்பு, மகிழ்ச்சி, பேரின்பம் இவற்றின் ஆற்றல்களைத் தட்டி யெழுப்பட்டும்.

மதம் ஒரு கொண்டாட்டம். அது ஒன்றும் கோட்பாடல்ல, மனதில் பதிய வைப்பதற்கு. அது ஒரு கிறுக்குத்தனமான காதல் சமாசாரம்.

தோழி, விழித்துக்கொள், இன்னுமா தூக்கம்? இதயம் அறியாமையில் மூழ்கியிருக்கும் இந்த உறக்கத்தில், ஒட்டுமொத்த அறிவொளியை உங்கள் மூளையின் மீது குவித்தாலும், முடிவான உண்மைகளை உங்களுக்கு உரைத்தாலும் நீங்கள் அவற்றை தவறாகவே புரிந்து கொள்வீர்கள். ஒரு புத்தரே உங்களுக்கு விழிப்பூட்ட முயன்றாலும் அவரிடம் கோபப்படுவீர்கள். அவர் உங்களைத் தொல்லைப்படுத்துவதாகவே எண்ணிக் கொள்வீர்கள். அவர் உங்களுடைய கனவுகளுக்குத்தான் இடையூறு. ஆனால் கனவுகளில்தானே நீங்கள் அதிக முதலீடு செய்திருக்கிறீர்கள். அவர் ஒன்றைச் சொல்ல, நீங்கள் வேறாகப் புரிந்து கொள்வீர்கள். ஒன்று, உங்களுடைய தவறான ஊகங்களுக்கும், தேர்வுகளுக்கும் ஏற்ப கவனித்துக் கேட்பீர்கள் - தேர்ந்து கொள்வது என்றால் உங்களுக்குச் சாதகமான விஷயங்களை முடிவு செய்து கொள்வது - அல்லது அனாவசியமாய் உங்கள் தூக்கத்தைக் கலைத்தவர் மீது கடுங்கோபம் கொள்வீர்கள். அவருக்கு நஞ்சூட்டவும், அவரை அழித்துப் போடவும் தயங்க மாட்டீர்கள்.

உங்கள் உறக்கம் ஆழமானது. வெகு நீண்ட கால உறக்கம். உங்கள் இதயம் உறங்கிக் கொண்டிருந்தாலும் எப்படியோ உங்கள் வாழ்க்கையை நடத்துகிறீர்கள். நீங்கள் தூக்கத்தில் நடப்பவர் **(somnambulist)**. நிறைய பேர் தூக்கத்தில் நடக்கிறார்கள். குளிர் பதனப் பெட்டியைத் திறந்து, எதையாவது எடுத்துச் சாப்பிடு கிறார்கள். பிறகு தங்கள் படுக்கைக்குத் திரும்பி விடுவார்கள்.

எங்கேயும் தடுக்கி விழுவதில்லை. தாங்கள் எங்கிருக்கிறோம், என்ன செய்கிறோம் என்பது அவர்களுக்குத் தெரியாது. நீங்கள் இடையில் அவர்களை எழுப்பிக் கேட்டால் ஏதும் சொல்லத் தெரியாமல் விழிப்பார்கள்.

உறக்கத்தில் நடப்பவர்கள், கண்களைத் திறந்தபடிதான் நடக்கிறார்கள். ஆனால், அந்தக் கண்கள் உண்மையிலேயே திறந்திருக்காது. கொஞ்ச தூரம் அப்படி நடப்பார்கள். அந்தத் தூரமும், இடமும் அவர்களுக்கு முன்பே பழக்கமானது. அவர்களுடையது எந்திரகதியான இயக்கம், விழிப்புணர்வு தேவைப்படாது. உங்கள் வாழ்க்கையை மிகச்சரியாகக் கவனியுங்கள். ஆயிரத்தியோரு காரியங்கள் செய்கிறீர்கள். ஆனால் ஒரு 'ரோபோ' (Robot)வைப் போல் செய்து கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் ரோபோவிடம் எதையாவது பேசினால் விஷயம் சரியாகப் போய்ச்சேராது. அது தவறாகவே புரிந்து கொள்ளும்.

இரண்டு ஜோன்ஸ் (Jones) சகோதரர்கள். அதில் ஜான் ஜோன்ஸிற்குக் கல்யாணமாகியிருந்தது. ஜிம் ஓர் அரதப்பழசான படகு வைத்திருந்தான். அது துடுப்பு கொண்டு செலுத்துகிற படகு (row boat). ஜிம்மின் படகு நீரில் மூழ்கிய அதே நாளில் ஜானின் மனைவி செத்துப் போனாள். சில நாட்களுக்குப் பிறகு ஜிம்மை தெருவில் பார்த்த முதியவள் ஒருத்தி – அவனை ஜான் என்று தவறாகக் கருதிக்கொண்டு, 'என்ன ஜோன்ஸ், உனக்கு ஏற்பட்ட பேரிழப்பைப் பற்றிக் கேள்விப்பட்டேன். பாவம், உன்னுடைய இதயமே உடைந்து போயிருக்கும்' என்றாள்.

ஜிம் சொன்னான், 'எனக்குச் சிறிதளவும் வருத்தமில்லை. அவள் (படகு பெண்பால்) தொடக்கத்திலேயே ரொம்பச் சீர்கெட்டிருந்தவள். அவளுடைய அடிப்பாகம் மென்று தீர்த்த சக்கை, அவள் செத்த மீனைப் போல் நாற்றமெடுத்தவள். பின்னாடி ஒரு மோசமான பிளவு, முன்னாடி ஒரு மோசமான துளை. நான் அவளைப் பயன்படுத்தறப்போல்லாம் ஒரே கசிவு. நான் எப்படியோ பயன்படுத்திட்டிருந்தேன். ஆனா, வேறு யாராச்சும் கையாண்டிருந்தால் துண்டு துண்டா போயிருப்பா. நல்லது, அவ கதை எப்படி முடிஞ்சது தெரியுமா. நகரத்திலிருந்து நாலு பசங்க ஜாலியா பொழுது போக்கணும்னு வந்து, வாடகைக்கு வேணும்னு

கேட்டாங்க. அவங்க முட்டாள்கள். ஒட்டுக்க நாலு பேரும் உள்ளே போகவும், அவள் நடுவில் அப்படியே பிளந்து போயிட்டா' என்று.

அவன் சொல்லி முடிக்கவில்லை, அந்த முதியவள் மயக்கம் போட்டு விழுந்து விட்டாள்.

சமயத்தில் இப்படித்தான் ஆகிவிடுகிறது. ஒன்று சொல்லப் போய் அது வேறொன்றாய் புரிந்துகொள்ளப்பட்டு விடும். கருத்துகளைப் பகிர்ந்து கொள்வது கடினம். சாதாரணப் பேச்சுகூட கடின காரியமாகி விடும். அதிலும் கபீரைப் போன்ற ஒருவர் பேசினால் சாத்தியமே இல்லை. காரணம் அவர், ஒளி விடும் இமாலயச் சிகரங்களில் இருந்து பேசிக் கொண்டிருப்பார். நீங்கள் இருண்ட பள்ளத்தாக்கின் ஏதோ ஒரு குழியில் இருந்தபடி அதைக் கேட்டுக் கொண்டிருப்பீர்கள். அது உங்களை வந்தடைகிறபோது அதனுடைய தன்மையும், தரமும் மாறிவிட்டிருக்கும். அதன் பொருள் (meaning) அப்படியே இருக்காது.

அத்துடன் உங்களுடைய நிலைகளுக்கேற்பவே அதை நீங்கள் விளங்கிக் கொள்வீர்கள். உங்கள் கடந்த காலத்திற்கேற்ப அதை அர்த்தப்படுத்திக் கொள்வீர்கள். ஆக, நீங்கள் கேட்பீர்கள், ஆனால் கவனமாய் கேட்க மாட்டீர்கள். எப்படிக் கவனமாய் கேட்பது என்பதை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். கவனமாய் கேட்பது என்பது மவுனமாய், விவரம் பண்ணாமல், தீர்ப்பு செய்யாமல், மதிப்பீடு செய்ய முனையாமல் ஆதரவோ எதிர்ப்போ காட்டாமல் - அப்படியே இருந்து கேட்பது.

கபீரின் வார்த்தைகளை கவனமாய்க் கேளுங்கள். அவர் சொல்கிறபோதே அவர் சரியானவரா தவறானவரா என்று அவசரப்பட்டு தீர்மானித்து விடாதீர்கள். கவனித்துக் கேட்டலின் அழகே, அவர் சரியாகச் சொல்வதை அப்படியே நீங்கள் சரியாக எடுத்துக் கொள்வதுதான். அவர் உண்மையானவர் என்றால், உண்மைக்கு நிரூபணம் தேவைப்படாது. உங்களுக்குத் தலையை வலித்தால் எப்படித்தெரிந்து கொள்கிறீர்களோ அப்படியே அதையும் கண்டிப்பாய் தெரிந்து கொள்வீர்கள் - யாரும் உங்களுக்கு நிரூபிக்க வேண்டிய அவசியமில்லை.

கிரேக்கத்தில் உள்ள அத்தனை யானைகளையும் வெளி யேற்றும்படி உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. கடைசி யானையின்

பின்னே ஒரு சுண்டெலி இருந்தது. யானை திரும்பிப் பார்த்தது. 'நண்பனே, எதற்காக ஓடுகிறாய்?' என்று கேட்டது.

'தீர்ப்பாணை பற்றி உனக்குத் தெரியாதா?' என்றது சுண்டெலி.

'அது சரி. ஆனால் நீ ஒரு சுண்டெலியாச்சே' என்றது யானை

'ஆமாம்' சுண்டெலி பெருமூச்சு விட்டது. 'ஆனால் என்னை ஒரு யானை என்று அவர்கள் சொல்கிறபோது நான் இல்லை என்று எப்படி நிரூபிப்பதாம்?'

நிரூபிப்பது கடினம். ஆனால் நிரூபணம் தேவைப்படாத சங்கதிகளும் இருக்கின்றன. தான் ஒரு சுண்டெலி என்பது சுண்டெலிக்குத் தெரியும். நிரூபிப்பது கடினம். நீங்கள் கவனித்துக் கேட்டது உண்மையென்றாலும், அதை உண்மையென்று நிரூபிப்ப தில் உங்களுக்குச் சிரமம் இருக்கும். ஆனால் உங்களுக்குத் தெரியும். உண்மை என்பதை உள்ளாக உணர்ந்திருப்பீர்கள். ஆனால் அந்த உணர்வு போதாது. காரணம் அந்த உணர்வு உங்களை வேறோர் உலகிற்குக் கொண்டு போவது. அது உண்மையா பொய்யா என்று நீங்கள் தீர்மானிப்பதல்ல பிரச்சினை. நீங்கள் தீர்மானித்தால் மொத்தக் கருத்தையும் தவற விடுவீர்கள். எப்படித் தீர்மானிப்பீர்கள்? உங்கள் கடந்த காலத்தின் அடிப்படையில்தானே? மேலும், உண்மை எதுவென்று நீங்கள் அறிய மாட்டீர்கள். புத்த மார்க்கத்தில் உள்ளவரின் போதனை உங்களுக்கு அவசியமில்லை என்று நீங்கள் நினைத்தால் நீங்களே ஒரு புத்தராகி விடுவீர்கள். எது உண்மை என்பது பற்றிய கருத்து உங்கள் கடந்த காலத்திற்கு இருப்பதற்கில்லை. காரணம் உங்களுக்கே அது தெரியாது. அப்படியிருக்க உங்கள் கடந்த காலத்தால் எப்படித் தீர்மானிக்க முடியும்? கடந்த காலத்தை ஒருபுறம் ஒதுக்கி வைத்துவிட்டு கவனமாய் கேளுங்கள்.

உண்மையின் அழகே அது உங்களை வந்தடைகிற பொழுது உங்கள் இதயம் மகிழ்ச்சியாய் துள்ளுவதில் இருக்கிறது. உண்மை உங்கள் இதயத்துடன் ஒத்திசைவாகி விடுகிறது. அதே சீர்த்தன்மையை அது பெற்றிருக்கும். திடீரென்று இதயம் கூத்தாடும். அந்தக் கூத்தாட்டத்தில் இருக்கிறது நிரூபணம். அது உண்மையல்லவென்றால் உங்கள் இதயம் நடனமாடாது. அப்போது நீங்கள் புரிந்து கொள்ளலாம் அது பொய்யென்பதை. ஆனால், அது

ஒன்றும் தர்க்கம் சார்ந்த முடிவு அல்ல, தர்க்கம் சார்ந்த மதிப்பாய்வு. ஆழ்ந்த சிந்தனையுடன் இந்த வார்த்தைகளைக் கவனமாய்க் கேளுங்கள். 'நண்பா, விழித்தெழு!'

கபீர் உங்களை 'நண்பனே!' என்று அழைக்கிறார். அப்படித் தான் புத்தத்துறவிகளும் உணர்கிறார்கள். சீடன் (மாணவன்) சிந்திக்கிறான், 'புத்தர், கிருஷ்ணர், கிறிஸ்து அல்லது கபீர் எல்லாம் குருமார்கள், நாம் சீடர்கள்' என்று. சீடர்களின் தரப்பு அப்படி யென்றால், குருவின் தரப்பில் அது எப்படி இருக்கும்?

குருவிற்கு தெரியும், குருவென்றோ சீடனென்றோ யாரும் இல்லை என்பது. அவர் அறிந்தவரை அது தோழமை உணர் வுடைய ஒரு கூட்டம். குரு ஒன்றும் உங்களைவிட புனிதத்தன்மை கொண்டவரல்லர். தான் மேம்பட்டவர் என்கிற உணர்வு அவருக்குக் கிடையாது. அவர் யாராகவும் இல்லை. குரு சாதாரண மானவர். அவருடைய சாதாரணத் தன்மையே அவரைச் சுடர்விட்டுப் பிரகாசிக்கச் செய்கிறது. ஒட்டுமொத்த இருப்பும் ஒன்று சாதாரணமாகவோ அல்லது குறிப்பிடத்தக்கதாகவோ இருக்கிறது. ஆனால், குருவைப் பொறுத்தவரை எல்லாமே இணையற்றவை தாம்.

ஒரு சீடன் வந்து குருவை நிலந்தோய வணங்குகிறான் - குருவும் தமக்குள் சீடனை வணங்கிக் கொள்கிறார். அவர் குனிந்து வணங்குவது கண்ணுக்குத் தெரியாமல் இருக்கலாம். காரணம், குருவும் அவருடைய அங்க அசைவுகளும் பார்வைக்கு அகப்படுவதில்லை. சீடன் மெல்ல மெல்ல மறைபொருளாய் இருப்பதைக் கண்டறிகிறான், குறி வடிவிலிருப்பதை மெல்ல மெல்ல மொழி வடிவிலாக்குகிறான். குரு தன்னை நேசிப்பதை தன்னை நண்பனாகக் கருதித் தன்னிடம் பிரியம் வைத்திருப்பதை அவன் மெதுவாகத்தான் புரிந்து கொள்கிறான்.

> **'நண்பனே, எழுந்து கொள்! ஏன் இப்படித் தூங்குகிறாய்? இரவு முடிந்துவிட்டது. நீ அவ்வாறே பகலையும் இழக்கப் போகிறாயா?'**

இது ஒரு புதுமையான விளக்கவுரை.

வாழ்க்கை இரவாகவும், மரணம் பகலாகவும் இருக்கிறது. வாழ்க்கையில் மனிதர்கள் உறங்கியபடி இருக்கிறார்கள், மரணமே

அவர்களை விழித்தெழச் செய்கிறது. சாதாரண சிந்தனையில் வாழ்க்கை வாழ்க்கையாகவும் மரணம் வாழ்க்கையின் முடிவாகவும் தெரியும். புத்த மார்க்கத்தில் உள்ளவர்களுக்கோ (விழிப்புணர்ச்சி கொண்டவர்கள்) வாழ்க்கையை விடவும் மரணம் மதிப்பு மிக்கதாயிருக்கும். அவர்களைப் பொறுத்தவரை மரணம் தனிச்சிறப்பு வாய்ந்தது, மதிப்புமிக்கது, அனைத்திலும் மேம்பட்டது. காரணம் அதுவே வாழ்க்கையின் உச்சகட்ட முன்னேற்றம், நிறைவான மலர்ச்சி. வாழ்க்கை இரவென்றால், மரணம் காலைப்பொழுது.

கபீர் சொல்கிறார்:

'இரவு முடிந்துவிட்டது...' நீங்கள் வயதேறிப்போக, காலம் நழுவிக் கொண்டிருக்கிறது. ஒவ்வொரு கணத்திலும் மரணம் மேலும் மேலும் நெருங்கிக் கொண்டிருக்கிறது.

> **'இரவு முடிந்து விட்டது – அதேபோன்று பகலையும் இழக்க விரும்புகிறாயா?'**

அது இரவு நேரம். நீங்கள் உறங்கி விட்டீர்கள். இரவில் உங்களால் எழுந்துகொள்ள முடியாது. அதை மன்னிக்க முடியும். ஆனால், மரணம் நெருங்கி வருகிறபொழுதும் – விழிப்படையாதவரை மன்னிப்பதற்கில்லை. மரணத்தாலும் உங்களை விழிப்படையச் செய்ய முடியாது என்றால், வேறு எதுதான் உங்களை விழிப்படையச் செய்யும்? மரணத்தின்போது விழிப்புடன் இருப்பவருக்கு மறுபிறவி இல்லை.

ஆனால், மரணத்தின் போது விழிப்புடன் இருப்பது, வாழ்கிறபோது விழிப்புடன் இருக்க முயன்றவர்க்கே சாத்தியம். தன்னுடைய வாழ்க்கை நெடுகிலும் தன் இருப்புணர்வில் ஒரு மையத்தைக் கண்டறிய அவர் இடையறாது முயன்றிருக்க வேண்டும். அது 'நான் யார்?' என்பதை அறிகிற முயற்சி. அப்போதுதான் மரணம் வருகிறபோது அது சாத்தியப்படும். மரணம் பேரதிர்ச்சியை உண்டுபண்ணுவது. நீங்கள் பற்றியிருந்த அனைத்தையும் அது தட்டிப் பறித்துக் கொண்டு விடும். அது உங்கள் உடைமைகளை உங்களிடமிருந்து பிடுங்கிக் கொள்ளும். அது உங்களை ஏதுமற்றவராய் தனியே நிற்கச் செய்துவிடும். மரணத்தால் உங்களுக்கு விழிப்பூட்ட முடியவில்லை என்றால்

நீங்கள் இருப்பது உறக்கத்தில் அல்ல, ஆழ்மயக்க நிலை (coma)யில்.

தினமும் இலட்சோபலட்சம் பேர் இறக்கிறார்கள். அவர்கள் இருளில் கிடந்து, இருளிலேயே மடிகிறார்கள். கனவில் வாழ்ந்து கனவிலேயே முடிகிறார்கள். அவர்களுடைய வாழ்வும், மரணமும் அறிவற்ற முறையிலேயே நடந்து விடுகிறது. அத்தனை வாய்ப்பு களையும் அவர்கள் இழந்து விடுகிறார்கள். மூன்று மிகப்பெரிய வாய்ப்புகளைக் கொண்டது வாழ்க்கை. முதலாவது பிறப்பு. அதை அறிவார்ந்த முறையில் பயன்படுத்திக் கொள்பவர்கள் வெகு அரிது. லாவோட்சு மாதிரி ஒருத்தர்.

தம்முடைய தாயின் கர்ப்பத்தில் லாவோட்சு எண்பத்தியிரண்டு வருஷம் இருந்ததாகக் கூறப்படுகிறது. தற்போது அது பொருளற்ற தாய் தெரியலாம். ஆனால், அதில் ஏதோ ஓர் உண்மை இருக்கவே செய்யும். அது உண்மை சார்ந்த ஒன்றல்ல, அதில் வரை யறுக்கப்படாத உண்மை இருக்கும். மேற்கத்திய சிந்தனைக்கும் கிழக்கத்திய சிந்தனைக்கும் அதுதான் வேறுபாடு. அந்தக் கதையை மேற்கத்திய அறிவாளியிடம் சொன்னால் அவர் சொல்வார், 'அப்படியிருப்பதற்கில்லை. ஒரு மனிதன் எப்படி தன் தாயின் கர்ப்பத்தில் எண்பத்தியிரண்டு ஆண்டுகள் இருக்க முடியும்? அந்தத் தாயின் கதி என்னவாகும்? எண்பத்தியிரண்டு ஆண்டுகள்? இதை நம்புவதற்கில்லை. இது வரலாறோடு தொடர்புடையதாயிருக்க முடியாது.

மேற்கத்திய அறிவு அந்த நிகழ்வின் உண்மைத் தன்மை பற்றி உடனடியாய் கேட்கும் - ஆனால், அது ஒரு நீதிக்கதை. தகவல்களைக் கொண்டதல்ல, உண்மையுடன் தொடர்புடையது. உண்மையை நீதிக்கதைகள் மூலம்தானே வெளிப்படுத்த முடியும். உண்மையை வெளிக்கொணர வேறு வழியில்லை. உருவகங்கள் மூலமாகவும், கவிதை மூலமாகவும் கூறக்கூடிய உண்மையை வரலாற்றின் வழியே கூற முடியாது. அது கவிதை, கலப்படமற்ற தூய கவிதை, மிகப்பெரிய சக்தி கொண்டது.

லாவோட்சு தமது முந்தைய பிறவிகளில் இருந்தே கூரிய அறிவைக் கொண்டு வந்திருக்க வேண்டும். பகுத்தறிந்து செயல்படுகிற நுட்பம் இருந்தது அவரிடம். ஏதோ ஒரு சிறிது

தவறியிருக்கலாம், ஒட்டகச் சுமையில் குறைந்துபோன ஒற்றை வைக்கோலைப் போல. அவர் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார். முதல் வாய்ப்பு பிறப்பு. இறப்பைப் போலவே அதுவும் முக்கியமானது. ஒரு வழியில் பார்த்தால் அதுகூட இறப்பு போலத்தான். குழந்தை தன் தாயின் கர்ப்பப் பையில் வாழ்வது ஒருவகை வாழ்க்கை. அதன்பிறகு சற்றும் எதிர்பாராத விதமாய் அது வெளித்தள்ளப்படுகிறது. ஒன்பது மாத காலம் அமைதியாகவும், நிம்மதியாகவும் தனது வீட்டில் அவன் வாழ்ந்திருந்தான். அதுநாள் வரை எவ்விதக் கவலையுமின்றி, எந்தவொரு பொறுப்பும் இல்லாமல் அவன் இருக்க முடிந்தது. அவன் கருவறையை விட்டு வெளியேற விருப்பமில்லாமல் அதையே பற்றிக் கொண்டிருப்பான். அங்கிருந்து வெளியேறுவது அவனைப் பொறுத்தவரை மரணமே. காரணம், அடுத்து என்ன நடக்கும் என்பது அவனுக்கு எப்படித் தெரியும்? ஒன்றுமட்டும் நிச்சயம். அவனுடைய வீடு உடைந்து நொறுங்கிவிட்டது. தனது சவுகரியங்களை பாதுகாப்பை இழந்து அவன் வெளியேறுகிறான். தான் இறந்து கொண்டிருப்பதாய் அவன் அறிகிறான். குழந்தையின் தன்னுணர்வில் பிறப்பு ஒரு சாவைப்போல் பிரவேசிக்கிறது. அவன் இறந்து மீண்டும் பிறக்கிறான்.

லாவோட்சு தம்முடைய முதல் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டார். அதே நிகழ்வுதான் ஜராதுஷ்ட்ரரின் வாழ்விலும். மற்றொரு அருமையான கதை.

மனித வரலாற்றிலேயே பிறக்கும்போதே சிரித்தபடி பிறந்த குழந்தை ஜராதுஷ்ட்ரர் என்கிறார்கள். குழந்தைகள் அழுதபடி பிறக்கும், சிரிப்பதில்லை. ஜராதுஷ்ட்ரரோ சிரித்துக்கொண்டிருந்தார். அவருடைய தாய்க்கு அதிர்ச்சியாயிருந்திருக்கும்... உண்மையில், சிரிப்பென்றால் வயிறு குலுங்குகிற சிரிப்பு. தம்முடைய முதல் வாய்ப்பை அவர் பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். முதல் வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டதற்காகவே அந்த இரண்டு பெயர்களும் அறியப்படுகின்றன.

வாழ்வில் இரண்டாவது வாய்ப்பு அன்பு. அன்பின் வழியே விழிப்படைந்தவர்கள் ஒருசிலர்தான். முதலாவது அல்லது மூன்றாவது வாய்ப்பை விட இரண்டாவது வாய்ப்பு நிறைய

பேருக்குக் கிடைத்தது. அன்பு உங்கள் இதயத்திற்கு ஓரளவேனும் விழிப்புணர்வைக் கொடுக்கக் கூடும். பிறப்பும் இறப்பும் கிட்டத் தட்ட சுயநினைவற்றிருக்கும் நிலை என்பதை நாம் கருத்தில் கொள்ள வேண்டும்.

எனவேதான் அன்பை நான் வற்புறுத்துகிறேன். கபீரும் அவ்வாறே வற்புறுத்துகிறார். காரணம், மிகப்பலரும் அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி விழிப்படைய முடியும் என்பதற் காகத்தான். நீங்கள் அன்பு செய்வதாயின் உங்கள் அகந்தையை விடவேண்டியிருக்கும். அது மரணம், அகந்தையின் மரணம். நீங்கள் நேசிப்பதாயின் அன்பில் எப்படிக் கரைந்து, கலந்து, காணாமல் போவது என்பதைக் கற்றிருக்க வேண்டும். தர்க்கம், கணக்கு இவற்றைவிடவும் கூடுதலாய் தேவைப்படுகிற வாழ்க்கை இது. நீங்கள் நேசிப்பதாயின் இதனைப் புரிந்து கொண்டிருக்க வேண்டும். பணம், உடைமைகள், அதிகாரம் இவற்றை விடவும் அதிகமாய் இந்த வாழ்க்கைக்குத் தேவைப்படும்.

நீங்கள் நேசித்தால், கடவுளின் அருட்காட்சியைக் கண நேரமேனும் பெறுவீர்கள். அன்பில் மூழ்கி அதன் ஆழத்துக்குச் சென்றால் வாழ்தல் என்னும் ஆலயத்துக்குள் பிரவேசிப்பீர்கள். அது இரண்டாவது வாய்ப்பு. சமூகம் அதை அழித்துவிட்டது.

முதல் வாய்ப்பு அரிதானது. அடுத்த வாய்ப்பு கிட்டத்தட்ட எல்லாருக்குமே வழங்கப்படுவது. ஆனால், சமூகம் அதை அழியப் பண்ணுகிறது. உங்கள் அன்பு களங்கப்பட்டு, தூய்மை இழக்கிறது. நீங்கள் அன்பிற்குப் பதிலாக அச்சத்தை ஊட்டி வளர்க்கப்படு கிறீர்கள். பிரபஞ்ச இருப்பே உங்களுக்குப் பகை, உங்களுடைய நட்பல்ல என்கிற எண்ணம் உங்களுக்குள் வளர்க்கப்படுகிறது. உங்களால் எப்படி அன்பு செய்ய முடியும்? அன்பை சாத்திய மற்றதாக்கி விடுகிறது சமூகம்.

மக்களின் வாழ்க்கையில் மிகப்பெரிய மாறுதலை ஏற்படுத்தக் கூடிய சாத்தியம் சமூகத்தால் அழிக்கப்படுகிறது. அன்பைக் கண்டு அஞ்சுகிறது சமூகம். வேறு எதைக் கண்டும் அத்தனை அச்சம் கொள்ளவில்லை அது. அன்பு மக்களை விழிப்படையச் செய்யும், மக்களின் இதயங்களை அன்பு கிளர்ந்தெழச் செய்துவிடும். அந்நிலையில் மக்கள் மூளையிடத்தில் கவனம் செலுத்தாமல்,

இதயத்தின் வழியே வாழத் தொடங்கி விடுவார்கள். அவர்கள் மூளையின்பால் கவனம் வைக்காவிட்டால் சமூகம் இழப்பிற்குள்ளாகும். இதயத்தைக் கொண்டு வாழ்கிறவர்களை அதிகாரம் பண்ண முடியாதே. அறிவாளிகளைத் தாழ்வுறச் செய்து அடிமைகளாக்க முடியும். ஆனால் இதயம் எப்போதுமே அரசனாய், தலைவனாய் இருந்து கொண்டிருக்கும்.

மூன்றாவது வாய்ப்பு மரணம். நீங்கள் பிறப்பை, அன்பைத் தவறவிட்டாலும் மரணத்தைத் தவற விட்டு விடாதீர்கள். குறைந்த பட்சம் மூன்றாம் வாய்ப்பைத் தவறவிடவே கூடாது.

கபீர் சொல்கிறார்:

> **'இரவு முடிந்து விட்டது, பகலையும் அதுபோல் இழக்கப் போகிறாயா? முன்பே விழித்துக் கொண்ட மற்ற பெண்கள் யானை அல்லது ஆபரணத்தைக் கண்டார்கள். இதுவரை உறங்கிக் கிடந்ததால் இழந்தது மிகப் பலவாம்...'**

அதிமுக்கியத்துவம் வாய்ந்த ஒன்று நினைவில் கொள்ளப்பட வேண்டியது. காரணம், கபீர் அதனைத் திரும்பத் திரும்பச் சொல்கிறார். அவர் சாதகனைப் பெண்ணாக்குகிறார். என்னுடைய முயற்சியும் அத்தகையதே. என்னுடைய சந்நியாசிகளிடம் நான் தொடர்ந்து கூறிக் கொண்டிருக்கிறேன், 'பெண்ணியல்பு கொண்டவராயிருங்கள்' என்று. காரணம் பெண்ணியல்பு கொள்வதென்பது ஏற்புடைமை, வெளிப்படைத்தன்மை, நேசித்தல் இவற்றைக் குறிப்பதாகும். பெண்ணியல்பு வலுச்சண்டைக்குப் போகாது. சண்டைக்குணம் உதவாது. இறையுணர்வு என்கிற கோட்டையின் மீது நீங்கள் தாக்குதல் தொடுக்க முடியாது. உங்களால் பணிந்துவிட முடியும், நீங்கள் தாக்கக்கூடாது. இறையுணர்வு உங்களுக்குள் பிரவேசிக்க இடமளியுங்கள். உங்கள் கண்முன்னே இருக்கும் ஒரே வழி அதுதான்.

கபீர் சொல்கிறார்:

மற்ற பெண்கள்... நீங்கள் வியப்படையக் கூடும், அவர் எதற்காகப் பெண்களைப் பற்றிப் பேசுகிறார்?

'முன்பே விழித்துக்கொண்ட மற்ற பெண்கள் யானை அல்லது ஆபரணத்தைக் கண்டார்கள்...'

அவர் சொல்கிறார்: சாத்தியமற்ற ஒன்று நிகழ்ந்தது என்று - வாழ்க்கையை அர்த்தமுடையதாக்குகிற ஒன்றை அவர்கள் கண்டு கொண்டார்கள். வானவில்லின் வண்ணங்களை வழங்கக்கூடியது அது. ஒரு மயிலின் நடனத்தை, குயில் வகைப் பறவை (cuckoo)யின் கீதத்தை அது வழங்கக்கூடும்.

'வழக்கத்திற்கு முன்பாகவே விழித்துக்கொண்ட மற்ற பெண்கள்...'

கவுதம புத்தர், இயேசு, மகாவீரர் - இவர்களே அந்த மற்ற பெண்கள். அது ஒன்றும் உள்ளத்தைப் புண்படுத்தாதுதானே.

ஃப்ரடெரிக் நீட்சே பெண்ணியல்பு கொண்ட புத்தரையும், இயேசுவையும் கண்டனம் செய்கிறார். அவருடைய அகநோக்கு (மனதால் அறியும் திறன்) வேண்டுமானால் சரியாக இருக்கலாம். ஆனால் அவர் அதனை குறை காண்பதற்கும், வெறுப்பைத் தெரிவிப்பதற்கும் பயன்படுத்துகிறார். ஆணுக்குரிய ஆற்றலை வெளிப்படுத்துவதே அழகு என்பது அவருடைய கருத்து. பெண்ணியல்பான மென்மையை, பணி ஒழுங்கைக் கொண்டிருப்பது ஆணுக்கு அழகல்ல என்றும் அவர் கருதுகிறார். அவரைப் பொறுத்தவரை தாக்குதலுக்கு தயாராக இருக்கும் வீரனின் துணிவு கொண்டவரே தகுதியான நபராவார்.

அவர் சொல்கிறார், 'சூரியன் ஒளிவீசிக் கொண்டிருக்க, தங்கள் காலணிகள் பேரொலி எழுப்ப, துப்பாக்கிகள் பளபளக்க அணி வகுத்துச் செல்லும் படையை நான் கண்டேன். அதுவே என் வாழ்வின் நேர்த்தியான அனுபவமாகும்' என்று. அவர் சூரியோதயத்தையோ அல்லது சூரிய அஸ்தமனத்தையோ அல்லது நட்சத்திரங்கள் கண் சிமிட்டும் இரவையோ ஒரு ரோஜாவையோ அல்லது அழகான பெண்ணொருத்தியையோ பற்றிக் கூறவில்லை. படை வீரர்கள் போடும் வீறு நடை, அவர்களுடைய காலணிகள் எழுப்பும் பேரொலி, சூரிய ஒளியில் பளபளக்கும் துப்பாக்கிகள் பற்றியே பேசுகிறார். அவர் அடால்ஃப் ஹிட்லர் பின்பற்ற ஒரு தத்துவப் பின்புலத்தை உருவாக்கினார் என்பதும் உண்மை. கார்ல் மார்க்ஸ் பொதுவுடைமைக் கொள்கையை நீட்சே தெரிந்தோ தெரியாமலோ பாசிசச் கொள்கையை உருவாக்கினார். உண்மையில் அவர் புத்தருக்கெதிரான கிறிஸ்துவிற்கு எதிரான

ஒருவர். காரணம், புத்தர் சொல்கிறார், 'அன்பு இறையுணர்வு கொண்டது. யாரேனும் உன்னை ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் காட்டு' என்று. மேலும் கிறிஸ்து கூறுகிறார். 'உன் பகைவனையும் உன்னைப்போல் நேசிப்பாய்' என்று. அத்துடன் புத்தர் தொடர்ந்து கூறிவந்த ஒன்று. 'இதயத்தில் வேரூன்றியவராய் இருங்கள். மூளையை (அறிவை) மறந்து விடுங்கள். உங்கள் இருப்புணர்வின் மையத்துக்குச் செல்லுங்கள். மூளை புறவெல்லை யில் இருப்பது.' புத்தரின் சிலையைப் பார்த்தால் தெரியும். பெண் மையின் இயல்பும், அழகும் அவருடைய முகத்தில் மிளிர்வது.

என்னுடைய ஒவ்வொரு சந்நியாசிகளிடமும் நான் கூறுகிறேன், 'பெண்ணோ ஆணோ அது முக்கியமில்லை - ஒருவர் ஆன்மா சார்ந்த விதத்தில் பெண்ணியல்பு கொண்டவராயிருக்க வேண்டும். அப்போதுதான் கடவுளின் இயல்பைப் பெற முடியும்' என்று. நீங்கள் வரவேற்று உபசரிப்பவராயிருங்கள், அப்போதுதான் விருந்தாளி உங்களிடம் வருவார்.

ஆனால், காலகாலமாகவே ஒரு கூட்டம் அதற்கு மாறான தையே சொல்லி வந்திருக்கிறது. அது உங்களை வலுச்சண்டைக் காரராக, வன்முறையில் ஈடுபடுகிறவராக, போட்டி மனப்பான்மை கொண்டவராக மாற்றி வைத்திருக்கிறது. பெண் விடுதலை இயக்கம் பெண்களிடம் உள்ள மென்மையை - நளினத்தை சர்வநாசம் பண்ணிவிட்டது. பெண் விடுதலை இயக்கம் என்பது உண்மையில் ஓர் இயக்கமல்ல. அது நேர் எதிரிடையானது. அது ஆணின் நடை உடை பாவனைகளை அப்படியே பின்பற்ற முயற்சி செய்வது. ஆணைப்போலவே பெண்ணும் கடினத்தன்மை உடையவளாக வேண்டும். ஆண் எதைச் செய்தாலும் அந்தப் பெண்ணும் செய்ய வேண்டும் என்பது.

ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். ஆண்களை அப்படியே பெண்களும் பின்பற்றினால் அவர்கள் அசலாக இருக்க மாட்டார்கள். நகலாகி விடுவார்கள் என்பதை. முழுமையான ஆற்றலை அவர்கள் பெறுவதற்கில்லை. எப்போதும் அவர்கள் பின்தங்கியே இருப்பார்கள். உண்மையான பெண்ணியக்கம் இன்னமும் தொடங்கியபாடில்லை. உண்மையான விடுதலை இயக்கம், 'நீ பெண்மையை இன்னும் அதிகரித்துக் கொள்' என்றே வற்புறுத்துவதாய் இருக்கும். பெண் தன்னுடைய இயல்பில்

வேருன்றி இருக்க வேண்டும். அவள் பழிக்குப் பழி வாங்குவது, பதிலடி கொடுப்பது, கலகம் பண்ணுவது இவற்றில் ஆணைப் பின்பற்றக்கூடாது.

பெண் என்பவள் பெண்ணாக இருக்க வேண்டும். அதுமட்டுமல்ல, ஆணிடத்திலும் பெண்ணியல்பைக் கொண்டுவர அவள் முயல வேண்டும். பெண்ணுக்கு எப்படி ஆணிடம் இருந்து விடுதலை பெறுவது அவசியமோ அப்படி மனிதர்களிடம் இருந்து ஆண் விடுதலை பெறுவதும் அவசியம். ஆண் விடுதலை இயக்கமும் தேவைப்படுகிறது. அவன் பெண்ணிடம் இருந்து மட்டு மல்ல, காலகாலமாய் அவனுக்குக் கற்பிக்கப்பட்ட முட்டாள்தனங் களில் இருந்தும் அவன் விடுதலை பெறவேண்டும். கடின மாயிருங்கள், உறுதியாயிருங்கள், வளைந்து கொடுக்காதீர்கள். உடைந்தாலும் வளைந்து கொடுக்காதீர்கள்.

தற்போது பெண்கள் அதே நடனத்தைப் பின்பற்றிச் செல் கிறார்கள். அது ஓர் ஆபத்தான சூழ்நிலை. பெண்ணும் ஆணைப் பின்பற்றுகிறபோது அவள் இரண்டாந்தர குடிமகனாகி விடுகிறாள். அவள் ஒருபோதும் ஆணுக்குச் சமதையாகி விடுவதில்லை.

அதுமட்டுமல்ல, அவள் ஆணைப் பின்புற்றினால் அவனைப் போல் கரடுமுரடாகி விடுவாள். அவள் நளினத்தை இழந்து விடுவாள். அவளுடைய முகம் மென்மையற்று, கடினத்தன்மை கொண்டு விடும். நேசம் காட்டுவதற்கு பதிலாகக் கோபத்தை வெளிப்படுத்துவாள். அது மனித இனத்தின் முடிவுக்கு வழிவகுப்ப தாகி விடும்.

பெண்மைக்குரிய இயல்புகள் நிலைபெறுவதில் தான் மனித இனத்தின் நம்பிக்கை இருக்கிறது. அந்த நம்பிக்கை பிரடெரிக் நீட்சே, அடால்ஃப் ஹிட்லர், பெனிட்டோ முசோலினி இவர்களின் பாற்பட்டதல்ல. புத்தரிடமும் சைதன்யரிடமும் மீராவிடமும் - அத்தகைய முற்றிலும் மாறுபட்ட மக்களிடம் அது நம்பிக்கை கொண்டிருக்கிறது. பெண்மைக்குரிய நேசிக்கும் தன்மையைக் கொள்ளும்படி இருபாலரையும் நாம் மாற்ற வேண்டும்.

கபீர் அதைத்தான் கூறுகிறார்: ஆனால் நீங்களோ வேறு விதமாய் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். கூட்டம் ஒன்றையே திரும்பத்திரும்ப கூறிக்கொண்டிருக்கிறது. அது ஒரே பாட்டையே

குழுவாகப் பாடிக் கொண்டிருக்கிறது. நீங்கள் எல்லாரையும் - உங்கள் தந்தை, நண்பர்கள், குருமார்கள், அரசியல்வாதிகள் என்று எல்லாரையும் திருப்திப்படுத்த விரும்புகிறீர்கள். அவர்களைத் திருப்திப்படுத்துகிற முயற்சியில் உங்களுடைய சொந்த ஆன்மாவை நாசம் பண்ணி விடுகிறீர்கள்.

நான் கேட்டறிந்தது:

பைபிள் காலத்தில், 'என்னதான் நல்ல அறிவுரை என்றாலும் அளவுக்கதிகமாயின் அவை மோசமான விளைவுகளையே உண்டுபண்ணும்' என்பதை அறிந்திருந்தார்கள்.

புனித மண்ணில், பாறைகள் நிறைந்த பாதையில் புழுதி படிந்த வெற்றுக்கால்களுடன் நடந்த முதுபெரும் மனிதரின் கதை உங்களுக்கு நினைவிருக்கிறதா? கூரிய பாறைகளில் அவருடைய பாதங்கள் இரத்தம் சிந்தின. அவருக்குப் பக்கத்தில் ஒரு சிறுவன் வெகு சிரமத்துடன் நடந்து சென்றான். அவனுடைய காலணிகள் கிழிந்தவை. கற்கள் அவனது பாதங்களைக் காயப்படுத்தின. அவர்களுக்குப் பின்னால் ஆரோக்கியமும், வலிமையும் கொண்ட ஒரு கழுதை பெருமித நடை போட்டு வந்து கொண்டிருந்தது. அவர்கள் சாலையருகே ஓய்வெடுத்துக் கொண்டிருந்த பயணிகள் கூட்டத்தை நோக்கிச் சென்றனர். 'பார்த்தீர்களா, அந்த வயதான மனிதன் கால்களில் ரத்தம் வடிய நடப்பதை. ஏன் இந்த கொழுத்த சோம்பேறிக் கழுதை இருவரில் ஒருவரை சுமந்து செல்லக் கூடாது?' என்று அவர்கள் பேசிக் கொண்டனர்.

எனவே அந்த முதியவன் வெறுப்புடன் தோள்களைக் குலுக்கியபடி கழுதைமீது ஏறியமர்ந்தான். அவர்கள் ஒரு மைல் தூரம் போயிருப்பார்கள். சாலை ஓரமாய் ஓய்வெடுத்துக் கொண்டிருந்த மற்றொரு குழுவினர், 'வெட்கம்... வெட்கம்! அந்தப் பெரிய மனிதனானால் கழுதை மீது சவாரி செய்கிறான், பாவம், அந்தச் சின்னப் பையன் காலில் ரத்தம் வடிய நடந்து செல்கிறானே' என்று பேசிக் கொண்டனர்.

மறுபடியும் வெறுப்புடன் தோள்களைக் குலுக்கிக் கொண்ட முதியவன் கழுதை மீதிருந்து இறங்கிக் கொண்டான். அவனுடைய இடத்தில் சிறுவனை அமர்த்தினான்.

மூன்றாம் பயணிகள் குழு அவர்களுக்கு வேறோர் அறிவுரையை வழங்கியது - 'அந்தக் கழுதை நல்ல ஆரோக் கியத்துடன், கொழுகொழுவென்று இருக்கிறது. ஒரு சின்னப் பையனை மட்டும் சுமந்து போகிற கழுதை முதியவரையும் சேர்த்து சுமக்கலாமே' என்று.

மறுபடியும் அறிவுரைப்படி நடக்க முனைந்தான் முதியவன். அவனும் கழுதை மீது அமர்ந்து கொண்டான். சிலமைல் தூரம் சென்றிருப்பார்கள். அங்கே வெள்ளமாய் பொங்கிப் பெருகும், ஆற்றுக்கு மேல் ஒரு சிதைந்த பாலம் இருந்தது. அவர்கள் சோர்ந்து போன கழுதையுடன் அந்த ஆற்றைக் கடக்கத் தலைப்பட்டார்கள். பாலத்தின் நடுப்பகுதிக்கு அவர்கள் வந்திருப்பார்கள், அவர்களுடைய ஒட்டுமொத்த எடையையும் தாங்க முடியாமல் பாலம் உடைந்தது. அவர்கள் ஆற்றில் விழுந்தனர்.

அந்த முதியவரும் சிறுவனும் எப்படியோ நீந்திக் கரை யேறினர். சோர்ந்து போயிருந்த கழுதை நீந்தத் திராணியில்லாமல் நீரில் மூழ்கிப் போனது. இதன்மூலம் ஒன்று நிரூபணமாகிறது. எல்லாருடைய அறிவுரையையும் நீங்கள் கேட்க முனைந்தால் உங்கள் கழுதையை இழக்கும்படி ஆகும். உங்களுக்கு இந்தக் கதையில் மறுப்பு இருந்தால் என்னைக் குறை சொல்லாதீர்கள் - பைபிள் காலத்தில் அவர்கள் இந்த முறையில்தான் விவாதித்தது.

எல்லா மூலைமுடுக்குகளிலும் இப்படி அறிவுரை சொல்கிற வர்களும், அறிவுரை கேட்பவர்களும் இருக்கிறார்கள். உளுத்துப் போன பழைய கருத்துகளையே சொல்லிக் கொண்டிருப்ப வர்களும் உண்டு. எல்லாருமே உங்களைக் கட்டுப்படுத்தவும், வசியப்படுத்தவும் செய்வார்கள். அறிவுரை சொல்கிற, விமர்சனம் செய்கிற கூட்டம் பெரிது. நீங்களோ தனித்திருக்கிறீர்கள். உங்களுடைய மொத்த சக்தியையும் திரட்டிக்கொள்ளாமல் அந்தச் சிறையில் - கூட்டம் என்கிற சிறையில் இருந்து உங்களால் விடுபட முடியாது. இன்னும் கொஞ்சம் உங்கள் அறிவைக் கூர்மைப்படுத்திக் கொள்ளாமல், நீங்கள் சிந்தனையின் ஆழத்தை இன்னும் அதிகரித்துக் கொள்ளாமல் சமூகம் உங்கள் மீது போடும் பிணைப்புச் சங்கிலிகளை உங்களால் தகர்த்தெறிய முடியாது.

எல்லாம் உங்கள் நன்மைக்காகவே என்று அவர்கள் ஓயாது சொல்லிக் கொண்டிருப்பார்கள். 'உங்களுக்குச் சேவை செய்யவே நாங்கள்' என்று சொல்லியபடி உங்களை அழிக்கிற வேலையைத் தொடர்வார்கள். இதில் வேடிக்கை என்னவென்றால் அவர்கள் நல்லெண்ணம் உடையவர்கள் என்று நீங்களும் நம்புவதுதான். அப்படியே கொஞ்சம் மனிதர்களைப் பாருங்கள், எவ்வளவு முட்டாள்தனத்துடனும், உணர்ச்சியற்றும் கிடக்கிறார்கள், எத்தனை இழிந்த நிலையில் அவர்கள் இருக்கிறார்கள். உடனே ஏதாவது செய்தாக வேண்டும், அதிசீக்கிரமாக ஏதேனும் செய்தாக வேண்டும்.

மனிதர்களிடம் பெண்ணின் இயல்பை அதிகரிப்பதும், அவர்களுடைய இதயத்தை மேலும் மென்மையாக்குவதும் அவசியம். இருபாலரிடத்தும் இவற்றைக் கொண்டுவருவது முக்கியம். இன்னும் கூடுதலாய் ஊடுருவும் தன்மை வேண்டும். பாறைக்கல்லாய் இருக்க வேண்டாம், பளிங்கு நீராகி விடுங்கள். தம்முடைய வழி நீரோடை போன்றது என்கிறார் லாவோட்சு. துல்லியமும், மென்மையும், பெண்ணியல்பும், எதிர்ப்பின்மையும், பாய்ந்தோடும் தன்மையும், வலிமையும் கொண்ட வழி!

> *'முன்பே விழித்துக்கொண்ட மற்ற பெண்கள் யானை அல்லது ஆபரணத்தைக் கண்டார்கள். இதுவரை உறங்கிக் கிடந்ததால் நீ இழந்தது ஒன்றல்ல, மிகப்பல... அது பயனற்ற செயலல்லவா!'*
>
> *'உன்னை நேசிப்பவர் அறிந்திருந்தும் நீயதை அறியவில்லை.'*

பிரபஞ்ச இருப்பு எப்போதுமே உங்களிடம் பரிவு காட்டிக் கொண்டிருக்கிறது – அப்படித்தான் அது விதிக்கப்பட்டிருக்கிறது. அது உங்களைத் தோற்றுவித்தது. ஓவியன் தனது ஓவியத்தை நேசிக்கிறான், கவிஞனுக்குக் காதல் இருக்கிறது. பிரபஞ்சம் உங்களிடம் அன்பு வைத்திருக்கிறது. பிரபஞ்சம் மனிதர்களைப் படைத்துக் கொண்டேயிருக்கிறது. பிரபஞ்ச இருப்பு நேசம் கொண்டிராவிடில் வாழ்க்கை நசித்துப் போயிருக்கும். உயிர் தழைத் திருக்காது. உங்களைத் தாங்கி நிறுத்துவது யார்? உங்களுக்குள் சுவாசத்தையும், இரத்த ஓட்டத்தையும் தொடரச் செய்திருப்பது

யார்? அது ஒரு புதிராகவே இருக்கிறது. உங்கள் இதயத்தில் துடிப்பாக இருப்பது யார்? அது புரியாத புதிர். உங்களுக்கு விழிப்பூட்டி, உங்கள் தெரிநிலையில் இருப்பது யார்? அது விளங்கிக்கொள்ள முடியாத ஒன்று.

ஆனால் ஒன்று நிச்சயம் இருக்கிறது. அதை கடவுள் என்று நீங்கள் அழைத்தாலும் சரி, பிரபஞ்சம் என்றாலும் சரி - பரம்பொருள் உங்களை நேசிக்கிறது. அந்தப் பொருள் ஒவ்வொரு கணத்திலும் உங்கள்மீது அளவற்ற கருணையை வெகுமதிகளை வர்ஷித்தபடி இருக்கிறது. நீங்கள் பிச்சைக்காரனாய் இருந்தால் அதற்கு நீங்களே பொறுப்பு, வேறு யாருமல்ல, நீங்கள் பேரரசராக இருக்க வேண்டும் என்றே பிரபஞ்சம் விரும்பியிருக்கும்.

> *'உன்னை நேசிப்பவர் அறிந்திருக்கிறார் ஆனால் ஏனோ நீ அறியவில்லை'*

உங்களைப் பிரபஞ்சம் அறிந்து வைத்திருக்கிறது. ஆனால் பிரபஞ்சத்தை நீங்கள் அறிந்திருக்கவில்லை. பிரபஞ்சத்தை அறிந்தவர் ஞானி, சமயத்தில் ஞானி உங்களை எதிர்ப்படக்கூடும். அவர் உங்களை நேசிப்பார், ஆனால் நீங்கள் பிரபஞ்சத்தை அறியாததுபோலவே அவரையும் அறிந்திருக்க மாட்டீர்கள். நம்பும் திறனை நீங்கள் இழந்து விட்டிருக்கலாம், காரணம் அன்பின் சாயை கொண்டது நம்பிக்கை. அன்பைத் தவறவிட்டவர் நம்பிக்கையையும் தவறவிடுவார்.

எண்ணங்களில் வாழ்பவர் நீங்கள், எண்ணங்கள் ஐயப் பாட்டைத் தோற்றுவிக்கும். ஐயத்தை அடிப்படையாய்க் கொண்டது சிந்தனைகள். பெரிய அளவில் சிந்திப்பவர் பெரிய அளவில் ஐயம் கொண்டவராயிருப்பார்.

இங்கே, என்னுடன் இருப்பதால், நீங்கள் பெரிய சிந்தனை யாளராய் இருக்க வேண்டியதில்லை. காரணம், சிந்திப்பவர்கள் எல்லாவற்றையும் தவறவிட்டு விடுகிறார்கள். அவர்கள் எண்ணங் களில் வாழ்கிறார்கள், எண்ணங்கள் ஆகாயக் கோட்டைகள். எதுவும் உளதாயிருப்பதில்லை. அவர்கள் வெகு அழகாய் நூற்கவும், நெய்யவும் செய்கிறார்கள். ஆனால் எண்ணங்களில் நீங்கள் வாழ்வதற்கில்லை. அவை உங்களுடைய ஆற்றலைச் சிதறடித்துவிடும்.

நேசிப்பவராயிருங்கள், சிந்திப்பவராக அல்லர். நீங்கள் உண்மையிலேயே சமயப்பற்றுடையவராயிருக்க விரும்பினால் நேசிப்பவராயிருங்கள், சிந்திப்பவராக அல்ல, இதயம் தனக்கென்று காரணங்கள் வைத்திருக்கும். ஆனால், பகுத்றிவு அதை அறிந் திருக்காது. ஒருமுறை நீங்கள் அன்பெனும் உலகத்திற்குள் சென்று விட்டால், உங்களுக்குள் ஒரு புதிய நிகழ்வு தொடங்கியிருப்பதைக் கண்டு வியப்படைவீர்கள். அது நம்பிக்கை சார்ந்தது - சிரத்தை. வாழ்வின் மிகச்சிறந்த அனுபவம் அது. காரணம் நம்பிக்கை உள்ளவர் தன்னை மட்டுமல்ல, உலகத்தையே மாற்றிக் காட்டுகிறார். அவர் முற்றிலும் வேறானதொரு உலகில் வாழத் தொடங்குகிறார்.

சந்தேகம் உங்களை ஏடன் தோட்டத்தில் (Garden of Eden) இருந்து வெளியேற்றுகிறது. நம்பிக்கை உங்களை மீண்டும் அங்கே வரவேற்றுக் கொள்ளச் செய்கிறது. உங்கள் பூர்வத்துக்கு நீங்கள் திரும்புகிறீர்கள்.

மலை மீதிருந்து விழுந்தவன் கடைசி நொடியில், கைக்குக் கிடைத்த மரக்கிளையைப் பிடித்துக் கொண்டான். மலைமுகட்டில் சப்தம் கேட்கிறது, அவன் உதவி வேண்டிக் கூச்சலிடுகிறான், ‘கடவுளே, என்னைக் காப்பாற்றும். மேலே யாரும் இருக்கிறார்களா?’

‘மகனே, அமைதி கொள், அந்தக் கிளையை விட்டுவிடு’ என்று பதில் வருகிறது.

தான் கேட்டதை அவனால் நம்ப முடியவில்லை, அவன் அச்சத்துடன் அலறுகிறான். ‘மேலே வேறு யாராவது இருக் கிறார்களா?

பிரபஞ்ச இருப்பு உங்களுக்கு விடையளித்தாலும் நீங்கள் புரிந்து கொள்வதில்லை. உங்களால் நம்ப முடியவில்லை, அதனால் நீங்கள் அமைதியாக இருக்க முடிவதில்லை. நவீன காலத்து மனிதன் பெரிய அளவில் கவலைக்குள்ளாகி அவதிப்படுகிறான். இதற்குமுன் ஒருபோதும் கவலையால் மனிதன் இத்தனை துன்பப்பட்டதில்லை. ஏன் இத்தனை மன உளைச்சல்? அறிவியல் சார்ந்த, தொழில்நுட்பம்சார்ந்த பெரிய வளர்ச்சி ஏற்பட்டிருந்தும் மனிதன் ஏன் இப்படியொரு மன நெருக்கடிக்குள்ளானது? அவனுடைய இதயத்தில் இருந்த ஒன்று இல்லாமல் போனதுதான். அது நம்பிக்கை. அதனிடத்தில் தற்போது இருப்பது அவநம்பிக்கை

(சந்தேகம்) - ஆயிரத்தியோரு சந்தேகங்கள் உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கின்றன. அவை உங்களைத் துன்புறுத்தும் ஆவிகள் என்றாலும் சரியே. உங்கள் ஒரு கெட்ட கனவாகி விடுகிறது.

மறுபடியும் நினைவில் வையுங்கள்: உங்களைத் தவிர வேறு யாரும் பொறுப்பல்ல. நீங்கள் நம்பிக்கையால் சூழப்படக்கூடும். நம்பிக்கை ஏற்படுத்துகிற சூழல் வசந்தத்தை வரவேற்பதாயி ருக்கும். வசந்தம் வந்துவிடுகிறது. நீங்கள் பூக்கத் தொடங்கி விடுகிறீர்கள். உங்களிடமிருந்து முதல்முறையாய் இனிய நறுமணம் பரவத் தொடங்குகிறது. பூக்கள் இதழ் விரிக்க வாழ்க்கை ஒரு கொண்டாட்டமாகி விடுகிறது.

> **'உன்னை நேசிப்பவர்கள் அறிவர் உனக்கேனோ தெரியவில்லை. உன் படுக்கையில் உனதருகே ஓர் இடம் போட ஏன் மறந்தாய்?'**

விளையாட்டுப் பொருள்களை வைத்து விளையாடிக் கொண் டிருக்கிறீர்கள் - பணம்,. அதிகாரம், கவுரவம் என்கிற விளை யாட்டுக் கருவிகள். எல்லாமே தகுதியற்றவை, முக்கியத்துவம் இழப்பவை. காரணம், மரணம் அவற்றைக் கொண்டுபோய்விடும். அவை உங்களிடம் இருந்து எடுத்துச் செல்லப்படும் என்பதை நீங்கள் அறிவீர்கள். இருந்தும் அவற்றை நீங்கள் பற்றிக் கொண்டிருக்கிறீர்கள். காரணம் உங்கள் அறிவு சொல்கிறது. 'எதுவும் நல்லதுதான், ஏதுமில்லாதிருப்பதை விடவும்' என்று. நீங்கள் அந்தக் கருத்தை மாற்றிக்கொள்ள வேண்டும். 'ஏதுமின்மையே (nothingness) எதைவிடவும் சிறந்தது' என்பதைத் தெரிந்து கொள்ளுங்கள். ஏதுமின்மை வெறுமை, அமைதி (silence) இவையே ஒரு கருவறையாய் உங்களுக்குள் அமைய, பிரபஞ்ச இருப்பு உங்களுக்குள் இறங்கி வரும்.

'உங்கள் இருபதுகளில் நீங்கள் வளரவில்லை காரணம் உங்கள் தலைவர் யாரென்பதை நீங்கள் கண்டுகொள்ளவில்லை.'

உங்கள் வாழ்வின் மதிப்புமிக்க தருணத்தை - இளமையை நீங்கள் இழந்து விட்டீர்கள். பிறப்பைத் தவறவிட்டால் மன்னித்து விடலாம், அன்பைத் தவறவிட்டால் மன்னிக்க முடியாது. நீங்கள் விளையாட்டுக் கருவிகளில் கவனம் செலுத்தி உங்கள் இளமையை வீணடித்து விட்டீர்கள். உண்மையிலேயே நீங்கள் நேசித்திருக்க வில்லை. உங்கள் அன்பு வழிபாடாக மாறவில்லை. உங்கள்

நேசத்தை சிற்றின்ப வேட்கை என்றால் என்ன தவறு. உங்கள் அன்பு உலகியல் சார்ந்த விருப்பமாகத்தானே இருந்தது. அது ஒருபோதும் ஆன்மா சார்ந்திருக்கவில்லை. உங்கள் அன்பும், காதலும் பால் சார்ந்திருக்கிறதேயன்றி ஆன்மா சார்ந்ததாயிருக்க வில்லை. அன்பு ஆன்மா சார்ந்ததாய் மாறவில்லையென்றால் நீங்கள் சகதியில் கிடப்பீர்கள், உங்களால் வானில் பறக்க முடியாது. சிறகில்லாமல் எப்படிப் பறப்பது?

நினைவில் வையுங்கள்: பால்சார்ந்த (**sexual**) அன்பு ஆன்மா சார்ந்த அன்பைத் தன்னுள் கொண்டிருப்பதில்லை. ஆனால் ஆன்மா சார்ந்த அன்பு பால்சார்ந்த அன்பைத் தன்னுள் கொண டிருக்கும். (காதலில் பக்தி இருப்பதில்லை, ஆனால் பக்தியில் காதல் இருக்கும்.)

ஆன்மாவைச் சார்ந்ததாகிறபோது உடல் சார்ந்ததன் தரம் உயர்ந்து விடும். இது அடிப்படை நியதிகளில் ஒன்று. மிக உயர்ந்தது தன்னுள் மிகத் தாழ்ந்ததையும் கொண்டிருக்கும். ஆனால், தாழ்ந்த ஒன்று எப்போதுமே உயர்வான ஒன்றைத் தன்னுள் கொண்டிருக்காது. உங்கள் அன்பின் தன்மை உயர்ந்து, காமத்தில் உண்டான மகிழ்ச்சி மறைந்தால் கவலைப்படாதீர்கள். அதுகுறித்த அச்சமும் தேவையில்லை. பரல்சார்ந்த விதத்தில் நீங்கள் அடைந்த மகிழ்ச்சிகள் உங்களை விட்டுப்போய்விடாது. அவை தியானத்திற்குரிய தன்மையைப் பெற்றுவிடும். அவை மிக ஆழமாயும் அதிக நிறைவளிப்பதாயும், ஊடுருவிப் பரவுவதாயும் இருக்கும். காலம் மறைகிறது, அகந்தை மறைகிறது, சில கணங்களே என்றாலும் கடவுட்தன்மை கொண்டு விடுவீர்கள். உங்கள் நேசத்துக்குரியவர் மறைந்து போகலாம்; ஏன் நீங்களும் மறைந்து போகலாம். இரட்டைத்தன்மை மறைந்து ஒருமை இடம் பெறும். பரம்பொருளுடனான ஒருமை உச்சகட்ட இன்பத்தைக் கொண்டிருக்கும்.

கபீர் சொல்கிறார்:

'உங்கள் இருபதுகளிலும் நீங்கள் வளர்ச்சி காணவில்லை...' என்று.

வெகுசிலரே வளர்ச்சி கண்டிருக்கிறார்கள். மக்கள் வயதான வர்களாகிறார்கள். வயது கூடுவது வளர்ச்சியல்ல. (வயதில்) வளர்வதற்கும், வளர்ச்சிக்கும் வேறுபாடிருக்கிறது.

'...உங்கள் தலைவன் யாரென்பதை நீங்கள் அறிந்திருக்க வில்லை.'

ஒரு பெண் மீது காதல் கொண்டதும், அவளைக் காதலிக்கிறோம் என்கிற எண்ணம் உங்களுக்கு வருகிறதா? நீங்கள் கபீரிடம் கேட்டாலும், என்னிடம் கேட்டாலும் என்னுடைய பதில் என்னவோ நீங்கள் அவளிடம் காதல் கொள்ளவில்லை என்பதாகவே இருக்கும். ஒரு பெண்ணிடம் அல்லது ஆணிடம் எந்தக் காலத்திலும் யாருக்கும் காதல் வந்ததில்லை. பிரபஞ்ச இருப்பின் கணநேரத் தோற்றத்தையே அந்தப் பெண்ணிடத்தில் நீங்கள் காண்கிறீர்கள். அந்தக் கணநேரக் காட்சியிடமே உங்களுக்குக் காதல் உண்டாகிறது.

ஒருவர் எப்போதுமே பிரபஞ்சத்தை நேசிக்கிறார். இளங் காலை நேரத்தில் ரோஜா இதழ் விரிக்கிறபொழுது காலைப் பனித் துளிகளில் புத்துணர்ச்சி, மென்காற்றில் நடனம், சூரிய ஒளியில் தோன்றும் மகிழ்ச்சி! அந்தக் கணத்தில் உங்கள் நேச உணர்வு மேலெழுகிறது. அது ரோஜாவின் வேதியியல் (chemistry) உண்டுபண்ணின கிளர்ச்சி என்பீர்களா? இல்லை. ஆன்மாவில் கிளர்ந்த காதல் அது. நீங்கள் ஒன்றும் உயிரியல் (biology) சார்ந்து காதல் கொண்டுவிடவில்லை. கண்ணுக்குத் தெரியாத, தொட்டுணர முடியாத ஒன்றிடம் நீங்கள் காதல் கொண்டு விடுகிறீர்கள். அதை நீங்கள் அறியாதிருக்கலாம், அதுதான் உங்களுடைய துன்பம். நீங்கள் அதை அறிந்தால் அப்போது ஒவ்வொரு காதலும் வழிபாடாகி விடும். அப்போது ஒவ்வொரு காதலும் உங்களைப் பிரபஞ்சத்துக்கு வெகு நெருக்கமாக்கி விடும். அதன்பிறகு உங்கள் காதல் மண்ணில் காலூன்றியிருக்காது. அது சிறகுகள் பெற்றுவிடும். பறக்கும் திறனும் அதற்கு வந்துவிடும்.

கபீர் சொல்கிறார்:

நீங்கள் தவறவிட்டீர்கள், உங்களால் வளர்ச்சியடைய முடிவதில்லை.

... காரணம், உங்கள் தலைவன் யாரென்று நீங்கள் அறிந் திருக்கவில்லை. விழிப்படையுங்கள், விழிப்படையுங்கள். 'உங்கள் படுக்கையில் யாருமில்லை. நீண்ட இரவின் ஏதோ ஒரு புள்ளியில் அவன் உங்களை நீங்கிச் சென்றுவிட்டான்.' இப்படித்தான் மீண்டும்

மீண்டும் ஆகிறது. நீங்கள் ஓர் ஆணிடம் அல்லது பெண்ணிடம் காதல் கொள்கிறீர்கள், சீக்கிரமே எல்லாமும் மறைந்து விடுகிறது. காரணம், உங்கள் இறைவனிடம் நீங்கள் கவனம் செலுத்தவில்லை என்பதால் இறைவனும் போயாயிற்று. நீங்கள் உடல் சார்ந்தவற்றில் கவனம் செலுத்தவும், ஆன்மா சார்ந்தது மறைகிறது. கிட்டத்தட்ட அந்த நேரத்தில் தேனிலவு முடிவுக்கு வந்து விடுகிறது, காதல் தீர்ந்து போகிறது – அந்தச் சமயத்தில் இறைவனும் போய்விடு கிறான். இருப்பவை இரண்டு தூல உடல்கள் மட்டுமே.

இரண்டு தூல உடல்கள் (physical bodies) பால்சார்ந்த உறவு கொள்ள முடியும். ஆனால் பால்சார்ந்த உறவில் கிடைக்கிற திருப்தி எப்போதும் இருக்காது. அது மேலும் மேலும் ஏமாற்றத் தையே உண்டுபண்ணும். பால்சார்ந்த அனுபவங்கள் எல்லாமே ஏமாற்றத்தில் முடியும், நம்பிக்கையற்ற தன்மை ஏற்படும். காரணம், நீங்கள் தவறான பக்கத்தில் கவனம் செலுத்தியதுதான். நீங்கள் உடல் சார்ந்ததில் ஆர்வம் கொண்டு, ஆன்மா சார்ந்ததற்கு போதிய மதிப்பளிக்கவில்லை.

நீங்கள் ஆன்மா சார்ந்ததில் கவனத்தைக் குவித்தால் காலப் போக்கில் உடல் சார்ந்தது முக்கியத்துவமற்றதாகி விடும். அதன் பிறகு தேனிலவு சிறந்ததொரு காதல் விவகாரத்துக்குத் தொடக்க மாயிருக்கும். அது முற்றிலும் மாறுபட்ட நிகழ்வாய் அமையும். நெருக்கம் மேலும், மேலும் அதிகரிக்கும். காமம் மேலும் குறையத் தொடங்கும். நெருக்கமோ அதிகரித்து மேலும் மேலும் ஆழப்படும்.

நீங்கள் நேசிப்பது அந்தப் பெண்ணையல்ல, உங்கள் நேசம் பரம்பொருளிடம் என்பதைச் சீக்கிரமே கண்டுகொள்வீர்கள். அதன்பிறகு அவரிடம் பெருமதிப்பும், பயபக்தியும் உண்டாகி விடும். அந்த அன்பு (காதல்) உங்களுக்குச் சுதந்திரத்தை அளிக்கும். வன்முறையோ, உடைமைத்தனமோ இல்லாத நேசம் அது. அந்த அன்பில் ஒரு புனிதத்தை நீங்கள் காண்பீர்கள்.

> **'விழித்துக் கொள், விழித்துக் கொள். உன் படுக்கையில்**
> **எவருமில்லை, நீண்ட இரவின் ஏதோ ஒரு புள்ளியில்**
> **உன்னைவிட்டு அவன் நீங்கிச் சென்றான்.'**

ஆனால் நீங்கள் தொடர்ந்து பாலுறவில் ஈடுபடுகிறீர்கள். காதலர் இல்லாத நிலையில் காதல்? காதல் இல்லாத உறவு

சவத்தைப் புணர்வதற்குச் சமம். உங்கள் இறைவன் மறைந்துவிட்ட நிலையில், உங்களுடைய ஆண் அல்லது பெண்ணின் கண்களில் இறையுணர்வை தொடர்ந்து காணமுடியாத பொழுது நீங்கள் ஒரு சவத்துடன்தான் சம்போகம் பண்ணுகிறீர்கள். அது எப்படி உங்களுக்கு மனநிறைவைக் கொடுக்க முடியும்? நீங்கள் உயரப் பறப்பதற்கு அது எந்த வகையில் உதவக்கூடும்?

ஆமாம், சில தருணங்களில் நீங்கள் கற்பனை செய்கிறீர்கள், சில நேரங்களில் கடந்தகாலத் துயரங்கள்... அழகான நாட்கள் எல்லாம் தற்போது கனவுகளைப் போலாகி விட்டன. உண்மையில் அவையெல்லாம் நடந்தனவா என்றே நம்பமுடியவில்லை. ஆனால் மக்கள் கனவிலும் கற்பனையிலுமே வாழ்ந்து கொண் டிருக்கிறார்கள், நடைமுறையில் அல்ல. நீங்கள் நடைமுறையில் வாழ்ந்து கொண்டிருந்தால், இறையுணர்வு எங்கும் பரவியிருப் பதைக் காண்பீர்கள். கற்பனையில் வாழ்வீர்களாயின் அப்போது நீங்கள் மட்டும் தனித்திருப்பீர்கள். உங்கள் உலகம் வெறுமை யாயிருக்கும். அதில் இறையுணர்வு இருப்பதற்கில்லை. அந்நிலையில் உலகம் அர்த்தமற்றதாய், ஒரு கெட்ட கனவாகவே இருக்கும்.

ஒரு பாதிரியாரும், உள்ளூர் சமய குருவும், யூத மத போதகரும் நியூயார்க் நகர வீதியில் ஒன்றாக நடந்து சென்றனர். ஓர் அழுக்கான குறும்புக்காரச் சிறுவன் கடிவாளமொன்றை வைத்து, விளையாடிக் கொண்டிருந்ததை அவர்கள் காண நேரிட்டது.

பாதிரியார் திடுக்கிட்டுப் போனார், அவனிடம், 'மதிக்கத்தக்க ஒரு கத்தோலிக்கக் குடும்பத்தைச் சேர்ந்த பையன் இப்படி சொல்லவே நாக்கூசுகிற முறையில் நடந்து கொள்ளலாமா? என்று கேட்டார்.

அந்தப் பையன் கணப்பொழுதும் தாமதியாமல் சொன்னான்:

'தள்ளிப் போங்கள், நான் ஒன்றும் கத்தோலிக்கனல்லன். எப்படின்னாலும் நீங்க நினைக்கிற மாதிரி எதையும் நான் செஞ்சிட்டிருக்கலை' என்று.

வாயடைத்த பாதிரியார் பின்வாங்கிச் சென்றார். உள்ளூர் சமய குரு அந்தப் பையனின் பேச்சை மறுக்க எண்ணி, அவனைக்

குறை கூறுகிறவிதமாய் 'தேவாலயத்தில் அனைத்தும் உனக்குக் கற்பிக்கப்பட்டிருந்தும், இப்படியொரு பாவ காரியத்தை நீ செய்யலாமா?' என்று கேட்டார்.

'தள்ளிப் போங்கள், நான் ஒன்றும் புராட்டஸ்டென்ட் அல்ல. எப்படின்னாலும் நீங்க நினைக்கிற எதையும் நான் செஞ்சிட்டிருக்கலை' என்றான் அவன்.

'இது மிகவும் ஒழுக்கக்கேடான காரியம்' என்றபடி யூத மதகுரு அந்தக் குறும்புக்காரனிடம் சென்றார். 'ஏ சின்னப் பையா. உன்னுடைய பாட்டனுக்குப் பாட்டன் காலத்தில் இருந்து இருக்கிற விதிமுறைகளின் படிதான் நீ வளர்க்கப்பட்டாய். இப்படியொரு இழிவான காரியம் பண்ண என்ன தைரியம் உனக்கு?' என்று இடியாய் முழங்கினார்.

'ஆ, போய்யா அந்தண்டை. நான் ஒண்ணும் யூதனல்ல. அத்துடன் நீர் நினைக்கிற மாதிரி எதையும் நான் செஞ்சிட்டிருக்கலை' என்றான் அவன்.

'அப்படின்னா நீ யார்னு நினைச்சிட்டிருக்கே? என்ன செய்யறதா நினைப்பு?' கேட்டார் யூத மத போதகர்.

'நல்லது, உங்களுக்கு தெரிஞ்சே ஆகணும்னா சொல்றேன், நான் ஒரு கிறிஸ்துவ விஞ்ஞானி. புனேயில் இருக்கிற என் கேர்ள் ஃப்ரண்டோடு காதல் பண்ணிட்டிருக்கிறேன்' என்றான் அந்தச் சிறுவன்.

நியூயார்க்கில் இருந்தபடி.... 'கிறிஸ்தவ விஞ்ஞானிகள் அப்படியான காரியங்களைச் செய்யக்கூடும். ஏனெனில், ஒட்டுமொத்த உலகமும் சிந்தனையன்றி வேறில்லை' என்று நினைப்பவர்கள் அவர்கள். சிந்தனை உலகமாகாது. நீங்கள் எண்ணங்களில் வாழ்ந்து கொண்டிருந்தால் உலக நடைமுறையைத் தவற விடுவீர்கள். உங்கள் சிந்தனைகளில் இருந்து வெளியே வாருங்கள். கபீர், 'விழித்துக் கொள்ளுங்கள், விழித்துக் கொள்ளுங்கள்' என்கிற போது அதையே குறிக்கிறார்.

மூளையில் இருந்து இதயத்துக்குப் போங்கள். இதயம் விழிப்படைவது அவசியம். கற்பனைகளில் வாழாதீர்கள். எண்ணங்களில் வாழாதீர்கள். மவுனமாய் இருங்கள். அமைதியாய்.

அசைவற்றிருப்பது எப்படி என்று இதயத்துக்குத் தெரியும். ஏனெனில் இதயம் எண்ணங்களற்றது. எண்ணங்களால் இதயக் கோயிலினுள் ஊடுருவிப் பரவ முடியாது. எவ்வித ஓசையும் அங்கே உட்புகுவதற்கில்லை. அது முற்றான அமைதி, தூய அமைதி. உங்கள் இதயத்தினுள் புகுந்திடுங்கள், சற்றும் எதிர்பாராத விதமாய் புதிய விழிப்பு ஏற்படக் காண்பீர்கள். அதற்குமுன் எப்போதுமே கண்டிராத விழிப்பாக அது இருக்கும். உங்களுடைய முழு வாழ்க்கையும் ஒளி நிரம்பியதாய் ஊக்கமுடையதாய், அன்பும் ஆர்வமும் கொண்டதாய் மாறிவிடும். எங்கே செயலூக்கம் உண்டோ அங்கே மகிழ்ச்சியிருக்கும்.

கபீர் சொல்கிறார்:

**'யார் விழித்திருக்கிறாளோ அவள் குழலோசையைக் கேட்கிறாள்.'**

இதயத்தில் மட்டும், இதயத்தின் ஆழ்ந்த மறைவிடங்களில் மட்டுமே கிருஷ்ணரின் குழலோசையை நீங்கள் கேட்பீர்கள். இது உண்மையில் ஓர் உருவகம். ஜென்மாந்தர்கள் 'ஒரு கை ஓசை' என்று அழைக்கிற, மற்ற மறைஞானிகள் ஓசையில்லாத ஓசை என்று அழைக்கப்படுகிற விண்ணுலக இசையை பிரபஞ்ச இருப்பில் நீங்கள் கேட்டீர்கள். உபநிஷகால ரிஷிகள் எதை ஓங்காரம் என்றார்களோ அந்த 'ஓம்' என்கிற பிரணவ ஒலியைக் கேட்பீர்கள். கபீர் அதையே குழலோசை என்கிறார் - கிருஷ்ணரின் குழலோசை.

*'விழித்திருக்கிறவள் மட்டுமே அந்தக் குழலோசையைக் கேட்கிறாள்!'*

அந்தக் குழலோசையை நீங்கள் கேட்காதவரை உறக்கம் இல்லை. உள்நோக்கிச் செல்லுங்கள், சென்று தேடுங்கள். நீங்கள் குழலோசை கேட்கிற நொடியில் உங்களுக்குள் விண்ணகத்து இசை வெடித்துக் கிளம்பும். நீங்கள் முற்றிலும் புதியதோர் அனுபவத்தில் நீந்துவீர்கள். அது இறவாப் பெருநிலை அனுபவம், காலாதீத அனுபவம், 'நான் கடவுளில் ஒரு பகுதி, கடவுள் என்னில் ஒரு பகுதி நானே அது (அகம் பிரம்மாஸ்மி), நான் சத்யமாயிருக்கிறேன்' என்று உணர்கிற அனுபவம்.

இயேசு கூறுகிறார், 'நான் சத்யமாயிருக்கிறேன், வாசலாக இருக்கிறேன், வழியாக இருக்கிறேன்' என்று. அவர் யாரைப் பற்றி பேசுகிறார்? அவரென்ன ஜோசப் என்கிற தச்சரின் மகனைப் பற்றியா பேசுகிறார்? இல்லை. அழிவற்ற உங்கள் இருப்புணர்வின் மையத்தைப் பற்றியே பேசுகிறார். தாம் கேட்ட குழலின் இசையைப் பற்றிப் பேசுகிறார். ஒரு கை ஓசையை, பிரபஞ்ச ஒலியை, பிரபஞ்சத்தின் இன்னிசையைப் பற்றிப் பேசுகிறார்.

*'விழித்திருக்கிற பெண் மட்டுமே குழலினோசையைக் கேட்கிறாள்'*

நினைவிருக்கட்டும், குழலோசையைக் கேட்கும் வரை நீங்கள் உறங்கிக் கொண்டிருக்கிறீர்கள். இறையுணர்வைப் பெறுகிற வரைக்கும் நீங்கள் உறக்கத்தில் இருக்கிறீர்கள். நீங்கள் உறங்குகிறீர்களா இல்லையா என்பதைத் தீர்ப்பு செய்ய ஒரே அளவுகோல்தான் உண்டு. அது – உலகத்தை நீங்கள் பருப்பொரு ளாகக் காண்கிறீர்கள் என்றால் – அப்போது நீங்கள் உறக்கத்தில் இருப்பவர்தான். இந்த உலகத்தை கடவுட்தன்மை உடையதாய் காண்பீர்கள் என்றால், 'நீங்கள் அதை நம்புகிறீர்களா?' என்று நான் கேட்க மாட்டேன். அந்நிலையில் நீங்கள் விழிப்படைந்திருப்பீர்கள்.

**'என் வயதொத்த பெண்களுடன் நான் பத்து வருஷம் விளையாடியிருக்கிறேன். ஆனால் தற்போது திடுதிப்பென்று அச்சத்திற்குள்ளாகி விட்டேன்.'**

கபீர் சொல்கிறார்:

**'ஒரே வகையான சாதகர்களுடன் நான் கூட்டாக ஆடிக் கொண்டிருந்தேன். பத்து வருஷங்களாய் என் வயதுப் பெண்களுடன் விளையாடிக் கொண்டிருந்தேன்'**

என்று.

நினைவிருக்கட்டும். 'பெண்கள்' என்கிற வார்த்தையை அவர் மறுபடியும் பயன்படுத்துகிறார். அவர் சாதகர்களுடனும், ஆன்ம விசாரம் செய்பவர்களுடனும் இயங்கிக் கொண்டிருக்கிறார். சத்சங்கத்தில் இருக்கிறார், மெய்மை குறித்துப் பாடவும், ஆடவும், தியானிக்கவும் செய்கிறார்.

**'என் வயதொத்த பெண்களுடன் பத்து வருஷம் விளையாடினேன். ஆனால், தற்போது திடுதிப்பென்று அச்சத்திற்குள்ளாகி விட்டேன்.'**

ஆனால், உண்மையிலேயே இதயத்திற்குச் சமீபமாய் நெருங்கிச் செல்கிறபொழுது, ஒரு பேரச்சம் உங்களைப் பற்றிக் கொண்டு விடுகிறது. எனவேதான், ஒரு சந்நியாசி என்னிடம் வருகிறபோதெல்லாம், 'உம்மைப் பற்றி நான் பயப்படுகிறேன்' என்று சொல்கிறேன். இது ஒரு நல்ல அறிகுறி என்றே நான் எப்போதும் சொல்கிறேன். அது - மூளை தனது பிடியை தளர்த்திக் கொண்டதை, இதயம் உங்களை நெருங்கி வருவதைக் குறிப்பது. அச்சம் உண்டாகக் காரணம், 'தற்போது நீ ஆபத்தில் இருக்கிறாய். உன்னைக் காப்பாற்றுவது யார்? நான் உன்னைப் பாதுகாத் திருந்தேன். உன்னைச் சரியான தடத்தில் வழி நடத்துவது யார்? தற்போது நீ பித்துப் பிடித்த இதயத்தோடு போய்க்கொண் டிருக்கிறாய். எனக்கும் அப்பால் போய்க் கொண்டிருக்கிறாய். நான் உதவாதவனாகி விடுகிறேன். நீ இதுவரை என்னையே சார்ந் திருந்தாய். நான் உன்னுடைய பாதுகாப்பாகவும், பொறுப்புறுதி யாகவும் இருந்தேன். அது காரணம் பற்றியே அச்சம் உண்டாகிறது.

கபீர் சொல்கிறார்:

> **'பல படிகளைக் கடந்து நான் மேனோக்கிச் செல்கிறேன்.**
> **அவை உயரே இருப்பவை.'**

தற்போது சில கதவுகள் திறக்கின்றன - மேனோக்கிச் செல்லும் படிகளை நான் பார்க்கிறேன்.

.... அவை உயரே இருப்பவை.

என்னைவிட உயரத்தில், நானே சுயமாக அவற்றைக் கடந்து செல்ல வேண்டும். எனவேதான் அச்சம். என்னை நான் கடந்தாக வேண்டும். நான் அகந்தையை விடவேண்டியிருக்கும். மனதின் சுமைகளை விட்டுவிட்டு சுமையற்றவனாய் போக வேண்டும். எனவேதான் அச்சம்.

'ஆயினும் நான் காதலில் பங்கேற்க விரும்பினால் எனது அச்சங்களை விடத்தான் வேண்டும்.'

காதலில் வாழ விரும்புகிறவர் அச்சத்தை விட்டாக வேண்டும். காரணம் ஒரே சக்திதான் அச்சமாக மாறுகிறது, காதலாகவும் மாறுகிறது. நீங்கள் அச்சத்தில் இருந்தால் உங்களுடைய சக்தி அச்சத்துடன் தொடர்புடையதாய், அச்சத்தின் ஆக்ரமிப்பிற்குட்

பட்டதாய், அச்சத்துக்கு அதிகாரமளிப்பதாய் ஆகிவிடும். அச்சத்தை விடுங்கள்... துணிந்து ஆபத்தை ஏற்பவராயிருங்கள், உங்களை அபாய நிலைக்கு உட்படுத்திக் கொள்ளுங்கள். அப்போது, அதே சக்தி அச்சத்திடமிருந்து விடுபட்டு, காதலாய் மலர்ந்து விடும்.

**'காதலில் பங்கேற்பதாயின் கட்டாயம் அச்சத்தை விடவேண்டும். பாதாதிகேசம் மூடியிருந்த ஆடைகளைக் களைந்தாக வேண்டும்'**

அத்தனை பாதுகாப்பு நடவடிக்கைகளையும், நீங்கள் சுமந்திருக்கும் அத்தனை கவசங்களையும். ஒருவர் முழுமையான நம்பிக்கையுடன் இருக்க வேண்டும். ஒருவர் சாவதற்கும் தயாராக இருக்க வேண்டும் - பிரபஞ்ச இருப்பு உங்களைக் கொல்வ தாயினும், சரியே. ஒவ்வொருவரும் தம்மைச் சுற்றி ஒரு பெரிய கவசம் பூண்டிருக்கிறார்கள். நம்மைச் சுற்றி நாமே சிறையை அமைத்துக் கொண்டு விட்டோம். அந்தச் சிறைகள் ஒளிவுமறை வற்றவை.

நீங்கள் யாரையேனும் சென்றடைய விரும்பினால், திடீரென்று ஒரு கண்ணாடிச் சுவர் தடுக்கும். உங்களால் சென்றடைய முடியாது. மக்கள் நெருங்கி வருகிறாற்போல் இருக்கும், ஆனால் உண்மையில் நெருங்கியிருக்க மாட்டார்கள். காரணம், அந்த இரண்டு சுவர்களும் இடமளிக்காது. அந்தச் சுவர்கள் ஒன்றோ டொன்று மோதிக்கொள்ளும், எனவேதான் காதலர்கள் எல்லாருமே கருத்து வேறுபாடு கொண்டு விடுவது. அப்படி இருக்கக்கூடாது. காதலர்கள் முழுமையான மன ஒற்றுமையோடு இருக்க வேண்டும். ஆனால் அந்தச் சுவர்கள் அவர்களை மோதிக்கொள்ள வைக்குமேயன்றி, ஒற்றுமையாக இருக்க விடுவதில்லை. ஒவ் வொருவரும் நேசிப்பதாய் நடித்துக்கொண்டு, தமது அச்சத்தில் இருப்பார்கள். அந்தக் காதல் பொய். அது ஒரு முகமூடி.

**'பாதாதி கேசம் மூடி மறைத்த ஆடை களைந்து என் தேகம் அவனுடன் சேர்ந்து கொள்ளும்'**

தற்காப்பு ஏதுமின்றி, ஊறுபடத்தக்கவராய் இருந்து, காதலை எதிர்கொள்ள வேண்டும்.

**'என் கண்கள் மெழுகுவர்த்தியாய் அன்புச்சுடர் வீசும்.'**

கபீர் சொல்கிறார்:

*'காதல் கொண்ட ஆணும் பெண்ணும் இந்தக் கவிதையைப் புரிந்து கொள்வார்கள்.'*

இது பண்டிதர்களாலும் மேதைகளாலும் புரிந்துகொள்ள முடியாமல் போகலாம். ஆனால், நேசிக்கிற இதயம் இந்தக் கவிதையைப் புரிந்துகொள்ளக் கூடும். இதனை என் மக்களும், நீங்களும் புரிந்து கொள்வீர்கள். காரணம் என்னுடைய முக்கியச் செய்தி காதலாயிருக்கிறது. காதல்... காதல் மட்டுமே. தன்னளவில் போதுமானதாயிருப்பது அது.

கபீர் சொல்கிறார்:

*காதல் கொண்ட ஆணும் பெண்ணும் இந்தக் கவிதையைப் புரிந்து கொள்வார்கள்'*

என்று.

வேறு எவரும் அதைப் புரிந்துகொள்ள முடியாது.

'அவர் மீது உனக்கு ஆசை இல்லையெனில் அக்கறையோடு உடுத்தி, நீ வெகு நேரம் மெனக்கெட்டு விழியோரம் மை தீட்டி ஆவதென்ன?'

மக்கள் கோயில்களுக்கும், மசூதிகளுக்கும், தேவாலயங்களுக்கும், குருத்வாராக்களுக்கும் போவது எதற்காக? இறையுணர்வில் உங்களுக்கு விருப்பம் இல்லையென்றால் உங்களிடம் பக்தி இல்லையென்றால் அது முட்டாள்தனம். கோயில்களிலும் தேவாலயங்களிலும் நீங்கள் நேரத்தை வீணடிக்கத் தேவையில்லை. உங்களுக்குள் பக்தி இல்லையென்றால்,

**'அக்கறையோடு உடுத்துவதில், கண்ணுக்கு மை தீட்டுவதில் காலத்தைச் செலவிடுவது எதற்காக?**

நீங்கள் இறைவனிடம் காதல் கொள்ளாவிடில் ஏனிந்தச் சடங்குகளை மேற்கொள்வது? வேறு எதையாவது செய்யப் பாருங்கள். உங்களுக்குப் பிடித்த வேறு எதையும் செய்யுங்கள். மதத்தின் பெயரால் நீங்கள் நேரத்தை வீணடிக்க வேண்டாம். காரணம், பக்தி இருந்தால்தான் மதம் சாத்தியப்படும்.

ஆழ்ந்த, தீவிர அன்பு இருந்தால்தான் உங்கள் வழிபாடு உண்மையாயிருக்கும். அப்போதுதான் நீங்கள் பிரார்த்தனையில்

எதைச் சொன்னாலும் அது புனிதம் பெறும். நீங்கள் கோயிலுக்குப் போகத் தேவையில்லை. நீங்கள் எங்கே உட்கார்ந்தாலும் அது கோயிலாகி விடும். கடவுளுக்குத் தீபமேற்றி, மலர்கள் தூவி வழிபடத் தேவையில்லை. நீங்கள் எதைச் செய்தாலும் அது வழிபாடாகி விடும்.

கபீர் சொல்கிறார் மற்றொரு கவிதையில்:

'நான் கோயிலுக்குப் போவதில்லை, நான் எங்கிருந்தாலும் என்னைச் சுற்றி அது இருப்பதைக் காண்கிறேன்: அது இடத்துக்கேற்ப கூடுவதுமில்லை, குறைவதுமில்லை. எங்கும் ஒரே மாதிரியாகத்தான் அது இருக்கிறது.'

கபீர் சொல்கிறார்:

நான் கடவுளுக்கு நைவேத்தியமாய் விசேஷ உணவு எதையும் கொண்டு செல்வதில்லை. நான் எதை உண்கிறேனோ அது கடவுளுக்குச் சமர்ப்பணம். (அவருடைய வாக்குமூலத்தில் உள்ள அழகைக் கவனியுங்கள். நான் உண்பதே நைவேத்தியமாகி விடுகிறது. காரணம் அது (கடவுள்) என்னுள்ளிருக்கிறது). எவ்வகையிலும் உண்ணாத கருங்கல் சிலையிடம் நான் எதற்காகச் செல்வது? என்னிடம் உணவு அதிகமிருந்தால் எனது நண்பர்களை அழைப்பேன். அவர்கள் உண்ணும்போது பிரபஞ்ச இருப்பு என்னுடைய படையலை ஏற்கும் என்பது எனக்குத் தெரியும். மதம் ஒரு சடங்கல்ல. சம்பிரதாயங்களுக்கும் மதத்துக்கும் என்ன சம்பந்தம். மக்களிடம் அன்பு காட்டுங்கள். உலகத்தை நேசியுங்கள். மரங்களிடமும், பறவைகளிடமும் . மிருகங்களிடமும் நட்சத்திரங்களிடமும் அன்புடையவராயிருங்கள். மெல்ல மெல்ல உங்கள் கண்களில் அன்பு சுடர் விடும், அதை நீங்களே காண்பீர்கள்.

அது இருக்கிறது, ஆனால் நீங்களோ அதைக் காணாதிருக்கிறீர்கள். அது ஊதும் குழலின் ஓசையைக் கேளாதிருக்கிறீர்கள்.

நண்பரே, விழித்துக்கொள்ளும்.

இன்றைக்கு இந்த அளவு போதுமானது.

*முதல் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! இங்கே எனது வருகை குறுகிய அவகாசத்தைக் கொண்டது. உலகில் வேறெங்கும் இல்லாத ஒன்று உங்களிடமிருப்பதைப் புரிந்து கொள்ளும் முயற்சியாகவே நான் வந்திருப்பது. தாங்கள் எனக்கு உதவ முடியுமா?***

நான் உங்களுக்கு வழங்க என்னிடம் எதுவுமில்லை. ஆனால் வெகுமதியாய் வழங்குவதற்கு அதுவே மிகச்சிறந்த ஒன்று. நான் மக்களுக்கு வழங்கும் அறிவுரை, ஏதுமற்றவராயிருங்கள், உலகம் உங்களுக்குக் கொடுத்திருக்கும் சிந்தனை, மதம், கோட்பாடு போன்ற உடைகளைத் துறந்து நிர்வாணமாயிருங்கள் என்பதுதான். உங்கள்மீது திணிக்கப்பட்ட அத்தனை கட்டுப்பாடுகளையும் உதறி, வெற்றாகி விடுங்கள். உங்களைச் சுற்றிலும் காலம் புழுதிபோல் படியச் செய்திருக்கும் தடைகளையும் மூட நம்பிக்கைகளையும் சற்றும் இல்லாமல் செய்யுங்கள்.

நீங்கள் துடைத்துவிட்ட நிலைக்கண்ணாடியாக இருந்தால், கடவுள் அங்கிருப்பார். இறையுணர்வைப் பிரதிபலிக்கும் அந்தக் கண்ணாடி. அதையன்றி வேறு வழி இல்லை.

உங்களிடம் கொடுப்பதற்கு பொருளாக எதுவும் இல்லை. பொருண்மை உள்ள எதுவும் உலகியல் சார்ந்ததுதான். நான் புலன்களால் தொட்டுணர முடியாத ஒன்றை உங்களுக்கு வழங்குகிறேன். அதை அளந்து பார்க்கவோ, எடை போட்டுப் பார்க்கவோ முடியாது. அதை ஏதுமின்மை (nothing) என்று அழைப்பார்கள். அது தியானம், உள்ளடக்கமாய் எதையும் கொண்டிராத பிரக்ஞை (consciousness)யே அது.

ஆனால் வழியைத்தான் நான் காட்ட முடியும். அதை நானே உங்களுக்கு வழங்க முடியாது. காரணம் அது உரிமை மாற்றம்

செய்கிற ஒன்றல்ல, 'ஏதுமின்மை' என்பதை எப்படிக் கைமாற்றிக் கொடுப்பது? அதை நீங்கள் விலைக்கு வாங்க முடியாது, களவாட முடியாது. அதை நீங்கள் நிகழும்படி செய்யக்கூடும். நான் ஒரு வெளியாக இருக்கிறேன். சந்தர்ப்ப சூழ்நிலையாய் இருக்கிறேன். அதில் இன்றியமையாத ஆற்றல் படைத்த ஏதுமின்மை (nothing) நிகழக்கூடும். ஆனால், அது உங்களைப் பொறுத்திருக்கிறது, என்னைப் பொறுத்தல்ல. ஆம், அது நிகழ்வதற்கு நீங்கள் இடமளித்தால், அது இறைநிலைக்கான வாசலைத் திறக்கும். வாழ்வின் புதிர்களை அது விடுவிக்கும். உங்கள் கேள்விகளுக்கு அது விடையளிக்காது, காரணம் வாழ்க்கை ஒன்றும் கேள்வி-பதில் சமாசாரமல்ல. அது ஒன்றும் பிரச்சினையல்ல. அது உங்களுடைய கேள்விகளை, அவற்றுக்குத் தீர்வு செய்யாவிடினும், மறையச் செய்துவிடும். ஆனால், நீங்கள் மாற்றம் அடைவீர்கள். நீங்கள் பெறுவது அறிவல்ல, அறிதல். மனதால் அறியும் திறன் (insight).

ஆனால் நீங்கள் சொல்கிறீர்கள், 'நான் குறுகிய அவகாசத்தில் இங்கே வந்திருக்கிறேன்' என்று.

அவசரத்தில் இருந்தால் அது சாத்தியமில்லை. உங்கள் அதிவிரைவுத்தன்மை உங்களை இளைப்பாற விடாது. அந்த அவசரத்தில் எப்படி விஷயங்களை நீங்கள் உள்வாங்கிக் கொள்வீர்கள்?

ஜென் கதையொன்று:

தியானத்தைப் பற்றி அறிந்துகொள்ள ஒரு ஜென் குருவிடம் இளைஞனொருவன் வந்தான்.

'உன்னால் காத்திருக்க முடியுமா?' குரு கேட்டார்.

'எவ்வளவு காலம்,' இளைஞன் கேட்டான்.

குரு சொன்னார். 'உன்னை நான் நிராகரிப்பதற்கு இதுவே போதும், 'எவ்வளவு காலம்?' என்று கேட்பது நீ காத்திருக்கத் தயாராயில்லை என்பதையே குறிக்கிறது. எவ்வளவு காலம் என்று கேட்காமல் நீ காத்திருந்தால் உன்னிடம் பொறுமை இருப்பதாய் கொள்ள முடியும்' என்று.

காத்திருக்கும் திறன் முக்கியம்.

அந்த இளைஞன் அதைப் புரிந்து கொண்டான். குருவைப் பணிந்து, அவருடன் இருந்து கொண்டான்.

ஓராண்டு காலம் ஓடிய நிலையிலும், குரு அந்தச் சீடனிடம் எதுவும் கூறவில்லை. இரண்டாண்டுகள் கடந்தன. மூன்றாண்டுகள் கடந்தன. இது ரொம்ப அதிகம். இதுவரை எதுவுமே, ஒரேயொரு பாடம்கூட நடத்தப்படவில்லை. எவ்வளவு காலந்தான் ஒருவன் காத்திருப்பது? அந்தக் கேள்வி அவனுக்குள் மீண்டும் முக்கியத்துவம் பெற்றுவிட்டது. 'எவ்வளவு காலம்?'

அவன் குருவிடம் சென்று, 'ஐயனே, நான் மூன்றாண்டுகளாய் காத்திருக்கிறேன்' என்றான்.

குரு சொன்னார்: 'ஆக நீ நாட்களை எண்ணிக் கொண்டேயிருந்திருக்கிறாய்? எப்படிக் காத்திருப்பதென்று உனக்குத் தெரியவில்லை. அதுவே காட்டிவிட்டது. எண்ணிக் கொண்டிருக்கிறாயா, குருவுடன் இருக்கும் நாட்களை?'

'ஒருவகையில் பார்த்தால் ஒவ்வொரு கணமும் முடிவற்றதுதான். இன்னொரு வகையில் முடிவற்றது (eternal) என்பது ஒரே கணந்தான். நீ தகுதியற்றவன். அந்தத் தகுதியைப் பெற நீ காத்திருக்க வேண்டும். எப்படிக் காத்திருப்பது என்பதைக் கற்றுக்கொள். கவனமாயிரு - நாளையில் இருந்து பாடங்கள் தொடங்கும்' என்றார் குரு.

பாடம் ரொம்ப வினோதமாயிருந்தது. அந்த இளைஞன் தரையைக் கூட்டிப் பெருக்கிக் கொண்டிருந்தான். அப்போது பின்புறமாய் வந்த குரு, அவனுடைய பிருஷ்ட பாகத்தில் (பின் பகுதி) ஒரு கம்பால் பலமாக அடித்தார். அதிர்ச்சியுற்ற இளைஞன் கேட்டான். 'மூன்று ஆண்டுகள் காத்திருந்தபின், இதுதான் தியானத்தின் தொடக்கமா?' என்று.

குரு சொன்னார்: 'ஆமாம், இப்பொழுது நீ கவனமாயிருக்கிறாய். நான் எந்தக் கணத்திலும் உன்னை உதைக்கக்கூடும். நீ கவனமாய், கண்காணிப்பாயிரு' அப்படி சில மாதங்கள் சென்றன. இரவில் அவனுக்கு உடல் வலி பொறுக்க முடியாததாயிருந்தது. காரணம், பகலில் பலமுறை விழுந்த உதைதான். குரு எங்கிருந்தோ வந்து குதிப்பார்... அவர் வயசானவர் என்றாலும் பூனை மாதிரி.

ஆனால், மெல்ல மெல்ல ஒரு புதுமையான விழிப்புணர்வு அவனுக்குள் தோன்றியிது. குரு அவனை தாக்கத் தொடங்குகிற அதே நொடியில் அவன் விலகி ஏமாற்றி விடுவான். அப்போது

அவன் வேலையாக இருந்தாலும் அவனுக்கு அது சாத்தியமாயிற்று. அப்படியொரு நுட்ப விழிப்புணர்வை அவன் பெற்று விட்டிருந்தான். அவன் நிறையவே வலியை அனுபவித்து விட்டான். வலி கட்டாயம் தேவை வளர்ச்சிக்கு. நீங்கள் துன்புறாவிடில் உங்களால் விழிப்புடன் இருக்க முடியாது. துன்புறுதல் விழிப்பேற்படுத்துகிறது. வேண்டுமென்றே அடைகிற துன்பம் மிகப்பெரிய விழிப்புணர்வைத்தரும். அவன் துன்பத்தை உவந்தேற்றான். அவனால் நழுவியோட முடியும், அவனை யாரும் தடுத்திருக்க மாட்டார்கள். அது அவனுடைய தேர்ந்தெடுக்கும் உரிமையாயிருந்தது. அவன் குருவைத் தேர்ந்து கொண்டான்.

எல்லாம் எதற்காக என்பதைத் தற்போது அவன் புரிந்து கொண்டான். 'இதுவே அவருடைய கற்பித்தல். இப்படித்தான் தியானத்தை அவர் கற்பிக்கிறார்!' அவனுடைய பிரக்ஞையில் அது உதயமாயிற்று. அவன் பெரிய அளவில் நன்றியுடையவனானான்.

குரு பின்புறமாய் வந்து அவனை உதைக்கும் போது அவன் சட்டென்று குதித்து விலகி அவரை ஏமாற்றி விடுவான். குருவின் கைப்பிரம்பு தரையில் விழுந்து விடும். அவனுடைய மகிழ்ச்சிக்கு அளவேயிருக்காது. அவனது இருப்புணர்வில் குறிப்பிடத்தக்க புதுமை நிகழ்ந்தது. குரு அவனை ஆசீர்வதித்து விட்டார்.

ஆனால் அன்றுமுதல் செயல்கள் மேலும் கடினமாகி விட்டன. அவன் தூங்கிக் கொண்டிருக்கும்போது குரு அவனை அடிக்கத் தொடங்கினார். அது ரொம்ப அதிகம். இரவில் எந்த நேரத்தில் வேண்டுமானாலும்... குரு வயதானவர், இயல்பாகவே அவர் அதிகம் தூங்குவதில்லை. எனவே, தாம் விழித்துக்கொண்ட போதெல்லாம் அவனை உதைக்கத் தொடங்கி விடுவார் அவர். தற்போது அந்த இளைஞன் அறிந்து கொண்டான். 'அதன் செயல்முறை எனக்குப் புரியவில்லைதான். ஆனால் குரு பகலில் கொடுக்கிற உதையை பெரும் பாக்கியமாகவே கருதலாம். எத்தகைய மாற்றத்தை அது ஏற்படுத்தியிருக்கிறது. எனவே இதையும் (இரவுத்தாக்குதல்) நான் ஏற்கத்தான் வேண்டும், எந்தக் கேள்வியும் கேட்காமல்.' அவன் கேட்கவில்லை. 'இது அறிவற்ற செய்கை. நகைப்பிற்குரியது' என்று. 'தாங்கள் என்னைப் பகலில் உதைப்பது சரி. நான் தப்பித்து ஓடி, ஏமாற்றி என்னைக் காத்துக்

கொள்ள முடியும். ஆனால், தூங்கிக் கொண்டிருக்கும்போது உதைத்தால் என்ன செய்வது?' எறு அவன் கேள்வியெழுப்பவில்லை. குரு சொன்னார். 'இது ஒரு நல்ல அறிகுறி. முதல் முறையாக நீ நம்பிக்கையைக் கற்றுக் கொள்கிறாய் - நீ கேள்வி கேட்கவில்லை' என்று.

இரண்டு மூன்று மாதங்களாய் இரவில் விழுந்த அடியில், பகல் முழுதும் அவனுக்குப் பயங்கர வலி. பகலிலானால் தன்னை அவன் பாதுகாத்துக் கொண்டு விடுவான். ஆனால் ஒருநாள் இரவில் அது நடந்தது.

குரு அறைக்குள் நுழைந்ததும், அவன் கண்களைத் திறந்தான். 'ஐயனே! பொறுங்கள். நான் விழித்திருக்கிறேன்' என்றான்.

இப்படிப் பலமுறை ஆயிற்று. அவரால் அவனை அடிக்க முடியாமல் போனது. குருவானவர் அறைக்குள் நுழைகிறபோதே அவன் விழித்துக் கொண்டு விடுவான். அவன் எப்போதுமே தூங்காதவனைப் போல் தெரிந்தான். ஆனால் அப்படியல்ல. அவன் நல்ல தூக்கத்தில் இருப்பான். அவனடைய இருப்புணர்வில் ஒரு பகுதி மட்டும், இயல்பான உறக்கத்தில் இருந்து விடுவிக்கப் பட்டிருக்கும் - பனிப்பாறையினின்றும் பிரிந்து மிதக்கும் பெரிய பனிக்கட்டியின் நுனிப்பகுதி போன்று. சிறு பகுதிதான் ஆனால் உள்ளுக்குள் மெழுகுவர்த்தியாய் எரிந்து கொண்டிருக்கும்.

குரு மிகவும் மகிழ்ச்சியடைந்தார். அடுத்த நாள் காலையில் குரு சில பழைய சூத்ரங்களை, ஒரு மரத்தடியில் அமர்ந்து படித்துக் கொண்டிருந்தார். இளைஞன் அப்போது தோட்டத்தைப் பெருக்கிக் கொண்டிருந்தான். அவனுக்குள் திடீரென்று ஒரு யோசனை. 'இந்தக் கிழவர் ஒரு வருஷமாக என்னை அடித்துக் கொண்டிருக்கிறாரே, இரவு பகல் பார்க்காமல். நான் ஒருமுறை இவரை அடித்தால் எப்படி இருக்கும்? அவர் எப்படி எதிர்வினை செய்கிறார் என்று பார்ப்போம்.'

குரு சூத்ரங்கள் அடங்கிய நூலை மூடி வைத்துவிட்டுச் சொன்னார். 'முட்டாளே, நான் ஒரு முதியவன். அத்தகைய யோசனைகளை விட்டுவிடு' என்று.

'ஆம்! விழிப்புணர்வின் உச்சத்தில் இருப்பவர் எண்ணங்கள் எழுப்பும் சின்ன ஓசையைக் கூட கேட்டுவிடுவார்.

இத்தனை அவசரத்தில் இருந்தால் நீங்கள் இளைப்பாற முடியாது. தியானம் ஒன்றும் தாக்குகிற அல்லது தவற விடுகிற சமாசாரமல்ல. மிகப்பெரிய அளவில் காத்திருக்க வேண்டும். அதற்கு மதிப்பும், நம்பிக்கையும் தேவைப்படும். சிறிதளவும் அவசரம் காட்டாத அணுகுமுறை தேவைப்படும். உண்மையில், மனம் குறிக்கோள் சார்ந்ததாய் இயங்குவது கூடாது. ஆனால் நீங்கள் அவசரப்பட்டால், நடவாது.

நீங்கள் சொல்கிறீர்கள், 'நான் புரிந்து கொள்ளும் முயற்சியாய் வந்திருக்கிறேன்' என்று.

புரிதல் என்பது முயன்று பார்ப்பதல்ல. அது ஒரு முயற்சியல்ல. நீங்கள் கவனத்தை ஒருமுனைப்படுத்தி சிந்திக்கிறதல்ல அது. புரிதல் இதயம் சார்ந்தது. நீங்கள் நேசிக்க வேண்டும்.

ஒரு சந்நியாசி என்றால் அது அவசியம். எவ்வகையிலும், எந்தக் காரணமுமில்லாமலே குருவிடம் நேசம் கொள்ள வேண்டும். மறைந்துவிட்ட ஒருவரிடம், இல்லாத ஒருவரிடம், சிறந்த ஏதுமின்மையாகி விட்ட (great nothing) ஒருவரிடம் பேரமைதியாய் நிலைத்திருக்கும் ஒருவரிடம் வைக்கிற அன்பில் முழுமையான மகிழ்ச்சியிருக்கிறது. உண்மையில். அந்த அமைதி பாடல்களைக் கொண்டது. அந்த அமைதியில் இருக்கிறது இசை, விண்ணகத்தின் இசை. அந்த அமைதி எதிர்மறையான வெறுமையைக் கொண்டதல்ல. அதில் இரைச்சலாய் எதுவும் இல்லை, அது இன்னிசைப் பாடல்களால் நிரம்பியது. அது எண்ணங்களற்றது, ஆனால் விழிப்புணர்வால் நிரம்பியிருப்பது. அதில் இருப்பது இருளும், மரணமும் அல்ல, ஒளியும் ஊக்கமும்.

ஒருவர் நேசம் கொள்ளாதவரை, புரிந்துகொள்ளும் செயல் முறையைத் தொடங்க முடியாது. இங்கே நீங்கள் இருக்கக்கூடும். நான் சொல்வதை நீங்கள் கேட்கக் கூடும் – சொற்கள் மட்டுமே உங்களை வந்தடையும். அந்தச் சொற்கள் உங்கள் நினைவில் ஒரு பகுதியாகி விடும். அவை உங்கள் புலமையை அதிகரிக்கும். ஆனால் அதிகம் தெரிந்திருப்பதால் பயனில்லை. அது உதவாது. சொற்களால் என்ன பயன். கடவுள் என்கிற சொல் கடவுளாகி விடாது, காதல் என்கிற சொல் காதலாகி விடாது.

நீங்கள் அனுபவத்தால் அறியக்கூடிய இடத்துக்குச் சென்றாக வேண்டும். அதற்கு காத்திருப்பு (waiting) தேவைப்படும், ஓர்

ஒய்வான, குறிக்கோளற்ற மனநிலை தேவைப்படும். இல்லாவிடில் ஒரு கருத்தை நீங்கள் புரிந்துகொள்ள முடியாது. நீங்கள் தவறாகவே புரிந்து கொள்வீர்கள். அறிவுக்குத் தெரியும் எப்படித் தவறாகப் புரிந்து கொள்வது என்று. இதயம் மட்டும் புரிந்துகொள்ளும் வகையறியும். அறிவதற்கான வழி நேசம். தர்க்கம் ஒரு பாசாங்கு. தான் அறிந்திருப்பது போல் அது பாசாங்கு செய்யும். அது உங்களை முட்டாளாக்கும், அது உங்களை ஏமாற்றி விடும். அறிதலுக்கான கண்களைத் திறப்பது நேசம், நேசம் மட்டுமே.

ஆனால் பாருங்கள், மூளை எப்போதும் அன்பை கண்டனம் செய்தபடி இருக்கும். மூளை சொல்கிறது 'அன்பு குருடு' என்று. அன்பிற்கு மட்டுமே கண்கள் உண்டு. அன்பு இல்லாவிடில் எல்லாமே புரிந்துகொள்ள முடியாதவைதாம். ஆனால், மூளை இதயத்தைப் பழித்தபடிதான் இருக்கும். என்றாலும், அந்த மூளை மிகவும் திறமையானது. போலித்தனமான செய்திகளை, நடப்பு களைக் கொண்டு ஏமாற்றுகிற வேலையைச் செய்யும். நடப்புகளைத் தெரிந்துகொள்ளும் திறனுக்கும் (knowledgability) புரிந்துகொள்ளும் திறனுக்கும் (understanding) வித்தியாசமிருக்கிறது. மூளை புரிந்துகொள்வதற்குப் பதிலாக, தெரிந்துகொள்ளும் வேலையைத் தான் செய்து கொண்டிருக்கும். மனதால் உணரும் திறனே புரிந்துகொள்ளல் ஆகும். ஒன்றை நீங்கள் அனுபவித்து, விரும்பி, அதில் இருந்து, இருப்புணர்வின் உள்ளார்ந்த மையத்துக்குச் சென்று அறிவதே புரிந்து கொள்ளல்.

அறிவு என்பது அது பற்றி யாரேனும் சொல்வதைக் கேட்டுப் பெற்றது. அறிவு உங்கள் நினைவில் உள்ளவற்றை அதிகரித்துக்கொண்டே இருக்கும். ஆனால் உங்கள் இருப்புணர் விற்கு அது பயன்படாது. அதே சமயம் புரிந்துணர்வு உங்களைப் பக்குவப்படுத்தி, உங்கள் வளர்ச்சிக்கு உதவும்.

நீங்கள் இங்கே வந்தது புரிந்துகொள்வதற்காக என்றால், இங்கிருந்து விரைந்து செல்வதை மறந்து விடுங்கள். பாருங்கள், சில நாட்கள் இருந்து போகத்தான் பலரும் இங்கே வந்தது... ஆனால் அவர்கள் வந்து பல வருசங்கள் ஆகிவிட்டன. என்னுடன் இருப்பவர்களைப் பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன். அவர்கள் காலத்தைக் கணக்கிடவில்லை, இன்னும் எவ்வளவு காலம் இருந்தாக வேண்டும் என்று கேட்கவில்லை. தற்போது

காலம் ஒரு பிரச்சினையல்ல. அது எந்த நேரத்திலும் நேரிடலாம். அது உங்களுடைய ஏற்றுக்கொள்ளும் தன்மையை, தீவிரத்தை அறிந்துகொள்ளும் வேட்கையை, விருப்பத்தைப் பொறுத்தது.

அதுகுறித்து முன்கூட்டியே சொல்ல முடியாது. அது ஒன்றும் வாணிகச்சரக்கல்ல. அது ஒரு பொருளாக இருந்திருந்தால் அதை நான் மகிழ்ச்சியோடு உங்களுக்குக் கொடுத்திருப்பேன். என்னால் அதைக் கொடுக்க முடியாது. அதை நிகழச் செய்வதற்கான தருணத்தை, இடத்தை என்னால் உருவாக்க முடியும். ஆனால், அது மறைமுகமாக நிகழ்கிறது. மறைமுகமான ஒன்றை எப்படி நேரடியாகப் புரிந்து கொள்வது? நீங்கள் நேரடியாகப் புரிந்து கொள்ள முயன்றால் அது முகத்தை மறைத்துக்கொண்டு ஓடிவிடும், அத்தனை கூச்சம் அதற்கு. அது தந்திரமாய் தப்பிச் சென்றுவிடும்.

நீங்கள் மறைமுகமாய் புரிந்துகொள்வதாயினும் மிகவும் கவனமாக எச்சரிக்கையாக இருக்க வேண்டும். வாழ்வின் மிகச் சிறந்தவையெல்லாம் மறைமுகமாகவே நடந்து விடுகின்றன. அது புரிந்துகொள்ளும் திறனாக இருக்கலாம் அல்லது மகிழ்ச்சி யாகவோ, கவிதையாகவோ இருக்கலாம். ஓவியமாகவோ, சிற்ப மாகவோ கூட இருக்கலாம். ஓர் அறிவியல் கண்டுபிடிப்காகவும் அது இருக்கக்கூடும். ஆகச் சிறந்தவை எல்லாமே மறைமுகமாய் நடந்துவிடுகின்றன.

ஏதோ ஒன்றை அறிந்துகொள்வதற்காக விஞ்ஞானிகள் தினமும் போராடிக் கொண்டிருக்கிறார்கள். திரும்பத் திரும்பத் தங்கள் முயற்சியில் அவர்கள் தோற்றுக்கொண்டிருப்பார்கள். ஒருநாள் திடுதிப்பென்று, சற்றும் எதிர்பாராதபோது, எந்த முயற்சியுமின்றி அது வெளிப்பட்டு விடும். தற்செயலாகத்தான் அது நடந்து விடுகிறது. அப்போது அவர்கள் புகைத்துக்கொண்டோ அல்லது குளியல் தொட்டியில் ஓய்வாகவோ இருந்து கொண்டிருந் திருக்கலாம். அல்லது தோட்டத்தில் எதையாவது தோண்டிக் கிளறிக் கொண்டிருந்திருப்பார்கள்.

அதில் திட்டவட்டமாய் ஒரு ரகசியம் இருக்கிறது.

நீங்கள் ஒரு குறிக்கோளுடன் நேரடியாக முயன்று பெற்று விடத் துடிப்பீர்கள். ஆனால், எவ்விதக் கிளர்ச்சியும் இல்லா மலிருப்பவர்களுக்கே வாழ்க்கை தனது ரகசியங்களை வெளிப்

படுத்துகிறது. நீங்கள் ரொம்பத் தீவிரமும் மூர்க்கமும் கொண்டு வாழ்க்கையின் ரகசியத்தை அறிந்துகொள்ள முயல்கிறீர்கள். அப்போது உங்களுக்குத் தடுமாற்றம் உண்டாகிவிடும். நீங்கள் ஏற்கக்கூடியவராய் இருக்க மாட்டீர்கள். சத்தியத்தால் சந்து பொந்துகளில் நுழைய முடியாது, அது ரொம்பப் பெரியது.

நீங்கள் தணிவு நிலையில் (relaxed) இருந்தால் உங்களுடைய தடுமாற்றம் மறைந்துவிடும். எந்தப் பக்கத்திலும் தடையற்ற வராயிருப்பீர்கள், சும்மா குளியல் தொட்டியில் சோப்பு நுரைகளுடன் துளைந்தாடிக் கொண்டிருப்பது போல. ஆல்பர்ட் ஐன்ஸ்டீன் அப்படித்தான் எந்த மனக்கிளர்ச்சியுமில்லாமல் மிகப்பெரிய கண்டுபிடிப்புகளை நிகழ்த்திக் கொண்டிருந்தார். அவர் மணிக்கணக்கில் குளியல் தொட்டியில் சோப்பு நுரை களுடன் விளையாடுவது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும். அதை எப்படி மற்றவர்களிடம் சொல்வது, அவருடைய மனைவி சங்கடப்படுவார்.

என்னுடைய நண்பரொருவர் அவரைப் பார்க்கப்போய், ஆறு மணி நேரம் காத்திருக்கும்படி ஆயிற்று. காரணம் ஐன்ஸ்டீன் குளியல் தொட்டியைவிட்டு வரவேயில்லை. கடைசியில் அவருடைய மனைவி உண்மையைச் சொல்லும்படி ஆயிற்று. 'அவர் குளியலறையில் இருக்கும்போது நாம் அவரைத் தொந்தரவு பண்ண முடியாது. அவருடைய ஆய்வுக்கூடத்தில் கூட நீங்கள் நுழைந்து தொல்லை கொடுக்கலாம். ஆனால், பாத்ரூமில் அவர் நுழைந்துவிட்டால் அது சாத்தியமில்லை. அங்கேதான் அவர் ஓய்வாக இருப்பார், அப்போதுதான் பல நுட்பமான சமாசாரங்கள் அவருக்குத் தோன்றியபடி இருக்கும். நாம் ஒன்றும் செய்வதற் கில்லை. அவர் சோப்பு நீர்க்குமிழ்களுடன் விளையாடிக் கொண் டிருக்கிறபோதுதான் தொலைதூர நட்சத்திரங்கள் அவருக்காகத் தரையிறங்கி வருகின்றன. இலட்சோபலட்சம் ஆண்டுகளாய் பூமிக்கு வந்து சேராத ஒளி பயங்கர வேகத்தில் பயணம் செய்கிறது. நம்ப முடியாத வேகத்தில்.

நொடிக்கு இரண்டு லட்சத்து தொண்ணூற்று ஒன்பதாயிரத்து. எழுநூற்று தொண்ணூற்று இரண்டு மீட்டர் வேகத்தில் ஒளி பயணித்து வருகிறது. பூமி தோன்றியபோது தொடங்கிய ஒளியின் பயணம் இன்னும் முடிந்தபாடில்லை. சோப்பு நுரைக்குமிழ்களோடு

விளையாடியபடி ஐன்ஸ்டீன் அந்த நட்சத்திரங்களை அறிந்து கொள்கிறார். இந்த யுகத்தின் மிகப்பெரிய கண்டுபிடிப்பான சார்பு நிலைக் கொள்கையை (relativity) அப்படித்தான் அவர் கண்டறிந்தது.

நீங்கள் கிளர்ச்சியற்ற நிலையில் இருக்கிறபோதுதான் வாழ்க்கை தனது ரகசியங்களை வெளிப்படுத்தும் என்பதற்காகவே இதைச் சொல்லியது. இயற்கையுடன் ஒரு குழந்தையைப் போல் விளையாடிக் கொண்டிருங்கள். மிகச்சிறந்தவையெல்லாம் விளையாட்டுப்போல் நிகழ்ந்து விடும்.

நீங்கள் ரொம்பவே தீர்மானமாயிருக்கிறீர்கள். 'நான் சும்மா பார்த்திட்டு போகத்தான் வந்தேன். அப்படி வெளியுலகில் இல்லாத எது இங்கே உங்கள்ட்ட இருக்குன்னு தெரிஞ்சிக்க வந்தேன்' என்று நீங்கள் சொல்வீர்கள்.

இங்கே என்னிடம் இருப்பது எங்கும் இருப்பதுதான். ஆனால் வேறெங்கும் அதை நீங்கள் கண்டுகொள்ள முடியாமல் போயிருக்கும். நீங்கள் முறுக்கேறிய உணர்வுகளில் இருந்து விடுபட்டு ஓய்வாக உணர இதைவிட வேறு தகுதியான இடம் இருக்க முடியாது. உலகெங்கிலும் மதம் ஓர் ஆபத்தான சமாசாரமாகிக் கொண்டிருக்கிறது. என்னுடைய இடத்தில் அப்படி மோசமாய் எதுவும் கிடையாது. மற்ற இடங்களில் எல்லாம் வாழ்க்கை இறைமை சார்ந்த (theological) பிரச்சினையாகி விட்டிருக்கிறது. இங்கே அது ஓர் அருமையான நகைச்சுவை போல. மற்ற இடங்களில் பிரார்த்தனை ஒரு புனிதச்சடங்கு. இங்கேயோ அது ஒரு கொண்டாட்டம் போல. உங்கள் உணவை ஒரு கொண்டாட்ட உணர்வோடு உண்ணுங்கள்; அதுவே பிரார்த்தனைதான். குளிக்கிறபோது குதூகலமாய் குளியுங்கள். அதுவே பிரார்த்தனையாகி விடும். இங்கே பிரார்த்தனையை ஒரு சடங்காகக் கருதிச் செயவதில்லை. சில சொற்களை நீங்கள் திரும்பத் திரும்ப உருப்போட்டுக் கொண்டிருக்க வேண்டாம். இங்கே அது ஒரு த ன்மையாக இருக்கிறது, செயலாக அல்ல. உங்கள் உள்ளார்ந்த சக்தியின் சுவையான, அதிநுட்ப நடனமாக அது இருக்கிறது.

கேளுங்கள் பறவைகளை, அவற்றின் ஒலியில் இருக்கிறது பிரார்த்தனை. பாருங்கள் மரங்களை, அவற்றின் பச்சை நிற

இலைகளிலும் சிவந்த பொன்னிறப் பூக்களிலும் பார்க்க முடிகிறது இறை வழிபாட்டை. சிறகடிக்கும் பறவைகள் உங்களிடம் ஒரு பரவசத்தை உண்டுபண்ணும், அவற்றுக்கும் உங்களுக்குமிடையே ஒரு நெருக்கத்தை உணர்வீர்கள் - அது பக்திபூர்வமான உணர்வு!

இங்கே பிரார்த்தனையில் விசேஷமாய் எதுவுமில்லை. ஒரு புதிய தன்மையுடன் கூடிய நடைமுறை வாழ்க்கை, அவ்வளவுதான். என்ன, அதில் மகிழ்ச்சி, சரணாகதி, படையல் இவையும் உண்டு. அவை தனி இயல்பு கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது. பிரபஞ்ச இருப்பிற்கென வழங்கப்படுகிற எதுவும் புனிதமானதே. உங்கள் செயல்களை நீங்கள் பிரபஞ்ச இருப்பிற்காக வழங்கக் கூடுமெனில் எல்லாமே புனிதமாகி விடும்.

இந்த உலகில் ஆயிரமாயிரம் கோயில்களும், தேவாலயங் களும் உண்டு. ஆயிரக்கணக்கான போதகர்களும், ஆசான்களும் இருக்கிறார்கள். நான் ஒன்றும் கற்றுணர்ந்த மனிதனோ, ஆசிரியரோ அல்லன், காரணம் மற்றவர்களுக்குச் சொல்லிக் கொடுக்கும்படியாய் என்னிடம் எதுவுமில்லை. நான் அப்படியே ஓர் அமைதியாயிருக்கிறேன். என் இதயத்தில் அன்பிருக்கிறது. விளையாட்டுத்தனம் இருக்கிறது. உங்களால் இங்கிருந்து எப்போது செல்வது என்கிற எண்ணம் இல்லாமல் இருக்க முடிந்தால்; இங்கே இருக்கிறபடிக்கு இருந்தால் இங்குள்ள புத்த உணர்வை நீங்கள் உள்வாங்கிக்கொள்ள முடியும். சாத்தியமில்லாதவற்றையும் சாத்தியப்படுத்துகிற சக்திப்புலமிது. வேறெங்கும் சாத்தியப்படாதது. எனக்குத் தெரிந்தவரை புத்தத்தன்மை செயல்படுகிற வெளி இதுதான்.

கிறிஸ்தவர்கள், இந்துக்கள், இஸ்லாமியர்கள், சமணர்கள், புத்தர்கள் என்று எல்லாரும் இருக்கிறார்கள். அத்தனை குருமார் களும் போயாயிற்று. உலகில் நூற்றுக்கணக்கான மதங்கள் எல்லாமே கடந்த காலத்தைப் பற்றிக் கொண்டிருக்கின்றன. மரபுகளும், ஏற்றுக்கொள்ளப்பட்ட நடைமுறைகளும், பழக்க வழக்கங்களுக்கு ஒத்துப்போகிற ஒழுங்குமுறைகளும் மட்டுமே மிஞ்சியுள்ளன. மகத்தான மாறுதல் என்று சொல்லும்படியாய் எதுவுமில்லை.

இங்கே நான் வழங்கிக் கொண்டிருப்பது பரம்பரையாக வரும் கருத்துகளை (மரபு)யல்ல. அதில் கடந்த காலம்பற்றியதாய் எதுவு

மில்லை. இது ஒரு புதிய தொடக்கம். குறிப்பிடத்தக்க ஒன்றின் மூலமாயிருப்பது, தொடக்கமாயிருப்பது நற்பேறல்லவா.

இயேசுவுடன் ஒன்றாய் செல்ல முடிந்தவர்கள் அதிர்ஷ்டக் காரர்கள். அவர்கள் புனித ஊற்றின் பக்கமாய் இருந்திருக்கிறார்கள். புத்தருடன் ஒன்றாய் நடந்து போனவர்கள் பாக்கியவான்கள். தற்போது புத்தருடன் இருப்பது அர்த்தமற்றதாகவே தெரியும். இருபத்தியைந்து நூற்றாண்டுகள் ஓடி மறைந்துவிட்டன. இந்த இருபத்தியைந்து நூற்றாண்டுகளில் புத்த மதத்தை ரொம்பவே களங்கப்படுத்தி விட்டார்கள். புத்தர் கூறியது என்ன, இடைச் செருகலாய் புகுத்தப்பட்டவை எவையெவை என்றே தற்போது பிரித்தறிய முடியாமல் இருக்கிறது. அத்தனை சிதைவுகள்! எதைச் சேர்த்தார்கள், எதையெல்லாம் நீக்கிவிட்டார்கள் என்றே புரியவில்லை. இருபத்தியைந்து நூற்றாண்டுகளில் மிகப்பெரிய தூய்மைக்கேடு!

உருண்டு செல்கிற உறை பனிப் பந்து போலத்தான் அதுவும். பனிப்பந்தில் மேலும் மேலும் பனி சேர்ந்து, தன் சொந்த முகத்தையே அது இழந்துவிடும். புத்தரின் அசலான முகத்துக்கும், புத்தச்சிலைகளுக்கும் கொஞ்சமும் சம்பந்தமேயில்லை, பார்த்தால் திகைத்து விடுவீர்கள். அந்தச் சிலைகளில் புத்தரைவிட மகா அலெக்சாண்டரின் சாயல்தான் அதிகம் தெரிகிறது. இந்தியர்கள் முதல் முறையாக கிரேக்க அழகில் ஈடுபாடு கொண்டிருப்பார்கள். அதுவும் கிரேக்க ஆணின் அழகில்.

கிரேக்கர்கள் அவ்வகையில் பெண்ணழகில் ஈடுபாடு கொண்டதில்லை. அவர்களுடைய ஒட்டுமொத்த சிந்தனையிலும் ஆணழகே இடம் பெற்றிருந்தது. கிரேக்கக் கலாசாரத்தின் எச்சங்களான பழைய சிலைகளை நீங்கள் பார்த்தீர்களானால், பெண் சிலைகளே உங்களுக்குப் பார்க்கக் கிடைத்திருக்காது. எல்லாம் ஆண் சிலைகளாகவே இருந்திருக்கும். அந்த அளவிற்கு அவர்கள் ஆணுடைய உடம்பில், ஆணழகில் பெருமதிப்பு கொண்டிருந்தார்கள். கிரேக்கத்தில் பெண்ணுடம்பு அழகானதாய் கருதப்படவில்லை.

அவர்கள் ஆண்களின் நிர்வாணத்தை அழகிய சிலைகளாய் வடித்து வைத்தனர். மகா அலெக்சாண்டருடன் இந்தியாவிற்கு வந்த கிரேக்கர்களும், கொண்டு வரப்பட்டட சிலைகளும்தான்

புத்தரின் முகத்தை அமைப்பதற்குப் பயன்பட்டிருக்க வேண்டும். புத்தருடைய சிலைக்கும் அவருடைய நிஜ முகத்துக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. அவை புத்தரின் முகத்துடன் கொஞ்சமும் ஒத்துப்போகவில்லை. அவை கிரேக்க மூலத்துடன் கூடியவை.

புத்தர் இயற்கை எய்திய நாளில் – துறவிகள் எல்லாவற்றுக்கும் சண்டை பிடிக்கத்தொடங்கினர். உடனே, வெவ்வேறு கொள்கை கொண்ட முப்பது குழுக்கள், முப்பது பிரிவுகள் தோன்றிவிட்டன. அவர்கள் செவிமடுத்ததும், நேசித்ததும் ஒருவரைத்தான். ஆனால், தங்கள் மனப்போக்கின்படி ஒவ்வொருவரும் ஒவ்வொருவிதமாய் புரிந்து கொண்டிருந்தார்கள். புத்தரைப்போல் பேராற்றல் படைத்த ஒருவர் இருந்தபோது எல்லாம் சரியாகத்தான் நடந்தது. ஆனால் அதிகார வேட்கை கொண்டவர்கள் தங்களுக்குக் கிடைத்த அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தலாயினர். அவர்கள் உண்மையிலேயே அரசியல்வாதிகள்.

கிறிஸ்தவ மதத்தைத் தோற்றுவித்த செயிண்ட் பால் ஓர் அரசியல்வாதிதான். புத்த மதத்தை அசோகர் என்கிற அரசர் தோற்றுவித்தார். இயேசுவுடன் கிறிஸ்தவ மதத்துக்கும், புத்தருடன் புத்த மதத்துக்கும் சம்பந்தமே இல்லாததுபோல் ஆகிவிட்டது. ஒரு புதிய அதிகாரப் பயணம் தொடங்கியது. அசோக மன்னரால் மதம் சார்ந்த பேரரசு நிறுவப்பட்டது. நிறைய செல்வங்களை வாரி யிறைத்து, நிலங்களை விஸ்தரித்து மேலும் மேலும் மக்கள் மீது அதிகாரம் செலுத்துகிற முயற்சி! அரசியல்வாதிகள் ஒன்றும் பெரிய அறிவாளிகளல்லர்.

தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்ட முப்பத்தியாறு பேரும் அரசியல்வாதிகளாகவே இருக்க வேண்டும். எப்போதுமே இப்படித்தான் ஏதாவது நடந்து விடுகிறது. தவிர்க்க முடிவதில்லை. உண்மையிலேயே புத்தருடன் இசைவாக இருந்தவர்களெல்லாம் அமைதியாக இருந்து விட்டார்கள். புத்தர் தனது சரீரத்தைத் துறந்தபோது ஏற்பட்ட அதிர்ச்சி அத்தகையதாயிருந்தது. அவர்கள் நொறுங்கிப் போனார்கள்; அழுது புலம்பினார்கள். தங்களுடைய குருவையல்லவா இழந்து விட்டிருக்கிறார்கள்! அவர்களால் எப்படி அதைத் தாங்கிக்கொள்ள முடியும்? இதயங்கள் இருக்க வேண்டிய இடத்தில் இருக்கவில்லை. அவர்களுக்கு உட்பிரிவுகளை உண்டாக்க ஆர்வமில்லை. சூழ்ச்சிக்கு இரையாகவும் அவர்கள்

விரும்பவில்லை. ஆனால், அவர்களைச் சுற்றி முட்டாள்கள் இருந்தனர். நீங்கள் ஒருத்தரை தேடிப்போனால் ஆயிரக்கணக்கில் எதிர்ப்படுவார்கள். ஒரு முட்டாள் போனால் உடனே அந்த இடத்துக்கு வேறொரு முட்டாள் வந்துவிடுவான்.

உகாண்டாவில் இடி அமீன் பதவியை விட்டு ஓடியதை செய்தித்தாளில் படித்தேன். இடிஅமீனை இடியட் அமீன் என்பார்கள். அவர் போனதும் அவருடைய இடத்துக்கு வேறொரு இடியட் (லுலு) வந்தாயிற்று. இந்தஉலகம் ரொம்ப விசித்திரமானது. இடியட்களை விட்டுத் தொலைக்க உங்களால் முடியாது.

குருமார்களின் இடத்துக்கு அரசியல்வாதிகள் வந்துவிட்டார்கள். அதிகாரத்தைக் கைப்பற்றிக் கொள்ள ஆட்கள் தயாராக இருக்கிறார்கள். அகந்தை உள்ளவரை அரசியல் இருக்கும். அகந்தையின் நிழலாக அரசியல்!

நீங்கள் ஒரு தேவாலயத்துக்கோ அல்லது கோயிலுக்கோ செல்கிறீர்கள். வெறுங்கையராய்ச் செல்கிற நீங்கள் வெறுங் கையோடு திரும்பி வருவீர்கள். நீங்கள் உயிர்ச்சக்தி ஊற்றெடுக்கும் புத்த வெளியைக் கண்டடையாவிடில் அப்படித்தான் ஆகும். எதுவும் சாத்தியந்தான். உங்களுக்கு அதைத் தருவேன், இதைத் தருவேன் என்று என்னால் வாக்களிக்க முடியாது. என்னால் ஒன்று மட்டும் சொல்ல முடியும், இங்கே இடம் இருக்கிறது. அதிக நேர்த்தி யும், மதிப்பும், சக்தியும் உள்ள இடம். இதன் பரிமாணம் நாளுக்கு நாள் கூடிக்கொண்டே போகிறது. நாங்கள் இங்கே உருவாக்கியுள்ள இந்த உலகில் துளைந்தாடுவதற்கு நீங்கள் தயாராகி விட்டால் மிகச்சிறந்த ஒன்று உங்களுக்காகக் காத்திருக்கிறது.

'எனக்கு உதவ முடியுமா?' என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

நான் அதற்காகத்தானே இங்கிருப்பது. என்னுடைய உதவியை நீங்கள் ஏற்றுக்கொள்வீர்களா? உண்மையில் அதுதான் கேள்வி. என்னுடைய உதவியை ஏற்க நீங்கள் தயாரா? உங்களுக்கு உதவ என்னை அனுமதிப்பீர்களா? எதிர்ப்பு காட்டுவீர்களா? இதய பூர்வமாக என்னை வரவேற்றுக் கொள்வீர்களா? உங்கள் இதயத்துக்குள் என்னை வரவிடுவதென்பதே ஓர் அறுவை சிகிச்சை மாதிரிதான். தொடக்கத்தில் வலி இருக்கும். தொடர்ந்து வேதனை இருக்கும். ஆனால் முடிவில் பரவசமாயிருக்கும்.

*இரண்டாம் கேள்வி.*

*'ஓஷோ, எல்லா புத்தர்களும் ஏன் ஒரே மாதிரி சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்?*

உண்மை என்பது ஒன்றுதான், எத்தனை விதமாய் சொன்னாலும் அதே உண்மை. சொற்கள் வேறுபடலாம். சொல்கிற முறையும், உருவகித்தலும் மாறுபடலாம். கொஞ்சம் ஆழ்ந்து கவனித்தீர்களானால் எல்லா நீதிக் கதைகளும், உருவகங்களும் ஒரே உண்மையில்தான் முடிகின்றன. உண்மை ஒன்றுதான். புத்தர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் தங்களுக்கே உரிய விதத்தில் சொல்கிறார்கள், தங்களுடைய முத்திரையைப் பதிக்க முற்படுகிறார்கள். பட்டை தீட்டப்பட்ட வைரத்தின் ஒரு பக்கத்தை கிருஷ்ணரும், மற்றொரு பக்கத்தை கிறிஸ்துவும், இன்னொரு பக்கத்தை முஹமதுவும் காட்டியிருக்கலாம். ஆனால் அத்தனையும் ஒளி பொருந்திய ஒரே வைரத்தின் வெவ்வேறு பக்கங்கள்.

வைரம் ஒன்றுதான். உலகம் ஒன்றுதான். புத்தர்கள் ஒரே விஷயத்தை வெவ்வேறு முறையில் சொல்லிக் கொண்டிருக் கிறார்கள். அந்த வேறுபாடுகள் அவர்களுடைய தனித் தன்மைகளால் விளைந்தவை. கருத்தை வெளியிடும் முறை ஆளுக்காள் வேறுபடுகிறது. அனுபவமாகும் தருணத்தை விவரிப் பதற்கில்லை. புத்தர் அடைந்த அதே சுத்த பிரக்ஞையைத்தான் இயேசு அடைந்திருந்தார்.

இரண்டு சுத்த பிரக்ஞைகளும் வேறுவேறல்ல. இரண்டு ஒவ்வாத சங்கதிகள் இருக்க முடியும், ஒழுக்கங்கெட்டவை இருக்க முடியும். ஆனால் தூய்மை என்பது ஒன்றுதான். காரணம் தூய்மை கலப்பற்றது. இரண்டு பேரொலிகள் இருக்க முடியம், ஆனால் நிசப்தத்தில் இரண்டு இருக்க முடியாது. நிசப்தத்தில் உணர்கிற உண்மையை உச்சரிக்கிறபோது முடியாது. புத்தர் பேசுகிற போது பாலி மொழியில் பேசினார், அது அவருடைய தாய்மொழி.

இயேசு அரமேயிக் மொழியில் பேசினார், அது அவருடைய தாய்மொழி. புத்தரும் இயேசுவும் சந்தித்துக் கொண்டால் ஒருவர் பேசுவது இன்னொருவருக்குப் புரியாது. ஆனால் அவர்கள் பார்வையின் மூலமே ஒருவரையொருவர் புரிந்துகொண்டு விடுவார்கள், முழுமையாக.

ஒரு சூஃபி கதை.

முல்லா நஸ்ருதீன், ஒருநாள் மாலை கிராமச் சதுக்கத்தில் உட்கார்ந்து, சிதார் என்கிற இசைக்கருவியின் நாண்களைச் சுண்டிவிட்டுக் கொண்டிருந்தார். எதிர்பார்ப்புடன் கூடிய ஒரு கூட்டம் மெள்ள அவரைச் சூழ்ந்து கொண்டது. அவர் ஒரே சுரத்தை (note)த்தான் வாசித்துக்கொண்டிருந்தார். கடைசியில் ஒரு கிராமத்தான் கேட்டான், 'மிக அருமையான வாசிப்பு, முல்லா. ஆனால் இசைக்கலைஞர்கள் பலரும் எல்லா சுரத்திலும் வாசிக்கிறார்களே. நீங்கள் ஏன் அப்படி வாசிக்கவில்லை? என்று.

முல்லா பதிலளித்தார், 'அந்தக் கழுதைகளால் கண்டுபிடிக்க முடியாத இசைக்குறிப்பை நான் கண்டுபிடித்து விட்டேன். அது உனக்குத் தெரியவில்லையா?' என்று.

உண்மை ஒன்றுதான். அதைக் கண்டடைந்த பின் நீங்கள் அதையே திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருப்பீர்கள். வெவ்வேறு வழிமுறைகளை நீங்கள் கண்டுபிடிப்பீர்கள். அது ஒப்பற்ற வழிமுறையாயிருக்க வேண்டும் என்று நினைப்பீர்கள். இப்படி உங்களைப்போல் பலரும் பல பழிமுறைகளைக் கண்டுபிடித்து விட்டிருக்கிறார்கள். விநோத வழிமுறைகள்! அவை ஒன்றுக்கொன்று முரண்படுவதில் என்ன வியப்பு.

நீங்கள் ஒரு சூஃபி துறவியிடம் சென்றால், அவர் உங்கள் பாதங்களைத் தொடுமளவிற்கு மரியாதையாக நடந்து கொள்வார். கடவுள் தன்மையை அதன் எல்லா வடிவங்களிலும் கவுரவிப்ப வர்கள் அவர்கள். பஹாஉத்தீன் அல்லது ஜலாவுத்தீன் அல்லது ஃபரீத் போன்ற ஒரு சூஃபி குரு உங்களுடைய பாதங்களைத் தொடுகிறார். அந்தக் கணத்தை ஆழ்ந்து சிந்தியுங்கள். பஹாஉத்தீன் உங்கள் பாதத்தைத் தொடுகிறபோது, உங்கள் மனதுக்குள் எவ்வளவு இரைச்சல் இருந்தாலும், பட்டென்று ஓர் அமைதியை உணர்கிறீர்கள். பஹாஉத்தீன் உங்கள் பாதங்களைத் தொட்டுக் கொண்டிருக்கிறார்? மிகப்பெரிய அமைதி உங்கள்மீது இறங்கி வருகிறது. அவ்விதமாய் பஹாஉத்தீன் தியானருசியை உங்களுக்கு வழங்குகிறார். அது அவருடைய தியானத்தில் விளைந்தது. அது அவர் கண்டறிந்த வழி!

ஒரு ஜென் குரு அப்படியல்ல. நீங்கள் அவர் முன்பாய் சென்று ஏழு முறை அவரைக் குனிந்து வணங்குகிறீர்கள்.

அப்பாவித்தனாய் எதையோ கேட்டு வைக்கிறீர்கள். அவர் அப்படியே பாய்ந்து உங்கள் தலையில் ஒரு தட்டு தட்டுகிறார், சற்றும் எதிர்பாராத விதமாய். முற்றிலும் மாறுபட்ட உபாயம்! ஆனால் அப்படித் தட்டுவது யுார் என்பதை எண்ணிப் பாருங்கள். ஒரு போதிதர்மர், ஒரு ரின்ஸாய் ஒரு பொகுஜு அல்லவா உங்கள் மீது பாய்ந்து உங்கள் தலையில் தட்டுகிறார்! ஒரு கணத்துக்கு எல்லாமே நின்றுவிடுகிறது, எதிர்பாராதவிதமாய். 'கடவுள் இருக்கிறாரா?' இப்படி ஒரு சாதாரண கேள்வியைத்தான் நீங்கள் கேட்டிருப்பீர்கள். அவருக்குக் கோபம் வந்து விடுகிறது. ஏன்? உங்களால் அதைக் கற்பனை செய்யவும் முடியாது. அவர் அதற்கு அவகாசமளித்தால்தானே! நீங்கள் அதைவிட்டு நழுவவும் அவகாசமிருக்காது.

ஒருசமயம் பொகுஜு தம்முடைய குருவைச் சந்திக்கச் சென்றபோது அப்படித்தானாயிற்று. அவர் புத்தரைப் பற்றி என்னமோ கேட்டார். குரு அவரைத் தாக்கி, சன்னல் வழியே வீசியெறிந்து விட்டார். அவர் அப்படி வீசியது மூன்றாம் மாடி சன்னலில் இருந்து. பரிதாபத்துக்குரிய அந்தச் சீடர் விழுந்தது ஒரு பாறையின் மீது. உடைந்து நொறுங்கியிருக்க வேண்டும்! குரு சன்னல் வழியே எட்டிப் பார்த்தபடி கேட்டார், 'என்ன, இப்போ புரிஞ்சதா?' என்று.

அந்தக் கணத்தில் பொகுஜுவிற்கு ஞானோதயமாயிற்று. 'ஆம், குருவே, நான் உள்ளே வந்து, தங்களுடைய பாதங்களைப் பணிந்து என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளலாமா,'

'வா, உனக்கு நல்வரவு. வந்து என்னோடு ஒரு கோப்பை தேநீர் பருகு' என்றார் குரு.

அவர்கள் ஒன்றாக தேநீர் பருகினர்.

அதிமுக்கியமான ஒன்று நடந்து விடுகிறது ஒரு கணத்தில். அந்த ஆபத்தான கணத்தில் நீங்கள் விழுகிறபோது செத்துப்போன மாதிரிதான். உங்களால் அப்போது எதையுமே எண்ணிப் பார்க்க முடியாது. ஆபத்தான நேரங்களில் சிந்தனை நின்றுவிடும்.

நீங்கள் செயல்படுகிறபோது மனம் மந்தமாகி (வேகம் குறைந்துவிடுவது) விடும் என்கிறார் குருட்ஜீவ். அது சரிதான். உடலின் வேகம் அதிகரிக்கிறபோது மனதின் வேகம் குறைந்துவிடும். அது தொடர்ந்து வட்டங்களுக்குள்ளாகவே சுற்றிக்

கொண்டிருக்கும். ஓர் அவசர ஆபத்து என்கிறபோது உங்கள் இருப்புணர்வு உங்களுடைய மனதை தர்க்க முறையில் யோசித்து ஒரு முடிவுக்கு வரவிடாது. காரணம் தாமதமாகி விடும். உதாரணமாக, பக்கத்தில் ஒரு பாம்பு போகிறது. நீங்கள் அந்தச் செய்தியை உங்கள் மனதிடம் அனுப்பினால் என்னவாகும்? தொல்லைதான். முதலில் மனம் சொல்லும், 'தொண்ணூறு சதவிகிதம் பாம்புகள் விஷமற்றவை. இந்தப் பாம்பு விஷமுடைய தாயிருக்க நூற்றில் மூன்று சாத்தியக்கூறுகள்தாம் (chances) இருக்க முடியும். நூறு பேரைப் பாம்பு கடித்தால் அவர்கள் எல்லாருமே இறந்து போய்விடுவதில்லை. ஐந்து சதவிகிதம் பேர் மட்டுமே இறக்கிறார்கள், மற்றவர்கள் பிழைத்துக் கொள்வார்கள். அந்த ஐந்து பேரும் எப்படியும் சாகிறவர்கள்தாம். எதற்காகக் கவலைப்படுவது. ஒருவர் எப்படியும் ஒருநாள் இறந்துதானே ஆகவேண்டும்.' ஆகா மரணத்தைப் பற்றியும் ஆன்மாவின் இறவாத் தன்மை பற்றியும் எப்பேர்க்கொத்த சிந்தனைகள்! ஆனால், பாம்பு இதைப் பற்றியெல்லாம் கவலைப்படாது. அது தத்துவார்த்தமானதல்ல. அது உங்களுக்கு அவகாசமளிக்காது. நீங்கள் யோசித்து ஒரு முடிவுக்கு வருவதற்குள் அது உங்களைக் கொத்திவிட்டுப் போய்விடும்.

குருட்ஜீவ் சொல்வது சரிதான். உடனடித் தேவை என்கிற போது, உடம்பு மனதிடம் இருந்து விலகி, சுயமாய் செயல்படுகிறது. அது செயல்படும் வாய்ப்பை மனதுக்குத் தருவதில்லை. உடம்பு, தனக்குள்ள அறிவைப் பயன்படுத்தும்; தனக்குள் ஓர் எதிர்ச் செயல் புரியும் தன்மையை அது கொண்டிருக்கும். எனவே எண்ணிப் பார்த்துச் செயல்படுகிற அவசியம் இருக்காது.

ஜென் குருமார்கள் தங்களுடைய சீடர்களிடம் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள்.

ஜென் குரு ஒருவர், தெய்வத்தன்மை பற்றியோ, புத்தரைப் பற்றியோ, வாழ்வின் உயர்ந்த பரிமாணங்களைப் பற்றியோ பேசும்போது கைவிரலொன்றை மேல்நோக்கி உயர்த்தியபடி பேசுவார். அவருடைய சீடர்களில் மிகவும் இளையவனான ஒருத்தனுக்கு. அந்த விரலை உயர்த்துகிற பழக்கத்தில் ஓர் ஆர்வம். குருவிற்கு வேண்டும் போதெல்லாம் தேநீர் கொடுப்பது, கொசுக்களை விரட்டுவதில் அவருக்கு உதவியாக இருப்பது என்று சில்லறை வேலைகளைச் செய்து கொண்டிருப்பான் அவன்.

சமயத்தில் குருவிற்கு தெரியாதவாறு, அவனும் அவரைப் போல் கைவிரலை உயர்த்திக் காட்டுவான். தமது உரையைக் கேட்கக் கூடியிருப்பவர்கள் எதற்காகச் சிரிக்கிறார்கள் என்பது குருவிற்குத் தெரிந்து விட்டது.

ஒரு ஜென் குருவால் மட்டுமே அதையெல்லாம் அறிந்துணர முடியும். ஒருநாள் அந்தச் சீடனின் செய்கையைக் கையும் களவுமாய் பிடித்து விட்டார் அவர். அவன் வானை நோக்கி விரலை உயர்த்தியதும் ஒரு கூர்மையானக் கத்தியால் அந்த விரலைத் துண்டித்து விட்டார்.

சீடன் வீறிட்டலறினான். குருவானவர் இடியைப்போல் முழங்கினார், 'நிறுத்து. எங்கே விரலை உயர்த்திக் காட்டு' என்று.

விரல் வெட்டுப்பட்டு குருதி வழிந்தோடுவதை மறந்தவனாய் அந்தச் சீடன் விரலை உயர்த்தினான், இல்லாத விரலை. குருவின் உத்தரவாயிற்றே!

இல்லாத விரலை உயர்த்திப் பிடித்த அந்தத் தருணத்தில், கண்ணுக்குப் புலப்படாத ஒன்றை அவன் கண்டுகொண்டான். அந்த குரு காணக்கூடிய ஒன்றை அவனுக்குக் காட்டுவிக்கவில்லை, காண முடியாத ஒன்றைக் காணும்படி செய்தார். சீடன் அப்போது சிரிக்கத் தொடங்கினான். அவனைத் தழுவிக்கொண்ட குரு சொன்னார், 'நீ புரிந்து கொண்டாய்' என்று.

அந்தச் சிறுவன் முதல்முறையாய் தன்னுடைய உடனடி ஞானத்தை (சடோரி)ப் பெற்றான். பிற்பாடு அவர் புகழ்பெற்ற ஞான குருவானார்.

பல்வேறு அணுகுமுறைகள், ஆனால் உண்மை என்பது ஒன்றே. உண்மை அமைதியானது. அது அமைதியின் ஒற்றைக் குறிப்பு. அமைதியாயிருங்கள், அறிந்து கொள்ளுங்கள். புத்தர்கள் எதற்காக அறியப்பட்டார்களோ அந்த ஒன்றையும் நீங்கள் அறிந்து கொள்வீர்கள். உண்மை சாசுவதமானது. அது காலத்தால் அழியாதது, மாற்ற முடியாதது.

***கடைசிக் கேள்வி:***

***ஒஷோ அவர்களே! மதத்தைப் பற்றி குழந்தைகளுக்குப் போதிப்பது நல்லதல்லவா? இயேசுவைப் பற்றி அறிந்து கொள்ள***

*உதவுவதுடன் அவர்களுக்கு நன்மையளிக்கிற விஷயந்தானே அது?*

குழந்தைகளுக்கும் சரி வளர்ந்து விட்டவர்களுக்கும் சரி மதத்தைக் கற்றுக் கொடுக்க முடியாது. வளர்ந்தவர்களுக்கே அதைக் கற்றுக் கொடுப்பது சாத்தியமில்லை என்கிறபோது குழந்தைகளுக்கு எப்படிக் கற்றுத் தர முடியும்? மதம் போன்ற வற்றை மதம் சார்ந்த வாழ்க்கையை வாழ்வதன் மூலமே புரிந்து கொள்ள முடியும். மதம் சார்ந்த வாழ்க்கை என்கிறபோது ஒரு கிறிஸ்தவ வாழ்க்கையையோ, இந்துக்களின் வாழ்க்கையையோ நான் கருத்தில் கொள்ளவில்லை. அன்பு, பிரார்த்தனை, கொண் டாட்டம், மகிழ்ச்சி, உற்சாகம், நன்றி இவற்றால் நிரம்பிய வாழ்க்கையே இங்கு நான் குறிப்பிடுவது. நீங்கள் மதம் சார்ந்த வாழ்க்கை வாழ்ந்தால் குழந்தைகளுக்கும் அது விதிக்கப்பட்டதாகி விடும்.

நீங்கள் ஆன்மிகமான, மதம் சார்ந்ததொரு வாழ்க்கையை வாழாமல் இருப்பதால்தான், உங்கள் குழந்தைகளுக்கு மதத்தைக் கற்றுத்தர வேண்டியிருக்கிறது. அத்தகைய மதக் கோட்பாடுகள் உதவப் போவதில்லை. ஒரு குழந்தை தாகமாயிருக்கும் பொழுது, அதனிடம் ‘H20’ (கலக்கும் விதிமுறை, குறியீடு) பற்றிச் சொல்லா தீர்கள். அதற்குத் தேவை குடிப்பதற்கு நீர். தண்ணீரைக் கொடுங்கள். அவனிடம் எந்தச் சேர்க்கைப் பொருட்களினால் தண்ணீர் உருவாகிறது என்று விளக்கிக் கொண்டிருக்காதீர்கள். கடலில் இருக்கும் மொத்த நீரிலும் இவைதாம் இருக்கின்றன என்பது போன்ற வேதியியல் அவனுக்குத் தேவைப்பட்டது. ‘H20’ என்பது தண்ணீருக்குச் சமமானது.

குழந்தை கேட்கும், ‘நான் $H_2O$ வை எப்படிக் குடிக்க முடியும்?’ என்று.

அப்பொழுது தான் அபத்தமான ஒரு விஷயம் நடந்தேறு கிறது. தான் $H_2O$, $H_2O$ என்று பலமுறை மந்திரம் போல் உருப் போட்டுக் கொண்டிருந்தால் அந்த அதிசயம் நடந்து விடும் என்று அது நம்புகிறது.

மக்கள் ‘ராமா, ராமா’ என்றும், ‘ஆவேமரியா’ ‘ஜீஸஸ்’ என்றும், ‘அல்லா அல்லா’ என்றும் அநேகக் கோட்பாடுகளைக்

கொண்டிருப்பார்கள். நீங்களும் அப்படித் திரும்பத் திரும்பச் சொல்லிக் கொண்டிருக்கலாம். அவை அனைத்துமே '$H_2O$' வை பல முறை சொல்கிற மாதிரிதான். உங்கள் நேரத்தை நீங்கள் வீணடிக்கிறீர்கள். அத்துடன் உங்கள் அறிவுத் திறனையும் பாழ் பண்ணி விடுகிறீர்கள்.

எவனொருவன் இப்படி உருப்போட்டுப் பழகுகிறானோ, அவன் அறிவை இழந்து விடுகிறான். அவனுடைய அறிவுக் கூர்மை மங்கிப் போகிறது. நீங்கள் குழந்தைகளுக்கு எதை கற்றுத் தரப்போகிறீர்கள்? மதம் என்றால் என்ன, அதைக் கற்றுத் தருவதற்கு வழிமுறையேதும் உண்டா? ஆம், உண்டு. நீங்கள் கிறிஸ்துவ மதத்தைக் கற்றுத்தர இயலும். ஏனெனில் அது ஒரு கோட்பாடு. நீங்கள் புத்த மதத்தைக் கற்றுக் கொடுக்கலாம். ஏனெனில், அதுவும் ஒரு கோட்பாடே. ஒரு கோட்பாட்டைக் கற்றுக் கொடுக்க இயலும். ஆனால், ஒரு மதத்திற்கு இத்தகைய கோட்பாடுகளுடன் எவ்விதத் தொடர்பும் இல்லை. மதம் என்பது ஒரு கோட்பாடு அல்ல, அனுபவம்.

அனுபவத்தை நீங்கள் கற்றுக் கொடுக்க இயலாது. அதை உணர்ந்து கொள்ளத் தக்க சந்தர்ப்பத்தை உருவாக்கிக் கொடுக்க இயலும். நீங்கள் வாழும் முறையைக் கவனிக்கிற குழந்தைகள், உங்கள் வாழ்க்கை முறையை தங்கள் ஆன்மாவிற்குள் கொஞ்சம் கொஞ்சமாய் கிரகித்துக் கொள்கிறார்கள். குழந்தைகள் வெகு எளிதாய் ஈர்க்கப்படுகிறார்கள். அவர்கள் மிகவும் வளைந்து கொடுக்கும் தன்மை உடையவர்கள். அத்துடன், கூர்ந்து கவனிக்கும் திறனும் உண்டு அவர்களுக்கு. மேலும், அவர்கள் எப்பொழுதும் கற்றுக் கொள்ளத் தயாராயிருப்பார்கள். மிகவும் அழகானது என்று உணர்கிற எதையும் அவர்கள் கற்றுக் கொள்வார்கள். அவர்கள் அதை விழுங்கி, சீரணமும் செய்து விடுவார்கள்.

ஆனால், நீங்கள் முட்டாள்தனமான கோட்பாடுகளை - அறிவுக் கொள்கைகளை அல்லவா அவர்களுக்குக் கற்றுத்தரு கிறீர்கள். உதாரணமாக, கிறிஸ்து ஒரு கன்னித் தாய்க்கு பிறந்தார் என்பீர்கள். குழந்தை உங்களைப் பார்த்து நகைக்கும். ஏனெனில், அவர்கள் நீங்கள் நினைப்பதைவிட அதிகமாகவே விஷயங்களை அறிந்து வைத்திருக்கிறார்கள்.

தே.தே.பெ. 11

ஒரு சிறுவன், தனது ஞாயிற்றுக்கிழமை பள்ளிப்பாடம் பற்றி பின்வரும் கட்டுரையை எழுதினான்.

‘எகிப்து நகரமொன்றின் சிறைச்சாலையில் கம்பிகளை உடைத்துக் கொண்டு, கைதிகள் தப்பியோடினர். மிகவும் அகலமான ஓர் ஏரிக்கரையை அடையும் வரை அவர்கள் ஓடிக் கொண்டே இருந்தனர். அப்போது, சிறைக்காவலர்கள் அவர்களை நெருங்கி வந்து கொண்டிருந்தனர். எனவே அந்த யூதக் கைதிகள் ஏரியில் குதித்து நீந்தத் தொடங்கினர். தங்களுக்காகக் காத்திருந்த படகில் ஏறி தப்பிச் சென்றனர். காவலர்கள் விடவில்லை. ஒரு நீர் மூழ்கிக் கப்பலில் ஏறி அவர்களைத் துரத்தினர். கைதிகள் சென்ற படகைத் தகர்க்க முயன்றனர். ஆனால், அந்தக் கைதிகள், நீர் மூழ்கிக் கப்பலைக் கடுமையாகத் தாக்கி சிதறடித்தனர். பிறகு அவர்கள் எளிதாய் மறுகரையை அடைந்தனர். தங்கள் தலைவனைப் போல் செயல்பட்ட வரை, ‘மோசஸ்’ என்கிற அவருடைய முதற் பெயரைக் கொண்டே அழைத்தனர்.

இப்படி கட்டுரை எழுதிய சிறுவனின் தந்தை அவனிடம், ‘மகனே! உனது ஆசிரியர் உனக்கு இதைத்தான் கற்றுக் கொடுத்தார் என்பது உண்மையா. அதை நீ உறுதியாகச் சொல்ல முடியுமா?’ என்று கேட்டார். இந்தக் கேள்விக்கு அவன் உடனே பதிலளித்தான், ‘அப்பா, நான் சொன்ன இந்தக் கதையை நீங்கள் நம்பவில்லை என்றால், எனது ஆசிரியர் சொல்லியதை மட்டும் எப்படி நம்புவீர்கள். கண்டிப்பாய் அதையும் நம்ப மாட்டீர்கள்’ என்று.

இதுபோன்ற கதைகளைச் சொல்வது உங்கள் குழந்தைகளை மதப்பற்று உள்ளவர்களாக்க உதவாது. மாறாக, அவர்கள் மதநிந்தனை செய்பவர்களாக மாறவே நீங்கள் உதவுகிறீர்கள். குழந்தைகள் வளர்ந்து பெரியவர்களாகிற போது இந்த மதக் கோட்பாடகள் அனைத்துமே, தேவதைக் கதைகள் போன்ற வெறும் கற்பனை என்பதை அவர்கள் அறிந்து கொள்வார்கள்.

உங்களது கடவுள், உங்களது இயேசுநாதர் அனைவருமே அவர்களுடைய மனதில் ‘சாண்டாக்ளாஸ்’ என்கிற கிறிஸ்துமஸ் தாத்தா மாதிரி ஆகிவிடுவார்கள். நீதிக் கதைகளும், தவறான வழி காட்டல்களும் உங்கள் குழந்தைகளின் பொழுது போக்கிற்கு உதவும். ஆனால், நீங்கள் அதுவரை முற்றிலும் உண்மை என்று அவர்களுக்குச் சொல்லி வந்த அனைத்துமே முழுமையான

பொய்களன்றி வேறில்லை. அதனை அவர்கள் அறிந்து கொள்ள நேரும் போது, தங்களுக்குள் இருந்த விலை மதிக்க முடியாத ஒன்றை இழந்ததாகவே அவர்கள் உணர்வார்கள். ஆன்மா சார்ந்த ஒரு பாதிப்பை நீங்கள் ஏற்படுத்தி விடுகிறீர்கள். அதன்பிறகு, அவர்களுக்கு மதங்கள் குறித்த ஆர்வம் இருக்காது.

எந்த அளவிற்கு மதபோதனைகள் நடக்கின்றனவோ அந்த அளவிற்கு உலகம் மதப்பற்றே இல்லாததாய் மாறிவிடுகிறது. நான் கூர்ந்து கவனித்து, கண்டு கொண்ட உண்மையிது. ஒரு குழந்தைக்கு மதக் கோட்பாடுகள் பற்றி கற்றுக் கொடுக்கக் கூடாது.

நீங்கள் பிரார்த்தனை செய்யும் நேரங்களில் உங்கள் குழந்தையும் அங்கேயே இருக்கட்டும். நீங்கள் நடனம் ஆடுகிற போதும் உங்கள் குழந்தை உடன் இருக்கட்டும். வெகு விரைவிலேயே குழந்தையும் உங்களுடன் நடனமாட வந்து விடும். நடனமாடுகிற ஆசை யாருக்குத்தான் இருக்காது? வாழ்க்கை எத்தனை நளினமானது என்பதை குழந்தைகள் அறிந்து கொள்ளட்டும். வாழ்க்கை என்பது துன்பங்களால் மட்டுமே ஆனதல்ல, அதில் ஆனந்தமும் உண்டு என்பதை அவர்கள் அறிய வேண்டும். சிரிப்பது நல்லது, தெய்விகமானது என்பதை அவர்கள் தெரிந்து கொள்ளவும், அன்பு மிக நல்லது, அன்பே தெய்வம் என்பதையும் அவர்களுக்கு புரிய வையுங்கள்.

சொல்லப் போனால் குழந்தைகள் இவற்றைத் தங்களுடைய சிறு வயது முதலே கண்டுணர்ந்து, கொஞ்சம் கொஞ்சமாய் கிரகித்துக் கொள்வது சிறப்பு. அவர்களுக்கு ஆன்மிக உணர்வு ஏற்படக் கூடிய சூழ்நிலையை உருவாக்கிக் கொடுங்கள். எவற்றையெல்லாம் தங்களுடைய புறக்கண்களால் அவர்கள் காண இயலாதோ அவற்றை எல்லாம் காலப்போக்கில் - சற்று முன் பின்னாக என்றாலும் அவர்களால் அறிந்து கொள்ள முடிகிறது.

உங்கள் குழந்தைகளிடம் அதிகம் உணர்ச்சி வசப்படுகிற தன்மையை நீங்கள் ஏற்படுத்தியிருப்பீர்கள். அவர்களுக்கு நீங்கள் சொல்லிக் கொடுத்துக் கொண்டேயிருக்கலாம். ஆனால், அவற்றை எல்லாம் யார் நினைவில் வைத்துக் கொள்ளப் போகிறார்கள். உங்களுக்கு கற்பிக்கப்பட்டவற்றில் நீங்கள் எவற்றை எல்லாம் நினைவில் வைத்திருக்கிறீர்கள்? யாருமே எதையும் நினைவில் வைத்துக் கொள்வதில்லை. குப்பையில் தான் போட்டு விடுகிறார்கள்.

மூன்று இத்தாலியர்கள் மிக வேகமாகத் தங்களது காரை விரைவுப் பாதையில் ஓட்டிச் சென்றனர். அவர்களுடைய கார் அந்த வழியே வந்த லாரி ஒன்றுடன் நேருக்கு நேராய் மோதியதில், அந்த இடத்திலேயே அவர்கள் மூவரும் மரணமடைந்தனர்.

பிறகு - தாங்கள் சொர்க்கத்தின் நுழைவாயிலில் நின்று கொண்டிருப்பதை உணர்ந்தனர். கதவைத் தட்டினர். உடனே கடவுளும் பதிலளித்தார். 'உங்களுக்கு என்ன வேண்டும்?' கடவுள் கேட்டார். 'நாங்கள் உள்ளே வர விரும்புகிறோம்' அவர்கள் தெரிவித்தனர்.

'ஆகா, அதற்கு முன் ஒரு கேள்விக்கு நீங்கள் பதிலளிக்க வேண்டியிருக்கும்' என்ற கடவுள், ஓர் இத்தாலியனை நோக்கி, 'சரி, விட்டோ! ஈஸ்டர் பண்டிகை எதற்காகக் கொண்டாடப்படுகிறது. சொல் பார்க்கலாம்' என்று கேட்டார்.

விட்டோ, சற்று யோசித்து பதிலளித்தான். 'அமெரிக்காவில் எப்பொழுது நிறைய பேர் ஒன்றாக அணிவகுப்பு நிகழ்ச்சியை நடத்துகிறார்களோ, இரவுகளில் வாண வேடிக்கை எப்பொழுது தொடர்ந்து நடக்கிறதோ, பக்தர்கள் என்று உல்லாசப் பயணம் போகிறார்களோ அன்று ஈஸ்டர் கொண்டாடப்படுகிறது. அது ஜூலை மாதத்திலாக்கும் என்று.

அதைக் கேட்ட கடவுள், 'வருந்துகிறேன் விட்டோ, நீ நரகத்திற்குச் செல்லும்படி இருக்கும்' என்று கூறிவிட்டார். பின்னர், பியத்ரோவை நோக்கி, 'இப்போது ஈஸ்டர் பற்றி நீ சொல்லு பார்க்காலம்' என்றார்.

பியத்தோ புன்னகைத்தபடி, 'கடவுளே அது பற்றி எனக்குத் தெரியும். அது நவம்பர் மாதத்தில் ஒருநாள் வருகிறது. அன்று, குடும்பத்தில் உள்ளவர்கள் ஒன்றாக அமர்ந்து வான்கோழி, உருளைக்கிழங்கு, இனிப்புகள் என்று பல உணவு வகைகளையும்...'

கடவுள் இடை மறித்தார், 'வருந்துகிறேன், பியத்ரோ, நீ நரகத்திற்குத்தான் போக வேண்டும்' என்றார்.

க்யூஸெப்பை நோக்கியவர், 'நீ தேவாலயங்களில் ஆராதனை நேரங்களில், மத குருவிற்கு உதவியாளனாய் பத்து ஆண்டுகள் பணியாற்றிருக்கிறாய். ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையும் தவறாமல்

தேவாலயத்துக்குச் சென்று வருகிறாய். நீ ஈஸ்டர் பற்றிச் சொல்' என்று கேட்டார்.

க்யூஸெப் பதிலளித்தான், 'ஆண்டவரே, மக்களுக்கு உங்கள் குமாரனைப் பிடிக்காமல் போதும், அவரைச் சிலுவையில் அறையும்படி கூறினர். உங்கள் குமாரன் மரிப்பதற்கு முன், மூன்று மணி நேரம் அங்கேயே தொங்கியபடி இருந்தார். அதன் பின் அவருடைய தாயும் மற்ற நண்பர்களும் வந்து அவரைக் கீழிறக்கினர். அவரது உடலைத் துணியால் நன்கு பொதிந்து, ஒரு குகைக்குள் வைத்தனர். குகையின் வாயிலை பெரிய பாறையால் மூடி விட்டார்கள். மூன்று நாட்களுக்குப் பிறகு உங்கள் குமாரன் உயிர்த் தெழுந்தார். அந்தப் பாறையை அகற்றி விட்டு வெளியேறினார். அப்பொழுது அவரால் தம்முடைய நிழலைக் காண இயலவில்லை. எனவே அவர் மீண்டும் குகைக்குள் சென்று அங்கே ஆறுமாதங்கள் இருந்தார்.

நீங்கள் கற்றுக் கொடுத்துக் கொண்டே இருக்கலாம். ஆனால், யாருமே அதைக் கவனிப்பதில்லை, கேட்பதில்லை. குழந்தைகள் உதவியற்றவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் ஞாயிற்றுக்கிழமை நடத்தப்படும் பள்ளிகளுக்குப் போயாக வேண்டும். எனவே போகிறார்கள். அவர்கள் கவனித்துக் கேட்டாக வேண்டும், எனவே கேட்கிறார்கள். ஆனால், அவர்களது மனம் அங்கே இருப்ப தில்லை. அவை எல்லாமே பொருளற்றது என்பதை அவர்கள் அறியவும் கூறவும் செய்கிறார்கள். அவற்றால் பயனில்லை என்பதை அவர்கள் சொல்லாமல் இருக்கலாம், ஆனால் அதுபற்றி அவர்கள் அறிந்திருப்பது நிச்சயம்.

உலகத்தை ஆன்மிக வழியில் நடக்கும்படி மாற்ற இது சரியான பாதை அல்ல. இந்த முறையில்தான் நாம் பல நூற்றாண்டுகளாக முயற்சி செய்து வந்தோம். எனினும், அந்த முயற்சியில் தோல்வியே கண்டோம், என்பதைப் பின்னர் அறிந்து கொண்டு, அவர்கள் அதை வெளிப்படையாகச் சொல்லவும் செய்கிறார்கள். ஒருவேளை சிலர் வெளிப்படையாகச் சொல்லத் தயங்கலாம். ஆனால், அவை அனைத்துமே பொருளற்றவை என்பதை அவர்கள் உறுதியாக அறிந்திருப்பார்கள்.

உலகத்தை ஆன்மிக வழியில் நடக்கும்படி மாற்ற இது ஒரு சரியான பாதையல்ல. ஆனால், இந்தப் பாதையில் தான் பல

நூற்றாண்டுகளாக நாம் முயற்சி செய்து வந்தோம். மேலும், அந்த முயற்சியில் தோல்வியே கண்டோம். உலகில் சமய நம்பிக்கை அதிகரிப்பதற்கு மாறாக, அங்கு நம்பிக்கையின்மையே அதிகரித்து வருகிறது. இப்படிப் போதனைகள் பெருகி வருவதாலும், சமயப்பரப்புக் குழுக்கள் இருந்து வந்ததாலும், மதகுருமார்கள் இருந்ததாலும், மதக்கோட்பாடுகளை மறுத்துப் பேசுகிறவர்களாலும் இந்த உலகம் மதப்பற்றில்லாததாக மாறிவிட்டது. மதப் பற்றின்மை போலவே மதவிரோதமும் ஏற்பட்டது.

அடிப்படையில் எங்கோதவறு நேர்ந்திருக்கிறது என்பதை நாம் புரிந்து கொள்ள வேண்டிய நேரமிது. மதத்தைக் கற்றுத் தருவதற்கு இது சரியான பாதையல்ல. மதத்தைப் பற்றிக் கொள்வதைப் போல் எளிதானதாயிருக்காது, கற்றுக் கொள்வதும், கற்பிப்பதும். இயேசுநாதருக்கும் இது நேர்ந்திருக்கிறது. காரணம், அப்படி நடப்பதற்கான ஒரு வெற்றிடத்தை அவர் தோற்றுவித் திருக்கிறார்.

இயேசு நாதரிடம் சீடரொருவர் வினவினார்: ‘பிரார்த்தனை என்றால் என்ன?’ என்று.

இயேசு என்ன செய்தார் தெரியுமா?

மறுமொழி எதுவும் கூறாமல் தரையில் மண்டியிட்டு பிரார்த்தனை செய்யத் தொடங்கினார். அவரது கண்களில் இருந்து கண்ணீர் பெருகி, வழிந்தோடியது. அங்கு பேச்சுக்கு இடமேது?

கேள்வி கேட்ட சீடரும் மண்டியிட்டு அமர்ந்தார். அவர் சரணாகதி தத்துவத்தின் அழகையும் மேன்மையையும் தமது வாழ்வில் முதல் முறையாக உணர்ந்தார். கடவுளுக்கு நன்றி செலுத்துவதில் மட்டற்ற மகிழ்ச்சி அடைந்தார். குருவைப் போலவே சீடரும் நெகிழ்ந்து விட்டிருந்தார். இருவரும் மகிழ்ச்சியும், நன்றியும் கலந்த உணர்வுடன் அழுது கொண்டிருந்தனர்.

முடிவாக இயேசுநாதர் அந்தச் சீடரை நோக்கி ‘தற்போது பிரார்த்தனை என்றால் என்னவென்று தெரிகிறதா?’ எனக் கேட்டார்.

சீடர் தலையசைத்தபடி, ‘ஆம், ஐயனே! அதைத் தெரிந்து கொள்ள முடிந்தது’ என்றார்.

கற்றுக் கொடுப்பதற்கு இதுவே சரியான முறை. அதை விட்டு விட்டு காலாவதியான கோட்பாடுகளையும், அபத்தங்களையும், கண்ணுக்குப் புலப்படாத பலவற்றையும் பற்றி விளக்கிப் பதில ளிக்கக் கூடாது. அவை எல்லாம் ஒரு காலத்தில் பொருத்தமான வையாக இருந்திருக்கலாம். ஆயினும், இன்றைய காலகட்டத்தில் அவை முற்றிலும் அறிவுக்குப் பொருந்தாததாகவே இருக்கும்.

நீங்கள் தற்பொழுது ஒரு குழந்தையிடம் சென்று 'கடவுள் இந்த உலகத்தை கிறிஸ்துவிற்கு நாலாயிரத்து நான்கு வருடங்கள் முன்பாய் படைத்தார் என்று சொல்லிப் பாருங்கள். அந்தக் குழந்தை உங்களை நோக்கிப் புன்னகை புரியும். ஒன்று, நீங்கள் அதை முட்டாளாக்கப் பார்க்கிறீர்கள் அல்லது நீங்கள் முழுமையாக அறியாமையில் மூழ்கி இருக்கிறீர்கள்' என்று குழந்தைக்குத் தெரியும்.

கோடானு கோடி ஆண்டுகளாய் இயங்கிக் கொண்டிருக்கிற உலகமிது. உண்மையில் இதற்கு தொடக்கம் என்பதே இருந் திருக்காது. கடவுள் உலகைப் படைத்த கர்த்தா அல்ல, படைப்பே அவர்தான். 'கடவுள் இந்த உலகை ஆறே நாட்களில் படைத்தார், ஏழாம் நாள் ஓய்வெடுத்துக் கொண்டார், காரணம், அவர் களைப்பாக இருந்தார்' என்றால் அதன் பொருள் என்ன? உலகைப் படைத்தவர் பிறகு அந்த உலகத்தைப் பற்றிக் கவலைப்படவில்லை என்று தானே கொள்ள வேண்டும்!

ஒரு மனிதன் தையற்காரனிடம் சென்று, 'எனது 'கோட்' தைப்பதற்கு இன்னும் எவ்வளவு நாட்கள் ஆகும்? நீர் ஆறு வாரங்களாக 'இதோ, அதோ' என்று உறுதி அளித்துக் கொண்டிருக்கிறீர். ஆனால், 'அப்புறம் வாருங்கள்' என்று சொல்லி அலைய விடுகிறீர். உமக்குத் தெரியுமா, இந்த உலகத்தை கடவுள் ஆறே நாட்களில் படைத்து விட்டார். ஆனால், என்னுடைய சிறந்த உடையை உம்மால் இன்னமும் தைக்க முடியவில்லை?' என்று சப்தம் போட்டார்.

அந்தத் தையற்காரர் என்ன பதிலளித்தார் தெரியுமா? 'ஆமாம், எனக்குத் தெரியும். இந்த உலகத்தையும் பாருங்கள், நான் தைத்துள்ள 'சூட்' (Suit) டையும் பாருங்கள். உங்களுக்கே வேறுபாடு தெரியும். உலகம் எத்தகைய குழப்பநிலையில்

இருக்கிறது! ஆறு நாட்களில் படைத்தால் எதுவுமே இந்த லட்சணத்தில் தான் இருக்கும்' என்று.

இறைவன் இன்னமும் படைத்தபடிதான் இருக்கிறார். உண்மையைச் சொல்ல வேண்டுமானால் இறைவனை என்றுமே இயற்கையில் இருந்து தனிப்பட்ட ஆளாகப் பிரித்துப் பார்ப்பது இயலாத ஒன்று. அனுபவப்பட்டவர்கள் அறிவார்கள் இயற்கையின் சக்தியே இறைவனுடைய சக்திதான் என்பதை. அவர் படைக்கவில்லை, இயற்கை தானே படைத்துக் கொள்கிறது. அது முடிவற்றது, நிரந்தரமானது.

ஆமாம், நீங்கள் கடவுளை எப்படி விவரிக்கப் போகிறீர்கள்? மேலே சொர்க்கத்தில் ஒரு சிம்மாசனத்தில் அமர்ந்திருக்கும் வெண்தாடி உடைய ஒரு முதியவராகவா? நீங்கள் அப்படி விவரித்தால் குழந்தைகளின் மனதில் எத்தகைய எண்ணங்கள் தோன்றும் என்பதை அறிவீர்களா? நீங்கள் வியப்படைவீர்கள்.

கார்ல் குஸ்தாவ் ஜங், தனது இளமைக்கால நிகழ்ச்சிகளை நினைவு கூர்கிறார். அவர் தேவாலயத்தில் பொறுப்பான பதவியில் இருந்த ஒருவரது மகன். எனவே, மதம் பற்றிய விளக்கப் பேருரைகளைக் கேட்கிற வாய்ப்பு அவருக்கிருந்தது. இறைவன் மேலே சிம்மாசனத்தில் அமர்ந்தபடி, பூமியில் உள்ள அனைவரையும் கவனித்துக் கொண்டிருக்கிறார் என்று சொல்லப்படுவதைக் கேட்டார். பின்பு அதுபற்றி ஜங் இப்படிக் குறிப்பிட்டார்: 'அப்பொழுதெல்லாம் என் மனதில் எழுந்த ஒரே எண்ணம் ஒருவேளை கடவுளுக்கு இயற்கையின் அழைப்பு தோன்றினால் என்னவாகும்? அவரோ மேலே அமர்ந்திருக்கிறார். நிச்சயமாக தொல்லைதான். ஆமாம், அவர் என்ன செய்வார்?' என்று.

குழந்தைகள் எப்போதுமே குழந்தைகள்தாம். நீங்கள் குழந்தைகளுடன் பேசும் போது எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அவர்களுக்கென்று சொந்தமான எண்ணங்கள் இருக்கும். அவன் அதைப்பற்றி எண்ணியதும் சிரித்து விடுவான். அவனுடைய தகப்பனாருக்கோ அதைப் பற்றி எதுவும் தெரிந்திருக்காது. ஒருநாள் அந்த மனிதர் தன் மகனிடம் 'நான் இறைவன் சிம்மாசனத்தில் அமர்ந்திருப்பது பற்றிப் பேசும் போதெல்லாம் நீ ஏன் சிரித்துக் கொண்டிருக்கிறாய்? என்று கேட்டார்.

எனவே, தான் சிரித்ததன் காரணத்தை அவன் விளக்கும்படியாயிற்று. தகப்பனார் உடனே 'வாயை மூடிக் கொண்டு, இது போன்ற எண்ணம் உனக்கு வரக் கூடாது' என்று சீறி விழுந்தார்.

அந்த நிகழ்வை நினைவு கூர்ந்த ஜங் மேலும் கூறுவார் 'அதெல்லாம் ஒன்றுமேயில்லை. அதைவிட மோசமான எண்ணங்களும் எனக்குத் தோன்றியதுண்டு. 'இறைவன் சிம்மாசனத்தில் அமர்ந்து இருப்பது ஜங்கிற்கு தோன்றிய எண்ணம் அவருள் நிலைத்து விட்டிருந்தது. அவர் வளர்ந்து முதியவரான பின்னும், தேவாலயத்தில் சென்று இறைவன் சிம்மாசனக் காட்சிப் படத்தைப் பார்த்தால் அதே நினைவு அவருக்கு வந்து விடும்.

நீங்கள் குழந்தைகளுக்குக் கற்றுக் கொடுக்கும் பாடங்கள் எந்தப் பயனையும் தராது. உங்கள் குழந்தைகளை நீங்கள் உண்மையிலேயே நேசித்தால் 'உலகில் பல விஷயங்கள் நமக்குப் பிடிபடுவதில்லை. ஆயினும் அவை இருக்கின்றன' என்பதை அவர்களுக்கு புரிய வைக்கிற மாதிரி வாழுங்கள். அவர்களுடைய மனதில் தாங்களாகவே எண்ணிக் கொள்ளும்படி வாழுங்கள். நீங்களாக எதையும் அவர்கள் மனதில் திணிக்க முயலாதீர்கள். நம்ப வைக்கிற முயற்சி வேண்டாம். அவர்கள் ஆதாரங்களைக் கேட்டதில்லை, ஆதாரங்களைப் புரிந்து கொள்ளவும் முயல்வதில்லை. உங்கள் வாதங்களைக் கேட்பதில் அவர்களுக்கு ஆர்வம் கிடையாது. அவர்கள் எதிர்பார்ப்பது நடைமுறையில் கிடைக்கும் அனுபவங்களைத் தான்.

குழந்தைகள் எப்போதுமே சாகசங்களை எதிர்கொள்ளத் தயாராயிருப்பவர்கள் - உங்களை விடவும், நீங்கள் பாதுகாப்புகள் பற்றி அஞ்சலாம். அதுபோல் ஆயிரம் விவகாரங்கள் குறித்த அச்சம் இருக்கும் உங்களுக்கு. குழந்தைகள் எதற்குமே அஞ்சுவதில்லை. அவர்கள் அச்சமற்றவர்கள். தெய்விகமான விஷயங்களுடன் எளிதில் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு விடுவார்கள். அது உங்களுக்கு சாத்தியப்படாது.

நாம் குழந்தைகளுக்குக் கொடுத்திருப்பதெல்லாம் அத்தனை சிறப்பில்லாத அறிவியல் கோட்பாடுகளைத் தான். மதத்தின் பெயரால் கண்டதையும் அடைந்து விடுகிற பேராவல் நமக்கிருக்கிறது. நம்மிடம் போட்டி மனப்பான்மை இருக்கிறது.

குழந்தைகளுக்கும் அவற்றைக் கற்றுக் கொடுத்து அவர்களையும் நம்மைப்போல் ஆக்கவே நாம் முயற்சிக்கிறோம்.

'மற்றவர்களை விட உயர்ந்தவனாக இரு. மற்றவர்களை விட உன்னுடைய மதப்பற்று அதிகமாயிருக்க வேண்டும். மற்றவர்களை விட புனிதனாகி விடு. ஒழுக்கமும் நேர்மையும் உன்னிடம் இருந்தால் தான் கடவுள் உனக்குத் தகுதியானவற்றைப் பரிசளிப்பார். நீ அப்படி நடந்து கொள்ளா விட்டால் நரகம் சென்று தண்டனைகளை அனுபவிக்க நேரிடும் என்போம்.

இதுதான் உளவியல் சார்ந்த முறையில் குழந்தைகளை ஒழுங்குபடுத்துவது! அவர்களை அச்சுறுத்தி, மேலும் பேராசைக்காரர்களாக்குவது. இதைத்தான் நீங்கள் மதம் என்கிறீர்கள். ஒருவரை அச்சுறுத்துவதா மதம்? உண்மையில் மதம் அவர்களை அச்சமற்றவர்களாகவல்லவா வைத்திருக்க வேண்டும்! அடுத்த பிறவியில் உனக்கு வெகுமதிகள் கிடைக்கும் என்று ஒருவனுக்கு ஆசைகாட்டி, அவனைப் பேராசைக்காரனாக்குவது தானா மதம்? எங்கே ஆசைகளில்லையோ அங்குதானே மதம் இருக்க முடியும்?

மேலும் நீங்கள் குழந்தைகளை போட்டி மனப்பான்மை கொண்டவர்களாக ஆக்குகிறீர்கள். 'மற்றவர்களை விட ஒழுக்க மாயிரு, மற்றவர்களைவிட தூய்மையாயிரு. மற்ற பையன்களைப் பார் எவ்வளவு சிறப்பாக நடந்து கொள்கிறார்கள்! 'அவர்களுடைய மதப்பற்றைக் கவனித்தாயா' - இப்படி மற்றவர்களைச் சுட்டிக் காட்டியே அவர்களுக்குள் போட்டி மனப்பான்மையை வளர்த்து விடுகிறீர்கள். விளைவு? குழந்தைகள் மனதில் ஓர் ஆணவம் உருவாகிறது. அதை உருவாக்குவது நீங்கள். தூய்மையான ஆணவம்! உங்களால் நெறிப்படுத்தப்படுகிற சிறுவன் தேவாலயத்தில் நுழைந்ததும், அங்கிருப்பவர்களை விடவும் தானே தூய்மையானவன் என்று நினைக்கிறான். தன்னை உயர்த்தியாய் கருதிக் கொண்டு, ஏணிப் படிகளில் ஏறி உயரச் செல்கிறான். வெகு விரைவில் அந்த சொர்க்க லோகமே தனதாகி விடுகிற மிதப்பு கொள்கிறான்.

இப்படித்தான் உங்கள் குழந்தைகளின் மனதில் போட்டி மனப்பான்மையை நீங்கள் தோற்றுவிக்கிறீர்கள். இந்தப் போட்டி

மனப்பான்மை கடை வீதிகளில் இருக்கிறது. ஆசிரமங்களிலும் இருக்கிறது. கடைவீதியில் இருப்பதை மன்னித்து விடலாம். ஆனால், ஆசிரமங்களில் இருப்பது அப்படியல்ல. பணத்திற்காக ஓடிக் கொண்டிருக்கும் மக்கள் போட்டி போடுவது சரி. ஆனால் ஒழுக்கத்திற்கும் இவ்வளவு கூட்டமா?

இலட்சியத்திற்கு முக்கியத்துவம் கொடுப்பவர்கள் அதை அடையும் வழிகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. தங்களுடைய நோக்கத்தை, இலக்கை எந்த வழியிலும் அடையத் தயாராகி விடுகிறார்கள். வழி நேர்மையானதா, ஏமாற்றுத்தனம் உடையதா என்றெல்லாம் அவர்கள் ஆராய்வதில்லை. 'நாம் அடைய விரும்பியதை அடைந்த தீரவேண்டும்' என்கிற தீவிரந்தான் அவர்களிடம் காணப்படும்.

அது ஆன்மிகத்திற்கான பாதை அல்ல. மத உணர்வு கொண்ட மனதில் ஏன் போட்டி மனப்பான்மை இடம் பெறுகிறது? உண்மை யான மத உணர்வு கொண்டவர் எந்த இலட்சியமும் வைத்திருக்க மாட்டார். அவருக்கு எங்கும் போக வேண்டியதில்லை; நரகத்தில் பயந்து கொண்டிருக்கவோ சொர்க்கத்தில் எதையேனும் பெறவோ அவர் போக வேண்டியதில்லை. தற்போதே அவர் தெய்விகமாக இருக்கிறார். இந்தக் கணத்தில் இருக்கிறது சகலமும். தன்னை யாருடனும் அவர் ஒப்பிட்டுப் பார்க்க அவசியமில்லை. ஆனால், நமது துறவிகள் ஒப்பிடும் போக்கைக் கொண்டிருக்கிறார்கள். 'யார் பெரியவர், யார் பெரிய துறவி?' என்று. துறவிகள் முட்டாள் தனமான குழந்தைகள்'. தற்போதும், 'நாம் எதையெல்லாம் கற்றுக் கொண்டோம், பள்ளியில் என்ன செய்தோம்' - என்கிற மாதிரி எண்ணமிடுகிறார்கள். தங்கள் பதினாறுகளைத் தாண்டி இன்னமும் அவர்கள் வரவில்லை.

○

*முதல் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! ஒரு கலகம் அல்லது கிளர்ச்சி எப்படி எதையும் சரியாகப் புரிந்து கொள்வதாகவும், பெண்மை கலந்ததாகவும், அனைத்தையும் சரி என்று ஏற்றுக் கொள்வதாகவும் இருக்க முடியும்? பழைமையான விஷயங்களை எல்லாம் வேண்டாம் என்று ஒதுக்கித் தள்ளவே மனம் விரும்புகிறது. அவை வெறும் விழிப்புணர்ச்சியும், அன்பும்... அவ்வளவுதான், இல்லையா?***

புரட்சி மறுப்பது, கிளர்ச்சி ஒப்புதலளிப்பது, புரட்சி எதிர்மறை யானது. கிளர்ச்சி என்பது நேர்மறையானது. புரட்சி தவறானவற்றை ஒதுக்கி அவை இருக்கவே கூடாது என்கிறது. கிளர்ச்சியோ நல்லவற்றை , நேர்த்தியானவற்றை ஏற்கிறது. புரட்சி என்பது கடந்த காலத் தொடர்புடையது. கிளர்ச்சி நிகழ்காலத்திற்கு தகவாய் (oriented) அமைவது. இரண்டுமே ஒன்றைப் போல் மற்றொன் றில்லை.

புரட்சி ஓர் அழிவு சக்தி. கிளர்ச்சி (கலகம்) ஆக்கத்திறன் கொண்டது. புரட்சி ஒரு போதும் பெண்மைத்தனம் கலவாதது, புதிய எண்ணங்களைக் கருத்தில் கொள்ளும் ஆர்வம் இல்லாதது, எதையும் சரி என்று ஏற்றுக் கொள்ளாது. ஆனால், கிளர்ச்சி சற்றே பெண்மை கலந்ததாய், எதையும் சரியென்று ஏற்றுக் கொள்வதாய், எதையும் கிரஹித்துக் கொள்ளும் தன்மையுடையதாயிருக்கும்.

நான் தற்போது கிளர்ச்சி பற்றி பேசப் போகிறேன். புரட்சி பற்றியல்ல. புரட்சி அரசியல் சார்ந்தது. கலகம் ஆன்மிகம் சார்ந்தது. புரட்சி ஒரு பெரிய கும்பலுடன் இணைந்தே செயல்படுவது. கிளர்ச்சி தனியாகவே இருப்பது. நீங்கள் ஒரு கிளர்ச்சிக்காரராக

இருக்கலாம். ஆயினும், உங்களுடன் யாரும் இருக்க வேண்டும் என்பதில்லை. நீங்கள் தனியாகவே ஒரு கிளர்ச்சிக்காரராக இருக்க முடியும். ஆனால், தனியாகவே நீங்கள் புரட்சி செய்ய இயலாது. அதற்கு உங்களிடம் ஒரு பெரிய அமைப்பும், உங்களுக்குப் பின்னால் ஒரு பெரிய படையும் இருக்க வேண்டும். நீங்கள் அவசியம் புரிந்து கொள்ள வேண்டிய, தனிச்சிறப்பு வாய்ந்த சில விஷயங்களும் உண்டு – நீங்கள் யாருடனாவது சண்டையிட்டால் கொஞ்சம் கொஞ்சமாக நீங்களே உங்களுக்கு விரோதி போல் ஆகி விடுவீர்கள். அதுதான் பிரச்சினை. கண்டிப்பாய் அப்படித்தான் ஆகும். இயற்கையின் நடப்பில் இருக்கும் ஒரு வழிமுறை அது. நீங்கள் ஒருவருடன் சண்டை போட வேண்டும் என்றால் முதலில் அவரைப் போல் நீங்கள் இருந்தாக வேண்டும். இல்லையெனில் அவருடன் உங்களால் போரிட இயலாது. உங்கள் விரோதியை நீங்கள் எச்சரிக்கையோடு தேர்வு செய்ய வேண்டும். நண்பர்களைத் தேர்ந்தெடுப்பதில் அத்தனை எச்சரிக்கை வேண்டியிருக்காது. அவர்களால் ஏற்படும் பாதிப்புகள் குறைவு. ஆனால் விரோதிகளோ வஞ்சனை மிக்கவர்கள்.

அனைத்துப் புரட்சிகளும் தோல்வியடைய விரோதிகளே முக்கிய காரணம். விரோதிகள் முடிவு செய்கிறார்கள். ரஷ்யாவைச் சேர்ந்த 'ஸார்' (czar) என்பவர்கள் தாம் அங்குள்ள கம்யூனிஸ்ட் கட்சியின் அமைப்பைத் தீர்மானித்தார்கள். அவர்கள் தாம் ஜோசப் ஸ்டாலின் எப்படி இருக்க வேண்டும் என்று முடிவு செய்தார்கள். பிற்பாடு மற்ற ஸார் (czar) களைவிட, தாமே சிறந்தவர் என்பதை அவர் நிரூபித்தார்.

'ஸார்'களுடன் போரிடுவது, ஸார்களின் ஏகாதிபத்ய அமைப்புடன் போரிடுவது, அவர்களுடைய தந்திரங்களையும், வெற்றிக்கான திட்டங்களையும் எப்படித் தாங்கள் பயன்படுத்துவது என்பதை கம்யூனிஸ்டுகள் கற்றுக் கொண்டனர். தாங்கள் அதிகாரத்துக்கு வரு முன்னரே அவற்றை அவர்கள் கற்றுக் கொண்டாயிற்று. சொல்லப்போனால், ஸ்ார்களே தங்கள் விரோதிகள் சரியான முறையில் உருவாகக் காரணமாகி விட்டார். கம்யூனிஸ்டுகள் பதவிக்கு வந்தவுடனேயே தங்கள் விரோதிகளான 'ஸார்'கள் எப்படித் தங்களிடம் நடந்து கொண்டார்களோ, அப்படியே அவர்களும் நடந்து கொண்டனர்.

உலகெங்கிலும் இதே நடை முறையை நீங்கள் காண முடியும், தற்போது, இந்த நேரத்தில் ஈரானில் இது நடந்து கொண்டிருக்கிறது. சக்கரவர்த்தி போய் விட்டார். அவரை விட மோசமான ஒரு படையினர் அரசைக் கைப்பற்றினார். கொமேனி - பழைய அரசரை விட பத்து மடங்கு வன்முறையாளனாக இருந்தார். கொமேனி திட்டமிடும் முறைகளை அந்தப் பழைய அரசரிடம் இருந்தே கற்றுக் கொண்டார். தமது வாழ்க்கை நெடுகிலும் துன்பங்களில் மூச்சுத் திணறிக் கொண்டு இருந்தவர் அவர். அவரிடம் பழிவாங்கும் உணர்ச்சி மேலோங்கியது. அந்தச் சக்கரவர்த்தியை விடவும் பெரிய ஆளாகத் தம்மை நிரூபித்துக் காட்டினார் அவர். தினமும் நூற்றுக்கணக்கான மக்கள் அவருடைய ஆட்சியில் சிறையிலடைக்கப்பட்டு, உயிரைவிட்டுக் கொண்டிருக் கிறார்கள்.

எப்போதுமே இப்படித்தான் நடந்து வருகிறது. புரட்சிகள் தோல்வியைத் தழுவுகின்றன. ஏனெனில், அவையெல்லாம் எதிர்ச் செயல்களாகும். நீங்கள் என்றுமே புரட்சியாளனாக இருக்காதீர்கள். ஒரு கிளர்ச்சிக்காரனாக இருங்கள். ஒரு கிளர்ச்சியாளன் என்றுமே கடந்த காலத்துக்கு எதிரானவனல்லன். 'எதிரானவன்' என்றால் தான் எதிர்க்கிற ஒன்றின்மீதே அவனுடைய கவனம் குவிந் திருக்கும். ஆனால், தான் எதிர்க்குமளவிற்கு கடந்த காலம் தகுதியுடையதல்ல என்றே அவன் எண்ணுகிறான். அவன் எவ்விதத்திலும் கடந்த காலத்திடம் வசியப்படவுமில்லை.

கடந்த காலத்துக்கு ஆதரவானவர்கள் அதனிடம் வசியப்பட்ட வர்கள். அதற்கு எதிரானவர்களும் அதன் வசியத்திற்குள்ளான வர்களே. கிளர்ச்சிக்காரனோ அது பயனற்றது என்பதை உணர்ந்து, அதனுடன் போர் புரியாமல் அப்படியே விட்டு விடுகிறான்.

நீங்கள் கடந்த காலத்துடன் போராடினால் அது உறுதியாக உங்களுடன் ஒட்டிக் கொண்டு விடும். அதனுடன் போராடு வதாயின் நீங்கள் அதை உறுதியாகப் பற்றிக் கொள்கிற நிலை ஏற்படும். கடந்த காலத்தில் இருந்து விளக்கம் பெறலாம். ஆனால், அது உங்களை விளக்க அனுமதிக்கக் கூடாது. அதை அப்படியே விட்டு விட்டு வெளியேறி விடுங்கள். ஒரு பாம்பு தன்னுடைய பழைய தோலை எப்படி உதறிவிட்டு, அதைத் திரும்பிக் கூடப்

பார்க்காமல் செல்கிறதோ அப்படிச் செல்லுங்கள். கிளர்ச்சிக் காரனின் போக்கு அத்தகையது.

நான் ஒரு கிளர்ச்சிக்காரனின் வழிகளைத்தான் கற்றுத் தருகிறேன். அதுவே மதத்தின் வழியும் ஆகும். மதம் என்பது கிளர்ச்சியேயன்றி, புரட்சியல்ல. மேலும், அது ஒரு தனிப்பட்ட மனிதனுக்குப் பெரும் மதிப்பைத் தருகிறது. ஒவ்வொருவரும் அவரவர் வழியில் போராளியாகலாம். கடந்த காலத்தை விட்டு உடனே வெளியேறி விடுங்கள். அதனுடன் போராடாதீர்கள். அது இனியும் இருப்பதில்லை. மேலும், நீங்கள் போராடிக் கொண்டேயிருந்தால், உங்கள் ஆயுள் போதாது. கடந்த காலம் என்பது கோடிக்கணக்கான ஆண்டுகளை உள்ளடக்கி இருப்பது. எழுபது அல்லது எண்பது ஆண்டுகளே இருக்கக் கூடிய உங்கள் வாழ்நாளில் நீங்கள் எப்படி அதனுடன் போராடப் போகிறீர்கள். சிறியதொரு கால அளவே உங்களிடம் இருப்பது. உங்களால் எப்படி மிகப்பெரிய கடந்த காலத்துடன் போராட இயலும்? உங்கள்முன் ஒரேயொரு வழிதான் உண்டு. புத்திசாலித்தனமாக அதை அப்படியே விட்டு, வெளியேறி விடுங்கள். அதனுடன் போராட எந்தத் தேவையும் இல்லை. அதை நீங்கள் பல நிலைகளாகப் புரிந்து கொள்ள வேண்டும்.

மக்கள் அரசியல் சார்ந்த வகையில் கடந்த காலத்துடன் போராடுகிறார்கள். இந்துவின் கடந்த காலம், கிறிஸ்தவரின் கடந்த காலம், முகமதியரின் கடந்த காலம் என்று அவர்களும் கடந்த காலமாகவே மாறுகிறார்கள். சிக்மண்ட் ஃப்ராய்டு காலத்தில் இருந்தே மக்கள் கடந்த காலத்துடன் போராடி (உளவியல் ரீதியாய்)க் கொண்டிருக்கிறார்கள் என்பது தெரிய வருகிறது. இளம் வயதில் உண்டாகிற அதிர்ச்சிகள், பயங்கரங்கள் இவற்றுக்கெதிராய் போராடும் நிலை இருக்கிறதே! விரும்பத்தகாதவற்றைப் பல வகையாய் பிரித்துக் கொண்டு அவற்றுடன் போராட வேண்டும். அந்த வகையில் உங்களுடைய ஒட்டு மொத்த வாழ்க்கையே வீணாகி விடுகிற அபாயம் இருக்கிறது. உங்கள் நிகழ்காலமும், எதிர்காலமும் முழுமையாய் பாழ்பட்டு விடும். கடந்த காலம் முன்பே பாழாகி விட்டிருக்கிறது. நிகழ் காலமும் உளப்பகுப்பாய்வு (Psychoanalysis) பற்றி ஆராய்ச்சிகளில் வீணாகப் போகிறது. எதிர்காலத்திலும் போராட்டம் தொடர, அதுவும் கடந்த

காலங்களுடன் போராடுவதென்பது நிழல்களுடன் நடத்துகிற யுத்தம். அவற்றை உங்களால் எதுவும் செய்ய முடியாது. ஒரு நிழலை நீங்கள் வெற்றி கொள்ள முடியும் என்றா எண்ணுகிறீர்கள்? அது ஒரு நிழல் என்பதை நீங்கள் அறிந்திருப்பது முக்கியம்.

உளவியல் சார்ந்த முறையில் வாழ்க்கையை அணுகுவதற்கும், மதம் சார்ந்த முறையில் வாழ்க்கையை அணுகுவதற்கும் அடிப்படையிலேயே வேறுபாடுகள் உள்ளன. அதிக அளவில் தியானம் பண்ணுங்கள். மிகுந்த விழிப்புணர்வோடு இருங்கள். இந்தக் கணத்தில் இங்கே இருங்கள். அந்த முழுமையான விழிப்புணர்ச்சியில் அந்த ஸ்படிகம் (crystal) போன்ற தெளிவான உணர்வு நிலையில் நீங்கள் கடந்த காலம் ஒரு தேவையற்ற சுமை என்பதை உணர்ந்து கொள்வீர்கள். பயனில்லாத ஒன்றைச் சுமக்கும்படி உங்களை யாரும் கட்டாயப்படுத்த முடியாது. நீங்களாகவே சுமக்கிறீர்கள் என்றால் அது நீங்கள் எடுத்த முடிவு.

தற்போது உங்களைக் கட்டாயப்படுத்தி அதை ஏற்கும்படிச் செய்ய உங்கள் பெற்றோர்களில்லை. கடந்த காலம் என்பது ஏற்கனவே முடிந்து விட்டது. நிழல்கள் தாம் பின்தங்கி இருந்து கொண்டிருப்பது.

நீங்கள்தாம் சுதந்திரமானவர். பார்ப்பது என்பதே சுதந்திரந்தான். இதில் மிகவும் புரிந்து கொள்வதே விடுதலை. உங்களுக்குத் தேவைப்படுகிற அத்தனை சக்திகளும் இங்கே கிடைக்கின்றன. இப்பொழுது நீங்கள் முழுமையாக மலர இயலும். இப்பொழுதுதான் நீங்கள் முழுமையாய் மலர்ந்து மணம் வீச முடியும். அப்பொழுதுதான் உங்கள் வாழ்வில் ஆனந்தம், கொண்டாட்டம், மனநிறைவு இருக்கும்.

புரட்சி என்பது கடந்த காலத்திற்கு எதிராகவும், எதிர் காலத்தின் பொருட்டும் நடக்கிறது. கடந்த காலம் என்பது இனி இல்லை. அது போன்றே எதிர்காலமும்... அது இன்னும் வந்த பாடில்லை. கடந்த காலத்தையும் எதிர்காலத்தையும் உட்கொண் டிருப்பது புரட்சி. உடாப்பியா (Utopia) என்கிற வார்த்தை மிக அழகானது. உடாப்பியா என்றால் 'உண்மையல்லாத - கற்பனை யான' என்று பொருள். புரட்சி - நடைமுறைக்கு ஒத்துவராத, என்றுமே வராமலே போய்விடுகிற எதிர்காலத்திற்காக நடப்பது.

*இரண்டாம் கேள்வி:*

*'ஓஷோ, அவர்களே! நான் எங்கோ ஒரு முறை படித்திருக் கிறேன். அதாவது புத்தரிடம் அவருடைய சீடரொருவர், 'வாழ்க்கை என்றால் என்னவென்பதை சுருக்கமாய் விளக்குங்கள்' என்று கேட்டுக் கொள்கிறார். புத்தர் அதற்கு; 'துன்பமயமானது' என்று பதிலளித்ததாய் படித்தேன். இது உண்மையா?'*

இது உண்மைதான். ஆனால் ஒரு புத்தரே இன்னொரு புத்தரிடம் சென்று, 'வாழ்க்கை என்றால் என்ன என்று கேட்டிருந் தால் அதற்கு 'பேரின்பம்' என்றே அவர் பதிலளித்திருப்பார். அந்தக் கேள்விக்கும், இந்தப் பதிலுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. இந்தப் பதிலுக்கு கேள்வி கேட்டவருடன் தான் தொடர் பிருக்கிறது. கவுதம புத்தர் போன்ற ஒருவர் கேள்விகளுக்கு பதில் அளிப்பதில்லை. அவர் கேள்வி கேட்பவருக்கான பதிலையே அளிக்கிறார். அவர் வாழ்க்கையைப்பற்றி எதையும் கூறவில்லை. நினைவிருக்கட்டும். அவர் வாழ்க்கை பற்றிப் பேசவில்லை. கேள்வி கேட்ட மனிதனின் வாழ்க்கையைப் பற்றியே பேசுகிறார்.

தம்முடைய வாழ்க்கையை துன்பமயமானது என்று புத்தர் கூறவில்லை. அது நிச்சயமாக அப்படியில்லை. அத்தனை சிறப்பை, பேரின்பத்தை, மண்மீது அத்தனை அருளை, முழுமை யான கொண்டாட்டத்தை யாரும் கண்டிருக்க முடியாது. அவரைப் போல் எழிலார்ந்த மனிதரை மனித குலம் நினைவில் கொண்டிருக்க முடியாது. புத்தர் எப்படி துன்பகரமானது என்று கூறியிருப்பார்? ஒன்றை நீங்கள் நினைவில் கொள்ள வேண்டும். புத்தர் வாழ்க்கை பற்றி அப்படிக் கூறவில்லை.

புத்தரிடம் வேறுபட்ட மனிதர்கள் பலரும் வந்து கேள்வி களைக் கேட்டார்கள். அவர் அளிக்கிற பதில்களும் கேள்வி களுக்கேற்பவே இருக்கும்.

ஒரு சமயம், யாரோ ஒருவர் வந்து 'கடவுள் இருக்கின்றரா?' என்று கேட்டார். புத்தர் 'இல்லை' என்று பதிலளித்தார். அன்று மதியமே மற்றொருவர் வந்து 'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்டபோது 'இருக்கிறார்' என்றார். மாலையில் இன்னொருவர்

வந்து 'கடவுள் என்று ஒருவர் உள்ளாரா?' என்று கேட்டார். புத்தர் எதுவுமே கூறாமல், மவுனமாக இருந்தார்.

அந்த மூன்று நிகழ்வுகளின் போதும் ஆனந்தன் என்கிற பிரதான சீடர் அருகிலிருந்தார். அவர் புத்தரின் தேவைகளைக் கவனித்து, அவரைப் பராமரிப்பவர். புத்தரின் பதில்களைக் கேட்டு அவர் குழப்பமுற்றார். ஒரே நாளில் ஒரே விதமான கேள்விக்கு வெவ்வேறு விதமான பதில்களா? ஆம், இல்லை, இரண்டு மற்ற மவுனம்! அதற்கு மூன்று காரணங்கள் இருக்க வேண்டும். சொல்லத் தகுந்த பதில்களனைத்தும் சொல்லப்பட்டாயிற்று.

அன்றிரவு ஆனந்தனால் உறங்க முடியவில்லை. புரண்டு புரண்டு படுத்திருந்தவரிடம் புத்தர் கேட்டார் - 'இன்று உனக்கு என்ன ஆயிற்று. அசதியா அல்லது வேறு ஏதாவதா?' என்று.

ஆனந்தன் பதிலளித்தார், 'எனக்கு உங்களைத் தொந்தரவு செய்ய விருப்பமில்லை. ஆனால், இந்தக் கேள்விக்கு நீங்கள் பதில் சொல்லும் வரை எனக்குத் தூக்கம் பிடிக்காது. இன்று காலை யில் கடவுளைப் பற்றிக் கேட்டவருக்கு 'இல்லை' என்றீர்கள், மதியம் 'இருக்கிறார்' என்றீர்கள். மாலையில் மவுனத்தையே பதிலளிக்கிறீர்கள். ஆனால், கேள்வி மட்டும் ஒரே கேள்விதான்'.

புத்தர் சிரித்தார், பிறகு பேசினார்: 'இன்று காலையில் வந்து கடவுள் இருக்கிறாரா என்று கேட்டவன் ஆத்திகன். அவன் கடவுள் இருப்பதை நம்புகிறவன். கடவுள் இருக்கிறார் என்ற பதிலையே அவன் என்னிடம் எதிர்பார்த்தான். இருக்கிறார் என்று சொல்வதால் அவனுடைய நம்பிக்கை மேலும் உறுதி அடையும் என்று நினைக்கிறான். ஆனால், நான் மக்களுடைய நம்பிக்கையை உறுதி அடையச் செய்வதில்லை. ஏனெனில் நம்பும் மனது என்றுமே அறிந்து கொள்ளும் மனதாகாது. நம்புவது என்பது இருளில் இருப்பது போன்றது. நான் அவனுடைய நம்பிக்கையைத் தகர்க்க எண்ணினேன். எனது பதிலுக்கும் இறைவனுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. எனது பதிலில் அவனுக்குத்தான் தொடர்பு இருந்தது. அவன், தனது நம்பிக்கைக்கு மேலும் சில சான்றுகளைச் சேகரிக்கவே இங்கு வந்திருக்கிறான். காரணம், அதன் பின்னர் அனைவரிடமும், 'நான் மட்டுமா கடவுளை நம்புகிறேன். புத்தரே கடவுள் இருப்பதை ஒப்புக் கொண்டார்' என்று கூறிக் கொள்வான்.

அவன் புரிந்து கொள்வதற்காக வரவில்லை. என்னைத் தனது நம்பிக்கையின் ஒரு சாட்சியாக்கிக் கொள்ளவே விரும்பியிருக்கிறான். அவனுடைய நம்பிக்கை அச்சத்தில் உண்டானது. மற்றவர்களால் அவனுக்குக் கற்பிக்கப்பட்ட ஒரு கட்டுப்பாடே அது. அவனுடைய அறிவீனத்தை மூடி மறைக்கும் ஒரு மூடு பொருளாகவே அந்த நம்பிக்கை அவனுக்குப் பயன்படுகிறது. நான் எந்த வகையிலும் அதற்கு உதவ முடியாது. நான் அதனைத் தகர்த்தேயாக வேண்டும் என்கிற நிலை. அதனால் 'இல்லை' என்றேன். 'புத்தர் இல்லை என்று கூறிவிட்டார்!' அவனுள் விசாரணை துவங்கும். அவன் மீண்டும் வருவான். நீ பார்க்கப் போகிறாய்' என்றார்.

அவ்வாறே ஒரு நாள் அவன் மறுபடியும் வந்தான். 'நீங்கள் சொன்னது சரிதான். அந்த நாளில் இருந்து எனது வழிபாடு வெறுமையாக இருக்கிறது. அன்று முதல் நான் ஆலயத்திற்குச் சென்றால் அங்கே எந்தத் தெய்வமும் இருப்பதாய் தெரியவில்லை. நீங்கள் கடவுள் இல்லை என்கிறபோது, இருப்பதாய் சொல்ல நான் யார்? நீங்கள் தெய்விகமானவர். உங்களுடைய சொல்லில் உண்மை இருக்கும். முதலில் நான் ஆராய்ச்சி மனத்துடன் தான் இங்கு வந்தேன். தற்போது, திறந்த மனதோடு உங்களிடம் வந்து நிற்கிறேன்' என்றான்.

'இரண்டாவது மனிதன் ஒரு நாத்திகன். அவன் கடவுள் இல்லை என்று நம்புகிறவன். அவனும் முதலில் வந்தவனைப் போல் ஆராய்ச்சிக்காரன்தான். அவனுக்கும் என்னுடைய வார்த்தை தேவைப்பட்டது. அவனுடைய நம்பிக்கையும் முட்டாள் தனமானது. ஏனெனில், ஒன்றை அறிந்து கொள்ளாமலே நம்புவது முட்டாள்தனந்தான். முழுமையாய் தெரிந்து கொண்ட பின்பே எதையும் நம்ப வேண்டும். ஆனால், அப்படி நம்புவதையும் நம்பிக்கையாய் கொளவதற்கில்லை. நம்பிக்கை என்பது சொந்த அனுபவத்தில் உண்டாக வேண்டும். அது, அடுத்தவன் அனுபவத்தைப் பொறுத்ததன்று,' என்றார் புத்தர்.

மூன்றாவது நபரைப்பற்றி என்ன சொல்கிறீர்கள்? ஆனந்தன் கேட்டார்.

புத்தர் சொன்னார் 'அந்த மனிதன் ஆத்திகனுமல்லன், நாத்திகனுமல்ல. எனவே, 'இருக்கிறார்' என்ற பதிலோ, 'இல்லை'

என்ற பதிலோ அவனுக்குத் தேவைப்பட்டது. அவன் பரிசுத்த ஆன்மா. அவனுடைய இதயம் தூய்மையானது. அவனுடைய கேள்வி உண்மையிலேயே மாசற்றது. அவனது கேள்வியில் இருந்த தேடலை, தாகத்தை நான் உணர்ந்தேன். எனவேதான் நான் மவுனமாக இருக்க நேர்ந்தது. அதுவே அவனுக்கான பதில். அவனும் அதைப் புரிந்து கொண்டான்' என்று.

புத்தர் மேலும் சொன்னார், 'நீ அதைக் கவனித்தாயா? நான் கண்களை மூடி, மவுனமாயிருந்தேன். அவனும் தன் கண்களை மூடியிருந்தான். அப்பொழுது மிகச்சிறந்தது அவனுள் இறங்கியது. மேலும், ஒன்றை நீ கவனித்திருக்க வேண்டும். அவன் திரும்பிச் சென்ற பொழுது அவனுடைய கண்கள் பளபளத்தன. அந்தக் கண்கள் மெழுகுவர்த்திகளைப் போல் ஒளி சிந்தின. நீ கவனிக்கவில்லையா? அவன் திரும்பிச் செல்வதற்கு முன்னர் எனது கால்களைத் தொட்டு, பாதம் பணிந்து நன்றி தெரிவித்தான். 'நீங்கள் எனக்குச் சரியான பதிலைத் தந்தீர்கள்' என்றான் அவன். நான் பதிலேதும் சொல்லவில்லை தான். ஆயினும், எனது மவுனம் அவனுக்கு எதையோ உணர்த்தியிருக்க வேண்டும். எனவேதான் அவன் நன்றி சொன்னது. என்னுடைய இருப்பில் இருந்து, என்னில் இருந்து எதையோ அவன் கிரகித்திருப்பான். உண்மையிலேயே தேடல் உள்ளவன்தான் அவன்.

ஆன்மிகத்தில் தேடல் உள்ளவனுக்கு வாய்ச் சொற்கள் தேவைப்படாது. நிலை பேறுடைய ஏதோ ஒன்றுதான் அவனுக்குத் தேவைப்படுவது. ஓர் இதயம் மற்றொரு இதயத்தினுள் ஊடுருவுவதுபோல், தனது குருவானவர் தன் ஆன்மாவிற்குள் ஊடுருவிச் சென்று, அங்கு உறங்கிக் கொண்டிருக்கும் தன்னுடைய ஆன்மாவைத் தூண்ட வேண்டும் என்றே எண்ணுகிறான்.

உங்கள் வேள்வியில், புத்தரிடம் ஒருவர் வாழ்க்கை பற்றி விளக்கும்படி கேட்டதற்கு, அவர் 'வாழ்க்கை துன்பமயமானது' என்று கூறியதாகக் குறிப்பிட்டீர்கள்.

அது உண்மைதான். புத்தர் சமயங்களில் அப்படிக் கூறியிருக் கிறார். பலருடைய கேள்விக்கும் 'வாழ்க்கை துன்பமயமானது' என்றே அவருடைய பதில் இருந்திருக்கிறது. அவரேதான் வாழ்க்கைக்கு விளக்கம் கேட்ட வேறுபலருக்கு, 'வாழ்க்கை

ஆனந்த மயமானது' என்றும் பதிலளித்திருக்கிறார். பரமசுகம் - சச்சிதானந்தம்! (சத் - உண்மை சித் - பிரக்ஞை ஆனந்தம் - இன்பத்தின் உறைவிடம்)

மக்களுக்கு ஏனோ வாழ்க்கை துன்பமயமானது என்று கருதிக் கொள்வதிலேயே விருப்பம். காரணம், தங்கள் சொந்த அனுபவத்துடன் அது பொருந்துவதாய் அவர்கள் நினைக்கிறார்கள். 'வாழ்க்கை மகிழ்ச்சியானது' என்று புத்தர் கூறக் கூடும். ஆனால் அது உங்கள் சொந்த அனுபவங்களுடன் ஒத்துப் போவதில்லை. அது உங்கள் காதுகளில் வறண்டு ஒலிக்கிறது. உங்களால் அதைப் புரிந்து கொள்ள இயலாது. அது உங்கள் இதயத்தில் எத்தகைய மணியோசையையும் எழுப்புவதில்லை.

புத்தரிடம் ஆனந்தம் பற்றியும், மகிழ்ச்சி பற்றியும், சங்கீதம் பற்றியும் கூட விளக்கம் கேட்டுப் பலர் வந்திருக்கலாம். அவர்களுக்கெல்லாம் அவர் சொன்ன பதில்கள் அத்தனை முக்கியத்துவம் பெறாது. காரணம், அவர் எப்பொழுதாவது தான் பதில் கூறும்படி இருந்திருக்கும். அத்தகைய கேள்விகளைக் கேட்க வருபவர்கள் அபூர்வம். கோடிக்கணக்கான மக்களுக்கு 'உன் வாழ்க்கை துன்பமயமானது' என்பதைக் காதில் கேட்கவே விருப்பம்.

ஆனால், 'புத்தர் எதற்காக', 'உன் வாழ்க்கை துன்பமயமானது' என்று கூற வேண்டும்? 'நீங்கள் அதிலிருந்து வெளியே வர வேண்டும் என்பதற்காகவே அவர் அப்படிச் சொன்னது. உங்களால் வேறு வகையான வாழ்க்கையை வாழ இயலும். துன்பமான வழியொன்றை மட்டுமா வாழ்க்கை கொண்டிருக்கிறது? இதுவும் ஒரு வழி, மோசமான வழி. உங்கள் வாழ்க்கையை நீங்கள் ஒரு நரகமாக்கிக் கொண்டிருக்கிறீர்கள். அது ஒரு நரகமாக மாறுகிற போது, சொர்க்கமாகவும் மாற முடியுமே! துன்புறும் நிலையை சுகமளிப்பதாக்கிக் கொள்ள முடியும். இருப்பது ஒரே சக்திதான். அதைத் தவறாகப் பயன்படுத்தினால் துன்பம். முறையாகப் பயன்படுத்தினால் அதுவே பரமசுகம் (Bliss).

துன்பம் என்றால் என்ன? துன்பம் என்பது பிரபஞ்ச இருப்பில் இருந்து விலகி நிற்கிற உணர்வு. வாழ்வில் இருந்து தான் தனிமைப்படுத்தப்பட்டதாக எண்ணுதல், அதுவே துன்பம்.

(பரமசுகம் (ஆனந்தம்) என்றால் என்ன? அது பிரபஞ்சத்துடன் ஒருமித்து இருக்கிற உணர்வு. பிரபஞ்சத்துடன் ஒருமித்து இருப்பதில் உண்டாகிற பரவசம்! உடல் சார்ந்த வகையில் பிரபஞ்சத்துடன் ஒன்றாயிருப்பது. அகந்தை இருந்தால் அது துன்பம். அகந்தையற்றிருப்பது ஆனந்தம். இரண்டு மாறுபட்ட வழிகள் உங்கள் முன்பாய், தேர்வு செய்ய வேண்டியது நீங்கள்)

'வாழ்க்கை துன்ப மயமானது' என்று புத்தர் சொன்ன பதிலுடன் நின்று விடாதீர்கள். நீங்கள் நின்றுவிடக் கூடாது என்பதற்காகவே அவர் அப்படிச் சொல்லியது. உங்களுக்கு அதிர்ச்சியளிக்கவே அதைச் சொன்னார். தம்முடைய பதிவின் மூலம் உங்களை விழிப்படையச் செய்கிறார் அவர். மக்கள் தந்திரக்காரர்கள். தாங்கள் கேட்க விரும்புவது மட்டுமே தங்கள் காதில் விழ வேண்டும் என்று எதிர்பார்க்கிறவர்கள். 'வாழ்க்கை துன்ப மயமானது' என்கிற வார்த்தை அவர்கள் கேட்டுக் கொள்ள விரும்பியது, கேட்டார்கள். கேட்ட பின், 'நான் ஒன்றும் செய்வதற்கில்லை. அது துன்ப மயமானது என்றால் அதை வாழ்ந்துதான் தீர வேண்டும். எப்படியாவது வாழ்ந்து விடுவோம்' என்று முடிவு கட்டி விடுகிறார்கள்.

தங்களை மாற்றிக் கொள்ளும் விருப்பத்தை உருவாக்கிக் கொள்ளாமல், முழுமையாகவே துன்பச் சுழலில் அவர்கள் மூழ்கிக் கொண்டிருப்பார்கள். இவர்களின் தந்திரம், 'வாழ்க்கை இப்படிப் பட்டதுண்டு' என்று புத்தர் சான்றித்ழ் கொடுப்பதாகவே கருதுகிறது. தாங்கள் கேட்க விரும்புகிறவற்றை மட்டுமே அவர்கள் கேட்டுக் கொள்கிறார்கள்.

'கனம் நீதிபதி அவர்களே! இது எல்லாமே தவறு. நான் தெருவில் நடந்து செல்கிற போது இந்த இளைஞன்தான்...' என்று முதலாவது பாலியல் தொழிலாளி சொல்லத் தொடங்கினாள்.

'இளம் பெண்ணே! ஒரு நிமிஷம், இதற்கு முன் இங்கே பன்னிரண்டு முறை நீ வந்திருக்கிறாய். நூறு டாலர் அபராதம். அடுத்தது...' என்றார் நீதிபதி.

இரண்டாவது பெண் சொன்னாள், 'நான் ஓர் ஏழைப்பட்ட தனிச் செயலாளினி. நான் எதுவும் செய்யவில்லை' என்று.

'உன்னையும் எனக்கு அடையாளம் தெரியும். இரு நூறு டாலர் அபராதம் அல்லது பத்து நாள் சிறைத் தண்டனை. அடுத்தது...'

மூன்றாவது பெண், 'நீதிபதி அவர்களே! நான் ஒரு பாலியல் தொழிலாளிதான். அது ஒன்றும் பெருமைப் படக் கூடியதல்ல. ஆனால் என்னுடைய மூன்று குழந்தைகளைக் காப்பாற்ற எனக்கு வேறு வழி தெரியவில்லை. நான் குற்றம் செய்தவள் தான்' என்றாள்.

நீதிபதி சொன்னார், 'இளையவளே! உன்னுடைய நேர்மை எனக்குப் பிடித்திருக்கிறது. உனது வழக்கைத் தள்ளுபடி செய்கிறேன். காவல் அதிகாரியே. இந்தப் பெண்ணுக்கு காவல் துறை நிதியில் இருந்து ஐம்பது டாலர் கொடுத்து விடுங்கள்' என்று.

அப்போது, உரிமம் இல்லாமல் கழுத்துப்பட்டிகளை விற்றதற் காகக் கைது செய்யப்பட்ட கிழவன் லெபோவிட்ஸ் சொன்னான், 'ஐயா, நான் பொய் சொல்லப் போவதில்லை. நானும் ஒரு விலை மாது...'

உங்கள் மனதிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். அது எப்பொழுதுமே, தற்போது இருப்பது போல் இருப்பதற்கான வழிகளையும், திட்டங்களையும், வெற்றிக் கொள்கையையும் தேடிக் கொண்டிருக்கும். முகமூடிகளை அது அணிந்து கொள்ளும். மிகவும் மதப்பற்றுள்ளதாக அது மாறிக் கொள்வதுண்டு. தேவா லயம் சென்று பைபிள் படிக்கும். அது வேதங்களையும் படிக்கும். ஆயினும், தற்போது தான் இருக்கும் நிலையிலேயே எப்போதும் இருப்பதற்கான வழிகளை அது ஆராய்ந்து கொண்டிருக்கும்.

புத்தரின், 'வாழ்க்கை துன்ப மயமானது' என்ற சொற்களை, 'துன்பமே வாழ்க்கையின் அடிப்படைத் தன்மை' என்று மக்கள் புரிந்து கொண்டார்கள். அது அப்படித்தான் இருக்கப் போகிறது என்று அவர்கள் நம்பினர். அது உண்மையல்ல என்பது எனக்குத் தெரியும்.

நான் உங்களிடம் சொல்கிறேன்; 'உங்கள் வாழ்க்கை துன்ப மயமானது. ஆனால், அது அப்படியே இருக்க வேண்டும் என்பதில்லை. நீங்கள் அதை மாற்றியமைக்க முயற்சி செய்யாமல்

இருக்கிறீர்கள். அதற்காக எந்த வேலையையும் நீங்கள் செய்ய வில்லை. உங்களுக்குக் கொடுக்கப்பட்ட சந்தர்ப்பங்கள் அனைத்துமே உங்களால் வீணடிக்கப்பட்டன. மேலும், நீங்கள் ஒரு படைப்பாளியாகச் செயல்படவில்லை. அது துன்ப மயமானதற்குக் காரணம் நீங்கள் புத்திசாலித்தனமாக நடந்து கொள்ளாததுதான்.

அறிவுக் கூர்மை உடையவராக இருங்கள். அறிவுக் கூர்மை உடையவர்கள் அறிவாளிகளாக இருக்க வேண்டும் என்ற அவசியமில்லை. அது போலவே அறிவாளிகள் அறிவுக் கூர்மையோடு இருப்பார்கள் என்பதுமில்லை.

கிட்டத்தட்ட எப்போதும் நிகழ்வது என்னவென்றால் இந்த அறிவாளி அப்படி இருப்பது போல் நடிக்கிறான். அவன் பொய்யானவன். தன்னை அறிவாளியாகக் காட்டிக் கொள்வதன் மூலாம், அவன் தன்னையும் மற்றவர்களையும் நம்பச் செய்யவே முயற்சிக்கிறான்.

ஓர் அறிவாளியாக இருப்பதற்கு ஏதாவது நெறிமுறை உண்டா? உங்களால் உங்கள் வாழ்க்கையில் பரம சுகத்தை (Bliss)ப் படைக்க இயலுமெனில் நீங்கள் அறிவுக் கூர்மை உடையவர்தான். அப்படி இல்லாவிடில் அதை நிரூபிக்க வேறு வழியில்லை. உங்களைச் சுற்றி ஒரு சொர்க்கத்தை நீங்கள் உருவாக்க இயலு மெனில், உங்களால் தொடர்ந்து உற்சாகமாக இருக்க இயலுமெனில, உங்களது உற்சாகமே உங்கள் சூழ்நிலையாகி விடுமெனில் அப்பொழுது நீங்கள் அறிவுக் கூர்மை உடையவர்தாம். அறிவுக் கூர்மையோடு இருங்கள். அப்போது வாழ்க்கை ஆனந்த மயமாகி விடும். முட்டாள் தனமாக இருங்கள், வாழ்க்கை துன்ப மயந்தான். இவை எல்லாமே உங்களைப் பொறுத்தது.

*மூன்றாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! மனம் வாழைப் பழங்களைப்போல் ஆகிறது.***

***சரணடைந்து விடு, உன்னுடைய வேலையை நீயே செய் நம்பு, உனது வாழ்க்கையை வாழ்ந்துவிடு...' எனக்கு எதுவுமே தெரியாது என்பது மெல்ல மெல்லப் புரிகிறது. ஆனால், சில நேரங்களில் இப்படி நினைப்பது மிக நன்றாக இருக்கிறது.***

*ஆனாலும் நான் இன்னமும் அறிந்து கொள்ளவே விரும்பு கிறேன்.'*

மனம் ஒரு போதும் வாழைப்பழமாவதில்லை அது வாழைப்பழமாகத்தான் இருக்கிறது. நீங்கள் சொல்கிறீர்கள், சரணடைந்து விடு. உங்கள் வேலைகளைச் செய்து கொண்டிரு' என்று. நான் இந்த இரண்டிற்கும் நடுவே இரண்டு வார்த்தைகளைச் சேர்க்கும்படி யோசனை சொல்கிறேன். அதாவது, 'சரணடைந்து விடு, அதன் பின்னர் உனது வேலைகளைச் செய்'. காரணம், ஒரு முறை நீங்கள் சரணடைந்து விட்டால் அங்கே நீங்கள் இருப்பதில்லை. இறை உணர்வே (நம்பிக்கை) இருக்கிறது. அதன் பிறகு உங்கள் வேலையைச் செய்வதென்பது இறைவனின் வேலையைச் செய்வதாகும். உங்கள் ராஜ்யம் வருவதாக! உங்கள் எண்ணம் ஈடேறுவதாக'.

முதலில் உங்களை முற்றிலுமாய் கரைத்து விடுங்கள். அப்பொழுது இறையுணர்வே நீங்களாகிறீர்கள். அப்பொழுது இறையுணர்வே உங்களுடைய சுயம் ஆகிறது. நீங்கள் இரண்டு வார்த்தைகளை விட்டு விடாதீர்கள். அவை 'அதன் பின்னர்' என்கிற இரண்டு வார்த்தைகள்.

சரணடைந்து விடு, அதன் பின்னர் உனது வேலைகளைச் செய்,'

'நம்பு, அதன் பின்னர் உன்னுடைய வாழ்க்கையை வாழ்ந்து விடு.'

சரணடைவதும், நம்புவதும் இரு வேறான விஷயங்களல்ல. அவை இரண்டும் ஒன்றேயான அசாதாரண விஷயங்கள். நீங்கள் நம்பினால் மட்டுமே உங்களால் சரணடைய முடியும். அதே போன்று நீங்கள் சரணடைந்தால் மட்டுமே உங்களால் நம்ப முடியும். இவை இரண்டும் ஒன்றாகக் கைகோத்துக் கொண்டுள்ளன. அவற்றைப் பிரிக்க இயலாது. ஒன்று நடந்தால் மற்றொன்று ஏற்கனவே நடந்து முடிந்திருக்கும். அதில் முதலில் விட்டுப் போயிருந்த அந்த இரண்டு வார்த்தைகள் தாம் உங்களுக்குத் தொல்லையை ஏற்படுத்திக் கொண்டிருந்தன. அவை தாம் 'அதன் பின்னர்.'

ஒரு மனிதர் செயின்ட் அகஸ்டினிடம் சென்று 'நான் படிப்பறிவில்லாதவன். எனது வாழ்நாள் இனி அதிகம் இல்லை. என்னால் கடுமையான ஆன்மிக சோதனைகளில் ஈடுபட இயலாது. எனது உடலின் சக்தி நலிவடைந்து விடுகிறது. நான் மரணத்தின் விளிம்பில் நின்று கொண்டிருக்கிறேன். பல மைல் தூரம் நடந்து உங்களைப் பார்க்கவும், உங்களிடம் சிறிய விளக்கம் பெறவுமே இங்கு வந்திருக்கிறேன். நான் பெரிய பெரிய தத்துவங்களைக் கேட்பதற்காக இங்கே வரவில்லை. அது மிக எளியது. ஒரேயொரு சிறிய வார்த்தை எனக்குப் போதுமானது. என் வாழ்வின் கடைசி நாள் வரைக்கும், நெஞ்சில் இறுத்திக் கொள்ளும்படியால் ஒரே யொரு வார்த்தை சொல்லுங்கள்' என்று வேண்டிக் கொண்டாராம்.

செயின்ட் அகஸ்டின் தனது கண்களை மூடிக் கொண்டதாய் கூறப்படுகிறது. அவருடைய சீடர்கள் குழம்பித் தவித்தனர். இதற்கு முன் இவ்வாறு நிகழ்ந்ததில்லை. மிகப் பெரிய இறைமை யியலாளர்கள் (மத அறிஞர்கள்) வந்திருக்கிறார்கள். மிகச் சிறந்த தத்துவ மேதைகள் வந்திருக்கிறார்கள். அவர்கள் எல்லாம் திகைப் பூட்டக் கூடிய பல கேள்விகளைக் கேட்டிருக்கிறார்கள். அகஸ்டின் அப்போதெல்லாம் சிந்தனை வயப்பட்டதில்லை. உடனுக்குடன் அவற்றுக்குப் பதிலளித்திருக்கிறார். 'தற்போது என்ன செய்து கொண்டிருக்கிறார். ஒரு கிராமவாசியின் கேள்வி இவரைச் சிந்திக்க வைத்து விட்டதா?'

அரைமணி நேரம் போல் அவர் ஆழ்ந்த சிந்தனையில் இருந்தார். பிறகு கண்களைக் திறந்தார். 'அப்படியானால் நான் ஒன்று மட்டுமே கூறுவேன். 'நேசியுங்கள்' அதன் பிறகு நீங்கள் எதைச் செய்தாலும் அது சரியாகவே இருக்கும்.'

அன்பை நினைவில் நிறுத்துங்கள். 'அன்பு' என்பதே அனைத்து மதங்களின் ஆதாரமான கலப்படமற்ற சாறு ஆகும். மதம் என்ற பெயரால் மலர்ந்திருக்கும் அதுவே அனைத்து மலர்களிலும் இருக்கிற நறுமணம் ஆகும் - புத்தர், கிருஷ்ணர், இயேசு கிறிஸ்து, முகமது, ஜராதுஷ்ட்ரர், லாவோட்சு, கபீர், ஃபரீத், நானக், மீரா என்று. இத்தனை காலங்களில் மலர்ந்த அத்தனை பூக்களிலும் அதே நறுமணம், அன்பென்கிற நறுமணம்.

நீங்கள் அன்பு செலுத்துகிறவராயின் எதைச் செய்யவும் உங்களுக்கு அனுமதி உண்டு. ஏனெனில், அன்பு கொண்ட ஒரு மனிதனால் எந்தவிதத் தவற்றையும் செய்ய இயலாது. அன்புதான் ஒரே கட்டளை. அன்பு இல்லாவிட்டால் அந்தப் பத்துக் கட்டளைகளும் பயன்படாமல் போய் விடும். நீங்கள் முதலாவதும் முதன்மையானதுமான அன்பு என்கிற கட்டளையை நிறைவேற்றாத நிலையில்தான் அந்தப் பத்துக் கட்டளைகளும் அவசியப்படுகின்றன. அத்தனையும் அன்பு என்கிற கட்டளையின் சாதாரண மாற்றுகள்.

நினைவிருக்கட்டும், அன்புடையவர்கள் செய்கிற எதுவும் பண்பார்ந்த செயலாகவே இருக்கும்.

நான் இதையே பல்வேறு விதமாய் சொல்லி வருகிறேன். முற்றிலுமாய் சரணடைந்து விடு, அதன் பின்னர் உனது வேலையைச் செய். நான் சொல்வதைக் கேட்டு, நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளவும் கூடும். 'உனது வேலையைச் செய்' என்பது இளைய தலை முறையினருக்கு உரிய தரமாகும். ஒரு *ஹிப்பியின் முழக்கத்தை நான் மீண்டும் சொல்லிக் கொண்டிருக்கவில்லை. நான் 'உங்கள் சொந்த வேலைகளைச் செய்யுங்கள்' என்பதில், 'சரணடைந்து விடு. நம்பிக்கைவை, அதன் பின்னர்...' என்கிற நிபந்தனையும் இருக்கும். அல்லாமல் வேறு என்ன செய்யப் போகிறீர்கள்?' சரணடையாமல் நீங்கள் செய்கிற எந்தச் செயலும், உங்களுக்குள் இருக்கும் அகந்தையில் இருந்து வெளிவருவது. உங்களது கடந்த காலத்தில் இருந்து வெளிவருவது. அது நிலையான ஒன்றில் இருந்து வெளிவந்திருக்க முடியாது. அது உணர்வு நிலையில் இருக்கும் ஒருவரிடம் இருந்து வெளிவந்திருக்காது. எப்போதும் விழிப்புணர்வுடன் இருக்கும் ஒருவரிடம் இருந்து அது வர இயலாது.

மேலும் தன்னுணர்வற்ற (unconscious) நிலையில் எது வந்தாலும் அவை மேலும் மேலும் துன்பத்தைத் தருவதாகவே இருக்கும். உங்களிடமும், மற்றவர்களிடமும் இப்போதே அதிகத்

---

* **ஹிப்பி - (hippie) எவ்வித குறிக்கோளுமின்றி எதைப் பற்றியும் கவலைப்படாமல், மரபுகளை உடைத்தெறிகிற நாடோடி வாழ்க்கை வாழ்கிறவர்.**

துன்பங்கள் இருக்கின்றன. மேலும், அதிகத் துன்பங்களை உங்கள் பங்காக நீங்கள் அளிக்க வேண்டிய அவசியமில்லை. இங்கு தேவைக்கு அதிகமாகவே துன்பங்கள் இருக்கின்றன. நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் சரணாகதிக்கும், நம்பிக்கைக்கும் அடிப்படையானவற்றை நிறைவு செய்வதுதான்.

கணப் பொழுதுதேனும் சிந்தியுங்கள். அகந்தை என்கிற ஒன்றில்லாவிடில் அதைச் செய்வது யாராக இருக்கும். அப்போது பிரபஞ்ச இருப்பு உங்கள் மூலமாய் செயல்படுகிறது. அப்போது நீங்கள் உள்ளீடற்ற (hollow) ஒரு மூங்கிலைப் போல் ஆகிவிடு கிறீர்கள். அதன் உதடுகளில் ஒரு புல்லாங்குழலாக மாறிவிடு கிறீர்கள். பாடல் அதனுடையது. எனவே நீங்கள் குழப்பமுறவோ, திகைத்து நிற்கவோ அவசியமில்லை.

நீங்கள் சொல்கிறீர்கள், 'எனக்கு எதுவுமே தெரியாது என்பதை மெல்ல மெல்லவே நான் தெரிந்து கொண்டேன். சில நேரங்களில் அதுவும் நன்றாகவே இருக்கிறது' என்று.

ஆனாலும் நீங்கள் ரொம்பவும் நிதானமாய் சென்று கொண்டிருக்கிறீர்கள். 'மெல்ல மெல்ல எனக்குத் தோன்றுகிறது' என்கிறீர்கள். அது எப்படி மெல்லத் தோன்ற முடியும்? ஒன்று நீங்கள் அதைப் பார்ப்பதே இல்லை. 'மெல்ல, மெல்ல' என்றதன் மூலம் நீங்கள் எதைச் சொல்ல விரும்புகிறீர்கள்? இத்தகைய விஷயங்கள் படிப்படியாக நிகழ்வதில்லை.இவை எல்லாமே இருண்ட இரவில் திடீரெனத் தோன்றும் மின்னலைப் போல் வெடித்து வெளிக்கிளம்புவது.

நான் எதையாவது சொல்லும் பொழுது, நீங்கள் அந்த நேரத்தில் இங்கே இருக்க முடிந்தால், உங்கள் மனம் என்னுடன் இணக்கமாய் பொருந்தியிருந்தால் அப்போது மின்னலைப் போன்றதொரு அனுபவம் ஏற்படும். ஓர் ஆற்றல் மிக்க ஒப்புதல் ('ஆம்') என்கிற சொல்' உங்கள் மனதில் எழும். ஒரு புதிய தெளிவு, ஒரு புதிய ஊடுருவும் தன்மை. உங்களால் எதுயெது, என்னென்ன என்று பார்க்க இயலும். மேலும், அப்படிப் பார்க்க முடிவதால் தவறான அனைத்துமே உங்களிடமிருந்து விழுந்து விடுகின்றன. நல்லவை அனைத்தும் அப்படியே இருக்கும். அவற்றைக் கைவிடக் கூடாது. அந்த நன்மைகள் இத்தனை காலமும் தவறுகளால் மூடப்பட்டிருந்தன. தவறுகள் என்பவை,

நம்முடையதல்லாத, வெளியில் இருந்து நம்மிடம் வந்து சேரும் ஒரு வேற்றுப் பொருள் ஆகும். நல்லவை உங்களிடம் இயல்பாய் அமைந்தவை. நீங்கள், 'எனக்கு ஒன்றுமே தெரியவில்லை என்பது மெல்ல மெல்லவே எனக்குத் தோன்றுகிறது' என்று சொல்கிறீர்கள்.

இல்லை, அப்படி மெதுவாக நிகழ முடியாது. ஒரு போதும் அப்படி மெதுவாக நிகழ்வதற்கில்லை. நான் சொல்வதை நீங்கள் கவனமாய் கேட்டீர்களானால் உங்களால் அதை அனுபவத்தில் உணர முடியவது உறுதி - எவ்வகையிலும், எதையும் நீங்கள் அறிந்திருக்கவில்லை. என்பதை உங்களுக்கு என்ன தெரியும்? பொறியியல் பற்றியோ, மருத்துவயியல் பற்றியோ, புவியியல் பற்றியோ, வரலாறு பற்றியோ இங்கு நான் பேசவில்லை. நான் அத்தகைய பொருளற்றவற்றை, பயனைக் குறிக்கோளாய் கொண்டவற்றைப் பற்றிப் பேசவில்லை. ஆனால், உங்களுக்கு உண்மை நிலை, சத்தியம், இறையுணர்வு, அன்பு மற்றும் தியானம் பற்றி என்ன தெரியும்? உங்களைச் சுற்றியிருக்கும் புதிரான பிரபஞ்சத்தைப் பற்றி உங்களுக்கு என்ன தெரியும்? உங்களைப் பற்றிதான் உங்களுக்கு என்ன தெரியும்? நிலைபேறுடைய இந்த வாழ்க்கையில் நீங்கள் யாருடன் வாழ்ந்தீர்கள் இனி யாருடன் வாழப் போகிறீர்கள்? உண்மையில் நீங்கள் யார் என்பது பற்றி உங்களுக்கு ஏதேனும் தெரியுமா?

சிறந்த கணித மேதையான உஸ்பென்ஸ்கி வியக்கத்தக்க மறைஞானி குருட்ஜீவை காணச் சென்றார். உஸ்பென்ஸ்கி முன்பே உலகப் புகழ்பெற்றவர். ஆனால், குருட்ஜீவை யாருக்கும் தெரியாது. யாருமே அவரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கவில்லை. ஆனால் உஸ்பென்ஸ்கி, மிகப் பிரபலமாயிருந்த மூன்று முக்கிய புத்தகங்களில் மூன்றாது புத்தகமான டெர்ஷியம் ஆர்கானம் (Tertium organum) என்ற புத்தகத்தை எழுதியிருக்கிறார். ஆம், உலகின் மூன்றே புத்தகங்கள்தாம் மிக முக்கியமானவையாய் சொல்லப்படுகிறது: முதல் புத்தகம் அரிஸ்டாட்டில் எழுதிய ஆர்கானம் (Organum). இரண்டாவது நூல் பேக்கன் எழுதிய நோவம் ஆர்கானம் (Novum organum). அதன் பின் உஸ்பென்ஸ்கியின் டெர்ஷியம் ஆர்கானம் ஒப்புக் கொள்ளப்பட்ட ஆய்வு பற்றிய சட்ட விதிகளின் தொகுதி - இதுதான் 'டெர்ஷியம் ஆர்கானம்' என்பதன் பொருள். முதல் புத்தகம் தோன்றுவதற்கு

முன்பே இந்த மூன்றாவது புத்தகம் தோன்றி விட்டது என்று அவர் அறிவித்திருக்கிறார். அது வெறும் தற்பெருமையல்ல, ஆணவம் அல்ல, அது உண்மை. அவர் மிக உயர்வான மதிப்பு வாய்ந்த ஒன்றைக் கண்டு பிடித்திருந்தார். அவர் கணிதவியலுக்கு, *மெட்டாபிஸிக்ஸ் மற்றும் **லாஜிக் இவற்றுக்கு உண்மையிலேயே முக்கியத்துவம் உள்ள பங்களிப்புகளை வழங்கியுள்ளார். உலகெங்கிலும் பரவலாக அறியப்பட்டவர் அவர். அவரது நூல்கள் உலகின் பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன.

ஆனால், மக்கள் கூட்டத்தில் சில குழுக்கள் மட்டுமே அறிந்த பெயர் குருட்ஜீவ். எனினும், அவரை யாருமே எளிதாய் சந்தித்து விட முடியாது. மக்கள் மத்தியில் அவரைக் காண்பது அரிது. உஸ்பென்ஸ்கி பல இடர்ப்பாடுகளைக் கடந்து, மூன்று மாதங்கள் காத்திருந்து அவரைச் சந்திக்க வேண்டியிருந்தது. காரணம், குருட்ஜீவைச் சந்திக்க பலர் மூலமாக அவர் முயற்சி செய்ய வேண்டியானது. குருட்ஜீவின் நெருங்கிய வட்டத்தைச் சேர்ந்தவர்கள் மட்டுமே ஒரு புதிய விருந்தாளியை அவரிடம் அழைத்துச் செல்லும் தகுதி பெற்றிருந்தனர். குருட்ஜீவின் முன்பாய் அவர் அழைத்துச் செல்லப்பட்ட போது அன்றைக்கு அங்கே பன்னிரண்டு பேர் இருந்தனர். குருட்ஜீவ் நடுவிலும், மற்றவர்கள் அவரைச் சுற்றியும் அமர்ந்திருந்தனர். அங்கே முழுமையான அமைதி நிலவியது. உஸ்பென்ஸ்கியை அழைத்துச் சென்றவரும் கண்களை மூடியபடி அமர்ந்திருந்தார்.

தற்போது, உஸ்பென்ஸ்கி அமைதியை இழக்க ஆரம்பித்தார். அவர் இன்னும் அறிமுகம் செய்து வைக்கப்படவில்லை என்பதால், சற்றே குழப்பமடைந்தார் - 'இவர் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறார்? மேலும், சுற்றிவர மவுனமாய் அமர்ந்து கொண்டு இவர்கள் என்ன செய்கிறார்?' என்று.

அரைமணி... ஒரு மணி என்று நேரம் நகர்ந்தபடி இருந்தது. 'நான் எதற்காக இங்கிருக்கிறேன்?' உஸ்பென்ஸ்கி எண்ணமிட லானார். ஆனால், அங்கிருந்து அவர் எழுந்து வெளியேறுவதும்

---

* **மெட்டா பிஸிக்ஸ் (metaphysics) - 'உண்மை', 'அறிவு' ஆகியவற்றைப் பற்றி ஆயும் கோட்பாட்டுத் துறை. அதனை இயற்கை தத்துவயியல் எனலாம்.**

** **லாஜிக் (Logic) - தர்க்க சாஸ்திரம், விவாதிக்கும் முறை.**

இயலாது. அப்படிச் செய்தால் அது அங்கிருக்கும் அமைதியான சூழலைக் குலைப்பதாகி விடும். அங்கே நிலவிய மவுனத்தை, அமைதியை அவரால் உணர முடிந்தது. ஒரு மேகத்தைப் போன்று அமைதி அங்கே இடம் பெற்றிருந்தது.

அப்பொழுது, குருட்ஜீவ் உஸ்பென்ஸ்கியை ஏறிட்டு நோக்கினார். அவரிடம், 'நீங்கள் அமைதியற்றுக் காணப்படுகிறீர்கள். அது இயற்கைதான். அமைதியில்லாத உலகில் இருந்து வருகிறீர்கள். உங்களுக்கு அமைதிக்கான வழிகள் தெரிந்திருக்காது. போகட்டும், நீங்கள் எதுபற்றி என்னைக் காண விரும்பியது? நீங்கள் மூன்று மாதங்களாக இங்கே வந்து கொண்டிருப்பது ஏன்?' என்று கேட்டார்.

உஸ்பென்ஸ்கி 'நான் உங்களிடம் சில கேள்விகள் கேட்க விரும்புகிறேன்' என்று பதிலளிக்குமுகமாய் தெரிவித்தார்.

குருட்ஜீவ் அவரிடம் ஓர் எழுதப்படாத காகிதத்தைக் கொடுத்து, 'நீங்கள் பக்கத்து அறைக்குச் சென்று, இந்தக் காகிதத்தின் ஒரு பக்கத்தில் உங்களுக்குத் தெரிந்த அனைத்தையும் எழுதுங்கள். அதன் மறுபக்கத்தில் உங்களுக்குத் தெரியாத அனைத்தையும் எழுதுங்கள்' பிறகு, இங்கே வாருங்கள். உங்களுக்குத் தெரியாத விஷயங்களுக்கே நான் விளக்கம் தரப்போகிறேன். தெரிந்தவற்றுக்கு விளக்கம் தேவைப்படாது தானே?' என்றார்.

'அது மாஸ்கோ நகரின் குளிர் மிகுந்த ஓர் இரவு. கடும்பனி பெய்து கொண்டிருந்தது' என்று நினைவு கூர்கிறார் உஸ்பென்ஸ்கி. 'வேறொரு அறையினுள் சென்றதும் எனக்கு வியர்த்துக் கொட்ட ஆரம்பித்தது. முதல் முறையாக அத்தகைய அழுத்தத்துடன் எனக்கு எதுவுமே தெரியாது என்பது உணர்த்தப்பட்டு விட்டது. நான் ஏதாவது எழுத விரும்பினேன். எனது கவுரவத்தைக் காப்பாற்ற வேண்டியிருக்கிறதே! எனக்கு இது தெரியும், அது தெரியும் என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தேன். ஆனால் பல விதமாய் யோசித்தேன். அடிப்படையில் நான் எதுவுமே தெரியாதவன் என்பதை உணர்ந்தேன்.

'எனக்குக் காதலைப் பற்றி என்ன தெரியும்?' எண்ணிப் பார்த்தேன். நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன். நான் அதைப்பற்றி ரொம்பவே படித்திருக்கிறேன். ஆனால், ஏதாவது அனுபவம்?

அந்த மனிதர் அத்தனை எளிதாய் விட்டுவிட மாட்டார். நிச்சயம் இப்படிக் கேட்பார். 'ஏதாவது அனுபவம் உண்டா?' என்று. அந்த மனிதரின் கண்களை - இருப்புணர்வின் மையத்திற்கு ஊடுருவிச் செல்லும் கண்களை உஸ்பென்ஸ்கி கவனித்திருக்கிறார். அந்த மனிதரை ஏமாற்றவே முடியாது. 'தியானத்தைப் பற்றி நான் ஏதாவது தெரிந்து வைத்திருக்கிறேனா? பிரபஞ்ச இருப்பு பற்றி எனக்கு ஏதேனும் தெரியுமா?

உஸ்பென்ஸ்கி பொறுத்துப் பொறுத்து பார்த்தார். அவரால் எதையும் கண்டறிய இயலவில்லை. எனவே, கடைசியில் வெளியே வந்து விட்டார். எதுவுமே எழுதப்படாத வெற்றுக் காகிதத்தை குருட்ஜீவிடம் திருப்பிக் கொடுத்தார். பின்னர் அவரை நோக்கி 'என்னை மன்னித்து விடுங்கள்.' எனக்கு எதுவுமே தெரியாது. நான் ஒன்றையும் அறிந்திருக்கவில்லை. இது நாள் வரை ஒரு முட்டாளாகவே இருந்திருக்கிறேன். 'எனக்கு இது தெரியும், அது தெரியும்' என்று நான் எப்போதுமே நம்பிக் கொண்டிருந்தேன். ஆனால், நீங்கள் ஒரே அடியில் என்னைச் சிதறடித்து விட்டீர்கள்.

குருட்ஜீவ் உஸ்பென்ஸ்கியைப் பார்த்தார். அவரது கண்களில் தெய்விக ஆசிகள் தெரிந்தன. அவர் பேசினார்: 'அப்படியானால் நான் உங்களை ஏற்றுக் கொள்கிறேன். ஏனெனில், யார் தங்களுக்கு எதுவுமே தெரியாது என்பதைத் தெரிந்து வைத்திருக்கிறார்களோ அவர்களையே நான் எனது அமைப்பில் ஏற்றுக் கொள்வேன். காரணம், அவர்கள்தாம் கற்றுக் கொள்ளும் திறமை உடையவர்கள்.'

உங்களுக்கு எதுவுமே தெரியாது என்பதைத் தெரிந்தவராயிருங்கள். அதற்காக மெல்ல மெல்லவே செல்கிற வேலை வேண்டாம். அது ஒன்றும் படிப்படியாகக் கண்டறியப்படுவதல்ல. அது மின்னலைப் போல் திடீரெனத் தோன்றுகிற அனுபவம். ஒவ்வொரு நாள் காலையிலும் நான் இதையே உங்களுக்கு அறியச் செய்ய விரும்புகிறேன். அதற்காக உங்களிடம் கத்திக் கொண்டிருக்கிறேன். உங்களுக்கு எதுவுமே தெரியாது என்று. ஏதாவது ஒன்று, பொருத்தமான ஒன்று - மதிக்கத்தக்க, முற்றிலுமாய் மாற்றியமைக்கப் போகிற ஒன்று - மரணத்திற்கு பின்னும் நீங்கள் எடுத்துச் செல்லக் கூடிய ஒன்று பற்றித் தெரியுமா உங்களுக்கு?

ஆனால், வாரிதி கூறுகிறார், 'எனக்கு எதுவுமே தெரியாது என்று மெல்ல மெல்லத் தோன்றுவதாக' 'சில நேரங்களில் அப்படி

உணர்வதும் நன்றாக இருக்கிறது' என்கிறார். அந்தச் சிறிய எண்ணங்கூட - ஒரு கண நேரத் தோற்றம் கூட - ஒரு சன்னலைத் திறந்து மூடுவதைப் போல், மென்காற்று உள்ளே நுழைவதைப் போல், சூரியனின் ஓர் ஒளிக்கீற்று உள்ளே இறங்குவது போல் நன்றாகத்தான் இருக்கும். அது நன்றாக இருந்தால், அதற்குள் ஆழமாக மேலும் ஆழமாகச் சென்று நாம் அறிந்திருப்பதெல்லாம் ஒரு குப்பை என்று எண்ணும் நிலைக்குச் செல்லுங்கள். அப்போது உங்கள் அனுபவம் மிகவும் சிறந்ததாகும். ஏனெனில் அறிவாற்றல் ஓர் அடிமைத் தனம். அது கடன் வாங்கியது. சொந்த அனுபவமே ஞானம். அது மகிழ்ச்சியளிப்பது. சுதந்திரமானது.

இறுதியாக நீங்கள், 'ஆயினும் எனக்குத் தெரிந்து கொள்ள வேண்டும்' என்றே சொல்கிறீர்கள்.

அது நல்லது. தெரிந்திராத நிலையில் இருந்தே தொடங்குங்கள்.

அப்பொழுது நீங்கள் அறிந்து கொள்ளும் திறமையைப் பெற்றிருப்பீர்கள். எதுவுமே எழுதாத சுத்தமான எழுதும் பலகையில் எழுதத் தொடங்குங்கள். பின்னர், வாழ்க்கை எதையானும் அதில் எழுதட்டும். உங்களுக்குத் தெரிந்த அனைத்தையும் அழித்து விடுங்கள்.

இயற்கைக்கு முன் கள்ளம் கபடமற்ற ஒரு குழந்தையின் அறியாமையோடு இருங்கள். அப்போது உங்களுக்குத் தெரியும் நாம் இங்கே அறிந்து கொள்வதற்காகத்தான் இருக்கிறோம். ஆனால் அந்த அறிந்து கொள்ளல் என்பது புராண நூல்களில் இருந்து வரவில்லை. ஆனால், ஞானம் என்பது மவுனத்தில் - அமைதியில் இருந்தே வருகிறது.

அதிக அறிவாற்றல் கொண்ட மனம் அமைதியாக இருக்காது. அது அறிவாலும், எண்ணங்களாலும் நிரம்பியிருக்கிறது. அது தன்னைத்தானே வெறுமையாக்கிக் கொள்வதில்லை. உங்களை நீங்கள் ஒன்றும் இல்லாதவராக ஆக்கிக் கொள்ளுங்கள். அனைத்து விதமான ஆற்றல்களையும், கனவுகளையும், ஆசைகளையும் - தேவையற்ற அலங்காரப் பொருள்களையும் தூக்கியெறிந்து விடுங்கள். ஒரு தூய வெற்றிடத்துக்கு, இறுதியான, தெரிந்து கொள்ள இயலாத ஒன்றைக் கவர்ந்திழுக்கும் திறமையைப் பெறுகிறீர்கள். நீங்கள் ஒரு காந்த சக்தியாக மாறுகிறீர்கள். நீங்கள் விருந்தளிப்பவராக மாறுகிறீர்கள். தெய்வத் தன்மை உங்கள் விருந்தாளியாகிறது.

*நான்காம் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே! ஒரு சந்நியாசி அல்லாத எனது மனதில் மிக வேகமாய் வளர்ந்திருக்கும் அமைதியின்மையை நான் உணர்கிறேன். நான் உங்களிடம் ஒன்று கேட்க விரும்புகிறேன். உங்களது கலை என்ன? என் மனதில் உள்ள சின்னச் சின்ன ஓட்டைகளை எப்படி எளிதாய் கண்டறிகிறீர்கள்? என்னுள் வளர்ந்திருக்கும் தற்பெருமையைத் தாங்கள் எந்தக் குறுக்கு வழியில் கடக்கப் போகிறீர்கள்? பத்து நாட்களுக்கு முன் நான் இங்கே வந்த போது, சற்றே சீராக இருப்பது போல் உணர்ந்தேன். நன்றியறிதலோடு இருப்பேன். ஆம், தாங்கள் எனக்கு வழி காட்டியவர். ஆயினும், இன்னும் கூடுதலான தைரியத்தையும், எதிர்க்கும் திறனையும் நான் பெற உதவுங்கள். தற்போது நான் ஆசிரமத்தைச் சுற்றி, தன்னிலையற்றவனாய் அலைந்து கொண்டிருக்கிறேன். கண்ணீர் விடுகிற நேரங்களிலும், குறிப்பிட்டுச் சொல்ல முடியாத சில சமயங்களிலும் என்னிடம் அன்பு வசப்படுபவரிடம் இருக்கும் அனைத்து அடையாளங் களும் தெரிகின்றன.*

*ஓஷோ! நான் உங்களை நேசிக்கிறேன்.*

*ஆக, நான் செய்ய வேண்டியது என்ன? தாங்கள் எப்படி இதனைக் கையாளுவீர்கள்?'*

நான் ஒரு கதை சொல்கிறேன். அதன் மூலம் அதனை நீங்கள் புரிந்து கொள்ளலாம்.

ஹக்கார்ட்டி சிவப்பு நிற விளக்கு பொருத்தப்பட்ட ஒரு காரை ஓட்டிச் சென்றான். அதிவேகமாய் ஓட்டிச் சென்று, பாதிரியார் 'கோகென்' ஓட்டி வந்த காரின் மீது நேருக்கு நேராக மோதி விட்டான். அந்தக் கார் மூன்று முறை சுழன்று பின் கவிழ்ந்து விட்டது. பாதிரியார் வெளியே தூக்கியெறியப்பட்டார். அவரது வாகனம் பாதையோரத்தில் கிடந்தது.

ஹக்கார்ட்டி வேகமாக, பாதிரியாரை நெருங்கி 'நான் மிகவும் வருந்துகிறேன்' என்றான்.

'வானத்து புனிதர்களே!' என்று அலறிய பாதிரியார் கொஞ்சமும் பயம் குறையாமல், 'நீ என்னை மரணத்தின் எல்லைக்கே கொண்டு சென்று விட்டாய்' என்றார்.

அதைக் கேட்ட ஹக்கார்ட்டி சொன்னான் 'என்னிடம் சிறந்த வகை மதுபானம் உள்ளது. உங்களுக்குச் சற்று தெம்பாக இருக்கும்' என்று.

பாதிரியார் இரண்டு கோப்பை மதுவருந்தினார். தன்னுடைய கோபத்தைத் தொடர்ந்தார். 'நீ மனிதர்களைப் பற்றி என்னதான் நினைத்துக் கொண்டிருக்கிறாய்? என்னை மரணத்தின் விளிம்புக்கே கொண்டு சென்று விட்டாயே' என்று சப்தம் போட்டார்.

ஹக்கார்ட்டி தணிவாகச் சொன்னான். 'நான் மிகவும் வருந்துகிறேன். நீங்கள் இன்னும் கொஞ்சம் குடியுங்கள். அது உங்கள் நரம்புகளுக்கு சுறுசுறுப்பூட்டும் என்று.

தன்னிடம் தரப்பட்ட மது போத்தலை முழுசாய் காலி பண்ணிய பாதிரியார், 'நீ ஏன் கொஞ்சம் குடிக்கக் கூடாது?' என்று கேட்டார்.

'நன்றி. எனக்கு வேண்டாம். நான் இங்கே அமர்ந்து கொண்டு, காவல் துறையினருக்காகக் காத்திருப்பேன்' என்றான் அவன்.

எனவே நான் காத்துக் கொண்டிருக்கிறேன் அந்த நாளுக்காக. அது நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. ஏப்ரல் பத்தொன்பது.... அன்றுதான் நீ கொல்லப்படப் போகிறாய்.

மிக நேர்த்தியான ஒன்று உனக்கு நிகழ்ந்து கொண்டிருக்கிறது. உன்னுள் இருக்கும் கர்வம் அத்தனை சக்தி வாய்ந்ததல்ல. உனது நம்பிக்கையே அதை உயிருடன் வைத்திருக்கிறது. ஒரு முறை நீயதைப் புரிந்து கொள்ளத் தொடங்கினால், அது இறக்கும் நிலைக்குத் தள்ளப்படும். அத்தனை வகையான தடைகளும் உனது கண்ணீரைத் தடுத்து வைத்திருக்கின்றன. நீ ஒன்றும் பெண் அல்ல, ஆண் என்று பலமுறை உனக்குச் சொல்லியாகி விட்டது. ஒரு பெண் போல் நடந்து கொள்ளாதே இளைஞனாய் லட்சணமாயிரு. அழுவதும், புலம்புவதும் பெண்களின் வேலை, உன்னுடையதல்ல.

இயற்கை எந்தவொரு வேறுபாட்டையும் ஏற்படுத்தவில்லை தான். பெண்களின் கண்களில் போலவே ஆண்களின் கண்ணிலும் பல கண்ணீர் சுரப்பிகள் உள்ளன. கண்ணீர் அவசியப்படுவது. கண்ணீர் அற்புதங்களைச் செய்ய வல்லது. ஆனால், கண்ணீரை அடக்குவதென்பது உணர்ச்சிகளை அடக்கி வைக்கிற நுட்ப உத்தி ஆகும். அது (கண்ணீர்) அடியாழத்தில் இதயத்துடன் தொடர்

புடையது. மூளைகள் அழுவதில்லை, இதயங்களே அழுகிறவை. கண்ணீரை அடக்குவது இதயத்தை அடக்கி வைக்கிற நுட்பமான தந்திரச் செயல்.

நீங்கள் இதுவரை மூளை (அறிவு, புத்தி)யில் வாழ்ந்திருக்கிறீர்கள். உங்கள் அகந்தை வலுவானது என்ற எண்ணத்தில் மிக உயர்வாகவும் கர்வமாகவும் இருந்திருக்கிறீர்கள். தற்போது தவறான நட்பைத் தேடிக் கொண்டீர்கள். இவர்கள் எல்லாம் பைத்தியங்கள். எந்த நொடியிலும் எவர் வேண்டுமானாலும் அழலாம். இங்கே அழுவது புனிதமான செயலாய் கருதப்படுகிறது. காரணம், கண்ணீர் இதயத்தில் இருந்து நேரடியாக வருவது. கண்ணீரை விடவும் அருமையான வழிபாடு இருப்பதற்கில்லை.

அத்துடன், துன்பப்படுகிற நிலையில் தான் வேதனையில்தான் கண்ணீர் வரும் என்பதல்ல. உங்களுக்கு வழங்கப்படுகிற தவறான கருத்துகளில் அதுவும் ஒன்று. உங்களுக்குள் நிரம்பி வழிகிற எதுவும் - வேதனை, மகிழ்ச்சி, துயரம், பரவசம் என்று எதுவும் கண்ணீர் விடச் செய்து விடும். கண்ணீர் நிரம்பி வழிகிற ஏதோ ஒன்றின் குறியீடு.

கட்டுக் கடங்காமல் பெருகிய ஒன்று, வெடித்து வெளிக் கிளம்ப விரும்புகிறது. நீங்கள் நெடுங்காலமாகவே அழகான ஒன்றை உங்களுக்குள் அடக்கி வைத்திருந்தீர்கள். தற்போது நீங்கள் புத்த வெளியில் (Buddha Field) இருப்பதால் உங்களுடைய தன்னுணர்வோடு நீங்கள் இருக்க முடியாது, உங்களால் அன்பு கொள்ளாமல் இருக்க முடியாது. உங்கள் இதயம் ஒன்றும் கல்லல்ல, கடுமையாக நடந்து கொள்வதற்கு. பிரபஞ்ச உணர்வுடன் துடித்துக் கொண்டிருக்கிறது உங்கள் இதயம். அடக்கி வைத்த அன்பு உள்ளே நிரம்பியிருக்கிறது. ஆனால், எந்த நேரத்திலும் அது வெடித்து வெளிவரக் கூடும், வாய்ப்புக்காக அது காத்திருக்கிறது. அந்த வாய்ப்பு வந்து விட்டது.

சந்நியாசம் என்பது ஒரு புதிய வாழ்க்கை முறை, ஒரு புதிய பாணி (Style), ஒரு புதிய கோட்பாடு - முழுமையாக வாழ்வதற்கு கண்ணீரும், புன்னகையும், அன்பும், சிரிப்பும், கோபமும், வெறுப்பும், பரிவும் கொண்டு மனதின் அத்தனை பரிமாணங்களோடும் வாழ வேண்டும். நீங்கள் முழுமையாக வாழ்ந்தால் எதிர்மறையானவை எல்லாமும் தங்கள் இசைவில் மறைந்து விடுகின்றன. இது

அற்புதம். இதுவே புனிதம். தீயவை அழிந்திட, வாழ்வின் தூய்மை மட்டுமே எஞ்சியிருக்கும்.

நான் அந்த அடக்கி வைத்தலையும் பரிந்துரைக்கவில்லை. அதே போன்று ஒடுக்கி வைப்பதையும் பரிந்துரைக்கவில்லை. இயல்பாக இருப்பதையே கற்பிக்கிறேன். அதனால்தான் நீங்கள் என்னை நேசிப்பது. அது உங்கள் மீதே நீங்கள் அன்பு வைக்கிற காரியம். அது, உங்கள் இயற்கைத் தன்மையின் மீது நீங்கள் அன்பு செலுத்துவதற்கான மாற்றுவழி. நான் ஒரு வெற்றான காரணம், அவ்வளவே. கொஞ்சம் கொஞ்சமாய் பருகிக் கொண்டிருங்கள். இன்னும் மூன்று நாட்கள் எஞ்சியுள்ளன. போத்தலை **(bottle)** முழுவதுமாய் காலி செய்து விடுங்கள். சந்நியாசம் ஏற்கிற நாளில் நீ சொல்வாய், 'நான் முற்றிலும் தைரியமாய், எதையும் எதிர் கொள்ளும் நிலையைப் பெற்று விட்டால் அது என்னை சந்நியாசியாக்கி விடும்' என்று. நீ அதைத் துறவறம் என்று கூறலாம்; அதுதான் மிகவும் சிறந்தது. அது ஒரு வகைக் கொலையே ஆகும். மரணத்தின் வலி தெரியாதிருக்க குடித்துக் கொண்டேயிரு. என்னை எந்த அளவிற்குக் குடிக்க முடியுமோ அந்த அளவு குடித்துவிடு, நீ துறவறம் ஏற்பதற்கு முன்பு. நீ இங்கு வரும் போது உன்னுள் பல எதிர்ப்புகளும் இருந்திருக்கும். உரிய காலத்திற்கு முன் அது நிகழ்ந்து விடுமோ என்று அஞ்சினாய். உனக்கு உகந்த நேரத்தில் அது நிகழ வேண்டும் என்று நீ விரும்பினாய்.

எப்பொழுது ஒருவன் சுயமாக துறவறம் ஏற்க முடிவெடுக் கிறானோ, தனக்கு உகந்த நேரத்தில் அதைச் செய்ய நினைக் கிறானோ, அவன் அதனுடைய முழுமையை இழந்து விடுகிறான். அது தானாக நடந்ததாயிருக்க வேண்டும். நீங்கள் அப்படி யொன்றைச் செய்து கொள்ளக் கூடாது. அது சரணாகதி ஆகாது. அது செய்யப்படுவதல்ல, நன்றியுடன் ஏற்கப்படுவது. நீங்கள் நற்பேறுடையவர், ஆசீர்வதிக்கப்பட்டவர்.

***ஐந்தாம் கேள்வி:***

***ஓஷோ அவர்களே! நான் எதற்காக நரகம் பற்றி அஞ்சுகிறேன்?***

நரகம் பற்றி அஞ்சத் தேவையில்லை. பலவகை நரகங்கள் இருக்கின்றன. அவற்றுள் இந்திய நரகமும் உண்டு. நரகவாயிலைக்

காத்திருப்பவர்கள் கேட்கிறார்கள், 'நீங்கள் எந்த நரகத்திற்குப் போக விரும்புகிறீர்கள்?' என்று. மேலும் அவர்கள் 'இந்திய நரகத் தைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால், எப்போதும் மகிழ்ச்சியுடன் இருக்கலாம்' என்கிறார்கள்.

இறந்து விட்ட ஒருவன் மேலுலகம் சென்றான். அப்பொழுது வாயிலின் அருகில், அவனை புனித பீட்டர் சந்தித்தார். அவனிடம், 'நீர் உள்ளே சொல்வதற்கு முன் ஆறுமாத காலம் நரகத்தில் இருக்க வேண்டும். ஆனால், எந்த நரகத்திற்குச் செல்ல விரும்புகிறீர்கள்' என்பதை நீரே தேர்ந்தெடுத்துக் கொள்ளவாம். 'சாதாரண நரகமா, இந்திய நரகமா?' என்று கேட்டார்.

அந்த மனிதன், 'அவற்றிற்கிடையே என்ன வேறுபாடு?' என்று கேட்டான். வழக்கமான நரகங்களில், அவர்கள் உங்களைத் தலை கீழாய் கட்டித் தொங்கவிட்டு, உங்கள் மீது பெட்ரோல் ஊற்றி எரிய விடுவார்கள். அங்கே நீங்கள் பன்னிரண்டு மணி நேரம் எரிந்து கொண்டிருப்பீர்கள். அதன் பின்னர் பன்னிரண்டு மணி நேரம் ஓய்வெடுக்கலாம்' என்று விளக்கமளித்தார் புனித பீட்டர்.

'அப்படியானால் இந்திய நரகத்தில்?'

'அவர்களும் உங்களைக் கட்டித் தொங்க விட்ட பின்னர் உங்கள் மீது பெட்ரோல் ஊற்றி, பின்பு நெருப்புக் குச்சியால் கொளுத்தி எரிய விடுவார்கள். அதன் பின், பன்னிரண்டு மணி நேரம் எரிந்த பின், அடுத்த பன்னிரண்டு மணி நேரம் ஓய்வெடுக் கலாம்.

அதைக் கேட்ட அந்த மனிதன் சொன்னான், 'இதில் எந்த வேறுபாடும் எனக்குத் தெரியலையே' என்ற.

புனித பீட்டர் சொன்னார், 'நான் உங்கள் இடத்தில் இந்திய நகரத்தையே தேர்ந்தெடுப்பேன். ஏனெனில்! அங்கே அவர்கள் பெட்ரோலையோ அல்லது தீப்பெட்டியையோ கொண்டு வர மறந்து விடுவார்கள்.

எனவே, நீங்கள் இவ்வளவு அச்சமடையத் தேவையில்லை. புத்திசாலிகள் எப்போதுமே இந்திய நரகத்தைத் தான் செய்வார்கள். ஆனால், நீங்கள் எதற்காக அஞ்சுகிறீர்கள் என்றே எனக்குப் புரியவில்லை. அச்சம் என்பது மனிதனின் உள்ளுணர்வே ஆகும். உங்களை நிஜமாகவே அச்சமடையச் செய்ய இயலுமானால் நீங்கள் மதகுருமார்களின் கையில்தான் இருப்பீர்கள். அல்லது

நீங்கள் சொர்க்கத்திற்கு செல்லும் பேராசை கொண்டவராயின் பூசாரிகளின் கையில் இருப்பீர்கள். இந்தக் குருமார்கள் தான் உங்களை நரகம் செல்லாதவாறு நாங்கள் பாதுகாக்கிறோம், அத்துடன் நீங்கள் சொர்க்கம் செல்லவும் உதவுகிறோம்' என்று பல காலமாய் சொல்லி வருகிறார்கள். அதற்கு நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம் ஒன்றே ஒன்றுதான். நீங்கள் எங்களுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும்' என்று மேலும் உங்களுக்கு, ஆணையிடுவார்கள்.

எனவே பயமும் பேராசையும் கொண்ட மனிதன் மத குருமார்களிடம் பணிவாக நடக்கிறான்.

பெற்றோர்களும் இப்படியே பழகியிருக்கிறார்கள். அவ்வாறே தங்கள் பிள்ளைகளையும் அவர்கள் வளர்த்து விடுகிறார்கள். பயமும் பேராசையும் கொண்டவர்களாகவே அவர்கள் வளர்க்கப்படுகிறார்கள். நீங்கள் ஒன்றைச் செய்ததற்காகத் தண்டிக்கப்படுகிறீர்கள். வேறு ஒன்றைச் செய்தால் உங்களுக்குப் பரிசு கிடைக்கிறது. இது ஒரு தொடர் கதைதான். பள்ளிகளில் கல்லூரிகளில், பல்கலைக் கழகங்களில் என்று எங்கும் இதே கதைதான் தொடர்கிறது. சிலவற்றிற்குத் தண்டனை அளிப்பது, சிலவற்றிற்கு பரிசளிப்பது என்று. ஆக, பேராசையையும் அச்சத்தையுமே மாறி மாறி ஏற்கிற கட்டாய நிலை.

நீங்கள் பல்கலைக் கழகத்தை விட்டு வெளியே வரும்போது முற்றிலுமாய் வடிவமைக்கப்பட்டிருப்பீர்கள். அது ஒரு கட்டு திட்டம். நீங்கள் விழிப்போடு இல்லாவிட்டால் உங்களுடைய ஓட்டு மொத்த வாழ்க்கையும் அப்படியே தான் இருந்து விடும். நீங்கள் கவனமாக இல்லாவிடில் உங்கள் சூழ்நிலை மாறாது. சமூகம் உங்களுக்காக அமைத்த சிறையில் இருந்து வெளிவர போதிய துணிச்சல் இருக்க வேண்டும் உங்களிடம். அது அச்சத்தையும், பேராசையையும் கொண்ட சிறை.

இது வழக்கமானது, இது இந்தியர்களுக்கானது என்று எந்த நரகமும் இல்லை. அதே போன்று சொர்க்கம் என்பதும் இல்லை. சொர்க்கமும் நரகமும் உளவியல் சார்ந்த நிலைகள். அவை புவியில் சார்ந்ததல்ல. அவர்களுடைய சிறுபிள்ளைத் தனமான பொருளற்ற சொற்களை விடுங்கள். நீங்கள் இதோ இந்த நிமிடமே நரகத்தில் இருக்க முடியும். அதே போன்று இந்த நிமிடமே

உங்களால் சொர்க்கத்தில் இருக்க முடியும். சொர்க்கத்தில் இருப்பதற்கு ஒரே வழி - மனம் இல்லாமல் இருப்பது தான். நரகத்தில் இருக்க வேண்டும் என்றால் அதற்கும் வழி உண்டு. அது மனதுடன் இருப்பது ஆகும். வேறொன்றும் இல்லை. தொடந்த எண்ணங்களின் போக்குவரத்து தான் உங்களைத் துன்ப மயமாக்குகிறது. இந்தப் போக்குவரத்து நின்று போனால், மவ்னமாக அமைதியில் விடப்பட்டால் நீங்கள் சொர்க்கத்தில் இருப்பீர்கள். சொர்க்கம் உங்களிடமே இருக்கிறது. இது தான் தியானம் என்பது.

நீங்கள் சொர்க்கம், நரகம் பற்றியெல்லாம் கவலைப்படத் தேவையில்லை. நீங்கள் தியானம் செய்யுங்கள். மேலும் மேலும் மவுனத்தில் மூழ்குங்கள். மேலும் மேலும் உங்கள் மனதை விட்டு விலகுங்கள். உங்கள் மனதிடம் பற்றற்றவராயிருங்கள். உங்கள் எண்ணங்களின் வழி முறைகளில் இருந்து இனம் கண்டு கொள்ள இயலாதபடி மாறி விடுங்கள். உங்கள் மனதில் என்ன நிகழ்கிறது என்பதைப் பார்த்துக் கொண்டேயிருங்கள். உங்களுக்குள் மிகச் சிறிய அளவிலேயே எண்ண்ஙகள் தோன்றி வருவதைக் காண்பீர்கள். ஏனெனில் தற்பொழுது எண்ணங்களை நீங்கள் வரவேற்பதில்லை. நீங்கள் தற்பொழுது அவற்றைப் பொருட் படுத்தாமல் இருப்பதாலும், நீங்கள் ஒன்றிற்கு மாற்றாக மற்றொன்றைத் தேர்வு செய்யாமல் இருப்பதாலும் எண்ணங்கள் தோன்றுவது குறைந்து வருகின்றன. நல்ல எண்ணங்கள் தீய எண்ணங்கள் அற்ப எண்ணங்கள் எல்லாமே ஒன்று போலத்தான். நீங்கள் தனிமையில் இருங்கள். தொலைவில் ஒரு குன்றின் மீதிருந்து பார்த்துக் கொண்டிருக்கும் ஒரு பார்வையாளனாக இருங்கள்.

மெல்ல மெல்ல போக்குவரத்து குறைந்து கொண்டு வருகிறது. பின்னர் திடீரென்று இடைவெளிகள் ஏற்படும்; நில நொடிகளேயான இடைவெளிகள். தற்போது உங்களுக்கு இதுவரை கிடைத்திராத புதிய அனுபவம், புதிய ருசி கிடைக்கும். மேலும், நீங்கள் மனமேயில்லாத ஒரு நிலையை உணர்ந்து கொள்ள நேர்ந்தால் உண்மையான வாழ்க்கை தொடங்கும். அந்நிலையில் எல்லாமே ஆனந்தமாய், இறைவனின் ஆசிகளாயிருக்கும். ஆனால் தியானத்திலேயே இருக்க சிறந்த அறிவாற்றல் தேவை. நீங்கள் தற்போது இருப்பது போலவே எப்போதும் இருக்க முடியாது.

நீங்கள் முட்டாள் தனமாய், இருக்க இயலாது. விழிப்புணர்ச்சியுடன் இருக்க வேண்டும்.

இரண்டாவது உலகப்போரின் முடிவில், இத்தாலியர்கள் ஜெர்மானியர்களுடன் போர் புரிந்து கொண்டு இருந்த பொழுது நாஜி (Nazi) ப் படையினர் முசோலினியின் ஆட்களைக் கொல்ல ஒரு திட்டத்துடன் வந்தனர். அவர்கள் 'ஹே லூய்கி' (Luigi) என்று உரக்கக் கத்தினர். ஓர் இத்தாலியச் சிப்பாய் நின்று தலையை உயர்த்தி 'ஸர்' என்றதும் அவன் இறந்து படுவான்.

க்ராட்ஸ் (Krauts) செய்தது அவ்வளவு தான். 'லூய்கி! ஸர்!' ஆயிரக்கணக்கான இத்தாலியர்கள் இப்படி அழிக்கப்பட்டனர். அதன் பிறகே அவர்கள் பதிலடி கொடுக்க முடிவு செய்தனர். அப்போது ஜெர்மானியர்கள் பலருக்கும் 'ஹான்ஸ்' என்றே முடிவுப் பெயர் இருப்பதை அவர்கள் அறிந்தனர். ஓர் இத்தாலிய கேப்டன் ஹேய் 'ஹான்ஸ்' என்று கத்துவான். எங்கும் மவுனம்.

'ஹேய் ஹான்ஸ்' என்று உரக்க அழைப்பான்.

'அது நீதானா லூய்கி?' என்று கேள்வி எழும்.

'ஸர்' என்று பதில் வரும்.

'பூம்!' அதிரொலி. மற்றொரு ஜெர்மானியன் மடிவான்.

***கடைசிக் கேள்வி:***

***'ஓஷோ அவர்களே! தற்கால (நாகரிக) மனிதன் எதனால் தனிப்பட்டவனாய் - துணையற்றவனாய் உணர்கிறான்?'***

மனிதன் எப்போதுமே தனிமையாக இருக்கிறான். காரணம் அவன் அடிப்படையிலேயே தனியானவன். நாம் தனியாகப் பிறக்கிறோம், தனியாகவே இறக்கவும் போகிறோம். இதற்கிடையே நாம் ஒன்று சேர்ந்து இருப்பது போல் நடிக்கத்தான் முடிகிறது. தனிமை எவ்வித மாற்றமுமில்லாமல் அப்படியே இருக்கிறது. அது ஓர் உள்ளுணர்வாக மாறிவிடுகிறது. அது அடிமட்டத்திற்குச் சென்று விடுகிறது.

மனிதன் என்றுமே தனிமையில் தான் இருக்கிறான். இன்றைய புதுயுக மனிதன் மிக அதிகமாக தனிமையை உணர்கிறான். அதற்கு ஒரு குறிப்பிட்ட காரணம் உண்டு. நாகரிக மனிதனுக்கு முதல் முறையாக தன்னைப் பற்றி உரை, சிந்திக்க தேவையான அளவு நேரம் இருக்கிறது. பண்டைய காலங்களில் அவன்

வெண்ணைக்கும், ரொட்டிக்கும் வேண்டி அதிகாலை முதல் நள்ளிரவு வரை உழைக்க போராட நேர்ந்தது. அப்படி உழைத்தும் தனக்கும் தன் குழந்தைகளுக்கும் போதிய அளவு உணவை அவனால் பெற இயலவில்லை.

கிழக்குப் பகுதிகளில் இன்னமும் இதே நிலைதான். இந்தியக் கிராமங்களில் இருக்கும் தற்கால மனிதன் தனிமையை உணர்வதில்லை. எதையும் உணர்ந்து பார்க்கிற அளவிற்கு அவனுக்கு நேரம் இல்லை. அவன் தனிமையை உணர்வதில்லை. அவனுக்குத் தங்க ஓர் உறைவிடம் தேவைப்படுகிறது. ஒரு வீடு தேவை. இந்த விஷயங்கள் - தனிமை பற்றியெல்லாம் உணர அவனுக்கு நேரமேயில்லை. அதற்கான நேரத்தைச் செலவழிக்க அவனால் முடியாது. சமுதாயம் ஓரளவு பொருளாதார முன்னேற்றம் காண்கிற போதுதான் இத்தகைய எண்ணங்கள் இதயத்தின் மேல்மட்டத்துக்கு வருகின்றன.

மக்களுக்கு நல்ல உணவு எப்பொழுது கிடைக்கிறதோ, தேவையான உடைகள் கிடைக்கின்றனவோ, அப்பொழுதுதான் வாழ்க்கையின் முக்கியப் பிரச்சினைகள் தோன்றுகின்றன. அப்பொழுதுதான், ஒருவன் திடீரென்று உணர்கிறான். 'நான் தனியாக இருக்கிறேன், கூட்டத்தில் இருந்தாலும் நான் தனியானவன் தான்' என்று. இது மிகவும் முக்கியமான தேவை. தேவைகளில் பல படிநிலைகள் உண்டு.

முதலில் உடலின் தேவைகள் வருகின்றன. உடலின் தேவைகள் நிறைவேற்றப்பட்டால் உங்களுக்கு உளவியல் சார்ந்த தேவைகள் எழுகின்றன. அவை முக்கியமானவை - உயர்ந்தவை. இசை, கவிதை, ஓவியம், அழகியல் பற்றி ஒருவன் எண்ணமிடு கிறான். ஒருவன் ஷேக்ஸ்பியர், மில்டன், காளிதாசன், இரவீந்திரர், கலீல் ஜிப்ரான் பற்றி நினைக்கிறான். ஒருவன் வாக்னர், லியனார்டோ, வான்காக், பிக்காஸோ பற்றி நினைக்கிறான். இவையெல்லாம் சிறந்த தேவைகள்.

பசித்த மனிதன் பீத்தோவனை அறிய மாட்டான். அந்த இசை எத்தனை மேலானதாய் இருந்தாலும் அது அவனுடைய வயிற்றை நிரப்ப உதவாது. அவன் அந்த இசையைக் கேட்பதை விட, அந்த இசைக் கலைஞனை கொன்று போடவே விரும்புவான். அவனுக்கு கலைகளை ரசிக்கிற மனம் இருக்காது. அவற்றைப் பற்றியெல்லாம்

அவன் கவலைப்படுவதில்லை. அதைவிட கார்ல் மார்க்ஸ் பற்றியும் அவருடைய பொதுவுடைமைச் சித்தாந்தத்தைப் பற்றியுமே அவன் தெரிந்து கொள்ள விரும்புவான். எப்போது உடன் அடிப்படைத் தேவைகள் நிறைவேறுகின்றனவோ, அப்போதுதான் உளவியல் சார்ந்த தேவைகள் தோன்றும்.

எனக்கு சோவியத் ரஷ்யாவில் இருந்து நிறைய கடிதங்கள் வருகின்றன என்பதை அறிந்தால் நீங்கள் வியப்படைவீர்கள். அவர்களால் எனக்கு நேரடியாகக் கடிதம் எழுத இயலாது. ஏனெனில் அப்படி எழுதப்படும் கடிதங்கள் என்னிடம் வந்து சேராது. முதலில் ரஷ்ய அரசாங்கம், அடுத்து இந்திய அரசாங்கம். இதில் இந்திய அரசாங்கம் மட்டுமே சம்பந்தப்பட்டிருந்தால் ஒரு சாத்தியம் இருக்கலாம். ஆனால், ரஷ்ய அரசாங்கம்... அவர்கள் மிகவும் முறைப்படி செயல்படுவார்கள். எனவே அந்தக் கடிதம் பார்வையாளர்கள், சுற்றுலாப் பயணிகள் மூலம் லண்டன் அல்லது பாரீஸில் போடப்பட்டு அதன் பின்னரே என்னை வந்தடைகின்றன.

மிக அதிகமான மக்கள், இங்கே வர விரும்புவதாய் எழுதியிருக்கிறார்கள். அது நடவாத காரியம். என நூல்கள் அங்கு படிக்கப்படுகின்றன. ஆனால், அவை ஒளிவு மறைவாக வைத்துப் படிக்கப்படுகின்றன. அவை ஒவ்வொரு கையாய் மாறியபடி இருக்கும். ஆனால், ஒரு கம்யூனிஸ்ட் நாட்டில் எனது புத்தகங்களை யாரும் பகிரங்கமாக வைத்துக் கொண்டிருக்க முடியாது.

எங்கே உடலின் தேவைகள் நிறைவு செய்யப்படுகின்றனவோ அங்கே உளவியல் சார்ந்த தேவைகள் எழுகின்றன என்கிற புள்ளியை நோக்கி ரஷ்யா மிக நெருங்கி வந்து கொண்டிருக்கிறது. படி நிலைகளில் ஆன்மிகத் தேவை அதி முக்கியத்துவம் பெற்று விட்டிருக்கிறது. உங்கள் உளவியல் சார்ந்த தேவைகள் நிறைவு செய்யப்பட்டதும் - தரமான இசையைக் கேட்பது, அருமையான ஓவியங்களை ரசிப்பது, அற்புதமான கவிதைகளைப் படிப்பது இப்படி. அதன் பிறகு என்ன? சற்று முன்பாகவோ அல்லது பின்பாகவோ அவையெல்லாம் விளையாட்டுகள் அழகான விளையாட்டுகள் என்பது நிரூபணமாகி விடும். எல்லாமே ஒரே மாதிரியான விளையாட்டுகள்!

அப்போதுதான், முடிவான குறிக்கோளாகிற (Ultimate) ஒன்று வந்த உங்கள் கதவைத் தட்டுகிறது! அந்த இறுதி இலக்கு உங்கள்

கதவைத் தட்டுகிறபோது தான் நீங்கள் தனிமையை நிஜமாகவே விரும்ப ஆரம்பிக்கிறீர்கள். இந்த உலகம் முழுவதிலுமே நீங்கள் தனிமையை உணர்கிறீர்கள். அதுதான் தியானத்தின் தொடக்கம். நீங்கள் தனிமையை உணர்ந்தால் உங்கள் தனிமை கொஞ்சம் ஊடுருவும் தன்மையை, தீவிரத்தை, பெரு விருப்பத்தை கொண்டிருப்பதாய் உணர்ந்தால் அப்போது தியானிக்கத் தொடங்கி விடுவீர்கள்.

தனது தனிமையுடன் ஒருவர் நட்புறவு கொள்ள தியானம் ஒரு வழி. அது தனிமையிடம் இருந்து நழுவியோடாமல் அந்தத் தனிமையை எதிர் கொள்வது. ஆம், தனிமையின் அடியாழத் துக்கே சென்று அது என்ன என்று தெரிந்து கொள்வதே சிறந்தது. அப்போது உங்களுக்கு ஓர் ஆச்சரியம் காத்திருக்கும். உங்கள் தனிமைக்குள் நீங்கள் உட்புகுந்தால் அதன் மையத்தில் அது தனித்திருக்கவில்லை என்பதைக் கண்டு வியப்படைவீர்கள். அங்கிருப்பது ஏகாந்தம்.

நமது சுற்றுப்புறம் தனித்திருக்கும் (துணையற்று) தன்மை கொண்டது. ஆனால் மையத்தில் இருப்பது ஏகாந்தம். அது இணையற்ற ஒன்று.

ஒரு முறை நீங்கள் ஏகாந்தத்தின் அழகைத் தெரிந்து கொண்டு விட்டால், முற்றிலும் புதியதொரு மனிதனாய் மாறிவிடுவீர்கள். அதன் பின்னர் தனித்திருக்கும் (Lonely) நிலையை உணர மாட்டீர்கள். மலைகளின் மீது இருந்தாலும் அல்லது பாலைவனங் களில் இருந்தாலும் தனிமையை உணர மாட்டீர்கள். தனிமையில் இருப்பது தனித்து விடப்படும் நிலையல்ல. காரணம், ஏகாந்தத்தில் (aloneness) பிரபஞ்ச இருப்பை உங்களுக்குள் உணர்வீர்கள். அப்போது நிலைத்திருக்கும் ஒன்றில் நீங்கள் வேரூன்றியிருப் பீர்கள். எனவே வெளியே யாராவது இருக்கிறார்களா இல்லையா என்பது பற்றி யார் கவலைப்படப் போகிறார்கள்? நீங்கள் மிகவும் உள்ளே இருக்கிறீர்கள். மிக உள்ளாக, நேர்த்தி யான விதத்தில்...

இதோ, இப்போது இந்தக் கூட்டத்திலும் நீங்கள் தனித்தே இருக்கிறீர்கள். (lonely). நான் சொல்கிறேன்; உங்கள் ஏகாந்தத்தை நீங்கள் உணர்ந்திருந்தால் தனிமையிலும் நீங்கள் தனித்திருக்க (lonely) மாட்டீர்கள்.

ஆனால் நவீன மனிதன் துன்பப்படுகிறான். இரா (Ira) கல்லூரியை விட்டு வெளியில் வந்ததும், முதுகில் ஒரு மூட்டையைச்

சுமந்து கொண்டு நடந்தும் இடையிடையே ஊர்திகளில் பயணம் செய்து (ஓசி சவாரி) கொண்டு அமெரிக்காவைச் சுற்றி வந்தான். இப்படி ஒரு வருடகாலம் கழிந்து பின் ஒருநாள் தன் தாயைத் தொலைபேசியில் அழைத்தான்.

'அம்மா நீங்கள் எப்படி இருக்கிறீர்கள்?'

'மிகவும் நன்றாக இருக்கிறேன். மகனே, நீ எப்போது வீட்டுக்கு வருவாய்? நான் உனக்காக வறுத்த ஈரல், கோழிக் குழம்பு எல்லாம் சமைத்துப் பாதுகாப்பாக வைக்கிறேன்' என்றார் தாய்க்காரி.

'ஐயோ அம்மா, நான் ரொம்ப தூரத்தில் இருக்கேன்' என்றான் பையன்.

'மகனே, நான் ஓட்மீல் குக்கீஸும் தயாராக வைத்திருப்பேன். உடனே வந்து விடு' தவிப்புடன் சொன்னாள் தாய்.

'எனக்கு ஓட்மீல் குக்கீஸ் பிடிக்காது' என்றான்.

'என்ன, உனக்குப் பிடிக்காதா?' கேட்டாள் அந்தப் பெண்மணி.

'சொல்லுங்கள், இது என்ன 57682 – ஆம் நூற்றாண்டா?'

'இல்லை'

'அப்படீன்னா இது ராங்க நம்பராத்தான் இருக்கணும்'

'ஆக நீ வரலேன்னு சொல்றதா எடுத்துக்கணுமா?'

மக்கள் உண்மையிலேயே துணையற்று, தனித்து விடப்பட்ட நிலையில் இருக்கிறார்கள். 'நீ வரலேன்னு அர்த்தமா?' என்று அந்தப் பெண்மணி கேட்டாள். மனிதன் இத்தனை தனிமையில் எப்போதுமே இருந்ததில்லை. தனது அற்பத் தேவைகளைக் கூட நிறைவேற்றிக் கொள்ள இயன்றவனாக அவன் இருந்திருக்கவில்லை. தற்போது முதல் முறையாக மேற்கில் அது சாத்தியப் பட்டிருக்கிறது. தனது உயர்ந்த விருப்பங்களையும் அவனால் நிறைவேற்றிக் கொள்ள முடிகிறது. இது ஒரு நல்ல அடையாளமாகும். இது ஒரு சாபம் போல் தெரியலாம், ஆனால் தன்னை வெளிக் காட்டிக் கொள்ளாத வரம்.

மேற்கு கிழக்காகிற நேரமிது. கிழக்கும் மேற்காக மாறிக் கொண்டிருக்கிறது. அது தான் துயரம். மனிதன் முட்டாளாகத் தெரிகிறான். மேற்கு கிழக்கைப் போல் மாறுவதற்குள் கிழக்கு மேற்காகவே மாறிக்கொண்டிருக்கிறது. இது வருத்தமளிக்கிற போக்கு தொடர்கிறது...

நீங்கள் இங்கேயே அதைக் காணக்கூடும். இங்கே அதிக எண்ணிக்கையில் இந்தியர்களை ஏன் நீங்கள் காண முடிவ தில்லை? இது அவர்களுடைய தேவையல்ல. நான் இங்கே பகிர்ந்து கொள்வதற்கும் தங்களுக்கும் தொடர்பில்லை என்பது அவர்கள் எண்ணம். அதற்கான விருப்பம் அவர்களிடம் இன்னமும் வரவில்லை. அவர்கள் சில நேரம் வந்தால் கூட தியானம் பற்றி எதுவும் கேட்பதில்லை. சந்நியாசம் பற்றியும் கேட்பதில்லை. அன்பைப் பற்றியும் கேட்க மாட்டார். எதுவும் இல்லை, எவ்வகையிலும் இல்லை.

சில நாட்களுக்கு முன் ஒரு கடிதம் வந்தது எனக்கு. அதில், 'நீங்கள் ஏன் சில மருத்துவமனைகளைத் தொடங்கக் கூடாது, சில கல்விக் கூடங்களைத் தொடங்கக் கூடாது? உங்கள் சந்நியாசி களுக்கு ஏன் ஏழைகளுக்கான சேவையைக் கற்றுத் தரக்கூடாது? என்று கண்டிருந்தது. ஏழைகளுக்கான சேவை பல காலமாகவே நடந்து கொண்டுதானிருக்கிறது. ஆனால், ஏழ்மை தீர்ந்தபாடில்லை. ஏழைகளுக்குத் தொண்டு செய்வதால் மட்டும் ஏழ்மையை ஒழிக்க முடியாது - அது நிச்சயம். வாழ்க்கை குறித்த ஒரு புதிய பார்வையை அவர்களுக்கு வழங்குவதன் மூலமே ஏழ்மையை ஒழிக்க முடியும். அவர்கள் ஏழைகளாய் இருப்பதற்கு அவர் களுடைய கோட்பாடுகளே காரணம். வாழ்க்கை பற்றிய அவர் களுடைய மனோபாவத்தையும் சொல்ல வேண்டும். அவர்கள் ஏழைகளாக இருப்பதற்கு அவர்களே காரணம். அவர்களுக்குத் தேவை கருணை அல்ல கல்வி. அவர்களுக்குத் தேவை உபகாரம் அல்ல, அவர்களை உணர்ச்சி வகையில் அசைத்து அவர்களிடம் விழிப்புணர்ச்சியை ஊட்ட வேண்டும். ஆனால் எவருமே தங்களுடைய தூக்கத்தையும் கனவையும் தொலைக்க விரும்புவ தில்லை. எனவே தான் அவர்களுக்கு என் மீது கோபம்.

மருத்துவமனைகள் இருக்கத்தானே செய்கின்றன. பள்ளிக் கூடங்களும் இருக்கின்றன. வேண்டுமானால் அவற்றின் எண்ணிக்கையை கூட்டிக் கொள்ள முடியும், ஆனால், அது ஒன்றும் பெரிதாய் உதவி விடாது. கடலின் நிறம் கரண்டியால் தூவுகிற வண்ணப் பொடியில் நிறமாற்றம் கண்டு விடாது.

நாம் ஒட்டு மொத்த அடிப்படையையும் மாற்றியாக வேண்டும். இந்தியா பல நூற்றாண்டுகளாய் ஏழ்மையுற்றுக் கிடக்கிறதே. அது

ஏன்? இதற்கான காரணம் மிக ஆழ்ந்ததாகவே இருக்கும். இந்திய மனம் வாழ்க்கை குறித்து கொண்டிருக்கிற எண்ணங்கள் எதிர் மறையானவை. ஏனெனில் இந்திய மனம் பிரிவினைகளில் தான் வாழ்ந்து வருகிறது. இந்திய மனம் உலகியல் சார்ந்த வாழ்க்கைக்கு எதிரானது என்றால் இந்தியர்கள் ஏழைகளாகவேதான் இருக்க வேண்டியிருக்கும். நீங்கள் இயற் பொருள் வாதத்துக்கு (*materialism) எதிரானவராயிருந்தால் ஏழையாகவே இருக்க நேரிடும். உங்கள் தலை விதியை நீங்களே தீர்மானித்துக் கொண்டீர்கள்.

உண்மையான ஆன்மிகம் அறிவியல் சார்ந்த இயற் பொருள் வாதத்தை அடிப்படையாய் கொண்டிருக்க வேண்டும். பொருளும் உணர்வும் வேறாகி விடாது. உடலும் உணர்வும் எப்படி வேறாவதில்லையோ அப்படித்தான். இரண்டும் ஒரு நிகழ்வின் இரண்டு கூறுகளே. இந்த உலகம் நேசிக்கப்பட வேண்டியது. அந் நிலையில், தன்னுடைய இரகசியங்களை அது உங்களிடம் வழங்கும்.

மேற்கு செய்திருக்கும் தவறு, ஆன்மிகம் தேவையில்லை. இயற்பொருள் வாதமே போதுமென்று இருந்ததுதான். அதனால் தான் அவர்களுடைய அடிப்படைத் தேவைகள், நிறைவேறி, உயர்வகைத் தேவைகள் நிறைவேறாமல் இருப்பது. அவர்கள் வதைபடுகிறார்கள் தற்கொலை செய்து கொண்டு விடுமளவிற்கு. அல்லது பைத்தியம் பிடிக்கிற அளவிற்கு. கிழக்கு வேறொரு தவறைச் செய்திருக்கிறது. ஆன்மிகம், இயற் பொருள்வாதம் இல்லாமலே இருக்க முடியும் என்று அது நம்புகிறது. அதனால், கிழக்கு உடலை விட்டுப் பிரிந்த ஆவி போலாகி விட்டது.

நான் கிழக்கையும் மேற்கையும் நெருங்கிவரச் செய்வதற்கு பாடுபட்டுக் கொண்டிருக்கிறேன். அதன் விளைவாக ஒவ்வொருவருக்கும் உடல் இருக்கும், ஒவ்வொருவருக்கும் உயிர் இருக்கும். வாழ்க்கை பற்றிய காட்சிகளில் ஆன்மிகமும், இயற் பொருள்வாதமும் இரண்டு கூறுகளாய் இருக்க வேண்டும். அப்போது வறுமை மறைந்து விடும். மண்ணில் போதிய வளம்

---

* **இயற்பொருள் வாதம் (materialsm) - உலகில் காணும் பொருளே உண்மை என்பது. பொருளில் பற்று வைத்து ஆன்மிகத்தில் நம்பிக்கை இல்லாதிருப்பது.**

இருக்கிறது. மனிதனிடம் போதிய அறிவிருக்கிறது. நாம் அதை மேலும் வளப்படுத்த வேண்டும்.

இங்கே, இந்தியர்களை அதிக எண்ணிக்கையில் நீங்கள் காண முடியாது. மிகக் குறைவுதான். அந்தச் சிலரும் அறிவு நுட்பம் உடையவர்கள் - தங்கள் தாழ்நிலை விருப்பங்கள் நிறைவேறி னாலும், எதுவுமே நிறைவேறாது என்பதைப் புரிந்து கொள்ளாது என்பதைப் புரிந்து கொள்ளுமளவிற்கு. அவர்கள் கிழக்கில் பிறந்தவர்கள். ஆனால், உண்மையிலேயே சமகாலத்தைச் சார்ந்தவர்கள், நவீன சிந்தனை உடையவர்கள். மேற்கில் என்ன வாயிற்று என்பது அவர்களுக்குத் தெரியும். இந்தியா செல்வம் பெற்ற நாடானாலும் அதுதான் நடக்கும். மேற்கு மகிழ்ச்சியாயில்லை. இந்தியா பணக்கார நாடானாலும் மகிழ்ச்சியாயிருப்பதற்கில்லை. ஆக, மகிழ்ச்சியை வேறொரு பரிமாணத்தில் தேடும்படி இருக்கும். அந்தப் பரிமாணம் - ஏகாந்தத்தை அடையும் வரை தனித்திருப்பது. ஏகாந்தத்தின் முதல் தோற்றம் 'சடோரி' (உடனடி ஞானம்) அடுத்து ஏற்படுவது அடுத்த சடோரி (Satori). உங்களுடைய ஏகாந்தத்தில் நீங்கள் நிலைத்திருக்கிறீர்கள். மூன்றாவது சடோரியின் நிறைவான பகுதி - சமாதி நிலை. அப்போது உங்கள் ஏகாந்த நிலையில் இருந்து நீங்கள் வேறாக இருக்க மாட்டீர்கள்.

அதன் பிறகு ஒருவர், நீரூற்றைப் போல் பொங்கி வழியத் தொடங்கி விடுவார். ஏகாந்தத்தில் இருந்து தோன்றுகிறது அன்பின் நறுமணம்.

○

அன்னமே! உன்னுடைய முழுக்கதையும்
நீ என்னிடம் சொல்லேன்.
முதலில் எங்கு தோன்றினாய், எந்த
மறைவான இடத்துக்குச் செல்கிறாய்
இரவில் எங்கு தூங்குகிறாய், நீ
எதைத் தேடுகிறாய் என்பதை.
காலையிது, அன்னமே விழித்துக்கொள்
மேலெழு, என்னைத் தொடர்ந்திடு!
ஆன்மிகச் சலிப்புற்று அடக்க முயலாத
சோர்வு நிலைக்குத் தள்ளப்படாத
மரணத்துக்கு அஞ்சாது வாழ்கிற
தேசமொன்றை நானறிவேன்
இலைகள் மண்டிய மணற்பரப்பில்
ஏராள காட்டுப் பூக்கள்
'நான் அவனாக இருக்கிறேன்' என்கிற
நறுமணம் மிதக்கிறது காற்றில்...
பூவினுள் கிறங்கிக் கிடக்கிற இதயத்தேனீ
வேறெதற்குச் கவலைப்படுமாம்?
நீ மலர்களைக் காண, வெளிச்செல்ல
வேண்டாம், என் தோழீ!
அந்தப் பயணம் குறித்த கவலை விடு
உன் சரீரத்தில் ஒவ்வொரு பூவும்
ஆயிரம் இதழ் விரிக்கும்
அமர்ந்து கொள்ள அதுபோதும்
அங்கிருந்தபடியே உனக்குள்ளும்
வெளியேயும் அழகிய காட்சிகள்!
முன்னும், பின்னுமாய் தோட்டங்கள்!

மனிதன் விழித்திருக்கிறான், ஆயினும், விழித்திருக்கவில்லை என்றே சொல்ல வேண்டும். அவனது விழிப்பு நிலை மெலிதாய், வலிமையற்றதாயிருக்கிறது. அவனுடைய விழிப்பு பயனற்றது. அவன் உறங்கவில்லை, ஆனாலும், விழித்திருக்கவில்லை. இரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட இடத்தில் அவன் இருக்கிறான். அவன் மிருகங்களின் உலகில் விழித்தபடியும், இறைவனின் உலகத்தில் உறங்கியவாறும் இருக்கின்றான்.

அவன் நிலையில்லாத கட்டத்தில் இருக்கிறான். அவனுடைய நிலை 'இருப்பது' அல்ல (being), மாறிக் கொண்டிருப்பது (becoing) - இன்னொன்றாய் ஆகிக் கொண்டிருப்பது. கடந்த காலம் கை விட்டுப் போயாயிற்று, வருங்காலமோ இன்னமும் வந்த பாடில்லை. அந்தத் துயரத்திலும், வேதனையிலும் அவன் கிழிபடுகிறான். கடந்த காலம் அவனைப் பின்னுக்கிழுக்கிறது. மீண்டும் மிருகமாவது இனிமையாக இருக்குமென்றே தோன்றுகிறது. ஏனென்றால் அதில் மனிதனுடைய துன்பமும், துயரமும், பரபரப்பும் இருக்காது அல்லவா.

மிருகங்களைக் கவனித்துப் பாருங்கள், பொறாமைப்படுவீர்கள். வால்ட் விட்மன் தன்னுடைய நாட்குறிப்பேட்டில் இப்படி எழுதியிருக்கிறார். 'மிருகங்களைப் பார்த்தால் எனக்குப் பொறாமையாக இருக்கிறது. நாம் ஏதோ ஒன்றைத் தவற விட்டதாய் உணர்கிறேன்.

நாம் நிஜமாகவே எதையும் தவற விடவில்லை. ஆனால் அந்த மிருகங்களின் அமைதி, நிம்மதி, ஒன்று சேர்ந்திருக்கும் தன்மை இவை தாம் தொலைந்து விட்டன.

மிருகங்கள் மகிழ்ச்சியாயிருக்கின்றன. ஏனெனில் அவற்றுக்கு மரணத்தைப் பற்றித் தெரியாது. மிருகங்களுக்கு வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சினைகளைப் பற்றி எதுவுமே தெரியாது. எனவேதான் அவை மகிழ்ச்சியுடன் இருக்கின்றன. ஏனெனில் அவற்றுக்கு விழிப்புணர்ச்சி இல்லை. விழிப்புணர்ச்சி முதலில் வலியைத்தான் கொண்டு வருகிறது. ஏனென்றால் நீங்கள் ஓராயிரம் பிரச்சினைகளை எதிர்கொள்ள வேண்டி இருக்கும் என்பதை நீங்கள் திடீரென அறிந்து கொள்கிறீர்கள். நீங்கள் அந்த பிரச்சினைகளை நேருக்கு நேராகச் சந்தித்தே ஆக வேண்டும். ஒன்று நீங்கள் அவற்றைத் தீர்க்க வேண்டும், அல்லது அவற்றைக் கலைத்து விட வேண்டும். அனைத்து அமைதியும் மறைந்து போய் விடுகிறது.

ஆனால் மனிதனின் விழிப்புணர்வே எப்பொழுதும் உயர் வானது. நான் வால்ட் வைட்மேனுடன் ஒத்துப் போக மாட்டேன். நான் சாக்ரட்டீஸின் கருத்துகளுடன் தான் ஒத்துப்போக முடியும். அவர், "நான் நிறைவு பெற்றுள்ள ஒரு பன்றியாக இருப்பதை விட, நிறைவு பெறாத ஒரு 'ஸாக்ரட்டீஸ்' ஆக இருக்கவே விரும்பு கிறேன்" என்று கூறி இருக்கிறார். சாக்ரடீஸின் இந்தப் பேச்சு மிகவும் மதிப்புடையது. தேடுதல் உடைய ஒவ்வொரு வரும், லட்சியம் முன்னால் இருக்கிறது என்பதை அறிந்து கொள்வது அவசியம். பின்னால் திரும்பப் போவது என்பது கிடையவே கிடையாது. பன்றியை பார்த்தால் அது திருப்தியாக இருக்கிறது என்று தோன்றலாம். ஏனெனில் அதற்கு தெரியாது. அது உண்மையிலேயே நிறைவடைந்துள்ளதா என்று அதற்குத் தெரியாது; அது நிறைவு பெறவில்லை என்பதை தெரிந்து கொள்ள விழிப்புணர்வு தேவை.

இன்னும் ஏதோ ஒன்று நிகழப்போகிறது. இன்னும் அதிகமாக ஏதோ நிகழப்போகிறது. ஏதோ நடந்து விட்டது; ஆனால் அதில் பகுதியே நிறைவேறி இருக்கிறது. பின்னால் பாருங்கள் பன்றி நிறைவுடன் இருப்பதை நீங்கள் காண்பீர்கள். முன்னால் பாருங்கள்! அப்பொழுது நீங்கள் புத்தர் நிறைவுடன் இருப்பதைக் காண்பீர்கள்! நீங்கள் ஒரு புத்தர் ஆகலாம். புத்தர் என்றால் அவர் விழிப் புணர்வும், மன நிறைவும் ஒருங்கே அமையப்பெற்ற ஒருவராவார். பன்றி என்பது விழிப்புணர்வற்ற ஆனால் நிறைவடைந்த ஒன்றாகும். ஆனால் மனிதன் இந்த இரண்டு நிலைகளுக்கும் நடுவே இருக்கிறான். சிறிய, மிகச் சிறிய அளவு விழிப்புணர்ச்சி, வாழ்க்கையின் வலிகளையும், துயரங்களையும், கஷ்டங்களையும் அறிந்து கொள்ளும் அளவுக்கு, விழிப்புணர்வே அவனுக்கு இருக்கிறது. ஆனால் வாழ்க்கையில் ஏற்படக்கூடிய பேரின்ப நிலைபற்றி அறிந்து கொள்ளும் அளவுக்கு விழிப்புணர்வு மனிதனுக்கு இல்லை.

வலியைப் பற்றி அறிந்து கொள்ள ஒரு சிறு அளவு விழிப்புணர்வே போதுமானது. ஆனால் இன்னும் அதிக அளவு தெரிந்து கொள்ளும் தன்மை தேவைப்படுகிறது. இன்னும் அதிக அளவு விழிப்புணர்வு தேவைப்படுகிறது - உங்களுக்குள் இருக்கும், அரசாங்கத்தை அறிந்து கொள்ள -

மனிதன் ஒரு விதமான போதையில் இருக்கிறான். விழித்து இருக்கிறான். ஆனால் விழித்து இருக்கவில்லை. மனிதன் மிகச் சிறிய அளவே பார்க்கிறான். ஆனால் அனைத்துமே இருட்டாகத் தான் தெரிகிறது. இருளில் அசைந்து கொண்டு இருக்கும் நிழல்களே தெரிகின்றன. ஆனால் எதுவுமே முற்றிலும் தெளிவாக தெரியவில்லை. அங்கு தெளிவு இல்லை - வெளிச்சம் இல்லை....

இது தான் மனிதனின் நிலைமை. நாம் திரும்ப் போக முடியாது. அப்படித் திரும்பிச் செல்வதற்கான எந்த வழிவகைகளும் இல்லை. உணவினாலோ, மது அருந்துவதாலோ, மருந்துகளாலோ மனிதன் தன்னுள் இருக்கும் மிகச்சிறிய அளவு விழிப்புணர்ச்சியையும், இவற்றுக்குள் மூழ்க வைக்க முயலுகிறான். ஆனால் அது மீண்டும் மீண்டும் வெளி வருகிறது. ஏனெனில் கற்றுக் கொண்ட எதுவுமே எப்பொழுதும் கற்று கொண்டதாகவே இருக்கும். அது கற்றுக் கொள்ளாததாக மாறவே முடியாது. அது உங்களது வாழ்வில் நடந்து விட்டது. இனிமேல் நீங்கள் அதை ஒதுக்கித் தள்ளிவிட இயலாது. நீங்கள் அந்த அறிவுடன் வாழ்ந்துதான் தீர வேண்டும். இப்பொழுது செய்யக் கூடியதெல்லாம் முன்னோக்கிச் சென்று கொண்டிருப் பதுதான் - மேலும் வளர்ச்சியடையவதற்காக். மேலும், வளர்ந்து விழிப்புணர்வு பெறவேண்டும். அது உங்களுக்கு வலியை ஏற்படுத்தினால், நீங்கள் அந்த வலிக்குள் முழுமையாய் - அடி யாழத்துக்குச் சென்று விடுங்கள். விழிப்புணர்வே மேம்படுத்திக் கொள்ளுங்கள். விழிப்புணர்வு ஏற்பட இலக்காக வுலியைப் பயன்படுத்துங்கள். தியானம் செய்வதற்கு இலக்காகப் பயன் படுத்துங்கள்.

நீங்கள் சோகமாக இருக்கிறீர்கள் - விழிப்புடன் இருங்கள். சோகமாக இருப்பதே உங்கள் தியானமாகட்டும். நீங்கள் கோபமாக இருக்கலாம், விழிப்புடன் இருங்கள். அத்தனை வழி முறைகளிலும் முயற்சி செய்யுங்கள். அனைத்து சந்தர்ப்பங்களையும் பயன்படுத்தி மேலும் மேலும் விழிப்புணர்வு பெறுங்கள். அத்தனை சக்திகளும் கொஞ்சம் கொஞ்சமாய் ஒன்றாகின்றன. அதன் பின்னர் உங்களுக்குள் ஏதோ ஒன்று வெடித்துச் சிதறுகிறது. அப்படி வெடித்து வெளிப்படுவதையே, கிழக்கில் ஆயிரம் இதழ்த்தாமரை மலர்கிறது என்பார்கள். தமது சூத்திரங்களில் கபீர் இதுபற்றிக் கூறியிருக்கிறார். மேலும் கபீர் 'உங்களைப் பற்றிப் பேசுகிறார். முதலில், சிலா உருவங்களைப் புரிந்து கொள்ள வேண்டும்.

அன்னம் கிழக்கில் மறைஞானிகள் பயன்படுத்துகிற உருவங்களில் ஒன்று. இமயமலைச் சாரலுக்கும் அப்பால் அன்னம் வாழ்கிறது. அதன் உறைவிடம், மானசரோவர் ஏரியில் உள்ளது. உலகிலேயே மிகவும் தூய்மையான நீர்நிலை மானசரோவர் - அரிதாகவே ஒரு மனிதன் அங்கு செல்வதுண்டு. அது மாசுபடாதது, தூய்மை கெடாதது, இன்னும் மனிதர்களின் காலடி படாத இமயத்தின் அழகிய சிகரங்கள் அதைச் சூழ்ந்திருக்கின்றன. அன்னம் அங்கேயே பிறந்து, அங்கேயே வளர்ந்து வருகிறது. ஆனால் அவற்றுக்கு மிகவும், இந்த இடத்தில் குளிர் தாங்க முடியாத அளவு அதிகமாகும் பொழுது, அவை இமயத்தின் அடிவாரங்களுக்கு வந்து விடுகின்றன. அப்படிப்பட்ட சில காலங் களில் ஓர் அன்னம் தான் எங்கோ வந்து சேர்ந்து இருக்கிறோம் என்பதை மறந்து போய் விட்டு, அங்கேயே வாழத் துவங்கிவிடுகிறது. அது அழுக்கு அடைந்த நதிக்கரைகளிலும், தூய்மையற்ற குளங்களிலும், மண் சூழ்ந்துள்ள இடங்களிலும் வசிக்க ஆரம்பிக்கிறது.

இதனால் இந்த அன்னம், மனிதனுக்கு சரியானதொரு உதாரணப் பொருளானது. மனிதன் 'வாழ்ந்து கொண்டு' இருக்கும் தன்மையில் இருந்து வந்து இருக்கிறான், ஆனால் தான் எங்கிருந்து வந்து இருக்கிறோம், தான் யார் என்பதை மறந்து விடுகிறான். மனிதன் அனைத்து புனிதங்களைவிட மிக அதிக புனிதமான ஒன்றில் இருந்து, என்றும் நிலைத்து நிற்கும் ஒன்றில் இருந்து தோன்றி வந்து சேர்ந்த பின்னர், தூய்மையற்ற நதிக்கரைகளிலும், குழம்பி சேறாக இருக்கும் நீர்நிலைகளிலும், வாழ்ந்து கொண்டே இருக்கிறான். நிச்சயமாக! அவனால் இத்தகையதொரு சூழ்நிலையில் மன நிறைவுடன் வாழ இயலாது. ஆனால் அவனுக்கு போவதற்கு எந்த ஓர் இடமும் தெரியாது. அவன் தொலைந்து போய் விட்டான். அவனுக்கு இந்த உலகம் மாத்திரமே உலகமாகத் தோன்றுகிறது. கிழக்கில் இருக்கும், மிக உயர்ந்த ஆன்மிகவாதிகள் மனிதனுடன் ஒப்பிட்டு பேசப்படும் பொருளாக அன்னங்களையே பயன்படுத்துகிறார்கள். கபீர், "அன்னங்களை, நாம் அவை தோன்றிய காலங்களில் இருந்து, நாம் நினைத்துப் பார்த்தோமானால் அவை நன்றாகவே இருக்கும். நீங்கள் உங்கள் வீட்டை விட்டு வெளியேறி இருக்காத அந்த நாட்களில். இப்பொழுது அந்த வீட்டை இப்பொழுது நினைவுபடுத்திக் கொண்டால் மிகவும் நன்றாகவே இருக்கிறது.

"அன்னமே! நீ உனது முழுவதுமான கதையை என்னிடம் சொல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன்."

"உன்னுடைய கதையை முழுமையாக என்னிடம் சொல்லி விடு. ஆனால் யாராவது அந்தக் கதையைக் கேட்டால் நீ சொல்லியே ஆக வேண்டும். பிறவி என்பது தான் ஆரம்பம் என்று தோன்றுகிறது. ஆனால் அது அப்படி அல்ல. மேலும் மரணம் தான் அதன் முடிவு என்று தோன்றுகிறது. ஆனால் அதுவும் அப்படி இல்லை. பிறப்பு, இறப்பு இரண்டுமே உங்கள் வாழ்வின் சம்பவங்கள் பற்றிய சில விளக்கங்களே. மேலும் இவை எல்லாம் கோடிக்கணக்கான ஆண்டுகளாக நிகழ்ந்து கொண்டே இருக்கின்றன.

நீங்கள் உங்களது உண்மையான வீட்டை நினைக்கும் பொழுதே உங்கள் உண்மையான கதை தொடங்குகிறது. நீங்கள் எங்கு இருந்து வந்தீர்களோ அதுதான் உங்களது உண்மையான இல்லம். மேலும் உங்களது உண்மையான கதை முடிக்க முடியாது. ஏன் என்றால் – உண்மையான கதை என்பது – உங்களது மாத்திர மேயான கதை அல்ல. அது விழிப்புணர்வின் கதை, அது படிப்படி யாகத் தோன்றும். விழிப்புணர்வின் கதை, முறையாக வெளிப்படச் செய்யும் விழிப்புணர்ச்சியின் கதை. இது உங்களுடையதான மாத்திரம் கதை. கதை அல்ல. அதுதான் 'என்றும் நிலைத்து இருக்கும்' வாழ்ந்து கொண்டு இருக்கும் ஒன்றின் கதை. இதற்கு ஆரம்பமும் இல்லை – மேலும் இதற்கு முடிவும் இல்லை.

ஒரே ஒரு முறை, நீங்கள் உங்களது சொந்த இடத்தைப் பற்றிய நினைவுகளில் மூழ்கினீர்களேயானால், நீங்கள் உங்களது லட்சியத்தை அறிந்து கொண்டு விட்டீர்கள் என்பதை அறிந்து வியந்து போவீர்கள். ஏனெனில் வாழ்வு தொடங்கிய இடம்தான் உங்களது லட்சியம். ஆதாரம் தான் லட்சியம். நாம் எங்கிருந்து வந்தோமோ, அதே வெற்றிடத்திற்குத் தான், நாம் திரும்பிச் செல்ல வேண்டும். இப்பொழுது தான் அந்த வட்டம் முழுமை பெற்றது. அந்த முழுமையில் தான் இனிமையும், அழகும் இருக்கின்றன. இந்த முழுமையில் தான் ஆசிகள் இருக்கின்றன. அந்த முழுமைதான் தெய்விகமான ஆசீர்வாதங்கள்.

"அன்னமே! நீ என்னிடம் உனது முழுமையான கதையைச் சொல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன்."

"ஒரு புத்தரால் மாத்திரமே தனது கதையை முழுமையாகச் சொல்ல இயலும். முழுமையாக விழிப்புணர்வு பெற்ற ஒருவரால் மாத்திரமே தனது கதையை முழுமையாகச் சொல்ல முடியும். நீங்கள் உங்களது கனவுகளைப்பற்றிப் பேசலாம். ஆனால் அது உங்களுடைய கதை அல்ல. நீங்கள் கனவுகள் காண்கிறீர்கள், விரும்புகிறீர்கள், யோசனை செய்கிறீர்கள். ஆனால் உங்களுக்கு எதுவுமே தெரியாது. மேலும் உங்களுக்கு எவ்வளவு குறைவாகத் தெரியுமோ, அந்த அளவுக்கு அதிகமாக நீங்கள் உங்கள் கனவுகளை நம்புகிறீர்கள். ஏனெனில் ஒருவர் ஏதாவது ஒன்றில் தான் மனதை நிலை நிறுத்தியே ஆக வேண்டும். உங்களுக்கு எவ்வளவு குறைவாகத் தெரியுமோ அதை விட அதிகமாகவே நீங்கள் ஆசைப்படுவீர்கள் - ஏனெனில் உங்களுக்கு உங்கள் உள்ளிருக்கும் அறியாமையையும், வெறுமையையும் விரட்டி விட, தவிர்த்து விட விரும்புகிறீர்கள். நீங்கள் எல்லா திசைகளை நோக்கியும் விரைகிறீர்கள். நீங்கள் விரைந்து கொண்டே இருக்கிறீர்கள். நீங்கள் உங்களுக்கு சற்றும் ஓய்வு அளிப்பதில்லை. ஏனெனில் ஓய்வு என்பது ஆபத்தானது, வெடிக்கும் தன்மை கொண்டது.

மேலும் ஓய்வு என்பது தான் தியானம். வாழ்க்கையின் அனைத்துவித தொல்லைகள் மற்றும், வேகங்களில் இருந்தும், ஓர் இரண்டு மணி நேரங்களை நீங்கள் தனியாக எதுவுமே செய்யாமல் இருக்க வேண்டும் - நீங்கள் தொடங்கும் இடத்தை நோக்கி நகர ஆரம்பிக்கிறீர்கள் - நீங்கள் எதையோ நினைக்க ஆரம்பிக் கிறீர்கள் - நீங்கள் உங்களது வாழ்க்கையைத் தொடங்கிய இடம் - ஏனெனில் நீங்கள் எங்கிருந்து வந்தீர்கள் என்ற நினைவு, உங்களுக்குள், உங்களது எண்ணங்களின் ஆழத்தில் இப்பொழுதும் அங்கே அழியாமல் நிலைத்து நிற்கிறது. நீங்கள் அதை மறந்து இருக்கலாம். ஆனால் அது இருக்கின்றது. ஆனால் அது குப்பைகளால் மூடப்பட்டு இருக்கிறது. அனைத்து விதமான குப்பைகளாலும் மூடப்பட்டு இருக்கிறது. ஆயின் அவை அனைத்தும் நீக்கப்படக் கூடியவையே.

தியானம் என்பது இது போன்றவற்றை எல்லாம் நீக்குவதற் காகத்தான். நினைவுகளாய், கனவுகளாய், கற்பனைகளாய், ஆசைகளாய் உங்களுக்குள் சேர்ந்திருக்கும் அநேகக் குப்பைகள். உங்கள் மூளை சேகரித்து வைத்துள்ள அந்தப் பழைய குப்பை

களை அகற்றி விடுங்கள். தற்போது உங்கள் இதயம் நினைவு கூரத் தொடங்குகிறது. எது மூலமோ (எங்கிருந்து வந்தோம் என்பது) அது நினைவு கூரப்பட்டதும், குறிக்கோளும் அறியப்படுகின்றது. மூலத்தை அறிந்துகொள்வதே குறிக்கோள். நாம் எங்கிருந்து வந்தோமோ அங்கேயே சென்றடைகிறோம்.

**'அன்னமே! உன் கதை முழுவதையும் என்னிடம் நீ சொல்ல வேண்டும் என்பதே எனது விருப்பம்!'**

மூலம் தன்னில் ஓர் அழகை, குறிப்பிடத்தக்க அழகைக் கொண்டிருக்கும்.

**'அன்னமே, நாம் கடந்து போன காலத்தைப் பற்றிப் பேசுவோம் அந்த நெடிய நாட்களை, பழைய நாட்களைப் பற்றிய நினைவில் மூழ்குவோம் எங்கிருந்து தொடங்கினோம் என்பதை நினைவில் கொள்வோம் தொடக்க மூலத்தைப் பற்றிப் பேசுவோம்.'**

ஞாபகத்தில் வையுங்கள், கபீர் தமது சீடர்களிடம் சொல்லிக் கொண்டிருக்கிறார்.

**அவர் தமது சீடர்களை 'அன்னங்கள்' என்கிறார். நீ முதலில் எங்கு தோன்றினாய்? தற்போது இருண்ட மணற் பிரதேசத்தை நோக்கியா, நீ முன்னேறிச் செல்வது? நீ எங்கிருந்து வந்தாய்? எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?**

நாம் இந்த விஷயத்தில் மிகவும் குறிப்பாக, கவனமாக இருக்க வேண்டும். அது ஒரு குருவின் பணியாகும். தனது சீடன் எங்கிருந்து வந்தான், எங்கு போய்க் கொண்டு இருக்கிறான் என்பதை அவர்தான் அவனுக்கு உணர்த்த வேண்டும். இல்லையேல் அவர்கள் கூட்டத்தோடு கூட்டமாய், மக்கள் போகிற இடத்துக்கே தாங்களும் போய் விடுவார்கள். மக்கள் பாவனை செய்கிறவர்கள். இவர்களும் அதே பாவனையை மேற்கொண்டு விடுவார்கள். காரணம், கண்ணை மூடிக் கொண்டு பின்பற்றுகிற போக்கு இருக்கிறது அவர்களிடம். பார்வையற்ற ஒருவன் மற்றொரு பார்வையற்றவனின் பின்னே செல்கிற மாதிரி.

உங்கள் பெற்றோர்கள் அவர்களுடைய பெற்றோர்களைப் பின்பற்றினர். நீங்கள் உங்களுடைய பெற்றோர்களைப் பின்பற்றி வந்து கொண்டிருக்கிறீர்கள். ஆனால், யாருக்கும் எங்கிருந்து வந்தோம், நாம் எங்கே போகிறோம் என்பதே தெரிவதில்லை.

தங்களுக்கு என்ன தேவை என்கிற விழிப்புணர்வு இல்லாமலே அவர்கள் முயன்று கொண்டிருக்கிறார்கள்.

உங்களை எது நிறைவு பெறச் செய்யப் போகிறது? இன்னும் பணம்? இன்னும் வீடுகள்? அதிக அளவிலான அதிகாரம்?

இந்தப் பொருள்கள் அனைத்தும் ஏதாவதொரு வகையில் உதவப் போகின்றனவா?

இவை, மற்ற எவருக்கேனும் உதவியிருக்கின்றனவா? இன்னும் சற்று கவன முடையவராயிருங்கள்.

மிகவும் பழைய கதையொன்று உண்டு:

சீடனுக்குக் கடைசி உபதேசம் அளிக்கப்படவிருந்தது. குரு சொன்னார், உன்னுடைய நிறைவு தீட்சை மறைமுகமான முறையில் உனக்கு வழங்கப்படும் என்று. தனது வழியில் குருவானவர் ஏற்படுத்தியிருந்த அத்தனை தடைகளையும் கடந்து விட்டான். அவற்றை அந்தச் சிஷ்யன் மிகவும் வெற்றிகரமாகக் களைந்து விட்டான். அவன் தனது வலிமையை நிரூபித்து விட்டான். இப்பொழுதுதான் இறுதியான உபதேசம் தரப்படப்போகிறது. இந்த உபதேசத்தில் அவன் வென்று விட்டால், அவன் தன்னை உணர்ந்த ஓர் ஆன்மிக வாதியாக அறிவிக்கப்படுவான்.

அந்தச் சீடன் தனது ஆசாரியரது திருவடிகளைத் தொட்டு வணங்கி, "எனக்கு உத்தரவிடுங்கள். நீங்கள் சொல்லும் எதையும் நான் செய்து முடிப்பேன்" என்று உறுதி அளித்தான்.

இப்பொழுது ஆசிரியர், "நீ அரசனிடம் செல்ல வேண்டும். நீ அதிகாலை நேரத்தில் தான் செல்ல வேண்டும். நீ தான் அரசனைக் காணச் செல்லும் முதல் பார்வையாளனாக இருக்க வேண்டும். ஏனெனில் அந்த அரசனுக்கு ஒரு பழக்கம் இருக்கிறது. தன்னைக் காண வரும் முதல் பார்வையாளனுக்கு, அவன் கேட்கும் எதையும் மன்னன் கொடுத்து விடுவான். இந்த நாடு மிகவும் செல்வச் செழிப்புடன் இருப்பதால், இதுவரை யாருமே அரசனிடம் வந்து அப்படி எதையும் கேட்டதில்லை. ஆனால் நீ எப்படி ஆயினும் இந்த சந்தர்பத்தை இழந்து விடாதே. அதிகாலையிலேயே நீ அரண்மனைக்குச் சென்று விடு. அதிகாலை நேரத்தில் மன்னன் தோட்டத்திற்கு உலவுவதற்காக வருவார். சூரிய உதயம் ஆகும் நேரத்தில் தான் அரசர் தோட்டத்திற்குள் நுழைவார். அப்பொழுது அங்கே நீ அங்கே இருந்தாக வேண்டும். அப்பொழுது "உனக்கு

என்ன வேண்டும்?" என்று அரசர் உன்னிடம் கேட்பார். நீ உனக்கு என்ன என்ன வேண்டுமோ அனைத்தையும் கேட்டுப் பெற்றுக்கொள்."

அந்தச் சீடனுக்கு இது என்ன விதமான உபதேசம் என்று விளங்கவே இல்லை. ஆனால் குருவின் கட்டளையை நிறைவேற்றி, ஆக வேண்டும். அவன் அரண்மனைக்குப் போனான். அவன் எந்த ஒரு தாமதமும் நேராமல் இருக்க காலை மூன்று மணிக்கே அவன் அங்கு சென்று, அரசருக்காகக் காத்து இருக்கத் துவங்கினான்.

சூரியன் உதிக்க ஆரம்பிக்கும் நேரத்தில் அரசன் அங்கே வந்தான். அந்த இளைஞன் அரசனை வணங்கி நின்றான். அவனைக் கண்ட அரசன், 'நீ என்னிடம் எதையாவது கேட்பதற்காகவே வந்திருக்கிறாயா? நீ எதை வேண்டுமானாலும் கேட்கலாம். நீ கேட்கிற எதையும் என்னால் தரமுடியும்? என்றான்.

அந்த இளைஞனின் மனதில் மிகப் பெரிய விருப்பம் ஏற்பட்டது. தற்போது அவன் விருப்பங்களால் பாதிக்கப்பட்டவனானான். அவன் ஓர் ஏழ்மையான மனிதன்: எளிய குடும்பத்தில் இருந்து வந்தவன். மேலும் அரசன் வேறு 'என்ன வேண்டுமானாலும்' என்று அழுத்தமாய் கூறியிருக்கிறான்!

எதற்கும் ஒரு முறை உறுதி செய்து கொள்ள விரும்பிய இளைஞன், 'எதை வேண்டுமானாலும்' என்று எதைக் குறிப்பிடுகிறீர்கள்? என அரசனிடம் கேட்டான்.

அதற்கு அந்த அரசன், 'உண்மையில் நானும் அதையே நினைக்கிறேன். நீ என்னுடைய அரசையே கேட்டாலும் உனக்குக் கிடைக்கச் செய்வேன். அல்லது உனக்குப் பணம் தேவை என்றாலும் கொடுப்பேன். எவ்வளவு வேண்டுமானாலும் கேள், நிச்சயம் தருகிறேன்' என்றான்.

அந்த ஏழை இளைஞனால் அதிகம் சிந்திக்க இயலவில்லை. அவன் முதலில் நினைத்தான், ஒரு பத்தாயிரம் ரூபாய் கேட்போம்' என்று. எதற்காக பத்தாயிரம்? ஒரு லட்சம் கேட்டுப் பெறுவோம்' என்று எண்ணினான். அதன் பிறகு மற்றொரு ஆசை, வேறொரு ஆசை என்று அடுக்கடுக்காய் ஆசைகள் தோன்றலாயின.

முதலில் அவன் எது வேண்டும் என்று கேட்க நினைத்தாலும், அவனுடைய மனம் அதைவிடக் கூடுதலாய் கேட்கத் தொடங்கியது.

தற்போது அரசர், 'நீ இன்னும் கேட்பதற்கு தயாராகவில்லை என்று எண்ணுகிறேன். எனது காலை நேர் நடைப் பயிற்சியை நான் முடித்து விட்ட வருவதற்குள் நீ யோசித்துவை. நான் திரும்பி வரும் போது உனக்குத் தேவையானதை என்னிடம் கேள். தருகிறேன்' என்று கூறிச் சென்று விட்டார். அந்த அரை மணி நேரம் அவனுக்குச் சித்ரவதையாக இருந்தது. அவன் மேலும், மேலும் தீவிரமாக யோசித்தான். 'நான் இதைக் கேட்கலாமா? அல்லது அதைக் கேட்கலாமா? அல்லது ஒரு தங்கத் தேர் மேலும் பல கோடிக் கணக்கான பணம், மேலும், பல ஏக்கர் நிலம். நான் எனக்கென்று ஒரு சிறு அரசாங்கத்தையே ஏற்படுத்தி விடுவேன் - இப்படிப்பட்ட பலவிதமான ஆசைகள்.

ஆசைகளும் கனவுகளும்... அப்பொழுது அரசர் அங்கு வந்தார். ஆம் அந்த அரை மணி நேரம் வெகு வேகமாக முடிந்து விட்டத. அரசர் அங்கு வந்து நின்று கொண்டு இருந்தார். "இளை ஞனே! என்ன நீ இன்னும் எதையும் முடிவு செய்யவில்லையா?

திடீரென்று அந்த இளைஞனுக்கு, "நான் எதைக் கேட்டாலும், அவை எல்லாமே, அரசரிடம் இருக்கும் செல்வத்தை விட குறைவாகவேதான் இருக்கும்! எனவே நான் அவரிடம் உள்ள அனைத்தையுமே ஏன் கேட்கக் கூடாது? எனவே இனிமேல் எவ்வளவு, எது என்று எண்ணிக் கொண்டு இருப்பதை விட்டு விடலாம்"!

எனவே அவன் அரசரிடம், "நீங்கள் கொடுக்க வேண்டும் என்று இவ்வளவு தூரம் எண்ணுவதால், நான் அனைத்தையுமே கேட்கிறேன். உங்களிடம் இருக்கும் அனைத்தையும், உங்களது முழு அரசாங்கத்தையும் கொடுத்து விடுங்கள். உங்களது அனைத்து செல்வங்களையும் உங்களது எல்லா அரண்மனை களையும் கொடுத்து விடுங்கள்! நீங்கள் அப்படியே அரண் மனையை விட்டு விட்டு வெளியே போய் விடுங்கள்! இவைகளை எல்லாம் நீங்கள் மறந்து விடுங்கள். நீங்கள் அணிந்து கொண்டு இருக்கும் இந்த உடைகளை மாத்திரமே நீங்கள் எடுத்துச் செல்ல நான் அனுமதிக்கிறேன்" என்று சொல்லி முடித்தான். இவற்றை எடுத்துக் கொள்ளும் படி சொன்னது கூட, அவன் முழுமனதுடன் சொல்லவில்லை. அந்த அளவு கூட, தனக்குக் கிடைப்பதில் குறைந்து போய் விடுமே என்ற எண்ணம் அவனுள் எழுந்தது.

இதை எல்லாம் கேட்ட அரசர் உடனே மண்டியிட்டு அமர்ந்து இறைவனிடம் பிரார்த்தனை செய்ய ஆரம்பித்தார். அவரது கண்களில் இருந்து தண்ணீர் தாரை தாரையாக வழிய ஆரம் பித்தது. அது ஆனந்தத்தின் கண்ணீர் - அளவற்ற மகிழ்ச்சியின் கண்ணீர். அவர் இறைவனுக்கு நன்றி செலுத்திக் கொண்டு இருந்தார். அவர் இறைவனிடம், "நான் இப்படிப்பட்ட ஒரு மனிதனுக்காகத்தான் நீண்ட நாட்களாகக் காத்துக் கொண்டு இருக்கிறேன். ஆனால் இறுதியாக இப்பொழுது தான் நீங்கள் எனது பிரார்த்தனைக்கு செவி சாய்த்து இருக்கிறீர்கள்! இதோ இப்பொழுது தான் அவன் இங்கு வந்து இருக்கிறான். இப்பொழுது நான் எனது அனைத்து விதமான பாரங்களில் இருந்தும் விடுதலை பெறப் போகிறேன். நான் பல நாட்கள் காத்து இருக்க வேண்டி இருந்தாலும், பரவாயில்லை. கடவுளே! இப்பொழுதாவது சரியான ஒருவனை அனுப்பி வைத்தாயே! கடவுளே நான் இதற்கு எப்படி நன்றி செலுத்த இயலும்? நன்றி உள்ளவனாக இருப்பேன்!" என்று சொல்லிக் கொண்டு இருந்தார்.

அரசர் கடவுளிடம் இவ்வாறு பேசிக் கொண்டு இருந்ததை அந்த இளைஞன் அங்கே நின்று கொண்டு கேட்டுக்கொண்டு இருந்தான். உடனே அவன், "என்ன விஷயம்? இந்த மனிதனுக்கு இந்த அரசாங்கத்தை துறந்து விடுவது இவ்வளவு மகிழ்ச்சி அளிக்குமானால்? நான் எதற்காக இதற்குள் போக வேண்டும்? இந்த மனிதர் சொல்வது போல், இவர் முப்பது ஆண்டுகளாக பிரார்த்தனை செய்து கொண்டு, என் - அரசாங்கத்தை எடுத்துக் கொள்ள ஒரு ஆளை அனுப்பு என்று வேண்டிக் கொண்டு இருந்தது உண்மை என்றால், இந்த அரசாங்கத்தை பெற்றுக் கொள்வதில் எந்தவித பயனும் இல்லை. நான் தேவையற்ற தொல்லையில் மாட்டிக் கொள்ளப் போகிறேன்.

அவனும் முட்டி போட்டு அமர்ந்து, அரசரது கால்களைத் தொட்டு வணங்கி "ஐயா! நான் ஓர் இளைஞன்! நான் ஒரு முட்டாள் இளைஞன்! தயவு செய்து என்னை மன்னித்து விடுங்கள். எனக்கு எதுவுமே தேவை இல்லை. நீங்கள் இறைவனிடம் செய்த பிரார்த்தனையும், நீங்கள் இறைவனுக்கு நன்றி செய்த முறையும், எனது முழு மனதையும் இழக்கச் செய்துவிட்டன. நான் திரும்பவும் காட்டிற்கு, எனது குருவிடம் போக முடிவு செய்து விட்டேன்" என்று சொன்னான். அரசன், அவனைப் போகவேண்டாம் என்று

சொல்லித் தடுக்க முயற்சித்தான். 'நீ போகாதே, ஒரேயொரு முறை அனைத்தையும் வந்து பார். எனது அரண்மனைக்குள் வந்து பார். என் அரசையும், செல்வங்களையும், ஏன் எனது அழகான மகளையும் கூட உனக்குக் கொடுக்கிறேன். வா, ஒரு முறை வந்து பார்' என்று பலவாறு கூறினான்.

ஆனால், அந்த இளைஞன், 'நான் இங்கே தங்க முடியாது. ஒரு நிமிடமும் இங்கே தாமதிக்கமாட்டேன். என்னில், என் மனமே என்னை ஏமாற்றி விடும். எனக்கு ஓர் உள்ளுணர்வு தோன்றி விட்டது. அதற்காக நான் உங்களுக்கு நன்றி சொல்ல வேண்டும், நீங்கள் கடவுளுக்கும் நன்றி தெரிவிப்பது போன்று. நான் நிறைவாக இருக்கிறேன்' என்றான்.

அந்த இளைஞன் மீண்டும் காட்டுக்குச் சென்று, தனது குருநாதரிடம் நடந்தவற்றை ஒன்று விடாமல் கூறினான். அதைக் கேட்ட குருநாதர், 'ஆன்மிகத்தின் இறுதிப்பாடமும் உனக்குக் கற்பிக்கப்பட்டுவிட்டது'.

தற்போது உன்னை அடிமையாக்கக் கூடியது எதுவும் இல்லை. நீ விழிப்போடு, கவனமாக இருக்கிறாய். சுதந்திரமாக இருக்கிறாய். எனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. நீ ராஜ்யம் முழுவதையும் கேட்டபோது என் இதயம் கதறியது. அடடா, இந்த முட்டாளைக் கரை சேர்க்க முயன்று பதினைந்து வருஷங்களை வீணடித்து விட்டோமே என்று. நான் எல்லாவற்றையும் இங்கிருந்தே கவனித்துக் கொண்டுதான் இருந்தேன். நீ தேர்ச்சி பெற்று விட்டாய். என்னுடைய மகிழ்ச்சியை உன்னால் கற்பனை செய்யவும் முடியாது.

'நீ திரும்ப வந்து விட்டாய். முக்கியக் கருத்தை உன்னால் புரிந்து கொள்ள முடிந்தது. எதையெல்லாம் கவனித்து உணர வேண்டுமோ அதையெல்லாம் நீ நன்கு கவனித்து உணர்கிறாய்' என்றவர் மேலும் கூறுவார். எதையும் கருத்துடன் கவனி. கண்காணித்துக் கொண்டிரு. மக்களிடம் பணம் இருக்கும். அரண்மனை இருக்கும். நீ விரும்பக்கூடியதாய் பல பொருள்கள் இருக்கும். எல்லாவற்றையும் சும்மா பார்த்து கொண்டிரு. சாட்சி பாவத்தில் கண்காணித்திரு. அவர்கள் மகிழ்ச்சியாக இருக்கலாம். அதே போன்று உன்னைவிட வருத்தமாகவும் (அதிருப்தி) இருப் பார்கள். அப்படியானால் அவர்களைப் பின்பற்றாதே. அவர்கள் பார்க்கும் திறனற்றவர்களின் பின்னேதான் அவர்கள் ஓடியாய்க்

கொண்டிருக்கிறார்கள். நீயும் மற்றவர்களைப் போல் மாற முயற்சிக்காதே. கூட்டங்களை ஒரு போதும் பின்பற்றிச் செல்லாதே? என்று.

உண்மையிலேயே சமயப்பற்றுள்ள ஒருவன் கூட்டத்தின் மனவியலிலோ (mass Psychology), கூட்ட வசியத்திலோ சிக்கிக் கொள்ள மாட்டான். கூட்டத்தின் கட்டுதிட்டங்களுக்குட்படாதீர்கள். அதை எடுத்து அதை விட்டு வெளியேற்றுங்கள். தனித் தன்மை கொண்டவராயிருங்கள். அப்போது மட்டுமே நீங்கள் எங்கிருந்து வந்தீர்கள் என்பதை உங்களால் கண்டு கொள்ள முடியும். அப்போதுதான் நீங்கள் யார் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

தற்போது உங்களுக்கு, நாம் ஓர் இந்துவா அல்லது முகமதியரா, அல்லது கிறிஸ்தவரா என்பது தெரியும். நீங்கள் இவர்களில் யாருமே அல்ல. நீங்கள் ஓர் ஆணோ அல்லது பெண்ணோ அல்ல, வெள்ளையோ அல்லது கறுப்போ அல்ல. முற்றிலும் தூய்மையான ஒரு விழிப்புணர்வுதான் நீங்கள். உங்களுடன் நல்லவன் கெட்டவன், வெள்ளை கறுப்பு போன்ற அடையாளச் சொற்கள் எதுவும் இணைக்கப்படவில்லை. இந்த விழிப்புணர்விற்கு உருவமைப்பு கிடையாது. கூட்டத்தின் கட்டு திட்டங்களை (mass conditioning) உதறினால் நீங்கள் வீட்டுக்குச் சமீபமாய் சென்று விடுவீர்கள். அதை முற்றிலுமாக உதறித் தள்ளி விட்டீர்களேயானால், நீங்கள் நீங்கள் எங்கிருந்து வந்தீர்களோ அதை உங்களது சொந்தமான இடத்தை, வீட்டை நெருங்கி விட்டீர்கள் என்று பொருள்.

"ஹன்ஸா கரோ புராதன் பாத்" - நாம் அந்த புராதனமான காலங்கள் பற்றி பேசுவோம். நாம் தோன்றிய இடத்தில் இருந்த காலங்களைப் பற்றிப் பேசுவோம்"

"அன்னமே! நீ உன்னுடைய முழுமையான கதையை என்னிடம் சொல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன்."

நீ முதலில் எங்கே தோன்றினாய்? இப்பொழுது நீ எந்த கருமையான மணல் தீரங்களை நோக்கிப் போய் கொண்டு இருக்கிறாய்?

ஒரு குழந்தை தனது 'நிலைநிற்பில்' மிகுந்த ஒளியுடன் இருக்கிறது. அது வளர வளர வளர அது மேலும் மேலும் கறுப்பாகிக் கொண்டு வருகிறது. அவன் முதிர்ந்து வயதானவனாக

ஆகும் சமயம், அவன் வெறும் ஓர் இருண்ட பகுதி. ஆன்மாவின் ஓர் இருண்ட பகுதியாகி விடுகின்றான். வேறு எதுவுமல்ல. ஒரு குழந்தை மிக ஒளிமயமாக, மிகவும் புத்திகூர்மை உள்ளதாக, மிகுந்த விழிப்புடன் இருப்பவனாக, இருக்கிறான். நாட்கள் செல்லச், செல்ல அவன் மீது தூசி படிந்து இருக்கும். ஒன்றன் மீது ஒன்றாக பல வரிசைகள் தூசி படிந்து விட்டது. இப்பொழுது அவனது புத்திசாலித்தனம் மறைந்து போகிறது! அவன் பயனில்லாத ஒருவனாகி விட்டான். அவன் மிகவும் முட்டாள்தனமான வழிகளில் நடந்துகொள்கிறான். ஏனெனில் அவன் தன்னை சூழ்ந்து இருக்கும் முட்டாள்தனமான கும்பலின் வலையில் சிக்கிக்கொள்கிறான். அவன் உதவியற்று இருக்கிறான். அவன் தனது பெற்றோர்கள் சொல்வதைக் கேட்டாக வேண்டும், ஆசிரியர்கள் சொல்வதைக் கேட்டாக வேண்டும். அரசியல் வாதிகள் சொல்வதைக் கேட்டாக வேண்டும். அவர்கள் தான் மிகவும் பெரிய தலைவர்கள். அவர்கள் தான் சிறந்த பாதிரிகள் அவர்களுக்குத் தெரியும். அவர்கள் அனைவரும் "நாங்கள் உங்களை நேசிக்கிறோம். நாங்கள் சொல்வதை கேள். இல்லாவிட்டால் நீ வழிமாறி, பாதைமாறி போய்விடுவாய். கீழ்ப்படிதல் என்பதுதான் மனிதகுலத்திற்கு ஏற்பட்ட மிகப் பெரிய துன்பம் ஆகும். ஒருவர் கீழ்ப்படியாமல் இருக்கும் உறுதிகொண்டவராயிருக்க வேண்டும். உண்மையில், கீழ்ப்படியாமல் இருக்கும் ஒருவரால்தான் கீழ்ப்படிந்து நடக்கவும் முடியும் போதுதான் கீழ்ப்படிவது மட்டுமே ஒருவனுக்கு இயலுமென்றால் அவனுடைய செய்கைக்கு மதிப்பில்லை. 'இல்லை' என்று மறுக்க முடியாத ஒருவனுடைய ஒப்புதலுக்கு (ஆம்) ஆற்றல் இல்லை. மறுக்க முடிகிற ஒருவனின் ஒப்புதலுக்குத் தான் பொருளுண்டு, ஆற்றல் உண்டு. முக்கியத்துவம் உண்டு. அவன் சொல்கிற 'ஆம்' உண்மையிலேயே அவன் கருத்தில் கொண்டதாயிருக்கும்.

மேலும் ஒருவன் எப்போதும் விழிப்புணர்வுடன் இருக்க வேண்டும். தன்னை இருளை நோக்கி, புரிந்துகொள்ள முடியாத தையும் பகுத்தறிவற்றதையும் நோக்கி இழுத்துச் செல்லக்கூடிய வற்றை மறுக்குமளவிற்கு அவன் கவனமாயிருக்க வேண்டும். தன்னை அன்பை நோக்கி, ஒளியையும் வாழ்வையும் நோக்கி அழைத்துச் செல்பவற்றை ஏற்கக்கூடியவனாக ஒருவன் இருக்க வேண்டும்.

மேலும் அது உங்களைப் பொறுத்தது.

நீங்கள் இருளை நோக்கி 'ஆம்' சொன்னால், வெளிச்சத்தை நோக்கி 'வேண்டாம்' (No) என்று சொல்வதாகத் தான் பொருள். உங்கள் முதுகுப்புறத்தை, வெளிச்சம் வரும் திசையை நோக்கித் வைத்துக் கொண்டு இருக்கிறீர்கள் என்று பொருள். அது, அந்தச் செய்கை நூற்றுஎண்பது டிகிரி கோணத்தில் மீண்டும் திரும்பினால், இப்பொழுது – நீங்கள் வெளிச்சத்தின் முன்பாகவே நின்று கொண்டு இருக்கிறீர்கள். எதை நீங்கள் இவ்வளவு நாட்களாகத் தேடிக் கொண்டு இருக்கிறீர்களோ அதே ஒளியின் முன்னால் நான் நின்று கொண்டு இருக்கிறீர்கள் ஆனால் உங்களது வழிகள், உங்களது வழி முறைகள், உங்களது பழக்க வழக்கங்கள், உங்களது நினைக்கும் விதம் இவை அனைத்துமே மேலும், மேலும் இருளை நோக்கியே, இருண்ட பகுதிகளை நோக்கியே அழைத்துச் செல்லுகிறது.

"நீ முதலில் எங்கே தோன்றினாய்? மேலும் எந்த கறுப்பு மணல் கரையை நோக்கி நீ சென்று கொண்டு இருக்கிறாய்? மேலும் நீ இரவில் எங்கே கண்ணுறங்குவாய்?

இதுதான் இரவு, இதில் தான் வாழ்ந்து கொண்ட இருக்கிறீர்கள் மேலும் நீங்கள் வாழ்க்கை என்று சொல்லும் வாழ்க்கை என்பது ஓர் உறக்கத்தைத் தவிர வேறொன்றுமில்லை – கனவுகள் நிறைந்த உலகம். சில நேரங்களில் நீங்கள் விழித்துக் கொண்டு இருப்பது போல் கூட நீங்கள் கனவு காணுவீர்கள். ஆனால் அதுவும் ஒரு கனவே.

சில நாட்களுக்கு முன்னர் நான் ஒரு கதை படித்தேன். ஓர் ஏரியில் மீன் பிடித்துக் கொண்டு இருந்த ஒருவனிடம் ஒரு மனிதன் வந்தான் அவன் அந்த மீனவனை நோக்கி, "நான் தான் இயேசுகிறிஸ்து" என்று கூறினான்.

அந்த மீனவன் அந்த மனிதனைப் பார்த்து சிரித்த வாறே, "இயேசு இறந்து போய் இரண்டாயிரம் ஆண்டுகள் ஆகிவிட்டன. உனக்கு என்ன பைத்தியமா என்ன?" என்று கேட்டான். ஆனால் அந்த மனிதன், "ஆனால் நான் இயேசு கிறிஸ்து தான். ஆனால் அவர் சிலுவையில் அறையப்பட்ட பின்னர், அவர் மீண்டும் உயிர்த்து எழுந்தார் என்பது உனக்குத் தெரியாதா?" என்று மீண்டும் சொன்னான்.

இதைக் கேட்ட அந்த மீனவன், 'ஒன்று இந்த மனிதன் மிக அதிகமாக மதுவருந்தி இருக்க வேண்டும். அல்லது இறைவனுக்குப் பைத்தியம் பிடித்து இருக்க வேண்டும்' என்று எண்ணினான். எனவே அவன் மீனவுனை நோக்கி 'அப்படியானால் நீ அதை நிரூபிக்க வேண்டும். இயேசு கிறிஸ்து அற்புதங்களை நிகழ்த்து வார்' என்று சொன்னான்.

அந்த மனிதன் அதைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தான். மீனவனை நோக்கி, 'நான் ஏதேனும் அற்புதம் நிகழ்த்த வேண்டும் என்று விரும்புகிறாயா?' எனக் கேட்டான்.

அதற்கு அந்த மீனவன் 'அப்படியானால் நீ அந்த ஏரியின் மீது நடந்து காட்டு' என்றான்.

உடனே அந்த பைத்தியக்காரன் ஏரி மீது நடக்க முயன்று, முடியாமல் நீருக்குள் மூழ்கிவிட்டான். அந்த மீனவன் நீருக்குள் பாய்ந்து அவனை எப்படியோ வெளியே தூக்கி வந்தான். அதன் பின்னர் அவனிடம், 'என்ன நடந்தது?' என்று கேட்டான்.

அந்த மனிதன் சொன்னான், 'எனது காலணிகள் அந்தக் காலத்தில் ஓட்டை எதுவும் இல்லாமல் இருந்தது. ஆனால், இரண்டாயிரம் ஆண்டுகளாய் பூமியில் நடந்து நடந்து முழுக்கவும் ஓட்டை விழுந்து போயிற்று. அதுதான் நடந்தது என்று பதிலளித் தான்.

பைத்தியக்காரர்களான மனிதர்களுக்கு தங்களுக்கே உரித் தான வாதங்கள் இருக்கும்.

ஒரு முறை ஒரு மனிதன் தான் இறந்ததாகவே முடிவு செய்து விட்டான். அவன் உயிரோடுதான் இருக்கிறான் என்பதை நிரூபிக்க ஒரு வழியும் இல்லை. எனவே, அவனை மனோதத்துவ நிபுணரிடம் அழைத்துச் சென்றார்கள். அவரும் தனக்குத் தெரிந்த அத்தனை வழிகளிலும் அவன் இறக்கவில்லை, உயிரோடுதான் இருக்கிறான் என்பதைப் புரிய வைக்க முயன்று பார்த்து விட்டார். முடியவில்லை, எப்படி நிரூபிப்பது? அவன் சொன்னான், ஆனால் நான் செத்து விட்டேன். நீ யாருடன் பேசுகிறாய்? நான் இல்லை, போயாச்சு. இது ஒரு வசனமல்ல. தனக்குத்தானே பேசிக்கொள்வது உங்களுக்கு நீங்களே பேசிக்கொள்கிறீர்கள். நீங்கள் பைத்திய மாகிறீர்கள்.

திடீரென்று ஒரு யோசனை தோன்றியது அந்த மனோதத்துவ நிபுணருக்கு. அவர் சொன்னார், 'சரிதான், நீ இந்த நிலைக் கண்ணாடிக்குப் பக்கமாக வந்து நில்' என்று ஓர் ஊசியை எடுத்து அந்தப் பையத்திக்காரனின் கையில் குத்தினார். ஊசியை அவன் கையில் ஏற்றுவதற்கு முன் அவனிடம், 'இறந்து போன ஒருவர் உடலில் இரத்தம் வருமென்று நினைக்கிறாயா?' எனக் கேட்டார்.

அதற்கு அந்த மனிதன், 'இல்லை இரத்தம் வராது. இறந்த ஒருவனிடம் இருந்து இரத்தம் எப்படி வரும்?' என்றான்.

நிபுணர் தமது கையில் இருந்த ஊசியால் அந்த மனிதனின் கையில் அழுத்தமாய் குத்திவிட்டார். கையில் இருந்து இரத்தம் வழியத் தொடங்கியது. 'இப்போ என்ன ஆச்சு, பார்த்தாயா?' நிபுணர் கேட்டார்.

அந்தப் பையத்திக்காரன் என்ன சொன்னான் தெரியுமா? 'இதில் பார்க்க என்ன இருக்குது? இது இறந்தவனின் உடலில் இருந்தும் இரத்தம் வழியும் என்பதை நிரூபிக்கிறது' என்றான்.

உங்கள் கற்பனைகளை நீங்கள் ஆதரித்துப் பேசிக்கொண்டே யிருக்கலாம். 'நாம் விழித்திருக்கிறோம்' என்று நினைத்தபடியே நீங்கள் தூங்கலாம்.

கபீர் சொல்கிறார்: 'நீ இரவில் எங்கே தூங்குகிறாய்? மேலும் எதனை நீ தேடிக் கொண்டு இருக்கிறாய்?'

நீங்கள் இதே கேள்வியை உங்கள் இதயத்தின் அடியாழத்தில் இருந்து உங்களிடமே கேளுங்கள்: 'நீ எதைத் தேடிக் கொண் டிருக்கிறாய்? நீ எங்கே இருக்கிறாய்? நீ எங்கே ஆழ்ந்த உறக்கத் தில் இருக்கிறாய், நீ எந்த இடத்தில் உறங்கிக் கொண்டிருக் கிறாயா?' என்று.

ரோத்ஸ்டீன் வெய்னரிடம் இருந்து நூறு டாலர் கடன் வாங்கி யிருந்தார். அந்தக் கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டிய கெடு தீர்ந்து நாளாகி விட்டது. ரோத்ஸ்டீனிடம் சுத்தமாய் பணமில்லை. அவர் நொடித்து போயிருந்தார். எனவே, ஸ்பைவாக் என்பவரிடம் நூறு டாலர் கடனாகப் பெற்று அதை வெய்னரிடம் திருப்பிக் கொடுத்தார்.

ஒரு வாரம் சென்றபின் ரோத்ஸ்டீன் மீண்டும் வெய்னரிடம் சென்று நூறு டாலர் கடன் பெற்றார். அதை ஸ்பைவாக்கிடம் திருப்பிக் கொடுத்தார். ஒரு வாரம் சென்றது. தற்போதும்

ரோத்ஸ்டீன் ஸ்பைவாக்கிடம் நூறு டாலர் கடன் வாங்கி, வெய்னரின் நூறு டாலர்களைத் திருப்பிக் கொடுத்தார்.

இது போன்று கொடுக்கல் வாங்கல்களை அவர் தொடர்ந்து நடத்தி வந்தார். முடிவாக ஒரு நாள் அவர் அந்த இருவரையும் தொலைபேசியில் அழைத்து அவர்களிடம் 'நண்பர்களே! ஏன் நீங்கள் இருவரும் வாரம் ஒரு முறை நூறு டாலர்களை ஒருவருக்கொருவர் மாற்றிக் கொள்ளலாமே? நடுவில் நான் வேறு எதற்கு? என்று கேட்டு வைத்தார்.

இங்கே இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அதில் இருந்து உங்களை விடுவித்துக் கொள்வதற்கு கற்றுக் கொண்டு விடலாமே; அதுதான் விழிப்புணர்வின் இரகசியம். இந்தக் கொடுக்கல் வாங்கல் உலகமெங்கிலும் தொடர்ந்து நடக்கிறது. உலகம் ஒரு கடை வீதியாகவே தொடர்ந்து இருந்து வருகிறது. இதற்கு முன்பும் அது அப்படித்தான் இருந்தது. இனியும் அப்படித்தான் இருக்கப் போகிறது. ஆனால் இந்த வர்த்தகப் பரிமாற்றத்தில் இருந்து வெளியேறிவிடலாம். நீங்கள் அதற்கு சாட்சியாக வேண்டுமானால் இருக்கலாம். உங்களது சொந்த அடையாளத்தை விட்டு நீங்கள் நழுவி விடலாம்.

நீங்கள் உறங்கும் போது இருப்பதுதான் உங்கள் அடையாளம். அதுவே உங்கள் அகந்தை. ஆன்மா உறங்கிக் கொண்டிருப்பதைக் குறிப்பதே அகந்தை. ஆன்மா விழித்துக் கொள்ளும்போது அகந்தை வெளியேறிவிடும். அதன் பின்னர் அதை எங்குமே காண இயலாது.

'ஆன்ட்ரூ' என்ற வெள்ளையனை ஜியார்ஜியாவைச் சேர்ந்த உழவன், மன்றோ என்ற நீக்ரோவை, ஒரு சில மரங்களை வெட்டும் வேலை செய்ய நியமித்தான். மன்றோ தனது கோடரியை எடுத்துக் கொண்டு, மரங்கள் இருக்கும் திசை நோக்கி நடந்தான். ஆனால் சற்று நேரத்திற்குப் பின்னர், மன்றோ ஒரு மரத்தின் நிழலில் ஓய்வாக அமர்ந்து இருப்பதைப் பார்த்தான். மன்றோ வேறொரு நீக்ரோ வேலை செய்து கொண்டு இருப்பதைப் பார்த்துக் கொண்டு இருந்தான். இதைப் பார்த்த அந்த உழவன், "நான் மரம் வெட்டுவதற்காக, உனக்குக் கூலி கொடுக்கிறேன். அப்படி இருக்கும் பொழுது நீ ஏன் வேறு ஒருவனை வேலை செய்ய வைக்கிறாய்?" என்று கேட்டான்.

"எனக்கு வேலை செய்வதற்காக நான் அவனை நியமித்தேன்," என்று பதில் அளித்தான் மன்றோ.

"இதைக் கேட்ட வெள்ளைக்காரன், "அது உண்மையானால், நீ அவனுக்கு என்ன கூலி கொடுக்கிறாய்?" என்று கேட்டார்.

"மன்றோ இந்தக் கேள்விக்கு, "நான் ஒன்றே கால் டாலர்களை அளிக்கிறேன்" என்று பதிலளித்தான்.

"நீ எதற்காக அப்படிச் செய்ய வேண்டும்?" என்று மிகுந்த கோபத்துடன் உறுமினார் அந்த வெள்ளைக்காரர்." நான் உனக்கு ஒரு டாலர் தானே தருகிறேன்?

"எனக்கு அது தெரியும்," என்ற மன்றோ மீண்டும், "ஆனால் ஒரு முறை முதலாளியாக இருப்பதற்காக 'கால்' டாலரை கொடுப்பது, பொருத்தமானதே.

அகம்பாவம் எப்பொழுதுமே, ஒரு முதலாளியாக ஆவதற்கு ஆன சந்தர்ப்பத்தைத் தேடிக் கொண்டு இருக்கிறது. அதற்கான விலை என்னவாக இருந்தாலும் - எத்தனை விலை உயர்ந்ததாக இருந்தாலும் கொடுக்கத் தயாராகவே இருப்பார்கள். நீங்கள் ஒரு நிழலின் - இல்லாத ஒன்றின் ஆசைகளுக்காக - அகங்காரத்தின் ஆசைகளுக்காக ஒரு மிக முக்யமான, முழுமையான, சந்தர்ப்பத்தை, உங்கள் வாழ்வில் இழந்து விட்டீர்கள்! யாருமே யாரும் இல்லை. நான் யாருமேயல்ல. நாம் அனைவருமே ஒன்று. நாம் வேறானவர்கள் அல்ல நாம், நமது ஆதாரத்தில், எங்கிருந்து வந்தோமோ, அங்கிருந்தபொழுது நாம் எல்லாரும் ஒன்றாகவே இருந்தோம். மீண்டும் நமது லட்சியத்தை அடைந்தவுடன் நாம் மீண்டும் ஒன்றாகி விடுவோம். இருள் மிகுந்த இரவுகளில், நாம் ஆழ்ந்த தூக்கத்தில் இருக்கும் பொழுது, நமக்குக் கனவுகள் ஏற்படுகின்றன. அவை நம்முடைய கனவுகள்.

நன்றாக நினைவில் கொள்ளுங்கள், உண்மையானது அனைத்தும் ஒன்று போலவே இருக்கும். உண்மையல்லாதவையே ஒருவருக்கு தனிமையானது. நீங்கள் உங்களுக்கு மிக நெருக்கமானவர் கூட, உங்களது கனவுக்குள் அழைக்கக் கூடாது. அப்பொழுது அது உண்மையானது அல்ல. நீங்கள் யாருடனும் பகிரிந்து கொள்ள முடியாத அளவுக்கு அந்தரங்கமானது அது. எப்பொழுதும் மிகவும் அந்தரங்கமானது எதுவும் பொய்யானதே. மேலும் கர்வத்தைவிட, அகந்தையைவிட அந்தரங்கமானது

எதுவும் இல்லை. அதுதான் உங்களது தூக்கத்திற்கும் கனவு களுக்கும் நடுவில் இருப்பது.

மேலும் மக்கள் தங்களது முழு வாழ்க்கையையும், தாங்கள் எதைத் தேடிக் கொண்டு இருக்கிறோம் என்று தெரியாமல், வீணாக்கிக் கொண்டு இருக்கிறார்கள். நீங்கள் எதைத் தேடிக் கொண்டு இருக்கிறீர்கள் என்று உங்களுக்குத் தெரியுமா? உங்களுக்கு அதைப்பற்றிய ஏதாவது ஒன்று தெரியுமா? உங்களுக்கு நீங்கள் தேடிக் கொண்டு இருப்பது, எந்த திசையில் இருக்கிறது என்பதாவது தெரியுமா?

"அன்னமே பொழுது விடிந்து விட்டது," என்று கூறுகிறார் கபீர், "எழுந்திரு, இந்த காற்றில் உயர்ந்து எழும்பி என்னுடன் வா!"

இதனுடைய உண்மையான கவிதை வேறாக இருக்கிறது!

"இப்பொழுது தான் காலைப்பொழுது, அன்னமே".... "இப்பொழுது" என்பதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். மொழி பெயர்ப்பில் ஏதோ ஒன்று விட்டுப் போய் விட்டது.

"இப்பொழுது தான் காலை! அன்னமே! எழுந்திரு."

மொழிபெயர்ப்பு தவறவிட்ட ஒன்றை மூலம் சொல்கிறது; காலை என்பது தொடர்ந்து இருக்குத்தான். ஆனால் தற்போதே சூரியோதயம், தற்போதைய தன்மையே காலை. நிகழ்காலம் ஒளி பொருந்தியது. நீ கடந்த காலத்திலோ எதிர்காலத்திலோ இருந்து கொண்டு ஒளியை, ஒளி உன்னுள் எந்த வாயிலின் வழியே ஊடுருவிப் பரவுமோ அந்த வாயிலைத் தவற விடுவாய்.

இதுதான் வாயில், இதுதான் சமயம். இதை விட்டால் ஒரு போதும் இல்லை.

**'காலை நேரமாகிவிட்டது, அன்னமே**
**கண் விழித்திரு**
**காற்றில் ஏறிப்பறந்திரு**
**என்னைத் தொடர்ந்திடு.'**

ஒருவர் காற்றில் எழும்பினால் தான் விழித்துக் கொள்ள இயலும். இது ஓர் உருவகம், புதிரான உருவகம். நீங்கள் தரமான **(Quality)** உலகிற்குள் இயங்கத் தொடங்குகிறீர்கள். அளவைக்குரிய **(Quantity)** உலகில்லை. மக்கள் –அதிகப் பணம், அதிகாரம், மதிப்பு, மரியாதை என்று அளவைக்குரிய உலகில் வாழ்கிறார்கள்.

உங்களிடம் நிறைய உள்ளது - நீங்கள் இரட்டிப்பாக்கவோ, மும்மடங்காக்கவோ ஏன் ஆயிரம் மடங்காக்கவோ கூட முடியும் - ஆனால் அவை எல்லாம் அளவுகள் தாம். தரம் என்பது வேறொரு பரிமாணம். உதாரணமாக, ஒரு பாலுறவு அனுபவத்தைப் பெற முடியும். இரண்டு மூன்று, நான்கு என்று போகிறபோது அது அளவு சார்ந்ததாகி விடும்: ஆனால், அதே உடலுறவு அனுபவம் காதலுக்குரியதாய் இருந்து விட்டால் அது ஒரு வழிபாட்டு அனுபவத்தைத் தருவதாகி விடும். அப்போது அது தரத்தைப் பெற்றுவிடுகிறது.

அளவு என்பது படுக்கை வசத்தில் (horizontal) உள்ளது. தரம் என்பது செங்குத்தானது (vertical). தரமாகத் தொடங்கினால் உயரப் பறப்பீர்கள். அதுவே சிலுவை என்கிற குறியீட்டின் பொருள். சிலுவை ரொம்பப் பழைமையான குறியீடு. கிறிஸ்துவை விடவும் கால வகையில் பழைமையானது. சிலுவை ஒரு புராதன அடையாளச் சின்னம்.

வாழ்க்கை இரண்டுவித பரிமாணங்களைக் கொண்டது. ஒன்று படுக்கைக்கோடு, மற்றொன்று செங்குத்தான கோடு. நீங்கள் படுக்கைக் கோட்டில் வாழ்ந்து கொண்டிருந்தால் அது உறக்க நிலை வாழ்வாகும். நீங்கள் படுக்கையில் படுத்தால் படுக்கைக்கோடாகவே (அமைப்பு) இருப்பீர்கள். உறக்கம் கலைந்து எழுந்து விட்டால் செங்குத்து கோடாய் இருப்பீர்கள்.

தற்போது அறிவியலாரும் அதை ஒப்புக்கொண்டு விட்டார்கள். அத்தனை வளர்ச்சி உட்பட மனிதனுக்கு நிகழ்ந்து எல்லாமும் என்றோ ஒரு நாள், 'நாம் இனி நான்கு கால்களில் நடக்கக் கூடாது, இரண்டு காலை ஊன்றி நிற்கவேண்டும்' என்று மனிதன் தீர்மானித்ததால்தான். மனிதனின் செங்குத்தான கணத்தில் தொடங்கி விட்டது பரிணாம வளர்ச்சி. மனிதன் அதன் பிறகும் விலங்கல்ல. விலங்குகள் படுக்கைக்கோட்டு அமைப்பில் இருக்க மனிதன் செங்குத்து அமைப்பைக் கொண்டு விட்டான்.

உடலால் நிமிர்ந்து செங்குத்தாக மாறியதுமே ஒரு மனிதனின் வாழ்வில் என்னவெல்லாம் நடந்து விடுகிறது! தற்போது நீங்கள் ஆன்மிகம் சார்ந்த செங்குத்து அமைப்பை நினைத்துப் பாருங்கள். அந்தப் பரிமாணத்தில் என்னவெல்லாம் நடக்கும் என்பதை உங்களால் சிந்தித்துக்கூட பார்க்க இயலாது. உங்களால் அது பற்றிக் கனவு காண்பதும் இயலாததாகி விடும்.

நீங்கள் எவ்வகையிலும் அது பற்றிய கருத்துருவாக்கம் செய்யவில்லை. அப்போது நீங்கள் ஒட்டுமொத்த ராஜ்யத்துக்கும், முழு உலகிற்குமே அழகு மகிழ்ச்சி இவற்றுடனும் உரிமையாளராகி விடுகிறீர்கள். அதன் பிறகு நீங்கள் ஒரு யாசகனாயிருக்கத் தேவையில்லை.

**'இது காலைப் பொழுது, அன்னமே விழித்தெழு ஆன்மிகச் சலிப்பற்ற, மன அழுத்தத்திற்கு இடமில்லாத ஒரு தேசத்தை நான் அறிவேன் அங்கிருப்பவர்கள் மரண பயமற்றவர்கள்'**

கபீர் சொல்கிறார், 'ஒரு தேசத்தை நான், அறிவேன்' என்று. 'எனக்கு ஒரு வெற்றிடத்தைத் தெரியும்' என்று. நீ என்னுடன் வந்தால், உனக்கு என்னுடன் வருவதற்கான துணிச்சல் இருந்தால், என்னுடன் பறப்பதற்கு போதிய தைரியம் இருந்தால், இந்தச் சேறும் சகதியுமான குளத்தைவிட்டு வெளியேறத் தயாராயிருந்தால், இமயத்துக்கப்பால் உள்ள தூய மானசரோவர் ஏரி இருக்கிறது. மானசரோவர் என்ற சொல்லுக்கு அழகு என்றும் பொருள் கொள்ளலாம். அது 'தன்னுணர்வுடைய ஏரி' என்பதைக் குறிக்கும்.

'ஆன்மிகச் சலிப்பற்ற, அடக்கி வைக்க இயலாத ஒரு நாட்டை நான் அறிவேன்...'

இங்கே ஆன்மிகத்தின் பெயரால் சில போலிகளும், தவறுகளும் விற்பனை செய்யப்படுகின்றன. இறை வழிபாட்டுத் தலங்களெல்லாம் ஆன்மிகத்துடன் தொடர்பில்லாதவற்றை உங்களிடம் விற்றுக் கொண்டிருக்கின்றன.

ஆன்மிகத்தை அறியாதவர்களும் இவ்வுலகில் புனிதர்களாய் போற்றப்படுகிறார்கள். உண்மையில், நீங்கள் எந்த அளவு ஆன்மிகத்தில் ஏதுமறியாமல் இருக்கிறீர்களோ, அந்த அளவு மக்கள் மத்தியில் மதிப்பு மிக்கவராக விடுவீர்கள்.

துணிச்சல் மிக்க மனிதன் கலகக்காரனாகக் கருதப்படுவான். அவன் வாழ்கிற காலத்தில் யாரும் அவனைப் புனிதனாய் போற்றுவதில்லை. போன பிறகு தான் அவனுக்கு மதிப்பு. மக்கள் செத்துப்போன புனிதர்களையே வழிபடுவார்கள். அல்லது நீங்கள் உயிரோடு இருக்கும் போதே செத்தவரைப் போல் செயலாற்றிருங்கள், அவர்கள் உங்களைப் புனிதராக்கி விடுவார்கள்.

அவர்கள் இயேசுவை சிலுவையில் அறைந்தார்கள், சிலுவை யேற்ற இயேசுவை வழிபட்டார்கள். சாக்ரட்டீஸை அவர்கள்

நஞ்சூட்டி கொன்றார்கள், தற்போது பல நூற்றாண்டுகளாய் அவருக்கு மரியாதை செய்கிறார்கள்.

மன்சூரைக் கொன்றார்கள், தற்போது மிகப்பெரிய சூஃபி ஞானி என்று போற்றுகிறார்கள். அவர் கொல்லப்படும் போது அப்போதைய சூஃபிகள் உட்பட பலரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

'நான் கடவுள்' என்று அறிவித்துக் கொண்டதால் அவர் கடவுளுக்குக் கெதிரானவராகி விட மாட்டார். உண்மையில் கடவுள்தாம் அவர் வழியாக தம்மை அறிவித்துக் கொண்டது. இறந்து கொண்டிருந்த அந்த மனிதர் மீது கூட்டம் கல் வீசியது. சேறு போன்ற வசவுகளை வாறியிறைத்தது. புகழ் பெற்ற சூஃபிஸிஷிப்லிஸினெய்த் மட்டும் மன்சூர் மீது ஒரு ரோஜாவை வீசினார்.

உடல் முழுதும் கற்களால் உண்டான காயங்களில் குருதி வடிந்தது. ஆனாலும் மன்சூர் சிரித்துக் கொண்டிருந்தார். தன்மீது ரோஜாவொன்று வீசப்பட்டபோது மட்டும் அவர் அழுதார். பக்கத்தில் நின்ற யாரோ கேட்டார்கள், 'என்ன விஷயம்?' என்று.

மன்சூர் சொன்னார், 'ரோஜாவை என்மீது வீசியவர் அறிவார் நான் கள்ளமற்றவன் என்பதை. ஆனாலும், அதை வார்த்தையில் வெளிப்படுத்த அவருக்குத் துணிவில்லை. என்மீது கல்லெறிந்த வர்கள் அறியாமையில் அதைச் செய்தார்கள். 'தாங்கள் செய்வது இன்னதென்று அவர்கள் அறிந்திருக்கவில்லை. அவர்களை மன்னியும்' என்று நான் கடவுளிடம் வேண்டினேன். ஆனால் ரோஜாவை வீசியவருக்காக எப்படிப் பிரார்த்திப்பேன் அதனால் அழுதேன்' என்று.

மனிதனின் வழிகள் விசித்திரமானவை. ஆன்மிகத்தைப் பொறுத்தவரை உலகம் விளைவற்றது, சலிப்புற்றதுதான். ஆன்மிகம் என்று இவர்கள் சொல்லிக் கொள்வது கொள்கைகள், சிந்தனைகள், செயல்முறைகள், அமைப்புகள் என்று அனாவசிய குப்பைப் கூளத் தைத்தான். மிகச்சிறிய அளவிலான ஒரேயொரு அனுபவத்தைக் கூட அது கொண்டிருக்கவில்லை. அது காரணம் பற்றியே கபீர் சொல்கிறார்.

'ஆன்மிகச் சலிப்புகளற்ற தேசமொன்றை நான் அறிவேன். என்னுடன் வா. ஆன்மிக எழுச்சியற்ற, முட்டாள்தனமான, பாசாங்குக் காரர்கள் இல்லாத ஒரு வெற்றிடத்துக்கு உன்னைக் கொண்டு செல்கிறேன்' என்று.

ஒரு 'பாதிரியார் இறந்து விட்டார். 'பியர்லிகேட்ஸ்'ஸில் இவருக்கு, புனிதபீட்டரால் மிகவும் அன்பான வரவேற்பு அளிக்கப்படுகிறது. புனித பீட்டர் அவருக்கு பழையதான சிறிய ஒரு சீர்கேடடைந்த காரின் சாவியையும், ஒரு படுக்கை அறை மாத்திரமே உள்ள ஒரு சிறிய வீட்டின் சாவிகளையும் பரிசாக அளித்தார். அவர் அந்த 'வீட்டிற்குள் நுழைந்த உடனேயே, அவருக்கு அங்கு ஓர் இன்ப அதிர்ச்சியே காத்து இருந்தது. அங்கு அவரது அடுத்த வீட்டுக்காரராக இருப்பவர் முன்னர் இவரது நெருங்கிய நண்பராக இருந்தார்.

அவர்கள் இருவரும் ஒன்றாக பேர்லிகேட்ஸ் வரை உலவிவரச் சென்றார்கள். பேர்லி கேட்ஸில் என்ன நடக்கிறது என்று பார்வை இடவே அவர்கள் அங்கு சென்றனர். அப்பொழுது அவர்களுக்கு அறிமுகமான ஒரு யூத வக்கீல் அப்பொழுது அது வழியாகச் சென்று கொண்டு இருப்பது கண்டு மிகவும் அதிர்ந்து போயினர். ஏனெனில் இவர்களுக்கு அந்த யூத வக்கீலைப்பற்றி மிக நன்றாகவே தெரிந்து இருந்தது. மேலும் அவன் அவர்களது சமூகத்தின், தரக்குறைவாக பேசி, பிறரது கவுரவத்திற்காக இழுக்கு விளைவிக்கும் படியாக வாழ்ந்தவன் அவன். அனைத்து தீமைகளும் உருவானவன். இந்த இரண்டு மரியாதைக்கு உரிய பாதிரியார்களும், புனித பீட்டர் அந்த மனிதனுக்கு, தலை குனிந்து வணக்கம் தெரிவித்து, அவனிடம் அவனை ஸ்வர்க்க லோகத்தில் வைத்து இருப்பதே மிகவும் பெரிய கவுரவம் என்று கூறிய பின்னர், ஒரு ரோல்ஸ்ராய்ஸ் காரின் சாவியையும், அத்துடன் ஒரு நகரவீடு, ஒரு கிராமத்துவீடு ஆகியவற்றின் சாவியைக் கொடுத்தார். இதைக் கண்டு மிகவும் கோபமடைந்த பாதிரியாரும்; பாஸ்டரும், புனித பீட்டரின் அருகே சென்று அவருடன் வாதாடினார்கள். "நாங்கள் இதுநாள் வரை புனிதமான கடவுளுக்குப் பயந்தவர்களாக, புனித வாழ்க்கை வாழ்ந்தோம். ஆனால் அந்த வக்கீல் அவமானகரமான ஒரு வாழ்க்கையை நடத்தி வந்து இருக்கிறான். எங்களுக்கு ஒரு பழைய வீடும் கேடான காரும் அளித்து விட்டு, அந்தக் கொடியவனுக்கு மிக உயர்ந்த ஒரு ரோல்ஸ் ராய்ஸ் காரையும், இரு நல்ல வீடுகளையும் கொடுத்து இருக்கிறீர்கள் இது எப்படி முறையாகும்? என்று கேட்டனர். நான் மிகவும் வருந்துகிறேன், என்று இரண்டு பாதிரியார்களிடமும் மன்னிப்பு கேட்டார் புனித பீட்டர். இந்த அமைப்புகளின் உரிமையாளர்களின் உறவினர் அந்த

மனிதன். கபீர் இது போன்ற நாடுகளைப் பற்றிப் பேசவில்லை. அவர் உங்களது கற்பனையில் இருப்பது போன்றதொரு ஸ்வர்க்கத்தைப் பற்றிப் பேசவில்லை. உங்களது ஸ்வர்க்கம் இந்த உலகின் பிரதிபலிப்பே ஆகும். ஒருவேளை இது உலகை விட சற்று அங்கும் இங்குமாக அலங்கரிக்கப்பட்டு இருக்கும் - சற்று ஒழுங்குபடுத்தப்பட்டு இருக்கிறது - சற்று உயர்ந்த வாழ்க்கைத்தரம் - ஆனால் உண்மையான வாழ்க்கை அல்ல.

கபீர் உள்ளே இருக்கும் ஓர் இடைவெளியைப் பற்றிப் பேசகிறார்.

"ஆன்மிக வாதிகளின், உங்களைக் கட்டுப்படுத்தாத ஒரு நாட்டை எனக்குத் தெரியும், தொடர்ந்த மன அழுத்தமும் அங்கு இல்லை"

இந்த உலகத்தில் நீங்கள் இரண்டு வகையான மக்களைப் பார்க்கலாம். அவர்களில் சிலர் மனம் சலிக்கும் அளவுக்கு மதப் பற்று உள்ளவர்களாக இருப்பார்கள். உணர்ச்சியற்று இருப்பார்கள். மற்ற ஒரு பகுதியினரோ, முழுமையாக லௌகீக் வாழ்க்கையில் இருப்பவர்களாக, ஆனால் மிகவும் மன அழுத்தமுள்ளவர்களாக இருப்பார்கள். தங்களை ஆன்மிக வாதிகளாகக் கற்பனை செய்து வாழ்பவர்களாவது தங்களது மரணத்திற்கு பின்னராவது எதாவது மிகப்பெரிய ஏதோ ஒன்று தங்களுக்கு நிகழப் போகிறது என்று நம்பி வாழ்கிறார்கள். ஆனால் லௌகீக வாழ்க்கை வாழ்பவனுக்கு எந்த விதமான ஒரு நம்பிக்கையும் இருக்காது. அவன் மிகவும் மன அழுத்தத்தில் இருக்கிறான். நீங்கள் இதைப் பார்க்கலாம்.

இந்தியாவில் நீங்கள், மேற்கு நாடுகளில் இருந்து, பல வேறுபாடுகளைக் காணலாம். இந்தியா முழுமையான ஆன்மிக நாடு. இங்குள்ள மக்கள் மிகுந்த நம்பிக்கையுடன் இருக்கிறார்கள். வாழ்க்கை மிகவும் சிறியது. அது விரைவில் போய்விடும். அதன் பின்னரே ஸ்வர்க்கமும் அதன் பின்னர் கிடைக்கும். மற்ற அனைத்து வித இன்பங்களும். நீங்கள் உங்கள் வாழ்க்கையில் துன்பப்பட்டு இருக்கிறீர்களோ, அதை விட மிக அதிகமாக உங்களுக்கு நற்பலன்கள் அளிக்கப்படுகின்றன. எனவே நீங்கள் தொடர்ந்து முன்னேறுங்கள். பொறுமையாக இருங்கள். மேலை நாடுகளில் மக்கள் முற்றிலுமான ஆன்மிகவாதிகள் அல்ல. மேலும் அவர்களுக்கு எந்த நம்பிக்கையும் இல்லை, எதிர்காலமும்

இல்லை. மரணத்திற்குப் பின் வேறு வாழ்க்கை இல்லை. அதன் பின்னர் அங்கு மிகவும் மன அழுத்தம் ஏற்பட்டுள்ளது. அதன் பின்னர் அவர்களது மனம் அளவற்ற பாரங்களைச் சுமக்கிறது. இது ஏதோ அவர்கள் மலைகள் அளவு கவலைகளையும், பாரங் களையும் சுமந்து கொண்டு இருப்பது போல இருக்கிறார்கள்.

இவை இரண்டுமே தவறான நிலைகள்.

“கபீர் சொல்கிறார்:-

மேலும் வாழ்ந்து கொண்டு இருக்கும் யாருமே மரணத்தைக் கண்டு அஞ்சுவதில்லை. எனக்கு ஒரு நாட்டைப்பற்றி தெரியும். எங்கே மக்களுக்கு மரணம் என்பது ஒரு பொய் என்பது தெரியுமோ, எங்கே மக்களுக்கு வாழ்க்கை என்பது நிலையானது என்று தெரியுமோ! அங்கே! எனக்கு ஒரு வெற்றிடத்தைத் தெரியும். எங்கே நீங்கள் வாழ்க்கை ஆரம்பமாவதில்லை என்பதையும், வாழ்க்கை முடிவடைவதில்லை என்பதையும், மரணம் என்பது ஒருவர் தனது ஆடைகளை மாற்றிக் கொள்வதைப் போல் என்பதையும், நீங்கள் கண்டு, உணர்ந்து, பின்னர் உங்களது அனுபவத்தால் உணர்ந்து கொள்ள இயலக்கூடிய இடமே அது.

“அங்கே காட்டு மலர்கள், இலை மிகுந்த தரை வழியாக வெளிவருகின்றன. அதன்பின் ‘நான்’ தான் அவன் என்ற, சொற்களின் மணம், காற்றில் மிதந்து வருகிறது. அங்கு அந்த இதயத்தின் தேனீக்கள், அங்கு ஆழத்திலேயே தங்கி விடுகின்றன, அங்கே இருக்கும் மலரில்.

அது பின்னர் வேறு எதைப்பற்றியும் கவலை கொள்வ தில்லை.

“அவர் உள்ளிருக்கும் வெற்றிடத்தைப் பற்றிப் பேசுகிறார். மனதின் ஆழத்தில் இருக்கும் மௌனத்தை, அமைதியைப் பற்றி, மனநிறைவு - பெறாத விழிப்புணர்வு பற்றியும் பின்னர் “சமாதி நிலை” பற்றியுமே பேசுகிறார்.

‘அங்கே காட்டு மலர்கள் மலர்ந்து கொண்டு...’ என்கிறார் கபீர். காட்டு மலர்கள் தானாகவே, எவ்விதத் தூண்டுதலுமின்றி தானா கவே மலர்பவை. காட்டு மலர் என்பது எந்தத் தோட்டக்காரனாலும் பராமரிக்கப்படுவதில்லை. காட்டு மலர்கள் உயிர்த்துடிப்பும், புத்துணர்ச்சியும் கொண்டவை.

காட்டு மலர்கள் கல்வியும், நாகரிகமும் பெறாதவை. ஆனால் சத்தியமும் சாறும் நிரம்பியவை. நீங்கள் அவற்றைப் பார்த்திருக்க மாட்டீர்கள், உங்கள் கற்பனையிலும் கண்டிருக்க முடியாது. அவற்றுக்கு எவ்வித நிழலும் இல்லை.

**'இலைகள் மண்டிய மணற்பரப்பில் ஏராள காட்டுப்பூக்கள்
நான் அவனாக இருக்கிறேன்' என்கிற வார்த்தைகளின்
நறுமணம் மிதந்து வருகிறது காற்றில்'**

மூல வடிவமைப்பை மொழிபெயாப்பு அப்படியே கொண்டு வருவதற்கில்லை. (மாற்றவும் இயலாது).

கபீர் இங்கு பயன்படுத்தும் சம்ஸ்கிருத வார்த்தை 'ஸோஹம்' என்பதாகும். 'நானே அது' - ஸோஹத்தின் பொருள் இதுவே. ஸோவரம் ஒரு வார்த்தையே அல்ல, ஒலி. நீங்கள் மவுனமாயிருந்து கவனியுங்கள். உங்கள் இருப்புணர்வின் மையப் பகுதியில் இருந்து அந்த ஒலி மேலெழுவதைக் கேட்பீர்கள். அதுசொல் அல்ல, சுத்தமான ஒலி. உங்கள் மனதின் இரைச்சல்கள் உங்களை விட்டு அகன்ற நிலையில் கேட்கும் உள்ளார்ந்த இசை அது. மனம் உங்களை விட்டு விலகினால்தான் அதை நீங்கள் கேட்க முடியும். பிறகு, உங்களுக்கு இடையூறாக எந்தவொரு எண்ணமும் இருக்காது. எவ்விதக் குறுக்கீடும் இருக்காது. ஒட்டு மொத்த உலகமும் மறக்கப்பட்டு விடும்.

கால வகையிலும், இட வகையிலும் எல்லாமும் மறைந்து விடுகின்றன. சுத்த பிரக்ஞை (conciousness) மட்டுமே அதிர்ந்து கொண்டிருக்கும். அதைத்தான் ஜென் குருமார்கள் ஒரு கை ஓசை என்கிறார்கள். அதுவே 'ஸோஹம்' - காரணம் இந்த ஒலி உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியை நீங்கள் அடைந்தால் மட்டுமே கேட்கக் கூடியது. இந்த ஒலியைக் கேட்டதும் 'நான்தான் அது' என்கிற உங்கள் எண்ணம் உறுதிப்படுகிறது. இந்த ஒலி தன்னைச் சுற்றிலும் ஓர் அர்த்தத்தை அமைத்துக் கொண்டுள்ளது.

மறை ஞானிகள் சொல்கிறார்கள் பிரபஞ்ச இருப்பு முழுதும் இந்த ஒலி நிரம்பியிருக்கிறது என்று. நீங்கள் யார் என்பதை இந்த 'ஸோஹம்' வெளிப்படுத்துகிறது.

**'நான் அதுவாக இருக்கிறேன் எனகிற நறுமணம் காற்றில்
மிதந்து வருகிறது'**

பிறகு யார்தான் அதை விட்டுப் போக விரும்புவார்கள்? ஸோஹம் என்கிற ஒலி அமிர்தமாய் உங்கள் மீது வர்ஷிக்கப் படுகிறது. நீங்கள் விரும்பியதெல்லாம் உடனடியாய் நிறைவேற்றப் படுகிறது. வாசல் திறந்திருக்கிறது.

> **'இதயத்தேனி வேறு எதைப்பற்றியும் கவலைப்படாமல், பூவின் ஆழத்தில் கிறங்கிக் கிடக்கிறது''பூக்களைக் காண்பதற்காக வெளியில் போக வேண்டாம் தோழி கவலையை விடு, அந்தப் பயணம்! உன் சரீரத்தில் உள்ளன பூக்கள்!'**

சரீரத்தினுள் இருக்கும் ஏழு மையங்களை, ஏழு சக்கரங் களையே அவர் குறிப்பிட்டிருக்கிறார். முதலாவது ஒன்றைத்தான் நாம் அறிந்திருப்போம். அதுவும் அத்தனை தெளிவாயிருக்காது - தொலை தூரத்தில் ஓர் ஒலியாகவோ அல்லது எதிரொலியாகவோ அது இருக்கும். முதல் மையம் - பால் சார்ந்தது!

உங்கள் பால் சார்ந்த (sexual) அனுபவங்களெல்லாம் அந்தப் பூவினைப் பற்றிய விழிப்புணர்ச்சியை உங்களுக்கு வழங்கி விடாது. நீங்கள் ஆழ்ந்த உச்சகட்ட உணர்வைப் பெறுகிற பொழுது, உங்கள் உடம்பு பரவசத்தில் மெய்ம்மறந்து துடிக்கிறபொழுது உங்கள் உடம்பின் ஒவ்வொரு தசை நாரும் ஆனந்த நர்த்தனம் புரிகிற பொழுது, உடம்பின் ஒவ்வொரு உயிர் அணுக்களும் களிகொண்டு துடிக்கிற பொழுது அந்த முதல் பூவை நீங்கள் உணர்ந்து கொள்கிறீர்கள்.

அதுகூட அரிதாகத்தான். ஒரு சவிகிதம் பேருக்கும் அதிக மாய் அதை யாரும் அறிந்திருக்க மாட்டார்கள். தொண்ணூற்று ஒன்பது சதவிகிதம் பேருக்கும் உடலுறவு மனச்சுமை குறைக்கிற, விடுபட்ட உணர்வாகவே நின்று விடுகிறது. அதன் உச்சகட்ட பரவசத்தை அவர்கள் அறிந்திருப்பதற்கில்லை. சமயத்தில் உச்ச கட்ட உணர்வு தங்களுக்குக் கிடைத்ததாக அவர்கள் எண்ணக் கூடும். அது மிகச் சரியாக விடுபடுகிற உணர்வே (relief) யன்றி வேறில்லை.

பிறப்புறுப்புகளுக்கும் உச்ச கட்டத்துக்கும் தொடர்பில்லை என்றே சொல்ல வேண்டும். பிறப்புறுகள் சம்பந்தப்படும் என்றாலும் உச்சகட்ட இன்பம் என்பது தலை முதல் பாதநுனி வரை பரவி நிற்பது. அந்தக் கணத்தில் முழுமையான ஈடுபாடு கொண்டு,

இணைந்து கொள்வதால் மட்டுமே முதல் பூவை நீங்கள் தெரிந்து கொள்ள முடியும்.

மேலே இன்னும் ஆறு பூக்கள் உண்டு. நீங்கள் மேலேறும் போது இன்னும் ஆழமான உச்சகட்ட பரவசங்கள் உங்களுக்குக் காத்திருக்கும். ஏழாவதும் இறுதியுமாய் இருப்பது சஹஸ்ரம் - அதை ஆயிரம் இதழ்த்தாமரை என்பார்கள். சஹஸ்ரம் அமைந்த சிரசு திறக்கப்படுகிற நிலையில் நீங்கள் மனித குலத்துக்கு அப்பாற்பட்டவராகி விடுகிறீர்கள். நீங்கள் மனித சரீரத்துடன் இருந்தாலும், நீங்களே ஒரு கடவுளாகி விடுவீர்கள்.

மேற்கத்திய மனதுக்கு ஒரு சிரமம் - நாம் ஏன் புத்தரை கடவுள் என்கிறோம், மகாவீரரை கிருஷ்ணரைக் கடவுள் என்கிறோம் என்பதைப் புரிந்து கொள்வதில் சிரமம். அவர்கள் இயேசுவையே கடவுள் என்பதில்லை. அவரை கடவுளின் குமாரன் என்றே அழைக்கின்றனர். அவர்களைப் பொறுத்தவரை கடவுள் என்றால் உலகைப் படைத்திருக்க வேண்டும். இங்கே கிழக்கில், அவர்களைவிட ஆழத்துக்கு நாம் போய்க் கொண்டிருக்கிறோம். உலகை எவரும் படைக்கவில்லை. கிறிஸ்தவ அறிவைப் பொறுத்தவரை கடவுள் எவ்வகையிலும் இல்லை. கடவுள் படைப்பாளியல்ல, படைப்பாற்றல் மட்டுமே. அது பிரபஞ்ச இருப்பில் வெளிப்படுகிற சக்தி. இறையுணர்வு மரத்தில் இருக்கிறது, பாறைக்கல்லில் இருக்கிறது. ஆனால், பிறகெதற்கு புத்தரை நாம் கடவுள் என்கிறோம். உலகெங்கும் கடவுட் தன்மை பரவியிருக்கிற போது? மற்றவர்கள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தபோது புத்தர் தம்முடைய இறையுணர்வை விழிக்கச் செய்திருந்தாரே!

புத்தரைக் கடவுள் என்றதன் மூலம் அவர் உலகைப் படைத்தார் என்று நாம் குறிக்கவில்லை - அவர் ஏழாவது உச்சகட்ட பரவசத்தை அடைந்து விட்டவர் என்பதையே அது குறிக்கும். அவருக்குள் இறுதியாய் அடையப்படுகிற ஒன்று (Ultimate) மலர்ந்து இதழ் விரித்திருந்தது. அதன் பிறகும் அவர் தனி நபரல்ல. உலகப் பொது வானவராகி விட்டார்.

உங்கள் தலைப்பகுதியில் ஒரு திறப்பு (opening) உள்ளது. அதைப் புரிந்து கொள்ள முயலுங்கள். உங்கள் பால்சார்ந்த (sexual) மையத்தில் ஒரு திறப்பு உண்டு. அது உங்களை இயற்கையுடன் இணைக்கிறது. அது உங்களைக் கீழ் நோக்கிக் கொண்டு செல்வது.

பால் சார்ந்த மையத்தைப் போலவே எதிர் முனையில் மிகச்சரியாக மேல் நோக்கித் திறக்கிற மையம் சஹஸ்ராரம்.

பால் சார்ந்த மையம் 'ஈர்ப்பு விதி'க்கு உட்பட்டது. சஹஸ்ராரம் விதிகளுக்கப்பாற்பட்டது. அது முற்றிலும் யோக ஆற்றலில் (levitation) செயல்படுவது. உங்களைக் கீழ்நிலைக்கு இழுப்பது ஈர்க்கும் தன்மை, உங்களை மேல் நிலைக்குக் கொண்டு செல்வது யோகத்திறன்.

மற்றொரு சட்டம் இருப்பதை விஞ்ஞானம் தெரிந்து வைத்திருக்கவில்லை. ஆனால், மதம் என்பது இறையருள் (grace) என்கிற இரண்டாவது சட்டத்தை நாம் சென்றடைய உதவும் ஒரு திறனாக உள்ளது. மேலும் சஹஸ்ராரம் என்கிற ஆயிரம் இதழ்த்தாமரை உங்களுக்குள் மலர்ந்து விட்டால் உங்களுடைய அகந்தை மறைந்துவிடும், உங்களுள் இறையுணர்வு தோன்றும். உங்கள் உருவம் மனித உருவமாக இருந்தாலும் உங்களுக்குள் மனித ஆற்றலுக்கு மேம்பட்ட ஒன்று. (Super human) இறங்கி வரத் தொடங்குகிறது.

இந்துக்கள் இந்த நிலையை அவதாரம் என்கிறார்கள். அவதாரம் என்ற சொல்லுக்கு இறங்கி வருதல் என்று பொருள். ஒரு மனிதன் ஆகாயத்தை நோக்கி வரவேற்கும் தன்மை கொண்டு விட்டால் உட்புக ஏதுவாகி விட்டால் (open) அந்த வானமே அவனுள் இறங்கி விடுகிறது. அவன் ஓர் அவ்தாரமாகி விடுகிறான்.

> **'பூக்களைக் காண்பதற்காக நீ வெளிச் செல்ல வேண்டாம், அதற்காகப் பயணம் செய்கிற கவலையும் உனக்கு வேண்டாம், ஒரு மலருக்கு ஆயிரம் இதழ்களாய் உனக்குள் எத்தனையோ மலர்கள்!'**

மனிதன் மூலதாராம் தொட்டு ஆறு மலர்கள் தாழ்நிலையில் இருப்பவை. அவற்றை அடையும் வரை தான் நீங்கள் மனிதனாக இருப்பது. அதன் பின் - ஏழாவதை அடைந்தபின் நீங்கள் ஒரு கடவுளாகவே ஆகி விடுகிறீர்கள்.

> **'ஆயிரம் இதழ் கொண்ட ஒரு மலர்போதும் அமர்ந்து கொள்வதற்கு'**

அந்த ஏழாவது இடத்துக்கு வருவதென்பது உங்கள் பூர்வத்துக்கு (வீடு) வருவதாகும். அங்கே நீங்கள் வந்தாயிற்று. இனி

உட்காருங்கள், ஓய்வு நிலையில் இருந்து கொண்டு இளைப் பாறுங்கள். இனி போகுமிடம் வேறெதுவுமில்லை. எல்லாமே பூர்த்தியாகிவிட்டது.

இது ஒரு தேடலாக இருந்தது, நீங்கள் எல்லாப் பக்கங்களிலும் ஓடிக் கொண்டிருந்தீர்கள். ஆயிரக்கணக்கான பிறவிகளாய் தேடித்திரிந்தும், கண நேரக் காட்சி ஒன்றையும் காணாமல் இருந்தீர்கள். ஆனால் ஏழாமிடத்தை அடைந்ததும் எல்லாமே நிறைவேறி விட்டது. திடீரென்று தற்போது உங்களால் ஓய்வெடுக்க முடிகிறது. இனி போவதற்கு இடமேதுமில்லை. அடையப்பட வேண்டியதாய் குறிக்கோள் எதுவுமில்லை. நீங்கள் விரும்புவதற்கு எந்தப் பொருளுமில்லை. எனவே, ஆசையற்ற நிலை இயல்பாகவே ஏற்பட்டு விட்டது.

**'அங்கே அமர்ந்திருக்கும் வேளையில் ஓர் அழகான கணநேரக் காட்சியை நீ காணலாம்.'**

கிழக்கில் இது (இந்தக் காட்சி) வே 'அழகு' எனப்படுகிறது. உங்களுக்குள் ஏழாவது மலர் இதழ் விரிக்காவிடில் அழகைப்பற்றி எதையும் நீங்கள் அறியமாட்டீர்கள். நீங்கள் ரோஜா அழகாக இருக்கிறது, வானம் அழகு, ஆறு அழகு என்கிறீர்கள். அழகு என்கிற சொல்லை நீங்கள் பயன்படுத்துகிறீர்கள்.

'அழகை விவரியுங்கள்' என்று யாராவது உங்களை வற்புறுத் தினால் நீங்குள் இழந்து விட்டதாய் உணர்வீர்கள். உங்களால் விவரிக்க முடியாது. உண்மையில் அதுபற்றிக் கேட்டிருக்கிறீர்களே தவிர, அதை உங்களுக்குத் தெரியாது. மற்றவர்கள் ரோஜா அழகென்றால், நீங்களும் ரோஜா அழகானது என்கிறீர்கள். மற்றவர்களுடைய கருத்தையே நீங்களும் வெளிப்படுத்துகிறீர்கள்.

ஐம்பது ஆண்டுகளுக்கு முன் 'காக்டஸ்' (Cactus) என்கிற கள்ளிச் செடி அழகானது என்று யாரும் கேள்விப்பட்டதில்லை. ஆனால், இன்று அவை சிறப்பிடம் பெற்று விட்டன. ரோஜாவின் ஆசனம் கள்ளிப்பூவிற்கு வழங்கப்பட்டு விட்டது. ரோஜாவும் அதனுடன் இன்று பழங்கதையானது. இன்று மக்கள் வீடுகளில் ரோஜா வளர்க்கவில்லை. கள்ளிப்பூக்களை வளர்க்கிறார்கள். நாகரிகத்தில் மேம்பட்டவர் வீடுகளில் கள்ளிச் செடிகளே நடப்படு கின்றன. பாலைவனச் செடி வகையான கள்ளி பாராட்டுக்குரியதாகி விட்டது.

நாகரிகம் பண்பாடெல்லாம் மாறிவிட்டன. ரோஜா தனது முகத்தைத் தொலைத்து விட்டது. சில நாட்கள் கழித்து ரோஜா திரும்பி வரலாம். காரணம் இவர்கள் களைத்துச் சோர்ந்து விட்டார்கள். 'காக்டஸ்... காக்டஸ்... காக்டஸ்' என்று ஒரு நாள் எல்லாமே மாறிவிடும். மக்களின் உடைகளைக் கவனியுங்கள். ஒவ்வொரு ஆண்டும் அவை மாறுகின்றன. பத்து பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு பழைய உடையே மீண்டும் வந்து விடும். பாவம், புதுப்புது யோசனைகளுக்கு அவர்கள் எங்கே போவார்கள்? அதே பழைய யோசனைகள் திரும்பத் திரும்ப வந்தாக வேண்டியிருக்கிறது.

அழகு பற்றி நீங்கள் அறியவில்லை. உண்மையில் அந்த வார்த்தையை நீங்கள் பயன்படுத்தவே செய்கிறீர்கள். ஆனால் அது வெற்றாக (empty) இருக்கிறது. உள்ளிருக்கும் அழகை உணர்ந்தவர்க்கே அழகைத் தெரிந்திருக்கும். அந்நிலையில் ஒரு பூவைக் காண்கிற போதெல்லாம், உள்ளார்ந்த அழகே உங்கள் நினைவிற்கு வரும்.

ரோஜா பாட்டு பாடும், நடனம் ஆடும் என்பதைக் கண்டு கொண்டவர் கபீர். ரோஜாவைக் கண்டதும் அவரும் ஆடிப்பாடத் தொடங்கி விடுகிறார். தனது சொந்த மலரைப் பற்றிய அனுபவம் வெளியே இருக்கும் ரோஜாவால் தூண்டப்பட்டு விடுகிறது. நட்சத்திரங்கள் ஒளிவிடும் இரவில் தமது புல்லாங்குழலில் இசைக்கவோ அல்லது பாடவோ ஆரம்பித்து விடுவார். காரணம் அந்த நட்சத்திர இரவு அவருக்குள் இருக்கும் அவருடைய ஆகாயத்தை நினைவுபடுத்தி விடுகிறது - அது ரொம்பவே அழகானது!

> **'அங்கே அமர்ந்து கொண்டு ஓர் அழகிய கண நேரக் காட்சியைக் காணமுடியும். சரீரத்துக்கும் உள்ளேயும் வெளியேயும் தோட்டங்களில்.'**

ஒருமுறை உள்ளிருக்கும் அழகை நீங்கள் கண்டு கொண்டு விட்டால், வெளியேயும் அழகையே கண்டு ஆராதிப்பீர்கள். உங்களுக்குள் இறையுணர்வு ஒரு முறை தோன்றி விட்டால் வெளியேயும் அதைக் காண முடியும். மூலம் (original) அழகானது.

> **'தோட்டங்களுக்குச் செல்லாதீர்கள். உங்களுக்குள்ளேயே தோட்டமிருக்கிறது போகாதீர்கள் போகாதீர்கள்**

**தோட்டங்களுக்கு. தோட்டங்களின் தோட்டம் உங்கள் தேகத்துக்குள் இருக்கிறது. உங்களுக்குள் இருக்கும் ஆயிரம் இதழ்த்தாமரையைக் கண்டு கொள்ளுங்கள். அதன்மீது அமர்ந்து விடுங்கள். அதன் பிறகு உருவற்ற அழகைக் காணுங்கள். அதன் பிறகு கண்ணுக்குத் தெரியாததைக் காணுங்கள் தொட்டுணர முடியாத அழகை, முற்றிலும் அறிந்து கொண்டிராத ஒன்றின் அழகைக் காண்பீர்கள்'**

அறிந்த ஒன்றை அறிந்திருப்பவர் எதையும் அறியாதவர்தாம். காணக்கூடிய ஒன்றைக் கண்டு கொண்டவர் எதையுமே காணாதவர்தாம். உங்கள் இன்றியமையாத ஆற்றலை இன்னும் நீங்கள் கண்டடையவில்லை.

இயற்கை உள்ளார்ந்த ஆற்றல் என்கிற சிறந்த பரிசை உங்களுக்கு வழங்கியுள்ளது. அந்த ஆற்றலைச் செயல்படுத்துவதன் மூலம் உங்கள் நன்றியுணர்வை இயற்கைக்கு தெரியப்படுத்துங்கள். உங்களுக்குள் சுமந்திருக்கும் விதையாகி விடுங்கள்.

சிறிதாயிருக்கும் ஒன்று தனக்குள் ஓர் உலகத்தையே உள்ளடக்கியிருக்கும். இந்த உடம்பு வெறும் கூடல்ல, இது பிரபஞ்ச இருப்பையே தன்னுள் கொண்டது. பிரபஞ்சத்தின் ஆலயம் இதுவாகும். அதை முதலில் நேசியுங்கள், மதியுங்கள், கூர்ந்து ஆராய்வது முக்கியம். உங்களுடைய முதல் மையத்திலேயே நின்று விடாதீர்கள். உங்கள் காமத்தில் இருந்து (பால் சார்ந்த மையம்) சமாதி நிலைக்குச் செல்லுங்கள். உங்கள் விதியை நீங்கள் நிறைவு செய்யவில்லை. உங்கள் இயற்கையை இன்னும் நீங்கள் நிறைவு செய்தபாடில்லை - வாழ்க்கை என்கிற மிகப்பெரிய வாய்ப்பை நீங்கள் தவறவிடுகிறீர்கள்.

இன்றைக்கு இது போதும்.

○

*முதலாம் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே! கடவுளில் இருப்பதற்காக எதையும் செய்ய வேண்டியதில்லை. நாம் சும்மாயிருந்தாலே போதும் என்று நீங்கள் கூறுகிறீர்கள். ஆனால், என் மனதில் நான் எதையாவது செய்ய வேண்டும், மதிப்புடைய எதையாவது செய்ய வேண்டும், தகுதியாக இருந்து என் பங்களிப்பை வழங்க வேண்டும், குறிப்பிடத்தக்க ஒன்றை வழங்க வேண்டும் என்று உறுதியாய் நம்புகிறேன். நான் வெளியில் இருந்து பெற்ற ஒரு கருத்தமைவை என்னுள் தேடிக் கொண்டிருப்பதாய் நான் உணர்கிறேன்'.*

அது இரவு நேரத்தில் ஒரு கிணற்றுக்குள் எட்டிப் பார்ப்பதைப் போன்றது. எனக்குப் பிரதிபலிப்புகள் தெரிகின்றன. அதைக் கிணற்றின் அடிப்பாகமாய் கருதிக் கொள்கிறேன். ஆனால் அது மேற்பரப்பு மட்டுமே. தேடிக் கொண்டிருப்பதை விட, காத் திருப்பதே அவசியம். எனக்கும் தெரிந்திருந்தாலும் நான் எனது சொந்த எண்ணங்களுடன், எது நடக்க வேண்டும் என்பது பற்றிய சொந்தக் கருத்துடன் காத்திருக்கிறேன்; இது பற்றி என்ன சொல்வீர்கள்.

முதலாவதாக – அடிப்படையாக நீங்கள் புரிந்துகொள்ள வேண்டியது நீங்கள் முன்பே இறையுணர்வுடன் இருக்கிறீர்கள் என்பதை இதில் 'கடவுளில் இருப்பது' பற்றிய கேள்விக்கே இடமில்லை. நீங்கள் முன்பே அதில் இருக்கிறீர்கள். கடலுக்குள் மீன் இருந்து கொண்டிருப்பதைப்போல கடவுளுக்குள் நீங்கள் இருக்கிறீர்கள். கடவுள் இருக்கிறது பிரபஞ்ச இருப்பாக.

பண்டைய ஹீப்ரு மொழியில், கடவுள் என்கிற சொல் 'எது இருக்கிறதோ' அதை உணர்த்துகிறது. 'G' என்பது 'அது' என்பதற்

காய் நிற்பது. 'O' என்பதன் பொருள் 'எது' ஆகும். 'D' என்பது 'இருக்கிறது' என்பதைக் குறிக்கும் எழுத்து. 'கடவுள்' என்கிற வார்த்தை தனிச்சிறப்புடையது. அது ஒரு நபரைக் குறிப்பிட வில்லை. ஓர் இருப்பை (Presence) க் குறிப்பிடுகிறது. இருப்பு என்பது எங்குமே நிறைந்தது. இறையுணர்வு என்கிற அதே பொருள்தான் வாழ்க்கைக்கு. இருத்தல் என்றால் இறையுணர்வோடு இருத்தல் ஆகும். மூச்சு விடுவது என்றால் இறையுணர்வோடு மூச்சுவிட வேண்டும். வேறு எந்த வழியும் இல்லை. நீங்கள் உறக் கத்தைத் தேர்வு செய்யக் கூடும். உறக்கத்திலும் கடவுட் தன்மை இருக்கவே செய்யும். விழிப்படைகிற போதும் அதே நன்மை இருக்கும். நீங்கள் இறையுணர்வு இல்லாமல் இருக்க முயற்சிப் பீர்கள். மறுப்பது, மறப்பது என்று எப்பாடி முயன்றாலும் அது நடவாத காரியம்.

எனவே, தகுதி இருக்கிறதா இல்லையா என்பதல்ல கேள்வி. நீங்கள் தகுதி உள்ளவர்களாக மாறாதீர்கள் என்று நான் சொல்ல வில்லை. சோம்பேறியாக, வெறுக்கத்தக்க நிலையில் இருக்கும்படி நான் சொல்லவில்லை. தப்பியோடப் பாருங்கள் என்று சொல்ல வில்லை. நீங்கள் பிரபஞ்ச இருப்பிற்கு பங்களிக்கிற எதுவும் உங்கள் இறையுணர்விற்கான நன்றியாக இருக்க வேண்டும். தெய்விகத் தன்மையை அடைவதற்கான உபாயமாக அதைக் கொள்ளக்கூடாது. முன்பே இறையுணர்வை – தெய்விகத் தன்மையை நீங்கள் அடைந்தாயிற்று. அது பொங்கி வழிகிற மகிழ்ச்சியாக இருக்க வேண்டும். காரணம் முன்பே நீங்கள் அங்கிருக்கிறீர்கள். அந்த வேறுபாட்டைத் தெளிவாகக் கொண்டிருங்கள்.

உங்கள் மகிழ்ச்சியை, அன்பை, பரவசத்தைப் பகிர்ந்து கொள் ளுங்கள். உங்களால் முடிந்தவரை வாழ்க்கையை நேர்த்தியாக்கி விடுங்கள். நீங்கள் இன்று எப்படி வாழ அனுமதிக்கப்பட் டிருக்கிறீர்களோ அப்படி வாழவே நீங்கள் தேர்வு செய்யப்பட்டது. நன்றி உணர்வில்தான் இந்த பிரபஞ்ச இருப்பு. அதனால்தான் உங்களுக்கு உயிர் – பிறவி வழங்கப்பட்டிருக்கிறது. நீங்கள் என்ன செய்யலாம்? உங்களால் ஓவியம் வரைய முடியுமெனில், இதயபூர்வமாக ஓவியம் தீட்டுங்கள். உங்களால் நடனமாட இயலுமெனில் அதைச் செய்யுங்கள். எதைச் செய்தாலும் முழுமையாய் செய்ய வேண்டும். நடனமாடுகிறபோது, நீங்கள் மறைந்து, நடனம் மட்டுமே எஞ்சியிருக்க வேண்டும்.

ஆனால் இவையெல்லாம் இறையுணர்வு கொள்வதற்கான உபாயங்களல்ல என்பது நினைவிருக்கட்டும். இதுவெல்லாம் நம்மாலியன்ற எளிய நன்றி தெரிவித்தல் ஆகும். தெரிவியுங்கள் உங்கள் இதயபூர்வமான நன்றியை.

பிரார்த்தனை (வழிபாடும்) நன்றியுணர்வோடு வருகிற போதுதான் அது உண்மையானதாயிருக்கும். கடவுளை நம்பச் செய்கிற ஓர் உபாயமாக அதை நீங்கள் மேற் கொண்டால் அது பொய்யானதாகிவிடும். அவரை இணங்க வைத்து உங்களுக்கு வேண்டியதைப் பெறுகிற முயற்சியாகவே அது இருக்கும். அவரை மனம் கனிய வைக்க கடவுளையே கூட ஒருவேளை நீங்கள் கேட்கலாம் – அதுவும் ஆசையின்பாற்பட்டது தான். உங்கள் பிரார்த்தனையே ஆசைகளால் நிரம்பியிருக்கிறது. சிறகடித்து பறக்க முடியாத அளவில் அது பாரமாயிருக்கிறது. அது இருண்ட உலகில் துழாவிக் கொண்டிருக்கக் கூடுமேயன்றி, ஒளிவீசும் வானில் எழுந்து உயரப் பறக்க முடியாது.

ஆசையேயில்லாத பிரார்த்தனை சிறகுகள் கொண்டதாகும். அது முடிவான குறிக்கோளை (Ultimate) ச் சென்றடையும். பாரமில்லாத, நன்றியால் மட்டுமே நிரம்பிய பிரார்த்தனை, பிரபஞ்ச இருப்பு முன்பே உங்களுக்கு வழங்கிவற்றுக்கு நீங்கள் காட்டும் நன்றியாய் அமைகிற பிரார்த்தனை அது.

"நாங்கள் வாழ்ந்து கொண்டு இருந்தால் மாத்திரம் போதுமா?" என்று நீங்கள் கேட்கலாம். ஆனால் எனது உறுதியான எண்ணம் "நான் ஏதாவது செய்ய வேண்டும், தகுதியான எதையாவது செய்ய வேண்டும், எனது பங்களிப்பாக, ஏதாவது கொடுக்க தகுதியுள்ள எதையாவது கொடுக்க வேண்டும்.

இது ஒரு துணிச்சலான் உணர்வு அல்ல. இது உங்களிடம் இந்த சமூகத்தால் ஏற்படுத்தப்பட்ட ஓர் உணர்வே ஆகும். இந்த சமூகம் உங்களிடம் இடைவிடாமல், தொடர்ந்து, இரவும் பகலும், உங்கள்து குழந்தைப் பருவத்தில் இருந்து – உங்களது கல்வி கூடங்களில் இருந்து, கல்லூரியில் இருந்து, பல்கலைகழகத்தில் இருந்து, தேவாலயங்களில், பாதிரியார்களால், அரசியல்வாதிகளால் பெற்றோர்கள், பேராசிரியர்கள் இப்படி அனைவரும் ஒன்றுகூடி இந்தத் தனிப்பட்ட சதிதிட்டத்தைத் தீட்டி – உங்கள் மனதில் நீங்கள் எதற்கும் தகுதியற்றவர் ஆக இருப்பதால், உங்களது தகுதியை

நிருபிக்க, நீங்கள் எதையாவது செய்தாக வேண்டும். உங்களை நீங்களே நிருபித்துக் கொள்ள வேண்டும் - என்ற எண்ணத்தை விதைத்து விடுவார்கள். "அப்படி தகுதி வாய்ந்த ஏதாவது செய்தால் தான் நீங்கள் தகுதி வாய்ந்தவர்" ஆவீர்கள்.

இது இந்த சமூகத்தின் நீண்ட நாள் திட்டமாகும் - இது உங்களைப் பயன்படுத்திக் கொள்வதற்காக - இது தான் சமுதாயம் - உங்களை ஓர் அடிமையாக்க மிகவும் அருவருப்பான ஒரு வழி முறையாகும். அது உங்களை படைப்பாளிகளாக மாற்ற அல்ல. உங்களை அடிமைகளாக்கவே. ஆனால் நாகரிகமான அழகிய வார்த்தைகளால் சொல்வதனால், நீங்கள் உருவாக்கப்பட்டு இருக்கிறீர்கள் என்று சொல்ல வேண்டும். அழகு மிகுந்த சொற்கள், அருவருப்பான உண்மைகளை மூடி மறைக்கின்றன. இதில் அருவருப்பான உண்மை என்ன என்றால், இந்த சமுதாயம் உங்களைத் தனது அடிமையாகப் பயன்படுத்த விரும்புகிறது; இந்த சமுதாயம் உங்களை மிகவும் திறமையாக கையாள விரும்புகிறது. இந்த சமுதாயம் உங்களை அடக்கி ஆள விரும்புகிறது. அது தனது எண்ணங்களை இரண்டு விதமாக நிறைவேற்றுகிறது.

வெளிப்புறத்தில், நிலைமை - காவல் துறையினர், நீதிபதிகள் ஆகியோர் சட்டங்களை அமல் படுத்துவார்கள் - ஆனால் சட்டங்கள் என்பவை முடிவானவை அல்ல. மேலும் ஒரு மனிதன் எப்பொழுதும், சட்டத்தில் இருந்து தப்புவதற்கான வழிகளை கண்டு அறியலாம். இப்பொழுது சமூகம், தன்னை பாதுகாத்துக் கொள் வதற்கு ஒரு புதிய - உங்களது மனதில் மனசாட்சியை உருவாக்கி விடுகிறது. அது உங்கள் மனதை வசியப்படுத்துகிறது - நீங்கள் தகுதி உள்ளவராக வேண்டும் - என்று மீண்டும் மீண்டு சொல்கிறது.

இந்த உதவிகள் ஏதும் கிடைக்காத குழந்தைக்கு, வேறு ஒரு வழியும் இல்லை. அவன் அவர்களிடம் கீழ்படிந்தே தீர வேண்டும். சரணாகதி அடைந்தே தீர வேண்டும். அவனது வாழ்க்கை இப்பொழுது ஸ்தம்பித்துப்போய் இருக்கிறது. அவன் தனியாக வாழ முடியாத. அவன் தனது பெற்றோர்களைச் சார்ந்தே தான் வாழ வேண்டும். அவன் மிகவும் ஜாக்கிரதையுடன் தனது பெற்றோர் களை தவறாமல் கவனித்துக் கொண்டு இருக்க வேண்டும் - அவர்களுக்கு என்ன தேவை? - அவர்கள் தான் என்ன செய்தால் தன்னைப் பாராட்டுவார்கள்? - அவர்கள் தனக்கு என்ன பரி சளிக்கப் போகிறார்கள்? அப்படி அவர்களால் பரிசளிக்கப்பட்டால்,

அப்பொழுது அவன் தகுதியானவன் ஆகிறான். அப்பொழுது அவனுக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. அவன் அவர்களால் தண்டிக்கப்பட்டால் அப்பொழுது அவனுக்கு தான் தகுதியற்றவன் என்ற எண்ணம் தோன்றுகிறது. தன்னைப் பற்றிய தவறான எண்ணமே அவனுக்கு ஏற்படுகிறது. சிறிது சிறிதாக இந்த எண்ணம் அவனது மனதில் நிலைத்து நின்று விடுகிறது. அதன் பின்னர் அது உனது இதயத்தின் ஆழத்திற்கு, மூழ்கிச் சென்று விடுகிறது. இந்த எண்ணமே அநேகமாக உங்களது இரண்டாவது குணமாகி விடுகிறது. அது மாத்திரமே நிச்சயமாகப் போதாது. மரங்கள் போதுமான அளவு இருக்கின்றன. மிருகங்கள் தேவையான அளவு இருக்கின்றன. பறவைகளும் தேவையான அளவு இருக்கின்றன. ஆனால் மனிதன் ஒருவனுக்கு மாத்திரமே, இருப்பது என்பது மாத்திரம் போதாது என்ற முட்டாள் தனமான எண்ணம் தோன்றுகிறது. இது ஒரு தனி மனிதனின் சுதந்திரத்தை அழிப்பதற்கான, வஞ்சகமான சூழ்ச்சிகளே காரணமாகும் - ஒரு தனி மனிதனின் சுயமரியாதையை அழிப்பதற்கான செயலே ஆகும். ஒரு தனி மனிதனின் மனதில் ஒரு குற்ற உணர்வை ஏற்படச் செய்யவே ஆகும். அது மிக ஆழமாக - நிச்சயமாக - மிக ஆழமாக - அதுதான் தைரிய உணர்ச்சி என்று நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளும் அளவுக்கு ஆழமாக இறங்கி விட்டது. அது ஒரு வீர உணர்ச்சியே அல்ல.

நான் நிச்சயமாக சிருஷ்டிக்கும் தன்மைக்கு எதிரானவன் அல்லன். நான் முற்றிலுமாக அதை விரும்புகிறேன் என்பதை நினைவில் கொள்ளுங்கள். எனது சன்யாசிகள் புதியவற்றை சிருஷ்டிக்கும் திறமை பெற்றவர்களாக இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன் - ஆனால் முற்றிலும் புதிய காரணங் களுக்காக் முற்றிலும் புதிய நோக்கத்திற்காக, முற்றிலும் புதிய காரணங்களுக்காக - நான் நீங்கள் அனைவருமே புதியவற்றை படைக்கும் படைப்பாளிகளாக இருக்க வேண்டும் என்றே விரும்புகிறேன். நான் நீங்கள் இங்கிருந்து தப்பிச் சென்று ஆஸ்ரமங்களுக்குள் சென்று விடுவதை நான் விரும்பவில்லை. நான் நீங்கள் உலக வாழ்வை முழுமையாக வாழ வேண்டும் என்று விரும்புகிறேன். வாழ்க்கையின் முழுமையான பகுதிகளை வாழ்ந்து விடுங்கள். உங்கள் உங்களது யோசிக்கும் திறனை வெளிப் படுத்துங்கள். எத்தனை வழிகளில் நீங்கள் மலர இயலுமோ

அத்தனை வழிகளிலும் மலருங்கள். அப்பொழுது தான் நீங்கள் மனநிறைவு பெறுவீர்கள்.

ஆனால் இவை எல்லாம், நாம் அடைய வேண்டிய அந்த இடத்தை அடைய எந்த விதமான வழி முறைகளும் ஆகாது. இவை உங்களது மகிழ்ச்சியின் வெளிப்பாடே ஆகும். இது உங்களது கொண்டாட்டமே ஆகும். நீங்கள் எதையாவது ஒரு வழி முறையாகப் பயன்படுத்தினால் உங்களுக்கு அதில் முழுமையான விருப்பம் இல்லை என்று பொருள். உதாரணமாக நீங்கள் ஓர் ஓவியம் தீட்டுகிறீர்கள். ஆனால் பாராட்டப்பட வேண்டும் என்ற ஒரே நோக்கத்தோடு நான் நீங்கள் அந்த ஓவியத்தை உருவாக்குகிறீர்கள். உங்களது எண்ணம் நீங்கள் பெறப் போகும் பாராட்டின் மீதே குவிந்து இருக்கிறது. சித்திரத்தின் மீது அல்ல. உங்களது இதயம் அந்த சித்திரத்தில் இல்லை. நீங்கள் ஏற்கனவே, நீங்கள் எப்படி எல்லாம் பாராட்டப்படப் போகிறீர்கள் "என்ற கனவில், கற்பனையில் மூழ்கி விட்டீர்கள். உங்களது மனது தொடர்ந்து, நீங்கள் பெறப் போகும், பாராட்டைப் பற்றியே எண்ணிக் கொண்டு இருப்பதால், நீங்கள் இயற்கையாகவே தீட்டக் கூடிய சிறந்த சித்திரம் ஒன்றைத் தீட்டாமல், ஏதோ ஒரு சித்திரத்தை, மற்றவர்கள் விரும்ப கூடிய ஒன்றை படைக்கிறீர்கள். நீங்கள் அந்த ஓவியத்தை அவர்களின் எண்ணப்படி தீட்டுகிறீர்கள். இதனால் நீங்கள் தரம் மிக்க ஓவியத்தை வரையும் திறமை இல்லாதவராக ஆகி விடுகிறீர்கள். நீங்கள் உங்களது ஒப்புயர்வற்ற திறமையை வெளி வர அனுமதிக்க மாட்டீர்கள். ஏனெனில் அதிக திறமை உள்ளவர்கள் பாராட்டப்படுவதில்லை. இதை நன்கு நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் எவ்வளவு திறமைசாலியாக இருக்கிறீர் களோ, உங்களது புத்தி கூர்மை எந்த அளவு உண்மையாக இருக்கிறதோ, அந்த அளவு நீங்கள் பாராட்டப்படுவது இல்லை. உங்களை, உங்களது ஓவியங்கள் நன்றாக இல்லை ஒதுக்கி விட நேரிடும். ஏன்? ஏனெனில் அதிக புத்தி கூர்மை உள்ள ஒருவன், புதியதரன ஒன்றையே இந்த உலகத்திற்கு கொண்டு வருவான் - மிகவும் புதியவை - ஏனெனில் பழைய வழி முறை வந்த கலைகளுடன் ஒப்பிட்டு, புதியவை அவற்றுடன் பொருந்தவில்லை என்று கூறி விடுவார்கள். மேலும் அந்தப் பழைய வழிமுறை, மக்களது மனதில் மிக ஆழமாக வேர் விட்டு, நிலைத்து நிற்கிறது. அவை எளிதாக மனிதனின் மனதில் இருந்து வெளியேறாது.

ஒரு மேதை எதையாவது சிருஷ்டிக்க வேண்டுமானால், அது கவிதையாக இருந்தாலும், அல்லது ஓவியம், நடனம், பாடல்கள் என எதைப் படைத்தாலும், அவரே தனது திறமைகளை மதிப்பீடு செய்ய ஒரு புதிய வழி முறையையும் உருவாக்க வேண்டும்.

வின்சென்ட் வான் காக் என்ற ஓவியர் தான் வாழ்ந்த காலத்தில் பாராட்டப்படவே இல்லை – இந்த உலகமே இதுவரை கண்டறியாத தலை சிறந்த ஓவியர் அவர் – அவர் மிகவும், அதிகமான ஏழ்மையில் வாழ்ந்து இருந்தார். அவரது சகோதரர் தான் அவருக்கு உதவி வந்தார். ஆனால் அவரது சகோதரருக்கு 'வான்கோக்' ஓவியம் வரைந்தபடியே வாழ்வது பிடிக்கவில்லை. ஏனெனில் அதனால் எந்த வித வருவாயும் கிடைக்கவில்லை. எனவே "பொருள் வராத ஒரு தொழிலைச் செய்ய வேண்டிய அவசியம் என்ன?" என்றே அவர் எண்ணினார். அது மாத்திரமன்றி அவர் வரைந்து வந்த ஓவியங்களைக் கண்டவர்கள், அவர்க ஒரு பைத்தியம் என்று எண்ணவும் துணிந்தனர் – அவர் மிகவும் புதுமையான வழியில் சித்திரங்களைத் தீட்டினார். இது நாள் வரை யாரும் இப்படிப்பட்ட ஓவியங்களை வரைந்தது இல்லை. அவருக்கு தனக்கே உரித்தான கற்பனைத்திறன் இருந்தது. அவர் ஒரு மேதை. அவரது ஓவியங்களில் மரங்கள் உயரமாக, நட்சத்திரங்களைத் தொடும் அளவுக்கு வளர்ந்து இருந்தன. நட்சத்திரங்கள் மிகவும் சிறியனவாகவும், மரங்கள் மிகப் பெரியனவாகவும் சித்தரிக்கப்பட்டு இருக்கின்றன. இப்பொழுது இந்த ஓவியத்தை யார் பாராட்டப் போகிறார்? பள்ளிப் பருவத்தில் இருக்கும் எந்த ஒரு குழந்தையும் "இதென்ன முட்டாள்தனம். நட்சத்திரங்கள் இவ்வளவு சிறியவைகளாக இருப்பதில்லை' மேலும் மரங்கள்! நட்சத்திரங்களை தொடும் அளவுக்கு இத்தனை பெரிய மரங்களை யாராவது பார்த்து இருக்கிறார்களா?

ஆனால்ா வின்ஸன்ட் வான் காக் பின்வருமாறு சொல்வது வழக்கம். "நான் எப்பொழுது ஒரு மரத்தைப் பார்த்தாலும், இது தான் எனது உணர்வுகளாகும். இந்த பூமி நட்சத்திரங்களை நெருங்க முயற்சி செய்கின்றன. இந்த மரங்களின் மூலமாக இந்த நட்சத்திரங்களை கீழே இறக்கிக் கொண்டு வர முயற்சிக்கிறது. இந்த மரங்கள் பூமியின் கரங்கள் ஆகும். இவை கண்ணுக்குத் தெரியாத ஏதோ ஒன்றைத் தொட முயற்சிக்கின்றன. அவற்றை பூமிக்கு கொண்டு வருவதற்காக! கீழே இறங்கி வரச் செய்வதற்காக – நான்

என் பூமியை நேசிக்கிறேன். எனவே தான் எனது நட்சத்திரங்கள் சிறியவை ஆகவும், எனது மரங்கள் பெரியவை ஆகவும் இருக் கின்றன. நான் இந்த பூமியின் ஓர் அங்கம். நானும் எனது பூமியின் ஒரு கரமாவேன். என்னை பொறுத்த வரையில் நட்சத்திரங்கள் சிறியவையே".

"இங்கு வானவியல், பௌதிகவியல், கணிதவியல் போன்ற எந்தக் கேள்விகளும் இங்கு எழவில்லை. இவை முற்றிலும் வேறான காட்சிகளாகும். மரங்கள் பூமியின் லட்சியங்களாக இருக்கின்றன. வானமும் பூமியும் ஒன்றை ஒன்று அன்புடன் சந்திப்பதைப் போன்றது இது. ஆனால் யார் அவரைப் பாராட்டப் போகிறார்கள்?

அவரது ஓர் ஓவியத்தில் சூரியன் கறுப்பு வர்ணமாக வரையப்பட்டு இருக்கிறது. இப்பொழுது யாராவது கறுப்பு நிற சூரியனைக் கண்டு இருக்கிறார்களா? ஆனால் அவர், "வெளியே பிரகாசித்துக் கொண்டு இருக்கும் சூரியன் கறுப்பாகத்தான் இருக்கிறது. உள்ளே இருக்கும் சூரியனுடன் ஒப்பிட்டால் அது கறுப்பாகத்தான் இருக்கிறது. இது ஓர் ஒப்பிட்டு பார்க்கும் முறையாகும். கபீர் இதை ஒப்புக் கொள்வார்.

கபீர் சொல்கிறார்,

> **நான் உள்ளே இருக்கும் சூரியனை கண்டபொழுது வெளியே இருக்கும் சூரியன் ஒரு கறுப்பான வட்டம் என்பதை அறிந்து கொண்டேன். எனக்குள் இருக்கும் என்னை நான் கண்ட பொழுது, வெளியே இருக்கும் "வாழ்க்கை" மரணமே அன்றி வேறில்லை.**

உள்ளுக்குள் இருக்கும் ஒன்றை நாம் அறிந்து கொண்ட அந்தக் கணமே, வெளியே இருக்கும் நட்சத்திரங்கள் மறைய ஆரம்பிக்கின்றன. இப்பொழுது 'வான் காக்' புரிந்து கொள்ள இயலாத வகையில் பேசுகிறார் - அவர் ஒரு புரிந்துகொள்ள இயலாத ஆன்மிகவாதி, ஆனால் யார் புரிந்து கொள்ளப் போகிறார்கள்? அவரைப் புரிந்து கொள்ள வருடங்கள் பல ஆக வேண்டும். 'வான் காக்' வாழ்ந்தார் - மறைந்தார் - எந்த பாராட்டும் பெறாமலேயே - யாராலும் அறியப்படாமலேயே. அவர் முற்றிலும் தெரிந்து கொள்ளப் படாமலேயே வாழ்ந்து இருக்கிறார்.

அவரது ஓவியங்கள் இன்று மற்ற எந்த ஓவியங்களுடனும் ஒப்பிட முடியாத அளவுக்கு மிகவும் விலை மதிப்பற்றவை.

'பிகாஸோ'வின் ஓவியங்கள் கூட இவ்வளவு உயர்ந்தவையாக இல்லை. கோடிக்கணக்கான டாலர்கள் ஒரே ஓர் ஓவியத்திற்கு விலையாகக் கிடைத்தது. அவரது நாட்களில், அவரது வாழ்நாள் முழுவதிலும் அவரால் ஒரே ஓர் ஓவியத்தைக் கூட விற்க முடியவில்லை. அவர் தனது ஓவியங்களை தன் நண்பர்களிடையே பகிர்ந்து கொடுத்து விடுவார். அல்லது தினமும் காலையில் அவருக்கு ஒரு கோப்பை தேநீர் கொடுப்பவருக்கு கொடுத்து விடுவார். அந்த தேநீர் கடைக்காரர் இவரிடம் தான் கொடுக்கும் தேநீருக்கு காசு பெறுவதில்லை. அதே ஓவியங்கள் இப்பொழுது பல கோடிக்கணக்கான ரூபாய்களுக்கு விற்பைன ஆகின்றன. மக்கள் முதலில் அவற்றை ஒதுங்கித் தள்ளிவிட்டு இருந்தனர். சிலர் மரியாதை நிமித்தமாக அவர் கொடுத்த பொழுது, அவற்றை ஏற்றுக் கொண்டனர். ஏனெனில் அவர்கள் அனைவருமே, அந்த ஓவியங்கள் அவர்களைப் பொறுத்தவரை, அவை பயனற்றவை, வெறும் குப்பைகள், அவற்றை எதற்காக சேர்த்து வைத்துக் கொள்ள வேண்டும்?

'வின்ஸெண்ட் வான் காக்' தற்கொலை செய்து கொண்டார். அவருக்கு அப்பொழுது முப்பத்து மூன்று வயது. அவரால் வாழவே முடியவில்லை. அவரால் ஒரு பைசா கூட சம்பாதிக்க இயல வில்லை. அவரது சகோதரர் அவருக்கு உதவி செய்து வந்தார். அவர் வாழ்வதற்கு அந்தப் பணம் போதுமானதாகவே இருக்கும். ஆனால் அவருக்கு ஓவியங்களை உருவாக்க பணம் தேவைப்பட்டது. சித்திரம் வரையப் பயன்படுத்தப்படும் கனமான துணி, பல்வேறு வர்ணங்கள் ஆகியவற்றை வாங்க பணம் தேவைப்பட்டது. எனவே அவர் இப்படி ஓர் ஏற்பாடு செய்து கொண்டார். வாரத்தின் ஏழு நாட்களில் அவருக்கு ஞாயிற்றுக் கிழமை அன்றே பணம் கிடைக்கும். அந்தப் பணம் அவரது அந்த வார உணவிற்கான பணம். எனவே அவர் வாரத்தில் மூன்று நாட்களே சாப்பிடுவார். மற்ற நான்கு நாட்களும் அவர் உபவாசம் இருந்து விடுவார். ஏனெனில் அப்பொழுது தான் அந்த நாலு நாட்களுக்கு, உணவிற்கு செலவாகும் தொகையைப் பயன்படுத்தி அவர் ஓவியம் வரைய தேவையாக பொருள்களை வாங்க முடியும்.

எனக்கு 'வான் காக்' இருக்கும் உபவாசம், உங்களால் பேசப்படும் பல துறவிகளின் உபவாசங்களை விட தனிச் சிறப்பு வாய்ந்தது என்று தோன்றுகிறது. இந்த உபவாசம் தனக்கு மிகுந்த

அழகை கொண்டு இருக்கிறது. இதில் ஏதோ ஓர் ஆன்மிகம் இருக்கிறது. உங்களது துறவிகள் என்று அழைக்கப்படுபவர்கள் இருக்கும் உபவாஸங்கள் - அது ஒரு வழிமுறை - அவர்கள் ஸ்வர்க்கத்தை சென்றடைய வேண்டும் என்று எண்ணி உபவாஸம் இருக்கிறார்கள். அங்கே சென்று ஸ்வர்க்கத்தின் சுக போகங்களை அனுபவிக்கும் ஆசை இருக்கிறது. ஆனால் 'வான் காக்' உபவாஸம் இருப்பதில் மூன்றிலும் வேறான, ஒரு புதிய குணம், தரம் இருக்கிறது. அதுதான் படைக்க, உருவாக்க அவரிடம் உள்ள அன்பு.

ஆனால் அவர் ஏன் தற்கொலை செய்து கொண்டார்? அவர் தற்கொலை செய்து கொண்டார். அதிலும் வலிமை மிகுந்த ஒரு தனிச்சிறப்பு இருக்கிறது. அது ஒரு சாதாரணமான தற்கொலை அல்ல. உண்மையாகச் சொல்ல வேண்டுமானால் "வான் காக்" போன்ற ஒருவர் எதையும் சாதாரணமாகச் செய்ய முடியாது. அவர் தற்கொலை செய்து கொண்டார். ஏன் எனில், "நான் எதை எல்லாம் ஓவியமாக தீட்ட வேண்டும், என்று நினைத்தேனோ! அதை எல்லாம் தீட்டியாகிவிட்டது. இனிமேல் வாழ்ந்து இருப்பது என்பது பொருளற்றது. நான் எதைக் கொடுப்பதற்காக இங்கு வந்தேனோ, அதைக் கொடுத்தாகி விட்டது. இப்பொழுது நான் எங்கிருந்து வந்தேனோ அதே "நான் தோன்றிய இடத்திற்குத் திரும்பிச் செல்லலாம். இனிமேல் நான் இந்த உடலில் வாழ்ந்து இருக்க வேண்டிய அவசியமில்லை. நான் எனது பங்கை, கொடுத்தாகி விட்டது," என்று அவரே சொல்லி இருக்கிறார்.

பலப்பல வருடங்கள் கடந்து போயின. பின்னர் மெல்ல, மெல்ல அவரைப் பாராட்டத் துவங்கினார்கள். இப்பொழுது அவர் தான் உலக ஓவியர்களில் முதன்மையானவராக போற்றப்படுகிறார்.

மேதைகள் அனைவரது வாழ்க்கையிலும் இப்படித் தான் நடைபெறுகிறது. அவர்கள் வாழும் காலத்தில், அவர்கள் வெறுத்து, ஒதுக்கப்படுவார்கள் - மக்களால் அவர்கள் ஒதுக்கப்படுவார்கள். கூட்டங்களால் அவர்கள் ஒதுக்கப்படுகிறார்கள். பாதிரியார்களால் அவர்கள் ஒதுக்கப்படுகிறார்கள். அரசியல்வாதிகளால் ஒதுக்கப்படுகிறார்கள். அவர்கள் மிகச் சிலரால் மாத்திரமே பாராட்டப்படுகின்றனர் - அறிவுபூர்வமான, வரவேற்கும் மனம் கொண்ட, உணர்வு பூர்வமான - ஒரு சில மக்களால் மாத்திரமே - தங்களது தெரியாத புதிய, இதுவரை நடந்தே இராத ஒன்றை -

கண்டு அறிய முடியும். அவர்களுக்கே இதை எல்லாம் அறிந்து, புரிந்து கொள்ள இயலும். ஒரு சிலரே தங்களது மனதை ஓர் ஓரமாக வைத்து விட்டு, இவை அனைத்தையும் பார்க்கிறார்கள்.

நீங்கள் எதையும் புதுமையாக கற்பனை செய்யும் திறன் கொண்டவர்களாக இருக்க வேண்டும் என்று நான் விரும்புகிறேன். ஆனால், நீங்கள் பாராட்டப்பட வேண்டும் என்று எல்லாம் எதிர் பார்க்காதீர்கள். கவலைப்படாதீர்கள். அதனால் உங்களுக்கு பெயரும், புகழும் கிடைக்குமா என்று எண்ணிக் கவலைப் படாதீர்கள். எப்பொழுது 'புதியதாக உருவாக்கும் திறமையினால் எதையாவது அடைய வேண்டும் என்ற நோக்கம் இருக்குமே யானால் நீங்கள் அதன் பின்னர், அதைப் படைப்பதில் உங்களது ஆர்வத்தையும் அதில் செலுத்த மாட்டீர்கள். நீங்கள் ஒரு தொழில் வல்லுனராக மாறி விடுகிறீர்கள். நீங்கள் இனிமேல் ஒரு கலைஞர் அல்லர். நீங்கள் ஓர் ஓவியம் வரையலாம், அதையும் மிகச் சிறப்பாக வரையலாம். ஓவிய சாஸ்திர முறைப்படி சிறப்பாக வரையலாம், ஆனால் அதில், அதன் ஆன்மா, அந்தக் கலையின் ஆன்மா இருப்பதில்லை. அந்த ஓவியத்திற்கு உயிர் இருக்காது. ஏனெனில் நீங்கள் அங்கே இருக்க மாட்டீர்கள். நீங்கள் எங்கிருந்து பாராட்டுகள் வருகின்றன என்று அறிய உங்களைச் சுற்றிலும் பார்த்துக் கொண்டு இருப்பீர்கள். நீங்கள் எப்பொழுதுமே இதே முறையில் தான் ஓவியம் வரையப்போகிறீர்கள். ஏனெனில் அப்பொழுது தான் அது பாராட்டுப்பெறும்.

மற்ற மக்களுக்கு எதை எல்லாம் கேட்கப் பிடிக்குமோ, அவற்றை மாத்திரமே பேசும் மக்கள் இருக்கிறார்கள். இப்படிப்பட்ட மனிதர்கள், மிகவும் பிரபலமானவர்களாக, அனைவராலும் அறியப்படுபவர்களாகவும், பாராட்டுப் பெறுபவர்களாகவும், மதிக்கப்படுபவர்களாகவும், இருப்பார்கள். ஆனால் அவர்கள் தரம் குறைந்த மனிதர்களாகவே இருப்பார்கள். ஆனால் மேதாவிகள் அவர்களது இதயத்தில் தோன்று விஷயங்களைத்தான் பேசு வார்கள். ஆனால் அவர்கள், தங்கள் பேசுவது மற்றவர்களுக்கு பிடிக்குமா பிடிக்காதா என்பது பற்றி எல்லாம் சற்றும் கவலையே படமாட்டார்கள். அவர் அதை நேருக்கு நேராக, சம்பந்தப்பட்ட வர்களிடம் நேரடியாகவே சொல்லி விடுகிறார்கள். அவர் அதன் முடிவைப் பற்றியோ, பின் விளைவுகளைப் பற்றியோ நினைத்துக் கூட பார்ப்பதில்லை.

நீங்கள் படைக்கும் மனதுடன் இருங்கள். உங்களது படைக்கும் திறன், இந்த பிரபஞ்ச இருப்பிற்கு, அர்ப்பணம் செய்கிறீர்கள். இந்த பிரபஞ்ச இருப்பு உங்களுக்கு பலப்பல பரிசுகளை வழங்கி இருக்கிறது. நீங்கள் மிகுந்த நன்றி உணர்ச்சியுடன் அதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். எதைச் செய்தாலும், அதை எந்த எதிர்ப்பும் இல்லாமல் செய்ய வேண்டும். அதை ஒரு வழி வகையாகச் செய்ய கூடாது. அது ஒரு முடிவானதாக - அதை நோக்கியே செல்ல வேண்டும். கலை கலைக்காகவே இருக்க வேண்டும். படைப்பு என்பது படைப்பிற்காகவே இருக்க வேண்டும். அன்பு செலுத் துங்கள், அன்பிற்காக - பிரார்த்தனை என்பது பிரார்த்தனைக் காகவே. - செய்யப்பட வேண்டும்.

மேலும் இப்படித்தான் ஒருவர் மெதுவாக மிக மெதுவாக மதப்பற்றுள்ளவராக மாறிக் கொண்டு இருக்கிறார். மதப்பற்று உள்ளவன் நிகழ்காலத்தில் இருக்கிறான். அவனுக்கு எதிர் காலத்தைப் பற்றிய கவலை என்பதே இல்லை. ஏன் அடுத்துவரும் நிமிடத்தைப் பற்றிக் கூட அவன் கவலைப்பட மாட்டான். அது வரும் பொழுது, அது வந்தே தீரும். அவன் அதை எதிர்கொள்ள தயாராவதில்லை. அவன் இந்த தருணத்தில் வாழ்கிறான். பின்னர் இந்தத் தருணத்தில் இருந்து, அடுத்த தருணம் பிறக்கிறது. இப்பொழுது இந்தத் தருணம் அழகாக இருக்குமேயானால், இந்தத் தருணம் ஆசீர்வதிக்கப்பட்டதாக இருந்து இருக்குமேயானால், அடுத்த தருணமும் நிச்சயமாக இன்னும் ஆழமான ஆசீர் வாதங்கள் நிறைந்ததாக இருக்கும். இன்னும் அதிக ஆசீர்வாதங்கள்...

நீங்கள் சொல்கிறீர்கள் "நான் முழுமையான தகுதி பெற ஏதாவது செய்ய வேண்டும் என்று நினைக்கிறேன்"

எதையாவது செய்ய வேண்டும் என்ற எண்ணம் ஒருவேளை அளவு கடந்த சக்தியினால் தூண்டப்பட்டு எழுந்த உந்துதலாகக் கூட இருக்கலாம். ஏனெனில் நம்மிடம் அதீதமான சக்தி இருக்கிறது. அந்த சக்திக்கு நடமாட வேண்டும், அந்த சக்திக்கு ஓவியம் தீட்ட வேண்டும் என்று தோன்றும். அந்த சக்திக்கு இசை பாடத் தோன்றும். அந்த சக்திக்கு எதையாவது செய்து கொண்டு இருக்கத் தோன்றும். ஆனால் இது எதனாலும் தூண்டப்பட்டு

தோன்றும் ஓர் எண்ணமல்ல - எனக்கு ஏதாவது தகுதியான ஒன்றை செய்ய வேண்டும் என்று தோன்றுகிறது - இது "இந்த எண்ணம் ஏற்கனவே உங்களுக்குள் தோற்றுவிக்கப்பட்டு இருக்கிறது" - விஞ்ஞானிகள் எவ்வாறு மனிதரின் மூளைக்குள் 'எலக்ட்ரோட்ஸ்' செலுத்தி அவனை தங்கள் உத்தரவுகளுக்கு கீழ்ப்படிய, தங்களது விருப்பம் போல செயலாற்றும்படி செய்வது விடுவார்கள். இப்பொழுது அவனை நம் எண்ணப்படி நடகக்ச் செய்யலாம்.

இந்தச் சமுதாயம் பல காலங்களாக தொடர்ந்து செய்து வந்து கொண்டு இருப்பதைப் போல - அது உங்களுக்குள் நல்லது, கெட்டதுகளை பகுத்து உணரும் அறிவை - சிருஷ்டிக்கிறது. "இதைச் செய், இது சரியானதே, இது ஒப்புக்கொள்ளப்பட்டதே ஆகும். இது மதிக்கப்படும்", என்று உணர்த்துகிறது.

"அதைச் செய்யாதே, அதை நீ செய்யத்தக்கது அல்ல. அதை நீ செய்தால் நீ வெறுத்து ஒதுக்கப்பட்டு விடுவாய்" என்றும் உணர்த்துகிறது. இதனால் உங்களுக்குள் ஒரு பிரிவு ஏற்பட்டது. நல்லது கெட்டது ஆகிய இரண்டிற்கும் இடையே தான் இந்தப் பிரிவு ஏற்படுகிறது - செய்யக் கூடியவை - செய்யக் கூடாதவை என்று இரண்டு பிரிவுகளாகி விடுகிறது. இதில் வரும் பிரச்சினை என்னவென்றால், 'செய்யலாம்' என்பதற்கு குறிப்பிட்டு சொல்லக் கூடிய எந்த விதிமுறையும் கிடையாது. வாழ்க்கை மாறும்பொழுது அதுவும் மாறும். இல்லை, சரி, என்பது எப்பொழுதுமே சரியானது. மேலும் இல்லை, தவறு என்பது என்றுமே தவ்றுதான். எனவே முன் கூட்டியே முடிவு செய்வது ஆபத்தானது. நான் உங்களுக்கு மனசாட்சியை பற்றிக் கற்றுத் தரவில்லை. மனசாட்சி என்பது சரி மற்றும் தவறு ஆகியவை ஏற்கனவே முடிவு செய்யப்பட்ட விஷயங்களைப் போல இது ஒரு ரோஜா மற்றும் அது ஒரு தாமரை. இது ஒரு கல் ஆனால் அது ஒரு வைரம் - இவை அனைத்துமே முடிவு செய்யப்பட்டவை, என்றென்றைக்கும் ஆக முடிவுசெய்யப் பட்டவை. சரி மற்றும் தவறு என்பவை பொருள்கள் அல்ல. அவை மாறும். வாழ்க்கை என்பது நதியைப் போன்ற அசாதாரணமான ஒன்றாகும். இன்று சரி என்பது நாளையும் சரியாக இருக்க வேண்டும் என்பதில்லை.

ஒரு முறை ஒரு ஜான் குரு தனது மாணவனிடம், "கடவுள் என்றால் என்ன?"

அந்த மாணவன் தலைவணங்கி, பின்னர் மௌனமாக இருந்தான். அந்த குரு அவனை ஆசீர்வதித்து, "மிக நல்லது எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது." என்று கூறினார்.

மறுபடியும் அடுத்த நாளும் அந்த குரு, தனது சீடனிடம் மீண்டும் "கடவுள் என்றால் என்ன?" என்று கேட்டார்.

ஆனால் இன்று அவன் நிச்சயமாக இப்பொழுது அவன் கற்றுக் கொண்டு விட்டான். அவன் இப்பொழுது மிகவும் பணிந்து வணங்கினான். அதிகமான மௌனத்தில், தனது கண்களையும் மூடியபடி நின்றான். அந்த குரு அவனது தலையில் ஓங்கி ஓர் அடி அடித்தார். தனது மாணவனை நோக்கி, "நீ ஒரு முட்டாள்", என்று கோபப்பட்டார்.

அந்த சிஷ்யன் திகைத்துப் போய்விட்டான். அவன் தனது குருவை நோக்கி, "என்ன நடந்து விட்டது. நேற்று நீங்கள் மிகவும் மகிழ்ச்சியாக இருந்தீர்கள்! இதே பதிலைத்தானே நான் நேற்றுச் சொன்னேன். ஆனால் இன்று நேற்றை விட மிகச் சிறந்த முறையில் அல்லவா சொன்னேன்?"

இதைக் கேட்ட அந்த குரு, "அங்கே தான் நீ தவறு செய்து விட்டாய். நேற்றைக்கு என்பது நேற்றைக்கு. இன்று என்பது தான் இன்று. நீ ஒரே மாதிரியான தயாரித்து வைக்கப்பட்ட பதிலையே சொல்லிக் கொண்டு இருக்கிறாய்? நீ உண்மையாக நடந்து கொள்ள வில்லை. நீ இயற்கையாக இருக்கவில்லை! பொறுப்புள்ளவனாக நடந்து கொள்ளவில்லை! இப்பொழுது நீ ஒரு தந்திரத்தைக் கற்றுக் கொண்டு விட்டாய். அதே பதில் இன்றைக்கும் எப்படி சரியாக இருக்க முடியும்? இருபத்து நாலு மணி நேரங்கள் கடந்து போய் விட்டன. கங்கையில் இருந்த நீர் எந்த அளவு குறைந்து போய் விட்டது? பிரபஞ்ச இருப்பு என்பது கம்பீரமானது – அது புள்ளி விவரங்களின் தொகுப்பு அல்ல, அது அசையாமல் இருக்கும். சேறுபடிந்த ஒரு குளமல்ல, அது ஒரு தொடர்ந்த, ஒழுக்கு. எந்த ஒரு பதிலும் என்றுமே நிலைத்து இருப்பதில்லை. இங்கு தான் இந்த சமுதாயம் உங்களை ஏமாற்றுகிறது. அது எந்த நல்ல ஒன்றையும் பற்றி, அது உங்களுக்கு நிர்ணயிக்கப்பட்ட பதில்களைத் தருகிறது – அதனால் தான் நாம் அவைகளுடன் உறுதியாக ஒட்டிக் கொள்கிறீர்கள். அவர்கள் உங்களுக்கு ஒரு வகையான நம்பகத் தன்மையையும், பாதுகாப்பையும் அளித்து பாதுகாப்பாளராகவும்

செயல்படுகிறது. நீங்கள் சரியாகத்தான் செய்கிறீர்கள் என்ற நம்பிக்கையுடன் இருக்கலாம்.

ஆனால் வாழ்க்கை மாற்றமடைந்து கொண்டே இருக்கிறது. ஆனால் உங்கள் "சரியானது" என்பது நிலைத்து நிற்கிறது. இதனால் உங்களது முழு வாழ்க்கையும் துன்பமயமானதாக ஆகி விடுகிறது. ஏனெனில் உங்களது பதில்கள் என்றுமே கேள்விகளுடன் பொருந்துவதில்லை. இதனால் உங்களது முழு வாழ்க்கையுமே - வட்டமான துளைகளுக்குள், சதுரமான அடைப்புக் கட்டையை பொருத்த முயற்சிப்பதுபோல் - முயற்சி செய்து கொண்டு இருப்பதிலேயே கழியும். அது மிகவும் எரிச்சலூட்டக் கூடியதாக இருக்கும். ஆனால் அதற்கான காரணம் நீங்கள்வாழ்க்கைக்கு மாறிக் கொண்டே இருக்கிறது என்பதை காணாமல் இருப்பது தான்.

உண்மையான பகுத்தறியும் தன்மை கொண்டவன் வாழ்க்கை யுடன் சேர்ந்து தானும் மாறுகிறான். உண்மையான பகுத்தறிவு கொண்டவன், மாற்றத்தை உணராமல், பழைய எண்ணங்களையே எண்ணிக் கொண்டு இருக்க மாட்டான். தரமற்ற தன்மையின் மனதின் ஒரு பகுதியே, பழமைக்குள்ளேயே உட்பட்டுக் கொண்டு இருந்தால் நான் நன்றாக யோசித்துப் பார்க்காமல், இவை மாறக் கூடியவை என்று சொல்லவில்லை. நான் சாதாரணமாக உண்மைகளையே சொல்கிறேன். இத்தகைய எண்ணத்திலேயே நிலைத்திருப்பது என்பது முட்டாள் தனமானது. அப்படி நிலைத் திருப்பது என்பது கடந்த காலத்திலேயே வாழ்ந்து கொண்டிருப்பது போலாகும். நிகழ்காலம் பற்றிய தெளிவின்றி இருப்பதாகும். நீங்கள் நிகழ்காலத்தில் இருந்து, அதைப் புரிந்து கொண்டால்தான் வாழ்க்கையுடன் இசைவாகி வாழ முடியும்.

நீங்கள் இயேசுவின் கொள்கையையே ஆயிரத்தியோரு காரணங்கள் காட்டி மறுத்தவர்கள். கவுதம புத்தருக்கும் அதுதானே நடந்தது. தெய்விகத் தன்மை கொண்டவர்களுக்கு எப்போதும் இப்படித்தான் நடக்கிறது. தங்கள் பதில்களை அவர்கள் முன்பே தயாரித்து வைத்திருக்கவில்லை. ஆனால் உங்களுக்கோ எதுவும் உடனடியாக வேண்டும், பதில்கள் உட்பட. காரணம், நீங்கள் அதன்மீது விழுந்து அதை இறுகப்பற்றிக் கொண்டு விட விரும்புவீர்கள். அதை நீங்கள் என்றென்றும் நிலைத்திருக்கக் கூடியதாய் எண்ணியிருக்கலாம்.

நீங்கள் உறுதியற்ற தன்மையால் அவதிப்பட்டுக் கொண்டிருக்கிறீர்கள் - மேலும் நிலையற்ற தன்மை என்பது வாழ்வின் இயற்கை. நிலைத்திருத்தல் என்பதன் ஒரு பகுதியே மரணம். 'நாம் மரணமடையப் போகிறோம்' என்பதை உறுதியாய் நம்புங்கள். வாழ்க்கை மாறிக்கொண்டிருப்பது, அத்தகைய மாற்றங்களை ஏற்பவராயிருங்கள். ஆற்று நீர் ஒழுங்கு போன்ற சீர்த்தன்மையுடன், உறுதியற்றவராய், சுற்றுச்சூழலுடன் பொருந்துகிறவராய் இருங்கள். அப்போது வாழ்க்கை முழுமையானதாயிருக்கும்.

முழுமையாக வாழ்ந்து கொண்டிருப்பது என்றால் அந்தக் கணத்தில் வாழ்ந்திருப்பது, கடந்த காலத்தின் குறுக்கீடுகள் எதுவுமின்றி வாழ்வது.

இந்தக் கணத்திற்கு பதிலளிப்பவராயிருங்கள். அந்நிலையில் அதற்கான பதில் உங்களது விழிப்புணர்வில் இருந்து வருகிறது. உங்களது மனசாட்சியில் இருந்து அது வரவில்லை. மனசாட்சி என்பது ஓர் ஏமாற்றும் வேலையாகும். மனசாட்சி என்பது ஒரு சமுதாய தந்திரமாகும். இந்தச் சமுதாயமே அந்த 'மனசாட்சியை' உருவாகி இருக்கிறது. உங்களது குருவின் முக்கிய செயல்பாடு என்பது உங்களது மனசாட்சியை அழிப்பதே ஆகும். ஏன் எனில் அப்பொழுது தான் உங்களது விழிப்புணர்வு விடுதலை பெறும்.

உங்களுக்கு ஏற்படும் குருட்டு தைரியம் என்பது குருட்டு தைரியமல்ல. நீங்கள் ஏமாற்றப்பட்டு இருக்கிறீர்கள். நீங்கள் முழுமையான தகுதி பெறுவதற்கு எதையும் செய்ய வேண்டிய அவசியமில்லை - நீங்கள் ஏற்கனவே முழுமையான தகுதி பெற்றவராக இருக்கிறீர்கள் - நீங்கள் தகுதியற்றவராக இருந்து இருந்தால், நீங்கள் இங்கே இருந்து இருக்கவே முடியாது. பிரபஞ்ச இருப்பு உங்களுக்கு பிறப்பை கொடுத்து இருக்கிறது. உங்களை சிருஷ்டித்து இருக்கிறது. உங்களுக்குள் அது ஏதோ ஒரு தகுதியை கண்டு இருக்க வேண்டும். நீங்கள் தகுதி அற்ற ஒருவராக இருந்தால், 'பிரபஞ்ச சிருஷ்டி' என்பது உண்மையான சிருஷ்டி கர்த்தா அல்ல. அப்படியானால் அது ஒரு சிருஷ்டி கர்த்தாவே அல்ல. அது எப்படி தகுதியற்ற்ற ஒருவனை சிருஷ்டிக்கும்?

இந்த சமுதாயம் என்பது தான் உங்களைத் தகுதியற்றவராக ஆக்குகிறது. ஏனெனில் உங்களை அது விரும்பும்படி பயன்படுத்த அது ஒன்று தான் வழி - உங்களை தகுதியற்றவராக ஆக்குவது?

எண்ணச் செய்வது. அப்பொழுது நீங்கள் தகுதி பெறுவதற்காக மிகவும் அதிகமாக முயற்சி செய்வீர்கள். ஏனெனில் அது ஒன்று தான் சுய மரியாதையை பெற்றுத் தரும். மேலும் தகுதிப் பெறுவதற்காக நீங்கள் சமுதாயத்தின் அனைத்துவித அடக்கு முறைகளையும், பின்பற்றுகிறீர்கள் ஏற்றுக் கொள்வீர்கள்.

சமுதாயம் உங்களுக்குள் அச்சத்தை சிருஷ்டிக்கின்றது. பயம் - தகுதியற்றவராக இருப்பதைக் கண்டு பயம் - வெறுத்து ஒதுக்கப்படுவதைப் பற்றிய பயம், தனியாக விட்டு விடப்படுவதைப் பற்றிய அச்சம் - தான், யாராகவும் இல்லாமல் போய் விடுவோமோ என்ற பயம் - அடையாளம் தெரியாத ஒருவனாகப் போய் விடுமோ என்ற பயம். அதன் பின்னர் நீங்கள் விட்டுக் கொடுக்க தயாராகி விட்டீர்கள். எந்த விதமான முட்டாள் தனங்களுக்கும் - தயாராகி விட்டீர்கள்.

சைமனது பெற்றோர்கள் மிகவும் நம்பிக்கை இழந்து போய் இருந்தனர். அவன் தான் படித்துக் கொண்டு இருந்த கல்விக் கூடத்தில் இருந்து வெளியேற்றப்பட்டு விட்டான். தேர்வில் தோல்வி அடைந்தது தான் அதற்கான காரணம். அவனது பெற்றோர்கள், அவனை நகரில் உள்ள அனைத்து பள்ளிகளிலும் அவனை சேர்த்து, கடுமையாக அவனுக்கு கல்வி அறிவு கொடுக்க முயன்றனர் - தனியார் பள்ளிகள், பொதுவான பள்ளிகள், முன்னேற்றமடைந்து கொண்டு இருக்கும் பள்ளிகள், ராணுவப் பள்ளிகள் - இப்படி பலப்பல பள்ளிகள். ஆனால் சைமனுக்கு எந்த விதமான ஆர்வமும் ஏற்படவே இல்லை. இறுதியாக அவர்கள் ஒரு கத்தோலிக்க கிறிஸ்தவப் பள்ளியில் சேர்த்தனர். சைமன் தனது முதல் தேர்வின் மதிப்பெண் பட்டியலுடன் வீட்டுக்கு வந்து சேர்ந்தவுடன் அவனது பெற்றோர்கள் மிகவும் வியப்படைந்தனர். ஒரு நேரான மதிப்பொண் பட்டியல்: ஒரு நல்ல பட்டியல், "என்ன நடந்தது?" என்று அவர்கள் சைமனிடம் கேட்டனர். இதைக் கேட்ட சைமன், "சரி. நான் சிலுவையில் அறையப்பட்ட அந்த பாவம்! மனிதனை, அங்கெல்லாமே மாட்டி வைத்து இருந்தனர். நான் எங்கே பார்த்தாலும் அந்த காட்சி தான் தெரிந்தது. அப்பொழுது தான் எனக்கு அவர்கள் இதை வியாபாரமாகவே எண்ணி இருக்கிறார்கள் என்பது புரிந்தது.

"அச்சத்தை ஏற்படுத்துங்கள் உங்களால் எவ்வளவு அச்சத்தை ஏற்படுத்த முடியுமோ அவ்வளவு ஏற்படுத்துங்கள்.

அதுதான் இந்த சமூகத்தின் கொள்கை. உங்களை கெட்டியாகப் பிடித்துக் கொள்வதற்காகத் தான் நரகங்கள் உருவாக்கப் பட்டுள்ளன. சமூகம் ஏற்படுத்தி உள்ள அனைத்து வித சட்ட திட்டங்களுக்கும் கீழ்ப்படிபவர்களாக இருப்பவர்களுக்கு பரிசளிப்பதற்காக ஸ்வர்க்கத்தை உருவாக்கினார்கள். இவை அனைத்துமே கற்பனைகள், நரகம் என்ற ஒன்றோ, ஸ்வர்க்கம் என்ற ஒன்றோ உண்மையில் இல்லை. ஆனால் இந்த ஸ்வர்க்கமும், நரகமும், மிக நேர்த்தியான திட்டங்களே ஆகும். ஆயினும் அவை இன்றளவும் செயல் பட்டு வருகிறது. ஆனால் அவை மனித குலத்தின் கௌரவத்தையே முற்றிலுமாக அழித்து விட்டது.

இது உங்களிடம் தோன்றிய 'குருட்டு தைரியம்' அல்ல. உங்களது குருட்டுத் தைரியமும், சமூகத்தால் உங்களிடம் தோற்று விக்கப்பட்ட மனசாட்சியும், ஒன்று சேர்ந்து உங்களைக் குழப்பி விட்டது. குருட்டு தைரியம் என்பது ஏதோ ஒன்றைச் செய்வது. ஆமாம் அதுதான் குருட்டு தைரியம். எப்பொழுது மிக அதிகமான சக்தி இருக்கிறதோ அப்பொழுது தான் எதையாவது செய்ய வேண்டும் என்று மனிதன் எண்ணுவான். அது இயற்கையானது. சக்தி வெளிப்படுத்தப்பட விரும்புகிறது. ஆனால் அது தகுதியான ஒன்றாக வெளிப்படுத்தப்பட விருப்பம் கொண்டு இருக்கிறது. இதுதான் உங்களது மனசாட்சியின் பங்கு. இது தான் உங்களது குருட்டு தைரியத்துடன் சேர்த்து குழம்பிக் கொள்ளப் படுகிறது. இதைப் பற்றிய நல்ல தெளிவுடன் இருங்கள்.

நீங்கள், இந்தச் சமூகத்தால் ஒவ்வொரு வகையிலும் குழப்பட்டு இருக்கிறீர்கள். நீங்கள் யாராவது ஒருவரை சார்ந்து தான் வாழ வேண்டும் என்று நினைக்கும் அளவுக்கு நீங்கள் குழம்பிப் போய் இருக்கிறீர்கள். ஒன்று நீங்கள் பாதிரியாரைப் போய் பார்ப்பீர்கள். பண்டைய காலங்களில் நீங்கள் பாதிரியார்களைத் தான் சென்று பார்ப்பீர்கள். கிழக்கு நாடுகளிலும், இந்தியாவில் இன்றும் அவர்கள் பாதிரியார்களைப் போய் பார்க்கிறார்கள். மேற்கில் இப்பொழுது புதிய பாதிரியார்கள் தோன்றி அவர்கள் தான் மனோதத்துவ முறைகளை பயன்படுத்தி ஒருவருக்கு நரம்புக் கோளாறுகள் மற்றும் மனநலக் கோளாறுகள் ஏதேனும் உள்ளதா என்று கண்டு அறியும் நிபுணர்கள். அவரே மனோதத்துவ நிபுணர் என்று அழைக்கப்படும் மருத்துவர். அவரிடம் செல்லுங்கள்.

இதில் ஓர் அற்புதமான விஷயம் என்ன என்றால் அந்த பாதிரியார் அப்படியே உங்களைப் போலவே தான் இருக்கிறார். ஒருவேளை அவர் உங்களை விட அதிக சிக்கலில் இருக்கலாம். ஆனாலும் நீங்கள் இன்னும் அவரிடம் தான் உபதேசம் பெற போய்க் கொண்டு இருக்கிறீர்கள். ஆமாம்! அவர் ஒரு கிளியைப் போலவே நல்ல பல உபதேசங்களை திரும்ப திரும்பச் சொல்வார். உங்களது மனோதத்துவ மருத்துவக் குழுவினர், உங்களைவிட இன்னும் அதிகமான பதற்றத்துடனும், மன அழுத்தத்துடனும் இருப்பார்கள்.

ஓரிரு நாட்களுக்கு முன் ஓர் இரவில் எனது சன்யாசிகளில் ஒருவர் என்னிடம் வந்து, ஓஷோ! நான் போன முறை இங்கு வந்து இருந்த பொழுது என்னிடம், வாழ்வின் எளிதான பக்கங்களைப் பாருங்கள் ரோஜா மலர்களை எண்ணுங்கள், முட்களை ஒதுக்கி விடுங்கள் முட்கள் இருக்கின்றன. அவற்றைப் பற்றி மனதில் குறித்து வைத்து ஆனால் அவைகளின் மீது அதிகமான கவனம் செலுத்தாதீர்கள். ஆனால் எனது மனோதத்துவ ஆராய்ச்சியாளர், "இது மிகவும் ஆபத்தானது. இது உங்களது எண்ணங்களை கட்டுப் படுத்தத் ஆரம்பிக்கும். இதனால் நான் திகைத்துப் போய் இருக்கிறேன் – நான் என்ன செய்ய வேண்டும்?

நான் அவரிடம்ட, "இன்னும் சில நாட்கள் வரை பொறுத்து இருங்கள். உங்களது மனோதத்துவ நிபுணர் இங்கு வருவார். ஆனால் இந்த சன்யாசியே ஒரு மனோத்துவ ஆராய்ச்சியாளர் என்பது எனக்கு தெரியாது. சற்று நேரம் கழித்து என்னைக் காண வந்த விவேக், என்னிடம், "அந்த் சன்யாசியே ஒரு மனோத்துவ ஆராய்ச்சியாளர் தான் என்பதைச் சொன்னார். இப்பொழுது ஒரு மனோதத்துவ் ஆராய்ச்சியாளர், மற்றொரு மனோத்துவ ஆராய்ச்சியாளரிடம் போய்க் கொண்டு இருக்கிறார். – அது எதற்காக? ஆனால் அந்த மற்றொரு நிபுணரும், வேறு ஒருவரிடம் சென்று கொண்டு இருக்க வேண்டும்.

மனோதத்துவ ஆராய்ச்சியின் நிறுவரை 'சிக்மண்ட் ப்ரியூட்' என்பவர், நீங்கள் கற்பனை கூட செய்து பார்க்க முடியாத ஓர் அசாரணமான நோய்கள் கொண்ட ஒரு நோயாளி மிகவும் மூட நம்பிக்கைகள் கொண்டவர். நீங்கள் அவரது வாழ்க்கைச் சரிதத்தை படித்தீர்களேயானால், இப்படிப்பட்ட ஒரு மூட நம்பிக்கைகள்

கொண்ட ஒரு மனிதர் எப்படி மனோதத்தவ ஆராய்ச்சி இயலை தோற்றுவித்து இருப்பார் என்று எண்ணி நகைக்கத் தான் போகிறீர்கள்! இந்த மனிதர் சொல்லி இருப்பவற்றை எல்லாம் எப்படி உண்மை என்று ஏற்றுக் கொள்ள இயலும்? இப்படிப்பட்ட ஒரு மனிதரை எப்படி நம்ப முடியும்? ஒரு முறை அவரது நண்பர் ஒருவர் அவரிடம் வந்து, ஒவ்வொரு பெண்மணியும், மாதத்தின் இருபத்தியெட்டு நாட்கள் முடிந்ததும் சில கஷ்டமான நாட்களை சந்திக்கிறாள். அதே போல் ஆண்களும் மாதத்திற்கு நான்கு அல்லது ஐந்து நாட்கள் எதிர்மறையான மனநிலையில் இருப்பார்கள். ஆனால் அவனது இத்தகைய தொரு காலகட்டம் வெளியே தெரிவதில்லை. ஆனாலும் அப்படி ஒன்று இருப்பது உண்மைதான். அது ஒரு மனோதத்துவ ரீதியான உண்மை. அப்படி இருப்பது உண்மையாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில் ஆணுக்கும் பெண்ணுக்கும் அதிக வேறுபாடுகள் இல்லை.

எனவே அந்த நண்பனின் எண்ணங்கள் சரியான பாதையில் தான் போய்க்கொண்டு இருக்கின்றன; 'சிக்மண்ட் ப்ராய்டி'ற்கு திடீரென ஒரு புதிய எண்ணம் தோன்றியது. தனது படுத்தபடி இருபத்தி எட்டையும் இருபத்து மூன்றையும் பற்றியே எண்ணக்கொண்டு இருந்தார் - அப்பொழுது திடீரென்று ஓர் எண்ணம் அவரது மனதில் பளிச்சிட்டது. இருபத்தி எட்டை, இருபத்தி மூன்றுடன் சேர்த்தால், ஐம்பத்தி ஒன்று வரும். அதன் பின்னர் அவரால் அன்று இரவு முழுவதும் உறங்க இயலவில்லை. பொழுதுவிடியும் நேரத்தில் அவர் தான் ஐம்பத்தி ஒன்று வருடங்கள் மாத்திரமே இனி வாழப்போகிறோம் என்று முடிவுக்கு வந்து விட்டார். ஒருமிகச் சிறந்த ஒரு குருட்டு நம்பிக்கை ஆகும் அதன் பின்னர் அவர் இருபத்தி எட்டையும், இருபத்து மூன்றையும் பற்றி எல்லோரிடமும் சொல்ல ஆரம்பித்துவிட்டார். இருபத்தி எட்டையும் இருபத்து மூன்றையும் ஒன்று சேர்த்தால், ஐம்பத்தி ஒன்று - ஐம்பத்து ஒன்று வருடங்கள். அதன் பின்னர் அவர் இறந்துவிடுவார்.

அந்த ஐம்பத்து ஒன்றாவது வருடமும் வந்து போயிற்று.... ஆனால் அவர் இன்னும் இறந்து போகவில்லை. எனவே அவர் இப்பொழுது வேறு ஏதாவது ஒன்றைக் கண்டு பிடிக்க வேண்டும். என்று அவர் இறக்கப் போவதாக எண்ணிக் கொண்டு இருந்தாரோ, அன்று அவரது தொலைபேசி எண் மாறி விட்டது. அவரது

தொலைபேசியின் கடைசி எண் அறுபத்து இரண்டு என்று மாறி இருந்தது. உடனே அவர், 'இதோ பாருங்கள்! மற்றொரு அறிவிப்பு வந்து விட்டது. எனவே நான் இனிமேல் அறுபத்த இரண்டாவது வயதில் தான் இறக்கப் போகிறேன்'' என்று சொல்ல ஆரம்பித்தார். ஆனால் அந்த நாளும் வந்து போயின. அவர் எப்பொழுதும் போலவே வாழ்ந்து இருந்தார். ஆனால் ''சிக்மண்ட் பிராய்டு போன்றவர்களைக் கையாளுவது மிகவும் சிரமமான காரியம். அவர்கள் ஏதாவது ஒன்றை புதிது புதிதாக கண்டு பிடித்துக் கொண்டே இருப்பார்கள். ஒரு முறை அவர் தங்கும் விடுதி ஒன்றில் தங்கி இருந்தார். அங்கு அவர் தங்கி இருந்த அறையின் எண் எண்பத்து இரண்டு. எனவே இப்பொழுது அவர், ''இதோ எனக்கு மேலே இருந்து மற்றொரு அறிவிப்பு வந்து விட்டது. எனது எண்பத்து இரண்டாவது வயதில் நான் மரணம் அடையப்போகிறேன் - இது முற்றிலும் நிச்சயமாக நடக்கப் போகிறது'' என்றுகூற ஆரம்பித்து விட்டார். ஆனால் அந்த நாளும் கடந்து விட்டது. அவருக்கு எண்பத்து மூன்று வயது ஆன பின்னர் அவர் மரணமடைந்து விட்டார்.

இப்படிப்பட்ட மூட நம்பிக்கைகள் கொண்ட மனிதர்கள் அவருக்கு மரணம் என்றால் அத்தனை பயம். அதனால் தான் அவர் அதைப்பற்றி அத்தனை கவலைப்பட்டுக் கொண்டு இருந்தார். அவர் தனது வாழ்க்கையில் பொது இடங்களில், யாரோ ஒருவர் மரணத்தைப் பற்றி பேச ஆரம்பித்த உடனேயே மயங்கி விழுந்து இருக்கிறார். இப்படி அவர் ஐந்து முறை மயங்கி விழுந்து இருக்கிறார். அவர் மயக்கமடைந்து நேராக தரையில் மல்லாக்காக விழுந்து விடுவார் - ஏனெனில் அதுதான் மரணத்தைப் பற்றிய அவரது எண்ணம். இப்ப்டிப்பட்ட ஓர் அசாதாரணமான வியாதி உள்ள, நரம்புக் கோளாறு உள்ள ஒரு மனிதர் - மனோதத்துவ இயலை கண்டு அறிந்து அதன் தலைவராக ஆவது....

அவர் தன்னைத் தானே முன்னிலைப் படுத்திக் கொள்வது வழக்கம். அவர் தனக்கு உண்மை என்று தோன்றிய அனைத்தும் மற்ற மனிதர்கள் அனைவருக்குமே உண்மையாக இருக்கும் என்றே எண்ணினால். அது தான் முட்டாள் தனத்தின் எல்லை. அவர் மனிதர்களைப் பற்றி பேசிய எதுவுமே, மனிதர்களைப் பற்றியவை அல்ல - அவை அனைத்துமே 'சிக்மண்ட் பிராய்ட்' என்ற தனி மனிதனைப் பற்றியே ஆகும். 'சிக்மண்ட் பிராய்ட்' ஒரு

தனி மனிதன். அவர் மனிதர்களின் பிரதிநிதி அல்ல. யாருமே என்றுமே மனிதனின் பிரதிநிதியாக முடியும்.

எனவே வெகு சில மக்களே மனோதத்துவ சாஸ்திரங்களால் பயன் அடைகிறார்கள் - மிகக் குறைந்த அளவு மக்களே - நான் இந்த மனோ தத்துவ மருத்துவத்தால் பயன் அடைந்த ஒரு மனிதனைக் கூட நான் இது வரை பார்த்ததே இல்லை. ஆனால் பயன் பெற்ற ஓரிருவரும், 'சிக்மண்ட் பிராய்டை' போன்ற சில மனிதர்களே.

ஆனால் இப்பொழுது பல ஆராய்ச்சிகள் மூலம், இந்த முறைப்படி உதவி பெற்றதாகக் கருதப்படும் அந்த சில மனிதர் களும் இத்தகைய மனோதத்துவ சிகிச்சைகளினால் பயன் பெறவில்லை. ஆனால் அவர்கள் வேறு எதனாலேதான் குண மடைந்து இருக்க வேண்டும்.

ஒரு முறை ஒரு பரிசோதனையில் இருபத்தி ஐந்து பேருக்கு 'சைக்கோ அனாலிஸிஸ்' முறைப்படி சிகிச்சை அளிக்கப்பட்டது. வேறு இருபத்தி ஐந்து பேருக்கு, சிகிச்சை வெகு விரைவில் ஆரம்பமாகி விடும் என்று சொல்லப்பட்டு அவர்களை காத்திருக்க வைத்தனர். இவர்கள் அனைவருமே ஒரே விதமான நோயால் பாதிக்கப்பட்டு இருப்பவர்கள். ஆனால் இந்தப் பரிசோதனையின் முடிவு மிகவும் ஆச்சர்யமாக இருந்தது.

சைக்கோ அனாலிஸிஸ் முறைப்படி சிகிச்சை பெற்றவர்கள் மிக அதிகமான பலன் எதுவும் கிடைக்கவில்லை. ஆனால் காக்க வைக்கப்பட்டு, சிகிச்சை பெறாதவர்கள் நல்ல பலன் அடைந்தனர். சிகிச்சையை எதிர்பார்த்து காத்து இருந்ததே அவர்களுக்கு அதிகமாக உதவியது. இந்த ரகசியம் கிழக்கில் ஏற்கனவே அறியப்பட்டு இருந்தது. இது அங்கு பல நூற்றாண்டுகளாக செயல் படுத்தப்பட்டு வருகிறது. நீங்கள் மனநலம் குறைந்துள்ள ஒரு நோயாளியை, ஒரு ஸென் ஆஸ்ரமத்திற்குள் கொண்டு சென்றீர் களேயானால், அவர்கள் அவனை மூன்று வாரங்கள் தனிமைப் படுத்தி வைத்து விடுவார்கள். அவனுடன் யாருமே பேசுவதில்லை. இது 'சைக்கோ அனாலிஸிஸ்' முறைக்கு நேர்மாறானது. யாரும் அவனுடன் பேசுவதில்லை. அவன் பேசுவதை யாருமே கேட்பதில்லை. அவர்கள் அவனை முழுமையான தனிமையில் வைத்து இருந்தனர். யாராவது ஒருவர் மௌனமாக அவன்

இருக்கும் இடத்திற்குச் சென்று அவனுக்கான உணவை அங்கே வைத்து விட்டு திரும்பி விடுவார்கள். அவன் அங்கு தனிமையில் தானாகவே அற்புதம் நிகழ்ந்தது. இப்படி காலம் காலமாக அற்புதங்கள் நிகழ்ந்து கொண்டு இருக்கின்றன.

அவனை அப்படி முழுமையாகத் தனிமையில் வைப்பதன் மூலம் சிறிது சிறிதாக அவன் அமைதி பெறுகிறான் - மனோ தத்துவம் அது. இது போன்ற எந்த தத்துவமும் அங்கு இல்லை. முற்றிலும் தனிமைப்படுததுதல் - அவன் மனிதர்களால் மிகவும் தொல்லைப்படுத்தப்பட்டான் - ஒரு கூட்டத்தின் நடுவே தொடர்ந்து இருந்ததால் ஏற்பட்ட மன அழுத்தம், சைக்கோ அனாலிஸிஸ் என்பது குணமடைந்தற்கான மூல காரணமாக இருக்க முடியாது - இரண்டு வருங்கள் - மூன்று வருடங்கள் - நான்கு வருடங்கள் - சைக்கோ அனாலிஸிஸ் - தொடருகிறது. உங்களால் எத்தனை காலம் அந்த சிகிச்சைக்குப் பணம் செலவழிக்க இயலுமோ அதுவரை சிகிச்சையும் தொடரும். அது உங்களைப் பொறுத்தது. உங்களிடம் தேவையான அளவு பணம் இருந்தால் அது உங்கள் வாழ்நாள் முழுவதும் இருக்கும். உண்மையாகச் சொல்ல வேண்டுமானால், சைக்கோ அனாலிஸிஸ் எப்பொழுதுமே முடியும் என்ற நிலைக்கு வராது. அது முடிவடையாது. ஏனெனில் மனது கண்டு பிடிக்கும் திறன் கொண்டத. அது மேலும் மேலும் தேவை யற்ற குப்பைகளை உருவாக்கிக் கொண்டே போகும். இதைக் காணும் மனோதத்துவ நிபுணரும் மிகவும் மகிழ்ச்சி அடைகிறார். அவர் மகிழ்ச்சி அடைவதைக் கண்டு, அது இன்னும் வளருகிறது.

ஒரு மனோதத்துவவாதியின் தேவைகள் என்னவோ, நோயாளிகள் நிறைவேற்றிக் கொடுக்கிறார்கள். நோயாளிகள் உண்மையாகவே பொறுமை மிக்கவர்களாகவே இருக்கிறார்கள். எதையும் தயங்காமல் கொடுப்பார்கள். அதனால் தான் அவர்கள் துன்பப்படுகிறார்கள். அவர்கள் கடினமான மக்கள் அல்ல. கடினமான மக்கள் தான் மற்றவர்களை மற்றவர்களுக்கு துன்பம் ஏற்படுத்துவார்களோ தவிர தாங்கள் என்றுமே துன்பமடைய மாட்டார்கள். மென்மையான மனிதர்கள் அவர்களிடம் சிக்கிக் கொள்கிறார்கள். மூன்று அல்லது நாலு வருடங்கள் ஒரு மூலையில் படுத்தபடி, முட்டாள் தனமாகப் பேசிக் கொண்டு காத்துக் காத்து - அது ஒருவருக்கு, நடந்த அனைத்தையும் மறக்கச் செய்கின்றன. அப்பொழுது அவனது மனம் அமைதி அடைகிறது. மேலும்

நீங்கள் பேசுவதை யாராவது கேட்டுக் கொண்டு இருந்தால், மிக மிக கவனமாக கேட்டுக் கொண்டு இருந்தால், அல்லது கேட்டுக் கொண்டு இருப்பது போல நடந்தால், அது பெரும் பயனைத் தரும்.

நான் கூர்ந்து கவனித்து கொண்டு இருந்ததில், ஒரு 'சைக்கோதெராபிஸ்ட்'டின் முழு கவனமும் நோயாளிகளின் மீது செலுத்தப்பட்டால் அது மிகவும் பயனுள்ளதாக, மதிப்புள்ளதாக இருக்கும். இந்த உலகம் யாருக்கும் எந்த விதமான ஒரு தனி கவனத்தையும் செலுத்தி அக்கறை காட்டுவதில்லை. ஒரு கணவனுக்குத் தன் மனைவியிடம் பேச வேண்டுமென்றால் அதற்கு அவனது மனைவி, "இப்பொழுது சமையல் அறையில் அதிக அளவு வேலை இருக்கிறது. பாத்திரங்களை எல்லாம் கழுவி வைக்க வேண்டும். எனக்குச் சற்றும் நேரமில்லை. அதே போல் மனைவிக்கு தன் கணவனிடம் பேச வேண்டுமானால், அவனுக்கு மிகவும் அவதியாக இருக்கிறது. அலுவலகத்தில் வேலைப்பளு, போக்குவரத்து நெரிசல் இப்படிப் பல காரணங்களால் மிகவும் அசதியாக இருக்கிறான். மேலும் அவன் டி.வி. பார்க்க வேண்டும்.

அமெரிக்காவில் நடந்த கணக்கெடுப்பில், ஒரு கணவனும் மனைவியும் ஒரு நாளைக்கு சுமார் முப்பத்து மூன்று நிமிட நேரங்களே ஒருவருக்கு ஒருவர் பேசிக் கொள்ள முடியும் என்று கண்டு அறிந்து இருக்கிறாாகள். அது தான் அவர்களது சராசரியான நேரம். மேலும் அந்த முப்பத்து மூன்று நிமிடங்களில் தான் நீங்கள் சண்டைபோட்டுக் கொள்ளுவதால், தலையணைகளை ஒருவர் மீது வீசி எறிவது, பல்வேறு பிரச்சினைகளை சொல்லிப் புலம்பி கொண்டு இருப்பது, போன்ற வேலைகளைச் செய்து முடிக்க வேண்டும். ஒரு நாளின் இருபத்தி நாலு மணி நேரங்களில் முப்பத்தி மூன்று நிமிடங்கள் மாத்திரமே. அங்கு வாழும் தம்பதிகள் ஒருவருக்கொருவர் சந்திக்கவே முடியும். நீங்கள் பேசுவதைக் கேட்க யாராவது தேவை என்ற மிகுந்த தேவை ஏற்பட்டு இருக்கிறது. இதற்கு ஒரு "சைக்கோதெராபிஸ்ட்" பயன்படுகிறார் - அவர் ஒரு கேட்பதையே தொழிலாகக் கொண்ட மனிதர். அவரிடம் இருக்கும் ஒரே தகுதி அது ஒன்று தான், அவரிடம் இருக்கும் ஒரு, ஒரே ஒரு திறமை அது மாத்திரமே தான். நீங்கள் ஒரு தொழிலை இப்பொழுதே ஆரம்பிக்கலாம். இந்தத் தொழிலுக்கு வேறு எந்த விதமான தகுதிகளும் தேவையே இல்லை. ஒரே ஒரு விஷயம் மாத்திரமே தெரிந்து இருந்தால்

போதுமானது. உங்களுடன் பேசிக் கொண்டு இருப்பவரின் அருகில் அமர்ந்தபடி அவர் பேசுவது அனைத்தையும் மிகவும் அமைதியாகக் கேட்டுக் கொண்டு இருக்க வேண்டும். மிக கவனமாகக் கேட்டுக் கொண்டு இருக்க வேண்டும். அப்படி மிகுந்த கவனத்துடன் கேட்பது இங்கு உதவும். உங்களிடம் பேசிக் கொண்டு இருக்கும் நபர், "எனக்கு ஏதோ ஒரு திறமை இருக்கிறது. நானும் யாரோவாக இருக்கிறேன்..." மேலும் அவர் எந்த அளவுக்கு உங்களுக்கு பணம் கொடுக்கிறாரோ, அந்த அளவுக்கு அதுவும் உதவுகிறது. ஏனெனில் தான் பேசுவதைக் கேட்டுக் கொண்டு இருப்பவர் சாதாரணமான ஒரு 'சைக்கோ தெராபிஸ்ட்' அல்லர். அவர் அந்தத் தொழிலில் இருக்கும் மற்றவர்களைப் போல் ஒருவர் அல்ல இவர்.... இவர் மிகுந்த பெருமை வாய்ந்தவர். மிகச் சிறப்பானவர், முக்கியத்துவம் வாய்ந்தவர், பிரபலமானவர் உலகப் புகழ் பெற்றவர் – ஆயினும் நான் பேசுவதை மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டு இருக்கிறார்? "இந்த ஓர் எண்ணமே தகுதியை ஏற்படுத்தி விடுகிறது?" அப்படியானால் அளவற்ற அழகான எதையோ தான் பேசிக் கொண்டு இருக்கிறேன்...

அவர் பேசிக் கொண்டு இருப்பது பொருளில்லாத பலவற்றைப் பற்றியே இருந்தாலும், அதுதான் 'சைக்கோ - பேபிள்' என்பதில். 'சுதந்திரமான ஒரு கூட்டுறவு' என்று அழைக்கப்படுகிறது – உங்கள் மனதிற்குள் என்ன தோன்றுகிறதோ, அதை மேலே கொண்டு வந்து விடுங்கள் – இப்படிப்பட்ட சிறுபிள்ளைத் தனமான ஒலிகளை எல்லாம் – மிகவும் கவனத்துடன் கேட்கப்பட்டால், ஒரு மிகச் சிறந்த தேவை நிறைவு பெறுகிறது. அவன் தான் தகுதி வாய்ந்தவன் என்று மகிழ்கிறான். அவன் தான் முக்கியத்துவம் பெற்று இருப்பதாக உணர்கிறேன். அவன் தான் 'யாரோ'வாக இருப்பதாக நினைக்கிறான்.

நினைவில் கொள்ளுங்கள்! இந்த சமுதாயம் உங்களை மிகவும் அதிகமாக குழப்பி இருக்கிறது. எந்த அளவுக்கு என்றால், ஒரு மனிதன், ஏறக்குறைய பைத்தியக்காரனான மாற்றக் கூடிய அளவு. மனிதன் ஏறக்குறைய அந்த நிலையின் ஆரம்ப எல்லையில் இருக்கிறான். அனைத்து அன்பும் மறைந்து விட்டது. அனைவருடனும் அனைவித தொடர்புகளும் மறைந்து போய் விட்டன. எல்லா நட்புகளும் மறைந்து போய் விட்டன. மென்மையான அன்னத்து உணர்வுகளும் மறைந்து போய் விட்டன. மக்கள்

ஆப்பிரிக்கக் காடுகளில் வாழும் மலைப் பாம்புகளைப் போல் மாறி விட்டார்கள். அவை ஒன்றுக்கொன்று பேசிக் கொள்கின்றனர். ஆனாலும் அவை பேசிக்கொள்வதில்லை. ஒருவருக்கொருவர் சந்தித்துக் கொள்வதில்லை.

இந்த சமுதாயம் நோயுற்று இருக்கிறது. சமுதாயம் என்று நான் இங்கு குறிப்பிடுவது, இந்த உலகில் இன்று நிலை நிற்கும் அனைத்து சமுதாயங்களையும், சேர்த்து தான் சொல்கிறேன். சுருக்கமாகச் சொல்லப் போனால், இந்தப் பக்கமாகவோ - அல்லது அந்தப் பக்கமாகவோ அவர்கள் நோயுற்று இருக்கிறார்கள். ஏனெனில் நாம் கடந்த பலப்பல நூற்றாண்டுகளாக, நாம் அவர்களது மனதில், 'உதராண புருஷனாக' ஒரு தவறான மனிதனை, உருவாக்கி விட்டு விட்டோம். நாம் மக்களுக்கு முடிவான குறிக்கோளாக, "நீங்கள் இந்த எடுத்துக்காட்டுகளை பின்பற்றி, இவைகளை நிறைவேற்றாவிடில் நீங்கள் தகுதியுள்ளவராக ஆக மாட்டீர்கள்" என்று சொல்லி, சில லட்சியங்களையும் அவர்களிடம் சொல்கிறோம். அவை எதுவுமே நிறைவேற்ற இயலாதவை களாகவே இருக்கும். நாம் மக்களுக்கு, முழுமையான, குறை இல்லாதவர்களாக இருப்பதற்குச் சொல்லிக் கொடுக்கிறோம். ஆனால் இந்த முழுமையான குறையற்ற இந்த எண்ணம் ஒருவனுக்குள் இறங்கி விட்டால், அதுவே அவனை ஒரு நரம்புக் கோளாறுள்ள மனிதனாக மாற்றி விடும்.

உங்களது எல்லைகளை ஒப்புக் கொள்ளுங்கள். உங்களது அனைத்து குறைகளையும் ஒப்புக் கொள்ளுங்கள். அதுதான் உண்மையான ஒரு மனிதன் என்பதற்கான அடையாளம், வழிமுறை. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே உங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளுங்கள். வேறு வழி இன்றி அதைச் செய்யாதீர்கள். ஏனெனில் பிரபஞ்ச இருப்பு உங்களை ஏற்றுக் கொள்கிறது. உங்களை நீங்களே ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களிடம் நீங்களே அன்பு செலுத்துங்கள். உங்கள் மீதே உங்களுக்கு அன்பு பொங்கி எழட்டும். அப்பொழுது தான் அந்த அன்பினால் நீங்கள் புதியதாக எதையும் சிந்தித்துப் படைக்கும், படைப்பாளியாக மாறுகிறீர்கள். எந்த ஒரு மனிதன் தன்னை நேசிக்கிறானோ அவன் ஒரு நிச்சயமாக ஒரு படைப் பாளியாக மாறியே தீர வேண்டும். நான் அவர் பிரபலமடைவார் என்று சொல்லவில்லை. நான் அவர் ஒரு 'பிக்காஸோ' ஆகவோ

அல்லது ஒரு "எஸ்ராபௌண்ட்" ஆகவோ அல்லது ஒரு "பேப்லே நெரூடா" ஆகவோ, ஆகப் போகிறார் என்று சொல்ல வில்லை... இல்லை - அவர் ஒருவேளை அப்படி ஆகலாம், அல்லது ஆகாமலும் போகலாம். ஆனால் அது இங்கு தேவை யற்றது. முக்கியமற்றது. உண்மையான நோக்கம் என்பது இங்கு படைத்தலை ரசித்தலே ஆகும். நீங்கள் எதை எல்லாம் செய்தாலும் அதை எல்லாமே மகிழ்ச்சியுடன் செய்யுங்கள். உங்களது அனைத்து 'அறிவாற்றலையும்' நீங்கள் செய்யும் வேலையில் முழுமையாக ஈடுபடுத்துங்கள். நீங்கள் செய்வதையே தியானமாக எண்ணி செயல்படுங்கள்.

நீங்கள், "கடவுள் உனக்குள் இருக்கிறார் என்று சொல்கிறீர்கள். நான் எனக்குள் ஏதோ ஒரு கோட்பாட்டைத் தேடிக் கொண்டு இருக்கிறேன் என்பதை நான் உணருகிறேன். அந்த கோட்பாட்டை நான் வெளியில் இருந்து பெற்றேன். அதை எனக்குள் தேடிக் கொண்டு இருக்கிறேன்," என்று சொல்கிறீர்கள்.

நீங்கள் தேடிக் கொண்டு இருக்கும் அத்தகைய கடவுளை நீங்கள் உங்களுக்குள் காணவே முடியாது. உங்களுக்கு வெளி உலகில் இருந்து கிடைத்த அனைத்து கோட்பாடுகளையும் உதறித் தள்ளி விடுங்கள். மனதில் இருந்து வெளியேற்றி விடுங்கள். ஏனெனில் கடவுள் என்பவர் ஒரு மனிதன் அல்ல. கடவுளின் படங்கள் எதுவும் இல்லை. அவர் பார்த்து செய்த சிற்பங்கள், என்பவை இருக்கவே முடியாது. இறைவன் என்பது ஓர் அனுபவம். உங்களது பெற்றோர்களாலும், உங்களது சமூகத்தாராலும், உங்களுக்கு அடையாளம் காட்டப்பட்ட இறைவனை தேடி உள்ளே சென்றீர்களேயானால், அந்த எண்ணமே உங்களது தேடுதலுக்கு இடைஞ்சலாக இருக்கும் - அது உங்களை உங்களுக்குள் இருக்கும் அந்த உண்மையான ஒன்றை, காண விடாமல் தடுக்கும். அப்படி உங்களுக்குள் இந்த ஒன்றுதான் தெய்விகத் தன்மை. அதைக் காண்பதற்கு எந்த விதமான கேட்பாடுகளும் தேவை இல்லை. கோட்பாடுகள் உங்களை குருடர்களாக ஆக்குகின்றன. அனைத்து கோட்பாடுகளையும் உதறி விடுங்கள்.

நீங்கள் உண்மையாகவே உள்ளே சென்று பார்க்க வேண்டும் என்று விரும்பினால், நீங்கள் இந்த உலகைப் படைத்த அந்த பிரபஞ்ச இருப்பைப் பற்றி எதுவுமே அறியாதவராக இருங்கள்.

இந்த வார்த்தை மிக அழகான ஒரு வார்த்தை. நீங்கள் 'எல்லாம் அறிந்த ஒருவர்' என்ற வார்த்தையை நீங்கள் கேள்விப் பட்டு இருப்பீர்கள். எதையும் அறியாதவர் என்றால், தனக்கு எதுவுமே தெரியாது என்பதைத் தவிர வேறு எதுவுமே தெரியாதவர் என்று பொருள். எனவே நீங்கள் 'எதுவுமே தெரியாதவராகவே' இருங்கள். அது தான் உண்மையான மதத்தின் ஆரம்பம்.

நீங்கள் நம்பிக்கை கொள்ள வேண்டாம். அவநம்பிக்கையும் கொள்ள வேண்டாம். நீங்கள் ஓர் இந்துவாக இருக்காதீர்கள், நீங்கள் ஒரு ஜைனராக இருக்காதீர்கள், மேலும் நீங்கள் ஒரு கிறிஸ்தவராக இருக்காதீர்கள். இல்லாவிடில் இருட்டில் தட்டுத்தடுமாறி நடந்து கொண்டிருப்பீர்கள், என்றும் என்றென்றும்... நீங்கள், எண்ணங்களை உருவாக்கும் விஞ்ஞானம், மற்றும் தத்துவங்கள் ஆகிய அனைத்தையும் விட்டு விடும் வரை, அனைத்து மதங்கள், எண்ணங்களின் தோற்றம் பற்றிய முறைகள், இப்படிப்பட்ட அனைத்தையும் முழுவதுமாக விட்டு விட்டு, எதுவுமே இன்றி, வெறுங் கையுடன், எதைப் பற்றிய எண்ணங்களும் இன்றி.... உங்களுக்குக் கடவுளைப் பற்றி என்ன எண்ணம் இருக்க முடியும்? நீங்கள் இதுவரை அவரை அறிந்து இருக்கவில்லை. செல்லுங்கள்... அவரை அறிந்து கொள்ள வேண்டும் என்ற பேராவலுடன் முன்னேறிச் செல்லுங்கள் - ஆனால் அறிவாற்றலைப் பற்றிய எந்த எண்ணமும் இல்லாமல், ஆனால் அறிந்து கொள்ள வேண்டும் என்ற தீவிரமான எண்ணத்துடன், அறிந்து கொள்ள வேண்டும் என்று கட்டுப்படுத்த முடியாத அன்புடன், அங்கே என்ன இருக்கிறது என்று அறியும் எண்ணத்துடன் உள்ளே செல்லுங்கள்... மற்றவர்களிடமிருந்து உங்களுக்குக் கிடைத்த எந்த ஓர் எண்ணத் தையும், உங்களுடன் எடுத்துச் செல்லாதீர்கள்! அவற்றை வெளியே போட்டு விடுங்கள். சத்தியத்தை தேடிக் கொண்டு இருக்கும் ஓர் உண்மையான தேடுதல் உள்ளவனுக்கு இவை எல்லாமே, அவனை முன்னேற விடாமல் தடுக்கும் தடுப்புச் சுவர்களாகும்.

கடவுள் இருக்கிறார். ஆனால் உங்களால் பார்க்க இயலாது. ஏன் எனில் உங்களுக்குக் கடவுளைப் பற்றி கொடுக்கப்பட்டுள்ள கருத்துகள், உங்களது கண்களை பார்வை இழக்க செய்து விட்டன. இறைவன் என்பவர் ஒரு யூதர் அல்ல. எனவே நீங்கள் யூதர்களது கருத்துகளுடன் கடவுளைத் தேடினால் அவரை நீங்கள் எங்குமே காண முடியாது. நான் 'ஸுபி' வகையைச் சார்ந்த, அபூர்வ சக்தி

வாய்ந்த ஓர் ஆன்மிகவாதியைப் பற்றிய மிக அழகான ஒரு கதையை கேட்டு இருக்கிறேன். அவரது பெயர் 'பாரிட்' என்பதாகும்.

ஒரு நாள் இரவு 'பாரிட்' அல்லாவின் கருணையினால் ஒரு கனவு கண்டார். அந்தக் கனவில் அவர் அல்லாவின் கருணை யினால் அவர் ஸ்வர்க்க லோகத்திற்குச் சென்றடைந்தார். அப்பொழுது ஸ்வர்க்க லோகம் முழுவதுமே மிக மிக அழகாக அலங்கரிக்கப்பட்டு இருந்தது. கோடிக் கணக்கான விளக்குகள், மற்றும் மலர் மாலைகளால் அலங்கரிப்பட்டு இருந்தது. எங்கு நோக்கினும் மலர்களும், தீப அலங்காரங்களாலும் காணப்பட்டன – ஏதோ கொண்டாட்டம் நடந்து கொண்டு இருந்தது – மிகச் சிறந்த பாடல்கள் இசைக்கப் பட்டுக் கொண்டு இருந்தன. "பாரிட்" இங்கு என்ன நடந்து கொண்டு இருக்கிறது?" என்று விசாரித்தார். அங்கிருந்தவர்கள், "இன்று இறைவனின் பிறந்த நாள். நாங்கள் அதைக் கொண்டாடிக் கொண்டு இருக்கிறோம். நீங்கள் சரியான நேரத்தில் தான் இங்கே வந்து இருக்கிறீர்கள்!" என்று கூறினார்கள்.

எனவே அவர் அங்கிருந்த ஒரு மரத்தின் அடியில் நின்று கொண்டு, என்ன நடக்கப்போகிறது என்று பார்த்துக் கொண்டு இருந்தார். ஏனெனில் அப்பொழுது அங்கிருந்த சாலையில் ஒரு மிகப் பெரிய ஊர்வலம் மெதுவாக நகர்ந்து போய்க் கொண்டு இருந்தது. ஒரு குதிரையில் அமர்ந்தபடியே அந்த ஊர்வலத்தின் முன்னே சென்றார். இதைக் கண்ட "பாரிட்" "யார் இவர்?" என்று கேட்க, அங்கிருந்தவர்கள், "என்ன! உனக்கு அவரைத் தெரி யாதா?" என்று கேட்டுவிட்டு, அவர் தான் "ஹஸரத் – மொஹம்மது" என்று பதிலளித்தனர். அதன் பின்னர் அவருக்குப் பின்னர் கோடிக் கணக்கான மக்கள் சென்று கொண்டு இருந்தனர். இதைக் கண்டு, "இவர்கள் எல்லாம் யார்?" என்று கேட்க, "அவர்கள் எல்லோரும் முகமதியர்கள், "ஹஸரத் முகமத்தை" பின்பற்றுவர்கள்" என்று பதில் வந்தது. அதன் பின்னர் இயேசு கிறிஸ்து வந்தார் – அவருடனும் கோடிக்கணக்கான பக்தர்கள் பின் தொடர்ந்து வந்தனர். அதன் பின்னர் ஸ்ரீ கிருஷ்ணர் வந்தார். அவர் தனது தங்க ரதத்தில் வந்தார் – அவரைத் தொடர்ந்தும் கோடிக் கணக்கான பக்தர்கள் பலர் சென்று கொண்டு இருந்தனர். இப்படி ஒன்றன்பின் ஒன்றாக பலப்பல ஊர்வலங்கள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்து சென்று கொண்டு இருந்தன.

அதன் பின்னர் இறுதியாக ஒரு வயதான மனிதர், ஒரு வயதான கழுதையின் மீது வந்து கொண்டு இருந்தார். அவருக்குப் பின்னால் யாருமே வந்து கொண்டு இருக்கவில்லை. அவர் தனியாக வந்து கொண்டு இருந்தார்.

'பாரிட்' சிரிக்க ஆரம்பித்தார் - அந்த முதியவரைப் பார்த்து அவருக்கு அந்தக் காட்சி மிகவும் வேடிக்கையாக இருந்தது. அவரைப் பின் தொடர்ந்து யாருமே செல்லவில்லை. பின் அவர் எதற்காகத் தன் கழுதையில் போய்க் கொண்டு இருக்கிறார்?"

எனவே நேராக அவரிடம் சென்று, "ஐயா! நீங்கள் யார்? நீங்கள் ஏன் நான் முகமதைப் பார்த்தேன்! யேசு கிறிஸ்துவைப் பார்த்தேன், ஸ்ரீ கிருஷ்ணரைப் பார்த்தேன்! மஹாவீரர் மற்றும் புத்தரையும் பார்த்தேன்! நீங்கள் யார்? எனக்கு நீங்கள் ஒரு வகையான நகைப்புக்குரியவராகக் காட்சி அளிக்கிறீர்கள்! மேலும் யாருமே உங்களைப் பின் தொடர்ந்து வரவில்லையே!" என்று கேட்டார்...

அதற்கு மிகச் சோகமாக இருந்த அந்த மனிதர், "ஆம்! நான் தான் கடவுள். இது என்னுடைய பிறந்த நாள். ஆனால் சிலர் முகமதியர்களாகவும், சிலர் கிறிஸ்தவர்களாகவும், சிலர் யூதர்களாகவும், சிலர் இந்துக்களாகவும் மாறி விட்டார்கள். என்னுடன் இருக்க யாருமே விட்டு வைக்கப்படவில்லை.

எதிர்பாராத அதிர்ச்சியினால் 'பாரிட்' விழித்தெழுந்தார். மறு நாள் காலையில் அவர் தன் சிஷ்யர்களிடம், "இன்று முதல் நான் ஒரு முகமதியன் அல்லன். நான் கண்ட கனவு எனக்கு மிகச் சிறந்த ஓர் உண்மையை வெளிப்படுத்தியது. இன்று முதல் நான் எந்த ஒரு வடிவமைக்கப்பட்ட மதத்தின், அங்கத்தினனாகவும் இருக்க மாட்டேன். நான் நானாகவே இருக்க விரும்புகிறேன். நான் கடவுளுடன் இருக்கவே விரும்புகிறேன். நான் ஒருவனாவது அவரை பின் பற்றுபவனாக இருக்க விரும்புகிறேன்."

உங்களுக்குக் கடவுளைப் பற்றிய தனியான கருத்துகள் இருந்தால், உங்களால் அதைப் பார்க்க இயலாது. உங்களது அந்த எண்ணமே இதற்கான தடைக் கல்லாகும். நீங்கள் உங்களை அறியாமலேயே சேகரித்து வைத்து இருக்கும் எல்லா எண்ணங் களையும் விட்டு விடுங்கள் - வெளியிலேயே அப்பொழுது தான் நீங்கள் போக முடியும் - உள்ளே.

நீங்கள் சொல்கிறீர்கள், "அது இரவு நேரத்தில் கிணற்றுக்குள் எட்டிப் பார்ப்பதைப் போன்றது. எனக்குப் பிரதிபலிப்புகள் தான் தெரிகின்றன. மேலும் நான் அது கிணற்றின் அடிப்பகுதி என்று நினைக்கிறேன் - ஆனால் அது அதன் மேற்புறம். எனக்குத் தெரியும் எனக்குத் தோன்றினாலும், நான் சிறிது நேரம் காத்து இருந்தால் போதுமானது. - எதையாவது தேடிக் கொண்டு இருப்பதை விட..."

உண்மை, நீங்கள் அத்தகைய உள்நோக்குடனேயே ஒட்டிக் கொண்டு இருங்கள். நீங்கள் எதையாவது தேடிக் கொண்டு இருக்கிறீர்களேயானால் உங்களுக்கு - அது தெரியாது. ஏனெனில் நீங்கள் எதையோ தேடுகிறீர்கள் என்றால், நீங்கள் தேடிக் கொண்டு இருக்கும் பொருளைப்பற்றி உங்களுக்கு ஏதோ ஓரளவு தெரியும் என்று எண்ணுகிறீர்கள். அதாவது குருட்டுத் தனமாக எதையோ தேடிக் கொண்டு இருக்கிறீர்கள்.

நீங்கள் தனிப்பட்ட முறையில் எதையு தேடாமல் இருந்தால் தான், காணுதல் நிகழ்கிறது. நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். திறந்த மனதுடன் - நீங்கள் இருப்பீர்கள். எனவே அங்கே இருப்பது எதுவாக இருப்பது எதுவாக இருந்தாலும் அது வெளிப்படுகிறது. நீங்கள் தெய்விகத் தன்மையைத் தேடாதீர்கள். நீங்கள் அதைக் காண விரும்பினால் - பொறுமையாக இருங்கள்- காத்து இருங்கள் என்பது ஒரு "நிகழ்வது" ஆகும். நீங்கள் மௌனமாக, திறந்த மனதுடன், உங்களது இருப்பின் மீது நீங்களே அன்பு செலுத்திய படி, மனசாட்சியுடன் இருந்தால், அது நடக்கப் போகிறது. நீங்கள் பிரபஞ்ச இருப்புடன், நீங்கள் முறையில் இணைந்து இருந்து இருந்தால், அது நடந்தே தீரும்.

தெய்விகத் தன்மை என்பது இருக்கிறது. நீங்கள் இருக் கிறீர்கள். இதைத் தான் நான் உங்களுக்குக் கற்றுக் கொடுக்கிறேன். சரியான ஒருங்கிணைப்பு. ஒரே ஒரு முறை நீங்கள் பிரபஞ்ச இருப்பும் உங்களது கொள்கைகளை தூக்கி எறிந்து விட்டு ஒருங்கிணைந்தால் அது தான் பேரானந்தம். நீங்கள் உங்களுடைய வீட்டிற்கே திரும்பி வந்து விட்டீர்கள்.

***இரண்டாம் கேள்வி:***

***ஓஷோ, நான் சன்யாசத்தை ஏற்றுக் கொள்வதற்கான நேரம் வந்து விட்டதா?***

ஏற்கனவே காலம் கடந்து விட்டது. நீங்கள் ஏற்கனவே பல காலமாக காத்துக் கொண்டு இருக்கிறீர்கள். எனக்கு உங்களைப் பல வருடங்களாகத் தெரியும்! உங்களுக்கு என்னையும் பல வருடங் களாக தெரியும். நீங்கள் எதற்காகக் காத்துக் கொண்டு இருக்கிறீர் கள்? இப்பொழுது நீங்கள் துறவியாக மாறி இருக்க வேண்டும்! ஆனால் நீங்கள் இப்பொழுது தான் கேட்டுக் கொண்டு இருக் கிறீர்கள்! நான் சன்யாசி ஆவதற்கான நேரமும் நெருங்கி விட்டது.

என்ன நீங்கள் இறந்து போய் விட்டீர்களா? உங்களுக்குள் உயிர் என்ற ஒன்று இருந்தால், இது தான் சரியான நேரம். இப் பொழுது நான் அதற்கான நேரம்! கபீரை நினைவில் கொள் ளுங்கள். ஒரு சில நாட்களுக்கு முன்னால் கபீர், "இப்பொழுது எழுந்திரு - இப்பொழுது எழுந்திரு - இங்கேயே எழுந்திரு. நாட்களைக் கடத்தாதே-" என்று சொன்னார்.

பிராங்கன் சாலையில் வண்டியை ஓட்டியபடி சென்று கொண்டு இருந்தான். அவனது கார் இங்கும் அங்குமாக அலைமோதியபடி போக்குவரத்து நெரிசலில் இருந்து வெளியே வந்தது. அவன் ஆற்றின் குறுக்கே அமைந்து இருந்த பாறைப் பள்ளங்களுக்கு நடுவில் ஊறுகாய் போல் சிக்கி இருந்தான். "நீ எங்கே போவதாக எண்ணிக் கொண்டு இருக்கிறாய்? என்று கேட்டான். இறுதியாக தடுத்து வண்டியை நிறுத்திய காவல் துறை அதிகாரி, "நான் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டு இருக்கிறேன். ஒரு புது வருடத்திற்கு முன்னர் நடக்கும் விருந்தில் இருந்து."

"நீ என்ன விளையாடுகிறாயா?" என்று கேட்டார் போலீஸ் அதிகாரி. புது வருடம் மூன்று வாரங்களுக்கு முன்பே முடிந்து விட்டது. "அதனால் தான் நான் இப்பொழுது வீடு திரும்ப முடிவு செய்தேன்."

இன்னும் வீடு வந்து சேர்வதற்கான நேரம் வரவில்லையா? நீங்கள் ஏற்கனவே நீண்ட காலமாக காத்து இருக்கிறீர்கள். பலப் பல ஜென்மங்களாக காத்துக் கொண்டு இருக்கிறீர்கள்! சன்யசம் என்பது உண்மையை அறிய வேண்டி, தேடுதலில் சென்று குதிப்பதே ஆகும். நான் எங்கிருந்து வந்தோம் என்பதை உணர்ச்சி பூர்வமாகக் கண்டு அறிவதே சன்யாசம் ஆகும். நாம் எங்கே போய்க் கொண்டு இருக்கிறோம் என்பதையும் நாம் யார் என்று அறிவதுமே. சன்யாசம். சன்யாசம் என்பது இவை எல்லாம் தான்.

ஆனால் நீங்கள் ஏதோ ஒரு வகையான தூக்கத்தில் இருப்பது போல் தோன்றுகிறது. மற்றவர்களும் அது போலவேதான் இருக் கிறார்கள். இந்த உலக வாழ்க்கைக் கனவுகள் தான் இப்பொழுதும் உங்களுக்கு முக்கியமாகத் தோன்றுகின்றன. எனவே தான் இந்தக் கேள்வி எழுந்தது. இந்த உலகு இப்பொழுதும் உங்களுக்குப் போதையூட்டுகிறது. பணம், அதிகாரம், கௌரவம் இவை அனைத்துமே நிழல் போல் உங்களைத் தொடர்ந்து வந்து கொண்டே இருக்கின்றன. நீங்கள் உலகினால் முழுமையாக பரிதவித்து போகும் வரை நீங்கள் ஒரு துறவியாக முடியாது. நன்றாக நினைவில் கொள்ளுங்கள் - நான் உங்களுக்கு உலக வாழ்க்கையில் இருந்து தப்பிச் செல்லும் வழியை கற்றுத் தர வில்லை. நான் உங்களுக்கு மெய் மறந்து இருக்கும் நிலையை கற்றுத் தருகிறேன். தப்பிச் செல்லுவதற்கு அல்ல. இந்த உலகில் இருங்கள். ஆனால் நீங்கள் அதனுடையதாகி விடாதீர்கள். "சன்யாசி என்பவர் உலகில் வாழ்ந்து கொண்டு இருந்தாலும் ஆனால் தியானமயமாக வாழ்ந்து கொண்டு இருக்கிறார். மேலும் தியானம் என்பது அனைத்தில் இருந்தும் ஒரு தூரத்தை ஏற்படுத்தித் தருகிறது. பின்னர் நீங்கள் எல்லாவிதமான வேலைகளையும் செய்து கொண்டே வாழலாம். ஆனால் அந்த வேலைகளால் மயங்கிப் போய் விடாதீர்கள். அவைகளுடன் நீ அடையாளம் காட்டப்படாமல் இரு. முற்றிலுமாக விழிப்புணர்வு அடைந்த நிலையில் எந்த விதமான போதைகளும் இல்லாமல் - அதாவது பணம் அதிகாம், கௌரவம் இவைகளுடன் எந்தவித தொடர்பும் இல்லாமல் இருப்பதே சன்னியாசமாகும்.

நீங்கள் பலமுறை பல அடிகளை எடுத்து வைத்து இருப் பீர்கள். பலப்பல முறைகள், நீங்கள் மீண்டும் மீண்டும் பலமுறை விழுந்து இருப்பீர்கள். உங்களுக்கு துயரமும் தவிப்பும் ஏற்பட வில்லையா? உங்களுக்கு இன்னும் உலகப்பற்று விடவில்லையா? நீங்கள் இன்னும் உங்கள் இதயத்தின் ஆழத்தில் ஒரு சிறு நம்பிக்கையை வைத்துக் கொண்டு இருக்கவில்லையா? இன்னும், இந்த உலகம் உங்களுக்குப் பெரியதாக எதையோ அளிக்கப் போகிறது என்று எதிர்பார்த்துக் கொண்டு இருக்கிறீர்களா? அப்படி ஒன்று இதுவரை நடந்ததே இல்லை. இதுவரை யாருக்குமே அப்படி நடந்தது இல்லை. உங்களுக்கும் அப்படி நடக்கப் போவது இல்லை.

வாழ்க்கை அனைத்தையும் தருவதாக வாக்களிக்கும். ஆனால் அது என்றுமே தான் சொன்னபடி செய்வதே இல்லை. அதுதான் வாழ்க்கையின் கற்பனைகள். அதனால் தான் கிழக்கில் நாங்கள் இதனை மாயை என்று அழைக்கிறோம். மாயா என்றால் அது அங்கே இல்லை என்று பொருள் அல்ல. மாயா என்றால் - அது அங்கே நிச்சயமாக இருக்கிறது. ஆனால் வாழ்க்கை வாக்களிக்கும். ஆனால் அது எதையுமே தராது.

நான் ஒரு கதையைக் கேட்டு இருக்கிறேன்.

ஒரு மனிதன் பல வருடங்களாக இறைவனை பூஜித்து வந்தான். அவன் கடவுளை எந்த அளவு சித்திரவதை செய்ய முடியுமோ அந்த அளவு சித்திரவதை செய்து இருக்க வேண்டும். காலையில், மதியத்தில், மாலையில் இப்படி அனைத்து நேரங்களிலும் அவன் பிரார்த்தனை செய்து கொண்டும், அழுது கொண்டும், தேம்பித் தேம்பி அழுது கொண்டும் பிரார்த்தனையி லேயே ஈடுபட்டு இருந்தான். இறுதியாக இறைவன் அவன் முன் தோன்றி தரிசனம் அளிக்க வேண்டியதாயிற்று. தரிசனம் அளித்த அவர் “உனக்கு என்ன வேண்டும்? அனைத்தையும் கேட்டுவிடு! அவற்றை எடுத்துக் கொண்டு என்னை மன்னித்து விடு. மறந்து விடு. என்னைப்பற்றி முற்றிலுமாக மறந்து விடு.”

உடனே அந்த மனிதன், “எனக்கு சில விஷயங்கள் வேண்டும் ஒரு சக்தி. ஏனெனில் நான் எதை வேண்டும் என்று நினைத்தாலும் அது உடனே நிறைவேற்றப்பட வேண்டும்”...

எனவே கடவுள் அவனுக்கு ஒரு பெட்டியை - தங்கத்தினால் ஆன ஒரு பெட்டியை - மந்திரப் பெட்டியை போலவே இருக்கும் ஒரு பெட்டியைக் கொடுத்தார். “நீ கேட்ட அதே மந்திரப் பெட்டியை நான் இப்பொழுது உனக்குக் கொடுத்து இருக்கிறேன் இனிமேல் உனக்கு என்ன வேண்டுமானாலும் நீ இந்தப் பெட்டியைக் கேள். அது உனக்கு அனைத்தையும் கொடுத்து விடும்.

பெட்டியை கையில் பெற்ற அந்த கணமே அவன் கடவுளை மறந்து விட்டான். அவருக்கு நன்றி சொல்லக் கூட மறந்து விட்டான். கடவுளும் சற்று நேரம் பொறுத்துப் பார்த்தார். ஆனால் அதன் பின்னர் அந்த மனிதனுக்கு கடவுளின் நினைவே எழ வில்லை. அவன் பெட்டியைப் பார்த்தபடியே இருந்தான். அவன் பெட்டியை நோக்கி, “எனக்கு பத்தாயிரம் ரூபாய்கள் கொடு” என்று

கேட்டான். உடனே அந்தப் பெட்டியில் பத்தாயிரம் ரூபாய்கள் தோன்றின. அவன் மிகவும் மகிழ்ச்சி அடைந்தான்.

பல நாட்கள் இப்படியே கழிந்தன. அவனுக்கு எது தேவைப்பட்டாலும் அவன் பெட்டியிடம் வந்து கேட்பான். பெட்டியும் அவன் கேட்டதைக் கொடுத்து விடும்.

அப்பொழுது ஒரு நாள் - ஒரு சாது அலைந்து திரிந்து கொண்டு இருக்கும் ஒரு துறவி. அந்த மனிதனின் வீட்டிற்கு வந்து அவனுடன் தங்கினான். அந்த துறவியிடமும் அவனிடம் இருந்ததைப் போலவே ஒரு பெட்டி இருந்தது. அந்தப் பெட்டி தன்னிடம் இருக்கும், கடவுள் தந்த பெட்டியைப் போலவே இந்தப் பெட்டி இருப்பது கண்டு மிகவும் அடைந்தான் அந்த மனிதன். "இது என்ன? என்று அந்தத் துறவியிடம் கேட்டான். அதற்கு அந்த சாது, "இது ஒரு மந்திரப் பெட்டி. நாம் எதைக் கேட்டாலும், அதை இரண்டு மடங்காகக் கொடுக்கும்" என்று பதிலளிக்க, இதைக் கேட்ட அந்த மனிதன் அந்தத் துறவியின் கால்களில் விழுந்து வணங்கி, "ஐயா! நீங்களோ ஒரு துறவி. இந்த உலகைத் துறந்தவர். என்னிடமும் இதே போன்ற, ஆனால ஒரு சிறிய பெட்டி இருக் கிறது. அந்தப் பெட்டி நாம் கேட்பதை மாத்திரமே, கொடுக்கிறது. நாம் ஏன் நமது பெட்டிகளை மாற்றிக் கொள்ளக் கூடாது?" என்று கேட்டான்.

எனவே அவர்கள் தங்களிடம் இருந்த பெட்டிகளை மாற்றிக் கொண்டனர். அது நடு இரவு ஆகி இருந்தது. எனவே அவன் "காலையில் எழுந்ததும் இந்தப் பெட்டியை சோதனை செய்து பார்த்து விடலாம்"....

அடுத்த நாள் காலையில் எழுந்ததும், நேராக அந்தப் பெட்டியிடம் சென்று தனக்கு பத்தாயிரம் ரூபாய்கள் வேண்டும் என்று கேட்டான். அதற்கு அந்தப் பெட்டி, "ஏன் இருபதாயிரம் ரூபாய்களாக இருக்கக் கூடாது?" என்று கேட்டது.

அப்பொழுது அந்த மனிதன், "அப்படியானால் சரி, இருபதாயிரம் என்று ஒப்புக் கொண்டான். உடனே அந்தப் பெட்டி, "ஏன் நாற்பதாயிரமாக இருக்கக் கூடாது?" என்று கேட்டது.

அந்த மனிதன் உடனே, "சரி, நாற்பதாயிரம்!...

உடனே பெட்டிக் கேட்டது, "ஏன் எண்பதாயிரமாக இருக்கக் கூடாது? இதைக் கேட்டதும் அந்த மனிதன் பயந்தே போனான்.

ஏன் எனில் பெட்டியில் இருந்து எதுவும் வரவில்லை. அவன் உடனே அந்தக் துறவியைத் தேடி ஓடினான். ஆனால் அந்தத் துறவி அந்த இடத்தில் இல்லை. அவர் இரவிலேயே போய் விட்டு இருந்தார்.

கிழக்கில் நாங்கள் இந்த உலகை "மாயா" கற்பனை என்று அழைக்கிறோம். அது அந்தத் துறவியின் பெட்டியைப் போன்றது. நீங்கள் எதைக் கேட்டாலும் அது, "சரி! நீங்கள் இரண்டு இரண்டு மடங்காகப் பெற்றுக் கொள்ளுங்கள்" என்று சொல்கிறதே தவிர, அது எதையுமே கொடுப்பதில்லை. அது தருவதாக வாக்களிக் கிறதே தவிர தருவதில்லை.

இந்த உலகம் ஓர் அரசியல் வாதியைப் போன்றது. அவர்கள் வாக்களிப்பார்கள். ஆனால், எதையும் கொடுப்பதில்லை.

உங்களது ஆசைகள் இன்னும் நிறைவேறவில்லையா? ஒவ்வொரு முறையும் என்ன நடக்கிறது என்பதை நீங்கள் காணவில்லையா? எப்போதுமே நீங்கள் கற்பனையிலேயே இருந்து கொண்டிருப்பவரா? வெறும் நம்பிக்கையும், கனவுகளு மாய். ஆனால் அந்தக் கற்பனைகள் விரைவில் கலைந்து போகிறவை. அதனுடன் மனதின் சீற்றமும், தவிப்பும் எழுகின்றன. ஆனால் உண்மையை, நடைமுறையை உணர்ந்தறிவதை விட்டு நீங்கள் வேறொரு கற்பனைக்குத் தாவி விடுகிறீர்கள்.

சந்நியாசம் என்பது உலகின் மெய்ம்மையை உணர்ந்து கொள்வது. அதாவது இந்த உலகம் எதையும் நிறைவேற்றாது. அதனால் நிறைவேற்றவும் முடியாது. நிறைவேற்றுவதென்பது அதன் சக்திக்கு அப்பாற்பட்டது.

ஒருவன் வீடு வீடாகச் சென்று யாசிக்கிற – யாசித்துப் பிழைக் கிற யாசகனாக இருக்கிறான். ஒருவன் தனக்குள் பார்க்கும் போது அந்த யாசகன் மறைந்து போகிறான். ஒருவன் சக்ரவர்த்தியாகிறான். அதன் பிறகு அனைத்துமே அவனுடையதாகிறது.

இந்தப் பிரபஞ்ச இருப்பே உங்களுடையது. அதன் முழுமை யான அழகும், அற்புதமும், மேன்மையும், அதன் நட்சத்திரமயமான இரவுகளும், அதன் சூரிய அஸ்தமனமும் உதயமும், அதன் பறவைகளும், மலர்களும் இவை எல்லாமும் உங்களுக்காகத்தான். அதன் அர்த்தம் சகலமும் உங்களுக்கு மட்டுமே சொந்தமாகும் என்பதல்ல. ஆனால் அவைகள் அனைத்தையும் நீங்கள் ரசிக்கலாம். ரசித்து ஆனந்தம் அடையலாம் என்றே பொருள்.

ஒரு துறவிக்கு ரசிக்க மட்டுமே தெரியும். அதை மாத்திரமே அறிந்து வைத்து இருக்கிறார். ஆனால் உலகியல் வாழ்க்கையில் இருப்பவனோ எதையும் உரிமையாக்கிக் கொள்ளவே கற்றுக் கொள்கிறான். இந்த இரண்டு விஷயங்களையும் நினைவில் நிறுத்திக் கொள்ளுங்கள். இவை அடிப்படையான விஷயங்கள்: உலகியல் மனிதன் இன்னும் அதிகமாக சொந்தமாக்கிக் கொள்வது எப்படி என்ற ஒரே சிந்தனையில் இருக்கிறான் - அவனால் எதையும் ரசிக்கவோ, மகிழவோ இயலவே இயலாது. ஏனெனில் அவன் எண்ணமெல்லாம் இன்னும் அதிகமாக சொந்தமாக்கிக் கொள்வது? எப்படி? இன்னும்! இன்னும்! அதிகமாக! என்பதிலேயே நிலைத்து இருக்கிறது. ஆனால் துறவியோ ரசித்து மகிழ்கிறார் - அவரிடம் என்ன இருக்கிறதோ அதை வைத்தே அவர் சந்தோஷமாக இருக்கிறார் - எனவே அவர் பிரபஞ்ச இருப்பு முழுவதையும் ரசித்து மகிழ்கிறார் - அதை அவர் சொந்தமாக்கிக் கொள்ளத் தேவை இல்லை.

இந்த நட்சத்திரங்கள் ஒளி சிந்தும் இரவை, நீங்கள் சொந்த மாக்கிக் கொள்ள வேண்டும் என்று நினைக்கிறீர்களா? என்று முதலில் நினைத்துப் பாருங்கள்! நீங்கள் இந்தப் பறவைகளை முதலில் சொந்தமாக்கிக் கொள்ளலாம், அதன் பின்னர் நீங்கள் அவைகளின் இசையை ரசிக்கலாம் என்று எண்ணுகிறீர்களா? பிரபஞ்ச இருப்பை சொந்தமாக்கிக் கொள்ள வேண்டும் என்பதில்லை. ஆனாலும் நீங்கள் அதை ரசித்து மகிழலாம். உங்களுக்கு அரை ரசித்து மகிழ வேண்டுமானால், அது உங்களுடையது தான். ஆனால் நீங்கள் அதைச் சொந்மாக்கிக் கொள்ள வேண்டும் என்று விரும்பினால், அது உங்களுடையது அல்ல. சொந்தமாக்கிக் கொள்வது என்பது முரட்டுத்தனமான ஒன்றாகும். அது பிரபஞ்ச இருப்பை, முரட்டுத்தனமாக அபகரிக்கும் முயற்சியாகும். அதை ரசித்து மகிழ்வதே, பிரார்த்தனை செய்வதற்கு ஒப்பாகும்.

***இறுதிக் கேள்வி: ஓஷோ! இறுதியான தீர்ப்பு வழங்கும் நாளன்று, நீங்கள் என்னை அடையாளம் கண்டு கொள்வீர்களா?***

அதெல்லாம் உங்களைப் பொறுத்து இருக்கிறது. ஆரஞ்சு வர்ண உடையுடனும், கையில் ஜப மாலையுடனும் இருங்கள். ஏனெனில் அப்படி இல்லை என்றால், உங்களை அடையாளம் கண்டு கொள்வது என்பது கடினமாக இருக்கும். இந்த உலகில் வாழ்ந்து இருந்த அனைத்து ஆண்களையும், அனைத்துப்

பெண்களையும் எண்ணிப்பாருங்கள். அவர்கள் அனைவருமே அங்கே இருப்பார்கள். மக்களை அடையாளம் கண்டு கொள்வது மிகவும் கஷ்டமாகத்தான் இருக்கப் போகிறது. எனவே நான் சொன்னதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்.

ஒரு பயந்த சுபாவம் கொண்ட, திருமணமாகா, பாரம்பரிய கலாச்சாரத்தை கடை பிடிப்பனாக வாழ்ந்து வந்த ஒரு கடைக் காரனுக்கு திடீர் என்று ஒரு புதையல் கிடைத்தது. ஒரே இரவில் இந்த அமைதியே உருவான, அந்தச் சிறிய மனிதன், அவனால் பயன்படுத்தக் கூடிய அளவை விட மிக அதிகமான அளவு பணம் அவனிடம் இருந்தது.

அவன் தைரியமாக தனது விரல்களை சொடுக்கி விட்டுக் கொண்டான். தனது கால்களில் பின்பக்கத்தை ஓரிரு முறை உதறி விட்டுக் கொண்டான். அதன் பின் அவன் தான் ஒரு பெரிய மனிதனாக வேண்டும் என்று முடிவு செய்தான். எனவே விலை மிகுந்த, நாகரிகமான உடைகளை வாங்கினான். தலைமுடியை புது விதமாக மாற்றி அமைக்கச் செய்தான். பிறகு, மிகப் பிரம்மாண்டமான ஒரு கடற்கரை பங்களா ஒன்றை வாடகைக்கு எடுத்துக் கொண்டு அங்கே தங்க ஆரம்பித்தான். தனது மேனியை சற்று நிறம் மாறச் செய்தான்... இளம் கறுப்பாக...

புதியதாக தான் வாங்கிய ‘ரேல்ஸ்ராய்ஸ்’ காரை, அதை வாங்கிய கடையிலிருந்து ஓட்டிக் கொண்டு வந்து கொண்டி இருந்தான் அந்த இளைஞன். விலை உயர்ந்த கறுப்புக் கண்ணாடி, அணிந்தபடி, விளையாட்டு வீரர்களை போன்ற உடை அணிந்த வனாக வண்டியை ஓட்டிக் கொண்டு இருந்த அவன்மீது திடீரென்று மின்னலால் தாக்கப்பட்டு, அந்த இடத்திலேயே இறந்து விட்டான் - அதே இடத்தில் - ப்ளோரிடா நகரின் சூரியனில் - இறக்கச் செய்யும் அளவு சக்தி வாய்ந்த - இடியுடன் கூடிய மின்னல்...

மேலுலகில் இருக்கும் ‘பியர்லிகேட்ஸ்’ என்ற இடத்தின் உள்ளே சென்றதும், அங்கிருந்த புனித பீட்டரைக் கண்டதும் அவரிடம் கோபமாகச் சொன்னான்; ‘நீங்கள் என்னைத் தேர்ந்தெடுத்தது எதற்காக? என் வாழ்நாள் முழுக்க ஒரு நல்ல மனிதனாகவே நான் வாழ்ந்தேன். இறைவன் எப்போதும் என்னையே கவனித்திருந்தார்’ என்றான்.

அதைக் கேட்ட புனித பீட்டர், 'அவர் உன்னைக் கவனிக்க முயற்சித்துக் கொண்டிருந்தது உண்மைதான். ஆனால், உம்மை அவரால் அடையாளம் கண்டு கொள்ள முடியவில்லை' என்று விளக்கமளித்தார்.

எனவே, ஒன்றை மட்டும் நினைவில் வைத்திருங்கள். நீங்கள் நிச்சயமாக ஆரஞ்சு வர்ண உடையுடனும், கையில் ஜபமாலை யுடனும் இருங்கள். அப்பொழுதுதான் உங்களை நான் அறிந்து கொள்ள முடியும்.

'ஆனால், நீங்கள் எதற்காக இறுதி நாள் வரை காத்திருக்க வேண்டும்? நான் உங்களுக்கு உடனடியாகக் கிடைக்கப் போவதைக் கற்றுத் தருகிறேன்' என்கிறேன். நீங்களோ இறுதித் தீர்ப்பைக் கேட்கிறீர்கள். உண்மையில் இறுதிநாள் என்பதாய் எதுவும் இல்லை. இந்த உலகம் தோன்றவும், அழிவதும் இல்லை. அது என்றுமே தொடர்ந்து கொண்டிருக்கிற ஒன்றாகும்.

இரண்டாவதாக -

இந்தத் தீர்ப்பு என்கிற வார்த்தையே மிகவும் மோசமான ஒரு வார்த்தையாகும். இறைவன் ஒரு நீதிபதியல்ல. அவர் அன்பே உருவானவர் - அன்பே உருவான ஒருவர் நீதிபதியாக இருக்க முடியாது.

இயேசு நாதர் ஒரு முறை தனது சீடர் ஒருவரிடம், 'நான் உன்னை எடைபோட முடியாது' என்று கூறியிருக்கிறார். நீங்கள் ஒரு மனிதனை எடை போட ஆரம்பித்தால் அந்த மனிதனை அழிக்க ஆரம்பிக்கிறீர்கள் என்றாகி விடும்.

ஒருவரை எடை போட நீங்கள் யார்? எடை போட முனைந்ததுமே, ஒப்பிட்டுப் பார்க்கவும் முனைவீர்கள். ஒப்பீடு செய்வதற்கு நீங்கள் யார்?

ஒவ்வொரு தனிநபரும் ஒப்பற்றவர்தான். ஒவ்வொருவருமே பிரபஞ்ச இருப்புக்கு பல்வேறு வகையானவைகளைக் கொண்டு வருகிறார். இந்த உலகில் எங்கும் துறவிகள், துறவிகள் என்றே இருந்து விட்டால் உலகம் சிறந்ததாகி விடுமா என்ன? அப்படி எங்குமே துறவிகளாக இருந்து விட்டால், அதைவிட உலகில் சலிப்பூட்டக் கூடியது வேறு எதுவுமில்லை. பாவிகளும் தங்கள் பங்களிப்பை உலகிற்கு வழங்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பிரபஞ்ச இருப்பிற்குக் கொஞ்சம் உப்பு சேர்த்து சுவையூட்டு கிறார்கள். வாழ்க்கையை சுவாரசியப்படுத்துகிறார்கள்.

கடவுள் என்பவர் ஒன்றும் நீதிபதியல்ல. அவர் ஓர் அன்புத் திருவுரு. அன்பு எப்படி ஒருவரை எடை போட முடியும்? நீங்கள் ஒன்றில் உறுதியாயிருங்கள் - அவரது கண்களுக்கு பாவியும், புனிதரும், துறவியும் வேறு வேறானவர்களால் தெரியாது. எல்லாரும் ஒரே மாதிரிதான் தெரிவார்கள். அவர் தரம் பிரித்துப் பார்ப்பதில்லை.

பிரபஞ்ச இருப்பில் எல்லாருமே நல்லவர்கள் எல்லாருமே தவறானவர்கள், அனைத்துமே சரியானவை அனைத்துமே சரியில்லாதவை. தத்துவங்களும், எண்ணங்களும் மனிதனால் தோற்று வித்துக் கொள்ளப்படுகிறவை.

மேலும், ஒவ்வொரு சமூதாயமும் நல்லது கெட்டது பற்றி யெல்லாம் தங்களுக்கென்று தனித்தனி கருத்துக்களை உருவாக்கி வைத்திருக்கின்றன. அவை மாறிக் கொண்டே இருக்கும். இவைகள் எல்லாமே பயன்படுத்தப்படுபவை. நினைவில் வைத்துக் கொண்டு இருங்கள். ஒரு சமூகத்திற்கு தவறாக தோன்றும் ஒன்று மற்றொரு சமூகத்திற்கு தவறாக, பாவமாக தோன்றாது. அதே விஷயம் மற்றொரு சமூகத்தினரால் மிகவும் ஒழுக்கமானதாக கருதப்படும். இதே எண்ணம் வேறொரு சமூகத்தினரால் இதற்கு நேர்மாறாக எண்ணுவார்கள்.

ஒரு மனிதன் ஒரு சாட்டையால் தன்னைத் தானே, அடித்துக் கொண்டு தன் உடம்பிலேயே ரத்தம் வரும் அளவுக்குத் தன்னைத் தானே துன்புறுத்திக் கொள்ளும் ஒருவனை நீங்கள் சன்யாசி என்று அழைப்பீர்களா, அல்லது பாவி என்று அழைப்பீர்களா? அது சந்தர்ப்ப சூழ்நிலைகளைப் பொறுத்தது. கிறிஸ்தவ மதத்தின் ஒரு பிரிவில் எந்த ஒரு மனிதன், சாட்டையால் தனது உடலில் தானே அடித்துக் கொண்டு ரத்தம் வரும்படி செய்ய வேண்டும், அப்படி செய்பவன் ஒரு புனிதராக கருதப்படுவான். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமான ரத்தத்தை வரவழைக்கிறானே - அவனே மிகப் பெரிய துறவியாக கருதப்படுகிறான்.

இங்கே கற்பனைகள், எண்ணங்கள் என பலவகையான கருத்துகள் இருக்கின்றன. ஆனால் அனைத்து சிந்தனைகளுமே மனித மனதின் கற்பனைக்குத் தோன்றிய எண்ணங்களே ஆகும். இதற்காக கவலைப்படாதீர்கள். சின்ன சின்ன விஷயங்களுக்காக கவலைப்படும் மக்கள் பலர் இருக்கிறார்கள். அவர்கள்

கவலைப்படுவதற்காகவே படைக்கப்பட்டு இருக்கின்றான். ஒரு சிலர் புகை பிடிக்கிறாகள் ஆனால் தங்களை நரகத்தில் தள்ளி விடுவார்களோ என்ற பயம் அவர்களுக்கு இருக்கிறது. நீங்கள் மிக அதிகமாகப் புகை பிடித்தால், ஒன்று மட்டும் நிச்சயம். உங்களை நிச்சயம் நரகத்திற்கு அனுப்பமாட்டார்கள். ஏனெனில் அங்கே ஏற்கனவே நிறைய புகை இருக்கிறது. மேலும் ஏற்கனவே நீங்களே உங்களை நரகத்தில் தள்ளி இருக்கிறீர்கள். புகைப்பிடிப்பது என்பது உங்கள் உடல் நலத்திற்கு தீங்கு செய்யலாம். ஆனாலும் அது ஒரு பாவமல்ல. புகை பிடித்ததற்காக உங்களை நரகத்தில் தூக்கி எறிய மாட்டார்கள். ஆனால் ஒரு சிலர் தேநீர் அருந்துதைக் கூட பெரிய பாவமாகக் கருதுகிறார்கள்..... மஹாத்மா காந்தியின் ஆஸ்ரமத்தில் தேநீர் அருந்துவதும் பாவமாக கருதப்படுகிறது. நீங்கள் அங்கு தேநீர் அருந்தும் பொழுது கையும் களவும் ஆக பிடிபட்டால், அதைப்பற்றி அங்கு பல விதமான சர்ச்சைகள் நடக்கும். ஒரு வேளை மஹாத்மா காந்தி மூன்று நாள் உண்ணாவிரதம் இருந்து இருப்பார். தனது ஆன்மாவை தூய்மைப் படுத்துவதற்காகவும், தனது சீடர்களின் ஆன்மாக்களையும் தூய்மை பெற செய்வதற்காகவும் அவர் நிச்சயமாக உபவாசம் இருந்து இருப்பார். ஏனெனில் மக்கள் அனைவருமே தேநீர் அருந்துகிறார்கள்.

ஆனால் பௌத்தத் துறவிகள் காலம் காலமாக தேநீர் அருந்தி வருகிறார்கள். தேநீர் என்பது அவர்களது தியானத்தின் ஒரு பகுதி – ஏன் எனில் தேநீர் இருக்கும் சில பொருள்களை வெகு நேரம் வரை தூங்க விடாமல் தடுக்கும். அது தியானத்திற்கு மிகவும் உதவியாக இருக்கும். நீங்கள் விழிப்புணர்வுடன் இருக்க விரும்பினால் தேநீர் அருந்துவது உங்களுக்கு உதவும்.

உண்மையாகவே தேநீர் என்பது பௌத்த சன்யாசிகளால் தான் கண்டு பிடிக்கப்பட்டது. இது அவர்களது கண்டு பிடிப்பே ஆகும். ஏனெனில் இது சைனாவில் இருக்கும் 'தா' என்ற பௌத்த மடத்தில் தான் முதல் முதலில் தேநீர் கண்டு பிடிக்கப்பட்டது. அதனால் தான் தேநீரை அவர்கள் 'டீ' (tea) என்று அழைக்கப் படுகிறார்கள். இந்த 'தா' என்பதை 'ச்சா' (cha) என்றும் சொல்ல லாம். அதனால் தான் இது மராத்தியில் 'சா' என்றும் ஹிந்தியில் 'சாய்' என்றும் அழைக்கப்படுகிறது. ஆனால் இது 'தா' என்ற ஆஸ்ரமத்தில் தான் தோன்றியது.

மேலும் இந்தத் தேயிலைச் செடியைக் கண்டுபிடித்து, முதலில் அதை பயிரிட்டு வளர்த்தவர், வேறு யாருமல்லர், மிக சிறந்த 'போதி தர்மா'வே ஆவார். மிகவும் புகழ் பெற்ற "போதி தர்மா" அந்தக் கதை மிகவும் அழகானது.

ஒரு நாள் போதி தர்மன் தியானம்செய்து கொண்டு இருந்தார். இப்படித் தியானம் செய்பவர்கள் எப்பொழுதோ ஒரு முறை தான் தோன்றுவார்கள். அவர் ஒன்பது நீண்ட வருடங்கள் அவர் தன் எதிரில் இருந்த சுவரையே பார்த்தபடி, தியானத்தில் மூழ்கி இருந்தார். வெறும் சுவர் - ஒன்பது வருடங்களாக அதையே தொடர்ந்து, அந்த வெற்றுச் சுவரையே பார்த்தபடி வேறு எதுவுமே செய்யாமல்.... ஆனால் சில நேரங்களில் அவர் தூங்கி விடுவார். இயற்கையாகவே, நீங்கள் ஒரு வெற்றுச் சுவரையே பார்த்தபடி அத்தனை காலம் அமர்ந்து இருந்தால்! வேறு என்ன செய்ய முடியும்? ஆனால் அவருக்கு தூங்க விருப்பம் இல்லை. எனவே அவர் தனது கண் இமைகளையும், அவற்றில் இருக்கும் ரப்பைகளையும் பிய்த்து எறிந்து எங்கோ போட்டு விட்டார். ஏனெனில் கண்களில் இமைகள் இருந்தால் தானே கண்களை மூட முடியும்? இப்பொழுது தான் சுவாரஸ்யமான அந்தக் கதை ஆரம்பமாகிறது.

போதி தர்மரால் வீசி எறியப்பட்ட அவரது கண் இமைகளில் இருந்து, முதல் தேயிலைச் செடி முளைத்தது.

இந்தக் கதை மிக அழகானது. எது உங்களுக்கு எளிய ஒன்றைத் தெரிவிக்கிறது. அதாவது தேநீர் உங்களை விழித்து இருக்க வைக்கிறது. அது உங்களையோ அல்லது உங்களது கண்களையோ மூடிக் கொள்ள விடாது.

புத்த மதத்தைச் சேர்ந்தவர், பௌத்தர்கள், தேநீர் அருந்து வதை ஒரு மதபரமான சடங்குகளுடன் தான் செய்வார்கள். தேநீர் என்பது அவர்களுக்கு ஒரு சாதாரணமான விஷயம்அல்ல. ஏனெனில் அது அவர்கள்ளுு புத்துணர்ச்சி அளிக்றிது. தூக்கமின்றி விழித்து இருக்க உதவுகிறது. அவர்களுக்கு மிகவும் சக்தி அளிக்கிறது. நீங்கள் மிகவும் விழிப்புடன் இருக்க உதவுகிறது. இதை அவர்கள் மிக அழகான ஓர் ஆதாரதனையாக பிரார்த்தனை யாக, மிகவும் நளினமாக, ஒரு வழிபடும் முறையாக உருவாக்கி இருக்கிறார்கள். ஒவ்வொரு ஸென் ஆஸ்ரமத்திலும் மிக அழகான ஒரு 'தேயிலைக் கோயில்' அமைக்கப்பட்டு இருக்கிறது. அது

மிகவும் அழகு நிறைந்த ஓர் இடமாகும். இதைச் சுற்றி ஓர் ஏரியும், சிறு மணலும், மரங்களும் அமைக்கப்பட்டுள்ளன. நீங்கள் இந்த கோயிலுக்குள் சென்றால் நீங்கள் ஒரு குறிப்பிட்ட முறைப்படி தான் போக வேண்டும். அங்கே சென்று அமரும் பொழுது, ஒரு குறிப்பிட்ட விதமாகவே அமர வேண்டும். ஆனால் இதற்கெல்லாம் பல மணி நேரங்கள் ஆகி விடும்.

இப்பொழுது தேநீர் தயாரிக்கும் பணி துவங்கி விடுகிறது. 'ஸாமோவரின்' இயங்கிக் கொண்டிருப்பதை அதிலிருந்து வரும் ரீங்காரம் உணர்த்துகிறது. அனைவரும் மௌனமாக அமர்ந்தபடி தேநீர் தயாரிக்கும் அந்த பாத்திரத்தில் (ஸாமோவர்) இருந்து எழும் ரீங்காரத்தைக் கேட்டபடி அமர்ந்து இருக்கிறார்கள். அப்பொழுது தேநீரின் இனிய நறுமணம் உங்கள் மூக்குக்குள் நுழைகிறது. அதன் பின்னர் தேநீர் மிகுந்த நளினத்துடன், மிகுந்த எழிலுடன், கலை அழகுடன் பரிமாறப்படுகிறது. மேலும் அந்தத் தேநீர் - மிக அழகிய கோப்பைகளில், கைகளால் செய்யப்பட்ட அந்த கோப்பைகள் கூட மிக நேர்த்தியாகத் தயாரிக்கப்பட்டு இருக்கின்றன - அது கூட மிகுந்த அன்புடன் தயாரிக்கப்பட்டு இருக்கிறன - இவை அனைத்துமே ஒரு பிரார்த்தனையைப் போல் நடத்தப்படுகின்றன. அனைவருமே மௌனமாக இருக்கின்றனர். அடுத்தவர்களைப் பற்றிப் பேசுவது, தேவையற்ற வெட்டிப் பேச்சுகளைப் பேசுவதோ - எதுவுமே அங்கே இல்லை. மெதுவாக ஓசையின்றி தேநீர் அருந்தியபின், ஒருவரை ஒருவர், வணங்கியபின் அவர்கள் ஒரு வார்த்தை கூட் பேசாமல் பிரிந்து செல்கின்றனர்.

ஒரு நாட்டில் தேநீர் என்பது மதமரபாக கருதப்படுகிறது. மிக ஆன்மிகமான ஒன்றாகக் கருதப்படுகிறது. ஆனால் அதுவே மஹாத்மா காந்தியின் ஆஸ்ரமத்தில் மிகவும் பாவமான ஒரு செயலாகக் கருதப்படுகிறது. இவை எல்லாமே மனிதர்களால் ஏற்படுத்தப்பட்டது. எனவே நீங்கள் அதைப்பற்றி எல்லாம் கவலைப்படக் கூடாது.

எனது செய்தி மிக எளியையானது - விழிப்புடன் வாழுங்கள் இயற்கையாக வாழுங்கள் - முழுமையாக வாளுங்கள். எனவே நீங்கள் இறுதியான தீர்ப்பை வழங்கும் நாளை பற்றி முற்றிலும் மறந்து வீடுங்கள். நான் உங்களை இன்று அறிகிறேன், அடையாளம் காண்கிறேன்.

இது போதும். ○

*முதலாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! உயிர் எப்படி சடப் பொருளில் இருந்து உண்டாகிறது என்பதை ஆராய்கின்ற விஞ்ஞானி நான். உயிரற்ற பொருள் உயிருள்ள ஒன்றாக மாறுபடுவது பற்றிய ஆராய்ச்சி அறிவியலுக்கு மதத்துடன் உள்ள தொடர்பை நமக்குப் புரிய வைக்கும் என்றே நாம் நம்புகிறேன். முதற்கண், நம் உணர்ச்சி களும் ஆன்மா சார்ந்த உணர்வும் எப்படி வளர்ச்சியடைகிறது என்பதை அறிவதில் இந்த ஆராய்ச்சி ஒரு 'க்ளூ' (clue) வாக உதவும் என்பதே காரணம். தாங்கள் எப்படிக் கருதுகிறீர்கள்?***

மதமும் அறிவியலும் முழுக்க முழுக்க எதிரிடையானவை தாம். அதற்குக் காரணம் அவை இட்டு நிரப்புகிற - பூர்த்தி செய்கிற (complementary) தன்மை உடையவை.

மதம் அறிவியலைத் தாங்கி நிறுத்தாது. அறிவியலாலும் மதத்தைத் தாங்கிப் பிடிக்க முடியாது. அவை ஒன்றையொன்று ஆதரிக்காமல் ஒன்றுக்கொன்று எதிராகும்படி விதிக்கப்பட்டவை. எனவே அறிவியல் நிகழ்த்துகிற கண்டுபிடிக்கிற எதுவும் மதத்தின் பார்வையில் மதிப்பு மிக்கதாயிருக்காது. உண்மையில், ஒவ்வொரு அறிவியல் கண்டு பிடிப்பும் மதத்தின் இருப்பைச் சீண்டிப் பார்ப்ப தாகவே இருக்கும்.

பிரபஞ்சத்தைத் திகைப்பிலாழ்த்த முயல்கிறது அறிவியல். எப்படி என்கிற கேள்வியில் இருந்தே அது தொடங்குகிறது. சடப் பொருளில் இருந்து உயிர் எப்படி உந்தியெழுகிறது? மதமோ அடிப்படையில் வேறொரு அணுகுமுறையைக் கொண்டது. அது பிரபஞ்ச இருப்பைக் கேள்விக்குறியாகக்க விரும்புவதில்லை.

* **க்ளூ (clue) - உண்மையை அறிய உதவும் குறிப்பு**

அதன் முழு அணுகுமுறையும் புதிரை வெளிப்படுத்துவதேயாகும். அது ஒன்றும் விடை காண்பதற்கான தேடல் அல்ல. அது எந்தக் கேள்வியும் கேட்பதில்லை. அது உயிரின் தோற்றம் குறித்து அலட்டிக் கொள்வதில்லை. வாழ்க்கையை எப்படி வாழ வேண்டும், வாழ்க்கை எப்படிக் கொண்டாடப்பட வேண்டும் என்பது தான் அதன் பிரச்சினை.

அறிவியல் சார்ந்த கேள்வி இப்படி இருக்கும்; 'அன்பு என்றால் என்ன? அன்பு எப்படித் தோன்றுகிறது? காரண – காரியத் தொடர்பு என்றால் என்ன?' அதே சமயத்தில் மதம் சார்ந்த கேள்வி அப்படி இருக்கும்; 'அன்பில் எப்படி அமிழ்வது? அன்பில் எப்படி இருப்பது, அன்பாகவே எப்படி மாறுவது?'

அறிவியல் திட்டவட்டமான சில குறிப்புகளை (உண்மை அறிய உதவும்)க் கண்டடைகிறது. அந்தக் குறிப்புகள் ஒரு மறைஞானியின் பார்வையில் முட்டாள் தனமாய் தெரியலாம். காதலைப் பற்றிக் கேட்டால் சுரப்பு நீர் (Harmone) போன்ற வேதியியல் சமாசாரங்களை விஞ்ஞானத்தின் விடையாக இருக்கும். காதலின் உன்னதம் குறைவு படுத்தப்பட்டு விடும். வேதியியல் அதனை உலகியல் தரத்துக்குத் தாழ்மைப்படுத்தி விடும். காதலுக்கும் வேதியியலுக்கும் என்ன தொடர்பிருக்கிறது? இரசவாதத்துக்கும் காதலுக்கு தொடர்பிருப்பது நிச்சயம். வேதியியிலுடன் தொடர்பில்லை. அது இயல்பு மாற்றும் சக்தி கொண்டது. அதை சுரப்பு நீர்களின் மட்டத்துக்கு தாழ்வு படுத்தக் கூடாது.

வாழ்க்கையை ஏதோ ஒன்றிற்கு பதிலளிக்கும் செயலாக அளவில் குறைத்து விடவோ, தன்மையில் தாழ்த்தி விடவோ முடியாது. ஒரு கேள்விக்கு பதிலாக அதைக் குறைத்ததுமே, அது பொருள்ளற்றதாகி விடும். அதன் பிறகு அது வாழத்தக்கா யிருக்காது. அது ஓர் தாமரைப் பூ தற்செயலாய் எதிர்ப்படுவதைப் போன்றது. அதன் அழகில் கவிஞன் மகிழ்ச்சியடைவான். அந்தப் பூவின் மணம், நிறம், பனித்துளி, அதன் மீது படியும் சூரிய ஒளி என்று எல்லாமே அவனுக்கு மகிழ்ச்சியளிப்பதாயிருக்கும். ஞானியோ அதைச் சுற்றி ஆடத்தொடங்கி விடுவான். காரணம், அவன் தாமரைப்பூவை மட்டும் காணவில்லை, மனிதத் திறனுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்ட, உள்ளுணர்வால் அறியப்படுகிற

**(transcendental)** ஒன்றையும் அதில் காண்கிறான். தாமரைக்குப் பின்னே மறைந்து கிடக்கிறது. அதன் அழகும், கம்பீரமும், சிறப்பும், மந்திர வித்தையும். அவற்றில் இருப்பது பிரபஞ்சத்தின் கைகள். ஞானியானவன் ரோஜாவையோ அல்லது தாமரையையோ மட்டும் உணர்வதில்லை. அதைச் சுற்றி மறைபொருளாய் (புரிந்து கொள்ள முடியாத, விளக்க முடியாத) இருக்கிற, அதை அரவணைத்துப் பாதுகாக்கிற கடவுள் என்கிற சக்தியையுந்தான்.

கவிஞன் பூவை மட்டுமே பார்க்கிறான், ஞானியோ அதற்கும் அப்பாற்பட்டதைக் காண்பதற்காக இன்னும் மேலானதோர் தளத்தில் செல்கிறான். இந்தப் பூக்கள் எப்படித் தோன்றின என்று சிந்திக்கிறான். விஞ்ஞானி, அவை சேற்றில் இருந்து தோன்றின. விஞ்ஞானி சேற்றின் ஆழங்களுக்குச் செல்லத் தொடங்குகிறான். அவன் சேற்றைப்பற்றியும், சேற்றிலுள்ள பகுதிப் பொருள்களைப் பற்றியும் ஆராய்கிறான்.

இந்த மூன்று அணுகு முறைகளையும் கூர்ந்து கவனியுங்கள். விஞ்ஞானி தாமரையின் வேர்ப் பகுதிக்கும் கீழே செல்கிறான். ஞான தாமரைக்கும் மேலே (அதன் உச்சத்திற்கு) செல்கிறான். கவிஞன் தாமரையோடு தங்கி விடுகிறான். தன் பகுப்பாய்வின் நிறைவில் 'தாமரை சேறன்றி வேறில்லை', அது சேற்றின் இன்னொரு 'வடிவம்' என்று கருதிக் கொள்கிறான் விஞ்ஞான். 'தாமரை என்பது பிரபஞ்ச இருப்பின் வெளிப்பாடு' என்று எண்ணிக் கொள்கிறான் ஞானி.

கவிஞனைப் பொறுத்த வரை தாமரை என்றால் தாமரை, அவ்வளவே. தற்போது இந்த மூன்று அணுகுமுறைகளும் எப்படி ஒன்றோடொன்று தொடர்பாக முடியும்?

ஞானியால் விஞ்ஞானியுடன் ஒத்துப்போக முடியாது. விஞ்ஞானி, முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றை அழித்துக் கொண்டிருப்பதாகவே ஞானி எண்ணிக் கொள்வான். அவன் தர்க்க ரீதியான தனது பதில்களின் மூலம், நடைமுறைக்குப் பொருத்தமான **(objective)** பதில்களில் தாமரையின் அகணவுர்வில் இருப்பதை **(subjectivity)** அவன் அழித்து விடுகிறான்.

ஞானியால் கவிஞனுடன் ஓரளவு உடன்பட முடியும். ஓரளவு தான், முழுமையாக அல்ல, அவன் கவிஞனிடம் தலையசைத்தபடி

சொல்வான், 'நீ சரியான தடத்தில் தான் செல்கிறாய். ஆனால், எடுத்து வைத்த முதல் அடியோடு நின்று விடாதே - தொடர்ந்து செல். தாமரை மட்டும் போதாது. பிரபஞ்சத்தின் முகத்தைத் தாமரையில் கண்டு கொள். அதைத் தாமரையில் உன்னால் காண முடியவில்லை என்றால், வேறு எதில் தான் அதைக் காணப் போகிறாய்' என்று.

உனது கேள்வி முக்கியத்துவம் உடையது. சடப்பொருள் உயிராக மாறுவது பற்றிய உண்மைக் குறிப்பை (clue)க் கண்டறிந்தால், மதத்துக்கும் அறிவியலுக்கும் இடையே ஒரு புரிதலை ஏற்படுத்த முடியும் என்றெல்லாம் குழம்பிக் கொண்டிருக்காதே. நீ சேற்றைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பாய். அது கவிஞனுக்கு நம்பிக்கையூட்டுவதாயிருக்காது, ஏனென்றால் அவன் தாமரையைப் புரிந்து வைத்திருப்பவன். ஞானியைப் பற்றி என்ன சொல்ல? அவன் உன்மீது இரக்கம் கொள்வான்.

ஒவ்வொன்றையும் அதன் மூலத்தினளவிற்குக் குறைக்கச் செய்யலாம் - அதைத்தான் அறிவியல் செய்து கொண்டிருக்கிறது - அல்லது அதன் உச்சம் வரைக்கும் உயர்த்த முடியும். அதைத்தான் மதம் செய்து கொண்டிருக்கிறது. கவிதை - இரண்டுக்கும் இடையே ஒரு பாலமாய் செயல்படுவது. கவிதை சார்ந்த அணுகுமுறை (கவிஞனின் போக்கு) ஒரு வழியில் பார்த்தால் அறிவியலுக்கும் மதத்துக்கும் நெருக்கமானதேயாகும். நீ உண்மையிலேயே மதத்தைப் பற்றி அறிந்து கொள்ள விரும்பினால், நீ மேற்கொண்டிருக்கும் பாதை தவறானது.

வாழ்க்கை எந்த விடைகளையும் எதிர் பார்த்திருப்பதாக மதம் கருதவில்லை. வாழ்க்கை அதன் முழுமையில் வாழப்பட வேண்டியது, வாழ்க்கை கொண்டாடப்பட வேண்டியது - அது ஒன்றே அதை அறிந்து கொள்வதற்கான வழி. அதை ஆய்வுக் கூடத்திலோ, அதன் பகுதி பொருள்களைப் பகுப்பாய்வு செய்வதிலோ அறிய முடியாது. வாழ்க்கை அதன் மொத்தப் பகுதிகளையும் விட மேலானது.

யாரோ ஒலுவா கித்தாரில் ஓர் அழகான இசைக் குறிப்பை வாசிக்கிறார். விஞ்ஞானிக்கு கித்தார் என்கிற இசைக்கருவி மீது ஆர்வம் இருக்கும், இசையில் ஆர்வம் இருக்காது. 'அது

எங்கிருந்து வருகிறது?' என்று அவர் சிந்திக்கலாம். அந்த இசைக் கருவியைத் துருவி ஆராய்வார். கொஞ்சம் மரத்துண்டும், சில நாண்களும் - ஆனால் அதில் இசை இருக்காது. அது இசையாகாது. அவர் இசைக் கலைஞனின் விரல்களை ஆராய்ந்தால் கொஞ்சம் இரத்தத்தையும், எலும்புகளையும் அவற்றை மூடியிருக்கும் சருமத்தையுமே காண முடியும். அது இசையாகாது. இசை அவற்றை விடவும் கூடுதலானது. மனிதனின் அறிவுக்கும் திறனுக்கும் அப்பாற்பட்ட ஒன்று இசைக் கலைஞனின் கைகள் மற்றும் கித்தாரின் மூலம் மண்ணுக்கு இறங்கி வருகிறது. அவை இசை வெளிப்படுவதற்கு ஒரு வாய்ப்பு!

கவிஞன் இசையைக் கவனித்திருப்பான். இசைக் கலைஞனைப் பற்றியோ, இசைக் கருவியைப் பற்றியோ அவன் கவலைப் படுவதில்லை. அவன் இசையில் போதை கண்டு விடுவான்.

ஆனால் ஞானியோ கட்டுக்கடங்காத ஒன்றுடன் நடனமாடுவான். காரணம், இசையில் முடிவான குறிக்கோளாக அமைகிற இசையை (Ultimate music) அவன் கேட்பான். கவிஞன் இசைக் கலைஞனையும், இசைக் கருவியையும் மறந்து விடுவான். ஞானியோ இசையையும் கூட மறந்து விடுவான். அதற்குக் காரணம் அது அவனுடைய இருப்புணர்வின் ஆழத்தில் இருக்கிற ஏதோ ஒன்றை அவனுக்கு ஞாபகப்படுத்துகிறது. கபீர் எதை 'ஸோகம்' என்று அழைக்கிறாரோ அதைத்தான் அந்த இசை அவனுக்கு ஞாபக மூட்டுகிறது.

ஸோகம் - நான் அதுவாக இருக்கிறேன். அவன் வெளியே நடக்கிற எல்லாவற்றையும் மறந்து விடுவான், அது அவனுடைய இருப்புணர்வில் ஒரு செயல்முறையைத் தொடங்கி வைக்கும். அவன் இன்னொரு உலகத்திற்குக் கொண்டு செல்லப்படுகிறான்.

நீங்கள் உண்மையிலேயே மதத்தில் ஆர்வம் கொண்டிருந்தால் தியானிக்க வேண்டும், பகுப்பாய்வு (analysis) உதவாது. அறிவியல் ஆராய்ச்சியும் உதவாது. நினைவிருக்கட்டும். நான் ஒன்றும் விஞ்ஞான விசாரணைக்கு எதிரானவன் அல்ல. உங்களுக்கு அதில் ஆர்வம் இருந்தால் அதைச் செய்து பாருங்கள். ஆனால் புரிந்து கொள்ளுங்கள் அது அறிவியலையும், மதத்தையும் இணைக்காத. அவற்றை இணைக்கவும் முடியாது.

அவற்றை இணைக்க அவசியமுமில்லை. அவை நிறைவேற்று வதற்கு பல வேலைகள் உண்டு. அவற்றிடையே ஒரு கூட்டிணைவு (Synthesis) தேவைப்படாது. காரணம், கூட்டிணைவு அவற்றை பலவீனப்படுத்துமேயன்றி வளப்படுத்தாது.

முற்றிலும் எதிரிடையானவற்றால் உண்டாகும் இறுக்கத்தில் இயங்குகிறது பிரபஞ்சம். எதிர்மறை நேர்மறை, ஆண் பெண், பிறப்பு இறப்பு, இருட்டு வெளிச்சம், அன்பு வெறுப்பு - மதம் மற்றும் அறிவியல். இவை மாறுபட்ட இரு முனைகள் (Polar opposites), வாழ்க்கைக்குத் தேவைப்படுகிறவை. இவை மட்டும் இல்லை யென்றால் வாழ்க்கை தேங்கிக் கிடக்கிற (அசுத்தம் பிடித்த) நீர்நிலை ஆகிவிடும். வாழ்க்கை வாதமுறை ஆராய்ச்சி கொண்டது. அது கோட்பாடு மற்றும் நேர்மாறானவற்றின் வழியே செயல்படு கிறது. கூட்டிணைவு ஒரு கோட்பாட்டைக் கொண்டு, கோட் பாட்டுக்கு எதிரானதைத் தோற்றுவிக்கிறது. இப்படித்தான் வாழ்க்கை வளர்ச்சி காண்கிறது.

மதத்தையும் அறிவியலையும் இணைக்க அவசியமில்லை. அவை, தூய்மைப்படுத்தப்பட வேண்டியவை. அறிவியல் என்றால் கலப்பற்றதாய், முழுக்கவும் ஆய்வறிவு சார்ந்ததாய் இருக்க வேண்டும். மதம் என்றால் தூய மதமாக, முழுக்கவும் மறையியலாக (mustic) இருக்க வேண்டும்.

இங்கே டெர்டுலியன் என்கிற கிறிஸ்தவ மறை ஞானியை ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அவரிடம் யாரோ கேட்டார்கள், ‘தாங்கள் ஏன் கடவுளை நம்புகிறீர்கள்?’ என்று.

அவர் சொன்னார், ‘நான் கடவுளை நம்புவதற்குக் காரணம் அவர் முட்டாளாக இருப்பது தான்’ என்று.

பாருங்கள், எப்படியான ஒரு பதில் இது! ஆனால், இது ஒரு ஞானியின் பதில், விஞ்ஞானி அளித்த பதிலல்ல. விஞ்ஞானி எதையுமே நிரூபிக்க முயல்வார், அவர் விவாதிப்பார். தான் ஒன்றை நம்புவதற்கான காரணத்தை முன்வைப்பார். ஆனால் டெர்டுலியன் தெளிவாகச் சொல்கிறார், ‘கடவுள் அறிவுக்கு ஏற்புடையவராக இல்லை, எனவே நான் அவரை நம்புகிறேன்’ என்று. ‘நான், விளக்கம் காண முடியாத, தெரிந்து கொள்ள முடியாத ஒன்றை நம்புகிறேன்’ என்கிறார் அவர்.

உங்களுக்கு மதத்தில் ஆர்வம் இருந்தால்... நீங்கள் இரண்டு மாய் இருக்க முடியும். ஒரு விஞ்ஞானி சமயப்பற்றுடையவராக இருக்க முடியாது என்று நான் கூறவில்லை – விஞ்ஞானியாக இருக்கிற ஒருவர் சமய நம்பிக்கை உடையவராகவும் இருக்க முடியும். ஆனால், அப்போது தன்னுடைய இருப்புணர்வில் ஒரு வாதமுறையை அவர் தோற்றுவித்துக் கொள்ளும்படியிருக்கும். அவர் மிகவும் தன்னுணர்வோடு (conscious) இருக்க வேண்டும். அவர் ஆய்வுக் கூடத்தில் செயல்படும்போது மதத்தைப் பற்றிய சகலத்தையும் அவர் மறந்துவிட வேண்டும். அவர் ஆய்வுக் கூடத்தை விட்டு வெளியேறியதும், தன்னுடைய தியானக் கூடத்தில் இருக்கும் போது ஆராய்ச்சி, சோதனை, குறிப்புரை (observation) இவற்றை மறந்து தியானம், பிரார்த்தனை அன்பு செய்தல் என்றாகி விட வேண்டும்.

ஒரு விஞ்ஞானி இரண்டாகவும் இருக்க முடியும். நிறைய பேர் விஞ்ஞானியாகவும், சமய நம்பிக்கை கொண்டவராகவும் இருக்க வேண்டும் என்றே நான் விரும்புகிறேன். ஓர் உண்மையான சந்நியாசி பற்றிய என்னுடைய கனவு அவன் ஒரு விஞ்ஞானியாக, கவிஞனாக, ஞானியாக இருக்க வேண்டும் என்பது தான். அவன் மூன்றாகவும் இருக்க முடிவது நல்லதே. அவனுக்குள் மனிதத் தன்மை உச்சகட்ட மலர்ச்சியைக் கொண்டு விடும். அவனுடைய உள்ளார்ந்த ஆற்றல் செயல்பூர்வமாக மாறிவிடும். தனக்கு முடிகிற அத்தனை வழிகளிலும் அவன் முழுமையடையப் பார்க்கிறான்.

ஒரு விஞ்ஞானியவதற்கு நீங்கள் ஓர் இயற்பியல் துறை வல்லுநராகவோ, வேதியியல் துறை வல்லுநராகவோ இருக்க வேண்டுமென்பதில்லை. விஞ்ஞானியாவது என்பது விஞ்ஞான பூர்வமான அணுகுமுறையை மேற்கொண்டிருப்பது. அறிவியலால் மட்டுமே சமாளிக்கப்பட வேண்டிய பிரச்சினைகளும் உண்டு. என்னிடம் பிணிவாய்ப்பட்ட ஒருவர் வருகிறபோது, நவநீத்திடமோ தர்ஷனிடமோ அம்ரித்திடமோ ஹமீத்திடமோ (மருத்துவர்கள்) போகும்படி சொல்வேன். உங்கள் நோய்க்கு ஓர் அறிவியர் பூர்வ அணுகுமுறை தேவைப்படும்.

இந்தியாவிலே நோய்வாய்ப்பட்டவர்கள் மகான்களிடம் ஆசிர்வாதம் பெறச் செல்கிறார்கள். இத்தகைய அறிவற்ற

செய்கைகளால்தான் கிழக்கு நோய்மையிலும், ஏழ்மையிலும் இருந்து கொண்டிருக்கிறது. நீங்கள் வறுமையில் இருந்தால் மகான்களிடம் செல்லாதீர்கள். விஞ்ஞானியிடமும், தொழில்நுட்ப வல்லுநரிடமும், பொருளாதார நிபுணரிடமும் போங்கள். 'நாங்கள் ஏன் ஏழ்மையாக இருக்கிறோம்?' என்று அவர்களிடம் விசாரித்தறியுங்கள். ஆனால் ஒரு மகானிடம் சென்று 'நாங்கள் ஏன் ஏழையாக இருக்கிறோம்?' என்று கேட்டால் நீங்கள் முட்டாள். அந்தச் சந்நியாசிகளுந்தான். அவர்கள் உங்களுக்குப் பதிலளிப்பார்கள், தங்களுடைய அறியாமையை வெளிப்படுத்திக் கொள்ள முடியாதவர்களாய். கடந்த பிறவியில் நீங்கள் பல பாவங் களைச் செய்த காரணத்தால் தற்போது துன்பப்படுகிறீர்கள் என்று கேள்வி முட்டாள்தனமாக இருந்தால் பதிலும் முட்டாள்தனமாகவே இருக்கும்.

விஞ்ஞானியிடம் சென்று பொருள்சார்ந்த உலகைப் பற்றி விசாரித்தறியலாம். நீங்கள் காதல் வயப்பட்டிருந்தால் விஞ்ஞானி யிடம் போகாமல், தவிர்த்து விடுங்கள். வழியில் எங்காவது காண நேரிட்டாலும் நழுவி விடுங்கள், காரணம் உங்களுடைய மொத்தக் காதலையும் அவர் நாசமாக்கி விடுவார். 'அதெல்லாம் சுத்த அறீவினம். ஆண் பெண் சுரப்பிகளால் உண்டாகிற ஈர்ப்பு - முட்டாளாகி விடாதீர்கள். இந்தச் சுரப்பு நீர்கள் உங்களை ஏமாற்றுகின்றன' என்று கூறுவார் அவர். உங்கள் காதலியை நீங்கள் முத்தமிட விரும்பினால் விஞ்ஞானியை தேடிப் போகாதீர்கள். அவர் கூறுவார், 'ஓ, அது ஆபத்தானது. அத்தனை வகை நோய்த் தொற்றுகளும் உண்டாகி விடும். ஒரு முத்தத்தில் இலட்சக் கணக்கான கிருமிகள் இடம் மாறுகிற ஆபத்து இருக்கிறது' என்று. அதன் பிறகு முத்தமிடவே நீங்கள் பயப்படுவீர்கள். அப்படியே முத்தமிடுவதாயிருந்தால், டெட்டால் போன்ற கிருமி நாசிகளை வைத்திருந்து, முத்தமிட்டபின்போ, அல்லது முத்தமிடுவதற்கு முன்போ கழுவிச் சுத்தம் செய்து கொண்டு விடுவீர்கள்.

நீங்கள் காதல் கொண்ட நிலையில் விஞ்ஞானியிடம் போகா தீர்கள். கவிஞனிடம் போங்கள். அவனுக்குத் தெரியும் காதலைப் பற்றி.

நிறைவான ஞானத்தை நீங்கள் பெற விரும்பினால் கவிஞனும் உங்களுக்குப் பயன்பட மாட்டான். அவன் மேலோட்டமாகவே

அதை அறிந்திருப்பான். முடிவான ஞானத்தை அறிய விரும்பினால் ஒரு ஞானியிடம் செல்லுங்கள், ஒரு குருவிடம் சீடராகி விடுங்கள். காரணம், அந்த ரகசியங்கள் எல்லாம் ஆழ்ந்த நம்பிக்கை, சரணாகதி, அன்பு இவற்றில் பெறப்படுவது. அவை மனதில் வாங்கிக் கொள்ளப்பட வேண்டிய சமாசாரங்கள்.

*இரண்டாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே, நிலையாக இருப்பதற்கு முட்டாளாக இருக்க வேண்டும். உண்மையை மாற்ற முடியாது, அது எப்போதுமே மாறாமல் இருப்பது என்று தற்போது நீங்கள் கூறினீர்களே, அது எப்படி?***

முட்டாள் தனந்தான் நிலையாக இருக்கச் செய்யும் என்று நான் கூறவில்லை. இரண்டாந்தர அறிவிற்கு, முட்டாள் தனமான மனதிற்கு முரதண்பாடின்றி இருப்பதே வழி என்று தான் நிச்சயமாக நான் சொல்லியிருப்பேன். மாறாமல் இருப்பதற்கும், முரண் பாடில்லாமல் இருப்பதற்கும் உள்ள வேறுபாட்டை நீ புரிந்து கொள்ளவில்லையா?

முரண்பாடின்மை (உறுதியாக, ஒரே சீராக இருப்பது) ஒரு தர்க்கம் சார்ந்த நிகழ்வு. முரண்பாடின்றி என்று நான் சொல்கிற பொழுது, நீ கடந்த காலத்துடன் கட்டுண்டு கிடக்கக் கூடாது என்பதையே அது குறிக்கும். இன்று நீங்கள் ஒன்றைச் செய்வீர்கள், நாளையே வாழ்க்கை மாறிப்போகும். நீங்கள் ஒரே சீராக, உறுதியாக இருப்பதற்கு செய்ததையே திரும்பச் செய்ய வேண்டியிருக்கும். நாளை என்பது இன்றாகாது. இன்று என்பது உங்களுடைய நேற்று அல்ல. நேற்று போதுமானதாயிருந்த பதில் இன்று போதுமானதா யிருக்காது. முரண்பாடின்றி இருக்கிறபோது நேற்று என்பது ஆதிக்கம் செலுத்துவதாகி விடும். நேற்றின் பிடியில் 'இன்று' சிக்கிக் கொள்ள நேரிடும். அதையே நான் முரண்பாடற்றிருக்கும் நிலை என்கிறேன். அப்போது நீங்கள் வளர்ச்சியடைவதற்கில்லை. இளைஞனான பிறகும் குழந்தையின் நிலையிலேயே இருந்தால் அது எப்படி வளர்ச்சியாகம்? ஆக முதுமையிலும் அது தொடர வாழ்க்கை கை நெடுகிலும் நீங்கள் குழந்தைத் தனமாகவே இருக்க நேரிடும்.

மக்கள் அப்படித்தானே இருக்கிறார்கள். மனிதனின் மனம் சார்ந்த வயது (**mental age**) சராசரி பன்னிரண்டு. நீங்கள் முரணின்மையைச் செயற்படுத்தினால் அதுதான் நடக்கும்.

உங்கள் குழந்தைப் பருவத்தில் சில கேள்விகளுக்கு மட்டுமே பதில் கொடுத்திருப்பீர்கள். அப்போது வேண்டுமானால் அது சரியாக இருந்திருக்கும், அப்போது மட்டுமே. ஆனால் நீங்கள் வளரும்போது அந்தப் பதில்கள் பழையதாகி விட்டிருக்கும். அந்தப் பதில்கள் எல்லைக்குட்படுத்தவதாய் (கட்டுப்பாடுகள்), சிறைகளாய், விலங்குகளாய் மாறிவிடும். நீங்கள் இடைவிடாமல் அவற்றைத் தூக்கியெறிந்து கொண்டேயிருந்தால்தான் நீங்கள் நடைமுறைக்கு எதிர்ச் செயல் புரிய (**respond**) முடியும்.

ஆனால் இப்படித்தான், நான் ஒன்றைச் சொல்ல நீங்கள் வேறொன்றாகப் புரிந்து கொள்கிறீர்கள். நான் ஒன்றைச் சொல்ல, அது முற்றிலும் வேறொன்றாக உங்கள் காதில் விழுந்து வைக்கும். உங்கள் மனங்களில் உங்களுடைய சிந்தனைகளே இருக்கும். நான் 'முரண்படாமல் இருக்காதே' என்றால், 'மறவாமல் இருக்காதே' என்று விழுந்து வைத்திருக்கிறது.

பாஸ்கல் என்கிற நபருக்கு, அமெரிக்கக் குடியுரிமை வழங்கப் பரிசோதித்ததார்கள்.

'அமெரிக்காவின் குடியரசுத் தலைவர் யார்?'

அந்த வெளிநாடடுக்காரர் சரியான பதிலைச் சொன்னார்.

'துணை குடியரசுத் தலைவர் யார்?' என்ற வேள்விக்கும் சரியான பதிலையே சொன்னார்.

'நீங்கள் குடியரசுத் தலைவராக இருப்பீர்களா?'

'மாட்டேன், முடியாது'

'ஏன் முடியாது என்கிறீர்கள்?'

'ஏன்னா நான் ரொம்ப பிஸி. ஒரு சிகையலங்காரக் கடையில் நாள் முழுக்க வேலை பார்க்கிறவன் நான்'.

நான் எதைச் சொல்லவில்லையோ அது உங்கள் காதில் விழுந்தது. உங்களுடைய சொந்தக் கருத்தில் இருந்தே உங்களுடைய கேள்வி வந்தது.

உங்களுக்குத் தெரியும், உண்மையை மாற்ற முடியாது என்பது. உங்களுக்கு யார் சொன்ன? எப்படித் தெரிந்து கொண்டீர்கள். உண்மையை நீங்கள் அறிவீர்களா? உண்மையை மாற்ற முடியாது என்று சொல்லப்படுவதை நீங்கள் கேட்டிருப் பீர்கள். அது எப்போதுமே மாறாமல் இருக்கிறது. அது உங்களு டைய அனுபவமா? எப்போதுமே மாறாமல் இருக்கிற எதையேனும் உங்கள் வாழ்வில் கண்டிருக்கிறீர்களா?

வாழ்க்கையை நீங்கள் கூர்ந்து கவனித்தால் தெரியும், ஒவ்வொன்றும் மாறிக் கொண்டேயிருப்பதைக் காண்பீர்கள். வாழ்க் கையைக் கண்காணியுங்கள், ஹிராக்ளிட்டஸ் சரியாகவே சொன் னார், 'ஒரே ஆற்றில் நீங்கள் இரண்டு முறை கால் வைப்பதில்லை' என்று. காரணம் அந்த ஆறு அப்படியே இருக்காது. இடை விடாமல் ஓடிக் கொண்டேயிருக்கும். ஹிராக்ளிட்டஸ் சொல்வது இதுதான்; 'மாற்றம் ஒன்றே மாறாமல் இருப்பது;'

உண்மையில் வாழ்க்கை என்பது பெயர்ச்சொல் (noun) அல்ல, வினைச் சொல் (verb). நாம் என்றாவது ஒரு நாள் நம்முடைய மொழி விஞ்ஞான பூர்வமாய் (Seientific) இருக்க வேண்டும் என்று விரும்பினால் எல்லா பெயர்ச் சொற்களையும் விட்டு விட வேண்டும். உண்மையில் விஞ்ஞானபூர்வ மொழியென்றால் அது வினைச் சொற்களை மட்டுமே கொண்டிருக்க வேண்டும். உங்களைச் சுற்றியுள்ள இந்த மரங்களையெல்லாம்த பார்க்கிற போது, 'அழகான மரம்' என்று அழைப்பது உண்மையாகாது. காரணம், மரம் அசையாமல் வளராமல் மாற்றமில்லாதிருக்கிற ஒன்றல்ல, அது ஓர் இயக்கம், மரம் என்கிற வார்த்தையே நீங்கள் சொல்கிற பொழுதே அது மாறி விடுகிறது. நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கிற அதே மரமல்ல அது. ஒரு பழுத்த இலை உதிர்ந்து, புதிதாய் ஒன்று துளிர் விடுகிறது, ஒரு மொட்டு இதழ் விரிக்கிறது. ஒவ்வொரு கணத்திலும் அந்த மரம் உயரமாய் வளர்கிறது.

மரத்தைப் பற்றிச் சரியாகச் சொல்வதெனில் மரமாகிக் கொண்டேயிருக்கிறது (treeing) என்று சொல்வதே சிறப்பு. ஆறு என்பதை ஆறாகிக் கொண்டேயிருக்கிறது என்பதில்லை. ஆனால் உண்மையில் அப்படித்தானே அது இருக்கிறது தொடர்ந்து மாறியபடி.

வாழ்க்கை என்பது உண்மையில் வாழ்க்கையல்ல, வாழ்ந்து கொண்டிருப்பது. நம்முடைய மொழிகள் உலகைப்பற்றி ஒரு தவறான கருத்தையே நமக்கு வழங்குகின்றன. காதல் என்று எதுவுமில்லை, அது காதலித்தல் ஆகும்.

எப்போதுமே நினைவிருக்கட்டும், பொருள்களைப் பற்றி ஒருவருக்கொருவர் விளக்கிக் கொள்வதில் சிரமம் இருப்பதால் பெயர்ச் சொற்களைப் பயன்படுத்த வேண்டியிருக்கிறது. கால காலமாகவே நாம் பெயர்ச் சொற்களையே பயன்படுத்தி வந்திருக் கிறோம். ஆனால் காதல் என்கிற சொல்லைப் பயன்படுத்துகிற போது நினைவில் கொள்ளுங்கள். அது காதலித்தல் என்பதை. அது ஒரு செயல்முறை. அது ஒரு செயல், பொருளல்ல மாறாமல் இருப்பதற்கு.

நீங்கள் காதலித்தால் உங்களுக்குத் தெரிந்திருக்கும்; காலை யில் அதற்கிருந்த அதே பண்பு மாலையில் இருக்காது. முற்றிலும் வேறான நிகழ்வாகி விட்டிருக்கும். ஆறு சில நேரங்களில் ஆழமாயும், சில நேரங்களில் ஆழமற்றும் காணப்படும். சில நேரங்களில் அது இரைச்சலிடும், சில நேரங்களில் அமைதி யாகியிருக்கும். காதலும் அப்படித்தான். சில சமயங்களில் வருத்தம் தெரியும், சில சமயங்களில் மகிழ்ச்சியாயிருக்கும். தன்னுடைய மனநிலைகளை அது இடைவிடாது மாற்றிக் கொண்டேயிருக்கும். ஆக, மாறாமல் இருப்பது மாற்றம் ஒன்றுதான். ஆனால் நீங்கள் சொல்கிறீர்கள், 'உண்மை மாறுவதில்லை' என்று.

உண்மையை மாறாது என்று யார் விதித்தது? நீங்கள் அதன் மூலம் கருதிக் கொள்வது என்ன? வாழ்க்கையில் மாறாதிருக்கிற ஒன்றை நீங்கள் அறிவீர்களா? குழந்தை இளைஞனாவதை, இளைஞன் கிழவனாவதை, கிழவன் ஒரு நாள் போய்ச் சேருவதைக் காண் கிறீர்கள்தானே. ஒவ்வொன்றும் நிலையாக மாறிக்கொண்டே யிருப்பதை நீங்கள் கண்டறிகிறீர்கள். ஆனால் மனித மனத்தின் அடியாழத்தில் மரணம் பற்றிய அச்சம் இருந்து கொண்டேயிருக் கிறது. மாற்றம் இருக்கிறதென்றால் மரணமும் இதுக்கிறது. அது விதிக்கப்பட்ட ஒன்று. மாற்றம் மரணத்தைக் கொண்டு வருகிறது.

ஆக, என்றும் நிலையாக இருக்கக் கூடியவற்றிலேயே நாம் நம்பிக்கை வைக்கிறோம். அது உண்மையாக இருக்கலாம்.

இறையுணர்வாக இருக்கலாம், ஆன்மாவாக இருக்கலாம். ஆனால், அச்சமுற்ற மனதுக்கு ஏதோ ஒன்று தேவைப்படுகிறது பற்றிக் கொள்வதற்கு, மரணத்தை எதிர்த்து நிற்பதற்கு, 'என்றும் நிலையான ஒன்றை எனது உறைவிடமாய்க் கொள்வதே எனக்குப் பாதுகாப்பு' என்று குறைந்த பட்சமாவது ஒருவர் நம்பக்கூடும்.

உண்மையை நீங்கள் அறிவீர்களா? இறையுணர்வு என்றால் தெரியுமா? ஆன்மா பற்றிய அறிவு உங்களுக்கு உண்டா? இல்லை, மரணத்தைப் பற்றி மட்டுமே உங்களுக்குத் தெரியும் – அதுதான் எங்கேயும் எப்போதும் நிகழ்ந்து கொண்டிருக்கிறதே.

ஆனால், மரணத்தை ஏறெடுத்துப் பார்க்கவும் விரும்பாமல், நாம் தொடர்ந்து அதை மறுத்துக் கொண்டிருக்கிறோம். என்றென்றும் இருக்கக் கூடிய ஒன்றையே நாம் விரும்புவோம். நாமும் அதன் பகுதியாகிவிட விரும்புவோம். அதன் மூலம் நாமும் இருக்க முடியுமே என்றென்றைக்குமாய்.

ஆனால் உங்களுக்குள் எது நிலையாக மாறாமல் இருக் கிறது? உங்கள் சரீரம் மாறுகிறது. வேண்டுமானால் மருத்துவ இயலைக் கேட்டுப்பாருங்கள். உங்கள் சரீரம் மாறிக் கொண்டே யிருக்கிறது. ஏழு ஆண்டு காலத்தில் ஒருவருடைய சரீரம் முற்றாக மாறிவிடுகிறது. ஒரு பழைய உயிரணுகூட அப்படியே இருக்காது. இது பத்தாண்களுக்கு முன் ஆய்ந்தறிந்தது. ஆனால் தொடர் ஆராய்ச்சியின் விளைவாய் ஒரு புதிய உண்மை கண்டறியப் பட்டிருக்கிறது. ஓராண்டு காலத்திலேயே சரீரம் முழுமையாய் மாறிவிடுகிறது என்று. ஆம், உங்கள் சரீரம் தொடர்ந்து தன்னைப் புதுப்பித்துக் கொண்டேயிருக்கும்.

அதனால் தான் உங்களுடைய முடியையோ, நகத்தையோ நீங்கள் வெட்டும்போது வலிப்பதில்லை. ஏன்? முடியும், நகமும் உங்கள் உடம்பின் ஒரு பகுதியாயிற்றே, ஆனால், வெட்டும்போது ஏன் வலிப்பதில்லை? காரணம் உங்கள் முடிய உயிரோடு இருக்கவில்லை. அவை உடம்பின் மரித்துப் போன உயிரணுக்கள். உடம்புக்கு வெளியே வீசியெறியப்பட்டவை. நகங்களும் அப்படித் தான். அவையும் உடம்புக்கு வெளியே வீசப்பட்ட, உயிரற்ற அணுக்கள்தாம். அதனால்ா தான் அவற்றை வெட்டும்போது உங்களுக்கு வலிப்பதில்லை.

ஒரே ஆண்டில் உங்கள் உடம்பு இருந்தபடி இல்லாமல் போய்விடுகிறது.

'வாழ்க்கை ஒரு தீச்சுடர் போன்றது' என்று புத்தர் திரும்பத் திரும்பக் கூறியிருக்கிறார். நீங்கள் மாலைப் பொழுதில் ஏற்றுகிற ஒரு மெழுகுவர்த்தி இரவு முழுவதும் எரிகிறது. காலையில் நீங்கள் அதை அணைத்து விடுகிறீர்கள். உங்களிடம் அதுபற்றி ஒரு கேள்வி. நீங்கள் மாலையில் ஏற்றி வைத்த போது இருந்த அதே தீச்சுடர்தானா, நீங்கள் அணைக்கும்போது இருந்தது?' ஒரு வகையில் பார்த்தால் அதே சுடர்தான் அது. இரவு முழுவதும் அதுதானே தொடர்ந்து இருந்திருக்கிறது! ஆனால் உண்மையில் ஒரே தீச்சுடரல்ல அது. காரணம் அந்தச் சுடர் மாறிக் கொண்டே யிருப்பது. அது கரிந்து புகையாகி, புதிதாய் ஒரு சுடர் அதனுடைய இடத்துக்கு வந்துவிடுகிறது. பழையதுக்கும் புதியதுக்கும் இடைவெளியில்லாமலே இட்டு நிரப்பப்பட்டு விடுகிறது. எனவே அதை உங்களால் பார்க்க முடிவதில்லை. ஆனால் அதே சுடரல்ல அது. அவ்வாறு புத்தர் ஒரு புதிய உண்மையைக் கண்டறிந்தார்.

அறிவியலார் அதை தொடர்ச்சி (Continuum), நீடிப்பு என்கிறார்கள். அது, ஒரே மாதிரியாக இருக்கிறது, ஒரே மாதிரி இல்லாமலும் இருக்கிறது. புத்தர் அதனை 'சந்ததி' (Santati) என்கிறார். முதல் சுடரில் இருந்து மற்றொன்று. அதிலிருந்து இன்னொன்று. இரவு நெடுகவும் தோற்றம் பெறும் செயல்நிலை தொடர்கிறது. அதில் ஒரு தொடர்ச்சி இருந்தாலும், அப்படியே இருக்கவில்லை. அதை ஒன்றே என நீங்கள் கூறமுடியாது. அதை வெவ்வேறு என்றும் நீங்கள் கூற முடியாது. ஒருவகையில் பார்த்தால் அதேதான், ஒரு வகையில் வேறு வேறுதான்.

வாழ்க்கையில் உண்மையிலேயே நிலைத்திருக்கக் கூடிய ஒன்றை நீங்கள் அறிவீர்களா? ஏதாவதொன்று? உங்கள் உடம்பு மாறுகிறது, மனது மாறுகிறது, உங்கள் உணர்ச்சிகள் தொடர்ந்து மாறிக் கொண்டேயிருக்கின்றன. நீங்கள் எந்த உண்மையைப் பற்றிப் பேசுகிறீர்கள்?

ஆம், ஒருபோதும் மாறாத உண்மையொன்று இருக்கவே செய்கிறது. ஆனால், அது அனுபவித்தறியப்பட வேண்டியது. அந்த உண்மை உங்களுக்கு வெளியே இருப்பதல்ல, அது உங்களுக்குள் மறைந்திருக்கிற உண்மை. சாட்சியாக இருக்கக்

கூடிய திறமையே அது. சாட்சி பாவம் மட்டுமே மாறாதது. மற்றவையெல்லாம் மாறிக் கொண்டேயிருக்கும். எல்லா மாற்றங்களுக்கும் சாட்சியாயிருந்து கவனிக்கிறது. உங்கள் பிரக்ஞை (தன்னுணர்வு) - குழநிதைப் பருவம் வந்து செல்கிறது. இளமை வந்து போகிறது. முதுமை வருகிறது போகிறது. அனைத்தையும் சாட்சியான ஒன்று கண்காணித்திருக்கும்.

அந்தச் சாட்சியைப்பற்றி அறிந்து கொள்ளவே தியானம். சாசுவதமான, ஒருபோதும் மாறாத கடவுள் உங்களுக்கு வெளியே இல்லை. என்றென்றைக்கும் இருக்கக் கூடிய உண்மை உங்களுக்கு வெளியே இல்லை. ஆம், சற்றும் ஐயத்திற்கிடமின்றி, நிச்சயமான ஒரு மெய்ப்பொருள் உங்களுக்குள் இருக்கிறது. உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியில் அது இருக்கிறது. ஆனால், உங்களுடைய தியானத்தில் - ஆழ்ந்த சிந்தனையில் மட்டுமே அதை நீங்கள் கண்டு கொள்ள முடியும். எண்ணங்களனைத்தும் மறைகிறபோது, விருப்பங்களனைத்தும் விலகிய நிலையில், கண்காணிக்க எதுவுமில்லை என்கிற போது, அந்த சாட்சியை நீங்கள் அறிந்து கொள்வீர்கள். அப்போது சாட்சி பாவம் தன்மீதே திரும்பும். காண்பதற்கு எதுவுமில்லை என்கிற பொழுது, அது தன்னையே காண முற்படுகிறது. ஏதேனும் ஒரு பொருள் அல்லது இலக்கு இருந்திருப்பின், அதன்மீது தன் கவனத்தை அது ஒரு முகப்படுத்தியிருக்கும்.

தியானம் எல்லாப் பொருள்களையும், நோக்கங்களையும் உங்களிடமிருந்து நீக்கிவிடுகிற செயல்முறை ஆகும். மனதில் உள்ளுறைகின்றவைகளை (Contents) யும் அது வெளியேற்றி விடும். மெல்ல மெல்ல ஒருநாள் இடைவேளை, இடைவெளிவரும். சற்றும் எதிர்பாராத விதமாய் ஒரு வெற்றிடம் உண்டாகும். காண்பதற்கு ஏதுமில்லை, கவனத்தை ஒருமுகப்படுத்த உள்ளே எதுவுமில்லை என்கிற நிலையில் அற்புதம் நிகழ்கிறது. தடையாக ஏதும் இல்லை என்கிறபோது சாட்சியாகிற திறன் ஒரு வட்டத்தில் சழன்று தன்மீதே திருதும்பும். இதைத்தான் இயேசு, 'மனதின் அடிப்படை மாற்றம்' **(metanria)** என்கிறார். அது தவறாக மொழி பெயர்க்கப்பட்டு, 'தவறுக்காக வருந்துவது' **(repent)** என்றானது: அத 'திரும்புவது' **(return)** என்று இருந்திருக்க வேண்டும். அல்லது 'முழுமையான மாற்றத்தை ஏற்படுத்துதல்' **(revolution)**

என்று மொழிபெயர்ப்பு' செய்திருக்க வேண்டும். அது நூற்றி யெண்பது டிகிரிக்கு திரும்புதல் ஆகும். அப்போது திடுதிப்பென்று உங்களையே நீங்கள் கண்டு கொள்கிறீர்கள். அந்தச் சாட்சிக்குப் பெயரில்லை. அது இந்துவோ முகமதியனோ அல்ல. அது ஆணுமல்ல, பெண்ணுமல்ல. அது சுத்த பிரக்ஞை.

ஆம், இந்தச் சுத்த பிரக்ஞை என்பது முற்றிலும் அதுவேதான். அதைத் தவிர மற்றதெல்லாம் மாறிவிடுகிறது. நான் மாறாமல் இருப்பது பற்றி உங்களிடம் சொல்கிறபோது சாட்சி பாவம் பற்றிச் சொல்லவில்லை. உங்களுடைய கருத்தியல்கள் (iderlogies), உங்கள் அறிவு, உங்கள் அனுபவம் பற்றியே சொல்லிக் கொண்டிருந்தேன். அவை ஒவ்வொரு நாளும் கைவிடப்பட வேண்டியவைகள்தாம். கடந்த காலத்தை உதறி விடுங்கள், அப்போது தான் உங்களைப் புதுப்பித்துக் கொள்ள முடியும், கணந்தோறும் நடைமுறைக்கான எதிர்ச் செயல் புரிய முடியும்.

நான் சொல்கிற ஒவ்வொரு வார்த்தையையும் விழிப்போடு கவனியுங்கள். இல்லையேல் நான் ஒன்று சொல்ல, நீங்கள் வேறொன்றாய் புரிந்து கொள்வீர்கள். அத்துடன், நான் சொன்னதாகவே அதைப்பற்றி எண்ணமிடுவீர்கள்.

*மூன்றாம் கேள்வி:*

*ஓஷோ அவர்களே! எது முக்கியமானது?*

அது உங்களைப் பொறுத்தது. நீங்கள் என்னிடம் கேட்டால், எல்லாம் ஒன்றுதான். ஒவ்வொன்றும் முக்கியம் என்று நீங்கள் சொல்லக் கூடும் அல்லது எதுவுமே முக்கியமில்லை என்றும் சொல்லலாம். இரண்டு ஒன்றே.

ஒவ்வொன்றும் சாதாரணமானது தான் அல்லத சிறப்புத்தன்மை உடையது தான். நீங்கள் எதைத் தேர்வு செய்வதாயினும், உங்களைக் கவர்வது எந்தவொரு வார்த்தையாயினும், எவ் வகையிலும் எதையும் தவிர்க்காத அளவிற்கு எல்லாமே முக்கிய மானவை எனலாம். அல்லது எதுவுமே முக்கியமற்றது என்றும் சொல்லலாம். இரண்டும் ஒன்றையே குறிக்கிறது; எல்லாமே முக்கியம் என்கிற போதும் சரி, எதுவுமே முக்கியமில்லை என்கிற போதும் சரி. 'முக்கியத்துவம்' என்கிற சொல் பொருளற்றதாகி விடுகிறது.

என்னுடைய கருத்து இதுதான், நீங்கள் எதைத் தேர்வு செய்தாலும் முடிவான விளைவு ஒன்று போலத்தான் இருக்கும்.

நீங்கள் எதிர்மறை மனதைப் பெற்றிருப்பின், புத்த சயமத்தைச் சேர்ந்தவரின் பதில் மிகச் சரியாகவே இருக்கும். புத்தர் சொல்கிறார், 'முக்கியமானது என்று எதுவும் இல்லை' என்பதாய். பிறகு அதைப் பற்றிக் குழம்பிக் கொள்ள என்ன இருக்கிறது? பசித்தால் உண்ணுங்கள், தாகமெடுத்தால்ா பருகுங்கள், தூக்கம் வந்தால் தூங்குங்கள் - எதுவும் முக்கியத்துவம் கொண்டதல்ல. இது ஒருவித ஓய்வை - அமைதியை உங்களுக்கு வழங்கும் - எதுவும் முக்கியமில்லை. எனவே நீங்கள் வென்றாலும் தோற்றாலும் இரண்டும் ஒன்றுதான். நீங்கள் புகழ் பெற்றவராயினும், கெட்டபெயர் எடுத்தாலும் இரண்டும் ஒன்றுதான். உங்களை எல்லாருக்கும் தெரிந்திருக்கிறது அல்லது யாருக்குமே உங்களைத் தெரியாது - இரண்டுமே முக்கியத்துவமற்றவைதாம். அது உங்களுக்கு இளைப்பாறலை, ஆழ்ந்த அமைதியை, கலங்காத இருப்புணர்வை வழட்ங்கும். அதுதானே அதன் நோக்கம்.

அல்லது சங்கரரின் பதிலை நீங்கள் தேர்ந்து கொள்ள முடியும். அவர் சொல்கிறார்; ஒவ்வொன்றும் முக்கியத்துவம் உடையதுதான். காரணம், எல்லாமே இறையுணர்வு கொண்டவைதான். தூசிக்குக் கூட கடவுட் தன்மை உண்டு? அதுவும் சரிதான். பசித்தால் உண்ணுங்கள். காரணம், அது முக்கியமாகும். தாகமெடுத்தால் பருகுகங்கள் அதுவும் முக்கியமே. உறங்கத் தோன்றினால் உறங்குங்கள். இறையுணர்வுக்கும் தூங்க வேண்டும் போலிருக்கும் - உங்களுக்குள் இறையுணர்வு இருக்கிறது.

இரண்டு பதில்கள் இருக்கின்றன. நேர்மறையானது, எதிர்மறையானது என்று இரண்டு அடிப்படையான பதில்கள். எது உங்களைக் கவருமென்றாலும்... உங்கள் மனதைக் கண்காணியுங்கள். நேர்மறையானதின் பால் ஈர்க்கப்படுகிறவர்கள் இருக்கிறார்கள் அல்லது எதிர்மறைப் பக்கம் இழுக்கப்படுகிறவர்களும் உண்டு. எது உங்களுக்கு ஈர்ப்புணர்வை ஏற்படுத்துகிறது, எது உங்களை அதிகம் ஈர்ப்பதாயினும் அதுவே உங்கள் பாதையாகும். இல்லை என்பது உங்கள் பாதையல்ல. ஆம் என்பது உங்கள் பாதையாக முடியும்.

கபீரின் வழி ஒப்புதலளிப்பது (yes), புத்தரின்வழி மறுப்பது (No). ஆனால், இரண்டுமே உண்மையில் தனிச்சிறப்பு இல்லாதவை தாம். எது முழுமையானதோ அதற்கு சிறப்பு உண்டு. உங்கள் முழு இருப்புணர்வோடு நீங்கள் ஒப்புதலளித்தால் அது சிறப்பை வெளிப்படுத்தும். நீங்கள் மறுப்பைக் கூறினால் அது மறுப்பையே வெளிப்படுத்தும். எல்லாமே உங்களைப் பொறுத்ததுதான்.

குறிப்பிட்ட சிலது முக்கியமானது என்றோ, மற்றவைகள் முக்கியமில்லாதவை என்றோ முத்திரைக் குத்தப்படுவதில்லை. ஒரு ரோஜா மலர் கவிஞனுக்கு முக்கியம், ஆனால், பணத்தில் ஆர்வமுள்ள ஒருவருக்கு முழுக்கவும் அது முக்கிய மற்றதுதான். அவர் கேட்பார், 'ரோஜாவால் என்ன பயன்?' என்று. உண்மையிலேயே அவர் கவலைப்படுவதுண்டு. 'மக்கள் ஏன் ரோஜாக்களைப் பற்றிப் பாட்டுப்பாடுகிறார்கள்! அவர்கள் ஏன் நூறு ரூபாய் நோட்டுகளைப் பற்றிப் பாடக் கூடாது?' என்று.

நான் பல்கலைக் கழகத்தில் இருந்தபோது என்னுடைய சகா ஒருத்தான், உண்மையிலேயே பணவெறி பிடித்தவனாயிருந்தான். அவனுடைய ஆர்வமெல்லாம் பணத்தில்தான். அடுத்தவருடைய நூறு ரூபாய் நோட்டு என்றாலும் அதைக் கையிலெடுத்து தடவிப் பார்ப்பான். நீங்கள் ஒரு பெண்ணைக் கூட அத்தனை பிரியமுடன் தொட்டிருக்க மாட்டீர்கள். அந்த நோட்டுக்கு உயிர் இருக்கிற மாதிரி அக்கறையுடன் தனது கரங்களால் மென்மையாகத் தடவிக் கொண்டிருப்பான். அவன் ரூபாய் நோட்டைப் பார்க்கிறபோது, எரியும் மெழுகுவர்த்தி அவனுடைய கண்களைச் சுடக் கூடும். ரூபாய் நோட்டு என்றால் ரூபாய் நோட்டுதான். அவனுடைய சிந்தனை எல்லாம் பணத்தைப் பற்றியதாகவே இருக்கும். எப்படி நிறையப் பயணத்தைப் பெற முடியும்?

சேதமடைந்த கப்பலில் இருந்து தப்பிய ஓர் ஆங்கிலேயரைப் பற்றியது..... தொலைதூரத் தீவொன்றின் கடற்கரையில். அவர் கரையேறிய போது, பனைமர நிழலில் நின்றிருந்த மற்றொருவன், 'உம்மைச் சந்தித்ததில் மகிழ்ச்சி' என்று வரவேற்றான். அந்த மனிதன் கேட்டான் 'ஈடன் (Eton)?' என்று.

'ஆமாம்' வந்தவர் பதிலளித்தார்.

'ஆக்ஸ்ஃபோர்டு?'

'ஆமாம்'

'காவலரா?'

'ஆமாம்'

'ஓரினச் சேர்க்கையாளரா?'

'இல்லை'

'அடப்பாவமே'

எது முக்கியம் என்பது உங்களைப் பொறுத்தது. எது முக்கியத்துவம் உடையது என்று என்னால் எப்படிக் கூறமுடியும்? என்னைக் கேட்டால் ஒன்றும் இல்லை என்றும் ஒவ்வொன்றுந்தான் என்றும் சொல்வேன்.

*நான்காம் கேள்வி:*

***எதுவுமே நிறைவான உணர்வைத் தருவதில்லை என்பதால் உண்டாகிற ஏமாற்றத்தில் என்ன செய்ய? தயவு செய்து விளக்குங்கள் ஓஷோ அவர்களே!***

இது உங்களுடைய அனுபவமாய் இருக்கும் பட்சத்தில், இந்தக் கேள்வியே எழுந்திராத. அப்படியிருக்க நீங்கள் எப்படிக் கேட்கிறீர்கள்? தன்னுணர்வற்ற நிலையில் தாழ்வான நம்பிக்கையில் எழுப்பப்பட்ட கேள்வியது. 'அமைதி கொள்ள ஒரு வழி இருக்கவே செய்யும். நான் போதி அளவு முயற்சிக்காமல் இருக்க லாம். என்னுடைய முழுச்சக்தியையும் நான் பயன்படுத்தாமல் இருந்திருக்கலாம். எனவே, அது திருப்தியளிக்காமல் போகலாம். ஆனால், முடிவான திருப்தியை அளிக்கக் கூடியதாய் எதுவும் இல்லை என்பதை நீங்கள் உணர்ந்திருந்தால் இந்தக் கேள்வி எழ முடியாது.

உங்கள் அனுபவத்திலும், புரிதலிலும் நீங்கள் இறுக்கம் தணிய முடியும். முடிவான திருப்தியைப் பற்றி எதற்காகக் கேட்பது? வாழ்க்கை உங்களுக்கு எதை வழங்கியதோ அதில் திருப்தியடை யாமல் இருப்பது எதற்காக? கணப்பொழுதே அடையப்பட்டாலும் அது திருப்தி தானே? ஏன் பேராசை கொள்வது? அவர் எல்லாமே வேண்டும் என்கிறார், எப்போதைக்குமாய். அவர் ஒரு பெண் ணிடம் காதல் கொண்டால் அந்தப் பெண்ணின் வயது கூடாமல் அப்படியே இருக்க வேண்டும் என்று அவர் விரும்புகிறார். அவள் அதே வயதில் எப்போதும் இருக்க வேண்டும் என்பது அவருடைய விருப்பம். தன்னளவில் அவருடைய வயது கூடி.

அவர் முதுமை அடைவார், அது வேறு விஷயம். ஆனால் அந்தப் பெண் இளமையாகவே இருக்க வேண்டும்.

இத்தகைய பேராசைக்காரர்கள்தாம் சொர்க்கம் பற்றிய கருத்து களைத் தோற்றுவித்தது. அவர்களுடைய சொர்க்கத்தில் பெண்கள் ஒருபோதும் கிழவிகளாவதில்லை. சொர்க்கத்தில் உள்ள எந்தப் பெண்ணுக்கும் வயது பதினாறைத் தாண்டாது. ஆனால், ஆண்களைப் பற்றி அது சொல்லவில்லை. மறை நூல்கள் ஆண்களால் எழுதப்பட்டவை என்பதும் காரணமாயிருக்கலாம். பெண்கள் மறை நூல்களை எழுதியிருந்தால், வேறு விதமாய் எழுதியிருப்பார்கள்: 'ஆண்களின் வயது எப்போதுமே பதினெட்டாக இருக்க வேண்டும்' என்கிற மாதிரி.

எல்லாவற்றின் மீதும் குற்றத் தீர்ப்பளித்துக் கொண்டிருக்கிற அதே மனிதர்கள் தாம், சொர்க்கத்தில் சாசுவதமாய் இருக்க வேண்டும் என்பதற்காக அதே பொருள்களுக்கு ஆயிரம் தரம் வாக்குறுதி அளிப்பார்கள்.

ஒரு மதம் மதுபானம் செய்வதைக் கடுமையாக எதிர்க்கிறது. ஆனால், அவர்களுடைய சொர்க்கம் பற்றிய விவரணையில் மது ஆறாய் பெருகியோடும். நீங்கள் மதுபானக் கடைக்குச் செல்ல வேண்டியிருக்காது. நீங்கள் மதுவைக் குடிப்பதோடு, மதுவிலையே நீந்திக் களிக்கலாம்.

பேராசைக்கார மனதின் சித்தரிப்பு இது. குடிப்பதற்குப் பதிலாக மதுவிலேயே குளிக்கத் தயாராகிறது ஆசை கொண்ட மனம்! கடையில் குடிப்பதால் கிடைக்கும் கணநேர மகிழ்ச்சியை விட, முடிவான மகிழ்ச்சியைப் பெற முடிகிறதே எப்போதைக்குமா!

அதே மதப்பற்றுடைய மனிதர்கள்தாம் பெண்ணுடம்பை வெறுத்தொடுக்கச் சொல்வது - எல்லா மதங்களுமே அந்தக் குற்றத்தைச் செய்திருக்கிறது. ஒன்று மட்டும் புரிகிறது. அந்த மறை நூல்களை எழுதியவர்கள் தங்கள் பாலுணர்வை அடக்கி வைக்கப் படாதபாடு பட்டிருப்பார்கள் என்பது. அவர்கள் பெண்களிடம் பேரச்சம் கொண்டிருக்க வேண்டும், தங்கள் இச்சையை வெளியில் தெரியாதபடி அடக்கி வைத்தவர்கள் அவர்கள்!

அவர்கள் எல்லோரிடமும் சொல்கிறார்கள்: 'பெண்களிடம் எச்சரிக்கையாயிருங்கள், பெண்கள் நரகத்தின் வாயில்கள்' என்று. அதே மனிதர்கள்தாம் சொர்க்கத்தில் உங்களுக்காக அழகான

பெண்களைப் படைத்து வைத்திருப்பது – மிக அழகான பெண்கள்! தேவலோகத்தில் பெண்களிடம் வியர்வையின் துர்நாற்றம் இருக்காது, அவர்களுக்கு வியர்க்காது. துர்நாற்றத்தை நீக்கும் பொருள்களும் அவர்களுக்கு தேவைப்படாது. அவர்களுடைய உடம்பில் பூக்களின் வாசம் வீசும். அது இயற்கையான நறுமணம், செயற்கையாயகத் தயாரிக்கப்படுகிறவையல்ல. அவர்களிடைய உடம்பு தங்கத்தினாலானது. எத்தனை பேராசை! தங்கச்சிலைகளை நீங்கள் என்ன செய்வீர்கள்! செயலற்று நிற்பீர்கள். ஆனால் பாருங்கள் பேராசை பிடித்தமனம் வியப்பூட்டும் கற்பனையில் இறங்கி விடுகிறது.

புனித நூல்கள் அனைத்திலுமே பாலுணர்வைத் தூண்டும் சமாச்சரங்கள் இருக்கின்றன. இச்சையைத் தூண்டும் இந்த இலக்கியங்களில் பெண்கள் தங்கத்தில் வார்த்தெடுக்கப்பட்டு, வைரங்களில் தங்களை அலங்கரித்திருப்பார்கள். அவர்களிடம் வியர்வை இருக்காது. இயல்பான நறுமணம் இருக்கும். அவர்கள் எப்போதுமே இளமையுடன், அழகுடன் இருப்பார்கள்.

புகழ்பெற்ற துறவியொருவர் செத்துப்போனார். ஒத்த நிகழ்வேபோல் அவருடைய முக்கியச் சீடரொருவரும் சில மணிநேரங்களிலேயே இறந்துவிட்டார். அந்தச் சீடர் தங்களுடைய குருவை மறுபடியும் பார்க்கத் துடித்தார். வழியில் அவருடைய சிந்தனை இப்படி இருந்தது. 'சொர்க்கம் பூமியில் இருந்து நெடுந்தொலைவில் இருக்கிறது. தங்கள் இசைக்கருவிகளை வாசித்துக் கொண்டு தேவதைகள் எனது குருவை வரவேற்பார்கள். நடனசிங்காரிகள். அவரை உபசரிப்பார்கள். அவர் மிகப்பெரிய மகான், துறவி என்பதால் பேரழகிகளை அவருக்கு வழங்கி யிருப்பார்கள். பூமியில் இருந்தபோது பெண்களையே அவர் தொட்டதில்லை, தொட்டுப் பார்க்கிற அளவுக்குப் போவானேன். பெண்களைத் தமது வீட்டுக்குள் கூட அவர் அனுமதித்ததில்லை. எந்தப் பெண்ணின் முகத்தையும் அவர் ஏறிட்டு நோக்கியதில்லை. பெண்களிடம் பேச நேரிடுகிற சந்தர்ப்பங்களிலும் ஒன்று தரையைப் பார்த்தபடியோ அல்லது கண்களை மூடிக் கொண்டோதான் பேசுவார். எப்படிப்பட்ட தன்னொழுக்க விதிகளையெல்லாம் அவர் கடைப்பிடித்திருக்கிறார்! கண்டிப்பாய் அவருக்கு வெகுமதிகள் வழங்கப்பட்டே தீரும்' என்பதாய்.

சொர்க்கத்தைச் சென்றடைந்ததும் தமது குருவை அவர் கண்டார். உண்மையிலே குருவிற்கு வெகுமதிகள் வழங்கப்பட்டிருந்தது. அவர் ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்தார். பொன் மயமான அழகிய மரம் அது. அதன் இலைகள் மரகதங்களாகவும், பூக்கள் வைரங்களாகவும் இருந்தன. மர்லின் மன்றோ நிர்வாண தேகியாய் அவரைத் தழுவிக் கொண்டிருந்தாள். அந்தச் சீடர் தமது குருவின் பாதம்பணிந்து சொன்னார், 'எங்களின் மகத்தான குருவே! இது உங்களுக்குக் கொடுக்கப்பட வேண்டியது. நீங்கள் நன்றாகவே சன்மானிக்கப்பட்டிருக்கிறீர்கள்' என்று.

குரு சொன்னார், 'முட்டாளே; உன்னுடைய பெரிய வாயை மூடிக்கொள். நீ எந்த வகையிலும் வளர்ச்சியடையவில்லை. அவள் எனக்குப் பரிசாக வழங்கப்படவில்லை. நான் அவளுக்குத் தண்டனையாக வழங்கப்பட்டிருக்கிறேன்' என்று.

ஆனாலும் இந்த பேராசை பிடித்தவர்கள்...

எல்லாமே அற்ப மகிழ்ச்சியைத் தந்து முடிவில் ஏமாற்றத்தையே தரும் என்பதை உங்கள் அனுபவத்தில் அறிவீர்கள். அப்படியிருக்க அந்தக் கணத்தில் ஏன் மகிழ்ச்சியற்றிருப்பது? ஏன் அது எப்போதைக்குமாய் வேண்டும் என்று கேட்பது?

கணநேர மகிழ்ச்சியற்ற நான் உங்களுக்குக் கற்பிக்கிறேன். இந்தக் கணத்தில் வாழுங்கள், கணப் பொழுதில் எது கிடைக்கிறதோ அதில் மகிழ்ச்சி காணுங்கள். இந்தக் கணத்தைக் கொண்டாடுங்கள். அது இருக்கும் வரை ஆடிக் களியுங்கள். அது சென்று மறைகிற போது, நன்றியுணர்வோடு இருங்கள். 'எதுவும் முடிவான மகிழ்ச்சியைத் தரவில்லை - எதுவுமே போதவில்லை' என்று கேட்காதீர்கள். அது குறித்து நீங்கள் எதுவும் செய்வதற்கில்லை. இது அப்படித்தான் இருக்கிறது. மெய்மமையின் விதி ஒரு போதும் மாறாமலே இருப்பது. யாருக்கும் விதிவிலக்காய் எதுவும் வழங்கப்படுவதில்லை.

வாழ்க்கையை இருக்கிறபடிக்கு ஏற்றுக் கொள்ளுங்கள். இன்னும் கிடைக்கக் கூடும் என்று நீங்கள் நம்புவீர்கள். ஆனால், புரிந்து கொள்ளும் திறன் மேம்படுகிற போது, நம்பிக்கை மறைந்துவிடும். வாழ்க்கை எதைக் கொடுத்தாலும், எவ்வித முணுமுணுப்பும் இல்லாமல் நன்றியோடு ஏற்றுக் கொள்ளுங்கள்.

இரயில்வேயில் வேலை பெறுவதற்காக ஆஞ்செலோ ஒரு சோதனையில் தேர்ச்சி பெற வேண்டியிருந்தது. 'ஒரே தண்ட வாளத்தில் இரண்டு இரயில்கள் நூறு மைல் வேகத்தில் வருகின்றன.

அந்த நிலையில் நீங்கள் என்ன செய்வீர்கள்? பணிப்பிரிவு மேலாளர் கேட்டார்.

'நான் சிவப்புக் கொடியை அசைத்து அவற்றை நிறுத்தப் பார்ப்பேன்' ஆஞ்செலோ விடையளித்தார்.

'ஆனால் உங்களிடம் சிவப்புக் கொடி இருந்திருக்கவில்லை' என்று சுட்டிக் காட்டினார் அதிகாரி.

'அப்போது 'சுவிட்ச் அயர்ன்' கொண்டு இரயில்களின் தடத்தை மாற்றுவேன்'

'உங்களிடம் சுவிட்ச் அயர்னும் இல்லை'

'நல்லது. அந் நிலையில் என்னுடைய மனைவி மரியாவை நான் அழைப்பேன்' என்றார் அந்த இத்தாலியர்.

'இரண்டு ரயில்கள் நூறு மைல் வேகத்தில் ஒன்றை நோக்கி ஒன்று வருகிறபோது உங்கள் மனைவி என்ன செய்வார்?' ஆட்களைப் பணியமர்த்தும் அதிகாரி ஆச்சரியத்தோட கேட்டார்.

'உலகிலேயே மிகப்பெரிய விபத்து நடக்கப் போகிறது. அதை நீ பார்க்க வேண்டும் என்று அழைப்பேன்'.

உங்களால் முடிந்ததை நீங்கள் செய்ய முடியும். எதுவும் செய்ய முடியாத போது, மனைவியை 'வந்து பார்' என்று அழைத்து அதில் மகிழ்ச்சி அடையலாம். வாழ்க்கையின் மகிழ்ச்சியைப் போலவே வருத்தங்களையும், பரவசங்களைப் போலவே துயரங்களையும் அனுபவிக்கக் கற்றுக் கொள்ளுங்கள். துயரங்களிலும் மகிழ்ச்சி காண்பவர் விடுதலை (liberation) பெறுகிறார்.

*ஐந்தாம் கேள்வி:*

***'ஒஷோ அவர்களே! நான் இங்கிருந்த ஒரு புது வகை சர்வாதிகார முறை பற்றிய அச்சம் வந்து விட்டது. எல்லா வற்றிலும் முழுதாய் இருக்கும்படி (total) சுட்டிக்காட்டப்பட்டது. துண்டு துணுக்குகளாய் சிதறாமல் முழுவதுமாய் இருப்பதே செயல்முறையின் இறுதி நிலை ஆகுமா? இது ஏமாற்றங்***

*களையும், நரம்புத்தளர்ச்சியையும் தரக்கூடிய ஒரு புதிய கருத்தியலைத் தோற்று வித்து விடாதா? எப்படியாயினும் அத்தனை மதி நுட்பமில்லாத எனக்கு எதிலும் முழுவதுமாய் இருப்பதும், எதையும் முழுமையாய் செய்வதும், முழுமையாய் உணர்வதும் அரிதான காரியம். அது தொடர்ந்து நிகழும் என்று நம்புவதற்கான காரணம் எதுவும் என்னிடமில்லை. இதுதான் நிலைமை என்கிறபோது இன்னும் நம்பிக்கை வைக்க என்ன இருக்கிறது?'*

முழுவதுமாய் இருப்பது (totality) என்பது ஒரு குறிக்கோளல்ல. அது முழு நிறைவு அடைய வலியுறுத்தும் கொள்கை (perfectionism) யுமல்ல. முழுவதுமாய் இருப்பதென்பது வாழ்க்கையை முற்றிலும் வேறான ஒரு பார்வையில் பார்ப்பது. உதாரணமாக, நீங்கள் கோபமாயிருக்கிறீர்கள், தலை கால் புரியாத கோபம். அப்போது முழுவதுமாய் வெளிப்படாமல் உள்ளேயே தங்கி விடுகிற கோபத்தின் மிச்சம் நச்சுத் தன்மை அடையும்.

இப்படியே தொடர்ந்து ஆகிறபோத உங்களுக்கும் நச்சுத் தன்மை திரட்சியடையும். பிறகு, கோபப்பட காரணமேயில்லாத நிலையிலும் கோபப்படுவீர்கள். மக்கள் இப்படித்தான் இருக் கிறார்கள். எவ்வித நியாயமுமில்லாமல் எடுத்ததற்கெல்லாம் கோபப்பட்டுக் கொண்டு, காரணம் கடந்த காலத்தில் அவர்கள் அடக்கி வைத்திருந்த கோபங்கள் அவர்களுடைய இரத்த ஓட்டத்தில் கலந்து, நச்சுத்தன்மை அடையச் செய்திருக்கும். அது அவர்களுடைய உடம்பில் ஒரு தவறான வகை தசைப்பண்பை உண்டாக்கும். அது வாழ்க்கையின் அருமையான பல விஷயங் களைச் சிதைத்து விடும்.

அத்தகைய மனிதனொருவன் சூரிய அஸ்தமனத்தைப் பார்த்தால், அதில் எந்த அழகையும் அவனால் பார்க்க முடியாது. அவனுக்குள் அப்படியொரு சீற்றம் பரவியிருக்கும். இசையைக் கேட்கிற போதும் அவனால் இசையில் இலயிக்க முடியாது. ஏனெனில், ஒரு சிறந்த இசையைக் கேட்பதற்கு நீங்கள் எவ்வித இறுக்கமும் இல்லாமல் தணிவு நிலையில் (relaxed) இருக்க வேண்டும். அவனால் கடுமை தளர்ந்து, ஓய்வான மனநிலையில் இருக்க முடியாது. அவன் பல்வேறு மன நெருக்கடிக்குள் ளாகியிருப்பவன் அவனுடைய வாழ்க்கை நெடுகிலும் இறுக்கங்கள் தான்.

'முழுவதுமாய் இரு' என்கிறபோது, ஒரு 'சூப்பர்மேன்' கருத்தியலை நான் உங்களுக்கு வழங்கவில்லை. மிகச்சரியாக ஒரு மனிதனுக்குரிய பார்வையே - 'கோபம் வந்தால் கோபப்படு' என்கிற மாதிரி, நான் வழங்குகிறேன். அதை அடக்கி வைக்கா தீர்கள். யாரிடமாவது கோபப்படுவது ஆபத்து என்று தெரிந்தால், அறைக்குள் சென்று தனியாக இருந்து கொள்ளுங்கள். ஆனால், அந்தக் கோபத்தை வேறு வகையில் வெளிப்படுத்தி விடுங்கள். தலையணையை அடித்து நொறுக்குவது, சுவற்றை நோக்கிக் கூச்சலிடுவது, உங்கள் மனைவியைப் போல் படம் வரைந்து அதைச் செம்மையாகப் புடைப்பது (மனைவி இல்லாத போது) வசைமாரி பொழிவது - இப்படி. உண்மையிலேயே உங்கள் மனைவியை எப்படித் தண்டிக்க விரும்புவீர்களோ அப்படிச் செய்யுங்கள்.

உங்கள் மனைவியின் மாதிரி உருவத்தை (effigy) அல்லது நீங்கள் மனைவியாயிருந்தால் கணவரின் மாதிரி உருவத்தை வைத்திருப்பது நல்லது. அவசியமேற்படுகிற போது அதைத் திட்டி, அடித்து உங்கள் ஆத்திரத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். அப்படிப் பழி தீர்த்துக் கொள்வதில் ஆபத்தில்லை. உங்கள் மனைவி இல்லாத நிலையில் அவளை அருவருக்கத் தக்க வார்த்தைகளில் திட்டி, அடித்து முடித்த பின், நேரில் பார்க்கிற போது உங்கள் மன உணர்வு வியக்கத்தக்க பரிவாக நடந்து கொள்வீர்கள். மன்னிப்புக் கேட்கவும் தயாராகி விடுவீர்கள். உங்களால் அவளை முற்றிலும் மாறுபட்ட முறையில் பார்க்க முடியும். காரணம், அதுவரை உங்களுக்குள் இருந்த கோபத்தின் நுண்ணிய அடுக்கை அப்போது நீங்கள் சுமந்திருக்கமாட்டீர்கள். அதுதான் முன்பே வெளிப்பட்டு விட்டதே. அவளுடைய முகத்தைப் பல வருடங்களுக்குப் பிறகு பார்ப்பது போல் இருக்கும்.

'முழுவதுமாயிரு' என்கிறபோது எதையும் அடக்கி வைக்க வேண்டாம் என்றே நான் குறிப்பிடுகிறேன். காரணம், நீங்கள் அடக்கி வைத்தது உங்களையே திருப்பித் தாக்கத் தொடங்கி விடும். ஒரு நாள் உங்களைப் பழிவாங்குகிற மாதிரி அவை வெடித்துக் கிளம்பும். உலகில் நரம்புத் தளர்ச்சி, மன உபாதை கொண்டவர்களை, அந்த அடக்கி வைக்கப்பட்ட உணர்வுகளை உருவாக்கிக் கொண்டிருக்கின்றன. முழுவதுமாயிரு என்பது ஒரு குறிக்கோளாகாது. அது ஒரு வாழ்க்கை முறை.

'துண்டு துண்டுகளாய் சிதறாமல் முழுவதுமாய் இருப்பதே இறுதி நிலை ஆகுமா?' என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

ஆம், அதுதான் இறுதி நிலையுமாவது - ஆனால் முதல் நடவடிக்கையே கடைசி நடவடிக்கையும் ஆகும். எது தொடக்கமாயிருந்ததோ அதுவே முடிவும் ஆகிறது. அதுவே வழி வகையாயும், முடிவில் அடையப்படுவதாகவும் இருக்கிறது. நீங்கள் தொடங்கியிருக்கிறீர்கள். இப்போதே நீங்கள் முழுமையடைய முடியாது என்பது எனக்குத் தெரியும். கொஞ்சம் கொஞ்சமாகத்தான் முழுப்பகுதியாக முடியும். சமூகம் எதிலும் உங்களை முழுவது மாயிருக்க விடாது. அது உங்களை அக்கறையற்றவராக்கி விடும். உங்கள் இருப்புணர்வின் விருப்பத் திறனை பறித்துக் கொண்டு விடும். எனவே உங்களால் கோபத்தை முழு அளவில் வெளிப்படுத்த முடியாது. எதையும் முழுமையாய் பகிர்ந்து கொள்ள முடியாது. அது காரணமாகவே உங்கள் முகத்தில் ஏகத்துக்கு புழுதிபடிந்திருக்கிறது.

முழுவதுமாய் இருக்கும் தன்மை (totality) என்பது தொடங்கப்பட வேண்டியது. அதுவே தொடக்கமும், முடிவுமா யிருப்பது. தொடக்கத்தில் அது இடர்ப்பாடாய் தெரியும், காரணம் சமூகத்தின் போக்கிற்கு (current) எதிராக நீங்கள் போகும்படி இருக்கும். ஆனால், சந்நியாசிகள் அதைத்தான் செய்ய வேண்டி யிருக்கும். செய்தால்தான் சந்நியாசி. அது - தானாகவே இருப்பதற்கான துணிவு. நீங்கள் தற்போதே முழுமையடைய வேண்டும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், அது பற்றிய தீர்மானம் உதவுவதாயிருக்கும். நீங்கள் முழுவதுமாய இருப்பதென்று முடிவெடுத்து விட்டால் மெல்ல மெல்ல, படிப்படியாய் முழுதுமான் நிறைந்து விடுவீர்கள். சிறு சிறு அலகுக் கூறுகளில் (degrees) என்றாலும், ஒரு நாள் நூறு அலகுக் கூறுகளை எட்டி விடுவீர்கள். ஒருவர் தமது உணர்ச்சிகளில் நூறு சதவீதம் ஊடுருவ முடியும் என்றால், தவறானவைகள் எல்லாம் மறையத் தொடங்கி விடும். சரியானவைகள் வளர்ச்சியடையத் தொடங்கும். உண்மையிலேயே முழுமையடைந்த ஒருவரால் கோபப்பட முடியாது. தொடக்கத்தில் கோபம் அதிகரித்தபடி இருக்கும். ஆனால் சீக்கிரமே கோபம் முழு அளவை எட்டிய நிலையில் அந்தக் கோபத்தில் பயனில்லை என்பது தெரிந்து விடும். புத்தர்

சொல்லியோ, நான் சொல்லியோ தான் அது புரிய வேண்டும் என்பதில்லை. கோபத்தின் ஏற்புடைமையற்ற தன்மையை (நகைக்கத்தக்கதாயிருப்பது), பித்து நிலையை நீங்களே கண்டு கொள்வீர்கள். நீங்கள் அதைப் புரிந்து கொண்டு விட்டால் அது விலகிவிடும். நீங்கள் அதைவிட வேண்டியதில்லை. அது தானாகவே விட்டுவிடும்.

முழுமையானவர் நேசிக்கும், திறனுடையவராக, வெறுக்கும் திராணியற்றவராக இருப்பார். அவரால் பரிவு காட்ட முடியும், கோபப்பட முடியாது. நீங்கள் இப்போதே புத்தாவாகி விட வேண்டும் என்று நான் கூற மாட்டேன். புத்தாவாகிற போக்கை ஒருவர் மேற்கொள்ள வேண்டும். நீங்கள் சொல்வது சரியே. அதுதான் செயல்முறையின் இறுதிநிலை. ஆனால் ஒன்றை நினைவில் கொள்ளுங்கள். வழியே, முடிவில் சென்றடையும் இடமாகவும் இருக்கிறது. வழியும், குறிக்கோளும் பிரித்துப் பார்க்கும் படி வேறானவையல்ல. வழியின் மறு முனையில் குறிக்கோள் உள்ளது. வழி தொடக்கத்தையும் முடிவையும் இணைக்கும் பாலமாக இருக்கிறது.

நான் முழு நிறைவுக் கொள்கை (Perfectionism) யின் எந்தவொரு வகையும் உங்களுக்குக் கற்பிக்கவில்லை. எந்தவொரு கருத்தியலையும் (ideal) நான் உங்களுக்கு வழங்கவில்லை. முழுதாயிருப்பது நிச்சயமாய் ஒரு கருத்தியல் அல்ல. அது ஒரு மாறுபட்ட வாழ்க்கை முறை. தற்போது நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பது பகுதி சார்ந்த (Partial) வாழ்க்கைமுறை – ஒரு சார்புடையது. உங்கள் இருப்புணர்வின் ஒரு பகுதி மட்டுமே மேற்பரப்பில் இடம் பெற்றிருக்கிறது – அது பனிப்பாறையின் முனைப்பகுதி மட்டுமேயாகும். நீங்கள் பகுதிகளாய் வாழ்கிறீர்கள், பிளவுபட்ட துண்டுகளாய், இது ஒரு வகை மனக் கோளாறுள்ள (Schizophrenic) வாழ்க்கை.

* Schizophrenic – உளச்சிதைவு காரணமாய் எண்ணம் செயல் இவை ஒன்றுக்கொன்று மாறுபடுவது.

அதன் விளைவாகவே துன்பம்.... பெருந் துன்பம் மட்டுமே. ஒன்றாகி, ஒன்றாக இணைந்திருப்பதன் விளைவே பரமசுகம் (bliss). அதுவே 'யோகா' என்கிற சொல்லிற்கு மிகச் சரியான பொருள் – இணைப்பு, ஒன்றாக இருத்தல், ஒருங்கிணைக்கப்படுதல்.

'அது தொடர்ச்சியாய் நிகழும் என்று நான் நம்புவதற்கு எந்தவொரு காரணமுமில்லை' என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

அதைத் தொடர்ச்சியாய்க் கொள்ளும்படி உங்களுக்கு யார் சொன்னது? நாம் எதற்காக வருங்காலத்தைப் பற்றிச் சிந்திப்பது, செயல் நிலைகளை ஏன் தேவையில்லாமல் கடினமாக்குவது? ஒரு குறிப்பிட்ட காரணத்துக்காக செயல் நோக்கம் (motive) இருக்க வேண்டும். முதலில், ஒன்றை நீங்கள் கடினமாக்கி விடுகிறீர்கள், பிறகு சொல்கிறீர்கள், 'இது சாத்தியமில்லை, என்னால் அதைச் செய்ய முடியாது' என்று. அதோடு தீர்ந்தது. அது முழுமையடைய வேண்டும் என்கிற அவசியமில்லை. தொடர்ச்சி தேவைப்படாது.

அதனால்தான் முரணாகவும், முரணுடன் ஓரளவு உண்மை கலந்ததாகவும் அது காணப்படுகிறது. சில சமயம் நீங்கள் முழுமையடையாத ஒன்றில் பிற்பாடு முழுமையடைவீர்கள். 'இந்தக் கணத்தில் நான் முழுமையாயில்லை' என்பதை ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் பலவீனத்தை மறைக்க முயலாதீர்கள். எதிர்த்துப் போரிடாதீர்கள். முடியாத நிலையில் குற்ற உணர்வு கொள்ள வேண்டாம். நீங்கள் எந்தக் குற்றமும் செய்து விடவில்லை. நடக்கும் என்றால் நடக்கும், நடவாது என்றால் நடவாதுதான். இது உங்கள் வாழ்க்கை சில நேரங்களில் முழுமையடைவதில் மகிழ்ச்சி இருக்கும். சில நேரங்களில் ஒரு பகுதியாய் இருப்பதும் மகிழ்ச்சியளிக்கும்.

*ஆறாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! ராஜ்கோட்டில் இருந்து வெளியாகிற 'ஜெய்ஹிந்த்' என்கிற செய்தித்தாள், பிரதமர் மொரார்ஜி சொன்னதாய் ஒரு விஷயத்தை மேற்கோள் காட்டியிருக்கிறது. மேற்கத்தியர்கள் இந்த ஆசிரமத்துக்கு வருவது பற்றி அவர் சொல்கிறார்: 'அவர்கள் மேறகத்திய குப்பைகள், தங்கள் சமூகங்களில் இருந்து வீசி யெறிப்பட்டவர்கள்' என்று.***

'ஓஷோ சர்வதேசப் பல்கலைக் கழகம்' பற்றி அவரிடம் கேட்கப்பட்டபோது, அத்தகைய பல்கலைக்கலைக்கழகங்கள் எங்கிருந்தாலும் மூடப்பட வேண்டும்? தாங்கள் பாலியல் பற்றிப் பேசுவதையும் தாம் விரும்பவில்லை என்கிறார் அவர்.

அவை அருவருக்கத்தக்கவை, தேவையற்றவை. உலகில் எங்கிருந்தாலும் மூடப்பட வேண்டும்? என்கிறார் அவர். தங்களுடைய கருத்து என்ன?

'அதை விடுங்கள், அசிங்கம் பிடித்த கழிவு!'

*கடைசிக் கேள்வி:*

***தாங்கள் இப்படி அரசியல்வாதிகளை நேரடியாகத் தாக்க வேண்டுமா? கொஞ்சம் மறைமுகமாய், தந்திரமான வார்த்தை களைப் பயன்படுத்தக் கூடாதா?***

என்னுடைய கருத்தை நேரடியாகச் சொன்னாலும், மறை முகமாய் சொன்னாலும் அவர்கள் புரிந்து கொள்ள மாட்டார்கள். அவர்கள் புரிந்து கொள்வார்கள் என்கிற நம்பிக்கையும் எனக்கில்லை. அவர்கள் என்னுடைய நேர்மையான, தெளிவான, வெட்டொன்று துண்டிரண்டாய் பேசுகிற வார்த்தைகளையே புரிந்து கொள்ளாதவர்கள். எதையும் இருக்கிறபடிதான் பேசுகிறேன், எதிலும் பொடி வைத்துப் பேசுவதில்லை. அதைக்கூட அவர்களால் புரிந்து கொள்ள முடிவதில்லை.

உண்மையில் மூன்றாந்தர அறிவுடையவர்கள்தாம் அரசியலில் விருப்பம் காட்டுவது. அறிவுத்திறன் மிக்கவர்கள் வேறு எதிலாவது இறங்கி விடுவார்கள். ஒருவர் விஞ்ஞானியாகி விடுவார், ஒருவர் கவிஞராகவோ, இசைக்கலைஞராகவோ வரக் கூடும். அவர்கள் அரசியல்வாதியாக விரும்புவதில்லை. தங்களை வேறு வழிகளில் வெளிப்படுத்திக் கொள்ள முடியாதவர்கள்தாம் அரசியலுக்கு வருகிறார்கள்.

அரசியல்வாதிக்கென்று பிரத்யேகமாய் எந்தவொரு தகுதியோ திறமையோ தேவைப்படுவதில்லை. உண்மையில் எந்த அளவிற்கு அவர் அறிவுக் கூர்மையற்றவராக இருக்கிறாரோ அந்த அளவிற்கு அவர் வெற்றி பெற்று விடுவார்.

புதுதில்லிக்கு ஒரு சுற்றுலாப் பயணி வந்தார். ஒரு பின் மாலைப் பொழுதில் பக்கவாட்டுத் தெருவொன்றில் நடந்து போய்க் கொண்டிருந்தார். அங்கே ஒரு கொள்ளைக்காரன் அவரை மடக்கி, 'பணத்தை எடு. இல்லேன்னா மூளை சிதறிடும். மண்டையை உடைச்சிருவேன்' என்று மிரட்டினான்.

'உடைச்சிக்கோ' என்றார் பயணி.

புதுதில்லியில் நீங்கள் மூளை இல்லாமல் வாழ முடியும். ஆனால், பணம் இல்லாமல் இருக்க முடியாது. நான் நேரடியாக வருகிறேன். நான் அரசியல்வாதியல்ல. பிறகெதற்கு நான்

தந்திரங்களைப் பயன்படுத்துவது? உண்மை ஒரு போதும் தந்திர மானதல்ல - அது ஒளிவு மறைவற்றது.

நான் இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பதை அரசியல்வாதிகளால் புரிந்து கொள்ள முடியாது. அத்துடன். நானும் அவர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்று எதிர்பார்க்கவில்லை. அவர்கள் நம்மைப் புறக்கணித்தாலும் நமக்குச் சிறப்புதான். அவர்கள் நம்மை கவனிக்காவிட்டாலும் நம்முடைய மேன்மை குன்றிவிடாது.

ஒரு ஜெர்மானிய தத்துவத்தை மேதை இட்லரிடம் வேண்டிக் கொண்டார். 'யூதர்களின் அறிவுக் கூர்மைக்காக, அவர்களைத் தவறான முறையில் நடத்தாதீர்கள்' என்று.

'எது உங்களை யூதர்கள் அறிவாளிகள் என்று எண்ணச் செய்தது?'

'வாருங்கள், நான் உங்களுக்குக் காண்பிக்கிறேன்'

அவர் நாஜித் தலைவரை 'குட்மான்ஸ் கிஃப்ட்ஷாப்' பிற்கு அழைத்துச் சென்றார். 'ஒரு, 'லெஃப்ட் ஹாண்ட்ட் டீ பாட்' (tea - pot) வேண்டும் என்று கேளுங்கள்' என்றார்.

இட்லரும் அவ்வாறே கேட்டார். குட்மான் கடையின் பின்பகுதிக்குச் சென்று ஒரு 'டீபாட்'டை எடுத்து வந்தார். அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்து விட்ட, 'இந்தாருங்கள்' நீங்கள் அதிர்ஷ்டக் காரர். 'I just happen to have one left' (ஒன்று மிச்சமிருந்திருக்கிறது என்ற பொருளில்) என்றார்.

கடையில் இருந்து வெளியில் வந்ததும், தத்துவமேதை சொன்னார், 'பார்த்தீர்களா, அதுதான் நான் சொன்ன யூதர்களின் அறிவுக் கூர்மை என்று,

'இதில் அறிவுக் கூர்மை என்று சொல்ல என்ன இருக்கிறது. தன்னிடம் ஓர் இடது கை இருக்கிறது என்று சொன்னார். அவ்வளவு தானே' என்றார் இட்லர்.

நீங்கள் அரசியல் வாதிகள் அதிகம் புரிந்து வைத்திருப்பார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. அவர்கள் என்னுடைய நேரடியான சொற்களையும் தவறாகவே புரிந்து கொள்வார்கள்.

அது வெள்ளிக்கிழமை இரவு. லெவி தம்முடைய கடையை மூடிவிட்டு, தேவலாயப் பிரார்த்தனைக்குச் சென்றார். தமது கால்

சட்டை 'ஜிப்' ஏற்றி விடப்படாமல் இருந்ததை அவர் கவனிக்க வில்லை. தேவாலய நுழைவாயிலில் மகளிர் சேவை அமைப்புத் தலைவி திருமதி. வெய்ஸ் என்பவர் எதிர்ப்பட்டார். அவர் லெவியிடம், 'என்னால் சொல்லாமல் இருக்க முடியவில்லை. உங்கள் கடை திறந்திருக்கிறது' என்றார் கூச்சத்துடன்.

'சீமாட்டி அவர்களே! தாங்கள் சொல்வது தவறு' என்றார் லெவி.

'நம்புங்கள். உங்கள் கடை திறந்திருக்கிறது' என்றார் திருமதி. வெய்ஸ். அதைச் சொல்லும் போது அவருடைய முகம் நாணத்தில் சிவந்தது.

'உங்களுக்கென்ன கிறுக்கா? வெள்ளிக்கிழமை தோறும் கடையை மூடி விட்டுத்தானே இங்கே வருகிறேன்' என்று உரத்த குரல் சொல்லி விட்டு, உள்ளே சென்றார் லெவி.

வீட்டுக்குத் திரும்பிய போதுதான் காற்சட்டை 'ஜிப்' ஏற்றிவிடப்படாமல் இருந்ததைக் கண்டார். திருமதி. வெய்ஸ் பண்பு நயத்தோடு அதைச் சுட்டிக் காட்ட முற்பட்டதைப் புரிந்து கொண்டார். உடனே அந்தப் பெண்மணியை தொலைபேசியில் அழைத்து, 'நான் தங்களிடம் மன்னிப்புக் கேட்க விரும்புகிறேன். ஆனால் ஒன்றை மட்டும் சொல்லி விடுங்கள். என்னுடைய கடை திறந்திருந்த போது என்னுடைய சேல்ஸ்மேன் உள்ளே இருந்தானா, வெளியே இருந்தானா?' என்று கேட்டார்.

இன்றைக்கு இவ்வளவில் நிறுத்திக் கொள்வோம்.

○

விரல்களால் பதிவு செய்யப்படாத
இசையை நீ கேட்டிருக்கிறாயா
வீட்டின் உட்புறத்தே அந்த இசை
வெகு தொலைவில் சிக்கிக் கிடக்கும்
வீட்டை விட்டு நீ வெளிச் செல்வதில்
பொருளேதுமிருக்கிறதோ?

உன் ஒழுக்கத்தின் தோல் பளபளக்கும்வரை
நீ உரசுவதால் என்னவாகும்?
உள்ளே இசையேதும் இல்லையெனில்
பிறகு என்னதான் நடக்கும்?
முகமது வின் குமாரன் வார்த்தைகளில்
கவனம் வைக்கிறான்

அதோ, இதோ வென்று சுட்டிக் காட்டுகிறான்
அனால், அவனது நெஞ்சம்
அன்பில் மூழ்காவிடில் என்ன பயன்?
யோகி செம்பஞ்சுநிற உடையை
உடுத்தியிருப்பான், ஆனால்
உள்ளுக்குள் நிறமற்றவனாயின்
என்னாவது?

கபீர் பேசுகிறார்:

'சூரியன் உதிக்கிற ஒவ்வொரு நேர்விலும் நான் கோயிலிலோ அல்லது பால் கனியிலோ சுட்டெரிக்கும் மணற் பரப்பிலோ சுவரெழுப்பிய தோட்டத்திலோ எங்கே நின்றிருந்தாலும் என் தலைவன் என்னை நேசிக்கவே செய்வான்.'

எது கடவுள்? இப்படியொரு கேள்வி கேட்கப்பட்ட கணத்தில், ஒரு தனி நபர் பற்றிய கருத்து மனதில் தோன்றியது - கடவுள் ஒரு தனிநபரல்ல. கடவுளை ஒரு நபராகக் கருதிக் கொள்கிறவர் தொடக்கத்தில் இருந்தே ஒரு தவறான திசையில் செல்லத் தொடங்குகிறார். அவர் ஒரு போதும் சென்றடைவதில்லை. ஒரு வட்டத்துக்குள்ளாகவே சுற்றிச் சுற்றி வருவார், வெகுவாய் பயணம் செய்தும் எங்கேயும் போய்ச் சேர்வதில்லை.

எடுத்து வைக்கிற முதல் அடியே தவறாகிப் போனால் பிறகு மற்றவைகளும் தவறாகிவிடும். முதல் அடி முற்றிலும் சரியாக இருக்க வேண்டும். காரணம் முதலில் எடுத்த வைக்கிற அடி சரியாக இருந்து விட்டாலே பாதிப்பயணம் முடிந்த மாதிரி. உண்மையில், உங்களைப் பொறுத்தவரை முதல் அடியே முழுப் பயணம் என்று சொல்லலாம் - காரணம், அடுத்த அடி கடவுள் உங்களை நோக்கி எடுத்து வைப்பதாயிருக்கும்.

ஓர் அடியை நீங்கள் வைக்கிறீர்கள். மற்றொரு அடியை (நேர் எதிர்த்திசையில் இருந்து) கடவுள் எடுத்து வைக்கிறார். கடவுளுக்கும் உங்களுக்கும் இடையே இரண்டு அடிகள்தாம் உள்ளன. முதல் முயற்சியை நீங்கள்தான் மேற்கொள்ள வேண்டும்.

கடவுள் ஒரு நபரல்ல. அவர் ஓர் இருப்பு (Presence). கடவுள் ஒரு பொருளல்ல. தத்துவம் தனிச் சிறப்புமிக்க ஒரு தத்துவம். அந்தக் கடவுளை ஒரு தத்துவமாக நீங்கள் புரிந்து கொண்டதும், உங்கள் வாழ்க்கையே மாறத் தொடங்கி விடுகிறது. பிறகு நீங்கள் கடவுளைப் பற்றி விவாதம் செய்வதில்லை. அத்துடன் இறைமையியலிலும் உங்களுக்கு ஆர்வம் போய்விடுகிறது. ஒட்டு மொத்த இறைமையியலும் (theology) உங்களுக்கு முட்டாள் தனமாய் தெரியும். அதன் பிறகு, முற்றிலும் மாறுபட்டதோர் வழியில் நீங்கள் செல்லத் தொடங்குகிறீர்கள், மாறுபட்ட பரிமாணத் துடன்.

கடவுள் ஒரு தத்துவம் என்றானால், அப்போது உங்கள் வாழ்க்கையில் ஒரு திட்டவட்டமான பொருளை (meaning) நீங்கள் உருவாக்கிக் கொள்ள வேண்டும். நீங்கள் அதிக தெரிநிலையும், நேசமும், அழகுணர்வும், நுட்பத்தன்மையும் கொண்டவராகி விட வேண்டும்.

கடவுள் ஒரு நபராக இருந்தால் அணுகுமுறை முற்றிலும் வேறாகி விடும். கடவுள் ஒரு நபரல்ல, எங்கும் பரவுகிற நறுமணம். அந்தத் தத்துவத்தை, நறுமணத்தை, நல்லிசையை அறிந்துகொள்ள பெரிய அளவிலான நட்பு உணர்வு உங்களுக்குத் தேவைப்படும்.

இன்று, இந்தச் சூத்ரங்கள் மூலம் அதி முக்கியமான கருத்தை வெளியிடுகிறார் கபீர்.

அவருடைய வார்த்தைகளைக் கவனியுங்கள், கேட்டால் போதாது, கூர்ந்து கவனியுங்கள். கூர்ந்து கவனித்தால் மட்டும் போதாது அவரோடு சேர்ந்து சிந்தியுங்கள். அவர் ஒரு தத்துவ மேதையல்ல, சிந்தான முறையை விவரிப்பவருமல்ல. அவர் ஒரு கவிஞர். தன்னுடைய அனுபவத்தை கவிதையாக்குகிறவர். அவர், தன்னுடைய இதயத்துடிப்புகளைப் பாட்டாக்குகிறவர். தன்னையே வார்த்தைகளாக்கித் தருகிறவர்.

அந்தப் புகழ் பெற்ற கவிஞரின் இறை நேருணர்வைப் புரிந்து கொள்வதற்கு, நீங்கள் நுட்ப உணர்வு கொண்டவராய் இருக்க வேண்டும். மதத்தை கவிதையின் மூலம், நடனத்தின் மூலம், இசையின் மூலம் வெளிப்படுத்தலாம். வேறு எந்த முறையில் மதத்தை வெளிப்படுத்தினாலும் அது போதுமானதாய் இருக்காது. மறை பொருளான (mysterious) ஒன்றை மறைபொருளான மற்றொன்றைக் கொண்டே சுட்டிக்காட்ட முடியும். கடவுள் கணக்கிடும் மனத்தின் வழியே நெருங்குவதில்லை. கணிதம், உரைநடையெல்லாம் சாத்தியப்படாது. அவரைக் கவிதை மூலம் அணுகினால் கதவு திறந்து கொள்ளும்.

கவிதை ஒன்று உரைநடையைப் போல் அத்தனை திண்மை (solid) உடையதல்ல, அது துல்லியமானது, ஊடுருவும் தன்மை (liquid) கொண்டது. உரை நடை உரக்க ஒலியெழுப்பும், கவிதை சன்னமாய் முணுமுணுக்கும். உரைநடை மிகச் சாதாரணர் களுக்குரியது. கவிதையோ புனிதமானவர்களுக்குரியது.

புத்த நிலையை அடைந்தவரின் சொற்கள் எவ்வித முயற்சியு மின்றி கவித்துவம் பெற்றுவிடுகிறது. அவர் சொல்லுக்குச் சொல் சரியாகக் கவிதை செய்வதில்லை. அவர் என்ன சொன்னாலும், அவர் என்னவாக இருப்பினும் அது கவிதையாகி விடுகிறது.

கபீர் படிப்பறிவில்லாதவர், எந்தவொரு கல்விக் கூடத்திலும் கற்றவரல்லர். அவரால் எழுதப் படிக்க முடியாது. ஆயினும், ஞானமுற்ற நிலையில், சிறந்த கவிதை அவரிடமிருந்து வெளிப்பட்டது. அவருடைய இருப்புணர்வில் அந்த அனுபவம் தோன்றியபோது, கதவுகள் திறந்து, புதிர்கள் விடுபடவும் அவருள் ஆயிரம் பூக்கள் பூத்தன. கபீருடன் எந்தவொரு கவிஞரையும் ஒப்பிட முடியாது. கபீரைவிடவும் புகழ்பெற்ற கவிஞர்கள் இருந்திருக்கிறார்கள். அவர்கள் கலைத்திறன் கொண்ட வெறும் கவிஞர்கள். ஆனால் கபீர் தனிப்பட்ட முறையில், மற்ற கவிஞர்களிடம் இல்லாத கடவுள் அனுபவத்தைப் பெற்றவர். அவர்கள் கடவுளைப் பற்றி உரை நிகழ்த்தக் கூடும். ஆனால் கபீரு டையது உரையல்ல - உயிரோட்டமுள்ள அனுபவம் - பிரபஞ்ச இருப்பு பற்றியது.

**விரல்களால் பதிவு செய்யப்படாத இசையை நீங்கள் கேட்டதுண்டா?**

உள்ளிருந்து ஒலிக்கும் இசையை நீங்கள் ஏன் கேட்கவில்லை. அது இடையறாது ஒலித்துக் கொண்டிருக்கிறதே! அதுதானே உங்களை உருவாக்கியது. அது ஒன்றும் உங்களுக்கு அந்நியமான தல்லவே. அது வெளியில் இருந்து வரவில்லை. அது உங்கள் பிரபஞ்ச இருப்பின் இசை; இருப்புணர்வினுடையது. உங்களுக்குள் இருக்கும் ஒத்துணர்வில் தோன்றிய இசையல்லாவா அது! உங்களுடைய சீர்த்தன்மையில் பிறந்த இசையது!

உங்கள் இருப்புணர்வின் சமச்சீர்மையை ஏன் நீங்கள் கேட்பதில்லை?

நீங்கள் இத்தனை வேகமாய் எங்கே பாய்ந்து செல்கிறீர்கள்? அந்த சமச்சீர்த்தன்மை (**rhythm**) யை சில நேரங்களில் பணத்திலும், சில நேரம் அதிகாரத்திலும், சில சமயம் மதிப்பிலும், சில சமயம் பலவகைப்பட்ட உறவுகளிலும் அல்லவா தேடி அலைகிறீர்கள். நீங்கள் யாசித்தபடி இருக்கிறீர்கள். மனிதத் திறனுக்கும் அறிவுக்கும் அப்பாற்பட்டதை (**transcendental**) ப் பற்றி ஏதேனும் அறிய விரும்புகிறீர்கள். அதை அறிய வேண்டும் என்று பெரு விருப்பத்தோடு இருக்கிறீர்கள்.

சாதாரண வாழ்க்கையில் ஒரொரு வேளையில் அது நேரிடுகிறது. திடுதிப்பென்று ஒரு நாள் கண் விழிக்கிற பொழுது அந்தச் சில கணங்களை நீங்கள் அறிகிறீர்கள். அப்போது எல்லாமே சரிவரப் பொருந்திருப்பதாய் தோன்றுகிறது. பறவைகள் பாடுகின்றன, காற்றில் நறுமணம் பரவி நிற்கின்றது. சூரியன் மேலெழுகிறது. அப்போது சற்றும் எதிர்பாராத விதமாய் எல்லாமே அசைவற்றிருப்பதை உணர்கிறீர்கள். எந்தக் காரணமும் இல்லாமல் பெருமகிழ்ச்சி கொள்கிறீர்கள். திடீர் நிகழ்வாய் ஒரு துடிப்பை (அதிர்வு) உணர்கிறீர்கள். முழுமையான இளமையும், வனப்பும் வந்து விடுகிறது.

இரவின் ஆழ்ந்த உறக்கமும், நேர்த்தியான காலைப் பொழுதும், பறவைகளின் கீதமும், குளிர்ந்த காற்றும், புல்லிதழ்கள் சுமந்த பனித்துளிகளும் அப்படியொரு சூழ்நிலையை உருவாக்கியிருக்கலாம். உங்களுடைய முயற்சியாலல்ல, தற்செயலாகவே நீங்கள் பிரபஞ்சத்துடனும், உங்களுடனும் ஓர் இணக்கத்தைப் பெற்றிருப்பது, நினைவிருக்கட்டும், அவை ஒன்றாகவே நிகழ்கின்றன. உங்களுடன் நீங்கள் இணக்கமாகிற போதெல்லாம், பிரபஞ்சத்துடனும் நீங்கள் இணக்கமாகி விடுகிறீர்கள்.

இணக்கம் இரண்டு தரப்பிலும், தனிநபர் மற்றும் பிரபஞ்சம் சார்ந்தவை. தன்னுடன் இணக்கமாகிற ஒருவர், பிரபஞ்சத்துடன் இணக்கமாகாமல் இருக்க எந்தக் காரணமுமில்லை. உங்களுக்குள் மோதல்கள் மறைந்து விட்டால், அது ஒரு கணம் என்றாலும், அந்தக் கணத்தில் முழுமையின் ஒரு பகுதியாகி விடுகிறீர்கள் நீங்கள். அதன் பிறகும் ஒரு தீவாக நீங்கள் இருக்க மாட்டீர்கள். உங்களைச் சுற்றியுள்ள சுவர்கள் மறையும், இனியும் நீங்கள் சிறையில் அடைபட்டிருப்பதில்லை.

வாழ்க்கையின் மகத்துவத்தை அந்தக் கணத்தில் நீங்கள் அறிந்து கொள்கிறீர்கள். அதன் சிறப்பே இறையுணர்வால் உண்டானது. உங்கள் இணக்கத்தில் இருக்கிறது இறையுணர்வு. நீங்கள் இணக்கமாகிறபோது உணர்வீர்கள் கடவுள் ஒரு நபரால், இருப்பு (Presence) என்பதை. அவ்வாறே பிரபஞ்சத்துடனும் இணக்கமாகிறது. இந்த ஒத்துப் போகும் தன்மையே இசைவு (accord).

உங்கள் வாழ்வின் ஒவ்வொரு கணத்திலும் அந்த இசைவு பயன்படக் கூடியதாயிருக்கிறது. அது தற்செயலாகவே போல் நிகழ்கிறது. நீங்கள் அதைத் தெரிந்து வரவேற்கிற விதமாய், உங்களைக் தயார் செய்து கொண்டிருக்கவில்லை. எனவே, ஓரோரு பொழுதில் அது நிகழ்கிறது.

லியோடால்ஸ்டாயிடம் ஒரு சமயம் கேட்டார்கள், 'உங்கள் வாழ்வில் எத்தனை முறை தெய்விகப் பரவசத்தை நீங்கள் அனுபவித்திருப்பீர்கள்?' என்று.

அவர் அழத் தொடங்கி விட்டார். அவருடைய கண்களில் இருந்து கண்ணீர்த் துளிகள் உருண்டோடின. 'என்னுடைய எழுபதாண்டு கால வாழ்க்கையில் ஏழு தடவைகளுக்கு மேல், ஆனால், அந்தத் தருணங்களுக்கு நான் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன். அவை அந்த நாளில், அந்த ஆண்டில் முழுமையான அனுபவத்தை எனக்கு வழங்கியிருக்கின்றன. என் ஒட்டு மொத்த வாழ்வின் சிறப்பையும் ஒருசேரப் பெற்ற கணங்கள் அவை. என்னில் எப்போதைக்குமாய் அதன் மணம் பரவியி ருக்கும் என்று நினைத்திருந்தேன். ஆனால் அப்படி நிகழவில்லை. அந்த அரிய தருணங்கள் தனித்தன்மை கொண்டவை. அவை தானாக வந்து தானாகவே சென்று மறைந்தன. என்னுடைய தரப்பில் நானாக எந்த முயற்சியும் எடுக்காத நிலையில் கடவுள் எப்போதாவது வந்து என் கதவுகளைத் தட்டிக் கொண்டிருக்கிறார். நான் இன்னமும் அதற்காக நன்றியுணர்வோடு இருக்கிறேன்' என்றார் அவர்.

இது எல்லாருக்கும் நிகழ்கிறது, உங்களுக்கும், நீங்கள் திரும்பிப் பார்த்தால் அத்தகைய தருணங்கள் உங்கள் வாழ்விலும் இருந்திருப்பது ஞாபகத்துக்கு வரும். நீங்கள் தணிவு நிலையில் (relaxed) இருந்த பொழுது, உங்கள் மனதில் குறிப்பாக எந்த ஆசையும் இல்லாத பொழுது, நீங்கள் கவலையற்றிருந்த பொழுது, நீங்கள் எளிமையாக இருந்தபடிக்கு இருக்கிற பொழுது அந்தத் தருணங்கள் உங்களுக்கு அனுபவமாகியிருக்கும்.

தற்செயலாகவே போல் வந்து செல்கிற அந்தக் கணங்களைக் கூர்ந்து கவனியுங்கள். காரணம் அதில் இருக்கிறது இரகசியத் திறவு கோல். அப்படித்தான் மதத்தின் அடிப்படைகள் கண்டறியப்பட்டன.

வந்து செல்கிற அந்த உடனடி கணங்களைக் கண்காணிக்கிறவர் அறிய மாட்டார், அவை ஏன் வருகின்றன, ஏன் சென்று விடு கின்றன என்று. அவை வந்து செல்லும் சந்தர்ப்ப சூழ்நிலையைக் கவனித்திருந்து, அதே சந்தர்ப்ப சூழ்நிலைகளை மக்கள் உருவாக்க முயற்சிக்கிறார்கள்.

அவை ஓய்வு நிலையில் நிகழ்ந்தால், இறுக்கமற்றிருக்கும் நிலையில் நிகழ்ந்தால் அதே சந்தர்ப்ப சூழ்நிலையை உங்களால் உருவாக்க முடியும். உங்களால் கடுமை தளர்ந்து, இலேசாக முடியும். நீங்கள் நீந்துகிற போது நிகழ்ந்தால், பிறகு நீந்துகிற சூழ்நிலைகளை உருவாக்கிக் கொள்ளுங்கள். நீங்கள் ஓடுகிறபோது அது நிகழ்ந்தால்... பலருக்கும் பல வழிகளில் அது நிகழ்கிறது. ஓட்ட வீரர்களில் பலர் தொடர்ந்து ஓடிக்கொண்டேயிருக்கிற பொழுது அது நிகழ்ந்திருக்கிறது - ஏனெனில் மனிதனுடைய சக்திகள் மூன்று அடுக்குகளைப் பெற்றிருக்கின்றன.

முதலாவது அடுக்கு அன்றாட நடவடிக்கைகளுக்கு மட்டுமேயானது. அது மிக மெல்லிய அடுக்கு. உங்கள் அலுவலகம், மனைவி, குழந்தைகள் கொண்ட அன்றாட வாழ்க்கைக்குப் போது மானது. இரண்டாவது அடுக்கு அவசர நிலைகளைச் சமாளிக்க உதவுவது. உங்கள் வீடு தீப்பற்றிக் கொண்டது. நாள் முழுக்க உழைத்து விட்டு நீங்கள் களைத்து சோர்ந்து வந்திருப்பீர்கள். கொஞ்சம் ஓய்வாக இருக்க வேண்டும் என்று எண்ணியிருப்பீர்கள். ஆனால், நீங்கள் வீடு வந்து சேர்ந்தபோது, தீப்பிடித்து எரிகிறது. அப்போது உங்களுடைய சோர்வு போன இடம் தெரியாது போகிறது. களைப்பின் அறிகுறியும் மறைந்து போய் விடுகிறது. ஓய்வெடுப்பதை மறந்தவராய் இரவு முழுக்க தீயணைப்பு வேலையில் இறங்கி விடுகிறீர்கள். இரவு முழுக்க வேலை பார்த்த பின்னும் நீங்கள் களைத்துப் போவதில்லை. அப்போது செயல்பட்டது உங்களுடைய வழக்கமான செயல்திறனல்ல. அவசர காலத்துக்கான அடுக்கு செயல்பட்டுக் கொண்டிருந்தது.

மூன்றாவது அடுக்கு ஆழத்தில் இருப்பது.... நீங்கள் தொடர்ந்து ஒரு நாள் இரண்டு நாள் மூன்று நாள் என்றுவே பார்த்து உங்கள் அவசரகால சக்தியும் தீர்ந்து விட்டிருக்கும். அப்போது பிரபஞ்ச அடுக்குடன் தொடர்பு கொள்கிறீர்கள். எந்தவொரு

காரணமும் இல்லாமலே மிகப்பெரிய. அளவில் பரவசம் ஏற்பட்டு விடுகிறது, உங்களுக்கும் நிரம்பி வழிகிறது.

நீங்கள் உறவு கொள்கிற பொழுதில் அது நிகழ்கிறது. பிடித்தமான இசையைக் கேட்கிற பொழுதில் அது நிகழ்கிறது. எதையுமே செய்யாமல் உங்கள் படுக்கையில்ா படுத்திருக்கும் போது அது நிகழ்கிறது. ஓவியம் வரைகிற போதும்... உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் அந்தத் தருணத்தில் உங்களை முற்றாக ஈடுபடுத்திக் கொள்ளுங்கள். ஆயிரத்தியோரு வழிகளில் அது நிகழலாம். ஆனால், கவனித்திருங்கள். அந்த பரமசுகமான தருண்தைதை நீங்கள் அடைகிற போது பிரபஞ்ச இருப்பு **(existence)** உங்கள் கதவைத் தட்டுகிறபோது எந்தவொரு சூழ்நிலையில் அது நிகழ்கிறது என்பதைக் கவனியுங்கள். எச்சரிக்கை உணர்வோடு இருங்கள். சுற்றிவரப் பாருங்கள் - எந்த இடத்தில் (நேரத்தில்) அது நிகழ்கிறது என்பதைக் கவனியுங்கள். அப்போது அந்தத் திறவு கோலை நீங்கள் பெற்று விடுகிறீர்கள். அந்தச் சூழ்நிலையை நீங்கள் உருவாக்க முடிகிற போதெல்லாம் அந்தத் தருணம் மறுபடியும் வந்து விடும்.

நீங்களாக அதை நிகழ்த்த முடியாது. அது நிகழ்கிற விதத்தில் உங்களைத் தயார் செய்து கொள்ள வேண்டும். அதை நிகழும்படி நீங்கள் கட்டாயப்படுத்த முடியாது. ஆனால் அது நிகழ்வதற்கு தேவையானவைகளை உங்களால் உருவாக்கிக் கொள்ள முடியும். அது உங்கள் தரப்பிலான செயல் அல்ல. அது ஓர் நிகழ்வு. இருந் தும் ஒரு பெரிய ரோலை **(role)** நீங்கள் செய்யக் கூடும். தியான உத்திகள் அனைத்தும் அப்படித்தான் வளர்த்துக் கொள்ளப்படு கின்றன. அப்படித்தான் யோகா இங்கே வந்து சேர்ந்தது.

அந்த இசைவு - உடன்படும் தன்மை **(accord)** உங்களுக்குள் இருக்கிறது. அது இல்லாமல் உங்களால் இயங்கிக் கொண்டிருக்க முடியாது. அந்த இசை முன்பே உங்கள் அடியாழத்தில் பாய்ந் தோடிக் கொண்டிருக்கிறது. அதுவே உங்களுக்கும் பரம்பொரு ளுக்கும் இடையில் ஓர் இணைப்பாயிருக்கிறது. அது துண்டிக்கப் பட்டு விட்டால் நீங்கள் செயலற்றவராகி விடுவீர்கள். நீங்கள் இயக்கத்தில் இருப்பதே, அந்த இசை உங்களுக்குள் நிகழ்ந்து கொண்டிருப்பதற்கு நிரூபணம். நீங்கள் செய்ய வேண்டியதெல்லாம்

உங்கள் இருப்புணர்வின் அடியாழத்திற்குச் சென்று, எங்கே அது நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதைக் கண்டறிவது தான்.

**விரல்களால் பதிவு செய்யப்படாத இசையை நீங்கள் கேட்டிருக்கிறீர்களா?**

இந்த இசை விரல்களால், எந்த இசைக் கருவியைக் கொண்டும் உருவாக்கப்பட்டதல்ல. உங்களுக்குள் இசைக்கருவி எதுவும் இல்லை. அந்தக் கருவியில் யாரும் வாசிக்கவுமில்லை. அது முழுமையான இசை.

இந்திய மறைஞானிகள் அதற்கொரு விசேஷ வார்த்தையை வைத்திருக்கிறார்கள். 'அனாஹத் கா பஜா பஜ்தா - அனாஹத்' - அது எல்லையற்றது, உருவாக்கப்படாதது. அது ஒரு கை ஓசை. இந்திய மறை ஞானிகள் இன்னும் கொஞ்சம் ஆழமாய் போகிறார்கள்- அது ஒரு கை ஓசை கூட அல்ல - அங்கே கையும் இல்லை, கருவியும் இல்லை. கலப்பற்ற சுத்தமான இசை மட்டுமே இருக்கிறது என்கிறார்கள் அவர்கள்.

இசை என்கிற பொருளால் நிரப்பப்பட்டிருக்கிறது வாழ்க்கை. இது மறை ஞானிகளின் அனுபவம். வாழ்க்கை மின்சாரத்தையும், மின்னணுக்களையும் கொண்டது என்று இயற்பியல் சொல்வது போலத்தான் இதுவும். ஒரு வழியில் பார்த்தால் இரண்டுமே மின்னதிர்வு இருக்கிறது. காரணம் இசையில் மின்னதிர்வு இருக்கிறது. மறுதலையாக, இசையின் ஒரு குறிப்பிட்ட அடர்வுத்தன்மை மின் விசை (electricity) யிலும் இருக்கிறது.

**'விரல்களால் எழுப்பப்படாத இசையை நீங்கள் கேட்டதுண்டா?'**

கடவுளைக் கண்டறிய விரும்பித் தம்மிடம் வந்த சீடர்களிடம் கபீர் பேசுகிறார். அவர்களோ கடவுளைப் பற்றிக் கேட்கிறார்கள். இவரானால் இசையைப் பற்றிப் பேசுகிறார். கடவுளைப் பற்றிய பேச்சு பயனற்றது. ஆனால் இசை பற்றியப் பேசுவது தனிச் சிறப்பு உடையது. உங்களுக்குள் ஒலிக்கும் இசையை நீங்கள் கேட்க முடிந்தால் இறையுணர்வை நீங்கள் அறிவீர்கள்.

**'வீட்டின் உள்ளாக இசை இருக்கிறது - நீங்கள் வீட்டை விட்டு வெளிச் செல்வது விவேகம் ஆகுமா?'**

மேலும் கபீர் சொல்கிறார்:

கடவுளைக் கண்டு பிடிப்பதற்காக நீங்கள் எங்கே செல் கிறீர்கள்? மக்கள் காசிக்கும் புனித காபாவிற்கும் போகிறார்கள். அந்தத் தத்துவத்தை தேடி மக்கள் எங்கெல்லாமோ போய்க் கொண்டிருக்கிறார்கள். தங்கள் வாழ்க்கை அர்த்தமற்றது, வெறுமை யுற்றது என்ற உணர்வு அவர்களுக்கு. அது ஒரு முட்டாள் சொன்ன முழு நீளக் கதை போலாகி விட்டதே என்று வருந்துகிறார்கள்.

இந்த வாழ்க்கை வெறும் கூச்சலாய், வம்பளப்பாய் (gibberish) இருப்பதை அவர்கள் அறிவார்கள். அடியாழத்தில் - உள்ளே எதுவும் இல்லை, அது பொய்யானது என்பதும் அவர்களுக்குத் தெரியும். ஆனாலும் அவர்கள் கண்டு பிடிக்க முற்படுகிறார்கள். தங்கள் தாகத்தைத் தீர்க்கக் கூடிய தோற்றுவாய் எங்கேனும் இருக்கக்கூடும் என்பது அவர்கள் கருத்து. ஏதேனும் ஓரிடத்தில் கடவுளைத் தாங்கள் எதிர்கொள்ள முடியும் என்று எண்ணு கிறார்கள். அங்கே ஒரு தனிச் சிறப்பை அவர்கள் பெறமுடியும். அவர்களுடைய வாழ்க்கைக்கும் ஓர் அர்த்தம் இருக்கும். ஆனால் அவர்களுடைய தேடும் செயல் பயனற்றது. அவர்கள் மீண்டும் மீண்டும் விரக்தி நிலைக்குத் தள்ளப்படுகிறார்கள். காரணம் அவர்கள் எதைத் தேடுகிறார்களோ அது அவர்களுடைய இருப்புணர்விலேயே இருக்கிறது. நீங்கள் எங்கேயும் செல்ல வேண்டியதில்லை, எங்கும் செல்லாமல் இருப்பதற்கு கற்றுக் கொள்ளுங்கள்.

எங்கும் செல்லாமல், அப்படியே இருக்க முடிவதும் ஒரு திறன், அதனை ஓர் இரகசிய அறிவு (art) என்றாலும் சரியே. கடந்த காலத்திற்குச் செல்லாமல், எதிர்காலத்திற்கும் செல்லாமல், விருப்பங்களில் நுழையாமல், உளஞ்சார்ந்த வெளிகளில் பயணிக் காமல் அப்படியே இருத்தல். தற்போது, இங்கே நீங்கள் இருக்கிற நிலையில் குறிப்பிடத்தக்க ஒன்றை புலன்களால் அறிய முடியாத (intangible) ஒன்றை உணர்வீர்கள். உங்களால் மற்றவர்களுக்கு அதைக் காண்பிக்க முடியாது. அதை அறிந்திராத ஒருவருடன் உங்கள் அனுபவத்தை நீங்கள் பகிர்ந்து கொள்ள முடியாது. ஆனால் உங்களுடைய முழு இருப்புணர்வும் ஒரு போதையை உணரத் தொடங்குகிறது. உங்களைவிடவும் மிகப் பெரிய இருப்பை

– இறையுணர்வைப் பற்றிய நுட்பமான அனுபவம் உங்களுக்கு வாய்க்கிறது.

**'வீட்டின் உள்ளே... வெகு உள்ளாக...'**

கபீர் சொல்கிறார்:

அந்த இசை முன்பே உங்கள் ஆலயத்தினுள் ஒலித்துக் கொண்டிருக்கிறது என்று. அவர் குறிப்பிடுகிற ஆலயம் உங்கள் சரீரத்திலன்றி, உலகில் வேறெங்கும் இருக்கவில்லை. உங்கள் சரீரங்களே ஆலயங்கள், புனிதத்தலங்கள். காரணம், புனிதங்களுக் கெல்லாம் புனிதமான ஒன்று உங்களுக்குள் உறைகின்றது. உங்களு டைய குருமார்களும், உங்களால் மகான்கள் என்று அறியப்படுகிற வர்களும் என்ன சொல்கிறார்கள் என்பதைக் கவனியுங்கள். அவர்கள் உயிர் எதிர்மறை மனோபாவங்களை, உம்பு பற்றிய எதிர்மறை மனோபாவங்களையே உங்களுக்குப் போதித்துக் கொண்டிருக்கிறார்கள். சரீரம் ஒரு குற்றவாளி. சரீரமே பாவங்களின் பிறப்பிடம் என்றெல்லாம் உங்களிடம் அவர்கள் கூறுகிறார்கள். இந்த உடம்பை வதைத்து, அழித்துவிட வேண்டும் என்கிறார்கள். 'உனது சரீரத்தை முற்றாக அழிக்காமல், கடவுட் தன்மையை உன் னால் உணரமுடியாது' என்றும் அவர்கள் விளக்கம் கொடுக் கிறார்கள்.

ஆனால், உண்மையோ அதற்கு மாறாக இருக்கிறது. உங்களு டைய சரீரத்தை பெரிய அளவில் நேசிக்காமல், உங்கள் சரீரத்துக்கு மிகுந்த மதிப்பளிக்காமல் எவ்வகையிலும் நீங்கள் கடவுட் தன்மையை நீங்கள் புரிந்துகொள்ள முடியாது. சரீரம் ஆலய மானால், கடவுள் உணர்வே (இறை நம்பிக்கை) அதனுள் விக்ரகமாய் வீற்றிருக்கும்.

**'ரஸ் மாந்த் மந்திர் பஜ்திர்'...**

உங்கள் சரீரத்தினுள் இருக்கும் ஆலயத்தில் முன்பே இசை ஒலித்துக் கொண்டிருக்கிறது – நேராக உள்ளே செல்லுங்கள்.

'ரஸ' என்றால் சாரம், சக்தி. இந்நாட்டு மறை ஞானிகள் இறையுணர்வை 'ரஸம்' என்பதாய் புரிந்து கொள்வது உங்களுக்கு வியப்பையளிக்கும். அதுவே முடிவான சாரம். ஆனால் உங்களுடைய துறவிகளிடம் சென்றால் அவர்கள் எவ்வித சாறும்

(சக்தி) இல்லாமல் வற்றி உலர்ந்திருப்பதைக் காண்பீர்கள். அவர்களுக்குள் உயிரோட்டம் இருக்காது, கிட்டத்தட்ட இறந்தவரைப் போல் இருப்பார்கள். தங்களுடைய உடம்பை அவர்கள் அழிய விட்டுக் கொண்டிருப்பார்கள். இவர்கள் மனச்சிதைவிற்குள்ளானவர்களேயன்றி, மதிக்கத்தக்க நிலையில் இருப்பவர்களல்ல.

உண்மையில் என்ன நடந்தது? எங்கே எது தவறாகிப் போனது? ஏன் இவர்கள் மதத்தை வைத்துக் கொண்டு, இப்படி ஆதிக்க மனப்பான்மை படைப்பது.

இந்த உணர்ச்சி மிகைப்பு (neurotic) உடையவர்களெல்லாம் தங்களுக்குள் ஒரு தன்மையைக் கொண்டிருக்கிறார்கள் - அது வெறித்தனம். நரம்பியக்கச் சீரழிவு உள்ளவர்களால் மட்டுமே அப்படியொரு மதவெறியை, கொள்கைப் பிடிவாதத்தைக் கொண்டிருக்க முடியும். வெறியர்களுடன் சண்டை போடுவது கடினம். சற்றுமுன், பின்னாக என்றாலும் ஒரு வெறியின் தலைவனாகி விடுவான். அவன் தொல்லை பிடித்தவன், ஓயாமல் தொலைகொடுத்துக் கொண்டிருப்பான். அவனைத் தலைவனாக்கினால், அமைதியடைவான்.

நரம்புக் கோளாறு உள்ளவர்களுக்கு தாங்கள் தலைவராகி விட வேண்டும் என்கிற மனப்பாங்கு இருக்கும். அடால்ஃப் ஹிட்லர் ஒரு நரம்புத்தளர்ச்சி நோயாளி. அதே சமயம் மனித வரலாற்றிலேயே சிறப்பு மிக்க தலைவர்களில் அவனும் ஒருவனாகி விட்டான். அவன் ஒரு கிறுக்கன். சித்த சுவாதீனம் உள்ளவர்களிடம் இல்லாத சில தன்மைகள் பித்துப் பிடித்தவர்களிடம் இருக்கும். அவர்கள் போட்டியிடுகிறார்கள். தங்களுடைய ஒட்டு மொத்த ஆற்றலையும் பயன்படுத்தி போட்டியிடுகிறார்கள். அதில் வெறித்தனம் இருக்கும். அவர்கள் சிந்திக்காமலே செயல்படுவார்கள். தெளிந்த அறிவும், நல்ல மனநிலையும் உடைய ஒருவன் முதலில் சிந்தித்துக் கொள்வான். ஆனால், பித்துப்பிடித்தவனோ எடுத்ததுமே செயல்படுவான். அறிவுடையவன் விளைவுகளைப் பற்றிச் சிந்திப்பான். அறிவுத் தெளிவற்றவனோ எதைப்பற்றியும் சிந்திக்காமல் வேகமும் அவரசமும் கொண்டு அநாகரிகமாய் செயலில் இறங்கி விடுவான்.

அடால்ஃப் ஹிட்லர்கள் அரசியலில் தலைவர்களாகி விடுகிறார்கள். அதே வகையினர்தாம் மதத்துறையிலும் தலைவர்களாகி

விடுகிறார்கள். அறிவுக் கூர்மையுள்ளவன் தான் தனியே இருக்க விரும்புவான். காரணம், தனிமை அவனுக்கு மகிழ்ச்சியளிக்கிறது. தனக்கென்று ஓரிடத்தை அவன் விரும்புகிறான். அவனுக்கு தனித்திருக்கிற, கூட்டத்தில் இருந்து விடுபட்டிருக்கிற சுதந்திரம் வேண்டும். வெறி பிடித்தவன் கூட்டத்தில் இருக்கவே விரும்பு வான். தனித்து விடப்பட்டால் அவன் குழப்பத்திற்குள்ளாவான். ஒருநாளின் இருபத்திநாலு மணி நேரமும் கூட்டத்திலேயே இருந்து கொள்ள விரும்புவான்.

தெளிந்த அறிவுள்ளவன் ஏகாந்தத்தை (தனிமை)த் தேடிக் கொள்கிறான். சித்த சுவாதீனமற்றவனோ கூட்டத்தைத் தேடுகிறான். உங்களுடைய மதங்களெல்லாம் கூட்டமின்றி வேறெயென்ன? கிறிஸ்தவம், இந்து மதம், இஸ்லாம், சமணம் என்று பல்வேறு கும்பல்கள். முகமது ஞானம் பெற்றபோது தனித்திருந்தார். மலைகளில் தியானம் செய்தபடியிருந்தார். புத்தர் ஞானம் பெற்ற போது, நிரஞ்சனா ஆற்றங்கரையில் ஒரு மரத்தடியில் தனியே இருந்தார். வனப்பிரதேசத்தில் தனித்திருந்த நிலையில் ஞானம் பெற்றார் மகாவீரர். அப்போது ஒரு மரத்தடியில், சூரிய ஒளியில் நிர்வாணமாய் நின்றிருந்தார் அவர்.

தனித்திருக்கும் போது ஞானம் வருகிறது. ஆனால், அந்த முறையில் தலைமைப் பதவி வராது. கூட்டத்தை நாடிச் சென்றால்தான் உங்களுக்குத் தலைமை கிடைக்கும். அது மட்டும் போதாது. ஆனால், கூட்டத்தின் முட்டாள்தனமான எதிர்பார்ப்பு களையும், மூடத்தனமான எதிர்பார்ப்புகளையும் நீங்கள் நிறைவேற்றினால் தான் சமயத்துறையிலோ அரசியலிலோ நீங்கள் தலைவராக முடியும். பித்து நிலையில் உள்ள வெறியர்கள் ஒழுங்குபடுத்தும் திறனுடையவர்கள். அவர்கள் கூட்டத்தின் எதிர் பார்ப்பை நிறைவேற்றுவதால், கூட்டம் அவர்களை அண்ணாந்து பார்க்கும். அவர்களிடம் மரியாதை காட்டும். ஒவ்வொருவரும் அச்சத்தில் இருப்பார். அந்தக் கூட்டம் ஓர் அமைப்பிற்குள் வர விரும்பும். காரணம், அமைப்பு ஆற்றலுடையதாய் தெரிகிறது.

அமெரிக்க உயர் சட்டமன்ற (congress) நூலகத்திற்கு தொலைபேசியில் பேசினார். 'என்ஏஏஸிபி' (NAACP) அதிகாரி ஒருவர், தலைமை நூலகரிடம், 'நீக்ரோ் (Nigger) என்கிற சொல்

இடம் பெற்றிருக்கும் பதினெட்டாயிரம் புத்தகங்களை ஒரே வாரத்தில் அகற்றி விடுங்கள்' என்று கூறினார்.

'ஆனால் எங்களிடம் 'முறைகேடாய் பிறந்தவன்' (lastard) என்கிற சொல் இடம் பெற்ற ஐம்பதினாயிரம் புத்தகங்கள் இருக்கின்றனவே, என்ன செய்ய?' என்று கேட்டார் நூலகர்.

'ஆனால், முறைகேடாய் பிறந்தவர்களுக்கென்று எந்த அமைப்பும் கிடையாது' என்றார் அதிகாரி.

இந்த உலகில் அமைப்பு (organization) என்றாலே அதிகாரம் வந்துவிடும். வெறியர்களிடம் அமைப்பை உருவாக்கும் ஆற்றல் இருக்கும். அவர்களால் தனித்து இயங்க முடியாது. ஆகவே, தங்களைப் போல் தனித்திருக்க முடியாதவர்களைத் தேடிக் கண்டு பிடித்துக் கொள்கிறார்கள். ஒரு பரஸ்பர ஏற்பாட்டில் அமைப்பு உருவாகிறது.

மதங்கள் ஆழ்ந்த சிந்தனை அல்லது தியானத்தில் இருந்து தோன்றுகின்றன. ஆனால், புத்தர் ஞானம் பெற்றது தெரிந்ததுமே வெறியர்கள் கூட்டம் கூட்டமாய் சேர்ந்தனர். அந்தக் கூட்டங்கள் இந்து மதம், இஸ்லாமிய மதம், கிறிஸ்தவ மதம் என்று அமைப்பில் வந்தன. தங்களுடைய நிறுவனர்களின் ஞானத்தை அவர்கள் அடிப்படையில் கொள்ளவில்லை. பொய்யான, போலித்தனமான குருமார்களின் கருத்துக்களையே அவர்கள் பிரதிபலித்தனர்.

அத்தகைய குருமார்கள்தாம் சரீரத்தை உண்மையானதல்ல, அது ஆலயமாகாது, அதை வழிபட வேண்டியதில்லை என்றெல் லாம் உங்களிடம் சொல்லிக் கொண்டிருப்பது.

கபீர் முற்றிலும் மாறுபட்ட கருத்தைக் கூறுகிறார். அதுவே என்னுடைய வற்புறுத்தலும். சரீரம் புனிதமானது - காரணம், எல்லாமே புனிதத் தன்மை உடையவைதாம்.

> **விரல்களால் எழுப்பப்படாத இசையை நீங்கள் கேட்டதுண்டா? வீட்டின் வெகு உள்ளாக இசை சிக்குண்டு கிடக்கிறது உங்கள் வீட்டிலிருந்து வெளிச்செல்வதில் விவேகம் இருக்கிறதா என்ன?**

நீங்கள் எங்கே செல்கிறீர்கள்? உங்கள் சரீரத்தையோ வேறெதையுமோ நீங்கள் விட வேண்டிய அவசியமில்லை.

எதையும் நீங்கள் துறக்க வேண்டியதில்லை. நினைவில் வையுங்கள், கபீர் எதையும் துறக்காமல், வாழ்க்கையில் எதையும் விட்டு விலகாமலுந்தான் இருந்திருக்கிறார். மற்றவர்களைப் போலவே அவரும் சாதாரண வாழ்க்கை தான் வாழ்ந்தார் - வழக்கமான சம்சாரியின் வாழ்க்கை. அவர் ஒரு தந்தையாக, கணவனாக இருந்து கொண்டு வாழ்க்கை முழுவதும் வேலை பார்த்திருக்கிறார். அவர் ஒரு நெசவாளி. தொடர்ந்து ஆடைகளை நெய்து கொண்டிருந்தார். ஆயிரக்கணக்கான சீடர்கள் இருந்தபோதும் அவர் நெசவு செய்வதை நிறுத்தவில்லை. அவருடைய சீடர்கள் அவரிடம், 'நீங்கள் எந்த வேலையும் செய்ய வேண்டாம். உங்களுக்கு வேண்டிய எல்லாவற்றுக்கும் நாங்கள் ஏற்பாடு செய்து கொடுக்கிறோம். உங்களுடைய தேவைகளும் அதிகமில்லையே. நீங்கள் ஏன் தொடர்ந்து வேலை செய்து கொண்டிருக்கிறீர்கள்' என்று பலமுறை கூறியதுண்டு.

கபீர் சிரித்தபடி சொல்வார்:

'உங்களுக்குத் தெரியாது. நான் பிரபஞ்சத்துக்காக வேலை செய்கிறேன் - என்னிடம் ஆடைகளை வாங்க வருகிற எனது வாடிக்கையாளர்கள் கடவுட் தன்மை உடையவர்களாயிற்றே. என்னுடைய வேலையை நான் எப்படி நிறுத்த முடியும்?' என்று.

இந்தப் பண்புதான் உண்மையான சமய நம்பிக்கை. இந்தப் பண்புடையவர் வாழ்க்கையை நேசிக்கிறவராயிருப்பார், வாழ்க் கையை நேசிக்கிறவரால் தான் அதன் சாரத்தைப் பெற முடியும். அந்தச் சாரம் உள்ளவர் ஒருபோதும் வறண்டு பாலைவன மாவதில்லை, பாலைவனச் சோலையாக இருப்பார்.

தங்களை சமய நம்பிக்கையுடையவராய் காட்டிக் கொள்பவர் களெல்லாம் எனக்கு எதிராக இருக்கிறார்கள். காரணம் இந்த ரஸம் (ras) பற்றி நான் உங்களுக்குக் கற்பித்துக் கொண்டிருக்கிறேனே! வாழும் முறை, காதல், உயிர் சக்தி (juice), இசை என்றெல்லாம். நீங்கள் பாலைவனச் சோலையாக வேண்டும், பாலைவனமாகி விடக் கூடாது என்பதற்காகவே நான் கற்பிக்கிறேன். காரணம், நீங்கள் இடையறாத மகிழ்ச்சியில் இருப்பதையே நான் விரும்புகிறேன். நான் துறவு (உரிமைகளையும், தகுதிகளையும் துறத்தல்) பற்றிற உங்களுக்குப் போதிக்கவில்லை, மகிழ்ச்சிக்கான வழியையே போதிக்கிறேன். உலகத்தைத் துறப்பது பற்றிய

முட்டாள் தனமான யோசனை வைத்திருப்பவர்கள் எனக்கு எதிரானவர்கள். அது இயற்கைதான், எதிர்பார்த்தது தான். இது எப்போதுமே நிகழ்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் இத்தனை காலத்திலும் மனிதன் இதையெல்லாம் துரதிர்ஷ்டவசமாய் அறிந்திருக்கவில்லை. புத்தர் காலத்திலும், இயேசு காலத்திலும், கபீருடைய காலத்திலும் இருந்தபடிதான் இப்போதும் அது இருந்து கொண்டிருக்கிறது.

**'உன் ஒழுக்கத்தின் தோள் பளபளக்கும் வரை**
**நீ உரசுவதால் என்னவாகும்?**
**உள்ளே இசையேதும் இல்லையெனில்**
**பிறகு என்னதான் நடக்கும்?**

ஒழுக்க முறைமை (morality) என்பது மதமாகாது. மத நம்பிக்கையுள்ளவர் ஒழுக்கமாய், நெறியுள்ள நடத்தையைக் கொண்டிருப்பது வேறு விஷயம். அதற்காக, நன்னடத்தை உள்ளவர்களெல்லாம் மதநம்பிக்கை கொண்டவர்களாய் இருக்க வேண்டும் என்பதில்லை. மதம் கடவுட் தன்மையைக் கொண்டது. மதநம்பிக்கை உள்ளவர் கண்டிப்பாய் நெறிமுறைகளைக் கடைப்பிடிப்பவராக இரப்பார். அவரால் எப்படி ஒழுக்கமற்றவராய் இருக்க முடியும்? உண்மையில் எது நல்லது எது கெட்டது என்பதைத் தீர்மானிக்கிற காரணியாக, அடிப்படைத் தத்துவ மாகவே அவர் இருப்பார்.

ஞானம் பெற்ற ஒருவர் எதைச் செய்தாலும் அது ஒழுக்கம் சார்ந்ததாகவே இருக்கும். அவர் நெறிமுறைகளின் படி நடக்கிறவர் என்று அர்த்தமல்ல, அவர் நடப்பதே நெறிமுறையாகி விடும். அவர் யாருக்கும் தீங்கு செய்வதில்லை. அவர் உலகம் கேட்டுப்பெற்ற வரம், கடவுள் உலகிற்கு வழங்கிய ஆசி! பிரபஞ்சமே அவரை வாழ்த்துகிறபோது, அவருக்கு வேறென்ன வேண்டியிருக்கும்? பிரபஞ்சம் அவருக்கு வழங்கியதை அவர் எல்லாருக்கும் வழங்கி விடுகிறார். அவருடைய இதயம் பரம சுகத்தால் நிரம்பியிருக்கிறது. அந்தப் பரமானந்தம் பொங்கி வழியத் தொடங்குகிறது. அதுவே நெறியுள்ள நடத்தை (morality) என்பது.

நெறியுள்ள நடத்தை பரிவைக் குறிக்கும், நேசத்தை, படைப்புத் திறனைக் குறிக்கும். நெறியுள்ள நடத்தை நீங்கள் பார்த்த போது

இருந்ததை விட உலகின் அழகை மேலும் உயர்த்துவதைக் குறிக்கும். பிரபஞ்ச இருப்பின் ஒரு புதிய தளத்தை, ஒரு புதிய பரிமாணத்தை அது உல்கிற்கு வழங்கும்.

ஒழுக்கமற்றவன் அழிக்கக் கூடியவனாக இருப்பான். அவன் துன்புறுகிறவன், தன்னுடைய துன்பத்தை மட்டுமே அவனால் மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ள முடியும். நினைவில் வையுங்கள். உங்களிடம் என்ன இருக்கிறதோ அதைத்தான் மற்றவர்களுக்கும் உங்களால் கொடுக்க முடியும். நீங்கள் துன்பத்தில் இருந்தால், உங்கள் பேச்சு முக்கியத்துவமற்றதாக விடும். உங்களால் மற்றவர்களிடம் மகிழ்ச்சியற்ற நிலையைத்தான் உருவாக்க முடியும். நீங்கள் பேரின்பத்தில் திளைத்திருந்தால் மற்றவர்களுக்கும் அதை வழங்குவீர்கள் என்பதில் சந்தேக மில்லை. உங்களுடைய தோற்றமே அவர்களுக்குள் ஒரு துள்ளலை ஏற்படுத்தி விடும். நீங்கள் எதுவும் சொல்லத் தேவையில்லை. உங்கள் இருப்பே மற்றவர்களிடத்தில் சமகாலத்தில் நிகழ்வை (synchronieity) உண்டு பண்ணுவதாயிருக்கும். உங்களுடைய இசை, உயிர்ச் சக்தி (juice) மகிழ்ச்சியின் அலைகளை உண்டு பண்ணும். உங்களுக்கு அருகில் இருப்பவர்களையும் உங்கள் மகிழ்ச்சி தொற்றிக் கொள்ளும். அந்த மகிழ்ச்சியில், பரவசத்தில் அவர்கள் போதை கொள்வர். அதுவே நெறியுள்ள நடத்தை ஒழுக்க முறைமை என்பதெல்லாம்.

கபீர் சொல்கிறார்:

**'உன் ஒழுக்கத்தின் தோல் பளபளக்கும் வரை**
**நீ உரசுவதால் என்னவாகும்?**
**உள்ளே இசையேதும் இல்லையெனில்**
**பிறகு என்னதான் நடக்கும்?**

தங்கள் பண்பைத் தொடர்ந்து மேம்படுத்திக் கொண்டே இருப்பவர்கள் உண்டு. தங்கள் நடத்தை மேலும் திருத்தியமைக்க முற்படுகிறவர்கள் உண்டு. அவர்கள் ஒழுக்க முறையை உணர்த்து கிறவர்களாகவும் (moralists) சீர்திருத்த சமயப் பண்பு உடையவர் களாகவும் (Puritams) நியாயவான்களாகவும் (righteous) மாறி விடுவார்கள். அவர்கள் எது சரியானதோ, அதைத்தான் செய்வார்கள். ஆனால் தானாக நிகழாமல் நிர்ப்பந்தத்தின் பேரில்

செய்வது போல் இருக்கும். அவர்களுடைய இருப்புணர்வில் இருந்து வெளிப்படுவதற்குப் பதிலாக வலுக்கட்டாய நடப்பாக இருக்கும். அது ஒரு பொய்யான தோற்றம். தங்களைச் சுற்றிலும் ஓர் அழகான திரையை அவர்கள் உருவாக்கிக் கொள்கிறார்கள். அதற்குப் பின்னே பிணம், துர்நாற்றமெடுத்த பிணம். ஆனால், மேற்பரப்பில் வண்ணமலர்களால் அலங்கரித்திருப்பார்கள். கூடியிருக்கும் கூட்டத்தை அவர்கள் ஏமாற்றுவார்கள். உள்ளுக்குள் அதே மோசமான மனிதர்கள், மேற்பரப்பில் எல்லாமே போலியும், பொய்மையும், அவர்கள் பாசாங்குக்காரர்கள். தாங்கள் சொல்வதற்கு நேர் மாறாக இருப்பவர்கள் அவர்கள். அவர்களுடைய செயலுக்கும் இருப்புணர்வுக்கும் தொடர்பேயிருக்காது. அவர்கள் மனச் சிதைவிற்குள்ளானவர்கள்.

ஒட்டு மொத்த மனித இனமும் மன உபாதைகளில் பாதிக்கப் பட்டிருக்கிறது. ஒவ்வொருவரும் ஏறக்குறைய பாசாங்குக்காரர்கள் தாம். சமூகம் உங்களையும் அதைச் செய்யும்படி கட்டாயப் படுத்துகிறது. நீங்கள் அதைச் செய்யாவிட்டால் தொடர்ந்து வாழ முடியாது. மக்கள் உங்களிடம் எதைக் காண விரும்புகிறீர்களோ அதையே நீங்கள் காண்பிக்கிறீர்கள். மற்றவைகளை உள்ளாக மறைத்துக் கொண்டு விடுகிறீர்கள். அவை நச்சுத்தன்மை அடைகின்றன. அந்தச் நச்சுத் தன்மைகளை உங்கள் இருப்புணர்வு சேர்த்துக் கொண்டேயிருக்கும். நீங்கள் ஒரு நரகத்தில் வாழ்வீர்கள் - உள்ளே ஒரு நரகம்! அது அழகிய மலர்களால் அலங்கரிக்கப் பட்டது. அந்த மலர்களாலும் ப்ளாஸ்டிக் சமாசாரம், அவை நிஜமானவை அல்ல. நிஜமான மலர்களென்றால் உங்கள் இருப் புணர்வில் வேர் விட்டிருக்க வேண்டும்.

உண்மையிலேயே சமய நம்பிக்கை உள்ளவரின் ஒழுக்க முறைமை அவர்மீது திணிக்கப்பட்டதல்ல. அவருடைய ஒழுக்கமான நடத்தை அவரது பிரக்ஞையில் (consiousness) இருந்தே தோன்றியிருக்கும். அவர் சரியான ஒன்றைச் செய்யவோ, தவறான ஒன்றைத் தவிர்க்கவோ முயல்வதில்லை. அவர் தன்னுணர்வில் (consciousness) இருக்கிறார். தன்னுணர்வில் இருந்தே செயல்படுகிறார். அவர் எதைச் செய்தாலும் அது சரியாக இருக்கும். உண்மையில் தவறான எதையும் தன்னுணர்வோடு செய்ய முடியாது.

புகழ் பெற்ற ஞானி நாகார்ஜுனரைப் பற்றி ஓர் அருமையான கதை:

அவர் ஒரு நிர்வாண புனித யாசகர் (fakir). ஆனால், ஆன்ம சாதகர்களால் அவர் நேசிக்கப்பட்டார். அரசி ஒருத்திக்கு அவர்மீது ஆழ்ந்த அன்பு. ஒருநாள் நாகார்ஜுனரைத் தன்னுடைய அரண்மனைக்கு வரும்படி அழைத்தாள். தன் விருந்தாளியாகத் தங்குமாறு அவரிடம் வேண்டிக் கொண்டாள். நாகார்ஜுனரும் சென்றிருந்தார்.

தனக்கு ஓர் அனுகூலம் செய்யும்படி கேட்டாள்.

'உனக்கு என்ன வேண்டும்?' நாகார்ஜுனர் வினவினார்.

'தங்களுடைய பிட்சைப் பாத்திரத்தை நான் விரும்புகிறேன்' என்றாள் அரசி.

நாகார்ஜுனர் அதைக் கொடுத்தார். அந்த பிட்சை பாத்திரம் ஒன்றுதான் அவரை அவருடைய உடைமையாக இருந்தது. அரசி தங்கத்தால் செய்து வைரங்கள் பதித்த பிட்சைப் பாத்திரமொன்றை தருவித்தாள். நாகார்ஜுனரிடம் தந்து, 'தாங்கள் இதனை வைத்துக் கொள்ளுங்கள். தங்களிடம் வருஷக்கணக்காக இருந்த, தங்களுடைய பிட்சைப் பாத்திரத்தை இனி நான் வழிபடுவேன். அதில் தங்களுடைய அதிர்வுகள் சிறிதளவேனும் இருக்கும். அது என்னுடைய ஆலயமாகும். அத்துடன் தங்களைப் போன்ற ஒரு மாமனிதர் மரத்தாலான, சாதாரண கலனை வைத்திருக்கக் கூடாது. இந்த பொற்கலனை வைத்துக் கொள்ளுங்கள். நான் இதனை தங்களுக்காகவே விசேஷமாய் தயாரிக்கச் செய்தேன்' என்றாள்.

அது உண்மையிலேயே விலை மிக்கது, மதிப்பு வாய்ந்தது. நாகார்ஜுனர் ஒரு சாதாரண ஞானியாக இருந்திருந்தால், 'நான் அதைத் தொடமாட்டேன். உலகப்பற்றுகளைத் துறந்தவன் நான்' என்று கூறியிருப்பார். ஆனால், அவருக்கு எல்லாமே ஒன்று தான், அதை வாங்கிக் கொண்டார்.

அவர் அரண்மனையில் இருந்து வெளியே வந்தபோது, ஒரு திருடன் அவரைப் பார்த்தான். தன்னுடைய கண்களையே அவனால் நம்பமுடியவில்லை. ஒரு நிர்வாண சாமியாரின் கையில்

இப்படியொரு விலை உயர்ந்த பொருளா? இவரால் அதை எத்தனை காலம் வைத்துப் பாதுகாக்க முடியும்? அந்தத் திருடன் அவரைப் பின் தொடர்ந்தான்.

நாகார்ஜுனர் ஊருக்கு வெளியே ஒரு பாழடைந்த கோயிலில் தங்கியிருந்தார். அதற்குக் கதவுகளுமில்லை, சன்னல்களுமில்லை. அது அழிவு நிலை அடைந்திருந்த ஒன்று. திருடன் மகிழ்ச்சி யடைந்தான். 'சீக்கிரமே நாகார்ஜுனர் தூங்கப் போகிறார். எந்தச் சிரமமும் இல்லாமல் அந்தப் பாத்திரத்தை நான் அடைந்து விடுவேன்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

கதவுப்புறமாய், ஒரு சுவற்றுக்குப் பின்னால் அந்தத் திருடன் மறைந்திருந்தான். நாகார்ஜுனர் தன்னிடமிருந்த பாத்திரத்தை கதவுக்கு வெளியே வீசினார். நடந்ததைத் திருடனால் நம்பமுடியவில்லை. திருடன் மறைந்திருப்பதைக் கவனித்தே, நாகார்ஜுனர் பாத்திரத்தை வீசியது. அவன் தனக்காக வரவில்லை, அந்தப் பாத்திரத்துக்காகவே வந்திருக்கிறான் என்பதை அவர் நன்கறிவார். ஆக, அவனை எதற்காகத் தேவையில்லாமல் காக்க வைப்பது. அவனுடைய நோக்கத்தை நிறைவேற்றினால் அவன் போய்விடுவான்; நானும் ஓய்வெடுப்பேன்.

அத்தகைய மதிப்பு மிக்க பொருளை அனாயசமாக அவர் தூக்கியெறிந்து விட்டார். திருடனால் அவருக்கு நன்றி தெரிவிக்காமல் போக முடியவில்லை. அவர் தனக்காகத்தான் பாத்திரத்தைத் தூக்கிப் போட்டார் என்பது அவனுக்கு நன்றாகவே தெரிந்தது. அவன் உள்ளே எட்டிப் பார்த்துக் கொண்டு சொன்னான்: 'ஐயனே, என்னுடைய நன்றியை ஏற்றுக் கொள்ளுங்கள். ஆனாலும் தாங்கள் ரொம்ப அரிதானவர் – என்னுடைய கண்களாலேயே நம்ப முடியவில்லை. எனக்குள் பெரிய ஆசையொன்று தோன்றியிருக் கிறது. ஒரு திருடனாக இருந்து என்னுடைய வாழ்க்கையை நான் வீணடித்து விட்டேன். தங்களைப் போன்றவர்களும் இருக் கிறார்களே! நான் உள்ளே வந்து தங்கள் பாதங்களை வணங்கிக் கொள்ளலாமா?' என்று.

நாகார்ஜுனர் சிரித்தபடி சொன்னார், 'ஆகா, அதற்காகத் தானே நான் பாத்திரத்தை வெளியில் வீசினேன். அதனால்தான் நீ உள்ளே வரமுடிந்தது' என்று.

திருடன் பொறியில் சிக்கினான். அவன் உள்ளே வந்து, அவருடைய பாதங்களைத் தொட்டான். அந்தக் கணத்தில், 'இவர் சாதாரண மனிதரல்ல' என்பதை அவன் புரிந்து கொண்டான். அவன் எளிதில் ஊறுபடத்தக்கவனாய், வெளிப்படையாய், ஏற்கும் பண்போடும், நன்றியுணர்வோடும் இருந்தான். அவருடைய பாதத்தைத் தொட்டதும் திகைத்தான். தன்னுடைய வாழ்வில் முதல் முறையாக கடவுட் தன்மையை அவன் உணர்கிறான்!

அவன் நாகார்ஜுனரிடம் கேட்டான், 'ஐயனே, நான் தங்களைப்போல் ஆவதற்கு இன்னும் எத்தனை பிறவிகளை எடுக்க வேண்டியிருக்கும்?' என்று.

நாகார்ஜுனர் சொன்னார், 'எத்தனை பிறவிகளா? அது இன்றே நிகழும், இப்போதே நிகழக் கூடம்' என்று.

திருடன் சொன்னான், 'நீங்கள் கேலி செய்கிறீர்கள். அது எப்படி இப்போதே நிகழ முடியும்? நான் ஒரு திருடன், பிரபலமான திருடன்: இந்த நகரத்துக்கே என்னை நன்றாகத் தெரியும். இருந்தும், அவர்களால் என்னைப் பிடிக்க முடிந்ததில்லை. இந்த நாட்டு அரசனுக்குக்கூட என்னிடம் பயம் உண்டு. காரணம், நான் அரசுக் கருவூலத்தில் நுழைந்து மூன்று முறை திருடியிருக்கிறேன். அவர்களுக்கும் அது தெரியும் ஆனால் அவர்களால் நிரூபிக்க முடியவில்லை. நான் தேர்ச்சி பெற்ற திருடன். இந்தப் பகுதிக்கு நீங்கள் பழக்கமில்லாதவர், அதனால் என்னைப் பற்றித் தங்க ளுக்குத் தெரிந்திருக்காது. நான் இப்போதே மாற்றமடைவது எப்படி?' என்று.

அதன் பேரில், நாகார்ஜுனர் பேசினார், 'ஒரு பழைய வீட்டில் நூற்றுக்கு மேற்பட்ட ஆண்டுகளாய் இருட்டாக இருந்தது. நீ ஒரு மெழுகுவர்த்தியைக் கொண்டு போகிறாய். அப்போது இருட்டு சொல்லுமா, 'நான் நூறு ஆண்டுகளுக்கு மேலாய் இங்கே இருந்து கொண்டிருக்கிறேன். நீ ஒரு மெழுகுவர்த்தியுடன் உள்ளே நுழைந்து விட்டால் நான் உடனே போய் விடுவேனா. நான் ரொம்ப காலமாய் இங்கே இருப்பவன்' என்று. இருட்டால் எதிர்த்து நிற்க முடியுமா? இருட்டின் பழமை ஒருநாளாய் இருந்தால் என்ன, ஓர் இலட்சம் ஆண்டுகளாய் இருந்தாலென்ன? அதில் வேறுபாடேது?'

திருடனால் அவர் சொன்ன கருத்தைப் புரிந்து கொள்ள முடிந்தது: இருட்டால் ஒளியை எதிர்த்து நிற்க முடியாது.

வெளிச்சத்தைக் கண்டு, இருட்டு மறைந்து விடும். நாகார்ஜுனர் சொன்னார், 'நீ இலட்சோப லட்சம் இருட்டில் இருந்திருக்கலாம். அது பொருட்டில்லை - ஆனால், ஓர் இரகசியத்தை நான் உனக்கு வழங்குகிறேன், உனது இருப்புணர்வில் ஒரு மெழுகுவர்த்தியை நீ ஏற்றி வைக்க முடியும்? என்று.

திருடன் கேட்டான், 'என்னுடைய தொழிலைப் பற்றித் தெரிய வேண்டும். நான் அதை விட்டு விடவா?

நாகார்ஜுனர் சொன்னார், 'அதை நீதான் முடிவு செய்ய வேண்டும். நான் உன்னுடனோ, உன் தொழிலுடனோ தொடர்பு கொண்டிருக்கவில்லை. உன் இருப்புணர்விற்குள் ஒளியைக் கொண்டு வரும் இரகசியத்தை மட்டுமே நான் உனக்கு வழங்கினேன். அதுதான் என்னால் முடிந்தது. மற்றதெல்லாம் உன்னைப் பொறுத்தது' என்று.

திருடன் சொன்னான், 'ஆனால் நான் எந்தவொரு துறவியிடம் எப்போது போயிருந்தாலும் அவர்கள் சொல்வார்கள், 'முதலில் திருடுவதை நிறுத்திக் கொள். பிறகு தான் உனக்கு தீட்சை கொடுக்க முடியும்' என்று.

நாகார்ஜுனர் சிரித்தார், 'நீ துறவிகளிடம் சென்றிருக்க மாட்டாய், திருடர்களிடம் சென்றிருப்பாய். அவர்களுக்கு எதுவும் தெரிந்திருக்காது. புத்தரின் பழைய முறை ஒன்று உண்டு - மூச்சினைக் கண்காணிப்பது. 'உன்னுடைய மூச்சு உள்ளே செல்வதையும், வெளியே வருவதையும் கவனித்திரு. உனக்கு ஞாபகம் வருகிற போதெல்லாம் உனது மூச்சைக் கவனி. நீ திருடுவதற்காகச் செல்கிறபொழுதும், யாருடைய வீட்டிலாவது இரவில் நுழைகிற பொழுதும் உன் மூச்சைக் கவனித்துக் கொண்டேயிரு. கருவூலங்களைத் திறந்து அங்கே ஒளிவிடும் வைரங்களைக் காண்கிற பொழுதிலும் உன் மூச்சைக் கவனித்திரு. நீ விரும்புகிற எதைச் செய்து கொண்டிருந்தாலும் மூச்சின் போக்குவரத்தைக் கவனிக்கத் தவறி விடாதே' என்றார்.

திருடன் சொன்னான், 'இது ரொம்ப எளிமையாய் தெரிகிறது. இதற்கு ஒழுக்க முறை, பண்பெல்லாம் தேவைப்படாது இல்லையா? வேறெதுவும் தேவைப்படுமா?'

நாகார்ஜுனர் சொன்னார், 'எதுவுமே வேண்டியதில்லை. உன்னுடைய மூச்சைக் கவனத்திருந்தால் போதும்', என்று.

பதினைந்து நாட்களுக்குப் பிறகு திருடன் அவரிடம் திரும்பி வந்தான். ஆனால் முற்றிலும் மாறுபட்ட ஒருவனாக. நாகார்ஜுனரின் கால்களில் விழுந்து வணங்கினான். 'தாங்கள் என்னைச் சிக்க வைத்து விட்டீர்கள். வெகு அழகான முறையில் சிக்க வைத்து விட்டீர்கள். கொஞ்சமும் எனக்குச் சந்தேகம் ஏற்படாதபடி. நான் பதினைந்து நாள் முயற்சி பண்ணினேன் – அது சாத்தியப்படவில்லை. என்னுடைய மூச்சை நான் கவனித்துக் கொண்டிருந்தேனானால் என்னால் திருட முடியாமல் போய் விடுகிறது. நான் திருடப் புகுந்தால், என்னால் மூச்சைக் கவனிக்க முடிவதில்லை. மூச்சைக் கவனித்துக் கொண்டிருக்கிறபொழுது நான் அமைதியும், கவனமும், எச்சரிக்கையும், விழிப்பும் கொண்டு விடுகிறேன். அப்போது வைரமும் எனக்கு கூழாங்கற்களாய் தெரிகிறது. தாங்கள் ஒரு துன்பத்தை, குழப்பத்தை எனக்குத் தந்து விட்டீர்கள். இந்த இக்கட்டில், தற்போது நான் என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?' என்று கேட்டான்.

நாகார்ஜுனர் சொன்னார்: 'நீ எதை விரும்புகிறாயோ அதைச் செய்து கொள். அந்த அமைதியை, நிம்மதியை, உன் மூச்சைக் கவனிக்கிறபொழுது உனக்கு உண்டாகிற பரம சுகத்தை விரும்பினால் அதைத் தேர்ந்தெடுத்துக் கொள். உனக்கு வைரமும், தங்கமும், வெள்ளியும் முக்கியமாய் தெரிந்தால் பிறகு அதைத் தேர்ந்துகொள். நீதான் தேர்வு செய்ய வேண்டும். உன்னுடைய வாழ்வில் குறுக்கிட நான் யார்?' என்று.

அந்த மனிதன் சொன்னான், 'மனச்சாட்சிக்குக் கட்டுப்படாமல் (தன்னுணர்வின்றி) நடந்து கொள்ள என்னால் முடியாது. என்னைத் தங்களுடைய சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள். எனக்குத் தீட்சை கொடுங்கள்' என்று.

நாகார்ஜுனர் சொன்னார், 'நான் முன்பே உனக்கு தீட்சை கொடுத்தாயிற்று'.

மதம் ஒழுக்க முறைமையை அடிப்படையாய் கொண்டதல்ல, தியானத்தை அடிப்படையாய் கொண்டது. அதன் வேர்கள் ஒழுக்கத்தில் இல்லை, பிரக்ஞை (தன்னுணர்வு)யில் இருக்கிறது.

உண்மையிலேயே சமய நம்பிக்கையுள்ளவன் எவ்வகையிலும் குணத்தைக் கொண்டிருப்பதில்லை. அவன் கணங்களற்றவனா கிறான். அகராதியில் 'குணமற்றவன்' என்பதைக் குறிக்க 'பண்பில்லாதவன்' என்று போட்டிருப்பார்கள். நான் அந்தச் சொல்லையோ பொருளையோ கருத்தில் கொள்ளவில்லை. அது தவறு. காரணம் அவனுக்கு ஒரு குணமிருக்கும். அது கெட்டதாகவுமிருக்கலாம், ஆனாலும் அவன் குணமற்றவன் தான். சிலரிடம் நல்ல குணம் இருக்கலாம், சிலரிடம் தீயகுணம் இருக்கலாம் - இருவருமே குணமுடையவர்கள் தாம். பாவம் பண்ணுகிறவனும், புனிதமானவனும் குணமுடையவர்களே. ஆனால், உண்மையிலேயே சமய நம்பிக்கை உள்ளவனோ குணமற்றவனாகிறான். அவன் நல்லவனுமல்ல, கெட்டவனுமல்ல - அவன் கடந்தவன். தன்னுடைய கடந்த காலத்தில் இருந்து கொண்டு அவன் செயல்படவில்லை. அந்தக் கணத்தில் தோன்றுவதைச் செய்கிறான். அவன் திட்டமிட்டுக் கொள்வதில்லை. அவனுடைய செயல்கள் தானாகவே நடந்தேறுகின்றன. அவனிடம் ஆயத்த மான விதிமுறை, செயல்முறை எதுவுமே கிடையாது. தன்னுடைய பழக்கத்தைக் கொண்டு அவன் எதுவும் செய்வதில்லை. அவன் நல்ல பழக்கங்களை ஏற்படுத்தியிருந்தால் அது நற்பண்பின் விளைவாயிருக்கும். அவன் தீய பழக்கங்களைக் கொண்டிருந்தால் அவனிடம் தீய பண்பு இருந்திருக்கும். சமய நம்பிக்கை பழக்கங் களை ஏற்படுத்திக் கொள்வதில்லை, அது பிரக்ஞையை மட்டுமே கொண்டிருக்கும்.

**'உன் ஒழுக்கத்தின் தோல் பளபளக்கும் வரை**
**நீ உரசுவதால் என்னவாகும்?**
**உள்ளே இசையேதும் இல்லையெனில்**
**பிறகு என்னதான் நடக்கும்?'**

உங்களுடைய ஒழுக்கத்தின் தோலை நீங்கள் தொடர்ந்து தேய்த்தபடி இருக்கிறீர்கள். உங்களுடைய நெறியுள்ள நடத்தையை பளபளக்கச் செய்ய உங்களால் முடியும். ஆனால், அங்கே (உள்ளில்) இசை இல்லாவிடில், தியானம் வாய்க்கவில்லை யெனில், கேட்டிராத ஒன்றை கேட்கவில்லையாயின், கண்டிராத ஒன்றைக் காணவில்லையாயின், அறிந்திராத ஒன்றில் நீங்கள் ஊடுருவிப் பரவவில்லை என்றால், அந்த ஒலியற்ற ஒலி

உங்களுக்குக் கேட்கவில்லை என்றால் அது பயனற்றதுதான். உங்கள் நேரத்தை நீங்கள் வீணடிக்கிறீர்கள்.

ஒரு ஜென் கதை:

ஒரு சீடன் தியானத்தில் இருந்தான். இருபது வருஷங்களாகத் தியானம் செய்து கொண்டிருந்தான். யோக நிலைகள், தியான உத்திகள் எதையும் அவன் விட்டு வைக்கவில்லை. ஒருநாள் குரு தோன்றினார். அப்போது சீடன் ஒரு சிலையைப் போல், சலவைக்கல்லாலான சிலையைப்போல் ஆடாமல், அசையாமல், மவுனமாய் அமர்ந்திருந்தான். குருவானவர் அவனுக்கு முன்பாய் கிடந்த கல்மீது செங்கல்லால் தேய்க்கத் தொடங்கினார். அப்படித் தேய்த்துக் கொண்டேயிருந்ததில் இரைச்சல் (noise) எழுந்தது. யார் இப்படித் தொல்லை கொடுப்பது என்று பார்க்க சீடன் கண்களைத் திறந்தான்.

தன்னுடைய குருவானவர் அப்படிச் செய்வதைக் கண்டான். அவனால் அதை நம்ப முடியவில்லை. தனது சீடன் தியானம் பண்ணுகிறபோது ஒரு குரு அப்படி கலைப்பு வேலை செய்வார் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்? இவர் எப்படிப்பட்ட குரு? ஆனாலும், குருவிடம் ஒருவன் முரட்டுத்தனமாக நடந்து கொள்வதற்கில்லை. அவன் காத்திருந்தான். அவர் எழுப்புகிற சப்தம் நிற்கட்டும் என்று. ஆனால் எவ்வளவு நேரம் காத்திருப்பது? அவர் பாட்டுக்கு , கல்லில் செங்கல்லைத் தேய்த்துக் கொண்டிருந்தார். பல்லைக் கடித்துக் கொண்டேயிருந்தவன் பேசினான்; 'நிறுத்துங்கள், தாங்கள் என்ன செய்கிறீர்கள்?'

குரு சொன்னார், 'இருபது ஆண்டுகளாக நீ என்ன செய்து கொண்டிருந்தாய்? தேய்த்து, தேய்த்து உன் மனதை பளபளக்கச் செய்ய முயன்றாய். அதை நீ தியானம் என்பாய். உன்னுடைய தோற்ற அமைவுகள் (postures) உத்திகள் எல்லாம் கவன அடிப்படையைக் கொண்டவை. நான் செங்கல்லைக் கண்ணாடி யாக்க முயற்சிக்கிறேன்' என்று.

சீடன் சொன்னான், 'அது முடியாத காரியம். தாங்கள் எவ்வளவு தேய்த்தாலும் செங்கல் ஒரு போதும் கண்ணாடியாகாது' என்று.

அதன் பேரில், குரு சொல்கிறார்: 'அதை உன்னிடம் சொல்லவே நானும் வந்தேன். இருபது ஆண்டுகளாய் நீயும் தேய்த்து, தேய்த்து, பாலீஷ் பண்ணி.... என்ன ஆயிற்று. மனம் தியானத்தில் நிற்கவில்லை, அது கண்ணாடியாகவில்லை. மனதை விட்டு விடு. அதைப் பண்படுத்துகிற வேலை வேண்டாம்.'

மனம் ஒரு போதும் கண்ணாடியாகாது. மனம் ஒரு தடை. மனதின் பின்னால் இருக்கிறது உங்களுடைய பிரக்ஞை (consciousness). மனதிற்கு பின்பாக சென்றால் உங்களை ஒரு புதிய இருப்புணர்வாக மாற்றும். அது ஒரு மறுபிறவி எனலாம்.

**'முகமதுவின் குமாரன் வார்த்தைகளில்**
**கவனம் வைக்கிறான்**
**அதோ, இதோ வென்று சுட்டிக் காட்டுகிறான்**
**ஆனால், அவனது நெஞ்சம்**
**அன்பில் மூழ்காவிடில் என்ன பயன்?**

கபீர் சொல்கிறார்: எல்லாருக்குமே இப்படித்தான் ஆகிறது. இந்து பண்டிதர் வார்த்தைகளில் விளையாடுகிறார், வார்த்தைகளை வைத்துக் கொண்டு வியாபாரம் பண்ணுகிறார். மவுனமான சுத்த பிரக்ஞையில் பிரவேசிக்க வேண்டும் என்பதை நாம் மறக்கிற அளவிற்கு வார்த்தைகள் முக்கியத்துவம் பெற்று விடுகின்றன. திரும்பத் திரும்ப மறை நூல்களைப் படித்து என்ன ஆகிறது? அறிவை மேலும் மேலும் சேர்த்துக் கொள்வீர்கள் - அத்தனையும் இரவல். உண்மையை இரவலாகப் பெற்றால் அதுவும் பொய்யாகி விடும். வார்த்தைகள் சொல்லப்பட்டதுமே அதனுடைய உண்மைத் தன்மை போய்விடுகிறது. வார்த்தைகள் மிகச் சிறியவை, உண்மை என்கிற மிகப்பெரிய வானத்தை வார்த்தைகள் எப்படி வளைத்துப் போட முடியும்? அவை உண்மையை நசுக்கி, அழித்து விடும். வார்த்தைகள் உங்களை வந்தடைகிறபோது, உங்கள் வசதிப்படி ஒரு பொருளை (meaning) அவற்றுக்கு வழங்கி விடுகிறீர்கள்.

கிருஷ்ணர் பேசுகிறார், இயேசு பேசுகிறார், நான் உங்களிடம் பேசுகிறேன்... இங்கே கூடியிருப்பது இரண்டாயிரம் பேர் என்றால், அவர்கள் ஒரே விஷயத்தைக் கேட்டுக் கொண்டிருப்பார்கள் என்று நினைக்கிறீர்களா? இரண்டாயிரம் அர்த்தங்கள் இருக்கின்றன. பேசுகிறவர் ஒருவர்தான், நான் பொருள் கொள்வதும் ஒன்றுதான்.

ஆனால் நான் கூறுகிற போதே அது இரண்டாயிரமாகி விடுகின்றன, இரண்டாயிரம் அர்த்தங்களைக் கொண்டு விடுகின்றன.

புதிய ஏற்பாட்டில் (New Testament) புலமை பெற்ற அறிஞர்கள் ஒரு நேர்த்தியற்ற கதையை நம்பிக்கையில்லாத தங்கள் சகாக்கள் சிலரை நையாண்டி செய்வதற்காகத் திணித்திருக்கிறார்கள். ஜெருசலேமிற்கு அருகில் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் சில எலும்புகளைத் தோண்டியெடுத்தனர். அவற்றைப் பரிசோதித்ததில் அவை இயேசுவின் எலும்புகள் என்று தெரிய வந்தது. தாங்களே அதைத் தீர்மானிப்பது சரியல்ல என்று கருதி போப் (Pope) பிற்கு தெரிவித்தனர். போப், உண்மையிலேயே அதிர்ச்சியடைந்தார். கிறிஸ்தவ சமயத்தின் எதிர்காலம் என்னாகும்?

அவை உண்மையிலேயே இயேசுவின் எலும்புகளாக இருக்குமெனில், அவர் உயிர்த்தெழவில்லை என்பதையல்லவா குறிக்கும்.

அந்தச் செய்தியை பத்திரிக்கைகளுக்குக் கொடுக்கு முன், உலகின் சிறந்த இறைமையியலாளர்களை (Theologians) அழைத்து, சிக்கலைத் தீர்க்கலாம் என்று முடிவெடுத்தார் அந்த மதத்தலைவர். இறைமையியல் குழு உறுப்பினர்கள் தொலைபேசியில் அழைக்கப் பட்டனர்.

போப் அவர்களின் பட்டியலில் ஒரு ஜெர்மானிய புதிய ஏற்பாட்டு அறிஞரின் பெயர் இடம் பெற்றிருந்தது. அந்த மனிதர் இயேசு பற்றிய வரலாற்று தகவல் எதிலும் நம்பிக்கையில்லாதவர். அந்த ஜெர்மானியப் பண்பாளரை அழைப்பதா வேண்டாமா என்று தமக்குள் பட்டிமன்றம் நடத்தினார் மதத்தின் தலைவர். கடைசியில் அவரைத் தொலைபேசியில் அழைத்து, கண்டெடுக்கப்பட்ட எலும்புகளைப் பற்றி விவரித்திருக்கிறார். அந்த ஜெர்மன் திறனாய் வாளர் எல்லாவற்றையும் கவனமாய் கேட்டபின், சொன்னபதில் போப்பை திக்கு முக்காட வைத்து விட்டது.

'ஆக, அவர் உயிருடன் இருந்திருக்கிறார்?' ஒருவர் உயிர்த்தெழல் பற்றி கவலைப்பட்டார். – அதே செய்தி மற்றொருவரிடம் உண்டு பண்ணிய எதிர்ச் செயல் (response) முற்றிலும் மாறுபட்டது. 'அப்படின்னா... அவர் உயிர் வாழ்ந்திருக்கிறார்!'

நீங்கள் எப்போதாவது ஒன்றைக் கேட்டால் உங்கள் பின்னணிக்கேற்பவே (அனுபவத்தின் வாயிலாக பெறப்பட்ட அறிவு அல்லது தெளிவின்மை) அதைக் கேட்கிறீர்கள். உங்கள் பின்னணியைப் பொருத்து விளக்கம் அமைகிறது.

நீதிபதி பிரதிவாதியைக் கடுமையாகப் பார்த்தபடி சொன்னார், 'இளைஞனே, உன்னுடைய தற்போதைய வருந்தத்தக்க நிலைக்கு மது தான் காரணம், மது மட்டுமே பொறுப்பு' என்று.

அந்த இளைஞன் நிம்மதிப் பெருமூச்சுடன் பதிலளித்தான், 'தாங்கள் சொல்வதைக் கேட்க எனக்கு மகிழ்ச்சியாக இருக்கிறது. மற்றவர்கள், அது என்னுடைய தவறு என்றல்லவா சொல் கிறார்கள்?'

தன்னுடைய கடந்த காலத்துக் கேற்பவே ஒவ்வொருவரும் வார்த்தைகளின் பொருளை விளக்கிக் கொள்கிறார்கள். அது இயற்கையே. அதனால்தான் நான் உங்களிடம் மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறுவது. உங்களுடைய கடந்த காலத்தை ஒதுக்கி விட்டு என்னுடைய வார்த்தைகளைக் கவனமாய்க் கேளுங்கள் என்று. உங்களுடைய பின்னணி (அனுபவ அறிவு) யைக் கொண்டு கேட்க முற்படாதீர்கள். ஒரு கிறிஸ்தவராகவோ, இந்துவாகவோ, முகமதியராகவோ இருந்து கொண்டு கேட்காதீர்கள். என் வார்த்தைகளை நீங்கள் தவறவிடுவீர்கள். அவற்றை நீங்கள் தவறாகப் புரிந்து கொள்ளவும் நேரிடும்.

இசையைக் கவனமாய் கேட்பதுபோல் என்னிடம் கவனம் வையுங்கள். கவனமாய் கேட்கிறபோது ஓடும் நீரின் ஓசையும், பைன் மரங்களினூடே கடந்து செல்கிற காற்றும் உங்களுடன் அந்தரங்கமாய் பேசும். அத்தகைய நிகழ்வுகளுக்குச் சாத்தியம் இருக்கிறது. நான் வழங்குகிற சொல்லின் பொருள் உங்களை வந்தடையும் சாத்தியம் இருக்கிறது. ஆனால், உண்மையிலேயே அது கடினந்தான். உலகிலேயே மிகக் கடினமானவைகளுடன் ஒன்று மாணவனாக (சீடன்) இருப்பது.

மாணவனாக இருப்பது என்பது, எவ்வித பின்னணி **(background)** யும் இல்லாமல், குறுக்கிடாமல், சார்புநிலையோ எதிர்நிலையோ எடுக்காமல், நம்பிக்கையோ அவ நம்பிக்கையோ கொள்ளாமல், கேட்பதை மட்டுமே செய்வது. நீங்கள் எவ்விதக்

கருத்தையும் உருவாக்கிக் கொள்ளாமல், தீர்ப்பு செய்யாமல் கேட்பீர்களாயின், அது உண்மையாக இருக்கும் பட்சத்தில் அது உங்கள் இதயத்தில் மணிகளை ஒலிக்கச் செய்யும். அந்த மணியோசை இதயத்தில் (உணர்வு) ஒலிக்கும், தலையில் (அறிவு) அல்ல. உண்மையையும், பொய்யையும் அறிவதற்கு நீங்கள் சிந்திக்க வேண்டியதில்லை. அப்படியே அமைதியாய் கேட்டுக் கொண்டிருந்தால் போதும்.

'முகமதுவின் குமாரன் வார்த்தைகளில்
கவனம் வைக்கிறான்
அதோ, இதோ வென்று சுட்டிக் காட்டுகிறான்
ஆனால், அவனது நெஞ்சம்
அன்பில் மூழ்காவிடில் என்ன பயன்?'

உங்கள் இதயம் எதிர்ச் செயல் புரியாவிடில், மூளையால் பிரபஞ்சத்துடன் உங்களை இணைக்க முடியாது.

உங்கள் இதயம் அன்பில் முழுமையாய் நனைய வேண்டும். ஆனால், நீங்கள் இதயத்தைப் பற்றி எதுவும் அறிந்திருக்கவில்லை. இதயத்தினூடே அனுபவம் பெற சமூகம் உங்களை அனுமதிக்காது. அது இதயத்தை விட்டு பக்கவழியில் செல்லவே முயலும். உங்களை இதயத்தில் நுழைய விடாமல் நேரடியாக மூளைக்கே கொண்டு செல்கிற முயற்சியை சமூகம் முழுமையாய் மேற்கொள்ளும். காரணம் இதயத்தின் செயல்முறைகள் புரிந்து கொள்ள முடியாததாய், கட்டுப்படுத்த முடியாததாய் இருப்பதுதான்.

மூளையின் செயல் முறைகள் கட்டுப்படுத்தக் கூடியதாயும், கையாளக் கூடியதாயும் இருக்கின்றன. எனவே தான் சமூகம் மூளையில் (அறிவு) அக்கறை காட்டி, இதயத்தில் (உணர்வு) ஆர்வப்படாமல் இருப்பது. இதயம் என்று எதுவுமில்லை, இருப்பது மூளை மட்டுமே – இப்படித்தான் நீங்கள் புரிந்து கொள்ளவேண்டும் என்று சமூகம் விரும்புகிறது. இரத்தத்தை ஏற்றி இறக்கும் ஓர் அமைவாகவே (system) சமூகம் பார்க்கிறது. நீங்கள் அப்படி நம்ப வேண்டும் என்பதே அதன் விருப்பமும்.

'இதயம்' என்பது உடலின் ஒரு பகுதியைக் குறிப்பதல்ல. உடல் சார்ந்த பகுதி, உண்மையில் இரத்தச் சுற்றோட்ட மண்டலம் ஆகும். ஆனால் அதற்குப் பின்னால், வெகு நெருக்கமாய்

இருப்பதுதான் உண்மையான இதயம். மூளையின் பின் பக்கத்தில் மனம் அமைந்திருக்கிற மாதிரிதான் இதுவும். சுவாசப்பையின் பின்புறம் இருதயமும், சரீரத்தின் உள்ளே ஆன்மாவும் அமைந்திருப்பது போல.

உடல் சார்ந்த பகுதியுடன் நின்று விடாதீர்கள். உங்கள் உடல் சார்ந்த ஒவ்வொரு நடப்புகளின் பின்னேயும், ஆன்மா சார்ந்த நடப்புகள் இருப்பதை நினைவில் கொள்ளுங்கள். 'உங்கள் இதயம் அன்பின் இருளில் முழுதுமாய் மூழ்காவிடில்....' ஏன் 'இருள்' குறிப்பிடப்படுகிறது? காரணம் அன்பு இருளைப் போல் ஆழமும், அடர்த்தியும் கொண்டிருப்பதுதான். அன்பு விளங்கிக் கொள்ள முடியாத வழியில் (புதிரான) வளர்கிறது. ஒளியில் (தெளிவு) அல்ல. ஒளி புதிர்களை விடுவித்து விடும். புரியச் செய்துவிடும். மற்றவைகளைவிட அன்பு இருண்மை உடையது. அது விளங்கிக் கொள்ள முடியாத இருண்ட உலகம்.

நீங்கள் இருளைக் கண்டு அஞ்சுவீர்களாயின் அன்பைப் கண்டும் அஞ்சுவீர்கள். இரவு பற்றிய பயம் இருந்தால் அன்பு பற்றிய பயமும் இருக்கும். நீங்கள் இருளிடமும், இரவினிடமும், காதலிடமும், மரணத்திடமும் அச்சம் கொண்டிருந்தால் அந்நிலை யில் மறைபொருளான (mysterious) அனைத்திலும் உங்களுக்கு அச்சம் இருக்கும். பிறகு, எல்லாவற்றிலும் மேலோட்டமாகவே இருந்து கொள்வீர்கள். அதே போன்று, உங்கள் இருப்புணர்வின் மையப் பகுதிக்கும் உங்களால் ஊடுருவ முடியாது.

அன்பின் சக்தியை நீங்கள் சுவைத்ததில்லை - அந்த ரஸத்தைச் சுவைக்காமலே நீங்கள் பெரிய துறவியாகி விடுகிறீர்கள்? அத்துடன் சிறந்த பண்பும், நெறியுள்ள நடத்தையும் கொண்டிருக்கிறீர்கள்? அன்பின் ரஸத்தைப் பருகியறியாதவரா நீங்கள்? அப்படி என்றால் உங்களுடைய்ய புனிதத் தன்மையும் ஒழுக்க முறைமையும் பசுவின் சாணமாகவே இருக்கும். தேவையில்லாத பளுவை நீங்கள் சுமக்கிறீர்கள். அதைச் சீக்கிரமே விட்டு விடுங்கள், அது தான் நல்லது.

**'ஆரஞ்சுநிற உடையில் வருகிறயோகி தனக்குள் நிறமற்றவனாக இருந்தால் பிறகு என்னாவது?'**

உள்ளுக்குள் நிறமூட்டப்பட்டிருக்கிறீர்களா என்பது கேள்வி. புறத்தே இருக்கும் நிறம் ஒன்றை அறிவிக்கிற குறியீடேயாகும்.

அது ஒரு குறிப்பு. அது தொடக்கமேயன்றி முடிவல்ல. ஆரஞ்சு நிறத்தில் உடுத்திக்கொண்டாலே சந்நியாசியாகி விட்டதாய் கருதிக் கொள்ளாதீர்கள். 'நான் தயாராகிறேன்' என்று தெரிவிப்பதே அது.

தீட்சைகள் இரண்டு விதம்: ஒன்று, சம்பிரதாயமானது. சந்நியாசம் ஏற்கிற நாளில், நீங்கள் ஆரஞ்சு நிறத்தில் உடுத்துகிறீர்கள் – அது சம்பிரதாயம் (ஒழுங்குமுறை) உங்களுடைய உடைகளைக் கூட நீங்கள் மாற்றிக் கொள்ள முடியாது என்றால், இருப்புணர்வை எப்படி மாற்றிக் கொள்வீர்கள்? ஆனால், உடையை மாற்றுவதும் இருப்புணர்வை மாற்றுவதும் ஒன்றாகி விடாது.

கபீர் சொல்கிறார்:

**'ஆரஞ்சுநிற உடையில் வருகிறயோகி தனக்குள் நிறமற்றவனாக இருந்தால் பிறகு என்னாவது?'**

இறையுணர்வின் நிறத்தை (அழகு, பண்பு) நீங்கள் அறிந்திருக்கவில்லை. அன்பின் நிறத்தையும் நீங்கள் அறிந்திருக்கவில்லை. உயிரின் (வாழ்வின்) நிறத்தையும் நீங்கள் அறிந்தபாடில்லை. ஆரஞ்சு தீயின் நிறம், உதித்தெழும் சூரியனின் நிறம், மாற்றம் – இரவு முடிந்து விட்டதற்கான அறிவிப்பு.

உங்கள் ஆன்மா அன்பில் சிவக்க வேண்டும், மகிழ்ச்சியும், கொண்டாட்டமும் உங்கள் ஆன்மாவை சிவக்கச் செய்ய வேண்டும். இந்தியாவில் ஆரஞ்சு நிறம் வசந்தத்தின் நிறமாகும். வசந்தம் உங்கள் இருப்புணர்வில் வந்தடையும், காலகாலமாய் காத்திருந்த பூக்கள் இனி பூத்துவிடும். மொட்டுகள் இதழ் விரிக்கும்.

கபீர் சொல்கிறார்:

**'சூரியன் உதிக்கிற ஒவ்வொரு நேர்விலும்**
**நான் கோயிலிலோ, பால்கனியிலே**
**சுட்டெரிக்கும் மணற் பரப்பிலோ**
**சுவரெழுப்பிய தோட்டத்திலோ**
**எங்கே நின்றிருந்தாலும் என் தலைவன்**
**என்னை நேசிக்கவே செய்வான்.'**

கபீர் வலிமை மிக்க இந்த வார்த்தைகளை ஆழ்ந்து சிந்தியுங்கள்.

'.... என் தலைவன் என்னை நேசிக்கவே செய்கிறான்...'

முழுமையான உணர்வு நிலையில் இருக்கிற மனிதன் உச்சகட்ட பரவசத்தில் இருப்பான். அது கலவியில் ஈடுபட்ட இருவர் அனுபவிக்கும் உச்சகட்ட மனக் கிளர்ச்சியைப் போன்றது (orgasmic climax). அது கண நேரத்தில் தோன்றி மறைவது. புத்தரைப் போன்ற மகா ஞானிகள் இருபத்தி நான்கு மணி நேரமும் அந்தப் பரவச நிலையில் இருந்து கொண்டிருப்பார்கள். முழுமை யான விழிப்புணர்ச்சியில் அது அடையப்படுகிறது.

'என் தலைவன் என்னை நேசிக்கிறான்...'

கபீர் சொல்கிறார்... நான் எங்கிருந்தாலும் அதில் வேறு பாடில்லை இன்று. கோயிலில், பால் கனியில், பாலைவனத்தில், சுவரெழுப்பிய தோட்டத்தில் - நான் எங்கிருக்கிறேன் என்பது முக்கியமல்ல. நான் எங்கிருந்தாலும் என் பெருமான் என்னோடு நேசம் கொண்டிருப்பார்.

அன்பு மதத்தின் கருப்பொரு - முக்கியப்பகுதி. பரவசமாயி ருப்பதற்கு சந்நியாசியாக இருக்க வேண்டும். அவனுடைய பரவசம் ஒவ்வொரு நாளும் தொடர்ந்தபடி இருக்கும். நீங்கள் உறங்கும் போதும் அந்தக் கூடும் செயல் நீடிக்கும். நீங்கள் பிரபஞ்ச வெளியில் கரைவீர்கள், இரண்டறக் கலந்து கொள்வீர்கள். அவ்வாறே பிரபஞ்சமும் உங்களுக்குள் இனிமையும் அன்பும் கொண்டு இணைந்து கொள்ளும்.

உங்களுக்கும் பரம் பொருளுக்கும் இடையே உள்ள சுவர் அகற்றப்படுகிறது, விலகல் என்பது இனி இல்லை. பிரிவற்றிருக்கும் நிலையும், விளங்கிக் கொள்ள முடியாத பிணைப்புமே அன்பின் இறுதியான நோக்கமாகும். தாழ்நிலையில் இருப்பது ஆண் - பெண் உறவு. உயர்ந்த, முடிவான உறவு தியானிப்பவருக்கும், பரம்பொருளுக்கும் உள்ள தொடர்பு.

எனவேதான், அந்தப் பயணத்தை நான் 'காமத்தில் இருந்து கடவுளை நோக்கி'ய பயணம் என்கிறேன். பாலுணர்வே பயணத் தின் தொடக்கம். அதைத் தள்ளி விடாதீர்கள். நீங்கள் தொடக் கத்தை ஏற்காமல் மறுத்தால் முடிவுப் பகுதியை (இறுதி நிலை) உங்களால் அடைய முடியாது. ஆனால், நினைவிருக்கட்டும். அது

தொடக்கம் மட்டுமே. அதை விட்டு நகராமல், அங்கேயே நின்று விடாதீர்கள். நீங்கள் மேலும், மேலும் முன்னோக்கிச் செல்ல வேண்டியிருக்கிறது. தியானத்தில் நீங்கள் மிக உயர்ந்த நிலைக்குச் சென்றதும், உங்கள் பால்சார்ந்த உணர்வு குறையத் தொடங்கி விடும்.

என்னுடைய சந்நியாசிகளுக்கு நானும் இப்படி நிகழ்கிறது. இங்கே பாலியல் தவிர்த்து வேறெதுவும் நடப்பதில்லை என்றுதான் ஒட்டு மொத்த தேசமும் எண்ணிக் கொண்டிருக்கிறது. ஆனால் உண்மை நிலையோ அதற்கு எதிரிடையானது. ஆயிரக்கணக் கானவர்கள் தங்கள் பால் சார்ந்த நாட்டத்தை இழக்கிற ஒரே இடம் இதுவாகத்தான் இருக்கும். காரணம், ஒன்றின் வழியே கடந்து செல்கிறவர் அதற்கும் அப்பால் சென்று விடுகிறார். வழியை அறியாமல் எப்படி அதைக் கடந்து செல்வீர்கள்?

பால்சார்ந்த பரவசம் (sexual orgasm) இரண்டு ரகசியங்களை வெளிப்படுத்துகிறது. ஒன்று உச்சகட்டம் (climax) மற்றது காலம் மறைவது. உச்ச கட்டத்தில் உங்களுடைய அகந்தை காணா தொழியும். ஒரு நாள் தியானத்தில் அறிவீர்கள். உங்கள் அகந்தையும், காலமும் பாலுறவில் ஈடுபடாமலே மறைவதை, இனி எவ்வகையிலும் காமம் தேவைப்படாது என்பதை.

பாலுறவு தியானத்தின் இயற்கையான வழி, அது இயற்கை வழங்கும் வெகுமதி. பாலுறவின் உச்ச கட்டத்தில் மனமும், காமமும், அகந்தையும் ஒரு கணம் மறைந்து விடுகிறதல்லவா. அவை ஒரு கணம் மறையுமெனில் ஏன் மறைய முடியாது என்போதைக்குமாய்? பாலுணர்வை, இறையுணர்விற்கு ஒரு சன்னல் என்றே கூறலாம். அது இயற்கையானது, ஆனால் சன்னல்தான். நீங்கள் அதற்குப் பின்னால் சிறைப்பட்டுக் கிடக்க வேண்டும் என்பதில்லை. உங்களால் அந்த சன்னலுக்கு வெளியே குதிக்க முடியும். திறந்த வெளிக்கு, சூரிய ஒளிக்கு வரமுடியும். சன்னல் அவற்றை சாத்தியப்படுத்துகிறது.

பாலுறவு அகந்தையற்றிருக்கவும், மனதைத் தொலைக்கவும், காலத்தைக் கடக்கவும் உங்களுக்கு உதவுகிறது. சில கணமே என்றாலும் பேருதவி! ஒரு சாசுவதமான பரவசத்தை நீங்கள் விரும்பவும், அடையவும் அதுதானே தொடக்கம். சச்சிதானந்தத்தை

அது சாத்தியப்படுத்துகிறது. (சத் – மெய்ப் பொருள், சித் – அறிவின் வடிவம், ஆனந்தம் – இன்பத்தின் உறைவிடம். சச்சிதானந்தம் பிரம்மம்)

கபீர் முற்றிலும் சரியாகச் சொல்கிறார். வேறெவரும் அத்தனை தெளிவாய் சொன்னதில்லை. என் தலைவன் என்னிடம் அன்பு செய்கிறான், என்னை நேசிக்கிறான், என்னோடு உறவாடுகின்றான். நான் எங்கிருந்தாலும் எதைச் செய்து கொண்டிருந்தாலும், நாளின் ஒவ்வொரு கணத்திலும் அது நிகழ்கிறது. என்னுடைய ஒவ்வொரு சந்நியாசிகளுக்கும் இந்த அனுபவம் வாய்க்கிறது.

இதுவே நான் உங்களுக்கு விடுக்கிற செய்தி. இந்த நிகழ்த்தும் தன்மை (**Potential**) யை நிஜமாக்குங்கள். ஒருநாள் இந்த உலகிற்கே அறிவிக்கிற திறனைப் பெறுவீர்கள். 'என் தலைவன் என்னோடு இருப்பத்தி நான்கு மணி நேரமும் உறவாடுகிறான். நான் உச்சக்கட்ட பரவசத்தில் இருக்கிறேன். நான் பரவசத்தில் இருப்பதோடு, நானே பரவசமாகவும் மாறிவிடுகிறேன்.

அதுவே ஞானநிலை. ஒரு முறை அதை அடையப் பெற்றவர், அதில் இருந்து வீழ்வதில்லை. ஒரு முறை அடைந்து விட்டால் எல்லாமே அடையப்பட்டதாகி விடும்.

இன்று இந்த அளவு போதுமானது.

○

*முதலாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! தயவு செய்து சமச்சீர் நிலையில் வாழ்வது பற்றித் தங்கள் கருத்தைத் தெரிவியுங்கள். என் வாழ்க்கை பெரும்பாலும் உச்ச நிலைகளின் ஓர் அனுபவமாக இருக்கிறது. சிறுபொழுது கூட நடுவாந்திர நிலையில் இருந்து செயல்பட முடியவில்லை.***

வாழ்க்கை உச்ச நிலைகளைக் கொண்டது. எதிரிடையானவை களுக்கு இடையே இழுபடுகிறது வாழ்க்கை. எப்போதுமே மையத்தில் இருப்பதென்பது செயலற்று இருப்பதாகி விடும். மையப் பகுதி கொள்கையளவில் மட்டுமே சாத்தியம். எப்போதாவது ஒரு முறை நீங்கள் மையப்பகுதியில் இருப்பீர்கள். அது கயிற்றின் மீது நடக்கிற மாதிரி. சிறிது நேரம் கூட மிகச் சரியான மையத்தில் உங்களால் இருக்க முடியாது. நீங்கள் முயன்றால், விழுந்து விடுவீர்கள்.

மையத்தில் இருப்பதென்பது நிலையாக (static) இருக்கும் நிலையல்ல. அது ஆற்றல் மிக்க நடப்பு. சமநிலை (balance) என்பது பெயர்ச் சொல் ஆகாது. அது ஒரு வினைச் சொல் – சமன் செய்தல். கழைக் கூத்தாடி கயிற்றின் இடது முனையில் இருந்து வலது முனைக்கும், வலது முனையில் இருந்து இடது முனைக்கும் நடந்து கொண்டிருப்பான். இடது பக்கம் அதிகம் நகர்ந்து விட்டதாய் உணர்ந்ததும், விழுந்து விடுவோம் என்று அஞ்சுவான். உடனே மறுமுனைக்கு – வலது பக்கம் நகர்ந்து சமன் செய்து கொள்வான். இடத பக்கமிருந்து வலது பக்கம் செல்கிறபோது கணப் பொழுது மையப் பகுதியில் இருப்பான். வலது பக்கம் அதிகமாய் நகர்ந்து விட்டாலும், விழுந்து விடுவோம் என்கிற அச்சம் வரும். அவன்

சம நிலையை இழக்க நேரிடும். உடனே இடது முனைக்கு நகரத் தொடங்கி விடுவான். வலது பக்கமிருந்து இடது பக்கம் செல்கிற போது கணப்பொழுது மையப்பகுதியில் இருப்பான் (மையத்தைக் கடத்தல்).

சமநிலை என்பது பெயர்ச் சொல் அல்ல வினைச் சொல் என்கிற போது நான் இதையே குறிக்கிறேன். அது சமன் செய்தல், அது ஓர் ஆற்றல் மிக்க செயல் முறை. நீங்கள் நடுவிலேயே இருந்துவிட முடியாது. நீங்கள் இடமிருந்து வலமாகவும், வலமிருந்து இடமாகவும் நகர்ந்து செல்கிறீர்கள். நடுப்பகுதி (மையம்) யில் இருப்பதற்கு ஒரே வழி அதுதான்.

உச்ச நிலைகளைத் தவிர்க்காதீர்கள். எந்தவொரு உச்ச முனை **(extreme)** யையும் தேர்ந்து கொள்ளாதீர்கள். இரண்டு முனை களிலும் பயன்படுத்தப்படக் கூடியவராயிருங்கள். அது ஒருவகைத் திறன், இரகசிய அறிவு. அதுவே சமநிலையின், நிலை குலை யாதிருப்பதன் ரகசியம். சில சமயங்களில் ஒரே மகிழ்ச்சி, சில சமயங்களில் ஒரே துயரம். இரண்டுமே தத்தமது அழகைக் கொண்டனவதாம்.

நம்முடைய மனம் விரும்பித் தேர்ந்தெடுப்பது, அதனால்தான் பிரச்னை தோன்றுகிறது. தேர்வற்றவராய் இருங்கள். எது நடந்தாலும், நீங்கள் எங்கிருந்தாலும் இடத்திலோ வலத்திலோ, மைய்யத்திலோ அதில் இல்லாமலோ எப்படியிருந்தாலும் ஒவ்வொரு கணத்தையும் அதன் முழுமையில் அனுபவியுங்கள். மகிழ்ச்சி யாயிருக்கும் போது ஆடுங்கள், பாடுங்கள், இசைக் கருவியை மீட்டுங்கள் - துயரம் வரும் போது எது வந்தாலும் எது வருவதா யினும் எது வர விருந்தாலும் அதைத் தவிர்க்க வேண்டாம். அதைத் தவிர்க்க முயன்றால் மகிழ்ச்சிக்கான சாத்தியத்தை நீங்களே அழிக்கும்படியாகும். இரவில்லாமல் பகலில்லை, பனிக் காலமில்லாமல் கோடையில்லை! மரணமில்லாமல் வாழ்க்கை யில்லை.

இந்த எதிரெதிர் நிலைகளை உங்கள் இருப்புணர்வின் அடித்தளத்தில் அமிழ்த்தி விடுங்கள். அதைத் தவிர்க்க வேறு வழியில்லை. செயலற்ற நிலையில் இருந்து கொள்வதே வழி. செயலற்ற ஒருவர்தான் மையத்தில் நிலையாக இருக்க முடியும். உயிரோட்டமுள்ளவராயின், மாறாத இயக்கத்தைக் கொண்டிருப்

பார். கோபத்தில் இருந்து இரக்கம், இரக்கத்தில் இருந்து கோபம் என்று. ஆக அவர் இரண்டையும் ஏற்றுக் கொண்டவர் எனலாம். அவர் எந்த ஒன்றுடனும் தன்னை அடையாளப் படுத்திக் கொள்ள வில்லை. அவர் ஒதுங்கியிருப்பார், பங்கேற்பவராயுமிருப்பார். அவர் நெருக்கமில்லாமலிருப்பார், பொறுப்பேற்பவராயுமிருப்பார். அவர் அனுபவித்து மகிழ்வார். அதே சமயம் தண்ணீரில் தாமரைப் பூப்போலவும் இருந்து கொள்வார். தண்ணீரில் இருந்தாலும் தண்ணீர் தொடமுடியாதபடிக்கு.

நடுப்பகுதியில் இருந்து கொள்ள நீங்கள் செய்கிற முயற்சி உங்களுக்குத் தேவையில்லாத கவலையைத் தரும். அனாவசிய பதற்றத்தை உண்டு பண்ணும். உண்மையில் எப்போதும் மையத்திலேயே இருக்க விரும்புவதும் இன்னொரு உன்ன முனை (extreme) தான். சிறிதும் மன நிறைவைத் தர முடியாத உச்ச முனை! அது சாத்தியமற்ற வகை, நிறைவேற்ற முடியாதது.

கொஞ்சம் ஒரு பழைய கடிகாரத்தைப் பற்றி யோசியுங்கள். அதன் பெண்டுலத்தை (Pendulum) மிகச் சரியாக மையப் புள்ளியில் பிடித்து நிறுத்தினால் அது நின்று விடும். பெண்டுலம் இடமிருந்து வலமும், வலமிருந்து இடமும் போய்க் கொண்டு இருந்தால் கடிகாரத்தின் இயக்கம் தொடரும். அப்படிப் போகிற ஒவ்வொரு முறையும் அது மையப்புள்ளியைக் கடந்து செல்லும். ஒரு கணத்தில் மையம் கடக்கப்படுகிறது. ஆனாலும் அந்தக் கணம் அருமையானது. மகிழ்ச்சியில் இருந்து வருத்தத்திற்கு, வருத்தத் தில் இருந்து மகிழ்ச்சிக்கு நீங்கள் கடந்து செல்கிற பொழுது மையப்புள்ளியில் முற்றான அமைதி. அதையும் அனுபவியுங்கள்.

வாழ்க்கை அதன் எல்லாப் பரிமாணங்களிலும் வாழப்பட வேண்டியது. அந்நிலையில் தான் வாழ்க்கை அதிக மதிப்பும், நேர்த்தியும், சக்தியும் உடையதாயிருக்கும். இடது சாரியும் மோசம், வலது சாரியும் மோசம். இடைநிலையாளரோ செயலற்றவர். இதில் சுறுசுறுப்புடன் இயங்குகிறவர் இடது சாரியோ, வலது சாரியோ இடைநிலையாளரோ அல்ல. இடையிறாது செயல்படுகிறவரே, வாழ்கிறவராவார்.

நாம் நடுவாந்திரமாக - மையத்தில் இருக்க விரும்புவது ஏன்? வாழ்வின் இருண்ட பக்கம் குறித்த அச்சம் இருக்கிறது நமக்கு. நாம்

துயர்ப்பட விரும்புவதில்லை. வேதனைக்குள்ளாகிற நிலையையும் விரும்ப மாட்டோம். பரவசத்தில் இருக்கும் சத்தியத்தையும் நீங்கள் உதறத் தயாராயிருந்தால் அது சாத்தியப்படும். ஒரு சிலர் மட்டுமே துறவியின் செயல்முறையைத் தேர்ந்து கொண்டிருக்கிறார்கள். பரவசத்திற்கான அத்தனை சாத்தியங்களையும் அவர் விட்டுவிடத் தயாராயிருக்கிறார். வேதனையைத் தவிர்ப்பதற்காக பரவசத்தை அவர் விட்டுக் கொடுக்கிறார். முட்களைத் தவிர்ப்பதற்காக ரோஜாக்களை அழிய விடவும் அவர் தயாராகிறார். அவர் உண்மையில் வாழ்வதில்லை. வாழ்வதற்கே அவர் அஞ்சுகிறார்.

வாழ்க்கை இரண்டையும் உள்ளடக்கியிருக்கிறது: அது மிகப் பெரிய வேதனையைக் கொண்டு வருகிறது. மிகப் பெரிய மகிழ்ச்சியையுந்தான். வேதனையும் மகிழ்ச்சியும் வேறு வேறு என்றாலும் ஒரே நாணயத்தின் இரண்டு பக்கங்கள் அவை! ஒன்றை நீங்கள் விடுவதாயின் மற்றொன்றையும் விடும்படியாகும். உங்கள் வேதனை விலகினால் மகிழ்ச்சி, நீங்கள் நரகத்தைத் தவிர்த்தால் சொர்க்கத்தைப் பெற முடியும். நீங்கள் எதிர்மறையானதைத் தவிர்த்து நேர்மறையானதைப் பெற முடியும் என்பதெல்லாம் இதுவரைக்கும் தவறாகப் புரிந்து கொள்ளப்பட்ட அதி முக்கியமானவைகளுள் ஒன்று. இது ஒரு தவறான கருத்து, பிழையான நம்பிக்கை. நேர்மறையானதும் எதிர்மறையானதும் ஒன்றாகவே இருப்பவை. தவிர்க்க முடியாதபடி, பிரிக்க முடியாதபடி அவை இணைந்தே இருக்கின்றன. அவை ஒரே சக்தியின் இரண்டு தன்மைகள், கோணங்கள், கூறுகள் எனலாம்.

என்னுடைய சந்நியாசிகளும், என்னைப் புரிந்து கொண்டவர் களும் அந்த இரண்டையும் ஏற்றிருக்க வேண்டும். நான் ஒரு புதிய திறனை - மனதால் அறியும் திறனை (insight) உங்களுக்கு வழங்கு கிறேன். எல்லாமாக இருங்கள். இடப்பக்கம் இருக்கிறபொழுது எதையும் தவறவிடாதீர்கள் - மகிழ்ச்சி அடையுங்கள். தனக்கே உரிய நேர்த்தியை அது கொண்டிருக்கும். நீங்கள் வலப்பக்கத்தில் இருக்கும் போது அதைக் காண முடியாது. அது ஒரு மாறுபட்ட காட்சி. மையத்தில் (நடுப்பகுதி) தனக்கேயுரிய அமைதியை மவுனத்தை அது கொண்டிருப்பதைக் காண்பீர்கள். எல்லா வற்றிலும் இருக்கிறது மகிழ்ச்சி. வாழ்க்கையை வளமாக்குங்கள்.

துயரத்தில் ஓர் அழகிருப்பதை உங்களால் காண முடியவில்லையா? அது பற்றி ஆழமாய் சிந்தியுங்கள். அடுத்த முறை துயர்ப்படும் நிலையில் அதை எதிர்த்துப் போரிட முற்படாதீர்கள். எதிர்ப்பதில் நேரத்தை வீணடிக்க வேண்டாம். ஏற்றிடுங்கள், அதை வரவேற்றுக் கொள்ளுங்கள். உண்மையிலேயே உபசரிப்பவராயிருங்கள். மகிழ்ச்சியில் இல்லாத சில அழகுகள் துயரத்தில் இருப்பதைக் கண்டு வியப்பீர்கள். மகிழ்ச்சி எப்போதும் மேலோட்டமானது. துயரம் ஆழமானது. மகிழ்ச்சியால் செல்ல முடியாத ஆழங்களுக்குத் துயரம் சென்றடையும். சிரிப்பை விடவும் திறன் படைத்தது கண்ணீர். மகிழ்ச்சி கொண்டிராத அமைதியை, இனிய இசையை துயரம் கொண்டிருக்கும். மகிழ்ச்சியின் பாடல் ஆரவாரமாய் ஒலிக்கும். அதில் அமைதி இருக்காது.

நீங்கள் வருத்தத்தைத் தேர்வு செய்யுங்கள் என்று நான் கூறவில்லை. அதையும் அனுபவித்து மகிழுங்கள் என்று கூறுகிறேன். அவ்வளவுதான். மகிழ்ச்சியான தருணத்தில் மகிழ்ச்சியை அனுபவியுங்கள். மேற்பரப்பில் நீந்துவதோடு சமயத்தில் குதித்து, ஆழத்தில் துளைந்தாடுங்கள். ஆறு ஒரே ஆறுதான். மேற்பரப்பில் அலைகளும், சிற்றலைகளும் இருக்கும். காற்றும், சூரியக் கதிர்களும் கைகோர்த்து விளையாடும். தனக்கென்று ஓர் அழகை அது கொண்டிருக்கும். ஆழத்தில் துளைந்தாடுவதிலும் அழகிருக்காது, கூடவே சாகசமும், அபாயமும்.

எந்த ஒன்றுடனும் பிணைந்து விடாதீர்கள். துயரத்துடன் தங்களைப் பிணைத்துக் கொண்டவர்கள் உண்டு. அவர்களைப் பற்றி உளவியல் அறியும். அவர்கள் கொடுஞ் செயலில் பாலின்பம் அடைபவர்கள் (masochists). எப்போதும் துன்பத்திற்கான சூழ்நிலைகளைத் தாங்களே தோற்றுவித்துக் கொள்வார்கள். துன்புறுவதே அவர்களுக்கு மகிழ்ச்சியளிக்கும். மகிழ்ச்சி என்றாலே பயம். துன்பத்தில் இருப்பது அவர்களுக்குச் சொந்த வீட்டில் இருப்பது போல.

கொடுஞ் செயலில் பாலின்பமடைகிற பலரும் சமயப்பற்றுடையவர்களாகவிடுகிறார்கள். காரணம், மதம் அத்தகைய மனங்களுக்குப் பாதுகாப்பாய் தெரிவது தான். மதம், தன்னுடைய அழகான விளக்கத்தின் மூலம், ஒருவர் மாஸோக்கிஸ்டாக

(Masoehist) இருப்பதை பகுத்தறிவிற்கு ஏற்புடையதாக்கி விடுகிறது. மதப்பற்று இல்லாத மாஸோக்கிஸ்ட் தான் பிணியுற்று விட்ட தாகவும், மற்றவர்கள் தன்னை நிந்திப்பதாகவும் உணர்வான். தன்னுடைய செயல்கள் குறித்து அவன் குற்ற உணர்வு கொள்ளவும் நேரிடும்.

அந்த மாஸோக்கிஸ்டு மதப்பற்றுடையவனாயின் தன்னைப் பெருமிதமாய் வெளிப்படுத்திக் கொள்வான். அப்போது அது மாஸோக்கிஸமாக இருக்காது, தன்னிலை மறுத்து, தன்னை ஒதுத்தடக்கிய துறவாகி விடும். தன்னைத் தானே வருத்திக் கொள்கிற, சுயக்கட்டுப்பாட்டுன் கூடிய தவசீலனாகி விடுவான் அவன். லேபிள் (Label) மட்டும் மாறும், அவ்வளவுதான். தற்போது அவனை யாரும் விரும்பதகாதவன், இயற்கைக்கு மாறானவன் என்று கூறமாட்டார்கள் - அவன் துறவி! அவ்னை யாரும் நோயுற்றவன் என்று கூற முடியாது. அவன் பக்திமான், புனிதன்!

* மாஸோக்கிஸம் (masoehism) - தனக்குத் தானே கொடுமை செய்து, வலியில் சிற்றின்ப உணர்வு காணும் மனநிலை.

மாஸோக்கிஸ்டுகள் மதத்தை நோக்கிச் செல்கிறார்கள். மதம் அவர்களைப் பெரிய அளவில் ஈர்க்கிறது. கடந்த காலத்தில் மிகப் பல மாஸோக்கிஸ்டுகள் மதத்தை நோக்கிச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் மதத்தின் பேரில், ஆதிக்கம் செலுத்தத் தொடங்கி விடுகிறார்கள். மதம் வாழ்க்கைக்கு எதிராக மனிதனைத் தயார் செய்கிறது. எதிர்மறையான பார்வையை, அழிவிற்கான சிந்தனையை அது வழங்குகிறது. அது வாழ்க்கைக்கோ, காதலுக்கோ, மகிழ்ச்சிக்கோ ஆதரவாயில்லை. வாழ்க்கை ஒரு துன்பியல் என்றே அது வலியுறுத்திக் கொண்டிருக்கிறது.

அருமையான கதையொன்றை நான் கேட்டிருக்கிறேன். அது எந்த அளவு சரியாக இருக்கும் என்று என்னால் உறுதியளிக்க முடியாது.

சொர்க்கத்தில், ஒரு பிற்பகலில், பிரசித்தமான சிற்றுண்டி விடுதியில் புத்தரும், கன்ஃபூசியஸும், லாவோட்சுவும் அமர்ந் திருந்தனர். ஜாலியான பேச்சு ஓடிக் கொண்டிருந்தது.

பரிமாறுகிறவன் ஒரு தட்டில் 'வாழ்க்கை' (life) என்கிற பானத்தை, மூன்று கண்ணாடி தம்ளர்களில் நிரப்பி அவர்களிடம்

கொண்டு வைத்தான். தமது கண்களை மூடியபடி, புத்தர் சொன்னார், 'வாழ்க்கை துன்பமயமானது' என்று.

கன்பூசியஸ் தமது கண்களை அரைவாசி மூடிய நிலையில், பரிமாறுகிறவனை அழைத்தார், அந்த பானத்தைத் தனக்குக் கொடுக்கும்படி கூறினார். அதில் ஒரு சிறிது மட்டும் தான் உறிஞ்ச விரும்புவதாய் தெரிவித்தார். சிறிதளவு கூடப் பருகிச் சுவைக்காமல் ஒருவர் எப்படி வாழ்க்கையைத் துன்பம் என்றோ இல்லை யென்றோ கூற முடியும்? அவருடைய மனம் அறிவியல் சார்ந்தது. கன்பூசியஸ் ஒன்றும் மறைஞானி அல்ல, அவர் ஒரு *ப்ராக்மாடிக் (Pragmatic), உலகியல் வாழ்வில் ஈடுபாடுள்ளவர்.

*ப்ராக்மாடிக் (Pragmatic) – ஒன்றின் பயன் அது மனிதனுக்குக் கொடுக்கும் நன்மையைப் பொறுத்தது என்னும் கோட்பாட்டைச் சார்ந்திருத்தல்.

கன்பூசியஸ் சொன்னார், 'முதலில் சிறிது சுவைத்து விட்டு, சொல்கிறேன்' என்று.

அவர் ஒருவாய் பருகினார், 'புத்தர் கூறியது சரிதான், வாழ்க்கை துன்புறுதலே' என்றார்.

லாவோட்சு மூன்று தம்ளர்களில் இருந்த பானம் முழுவதையும் பருகிவிட்டு, ஆடத் தொடங்கினார். புத்தரும், கன்பூசியஸும், 'நீர் ஏதாவது சொல்லப் போகிறீரா?' என்று கேட்டனர். 'என்னுடைய நடனம், என்னுடைய பாட்டு, பார்க்கிறீர்களே, இதுதான். வேறென்ன சொல்ல?' என்றார் அவர்.

நீங்கள் எதையும் முழுமையாக உணராமல், கருத்து கூற முடியாது. முழுமையாகச் சுவைத்த பின்னும் உங்களால் சொல்ல முடியாது, காரணம் நீங்கள் தெரிந்து கொண்டதைச் சொல்ல வார்த்தைகள் போதுமானதாயிருக்காது.

புத்தர் ஓர் உச்ச முனை (extreme) யில் இருக்கிறார். கன்பூசியஸ் மையத்தில் இருக்கிறார். லாவோட்சு மூன்று தம்ளர்களில் இருந்ததையும் சொட்டுவிடாமல் குடித்து விட்டிருக்கிறார். அவர் புத்தருக்காகக் கொண்டு வரப்பட்டதையும், கன்பூசியஸிற்குக் கொடுக்கப்பட்டதையும் கூட குடித்துத் தீர்த்தார், தன்னுடையதையும், வாழ்க்கையை அதன் மூன்று பரிமாணங் களோடும் வாழ்ந்தவர் அவர்.

*இரண்டாம் கேள்வி: ஓஷோ அவர்களே!*

***தனக்குள் இருந்து, அன்றாட வாழ்வில் முன்னேற எது அவசியம் என்று வழிகாட்டுகிற மனச்சாட்சியை ஒருவர் எப்படி மேம்படுத்திக் கொள்வது?***

***தன்னுடைய அகவாழ்வை வெளிப்படுத்தும் முயற்சியில் ஒருவர் என்னவெல்லாம் செய்ய வேண்டியிருக்கும்? நான் எப்போதுமே அமைதிக் குலைவுக்குள்ளாகியிருப்பதாய் தோன்றும், ஆயினும், சில நேரங்களில் ஏதோ ஒன்று என்னுள் இருந்து என் வளர்ச்சிக்கு வழிகாட்டுவதாய் ஒளியூட்டுவதாய் நான் நம்புகிறேன். உண்மையான இருப்புணர்வை நோக்கித் தன்னைக் கொண்டு செல்லும் பொருட்டு, தனது உணர்வுகளையும், உள்ளக் கிளர்ச்சிகளையும் தீவிரமாக்க ஒருவர் கற்றுக்கொள்ள முடியுமா?.***

மனச்சாட்சியை மேம்படுத்திக் கொள்கிற அவசியமில்லை. தேவைப்படுவது தன்னுணர்வே (conscious) யன்றி மனச்சாட்சி (conscience) அல்ல. மனச் சாட்சி என்பது ஒரு பொய்யான சமாசாரம். சமூகந்தான் மனச்சாட்சியை உங்களுக்குள் தோற்றுவித்திருக்கிறது. அது ஒரு நுட்பமான அடிமைப்படுத்தும் முறை. எது சரி எது தவறு என்று சமூகம் உங்களுக்குக் கற்பிக்கிறது. குழந்தை தெரிந்து கொள்வதற்கு முன்பே அது குழந்தைக்குக் கற்றுக் கொடுக்கத் தொடங்கி விடுகிறது. எது பற்றியும் குழந்தை சுயமாகத் தீர்மானிப்பதற்கு முன்பே, தனக்கு என்ன நடக்கிறது என்பதை அந்தக் குழந்தை உணர்வதற்கு முன்பே சமூகம் கற்பிக்கத் தொடங்கி விடுகிறது. தொடக்கத்தில் ஒருவகை உறக்கத்தில், கவனில் வாழ்ந்து கொண்டிருக்கும் அந்தக் குழந்தை.

தன் தாயின் கருப்பையில் இருபத்தி நான்கு மணி நேரமும் குழந்தை உறங்கிக் கொண்டிருக்கும். பிறந்தபின் அந்த நேரம் இருபத்தி மூன்று மணி, இருபத்தியிரண்டு மணி, இருபத்தியோரு மணி, இருபது மணி... என்று மெல்ல குறையத் தொடங்கும். ஆனால், அவன் இரண்டு முனைகளுக்கும் விழிப்பு, உறக்கம் என்கிற இரண்டு நிலைகளுக்கும் இடைப்பட்ட இடத்தில் (limbo) இருந்து கொண்டிருப்பான். எது நிஜம், எது நிஜமில்லை என்று அவனால் வேறுபடுத்திப் பார்க்க முடியாது. எது சரி, எது தவறு என்று நாம்

அவனுக்கக் கற்பிக்கத் தொடங்குவோம். நம்முடைய சிந்தனை களுக்கேற்ப அவனைக் கட்டுப்படுத்திக் கொண்டிருப்போம். பெற்றோர்களிடமிருந்தும், குருமார்களிடம் இருந்தும், ஆசிரியர்கள், அரசியல்வாதிகள், மகான்கள் போன்றவர்களிடமிருந்தும் கருத்துக்கள் அவனுள் புகுந்து குழப்பத்தை உண்டு பண்ணும்.

இந்த மனச்சாட்சி காரணமாகவே அவனால் விழிப்புணர்வை வளர்த்துக் கொள்ள முடியாமல் போகும். மனச்சாட்சி ஒரு பொய்யான பிரக்ஞை (conscious), சமூகம் திணித்தவுணர்வு (conscience), அந்தப் பொய்யான உணர்வில் நீங்கள் திருப்தியுள்ளால், உண்மையானதைப் பற்றி ஒருபோதும் சிந்திக்க மாட்டீர்கள். அது மிகவும் மோசமானது. குழந்தைகளை நாம் வளர்க்கும் முறை நமக்கு ஏமாற்றத்தையே அளிக்கும். அது (சமூக வளர்ப்புணர்வு என்கிற மனச்சாட்சி) அது கொடூரமானது, தொந்தரவு கொடுக்கக் கூடியது, மனித குலத்துக்கே எதிரானது. கருணையோ, பெருந்தன்மையோ அதற்குக் கிடையாது.

அதனால்தான் இலட்சோபலட்சம் மக்கள் விழிப்புணர்வே இல்லாமல் வாழ்கிறார்கள். அவர்கள் விழிப்புணர்வு பெறுவதற்கு முன்பே நாம் பொய்யான விளையாட்டுக் கருவிகளைக் கொடுத்து அவர்களை விளையாடச் செய்கிறோம். மதிக்கத்தக்க ஒரு வாழ்க்கை வாழ்வதற்கு இவைதாம் தேவைப்படுகிறவை என்று அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். மனச்சாட்சிப்படி நடந்து கொண்டால் வெகுமதிகளைப் பெறலாமென்றும், மனச்சாட்சி சொல்வதைக் கேட்கா விட்டால் தாங்கள் தண்டிக்கப்படுவோம் என்று அவர்கள் கருதிக் கொள்கிறார்கள். சமூக வளர்ப்புணர்வு அத்தகையது!

வெகுமதியும், தண்டனையும் வெளியில் இருந்து மட்டுமல்ல உள்ளிருந்தும் வழங்கப்படக் கூடும். உங்கள் மனச்சாட்சி தவறென்று சொல்கிற ஒரு காரியத்தைச் செய்தால் நீங்கள் குற்ற உணர்வு கொள்வீர்கள், துன்பப்படுவீர்கள் உள்ளாக வேதனையை அனுபவப்பீர்கள். உங்களிடம் நடுக்கம் ஏற்படும், நீங்கள் அச்சத்திற்குள்ளாவிர்கள். அது வருத்தத்தை உண்டு பண்ணும். சொர்க்கம் பற்றியும் அச்சம் வரும். நரகம் பற்றிய அச்சமும் வரும். சொர்க்கத்தை இழந்து, நரகத்தில் விழுந்தது போல் உணர்வீர்கள்.

சொர்க்கத்தின் மகிழ்ச்சியையும், நரகத்தின் அவதிகளையும் உங்கள் புனிதர்கள் நிறையவே அழகுற விவரித்திருக்கிறார்கள் இல்லையா.

இதுதான் மனச்சாட்சி – சமூக வளர்ப்புணர்வு. 'வளர்த்து' என்பது போலவே 'திணித்தது' என்பதும் பொருந்துகிற சொல்தான். மனச்சாட்சி செயற்கையானது, கொடுங்கோன்மை (arlitrary) யானதும் கூட. நீங்கள் அறிவாளியாக இருப்பதை சமூகம் விரும்பாத காரணத்தால் மனச்சாட்சி அவசியமாகி விடுகிறது. எனவே உங்களை அறிவாளியாக்குவதற்கு பதிலாக பல நடத்தை விதிகளை அது உங்களுக்கு வழங்குகிறது: 'இதைச் செய், அதைச் செய்யாதே' என்கிற மாதிரி.

மனித குலம் என்று இந்த மனச்சாட்சி என்கிற பொருளற்ற சொல்லைக் கைவிட்டு, குழந்தைகள் தங்களுடைய விழிப் புணர்வை வளர்த்துக் கொள்ள உதவுமோ அன்றே மகத்தான நாள். அன்றுதான் மனித குலம் புதிதாய் பிறக்கும். ஒரு புதிய இருப்புணர்வு ஒரு புதிய உலகம். பிறகு, குழந்தைகள் மேலும் அறிவில் சிறக்க நாம் உதவியாயிருப்போம். குழந்தைகளும் பிரச்னைகளை எதிர் கொள்ளப் போதிய அறிவைப் பெறுவார்கள். ஒருவருக்கு மனச்சாட்சி எதற்கு? அறிவு போதுமானது. விழிப்புணர்வு போதுமானது.

நிகழ்காலத்தில் உடடினயாய் எதிர்ச்செயல் புரிவதற்கு, விழிப்புணர்வு உங்களைச் செயல்திறன் உடையவராக்கும். மனச்சாட்சி பழசு, சூழ்நிலையோ எப்போதும் புதிசுதான். சமூகம் உங்களுக்குள் வளர்த்திருக்கும் உணர்விற்கு (மனச்சாட்சி) ஏற்பவே நீங்கள் எதிர்ச் செயல் புரிவீர்கள். அந்த உணர்வை சமூகம் உங்கள் மீது திணித்தது, உங்களுக்குள் சரியான நிலையில் அது வைக்கப்பட்டிருக்கிறது. அதே சமயம் சூழ்நிலை முற்றிலும் மாறுபட்டது.

என்னுடைய நண்பர்களில் ஒருவர் திபெத்திற்கு சென்றார். அவர் சமயப்பற்றுடைய, வைதீகமான ஓர் அந்தணர். புத்தமத நூல்களைக் கற்பதற்காக அவர் அங்கே சென்றிருந்தார். ஆனால், அவரால் திபெத்தில் தங்கியிருக்க முடியவில்லை. வெகு சீக்கிரமே அங்கிருந்து திரும்பும் படி ஆயிற்று. அந்தப் பயணம் சிறிதும்

பயனில்லாமல், தேவையில்லாத துன்பத்தைத் தானே தேடிக் கொண்டதாயிற்று. காரணம் திபெத்தினுள் நுழைவது அத்தனை இலேசுப்பட்ட காரியமல்ல.

காலையில் சூரியன் உதிப்பதற்கு முன்பே குளிர்ந்த நீரில் குளிக்கும்படி குழந்தைப் பருவத்தில் இருந்தே அவர் கற்பிக்கப்பட்டிருந்தார்.... தன்னால் திபெத்தில் அது முடியாது என்பதை என்னிடம் அவர் தெரிவித்திருக்கிறார். எனினும், சூரிய உதயத்துக்கு முன் குளிர்ந்த நீரில் குளிக்காவிட்டால் நாள் முழுக்க அவர் குற்ற உணர்வோடு அவதிப்படுவார். அதிகாலையில் குளிர்ந்த நீரில் குளிக்காமல் உன்னால் வழிபட முடியாது. உன்னுடைய வழிபாடு பயன்படாது என்று அவருக்குச் சொல்லப்பட்டிருந்தது. வழிபாடு செய்யாமல் நீங்கள் எதையும் சாப்பிடவும் முடியாது. எனவே, காலையில் குளிர்ந்த நீரில் குளித்தார் அவர், அது உயிருக்கே ஆபத்தை உண்டு பண்ணக் கூடியது. திபெத்தின் புனித நூல்கள் ஆண்டுக்கு ஒரு முறை குளித்தால் போதும் எனக் கூறும்.

ஒரு முறை சில திபெத்திய *லாமாக்கள் என்னுடம் தங்கியிருந்தனர். அந்த நாட்களில் அவர்களைப் பற்றி அறிந்து கொள்வதற்கு மனீஷாவோ, ராதாவோ இருந்திருக்கவில்லை. நான் சிரமத்துக்குள்ளானேன்.

*லாமா (Lama) திபெத், மங்கோலிய நாடுகளில் உள்ள புத்தமத குரு.

---

அந்த லாமாக்கள் ஓர் ஏழெட்டு நாள் எனது வீட்டில் தங்கியிருந்தனர். நான் கிட்டத்தட்ட வெளியிலேயே பொழுதைக் கழித்தேன். வீடு மொத்தமும் ஒரே நாற்றம், காரணம் அவர்கள் குளிக்கவில்லை. இந்தியாவில் அப்போது கோடைகாலம். ஆனால் அவர்கள் குளிக்காமல் இருந்தனர். தங்களுடைய மனச்சாட்சிப்படி அவர்கள் நடந்திருக்க வேண்டும்.

அதே மாதிரி சமண குருமார்களுடன் பேசுவதும் எனக்குச் சங்கடமான விஷயம். சமணத் துறவிகள் என்னைக் காண வருவதுண்டு. அவர்கள் வாயை சுத்தம் செய்ய மாட்டார்கள். வாய் கொப்பளிக்கவோ, பற்களைத் தேய்க்கவோ அவர்களுக்குத் தோன்றாது. அதெல்லாம் சரீரத்தை அழகுபடுத்துவதாக அவர்கள்

கருதினர். சமணராகிய அவர்கள் எப்படித் தங்களை அழகுப் படுத்திக் கொள்வார்களாம்? அவர்களிடமிருந்து வீசும் வாய் நாற்றம் காரணமாய் என்னால் அவர்களுடன் பேசமுடிவதில்லை. சமண குருமார்கள் குளிப்பதற்கும் அனுமதிக்கப்படுவதில்லை. சரீரத்தின் மீது எதற்காக அக்கறை செலுத்துவது என்பது தான் காரணம். சரீரத்திற்கெதிரான மனோபாவம்: அவர்களுடைய உடல் நாறும், வாய் நாறும்.

ஒரு சமணப் பெண் துறவி என்பால் வெகுவாய் ஈர்க்கப்பட்டவர், என்னிடம் ஆர்வம் அவருக்கு. நான் அவரிடம் சொன்னேன், ‘ஸ்பாஞ்ச் பாத்’தாவது (உறிஞ்சும் பொருள் கொண்டு உடலை சுத்தம் செய்வது) எடுத்துக் கொள்ளுங்கள்: ‘நீங்கள் குளித்தது யாருக்கும் தெரியாது’ என்று.

அந்த யோசனைக்கு அவர் ஒத்துக் கொண்டார். ‘ஸ்பாஞ்ச் பாத்’ எடுத்தபின் என்னிடம் சொன்னார், ‘என்னால் நிறைவாக உணர முடிந்தது. புத்துணர்ச்சி கிடைத்தது. ஆனாலும் உள்ளுக்குள் ஏதோ குற்றம் செய்த உணர்வு’ என்று.

குளிப்பதை பாவகாரியமாக நீங்கள் எப்போதேனும் எண்ணியதுண்டா? இத்தனைக்கும் அந்தப் பெண்மணி முழுமையான குளியலை மேற்கொள்ளவில்லை. ‘ஸ்பாஞ்ச் பாத்’ மட்டுமே எடுத்துக் கொண்டார். ஓர் ஈரத்துண்டைக் கொண்டு உடல் முழுவதும் துடைத்துக் கொள்வது. ஆனால் அவர் குற்ற உணர்வுடையவராகி, செய்த தவறுக்கு வருத்தப்படுகிறவராய் மூன்று நாள் உண்ணா நோன்பிருந்தார்.

இது மனச்சாட்சி. அது உங்களைத் தொடர்ந்து முட்டாளாக் கியபடி இருக்கும். சூழ்நிலைகள் மாறும் ஆனால், மனச்சாட்சி மாறாது. அது வளர்வதில்லை. நிலையாக இருக்கும். குழந்தைப் பருவத்தில் உங்களுக்கு வழங்கப்பட்ட யோசனைகளின்படியே நீங்கள் வாழ்ந்து கொண்டிருப்பீர்கள். அறியாமை நிரம்பிய பெற்றோர்களும், அறியாமை நிரம்பிய ஆசிரியர்களும் வழங்கிய யோசனைகள். அவற்றுக் கேற்பவே நீங்கள் வாழ்வீர்கள். உங்களுடைய எதிர்ச் செயல் (**response**) ஒரு போதும் உண்மையாயிருக் காது. காரணம் அது சூழ்நிலையோடு பொருந்துவதில்லை. நீங்கள் எப்போதுமே பின்தங்கியிருப்பீர்கள்.

**தே.தே.பெ. 24**

பொறுப்புணர்வு என்பது நடைமுறைக்கேற்ப எதிர்ச் செயல் புரியும் திறன். நடைமுறையைப் போலவே அதுவும் மாறும்படி இருக்கும். மனச்சாட்சியோ நிலையாக இருப்பது. அதுதான் மனச்சாட்சிக்கும் விழிப்புணர்வுக்கும் உள்ள வேறுபாடு.

விழிப்புணர்வு ஒரு நிலைக் கண்ணாடி போன்றது. மனச்சாட்சி 'போட்டோ பிளேட்' (Photo plate) மாதிரி. ஒருமுறை அது எக்ஸ்போஸாகி (காட்சியாதல் வெளிப்படல்)' விட்டால், தீர்ந்தது. அது படத்தைப் பதிவு செய்யும். பிறகு அந்தப்படம் எப்போதைக்கும் அப்படியே நிலையாக இருக்கும். அது வளர்ச்சியற்றது என்பதை நினைவில் கொள்ளுங்கள்.

தன்னுடைய குடும்ப ஆல்பத்தை குழந்தையிடம் காண்பித்துக் கொண்டிருந்தாள் ஒரு பெண்மணி. இளமையும், முகத்தில் பொலிவும், கறுத்த கேசமும் கொண்ட அழகான பெண் ஒருத்தியின் படத்தை அவர்கள் பார்த்துக் கொண்டிருந்த போது குழந்தை கேட்டது, 'அம்மா, யார் இது?' என்று.

'உனக்கு அடையாளம் தெரியலை, இது உன்னோட அப்பா' என்றாள் குழந்தையின் தாய்.

'அவர் என்னுடைய அப்பாவா? அப்படியானால் நம்முடன் ஒரு வழுக்கையான ஆசாமி இருக்காரே அவர் யார்?' என்றது குழந்தை.

நடைமுறையில் கருத்துக்களும், பொருள்களும், செயல்களும் மாறுகின்றன. கருமையான முடி மறைந்து ஒருவர் வழுக்கையாகி விடுகிறார். ஆனால், படங்களில் எதுவும் நிலையாக (மாறாமல்) இருக்கும்.

மனச்சாட்சியை ஒரு 'போட்டோ பிளேட்' எனலாம். விழிப்புணர்ச்சியை நிலைக் கண்ணாடி எனலாம். அது பிரதிபலிக்கும், ஆனால் எந்த பிம்பத்தையும் அது பற்றிக் கொள்ளாது. அது வெற்றாக இருக்கும். அதனால் புதிய சூழ்நிலைகளைப் பிரதி பலிக்கும் திறனைக் கொண்டிருக்கும். காலைப் பொழுதென்றால் அது காலையையும், மாலைப்பொழுதாயின் மாலையையும் பிரதி பலிக்கும். போட்டோ பிளேட் ஒரு முறை எக்ஸ்போஸாகி விட்டால் அதற்கு காலை, மாலை, இரவென்று பொழுதுகள் கிடையாது.

ஒரு மனச்சாட்சியை மேம்படுத்திக் கொள்கிற அவசியமில்லை. மனச்சாட்சியைக் கைவிட்டு, விழிப்புணர்வை வளர்த்துக் கொள்கிற அவசியம் இருக்கிறது. மற்றவர்களால் அறிவுறுத்தப் பட்டவற்றை விட்டுவிட்டு, உங்கள் சொந்த முயற்சியில் நாடிச் செல்லுங்கள். கண்டடைந்து, வாழ்ந்து பாருங்கள்... தொடக்கத்தில் அது கடினமாய் தெரியலாம். காரணம், உங்களிடம் வரைபடம் எதுவும் இருந்திருக்காது. மனச்சாட்சி அதைப் பிடித்து வைத்திருக்கும். நீங்கள் வரைபடம் இல்லாமல், பின்பற்றத்தக்க வழி முறைகள் இல்லாமல் தான் செயல்படும்படி ஆகும். நெஞ்சுரம் இல்லாதவர்களால் வரைபடமோ, வழிகாட்டுதலோ இல்லாமல் செயல்பட முடியாது. நீங்கள் வரைபடத்துடன் செல்கிறபோது, நீங்கள் உண்மையிலேயே ஒரு புதிய பரப்பிற்குச் செல்வதில்லை. வட்டமாகச் சுற்றியபடி இருப்பீர்கள். நீங்கள் அறிந்திருந்த ஒன்றையே சுற்றிச் சுற்றி வருவீர்கள். அதுவரை அறியாமலிருந்த ஒரு புதிய இடத்துக்குச் செல்வதில்லை.

மனச்சாட்சி நீங்கள் பெற்றிருக்கும் அறிவைக் குறிக்கும். விழிப்புணர்வோ, வெற்றாக இருப்பதை முழுக்கவும் வெற்றாகி (empty) விட்டிருப்பதை, அதனுடன் வாழ்க்கையை எதிர்கொள்வதைக் குறிக்கும். அந்த வெற்றிடத்தில் இருந்து செயல்படுகிற போது உங்களுடைய செயல் நேர்த்தியாக இருக்கும். அப்போது நீங்கள் எதைச் செய்தாலும் அது சரியாகவே இருக்கும். எது சரி, எது தவறு என்பது ஒரு பிரச்னையல்ல. இன்று சரியாகத் தெரிவது நாளை தவறாகத் தெரியலபாம். இரவலாய் பெற்ற அறிவு ஒருபோதும் உதவாது.

சுட்டெரிக்கும் மிஸிஸிப்பி வெய்யலில் ஹோமரும் ஜெத்ரோவும் தோண்டுகிற வேலையைச் செய்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு மேல் முதலாளி, சொகுசாக நிழலில் அமர்ந்திருந்தார்.

ஹோமர் தம்முடைய அள்ளு கரண்டியை கீழே வைத்து விட்டு, கேட்டார், ‘அவர் மேலே உட்கார்ந்திருக்கவும், நாம் கீழே இங்கிருக்கவும் எப்படி ஆனது?’ என்று.

‘எனக்குத் தெரியாது’ என்றார் ஜெத்ரோ.

ஹோமர் முதலாளியிடம் சென்று கேட்டார், ‘நீங்கள் முதலாளியாக மேலே உட்கார்ந்திருக்க, நாங்கள் கீழே வேலை பார்க்கிற நிலை எப்படி வந்தது?’ என்று.

முதலாளி சொன்னார், 'நான் புத்திக் கூர்மை உள்ளவனாக இருப்பதால்' என்று.

'புத்திக் கூர்மை என்றால் என்ன?' ஹோமர் கேட்டார். 'அதை உனக்குக் காண்பிக்கிறேன், எங்கே நீ என்னுடைய கையில் மோது பார்க்கலாம்?' என்றார் முதலாளி.

'எங்கே அடி' முதலாளி கையை நீட்டினார். ஹோமர் பலங் கொண்ட மட்டும் தன்னுடைய கையை வீசினார். ஆனால் முதலாளி தன்கையை இழுத்துக் கொள்ளவும், ஹோமர் பக்கத்தில் இருந்த மரத்தில் மோதிக் கொண்டார்.

ஆ வென்று அலறினார் அவர். அவருடைய முதலாளி அமைதி யாகச் சொன்னார், 'நீயும் அறிவுக் கூர்மை உடையவன்தான்' என்று.

ஹோமர் திரும்பவும் குழிக்குள் இறங்கினார். 'என்ன ஆச்சு?' என்று ஜெத்ரோ அவரிடம் கேட்டார்.

'நான் புத்திசாலி ஆகி விட்டேன்'

ஜெத்ரோ கேட்டார். அது என்ன புத்திசாலித்தனம்?'

'நான் உனக்குக் காண்பிக்கிறேன்' என்றார் ஹோமர்.

பக்கத்தில் மரம் இருக்கிறதா என்று பார்த்தார், ஒரு மரம்கூட இல்லை. தன்னுடைய முகத்தின் மீது தன் கையை வைத்துக் கொண்டு, 'எங்கே என்னுடைய கையில் அடி, பார்க்கலாம்' என்றார்.

உங்களுடைய அறிவும், மனச்சாட்சியும் இப்படித்தான் ஆகும். சூழ்நிலை மாறும், மரங்கள் இருக்காது.... ஆனால் உங்களுடைய நடைமுறை ஒழுங்கு மாறாமல் அப்படியே இருக்கும். உங்கள் பழக்கப்படியே நீங்கள் செய்து கொண்டிருப்பீர்கள். உங்களால் வேறு விதமாய் செய்ய முடியாது. ஆனால் உங்களுடைய நடைமுறை ஒழுங்கு (routine) டன் பொருந்திக் கொள்கிற கடப்பாடு வாழ்க்கைக்கில்லை. நீங்கள்தான் வாழ்க்கையோடு பொருந்திக் கொள்ள வேண்டும்.

நவீன இயற்பியல் உலகில், இருபதாண்டுகளுக்கு முன் ஒரு புதுமை நிகழ்ந்தது. அது அரிஸ்டாட்டில் காலத்து தர்க்க முறையை

அழித்து விட்டது. பழைய உறுதிப்பாடுகளை அது தகர்த்தெறிந்தது. எலக்ட்ரான்கள் வியக்கத்தக்க ஒரு வழியில் சென்று கொண் டிருப்பதை இயற்பியலார் கண்டறிந்தனர். அவை அணுக்கூறு (Particle) களாகவும், அலைகளாகவும் ஒரே சமயத்தில் செயல்பட்டன. அது எப்படி சாத்தியமாகும். ஒன்று அணுக்கூறாக இருக்க முடியும் அல்லது அலையாக இருக்க முடியும். வடிவ கணிதப்படி (Geometry) ஒன்று புள்ளியாக (குறுகு புள்ளியாகவோ, வட்டப் புள்ளியாகவோ) அல்லது கோடாகத்தான் இருக்க முடியும். ஆனால் ஒன்று ஒரே சமயத்தில் புள்ளியாகவும், கோடாகவும் இருக்க முடியாது. அது சாத்தியமில்லை, ஆனால், அதுதான் நடந்து கொண்டிருக்கிறது.

எலக்ட்ரான் கொஞ்சமும் அறிவுக்குப் பொருந்தாத வகையில் செயல்படுவதை அவர்கள் கூர்ந்து கவனித்தனர். 'ஏ' எப்போதும் 'ஏ' யாகவே இருக்கும். 'ஏ' ஒருபோதும் ஏ அல்லாததாக இருக் காது. இது அரிஸ்டாட்டில் காலத்து - இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முந்தைய சிந்தனை. ஆனால், ஓர் அணுக்கூறு அலையாகவும் செயல்பட்டுக் கொண்டிருக்கிறதே! தற்போது என்ன செய்வது?

அரிஸ்டாட்டில் காலச் சிந்தனையையும் அப்படியே தூக்கி யெறிந்து விட முடியாது. இரண்டாயிரம் ஆண்டுகளாய் நேசித்திருக்கிற சங்கதி. ஆனால், எலக்ட்ரான்களுக்கு அந்த கட்டுப்பாடு கிடையாது, அவை அரிஸ்டாட்டிலைப்பற்றி கவலைப்படாது. அவர்கள் தாம் கடைசியில் எலக்ட்ரான்களுடன் ஒத்துப்போகும்படி ஆயிற்று.

கடைசியில் அரிஸ்டாட்டிலைத் தூக்கியெறிந்தனர். இரண் டாயிரம் ஆண்டுப் பழமையான தர்க்கம் பொருத்தமற்றது என்றனாது.

அதன் பிறகு சில ஆண்டுகள் கழித்து நடந்தது மற்றொன்று! எலக்ட்ரான் 'ஏ' என்கிற முனையில் இருந்து 'பி' என்கிற முனைக்குச் சென்றது. இடையில் அது மறைந்துவிட்டது. 'ஏ' முனையில் நீங்கள் அதைக் கண்டீர்கள், பிறகு உடனடியாக 'பி' என்கிற முனையில் அது காணப்பட்டது. ஆனால் இடையில் நீங்கள் அதைக் கண்டு கொள்ளவில்லை.

தற்போது இது மிகவும் சாத்தியமற்ற ஒன்றாக இருக்கிறது. ஒருவர் மும்பையில் இருந்து புனே செல்கிறார். அவரை நீங்கள் மும்பையில் கண்டீர்கள். பிறகு புனேயில் காண்கிறீர்கள். ஆனால் வழியில் எங்கும் கண்டிருக்கவில்லை. இது வியக்கத்தக்க, நம்ப முடியாத ஒன்றுதான். ஆனால், என்ன செய்யட்டும்: 'ஏதுமின்மையில் இருந்து வருவதும் ஏதுமின்மையே' என்பது பழைய கருத்து. ஆனால் தற்போது இடையில் அல்லவா அது ஏதுமற்ற தாய் (nothing) இருக்கிறது! தொடக்கத்தில் ஏதோ ஒன்று இருக்கிறது. முடிவிலும் ஏதோ ஒன்று இருக்கிறது, நடுவில் மட்டும் எதுவுமே இல்லை. ஆக, ஏதோ ஒன்றில் இருந்து ஏது மற்ற ஒன்று வருகிறது. அத்துடன் ஏதுமற்றதில் இருந்து ஏதேனும் ஒன்று திரும்பவும் வந்து விடுகிறது.

ஆனால், இது எப்போதுமே மறை ஞானிகளின் அனுபவமாய் இருந்திருக்கிறது. நவீன இயற்பியலுக்கு வேண்டுமானால் இது புதிதாய் தெரியலாம். ஆனால், இயற்கைத் தத்துவ இயலுக்கு (metaphysics) இது புதிதல்ல. மறை ஞானிகள் அரிஸ்டாட்டிலை நம்புவதில்லை. அவர்கள் எப்போதுமே அரிஸ்டாட்டிலுக்கு எதிரானவர்கள்தாம். அவர்கள் பகுத்தறிவுக்குப் பொருந்தாதவர் களாகவே இருந்திருக்கின்றனர். காரணம், அவர்கள் எலக்ட்ரானின் வழிமுறையை அறியாதவர்கள், ஆனால், தங்களுக்குள் இருக்கும் விழிப்புணர்வை அறிந்தவர்கள்.

அகந்தை ஏதோ ஒன்றாக (something) இருப்பதையும், ஏதுமின்மை (nothing) யில் இருந்து அது வெளிப்பட்டதையும் அவர்கள் கவனித்திருக்கிறார்கள். பிறகு ஏதுரமின்மையிலேயே அது மறைந்ததையும் அவர்கள் கவனிக்கத் தவறவில்லை. திண்மையாக (solid) இருந்தது அகந்தை. தியானத்தில் ஒருநாள் அது மறைந்து போனது. இரண்டையும் அவர்கள் கண்டார்கள்.

அகந்தை பற்றிய மிகப் பழமையான அனுபவங்களில் இதுவும் ஒன்று: அது ஒரு கணத்தில் தோன்றி; மறுகணத்தில் இல்லை என்றாகிறது. பிறகு மீண்டும் அங்கே வந்துவிடுகிறது. காலம் குறித்த அனுபவமும் இத்தகையது தான். நீங்கள் ஆழ்ந்த சிந்தனையில் (தியானத்தில்) இருக்கும் போது காலம் மறைந்து விடுகிறது. எனினும், அந்தச் சிந்தனை அல்லது தியானத்தில் இருந்து விடுபட்டதும் காலம் மறுபடியும் அங்கே இருப்பதை அறிவீர்கள்.

மறை ஞானிகள் அறிவார்கள் வாழ்க்கை எந்தவொரு தர்க்கத்தையும் கொண்டிருக்கவில்லை. அது அடிப்படையில் தர்க்கத்திலும் மேம்பட்டது என்பதை. மனச்சாட்சி செயற்கையானது. அறிவுக்குப் பொருந்தாதது. அது ஒரு நிலையான அமைப்பை - செயல்படும் முறையை (Pattern) யே உங்களுக்கு வழங்கிக் கொண்டிருக்கும். எனில் வாழ்க்கையோ தொடர்ந்து மாறிக் கொண்டேயிருப்பது. நிச்சயத் தன்மையற்றது. நீங்கள் விழிப்புணர்வோடு இல்லாவிட்டால், இந்தக் கோணல் மாணலான வாழ்க்கையை உண்மையில் வாழ முடியாது. உங்கள் வாழ்க்கை பாசாங்காக, போலி நடப்பாகவே இருக்கும். நீங்கள் எப்போதுமே இரயிலைத் தவற விடுவீர்கள்.

இரயிலைத் தவற விடுவது என்பது எப்போதுமே மனிதனின் கவலைக்குள்ளாக்குகிற சமாசாரம். நீங்கள் இரயிலைத் தவறவிடுவதைக் கொஞ்சம் கற்பனை செய்து பாருங்கள். இரயில் நிலையத்துக்கு விரைந்து செல்கிறீர்கள். நிலையத்திற்குள் பாய்ந்தோடுகிறீர்கள் ஆனால், இரயிலோ நடை மேடையை விட்டுப் போய்விடுகிறது. நீங்கள் இரயிலைப் பிடிக்கப் போகிற ஒவ்வொரு முறையும் இப்படித்தான். மனச்சாட்சிப்படி வாழ்கிறவர் களுக்கும் இதுவே நடக்கிறது. அவர் ஒருபோதும் இரயிலைப் பிடிக்க முடிவதில்லை. அவர் தனக்குள் அசையாத பாறைபோல் இருக்கிறார். வாழ்க்கையோ நில்லாமல் ஓடுகிற திரவமாயிருக்கிறது.

விழிப்புணர்வோடு இருங்கள். மனச்சாட்சியை எப்படி வளர்த்துக் கொள்வது, மேம்படுத்துவது என்று கேட்காதீர்கள். இங்கே, நாம் எதிரிடையான ஒரு காரியம் பண்ணிக் கொண்டிருக் கிறோம்; மனச்சாட்சியை அழிக்கிற காரியம். இந்த வேலை மதங் களுக்கப்பாற்பட்டது. அத்தனை மதம் சார்ந்த மனச்சாட்சிகளை சமூக வளர்ப்பு உணர்வை (conscience) நாங்கள் அழிக்கிறோம்.

மனிதர்களைப் பிரித்துப் போடுகிறது சமூக வளர்ப்புணர்வு. அவர்களை ஒன்று சேர்க்கிறது விழிப்புணர்வு.

உங்களோடு வழிகாட்டியையும் கூட்டிச் செல்கிற அவசியம் என்ன? விழிப்புணர்வே போதுமானது. தேவைப்படுகிறபோது உங்கள் விழிப்புணர்வு எதிர்ச்செயல் (respond) புரியும்.

நான் ஒரு பல்கலைக்கழக மாணவனாக இருந்த பொழுது, என்னுடைய பேராசிரியர்கள் என்னைப் பற்றி நிரம்பவே கவலைப் பட்டார்கள். நான் தேர்வுகளுக்கு ஒருபோதும் தயாராவதில்லை, அதுதான் அவர்களுடைய கவலைக்குக் காரணம். அவர்கள் என்னை நேசித்தார்கள். தேர்வாளர்களால் நான் எழுதும் பதில்களில் உள்ள முக்கியக் கருத்தைப் புரிந்து கொள்ள முடியாமல் போய்விடுமோ என்றும் கவலைப்பட்டார்கள்.

டாக்டர். சக்ஸேனா என்கிற பேராசிரியர் அதிகாலையிலேயே என்னைப் படுக்கையில் இருந்து எழுப்புவதற்கு வந்து விடுவார். அப்போதாவது கொஞ்சம் படிக்கமாட்டேனா என்கிற எண்ணம். என்னுடைய அறையில் உட்கார்ந்து கொண்டு, 'கொஞ்சம் தயார் பண்ணிக்கோ' என்பார். என்னைத் தேர்வுக் கூடத்தில் கொண்டு விட்டுத்தான் வீட்டுக்குச் செல்வார். எங்கே நான் தேர்வெழுதப் போகாமல் இருந்து விடுவோனோ என்றும் கவலைப்பட்டார் அவர்.

கடைசி நாள் வாய் மொழித் தேர்வு (oral). நான் தேர்வாளரைக் காயப்படுத்துகிற மாதிரி எதையாவது சொல்லி வைத்து விடுவேனோ என்கிற கவலை அவருக்கு. அவர் துறைத் தலைவர் என்பதால், தேர்வாளரின் பக்கத்திலேயே தானும் இருந்து, என்னைக் கண்காணித்தார். 'அந்த ஆள் எதை வேண்டுமானாலும் கேட்கட்டும். நீ கேள்விக்கு மட்டும் பதில் சொன்னால் போதும்' என்று என்னைத் திரும்பத்திரும்ப எச்சரித்தார் அவர். 'நீயாக ரொம்பவும் ஆழமாய் கருத்துக்களைச் சொல்லத் தொடங்கி விடாதே. புத்தகத்தில் இருப்பதே போதுமானது. நீபாட்டுக்கு எதையாவது சொல்ல முற்பட்டால் நான் மேசைக்குக் கீழே காலால் உன்னை அழுத்துவேன். நீ கேள்விக்குரிய பதிலை மட்டும் சொன்னால் போதும்' என்று ஒரு செயல் முறைத்திட்டமே வகுத்து விட்டார்.

தேர்வாளர் என்னிடம், 'இந்தியத் தத்துவத்துக்கும் மேற்கத்திய தத்துவத்துக்கும் என்ன வேறுபாடு?' என்று கேட்டார். என்னுடைய பேராசிரியருக்குப் பயம் பிடித்துக் கொண்டது. 'இந்திய'.... 'மேற்கத்திய' என்கிற சொற்களே இவனைத் தூண்டி விடப் போதுமானது' என்று அவர் பயந்திருக்க வேண்டும். 'இந்தியன்'

என்று நீங்கள் குறிப்பிடுவதன் மூலம் எதைச் சொல்ல வருகிறீர்கள்? தத்துவத்திலேயே இந்திய தத்துவம், மேற்கத்திய தத்துவம் இருக்கிறதா என்ன? அப்படியானால் வங்காள தத்துவம், மகாராஷ்டிரா தத்துவம் எல்லாம் இருக்க வேண்டுமே. அறிவியலில் இந்திய அறிவியல், மேற்கத்திய அறிவியல் கிடையாதே. பிறகெதற்கு தத்துவத்தில் மட்டும் அப்படி இருக்க முடியும்?' என்று ஒரு பிடி பிடித்து விட்டேன்.

என்னுடைய பேராசிரியர் காலில் என்னை மோதினார். நான் சொன்னேன், 'அந்த வேலையெல்லாம் வைத்துக் கொள்ளாதீர்கள். உங்கள் பாட்டுக்குப் போங்கள். இது எனக்கும் அவருக்கும் (தேர்வாளர்) இடையிலானது, நீங்கள் ஒன்றும் குறிப்பால் உணர்த்த வேண்டியதில்லை' என்று.

பாவம் அந்தத் தேர்வாளர். எதையோ தொலைத்துவிட்டு முகபாவத்தில் உட்கார்ந்திருந்தார். என்ன செய்வது? அவர் எந்தக் கேள்வி கேட்டாலும் நான் எதிர்க் கேள்வி போட்டுக் கொண் டிருந்தேனே. 'நான் அவரிடம் சொன்னேன், 'எதற்காக எதையோ இழந்தது போல் முகத்தை வைத்துக் கொண்டிருப்பது? தத்துவம் என்றால் தத்துவந்தான். அதில் கிழக்காவது, மேற்காவது?' என்று.

எல்லாமும் இந்தியாவிற்குரியதுதான், எல்லாமும் மேற்கத்திய நாடுகளுக்கும் உரியதுதான். புத்தர் இந்தியாவுக்கு மட்டும் சொந்தமானவரல்ல, இயேசுவும் அப்படித்தான்.

ஆக, உங்களுக்கு மனச்சாட்சியை வளர்த்துக் கொள்ள ஒரு வழி காட்டி அவசியமில்லை. தேவைப்படுவதெல்லாம் அறிவுத் திறனும், தெரிநிலையும், விழிப்புணர்வும் தான். அப்போது, செயல் நிலை எதுவாயினும் உங்களால் எதிர்ச்செயல் புரிய முடியும். வாழ்க்கை சவால்களைக் கொண்டு வருகிறது. நீங்கள் சவால்களை எதிர்கொள்ள விழிப்புணர்வைக் கொண்டு வருகிறீர்கள். தியானம் ஒரு சரியான வழி. மனச்சாட்சியை விட்டு, விழிப்புணர்வை நோக்கிச் செல்வதற்கு.

இயற்கை மீறிய - குறிப்பிடத்தக்க செயல் ஒன்று: நீங்கள் மனச் சாட்சியை - சமூகத்தால் திணிக்கப்பட்ட உணர்வைக் கைவிட்டால், விழிப்புணர்வு தன்னால் எழுந்து கொண்டு விடும். காரணம்

விழிப்புணர்வு ஓர் இயற்கையான நடப்பு. நீங்கள் விழிப்புணர் வோடுதான் பிறந்தீர்கள்.

மனச்சாட்சி ஒரு பாறை. விழிப்புணர்வு என்கிற சிறு நீரூற்றை அந்தப் பாறை தடுத்துக் கொண்டிருக்கிறது. நீங்கள் பாறையை அகற்றி விட்டால், நீரூற்று பீறிடத் தொடங்கி விடும். அந்த நீரோட்டத்தில் உங்கள் வாழ்க்கை முற்றிலும் மாறுபட்ட வழியில் செல்லத் தொடங்கும் . அதற்கு முன் நீங்கள் ஒருபோதுமோ அதைக் கற்பனை செய்திருக்கமாட்டீர்கள். அது பற்றி கனவும் கண்டிருக்க மாட்டீர்கள். எல்லாமே பிரபஞ்சத்துடன் இசைவாகி விடுகின்றன. அதில் தவறேதுமில்லை.

ஆக, மனச்சாட்சியே துன்பங்களனைத்திற்கும் மூலகாரண மாயிருக்கிறது. அது பிரபஞ்சத்துடன் இசைவாகிவிட உங்களை அனுமதிக்காது. விழிப்புணர்வு எப்போதுமே சரியாக இருக்கும். மனச்சாட்சி எப்போது தவறாக இருப்பதைப் போன்று.

நீங்கள் கேட்கிறீர்கள், 'உண்மையான இருப்புணர்வை நோக்கித் தன்னைக் கொண்டு செல்லும் பொருட்டு தனது உணர்வுகளையும், உள்ளக் கிளர்ச்சிகளையும் தீவிரமாக்க ஒருவர் கற்றுக் கொள்ள முடியுமா? என்று.

எண்ணங்களோ உணர்வுகளோ உங்களை இருப்புணர்வை நோக்கி உங்களைக் கொண்டு செல்லாது. ஆனால், எண்ணங் களைவிட உணர்வுகள் மேம்பட்டவை. ஆனாலும் அது உண்மையானதாகி விடாது. ஒருவர் முதலில் எண்ணங்களைவிட வேண்டும், பிறகு உணர்வுகளையும். அப்போதுதான், அகவுலகம் முற்றிலும் வெறுமையாகிவிட முடியும். அந்த வெறுமை (emptiness) யில் உங்களுடைய விழிப்புணர்வு உங்கள் பேரில் திரும்பும். மெய்ம்மை (reality) அறியப்பட்டதாகும்.

உண்மை என்பது ஒரு கருத்தோ, உணர்வோ, உள்ளக் கிளர்ச்சியோ அல்ல. உண்மை எனப்து விழிப்புணர்வின் அனுபவம். சாரன் கியர் கெக்கார்டு வெகு சரியாகவே சொன்னார், 'உண்மை ஓர் அகநிலை' என்று. தியானத்தின் போது ஒவ்வொன்றாக விடுங்கள். உள்ளே பல அடுக்குகள்! தியானம் ஒரு திறன் - வெங்காயத்தின் அடுக்குகளை அது ஒவ்வொன்றாகி உரித்து விடும். மனிதன் ஒரு வெங்காயம்! வெங்காயத்தை உரிக்கிற

பொழுது கண்ணில் நீர் வடியும். பொறுத்துக் கொள்ள வேண்டியது தான். வெங்காயத்தை உரித்துக் கொண்டே போனால் கடைசியில் எதுவும் மிஞ்சாது. அந்த ஏதுமின்மை (nothing) யே மெய்ம்மை. நீங்கள் அதைக் கடவுள் என்று அழைக்கலாம். நிர்வாணம், ஞானம் என்றும் அல்லது நீங்கள் விரும்பிய எந்தப் பெயரிலும் அழைக்க முடியும்.

*மூன்றாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! நான் எப்போதும் உடலுறவு பற்றியே கனவு காண்கிறேன் - ஏன் அப்படி?***

நீங்கள் மொரார்ஜி தேசாயைப் பின்பற்றுகிறவரா? அடிப்படையில் உங்களிடம் ஏதோ கோளாறு இருக்கிறது. நீங்கள் எல்லாவற்றையும் (உணர்ச்சி வகையில்) உள்ளாக அடக்கி வைத்து வாழ்வதே உங்கள் கனவு வெளிப்படுத்துகிறது. உங்கள் வாழ்க்கையை நீங்கள் எப்படி வாழ்கிறீர்கள் என்பதையே கனவுகள் பிரதிபலிக்கின்றன. கனவுகள் வெறும் கனவுகளல்ல. அவை சிந்தனை, பிரதிபலிப்பு!

விழித்துக் கொண்டிருக்கும் நேரங்களில் உங்கள் காமத்தை நீங்கள் அடக்கி வைத்திருப்பீர்கள். இயல்பாகவே, அது கனவுகளில் தன்னை வெளிப்படுத்திக் கொள்ளும்படியாய் கட்டுப்படுத்தப்பட்டிருக்கிறது. உங்கள் வாழ்க்கையில் நீங்கள் ஏதோ தவறு செய்து கொண்டிருப்பதையே கனவுகள் சுட்டிக் காட்டுகின்றன. உங்கள் வாழ்க்கை இசைவாக இருந்தால், விழிப்புணர்வுடன் வாழப்படுமெனில், கனவுகள் மறைந்து விடும். அனைத்து வகைக் கனவுகளும் மறைந்து விடும். உங்களுடைய உறக்கம் கனவற்றதாயிருக்கும். மாற்றம் நிகழ்வதற்கான சுட்டுதலே (indication) அது. தியானிக்கிற ஒவ்வொருவரும் அதை அனுபவத்தில் அறிவார்கள்.

கனவுகள் உங்களைப் பற்றிய ஏதோ ஒன்றை காட்டுவிக்கும். நீங்கள் மீள்சிந்தனை பெற்று, வாழ்க்கையை மறு ஒழுங்கு செய்ய வேண்டும். நீங்கள் பாலுறவைப்பற்றி மட்டுமே சிந்தித்துக் கொண்டிருந்தால் பால் சார்ந்த *கருத்தாவேசம் (sex-obsssion)

---

* **கருத்தாவேசம் : மாற்ற இயலாத எண்ணம், மன உறுத்தல்.**

கொண்டுவிடுவீர்கள். யார் அடக்கி வைக்கிறாரோ அவர் கருத்தாவேசம் கொண்டு விடுவார். மக்கள் கனவுகளை ஒதுக்கி விடுவதுபோல் நீங்கள் ஒதுக்கி விட முடியாது. உங்களுடைய கனவுகள் குறியீடுகள் - எண்ணங்களைக் குறிப்பால் உணர்த்து கிறவை. நீங்கள் செய்கிற ஏதோ ஒரு தவறை உங்களுடைய பிரக்ஞையின்மை (தன்னுணர்வற்ற நிலை) தெரிவிக்க முயலும்.

பாலுறவு - காமம் வாழ்வின் ஓர் அங்கம். அதை நீங்கள் மறுக்க முடியாது - நீங்கள் அதைக் கடந்து செல்ல முடியும். ஆனால், உண்மையல்ல வென்று மறுத்துவிட முடியாது. தேவை யில்லாத சிக்கல்களை நீங்கள் உண்டு பண்ணிக் கொள்வீர்கள். அது ஒரு கருத்தாவேசமாக மாறும். அது உங்கள் வாழ்க்கையில் தவறான போக்குகளை (Perversions) த் தோற்றுவித்து விடும்.

மொரார்ஜி தேசாய் சிறுநீர் பருகுவார். தன்னுடைய சிறுநீரைப் பருகும் பழக்கம் இருந்தது அவருக்கு. அது ஒரு கருத்தாவேசம். பாலுணர்வை அடக்கி வைத்ததால் உண்டானது. அடக்கி வைக்கப் பட்ட பாலுணர்வு அநேக தவறான போக்குகளை உருவாக்கும்.

ஆடு மேய்க்கிற கிரேக்கன் ஒருத்தன் தூக்கத்தில் ஆடுகளை எண்ணிக் கொண்டிருந்தான்: 'ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு, ஐந்து, ஹலோ டார்லிங்....'

அண்டானியோ : நேற்றிரவு ஒரு கெட்ட கனவு கண்டேன்.

ஆஞ்சலோ : என்ன ஆயிற்று?

அண்டானியோ : நான் ஒரு *ஸ்பாகெட்டியைத் தின்பதாய் கனவு கண்டேன்.

ஆஞ்சலொ : ரொம்ப மோசமான கனவாருக்கே!

அண்டானியோ : கண் விழிச்சுப் பார்த்தா என்னோட பைஜாமா நாடாவைக் காணோம்.'

தற்போது, இத்தாலியர்கள் ஸ்பாகெட்டி இல்லாமல் வாழவே முடியாதது போல் இருக்கிறார்கள். கனவுகள் பிரதிபலிக்கும். கனவுகள் பிரதிபலிப்புகள், உங்கள் கனவில் பாலுறவுக் காட்சிகள்

---

* ஸ்பாகெட்டி : மாவைத் தண்ணீரால் பிசைந்து செய்யப்படுகிற உணவுப்பொருள்.

வந்தால் உங்கள் வாழ்க்கையை மறுபரிசீலனை செய்யுங்கள். பொருளற்ற பழைய பேச்சை விடுங்கள். நீங்கள் ஒரு தனித் தன்மையுள்ள இந்தியனாக இருக்க வேண்டும். இதுதான் இந்தியனின் மனதில் தொடர்ந்து இருந்து கொண்டிருப்பது. பாலுணர்வைக் கடந்து செல்லக் கூடிய அனைத்து வழிகளை மறுத்த காரணத்தால் உங்களுடைய புனிதர்கள் பால் சார்ந்த எண்ணங்களால் ஆட்டிப் படைக்கப்படுகின்றன.

பால் சார்ந்த தவறான போக்குகளை கண்டு பிடித்தது துறவிகள் என்பதை அறிந்தால் உங்களுக்குத் திகைப்பாக இருக்கும். உளவியலார் சொல்கிறார்கள், துறவிகள் தாம் ஓரினச் சேர்க்கையை கண்டு பிடித்தது என்று.

நீங்கள் ஒன்றை அடக்கி வைக்க முனைந்தால் இயற்கை உங்களைப்பழி வாங்க முற்படும். இயற்கையுடன் உங்களால் போரிட முடியாது என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். உங்களால் இயற்கையை வெற்றி கொள்ள முடியும். போரிட்டு அல்ல, அதனுடன் இணைந்து கொள்வதன் மூலம். இயற்கையை உங்களுக்கு உதவும்படி, உங்களுடன் இருக்கும்படி இணங்க வைக்க உங்களால் முடியும். இயற்கை பரிவுணர்ச்சி கொண்டது. ஆனால், அதனுடன் சண்டையிட்டால் நீங்கள் இழக்க நேரிடும். இயற்கை பிரும்மாண்டமானது, நீங்கள் மிகச் சிறியவர். அலையால் கடலை எதிர்க்க முடியுமா? இலையால் மரத்துடன் மோத முடியுமா? - அது முட்டாள்தனம். அலையால் வெல்ல முடியும் கடலுக்கு எதிராவதன் மூலம் அல்ல, கடலோடு உடனிருப்பதன் மூலமே அது சாத்தியம்.

அதுவே என்னுடைய அடிப்படையான போதனை.

காமத்தை கடக்க முடியும், அது கடக்கப்பட வேண்டியது. ஆனால் கடக்கிற முயற்சி இயற்கைக்கு எதிரானதாய் இருக்கக் கூடாது. இயற்கையுடன், இயற்கையின் வழியே அது நிகழ்த்தப்பட வேண்டும். உங்கள் பாலுணர்வை ஏற்றுக் கொள்ளுங்கள். அது உங்களில் ஒரு பகுதி. பெருமளவில் முக்கியத்துவம் உடைய பகுதி. நீங்கள் உடலுறவில் பிறந்தீர்கள். சொல்லப் போனால் உங்கள் உடலின் ஒவ்வொரு அணுவிலும் பாலுணர்வு இருக்கிறது. பாலுணர்வை மதியுங்கள். அது பிரபஞ்சம் உங்களுக்கு வழங்கிய

வெகுமதி. அதைப் புரிந்து கொள்ளுங்கள். அதைப்பற்றி மேலும் மேலும் சிந்தியுங்கள். ஆனால், தவறான ஊகங்களை விட்டு விடுங்கள். பழித்துக் கூறுவதை விடுங்கள். அத்தனையும் உங்களுக்குள் இருந்தால் உங்களால் ஒன்றைப் புரிந்து கொள்ள முடியாத. தீர்ப்பு செய்யாதீர்கள். காமம் என்றால் காமம்தான். அது ஒரு புனிதமான உயிர்ச்சக்தி. நேசமுடனும், மதிப்புடனும், ஏற்றுக் கொள்ளும் செயல்முறையோடும் அதைப்பற்றிச் சிந்தியுங்கள். அதை மிகச்சரியாகப் புரிந்து கொள்வதற்கு அதன் அடியாழத்துக்கு போங்கள்.

பால் சார்ந்த சக்தியை ஒருவன் என்று புரிந்து கொள்கிறானோ அன்றே அதைக் கடந்தவனாவான். காமம் மறைகிறது. அது மறைவது நீங்கள் அதை மறுப்பதால் அல்ல. ஆனால் அதைப் புரிந்து கொள்வதன் மூலம் அது சாத்தியப்படுகிறது. மறைந்து போவதால் அது அழிந்து விடுவதில்லை. அது மாற்றமடையும். பிரபஞ்சத்தில் எதுவும் எப்போதும் அழிவதில்லை. ஒன்று இன்னொன்றாய் மாற்றமடையும்.

காமம் மாற்றத்துக்குப் பின் காதலாகிறது. காதல் வழிபாடா கிறது. வழிபாடு இறுதியாய் அடைகிற மாற்றமே இறையுணர்வு.

*நான்காம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! சிக்மண்ட் ஃப்ராய்டு பற்றிய உங்கள் மதிப்பீட்டை (திறனாய்வு) நான் ஏற்றுக் கொள்ள மாட்டேன். எப்போதேனும் ஒரு சந்நியாசி உங்கள் கூற்றை மறுத்தால் நீங்கள் அவரை ஏற்றுக் கொள்வீர்களா? நான் ஒன்றும் ஃப்ராய்டை விட குறைவான நரம்பியக்கச் சீரழிவு (neurotic) உடையவனல்ல. ஆனால் என்னுடைய நரம்புக் கோளாறை ஏற்றுக் கொள்வதற்கு நான் தெரிந்து கொண்டால், நான் கற்பனைத் திறன் உள்ளவனாக மாற முடியும் என்று எண்ணுகிறேன். தாங்கள் இது பற்றி என்ன கூறுகிறீர்கள்?***

யார் ஃப்ராய்டை மதிப்பீடு செய்தது? நான் சில தகவல்களை மட்டுமே குறிப்பிட்டேன். ஒரு தகவலைச் சொல்வது மதிப்பீடாகாது. பார்வையற்ற ஒரு மனிதனை நான் குருடன் என்று சொன்னால் பண்பாடில்லாதவனாவேன். ஆனால் அது மதிப்பீடு செய்வதாகாது. நான் மரியாதை தெரியாதவனாக ஒளிவு மறைவுமின்றிப்

பேசுபவனாக இருக்கலாம். ஆனால் நான் யாரையும் விமர்சிப்ப தில்லை.

ஃப்ராய்டு நரம்புக் கோளாறில் பாதிக்கப்பட்டவர்தான். அந்தக் கருத்துக்கு ஆயிரத்தியோரு தகவல்களை ஆதாரமாய் காட்ட முடியும். ஃப்ராய்டின் வாழ்க்கை வரலாறுகளைக் கூர்ந்து கவனித்தால், நீங்களே அத்தகைய தகவல்கள் எதிர்ப்படக் காண்பீர்கள். அவர் ஓர் ஓரினச் சேர்க்கையாளர். ஒரு மனிதனுக்கு அறிவற்ற முறையில் பல கடிதங்களை அவர் எழுதியதுண்டு. அத்தனை ஓரினச் சேர்க்கை பற்றியவை. பிற்பாடு அந்தக் கடிதங்களை அழித்து விடும்படி அவரே அவனிடம் கேட்டுக் கொண்டார். அப்படிக் பலமுறை அந்த மனிதனிடம் அவர் கேட்டுக்கொண்டிருக்கிறார். காரணம், அவர் புகழ் பெற்றிருந்த நிலையில், என்றாவது பொதுமக்களின் கவனத்துக்கு அவை போய் விடக் கூடாதே என்கிற அச்சம்.

அவருடைய அந்தக் கடிதங்களில் பெரும்பாலானவை அழிக்கப்பட்டாலும், ஒரு சில கடிதங்கள் மட்டும் எஞ்சியிருக்கவே செய்தன. தமது வாழ்க்கை நெடுகிலும் ஓரினச் சேர்க்கை குறித்து கடுமையான வெறுப்பை அவர் வெளிப்படுத்தியதுண்டு. அதே சமயம் தம்முடைய குற்றங்களுக்கு பிறர் மீது பழி போடுகிறவராக அவர் இருந்தார்.

நீர் சொல்கிறீர், 'நான் ஃப்ராய்டை விட குறைவான நரம்புப் பாதிப்பு கொண்டவனல்ல. ஆனால், நான் நரம்புக் கோளாறை ஏற்பதற்குக் கற்றுக் கொண்டு விட்டால் எனது கற்பனைத்திறன் அதிகரித்து விடும்' என்று.

அது உண்மைதான். அதைத்தான் இங்கே நானும் போதிக்கிறேன்: அதை ஏற்றுக் கொள்ளுங்கள். ஃப்ராய்டு தம்மு டைய நரம்புக் கோளாறை ஒரு போதும் ஏற்றுக் கொண்டதில்லை. அவர் ஏற்றுக் கொள்ளாதது மட்டுமல்ல. அதை மறுக்கவும் முயற்சித்தார்; அதை மூடி மறைக்கவும் முயன்றார்.

ஒரு சமயம் ஃப்ராய்டும், ஜங் (Jung) கும் இரயிலில் பயணித்தபோது உளப்பகுப்பாய்வு (Psychcanalysis) பற்றி பேச்சு வந்தது. திடீரென்று ஜங்கிற்கு ஒரு சிறந்த யோசனை தோன்றியது - அவர் சொன்னார், 'நீங்கள் நிறைய பேரை உளப்பகுப்பாய்வு

செய்திருக்கிறீர்கள், உங்களை மனநோய்க்காகச் சோதித்ததுண்டா. நீங்களும் அந்தச் சோதனைக்குட்படுவது நல்லது' என்று.

ஃப்ராய்டிற்கு பயமாகி விட்டது – ஒரு யோசனையாகத் தான் ஜங் சொன்னது. ஆனால் அவர் நடுங்கத் தொடங்கி விட்டார். மயக்கம் வந்தது. மயக்கம் தெளிந்த பின் அவர் சொன்னார், 'நான் அதை அனுமதிக்க மாட்டேன். உளப்பகுப்பாய்விற்கு என்னை உட்படுத்திக் கொள்ளப் போவதில்லை. அது என்னை அவப் பெயரை உண்டு பண்ணும் வகையில் வெளிப்படுத்தி விடும்' என்று.

ஜங் சொன்னார்: 'நீங்கள் தான் முன்னே வெளிப்படுத்திக் கொண்டாயிற்றே' என்று.

தாம் உளவியல் சார்ந்த பிரச்னைகளுக்குள்ளான நபர் என்பதை ஃப்ராய்டு ஒருபோதும் ஒப்புக் கொண்டதில்லை. காரணம், நீங்கள் மன நோயாளியாக இருந்து கொண்டு எப்படி உளப்பகுப்பாய்வுப் பணியைத் தொடங்கி நடத்த முடியும்? அவர் ஒன்றும் புத்தரோ, ஞானியோ அல்ல. ஆனால், மனித சக்திக்கு அப்பாற்பட்டவராகத் தம்மை நிரூபிக்க முயன்றார். அவர் பொறாமை மற்றும் சித்தப்பிரமையில் அவதிப்பட்டார் எல்லா ரையும் போல, சொல்லப் போனால் எல்லாரையும்விட மோசமாக.

அவருடைய பழைய சகாக்கள் காலப் போக்கில் அவரை விட்டு விலகிப் போயினர். காரணம் அவர் தம்மிடம் நெருக்கமாகி விட்ட ஒருவர் தம்மைப்போல் புகழ் பெற்று விடுவாரோ என்று பொறாமைப்பட்டார். ஒரு போட்டி ஆசாமி தோன்றிவிடக் கூடும் என்று அஞ்சினார். உடனே தாக்கத் தொடங்கி விடுவார். ஆட்லர் **(Adler)** ஜங் **(Jung)** போன்றவர்களின் விஷயத்தில் அவர் அப்படி நடந்து கொண்டிருக்கிறார். தம்முடைய மாணவர்களைப்பற்றியே அவருக்குப் பயம், எங்கே தமக்குப் போட்டியாகி விடுவார்களோ என்று பயந்தார். உளப்பகுப்பாய்வுத் துறையில் வேறெவரும் முக்கியத்துவம் பெறுவதை அவரால் நம்ப முடியவில்லை. தம்முடைய கொள்கையைப் பின்பற்றிச் செயல்படும் குழுவினரை, ஒருவருக்கொருவர் சண்டையிட்டுக் கொள்ளும்படிச் செய்வார். பிரித்தாலும் கொள்கையே அவருடைய வழி. அப்படியொரு சாதாரண, மோசமான, இரண்டாந்தர மனத்தினர் அவர்.

அவருடைய சூழ்ச்சித் திறன் உளப்பகுப்பாய்வுத் துறையையே குழப்பத்தில் ஆழ்த்திவிட்டது.

நான் அவரை விமர்ச்சிக்கவில்லை. அவரிடம் எனக்கு மிகுந்த மரியாதை உண்டு. தம்மிடம் பல குறைபாடுகள் இருந்தும் மிகப் பெரிய கண்டு பிடிப்பை நிகழ்த்தியிருக்கிறார் அவர். மனித விழிப்புணர்வில் ஒரு புதிய பரிமாணத்தை அவர் தொடங்கி வைத்தார். அவரே உளப்பகுப்பாய்வின் நிறுவனர் எனலாம். ஆட்லர், ஜங் போன்றவர்களும், மற்றவர்களும் அவரை நெருங்கக் கூட முடியவில்லை. அவர் அவசியமில்லாமல் பயந்து கொண் டிருந்தார். சித்தப்பிரமையில் அவதிப்பட்டார் என்றாலும் தமது சகாக்களை விட திறமை மிக்கவர் அவர். தம்முடைய உண்மையான பலத்தை உணர்ந்திருக்கவில்லை என்பதுதான் அவருடைய பிரச்னை.

நான் ப்ராய்டுக்கு எதிரானவன் அல்ல. ஆனாலும் என்னைக் கேட்கிறீர், 'எப்போதேனும் ஒரு சந்நியாசி உங்கள் கூற்றை மறுத்தால் நீங்கள் அவரை ஏற்றுக் கொள்வீர்களா?' என்று.

ஆம், நான் அதையே கற்பிக்கிறேன். உங்கள் விழிப்புணர்வு முடியாது என்றால், முடியாது என்று சொல்லி விடுங்கள். உங்கள் விழிப்புணர்வு சரி என்றால், 'சரி' என்றே சொல்லி விடுங்கள். நான் இங்கே உருவாக்கிக் கொண்டிருப்பது சீடர்களையல்ல, நண்பர் களை. உங்களுடைய மறுப்பும், ஒப்புதலுக்கான மதிப்பையே பெறும். உங்களுக்கு மதிப்பளிக்க அதுவே வழி. உங்களை நீங்கள் மதிக்காமல் இருக்கலாம், உங்களை நீங்களே பழித்து, குற்றவாளி எனத் தீர்ப்பு செய்து கொண்டிருக்கலாம். ஆனால், என்னைப் பொறுத்தவரை நீங்கள் எல்லாருமே புத்தத் தன்மை உடையவர்கள்தாம். ஒரு புத்தனை நான் எப்படி அவமதிக்க முடியும்? நீங்கள் விதைக்குள் இருந்தாலும், என்னால் மலரைப் பார்க்க முடிகிறது.

கிர்லியன் நிழற்படக் கலை (**Kirlian Photography**) யில் தனிச்சிறப்புடைய ஒரு சங்கதியைக் கண்டறிந்தார்கள். வெகு நுட்ப உணர்வுடன் கூடிய புகைப்படங்களை எடுப்பது. அவர்கள் ஒரு மொட்டினை (**bud**) படமெடுத்தால், பிலிமைக் கழுவி, பிரிண்ட் எடுக்கிறபோது அது பூவின் படமாக இருக்கும். அது எப்படி

சாத்தியம். மொட்டு இதழ் விரிப்பதற்கு முன், மொட்டைச் சுற்றி யுள்ள சக்தி மண்டலத்தில் மலர்ச்சி ஏற்படுகிறது. அந்த மொட்டு உண்மையிலேயே மலர்வதற்குச் சில மணி நேரம் முன்பாக அதன் சக்தி மண்டலம் விரியத் தொடங்குகிறது. கிர்லியன் முறையில் படமெடுக்கிறவர் அந்தச் சக்தி மண்டலத்தைப் படமாக எடுத்து விடுகிறார். மொட்டு இன்னமும் விரியவில்லை. அது இன்னமும் மொட்டாகவே உள்ளது. ஆனால், கிர்லியன் புகைப்படக் கலையால் எதிர் நோக்கப்படுகிற ஒன்றைப் படமாக்க முடிகிறது.

கிர்லியன் முறையில் நோய்கள் வருவதற்கு முன்பே அவற்றைப் படமாக்க முடியும். ஏன், சில நோய்களை அவை பாதிப்பதற்கு ஆறு மாதங்கள் முன்பே கண்டுபிடித்துவிட முடிந்தது. நோயுறும் மனிதனின் உடம்பில் எந்த அறிகுறியும் தெரியா விட்டாலும் அவனுடைய சக்தி மண்டலத்தில் மாற்றம் ஏற்பட் டிருக்கும். அந்தச் சக்தி மண்டலத்தைத்தான் கிர்லியன் முறையில் படமெடுக்கிறார்கள். ஆக, நோய் வெளிப்படையாய் தெரிவதற்கு முன்பே, பாதிப்பதற்கு முன்பே அதைத் தடுத்துவிட கிர்லியன் முறை உதவும். அப்படித்தான் விஷயங்களை நானும் பார்க்கிறேன். என்னுடைய கண்களின் முன்பாய் நீங்கள் மொட்டுகளல்ல, பூக்கள். என் பார்வையில் நீங்கள் விதைகளல்ல, முழு வளர்ச்சியுற்ற மரங்கள். இலைகளும், பூக்களும், கனிகளுமாய் குலுங்குவதை நான் பார்க்கிறேன். என் வரைக்கும் நீங்கள் புத்தநிலை அடைந்தவர்கள் தாம். எனவேதான் உங்களையெல்லாம் நான் நண்பர்கள் என்கிறேன். கபீர் தனது மாணவர்களைப் பார்த்துச் சொல்கிறார், 'நண்பர்களே, விழித்துக் கொள்ளுங்கள்' என்று.

உங்களுடைய அத்தனை மறுப்புக்களுடனும் (no's) நீங்கள் ஏற்கப்பட்டிருக்கிறீர்கள். நீங்கள் சந்நியாசியாவதற்கு நான் எவ்வித நிபந்தனையும் விதிக்கவில்லை. உங்களைத் தடை செய்ய நான் யார்? வளர்வதற்கான சந்தர்ப்பம் உங்களுக்கு வழங்கப்பட் டிருக்கிறது.

*கடைசிக் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே! இந்தப் புதிய தலைமுறை, பெற்றோர் களுக்கு ஒரு பிரச்னையாகி விட்டிருப்பது ஏன்?*

காரணம், இந்தப் புதிய தலைமுறை ரொம்பவும் அறிவுத் திறனுடையதாய் இருப்பதுதான். அறிவு நுட்பம் பிரச்னைகளைக் கொண்டு வரும். இளைய தலைமுறை மிகுந்த அறிவோடு இருப்பது இயல்பான விஷயம். அப்படித்தான் இருந்தாக வேண்டும். அப்போது தான் வளர்ச்சி ஏற்படு முடியும். உங்கள் குழந்தைகள் உங்களைவிட அறிவில் சிறந்திருப்பார்கள். அவர்களுடைய பிள்ளைகள் அவர்களைவிட அறிவு மிக்கவர்களாய் இருப்பார்கள்.

அது ஓர் உந்து விசை (momentum)- செயல் வேகம். ஒன்று சேர்ந்த சக்தி. புத்தரின் தோள்மீது நீங்கள் நின்று கொண்டிருக் கிறீர்கள். அதனால் புத்தராகி விடுகிறீர்கள். என்னுடைய இருப்புணர்வில் புத்தர் ஒரு பகுதி, இயேசு ஒரு பகுதி, முகமது ஒரு பகுதி, ஆபிரகாம், கிருஷ்ணர் எல்லாம் எனது பகுதிகள். அந்த வகையில் பார்த்தால் புத்தர் என்னை விடவும் போதாத நிலையில் இருக்கிறார். பின்வரும் காலத்தில் என்னை விடவும் அறிவிற் சிறந்தவர் வரக் கூடும், காரணம் நான் அவருடைய இருப்புணர் வில் ஒரு பகுதியாக இருப்பேன். ஆனால், அவர் என்னுடைய இருப்புணர்வில் ஒரு பகுதியாக இருக்க மாட்டார். வளர்ச்சி தொடர்ந்து செயல் வேகத்தைத் திரட்டிக் கொண்டேயிருக்கும்.

ஒவ்வொரு குழந்தையும் அதன் பெற்றோர்களை விடவும், கூடிய அறிவுத் திறனோடு இருந்தாக வேண்டும். ஆனால் அது பெற்றோர்களுக்கு இடர்ப்பாடாய் தெரியும். தங்களை எல்லாம் தெரிந்தவர்களாகக் காட்டிக் கொள்ளவே பெற்றோர்கள் விரும்பு வார்கள். அந்தக் காலத்தில், வாய் மொழியாகப் பெற்றோர்களே தங்களுடைய குழந்தைகளுக்குப் பாடம் கற்பித்தார்கள், அப்போது எல்லாம் தெரிந்த பாவனையை அவர்கள் எளிதாய் மேற்கொள்ள முடிந்தது.

ஒரு தச்சனின் மகன் தன்னுடைய தந்தையிடம் இருந்து எதைக் கற்க முடியுமோ அதைத்தான் கற்றிருப்பான். அப்போ தெல்லாம் தந்தை, ஒரு தந்தையாக மட்டும் இருக்கவில்லை. ஆசிரியராகவும் இருந்தார். அவருடைய மகன் அவரிடம் பயபக்தியோடு, மரியாதையாக நடந்து கொள்வான். காரணம், அவனுடைய அப்பாவுக்கு எல்லாம் தெரிந்திருக்கிறது. அவருக்குப்

பல வகை மரங்களைப் பற்றியும் தெரியும். மகனுக்கு எதுவும் தெரியாது.

வயது மதிக்கப்பட்டது. வயதில் மூத்தவர் அந்தக் காலத்தில் அறிவுக் கூர்மையுடையவராகக் கருத்தப்பட்டார். காரணம் அவர் மிகுந்த அனுபவசாலி. ஆனால் தற்போதோ பல தகவல் தொடர்பு சாதனங்களை நாம் கண்டு பிடித்து விட்டோம். தந்தை இனியும் ஆசான் அல்ல, கற்பிக்கும் வேறு முற்றிலும் மாறுபட்ட நுண்ணறிவுத் தொழிலாகி (Profession) விட்டது. சிறுவன் பள்ளிக் கூடத்துக்குச் செல்கிறான். அவனுடைய தந்தை முப்பது நாற்பது வருடங்களுக்கு முன் படிக்கப் போயிருப்பார். அந்த முப்பது. நாற்பது வருடங்களில் அறிவுத்துறையில் பல அதிரடிகள் நடந்திருக்கும். பெரிய அளவில் அறிவு வளர்ச்சி ஏற்பட்டிருக்கும். அப்பனுக்குத் தெரியாத ஒன்றை பிள்ளை தெரிந்து வைத் திருப்பான். அந்தப் பிள்ளை வீட்டுக்கு வருகிறபோது எப்படி பயபக்தியாக இருப்பான்? காரணம், அவனுக்கு தன் தந்தையை விட அதிகம் தெரியும். தன் தந்தையை விடவும், கால வகையில் அவன் சரி செய்யப்பட்டவனாக (up - date) இருப்பான். தந்தை பழைமையானவராய் தெரிவார்.

இதுதான் பிரச்னை. இந்தப் பிரச்னை மேலும் அதிகமாகிக் கொண்டே போகும். காரணம் நம்முடைய எதிர்பார்ப்புகள் பழசாகி விட்டன. குழந்தை பெற்றோர்களை மதிக்க வேண்டும், மரியாதை யாக நடந்து கொள்ள வேண்டும் என்று இன்னமும் நாம் விரும்பு கிறோம். ஆனால் ஒட்டு மொத்த சூழ்நிலையும் மாறிவிட்டது. தற்போது, நீங்கள் புதிதாய் ஒன்றைக் கற்றுக் கொள்ள வேண்டி யிருக்கும். உங்கள்குழந்தையிடம் மரியாதை காட்டுவது, பழசை விட புதுசுக்குத்தானே மதிப்பு அதிகம்? குழந்தையிடம் இருந்து கற்றுக் கொள்ளுங்கள். அவன் உங்களை விட அறிவில் மேம்பட்டிருக்கிறவன். பல்கலைக்கழகத்தில் இருந்து திரும்புகிற உங்கள் மகன் கண்டிப்பாய் உங்களை விட மேலான அறிவைப் பெற்றிருப்பான்.

பல்கலைக்கழகத்தில் என்னுடைய அனுபவமும் அப்படித் தான். என்னுடைய தத்துவப் பேராசிரியர் ஒருவர் அபத்தங்களைக் கொட்டி அளந்து கொண்டிருப்பார். அவை பொருளற்றவைகளாய்

இருக்கக் காரணம் அவர் முப்பது ஆண்டுகளுக்கு முன் பல்கலைக்கழகத்தில் படித்தவர். அவர் மாணவராக இருந்த காலத்தில் ஹீகலும், ப்ராட்லேயும் தத்துவ உலகில் பிரபலம். தற்போது யார் ஹீகலியுடமும், ப்ராட்லேயிடமும் கவனம் செலுத்துகிறார்கள்? தற்போது அவர்களுடைய இடத்திற்கு விட்ஜென்ஸ் டெய்னும், ஜி.இ. மூரும் வந்தாயிற்று.

அந்தப் பேராசிரியருக்கு விட்ஜென்ஸ் டெய்னை, ஜி.இ. மூரைப் பற்றி தெரியாது. அவர்களைப் பற்றி அவரிடம் எந்த கருத்துருவாக்கமும் இல்லை. நான் அவரிடம் சொல்வதுண்டு, 'சார் நீங்க ரொம்பப் பழைய ஆள். உங்களால் பயனில்லை. ஒன்று நீங்கள், தற்போதைய நடப்புகளை அறிந்து கொள்ளப்பாருங்கள் அல்லது கற்பிக்கிற வேலையை நிறுத்திக் கொள்ளுங்கள்' என்று.

அவருக்குக் கோபம், இயல்புதானே. நான் பல்கலைக் கழகத்தில் இருந்து வெளியேற்றப்பட்டேன். துணை வேந்தருக்கு அவர் கடிதம் எழுதியிருந்தார், ஒன்று. இந்தப் பல்கலைக்கழகத்தில் நான் பாடம் நடத்த வேண்டும் அல்லது இந்த மாணவன் இங்கே இருக்க வேண்டும். இவன் பெரிய தொல்லை. நாங்கள் இருவருமே ஒன்றாக இருப்பது முடியாத காரியம்' என்று.

அவர் விட்ஜென்ஸ் டெய்னைப் படிக்கத் தயாராயில்லை. அவருடைய பிரச்னையை நான் அறிவேன். விட்ஜென்ஸ்டெய்னை அவர் படித்தாலும் அவரால் புரிந்து கொள்ள முடியாது. விட்ஜென்ஸ்டெய்ன் ஹீகலிடம் இருந்து முற்றிலும் மாறுபட்டவர். கொஞ்சமும் முக்கியத்துவம் இல்லாத ஹ்யூமையும், பர்க்லிஸையும் இல்லாதவர்களைப் பற்றியே அவர் பேசிக் கொண்டிருப்பார். இதுதான் பிரச்னை; நீர் என்னிடம் கேட்கிறீர்; 'இந்தப் புதிய தலைமுறை பெற்றோர்களுக்கு பிரச்னையாகத் தெரிகிறார்களே, அது ஏன்?' என்று.

உண்மையில் அவர்கள் ஒரு பிரச்னையே அல்ல. அந்தக் காலத்துப் பிள்ளைகள் தங்கள் பெற்றோர்களிடம் மரியாதை காட்டி நடந்து கொண்டது போல் இவர்கள் உங்களை மதிக்க வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்கள். ஆனால் தற்போது அது நடவாத காரியம். நீங்கள் அவர்களை மதிக்கத் தொடங்க வேண்டும். தற்போது, மதிப்பதற்கு வயது ஒரு காரணமாக இருக்க முடியாது.

அறிவும், விழிப்புணர்வும் மதிக்கப்பட வேண்டியவை. உங்கள் குழந்தைகளை நீங்கள் மதித்தால் அவர்கள் உங்களைமதிப்பார்கள். நீங்கள் தொடர்ந்து மதிப்புக் குறைவாக நடத்தியதும், உங்களால் அவர்களை இழிவுபடுத்த முடிந்ததும் பழைய முறை. இனியும் அது போல் இருப்பதற்கில்லை.

சமய அறிவுரை கூறுபவரின் **(Preacher)** மனைவி கடையில் இறைச்சி வாங்கிக் கொண்டிருந்த போது, 'டாம் ஹாம்' விற்பனைக்கு என்றிருந்த அறிவிப்பைப் பார்த்தாள். அந்தப் பெயரில் சற்றே அதிர்ச்சியுற்றவளாய், அது புனிதத் தன்மையைக் கெடுக்கக் கூடியதோ என்று வினவினாள். ஆனால், 'அது பன்றியில் ஒரு புதிய இனம், ஹுவர்டாட் என்பவரால் உருவாக்கப்பட்டது, அதனால்தான் அதற்கு 'டாம் ஹாம்' என்று பெயர்' என கடைக்காரன் விளக்கினான். அவளுக்கு அது பற்றிய சந்தேகம் நீங்கி, நம்பிக்கை வந்தது. அன்று தனது குடும்பத்தினரின் மாலை உணர்விற்கு அதை வாங்கிப் பயன்படுத்த முடிவு செய்தாள் அவள்.

வீட்டுக்கு வந்த அவளுடைய கணவர் கேட்டார், 'ராத்திரிக்கு என்ன சாப்பாடு?' என்று.

'டாம் ஹாம்' என்று பதிலளித்தாள் அவள்.

அப்படியொரு சொல்லைத் தமது வீட்டில் அதற்கு முன் கேட்டிராத மதகுரு, அவளை குறைகூறத் தொடங்கினார். ஆனால், அவள் விளக்கியதும் தமது மனைவியைச் சந்தேகப்பட்டதற்காக, கொஞ்சம் மனத் தொல்லைக்குள்ளானார்.

அன்றிரவு அவர்கள் சாப்பிட உட்கார்ந்தபோது 'தயவு செய்து அந்த டாம் ஹாமை கொண்டு வா என்றார் அவர் (பாழாய் போன தொடையைக் கொஞ்சம் நகர்த்து என்றும் பொருள் படும்)

அவர்களுடைய ஆறு வயது மகன் கண்களை அகல விரித்தபடி, 'சொன்னான்: டாட், ரொம்பப் பேசறீங்கள்!.... உருளைக்கிழங்கை இப்படித் தள்ளுங்க' என்று.

இன்றைக்கு இந்த அளவில் நிறுத்திக் கொள்வோம்.

*முதல் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே, அகந்தையை எப்படிப் பலியிடுவது (விட்டு விடுவது)?'*

'அது முடியாது. அகந்தையை உங்களால் பலியிட முடியாது. காரணம் அது ஒன்றும் உயிருடன் இருப்பதல்ல. அது ஒரு சிந்தனை, அதில் பொருளின் வடிவம் கிடையாது. அது குறிப் பிடத்தக்க ஒன்றல்ல. அது இன்மை - ஒன்றுமில்லாத நிலை (nothing) மட்டுமே. அதில் நம்பிக்கை வைத்து அதை உண்மை யாக்க முயல்கிறீர்கள். அந்த நம்பிக்கையை நீங்கள் திரும்பப் பெற்றுவிட்டால் அதன் உண்மை நிலை மறையும்.

அகந்தை என்பது ஒருவகை குறைபாடு (இல்லாதிருத்தல்). காரணம் உங்களை நீங்கள் அறிந்திராதபடியால் அகந்தை உங்களுக்குள் இடம் பெற்றிருக்கிறது. உங்களை நீங்கள் அறிந்து கொண்டு விட்ட கணத்தில் அந்த அகத்தை காணாமல் போய் விடும். அகந்தை என்பது இருள் போன்றது. இருளுக்கு உறுதியான இருப்பு கிடையாது. அது ஒளியில்லாத நிலையில் இருப்பது. உங்களால் இருளுடன் சண்டையிட முடியாது. அறையை விட்டு இருளை விரட்டியடிக்க உங்களால் முடியாது. நீங்கள் அதை வெளியேற்றுவது நடக்காத காரியம். அதே போன்று அதை உள்ளே கொண்டு வருவதுந்தான். இருட்டை உங்களால் எதுவும் செய்ய முடியாது. அது தொடர்பாய் நீங்கள் ஏதேனும் செய்வதாயிருந்தால் வெளிச்சத்துக்கு வழி - பண்ண வேண்டும். நீங்கள் விளக்கைப் பொருத்தி, வெளிச்சத்தை (ஒளி) க் கொண்டு வந்து விட்டால் இருள் இருக்காது. நீங்கள் விளக்கை அணைத்து விட்டால் மீண்டும் இருள் சூழ்ந்து கொண்டு விடும்.

இருள் என்பது ஒளி இல்லாத நிலை. அப்படித்தான் அகந் தையும். தன்னைப் பற்றிய அறிவு (self - Knowledge) இல்லாதபோது அது இருக்கும். உங்களால் அதைப்பலிபிட முடியாது.

'உங்களுடைய அகந்தையை விட்டு விடுங்கள்' என்று திரும்பத் திரும்பச் சொல்லப்படுகிறது. இல்லாத ஒன்றை எப்படி விட முடியும்? நீங்க அதை விட முயல்கிறபோது, ஒரு புது அகந் தையைத் தோற்றுவித்துக் கொள்கிறீர்கள். - அடக்கமுள்ளவரின் அகந்தை, அகந்தையின்மையின் அகந்தை, அகந்தையை விட்டதாய் கருதிக் கொள்பவரின் அகந்தை என்று, மீண்டும் ஒரு புது வகையான இருள்.

இல்லை, நீங்கள் அகந்தையை விட்டு விட்டதாய் நான் கூறமாட்டேன். மாறாக, அகந்தை எங்கிருக்கிறது என்பதைக் கண்டறியப் பாருங்கள் என்பேன். அதனை உள்ளாகக் கூர்ந்து கவனியுங்கள்; கண்டு பிடியுங்கள். அது எங்கே இரக்கிறது. அது இருக்கிறதா இல்லையா என்பதைக் கண்டறியுங்கள். ஒன்றை விடுவதற்கு முன் அதன் இருப்பை ஒருவர் அறிந்திருக்க வேண்டும்.

ஆனால், தொடக்கத்தில் இருந்தே அதற்கு எதிராகி விடாதீர்கள். நீங்கள் அதற்கு எதிராகி விட்டால் அதைக் கூர்ந்து கவனிக்க முடியாது. எந்த ஒன்றிற்கும் எதிராக அவசியமில்லை. அகந்தையை உங்கள் அனுபவம் அது எளிதில் புரிந்து கொள்ள முடியாததாயிருக்கலாம், ஆனாலும் அது உங்கள் அனுபவம். அகந்தை என்கிற நடப்பைச் சுற்றியே உங்களுடைய மொத்த வாழ்க்கையும் இயங்குகிறது. அது ஒரு கனவாக இருக்கலாம். ஆனால், உங்களுக்கு அது நிஜம்.

அதற்கு எதிராக இருக்க வேண்டிய அவசியமில்லை. அதனுள் பாய்ந்து மூழ்கி அதன் அடியாழத்துக்குச் செல்லுங்கள். அப்படி உட்செல்வதன் மூலம் உங்கள் வீட்டுக்குள் விழிப் புணர்வையும், இருட்டுக்குள் வெளிச்சத்தையும் நீங்கள் கொண்டு வருகிறீர்கள். விழிப்பாக இருங்கள், கவனமாயிருங்கள். அகந்தை யின் வழிகளை, அது எப்படிச் செயல்படுகிறது என்பதைக் கண்காணியுங்கள். உங்கள் இருப்புணர்வின் மையப்பகுதியில் நீங்கள் ஊடுருவிப் பரவுகிறபோது அகந்தையில்லாத ஒன்றை - அகந்தையின்மையை நீங்கள் கண்டு கொள்வீர்கள். அது ஆத்மா

– பரமாத்மா. நீங்கள் ஒரு தனியொரு பொருளாய் (entity) இருந்த நிலை மறைகிறது. அதற்கு மேலும் ஒரு தீவாக இருக்க மாட்டீர்கள். அந்தப் பரம்பொருளின் ஒரு பகுதியாகி விடுவீர்கள்.

பரம்பொருளுடன் ஒன்றாகிற அந்த அனுபவத்தில், அகந்தை விடப்பட்டு வருகிறது. அது ஓர் உருவகம் (metaphor). நேர்ச்சரியாக (literal) எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை.

அகந்தையைப் புரிந்து கொள்ள முயலுங்கள். பல கோணத்திலும் அதைப் பகுப்பாய்வு செய்யுங்கள். பகுதி பகுதியாய் வெட்டிச் சோதியுங்கள், கண்காணியுங்கள், கூர்ந்து கவனியுங்கள். அதை விடுவதில் அவசரம் காட்ட வேண்டாம். அப்புறம் மிகவும் கர்வம் பிடித்த ஒருவன் தோன்றிவிடப் போகிறான்! தான் ரொம்பப் பணிவானவன் என்று எண்ணிக் கொள்கிற தன்னை அகந்தை யற்றவனாய் கருதிக் கொள்கிற ஒருவன்!

அது நுட்ப வழியில் நடந்தேறுகிற மற்றொரு நாட்கமாகி விடப் போகிறது. இத்தனை காலமும் மதவாதிகள் அதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அவர்கள் பயபக்தியுள்ள தற்பெருமைக் காரர்கள்! தங்களுடைய அகந்தையாக அவர்கள் ரொம்பவே அலங்கரித்துக் கொண்டிருக்கிறார்கள். அது சமயம், புனிதம் போன்ற சாயங்களைப் பூசிக் கொண்டிருக்கும். ஒரு துறவியின் அகந்தையை மேலானது உங்களுடைய அகந்தை. காரணம் உங்களுடைய அகந்தை சுத்தமில்லாதது, பெரியது. பெரிய அகந்தை (gross ego) யை எளிதாய் புரிந்து கொள்ளவும், கை விடவும் முடியும். (துறவியின்) நுட்ப அகந்தையின் ஆட்டத்தைப் புரிந்து கொள்வது கடினம். முழுமையான விழிப்புணர்வு கொண்டவரால் தான் அதைக் கவனித்தறிய முடியும்.

புனிதரின் அகந்தையை விட, பாவியின் அகந்தை எளிதில் விடக்கூடியதாயிருக்கும். துறவி பாசாங்கு செய்வான். அவனுடைய அகந்தை நேர்த்தியானது, ஒப்பனை செய்து கொண்டிருப்பது. மரபு வழியிலான தூய்மை கொண்டது, நடைமுறை (convention) யும், சுற்றியிருக்கிற கூட்டமும் அவன் கிட்டத்தட்ட அதை மறக்கும்படி செய்து விடும்.

ஆன்மாவிற்கும் அகந்தைக்கும் தொடர்பில்லை. காரணம் ஆன்மாவிற்கும் உங்களுக்கும் தொடர்பில்லை. ஆன்மா எப்போதுமே பரமாத்மாதான்.

அகம் பிரம்மாஸ்மி - நான் கடவுளாக இருக்கிறேன். தத்வமஸி - நீங்கள் அதுவாகவே இருக்கிறீர்கள்.

அகந்தை உங்களுக்குள் தலைகீழாய் (சிரசானம்) நிற்கிறது. அதைத் தவிர்க்கப் பாருங்கள். அகந்தை குறித்து ஆழமாய் சிந்தியுங்கள். அது பற்றிய விசாரணை மேற்கொள்ளுங்கள். விசாரணை (ஆராய்ச்சி) ஆழப்படுகிற போது அகந்தை மறைகிறது. அது மறைவதில் கூட ஓர் அழகும், நேர்த்தியும் இருக்கும். காரணம் அச்சம், காயம் போன்ற தடயங்களை தனக்குப் பின்னால் அது விட்டுச் செல்வதில்லை.

*இரண்டாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! பகுத்தவிற்கு ஏற்றவாறு செய்தல் என்றால் என்ன? நான் இந்தக் கேள்வியைக் கேட்பதற்குக் காரணம், தத்துவப் பேராசிரியரான என் கணவர், நான் எதைச் சொன்னாலும் பகுத்தறிவுக்குப் பொருத்தமா இருக்கணும் என்று கூறுவதுதான்?***

'பகுத்தறிவிற்கு ஏற்றவாறு செய்' (rationalization) என்பது மனதின் தந்திரம். மற்றவர்களை ஏமாற்றுவதற்கு மட்டுமல்ல, தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்வதற்கும். பகுத்தறிவோடு செய்வது என்பது, அவருடைய நோக்கில் மிக நேர்த்தியாகவும் நல்ல முறையிலும் செய்வதாக இருக்கும். ஒன்றைத் தவிர்க்கவோ, ஒன்றை விட்டு நழுவவோ அந்தச் சொல்லை அவர் பயன்படுத்தக் கூடும். அவர் நேரடியாகப் பதில் சொல்ல விரும்பவில்லை என்று தெரிகிறது. அவர் உங்களைப் பழித்துக் கூறுகிறார்.

'பகுத்தறிவிற்கு பொருத்தமா இருக்கணும்' என்பது ஒரு பெரிய வார்த்தை. பெண்டாட்டியை கூனிக் குறுகச் செய்வதற்காக அவர் பயன்படுத்தியிருப்பார். அவருக்கும் தெரியும், தத்துவப் பேராசிரியராயிற்றே.

'பகுத்தறிவிற்கு பொருத்தமாய் செய்' என்பவது உண்மையில் தர்க்க அறிவு (reasoning) ஆகாது. அது ஒரு திறமையான தந்திரம், பாவனை. அறிவிற்கு ஏற்புடையது போல் காட்டிக் கொள்வது.

'நீ ஏன் குடிக்கறே?' ஹோகன் கேட்டார்.

குடியால் என் தாய் செத்துப் போனால், குடிதான் என் தந்தையைக் கொன்று போட்டது. அதற்கெல்லாம் பழிவாங்கத்தான் நான் குடிக்கிறேன்' என்று பதிலளித்தான் கெஹோ.

பகுத்தறிவுக்கேற்பச் செய்வது இதுதான். நீங்கள் குடிக்க விரும்பினால் குடியுங்கள். ஆனால், இது உங்களையும் மற்றவர் களையும் நுட்பமான முறையில் ஏமாற்றுவது ஆகும்.

கரீபியக் கப்பலில் பயணம் செய்த ஓர் இத்தாலியப் பெண்ணின் நாட்குறிப்பேட்டில் இருந்து –

திங்கள் – கப்பலின் தலைவர் தம்மோடு உணவருந்துவதற்காக என்னை அழைத்தார்.

செவ்வாய் – கப்பல் தலைவருடன் நாளைக் கழித்தேன்.

புதன் – என்னைத் திருமணம் செய்து கொள்ள விரும்புவதாக, கொஞ்சமும் பண்பில்லாத முறையில் அவர் தெரிவித்தார்.

வியாழன் – அவருடைய விருப்பத்துக்கு நான் ஒப்புக் கொள்ளாவிட்டால், கப்பலை மூழ்கடிக்கப் போவதாய் கூறினார்.

வெள்ளி – ஐநூறு உயிர்களை காப்பாற்றி விட்டேன். இது அறிவிற்கு ஏற்புடைய தாய் செய்வது. மனிதன் தந்திரமானவன். அவனுடைய தந்திரங்களுக்கு அளவேயில்லை. அறிவுக்கு ஏற்புடையதாய் செய்வது என்றால் நியாயமான காரணங்களைக் காட்டுவது, நம்பச் செய்வது எனலாம். ‘நியாயப் போக்கு’ **(reason)** என்கிற பெயரில் மக்கள் இப்படியெல்லாம் செய்து கொண்டிருக் கிறார்கள்.

பசுவதைத் தடுப்புக்காக ஆச்சார்ய வினோபாபாவே சாகும் வரை உண்ணாவிரதம் தொடங்கியிருக்கிறார். அதைத் தம்முடைய மதக் கடமை என்று அவர் அறிவித்துக் கொள்கிறார். அது எப்படி மதக் கடமையாக முடியும்? அது ‘ப்ளாக் – மெயில்’. நாட்டை அச்சுறுத்திப் பார்க்கிற காரியம். இந்த யோசனை அவருக்கு எங்கிருந்து கிடைத்திருக்கும்?

‘இந்தப் பணியை நீ செய்து முடிக்க வேண்டும்’ என்று தம்முடைய தாய் கனவில் தோன்றி தமக்குத் தெரிவித்ததாகச் சொல்கிறார் அவர்.

தாம் கண்ட கனவிற்காகவும், தம் கனவில் வந்த, தாய்க்காகவும் இந்த நாட்டையே பயமுறுத்துகிறார் அவர். ‘என் பேச்சை நீங்கள் கேட்காவிட்டால் நான் தற்கொலை செய்து கொண்டு விடுவேன்’ என்கிறார். ‘நான் தற்கொலை செய்து கொள்வேன்’ என்று நேரடி யாகச் சொல்லாமல், ‘சாகும் வரை உண்ணாவிரதம்’ என்கிறார்.

இவர்கள் எல்லாம் தங்களைப் புனிதமானவர்களாய் கருதிக் கொள்கிறார்கள். தங்களை வன்முறைக்கு எதிரான போதகர்களாகக் காட்டிக் கொள்கிறார்கள். அவருடைய குரு மகாத்மா காந்தி தம்முடைய வாழ்க்கை முழுவதும் அதையே செய்து கொண்டிருந்தார். அந்த நலிவடைந்த மரபை இவர் தொடரப் பார்க்கிறார். குறைந்தது முப்பது ஆண்டுகளுக்கு மேலாய் இத்தகைய மனிதர்களால் இந்தியா துன்பப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதற்கொரு முடிவே இருக்காது போலிருக்கிறது.

இதைத்தான் அகிம்சை என்கிறார்கள். 'என் பேச்சைக் கேட்கா விட்டால் நான் உன்னைக் கொன்று விடுவேன்' என்று யாரையாவது நான் மிரட்டினால் காவல் துறை என்னைக் கைது செய்து விடும். நான் சட்டத்துக்கெதிரான குற்றவாளியாகி விடுவேன். ஆனால், 'என் பேச்சை நீங்கள் கேட்கா விட்டால், நான் தற்கொலை செய்து கொள்வேன்' என்று நான் அச்சுறுத்துகிறபோது அது புனிதமான காரியமாகி விடும்.

'இந்த ஆசாமிகளைப் பிடித்து, வழக்கு போட வேண்டும்' என்று யாரும் கூறாமல் இருப்பது விநோதமாக இருக்கிறது - ஏனெனில், அவர்கள் தற்கொலை செய்து கொள்வதாய் அச்சுறுத்துகிறார்கள். அது சட்டத்திற்கு எதிரான குற்றம். ஆனால் வினோபா ஒரு புனிதர்.

மொரார்ஜி தேசாய் அவரைக் காணச் செல்கிறார். 'அதைச் செய்யாதீர்கள்' என்று அறிவுறுத்துகிறார். ஆனால் அதே காரியத்தைத்தான் அவரும் (மொரார்ஜி) செய்து கொண்டிருக்கிறார். தற்கொலை செய்து கொள்வதாக அச்சுறுத்தியே அவர் அதிகாரத்துக்கு வந்தார்.

இவையெல்லாம் அச்சுறுத்தல், வன்முறை இவற்றின் நுட்பமான வழிகள். ஒரு நாட்டின் தலை விதியை தனிநபர் நிர்ணயிக்கப் பார்க்கிறார்! பிறகு, யாரோ ஒருவர் சொல்வார் எல்லாரும் புகைப்பதை நிறுத்தா விட்டால் நான் தற்கொலை செய்து கொள்வேன்' என்று. 'மகனே! இந்த மகத்தான பணியைச் செய்து முடி என்று என்தாய் கனவில் வந்து சொன்னார்' என்பார்.

அச்சுறுத்தலே வன்முறையாக மாறுகிறது. ஒன்றை ஒப்புக் கொள்ள வைக்க, அல்லது ஒருவரை அடங்கி நடக்கச் செய்ய மேற்படும் வன்முறை (coercion) அது. 'சாகும் வரை உண்ணா

விரதம்' என்று அறிவிக்கிறபோது, தற்கொலை செய்து கொள்வ தென அச்சுறுத்தல் ஓர் அருமையான விஷயமாகி விடுகிறது. காவல் துறையால் கைது செய்யப்படுவதற்கு பதிலாக அமைச்சர் களும், பிரதமரும் அவரை நோக்கி ஓடிக் கொண்டிருக்கிறார்கள். அவரை எப்படியாவது இணங்க வைக்க முயல்கிறார்கள். 'சாகும் வரை உண்ணா விரதமா, வேண்டாம், தயவு செய்து கைவிடுங்கள்' என்று. ஆனால் 'இது குற்றம்' என்று யாரும் கூறுவதில்லை.

இவையெல்லாம் நியாயப்படுத்தல்கள் - பகுத்தறிவுக்கு ஏற்புடையதாய் செய்தல். தந்திரமும், புத்திக் கூர்மையும் உடைய ஒருவர் எதை வேண்டுமானாலும் செய்து விட்டு, அறிவிற்குப் பொருத்தமாக்கி விட முடியும்.

என்னுடைய அனுபவத்தில் பெண்களை விட ஆண்களே பெரிய அளவில் பகுத்தறிவிற்கு ஏற்றவாறு விளக்கம் தருகிற வர்கள். காரணம், பெண்கள் எதையும் உள்ளுணர்வால் காண முற்படுவார்கள். உள்ளுணர்வு சார்ந்தே வாழ்கிறவர்கள். ஆணோ மூளையின் வழியே அறிவைக் கொண்டு வாழ்கிறவன். பெண்கள் தர்க்க அறிவை - வாத முறையைப் பற்றி பெரியதாய் கவலைப்படு வதில்லை. அவர்களுடைய நடத்தை முரண்பாடாயிருக்கும். அவர்கள் இயற்கையாக, (புறத்தூண்டுதலின்றி) தானே இயங்கு கிறவர்கள். அவர்கள் தர்க்க ரீதியாக பாசாங்கு செய்து, பொய்யாக நடிப்பதில்லை. அரிஸ்டாட்டில் காலத்து தர்க்க முறை பற்றிக் கவலைப்படாமல் ஒரு கருத்தில் இருந்து மற்றொரு கருத்துக்கு மாறிக் கொண்டிருப்பார்கள். அவர்களுடைய வழிகள் ஆண்களு டைய வழிகளுக்கு முற்றிலும் மாறானவை.

உங்கள் கணவர் உங்களை மட்டம் தட்டுவதற்காக இந்தப் பகுத்தறிவு வாதத்தைத் கையில் எடுத்திருக்க வேண்டும். நீங்கள் ஏதோ தவறு செய்து விட்டதாய் அச்சத்தில் இருப்பீர்கள். உங்களால் பகுத்தறிவு வாதத்தை அதிக அளவில் செய்ய முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. ஆனாலும், அதைப் புரிந்து வைத்திருப்பது சிறப்பு. காரணம் கணவர் தத்துவப் பேராசிரியர் என்கிற போது பகுத்தறிவு வாதம் பற்றித் தெரிந்து வைத்திருப்பது நல்லதே. பேராசிரியர் பொருளற்ற தத்துவங்களைப் பயன்படுத்து கிறவர் அல்லவா. அடுத்த முறை உங்கள் கணவர் எதைச் சொன் னாலும், 'இது பகுத்தறிவுக்குப் பொருத்தம் தான்' என்று சொல்லுங்கள்.

அன்றொரு நாள் ஓர் உளவியல் பேராசிரியர் பற்றிப் படித்தேன். அவர் தம்முடைய காரைச் சரி செய்து கொண்டிருந்தபோது, அவருடைய பையன் பக்கத்து வீட்டுச் சிறுமியுடன், முதல் மாடி முற்றத்தில் விளையாடிக் கொண்டிருந்தான். அதற்கு நேராகக்கீழே அவர் காரைப் பழுது பார்த்துக் கொண்டிருந்தார்.

திடுதிப்பென்று பையன் அந்தச் சிறுமியைப் பிடித்து கீழே தள்ளி விட்டான். அவள் தரையில் வந்து விழுந்தாள் - பையயின் தந்தைக்கு உண்மையிலேயே கோபம் வந்து விட்டது. அவர் மேலே நோக்கி எதையோ சொல்ல முற்பட்டார். அவரை முந்திக் கொண்டு பையன் கேட்டான். 'டாடி, நான் எதுக்காக அப்படி செஞ்சேன்னு உங்களால் சொல்ல முடியுமா? நீங்கதான் பெரிய சைக்யாட்ரிஸ்ட், *சைக்கோ அனலிஸ்டாச்சே. சொல்லுங்க நான் எதுக்காக அதைச் செஞ்சேன்?' என்று.

'பகுத்தறிவுக்கு பொருத்தமா இருக்கணும்' என்பது போன்ற பெரிய வார்த்தைகளை கருத்தாவேசம் உள்ள ஒரு சிலரே பயன்படுத்துவது. ஆனால், பகுத்தறிவுக்கு ஏற்றவாறு செய் (rationalization) என்பது ஒரு நுட்பமான செயல்முறை, மக்கள் - குறிப்பாக ஆண்கள் அதற்குப் பணிந்து விடுகிறார்கள்.

ஆனால், பகுத்தறிவு வாதம் பற்றிப் புரிந்து கொள்வது நல்லது. எனினும் அதற்கு இடமளிக்கக் கூடாது. அது ஓர் ஏமாற்று வேலை. உருமறைப்பு (Camouflage) சமாசாரம். புகை மூட்டத்துக்கு பின்னால் மறைந்து கொள்வதை விட உண்மையாக நம்பத்தக்கவராக இருப்பது மேல். பொய்யாக இருப்பதற்கு அவசியமில்லை. நீங்கள் எந்த அளவு பொய்யராக இருக்கிறீர்களோ அந்த அளவிற்கு பிரபஞ்ச இருப்பில் இருந்து வெகு தொலைவு விலகிச் சென்று விடுவீர்கள்.

உங்கள் கணவரைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உங்கள் இருப்புணர்வு பிரபஞ்ச இருப்பை விட்டு வெகுதூரம் விலகிப் போய்விடுமே என்றுதான் கவலைப்படுகிறேன். பகுத்தறிவு வாதம் போன்ற உத்திகளுக்கு இடம் கொடுத்தால் உங்கள் ஆன்மாவிற்கு பக்கமாய் நீங்கள் செல்வதற்கில்லை. அத்தனை பொய் முகங்

---

*** சைக்கோ அனாலிஸ்ட் (Psychoanalyst) - உணர்வு நிலை, உணர்வுக்கு அப்பாற்பட்ட நிலை இடையே உள்ள தொடர்புகள் பற்றிய கொள்கைகளில் தேர்ச்சி பெற்றவர்.**

களையும் கழற்றிப் போடுங்கள், அப்போது தான் உங்களுடைய அசலான (original) முகத்தை நீட்ங்கள் கண்டு கொள்ள முடியும். தனது சொந்த முகத்தை ஒருவர் காண முடிவதே, வாழ்வின் வரம் எனலாம்.

*மூன்றாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! நான் யார்? என்கிற கேள்வி எழுகிறபோது - எனக்கு அச்சம் வந்து விடுகிறது. அதைப் பற்றிச் சொல்வதற்கு ஏதேனும் உண்டா?***

இந்தக் கேள்வி எல்லாரையுமே அச்சப்பட வைக்கும். எல்லா ருடைய நிலையும் இதுதான். அந்தக் கேள்வியின் ஆழத்துக்குச் செல்ல விரும்புகிற எவருமே, 'நான் யார்?' என்கிற தேடலின் போது, ஏதோ ஒரு புள்ளியில் அச்சத்தை உணர்ந்தே ஆக வேண்டும். அகந்தையின் எல்லையை நீங்கள் கடக்கிறபோது, அந்தப் புள்ளி உங்களுக்குப் புலப்படும். அது மரணத்தைப் போல் மிகப் பெரிய பயத்தைக் கொடுப்பது. ஒரு வகையில் அதுவும் மரணந்தான். அகந்தை மறைகிறதே!

இது வரைக்கும் அதுதான் உங்களை அடையாளப்படுத்து வதாயிருந்தது. இது வரைக்கும் அதுதான் நீங்கள் என்று நினைத்துக் கொண்டிருந்தீர்கள். திடுதிப்பென்று அது ஆவியாகத் தொடங்கி விட்டது. இதயத்தைப் பேரச்சம் பற்றிக் கொண்டது. 'நான் செத்திட்டிருக்கேன்' என்கிறீர்கள், காரணம் உங்களுடைய அடையாளம் அழிந்து கொண்டிருக்கிறது. உண்மையில் நீங்கள் சாகவில்லை, நீங்கள் புதிதாய் பிறக்கிறீர்கள் என்பதே உண்மை. அது மறு பிறவி, ஒரு நிஜமான பிறப்பு!

மண்ணுக்குள் மரித்துக் கொண்டிருக்கும் விதையைப் போலத்தான் அதுவும். விதை அச்சத்தையும், கலவரத்தையும், நடுக்கத்தையும் கொண்டிருக்கும். தான் இறந்த பிறகு பெரிய மரமாகி, பெரிய அளவில் பூத்துக் குலுங்கப் போவதை அந்த விதையால் எப்படி நம்ப முடியும்? அதையெல்லாம் பார்ப்பதற்கு அங்கே விதை இருப்பதில்லை. அதை எந்த விதையும், எப்போதுமே பார்த்ததில்லை. அப்படியிருக்க இந்த விதை எப்படி நம்பக்கூடும்?

அகந்தை விஷயத்திலும் அதுவே தான் நிகழ்கிறது. தன்னை விடவும் மிக அதிகமாய் வேறொன்று இருக்கும் என்பதை அகந்தையால் நம்பமுடியாது. அகந்தை தனது கடைசி மூச்சை

விடத் தொடங்கியதும் நீங்கள் அச்சப்படுவீர்கள். மிகப்பலரும் அந்தப் புள்ளியில் இருந்து திரும்பி, வேகமாய் வெளியே பாய்ந்து விடுகிறார்கள்.

தியானிக்கிற ஒவ்வொருவருக்கும் இது நிகழ்கிறது. உங்கள் கேள்வி முக்கியமானது, தனிச் சிறப்பு வாய்ந்தது. தியானிக் கிறவர்கள் எல்லாருமே இந்தச் சூழ்நிலையை எதிர்பாராமல் எதிர் கொள்ளும்படியாகிறது. பல முறை மக்கள் பிரபஞ்ச இருப்பில் பிரவேசிக்கிற புள்ளிக்கு வரவே செய்கிறார்கள். ஆனால், தங்களை அபாய நிலைக்கு உட்படுத்திக் கொள்ளத் துணிவதில்லை. அவர்கள் பயமும், திகிலும் கொண்டவர்களாய் விரைந்து வெளியேறி விடுகிறார்கள்.

நீங்கள் அபாயத்தை எதிர்கொள்ள வேண்டும். என்னுடைய அனுபவத்தில் இருந்து நான் உங்களுக்குச் சொல்கிறேன், அது ஒன்றும் மரணமல்ல. ஆம், அது அகந்தைக்குத்தான் மரணம். அகந்தையின் மரணமே ஆன்மாவின் பிறப்பு. நீங்கள் சின்னஞ் சிறு துளியாய் இறப்பீர்கள். ஆனால் ஒரு கடலைப் போல் பிறப்பீர்கள். அது தகுதியாகவே இருக்கும். ஒரு வரம்புக்குட்பட்ட, வரையறை செய்யப்பட்ட சீவனாக இறப்பீர்கள். வரையறுக்கப்படாத, வரையறுக்க முடியாதவராகப் பிறப்பீர்கள்.

ஆம், உங்களுடைய நரம்பு மண்டலக் கோளாறு, சித்தப் பிரமை இவற்றுடன் நீங்கள் மறைந்துவிடுவீர்கள். உங்களுடைய மன இறுக்கம், பதற்றம், பெருந்துக்கம் இவற்றுடன் நீங்கள் மறைந்து விடுவீர்கள். உங்களுடைய பிரச்னைகள், கவலைகள் இவற்றுடன் நீங்கள் காணாமல் போய் விடுவீர்கள். இது வரை உங்களைப் பற்றி நீங்கள் அறிந்த அளவில் நீங்கள் கண்ணுக்குத் தெரியாமல் சென்று விடுவீர்கள். ஆனால் உங்களுடைய மறைவு ஆடைகளை மாற்றுகிற மாதிரிதான். அத்துடன் உங்களுடைய மெய்ம்மைக்கு வெகு நெருக்கமாகி விடுவீர்கள் நீங்கள். உங்களுடைய இருப்புணர்வில் ஆழ வேரூன்றுவீர்கள். அதுவே முழுமையான தேடல் ஆகும்.

நீங்கள் ,என்னிடம் கேட்டீர்கள், 'நான் யார்?' என்கிற இந்தக் கேள்வி எழுகிறபோது, நான் மிகவும் அச்சப்படுகிறேன்' என்று.

அது இயற்கைதான். நீங்கள் எல்லைக்குச் சமீபமாய் வந்து கொண்டிருக்கிறீர்கள் என்பதற்கு அது ஒரு நல்ல தெரிவிப்புக் குறி

(sign). நீங்கள் மிகச்சரியாக எல்லைக் கோட்டில் நிற்கிறீர்கள். அதனால் தான் அந்தக் கேள்வி எழுகிறபோதெல்லாம் அச்சத்துக் குள்ளாகிறீர்கள். புதிய உலகமும், புதிய வாழ்க்கையும் தொடங்கு கிற எல்லைக்குச் சமீபமாய் நீங்கள் இருப்பதை நன்றியோடு உணருங்கள். மிகச்சரியாக ஓரடிதான்... நீங்கள் புது மனிதனாகி விடுவீர்கள். அசலான மனிதனாக இருப்பீர்கள். ஒரேயொரு அடியில், சமூகம் உங்கள் மீது திணித்த குப்பைகளை நீங்கள் கீழே தள்ளி விடுவீர்கள். அத்துடன் தூய விழிப்புணர்வையும் பெற்றுவிடுவீர்கள். நீங்கள் சிறகுகளைப் பெறுவீர்கள். தற்போது நிலத்தின்மீது ஊர்ந்து கொண்டிருக்கிற நீங்கள் - அதற்குப் பிறகு சூரியனை நோக்கி உயரப் பறப்பீர்கள்.

ஒரு குருவுடன் இருப்பது நம்பகத்தன்மையைப் பெறுவ தற்கும், அறிந்திராத ஒன்றை நோக்கி சாகசப்பயணம் மேற் கொள்வதற்குந்தான். ஆபத்திற்கு அஞ்சாமல், அபாய நிலைகளைத் துணிந்து ஏற்பவரே உண்மையில் வாழ்கிறவர். கடல் பற்றிய விவரத்தை அறியாமல் பயணம் மேற்கொள்ளக்கூடாது. ஆனால் கரையை விட்டு நீங்குகிறவரே முடிவிலா உயிர்த்தன்மை (immortality) குறித்து சிறிதேனும் அறிய முடிகிறது. வாழ்க்கையை உண்மையிலேயே வாழ்ந்து பார்க்கிறவர்கள் இருக்கிறார்கள். அவர்கள் துணிந்தவர்கள், மற்றவர்களெல்லாம் வாழ்க்கையைக் கடக்கிற செயலை மட்டுமே செய்கிறார்கள். அவர்கள் சோம் பேறிகள் கிளர்ச்சியற்றவர்கள்.

இது உங்களுக்கு அறிவுறுத்துகிற நேரம். நீங்கள் திரும்பிச் செல்ல முடியும், திரும்பிச் சென்று உங்கள் அடையாளத்தைப் பற்றிக் கொள்ள முடியும். அல்லது திரும்பியே பார்க்காமல் முன்னோக்கிச் செல்வதும் முடிகிறது தான். துணிவுடையவரா யிருங்கள். நான் இந்த மட்டில் கூற முடியும்: இதே அச்சம் எனக்கும் இருந்தது. இதே மாதிரி எனக்கும் நிகழ்ந்திருக்கிறது. நானும் திரும்பிச் சென்றதுண்டு; முன்னோக்கிப் போனதும் உண்டு. இந்தக் கோட்டைக் கடப்பது கடினந்தான். ஆனால், சற்றுமுன் பின்னாக என்றாலும் வருவதிலும் போவதிலும் பயனில்லை என்கிற தீர்மானத்துக்கு வந்து விடுவோம். நீங்கள் கோட்டுக்கு அருகில் வந்து விட்டால், இனியும் இநத் வழக்கமான வாழ்க்கையில் திருப்தியடை மாட்டீர்கள். நீங்கள் வெளியே செல்ல முடியும். ஆனால் அங்கே எல்லாமும் பொருளற்றதாயிருப்பதைக்

கண்டு கொள்வீர்கள். தற்போது ஏதேனும் ஒன்றைத் தீர்வு செய்ய வேண்டிய இக்கட்டான நிலையில் இருப்பீர்கள்.

குருவின் வேலை இதுதான்; இக்கட்டான நிலையைத் தோற்றுவிப்பது. புறத்தே இருப்பது பொருளற்றது (meaningless). அகத்தே இருப்பது ஆபத்தானது. வழக்கமான வாழ்க்கையைத் திரும்பவும் வாழ்வது சாத்தியமில்லை. புதிய ஒன்றை நோக்கிப் போவதும் நடவாது என்றே தெரிகிறது. ஆனால் சற்று முன் பின்னாக என்றாலும் புதியதை நோக்கிப் போகிற முடிவை ஒருவர் எடுத்தேயாக வேண்டும், காரணம் பொருளற்ற ஒன்றைத் தொடர்ந்து பற்றியிருப்பதில் அர்த்தமில்லை. தனிச்சிறப்பில்லாத ஒன்றை எவ்வளவு காலத்துக்குப் பற்றிக் கொண்டிருப்பீர்கள்?

குரு காத்திருக்கிறார், பொறுமையோடு காத்திருக்கிறார். நீங்கள் முன்னும், பின்னும் போவதற்கு அவர் அனுமதிக்கிறார். நீங்கள் தடம்மாறுவதை, திட்டத்தை மாற்றிக் கொள்வதையெல்லாம் அவர் கண்காணித்தபடி இருப்பார். ஆனால், அவருக்கு ஒன்று தெரியும். மையத்திற்கு வெளியில் இருப்பது (outer) தன்னுடைய முக்கியத்தை வெகுவாய் இழந்து கொண்டிருக்கிறது என்பது. ஒரு நாள் அது முற்றிலும் பயனற்றதாகி விடும். அங்கிருப்பது அறிவிற்கு ஏற்புடையதல்ல. புறத்தேயிருப்பது (outer) தன்னுடைய முக்கியத்துவத்தை இழக்கிறபோது, உள்ளே இருப்பது (inner) அதிகம் ஈர்ப்பதாகி விடும். ஒரே சமயத்தில் அந்தச் செயல்முறை நிகழும்.

என்றாவது ஒருநாள் ஒவ்வொருவரும் அந்தக் கோட்பாட்டைக் கடந்தேயாக வேண்டும். அதைத் தடுப்பதற்கில்லை. அந்த நாளே மனித வாழ்வில் மகத்தான நாளாகும். உங்களுடைய பழைய அடையாளத்தைத் துறந்து, அறிந்திராத ஒன்றில் பிரவேசிக்கிற அந்த நாள்! நீங்கள் இறையுணர்வு கொண்டவராகி, உங்கள் பூர்வத்துக்கு (இயற்கை)த் திரும்புகிறீர்கள்.

*நான்காம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! ஓர் அமெரிக்கனும், சீனனும், ஆப்ரிக்கனும், ஸ்வீடன்காரனும், இந்தியனும் தங்களுடைய நிறங்கள், பழக்கங்கள், நம்பிக்கைகள் வேறாக இருப்பினும் அவர்கள் தங்களுக்கும், மற்றவர்களுக்கும் இயல்பாக நேர்மையாக நடந்து கொண்டால் எல்லாமுமே மகிழ்ச்சியோடு***

***மனநிறைவோடு வாழ முடியும் என்று நான் நம்புகிறேன். ஏனிந்த மனித குலம் இதை நடப்பு சாத்திய மற்றதாக்கியிருக்கிறது?***

மூட நம்பிக்கைகளை வைத்துக் கொண்டு அமைதியாக வாழ்வது நடவாத காரியம். அத்தனை மோதல்களுக்கும் அந்த நம்பிக்கையே மூல காரணம். யதார்த்த சிந்தனை அல்லது கொள்கை உடைய (agnostic) சாதகர்களால் மட்டுமே ஒன்றாக இருக்க முடியும். மூட நம்பிக்கை உள்ளவர்கள் உலக ஒருமைக்கு இடமளிக்க மாட்டார்கள்.

உதாரணமாக, இயேசுவின் மூலமே விமோசனம் அடைய முடியும் என்று கிறிஸ்தவர் நம்புகிறார். அதை முகமதியர்களால் எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்? அந்தக் கருத்தே அவர்களுக்கு ஆபத்தாய் தெரியும். அவர்கள் முகமதுவின் மூலமே பாவத்தில் இருந்து காக்கப்படுவோம் என்று நம்புகிற வர்கள். புத்தரைத் தவிர ஞானம் பெற்றவர் இருக்க முடியாது என்பது புத்த மதத்தினரின் நம்பிக்கை. புத்தரும் மகாவீரரும் ஒன்றாக வாழ்ந்தவர்கள், சமகாலத்தைச் சேர்ந்தவர்கள். ஆனால், புத்த மார்க்கத்தினரோ மகாவீரரை ஞானம் பெற்றவராய் கருதவில்லை. ச, ஒரு சமணர் இயேசுவை ஞானம் பெற்றவர் என்று கருதிக் கொள்வாரா என்ன? காரணம் இயேசு சைவம் உண்பவரல்ல, அசைவம் உண்பவர். ஓர் அசைவ உணவுக்காரர் எப்படி ஞானியாக முடியுமாம்? ஞானம் பெற்றவர் அசைவ உணவு உண்பவராக மட்டுமே இருப்பார் என்பது சமணர்களின் நம்பிக்கை.

கிறிஸ்தவரைக் கேட்டுப் பாருங்கள். அவர்கட்கு மகாவீரரிடம் (சமணத்தைத் தோற்றுவித்தவர்) நம்பிக்கை இருக்காது, காரணம், அவர் ஏழைகளுக்கு உதவியதில்லை.

ஒரு மரத்தின் கீழே கண்களை மூடியபடி, நிர்வாணமாக நின்று தியானிப்பவர் கிறிஸ்தவரின் பார்வையில் சுயநலமியாகவே தெரிவார். மகாவீரர் குறைந்த பட்சம் சில மருத்துவமனைகளை, பள்ளிக் கூடங்களைத் தொடங்கியிருக்க வேண்டும். அவர் எதையும் செய்யவில்லை. பார்வையற்றவருக்கு பார்வை அளிப்பது, செத்துப்போனவரை உயிர்ப்பிப்பது என்று ஏதேனும் அற்புதங்களாவது நிகழ்த்தினாரா என்றால் அதுவும் இல்லை. மனித குலத்துக்கென்று அற்புதமோ சேவையோ செய்யாமல் அகிம்சை பற்றி மட்டுமே பேசியிருக்கிறார். ஆனால் அவருடைய

செயல்களில் இரக்கமோ பரிவோ இருந்திருக்கவில்லை. புத்தர் ஞானம் பெற்றவர் என்று கிறிஸ்தவரால் நம்ப முடியாது. மனித குலத்துக்கு அவர் ஆற்றிய அரும்பணிதான் என்ன?

இத்தகைய மாறுபட்ட நம்பிக்கைகள் அல்லவா மக்களைப் பிரித்து வைத்திருக்கிறது. நம்பிக்கை பிரித்தலுக்கான வழி. மனித குலம் ஒன்றுபட வேண்டும் என்றால் மக்கள் நம்பிக்கைகளை விட வேண்டும். நான் அதைத்தான் இங்கே செய்ய முயல்கிறேன். மூடநம்பிக்கையை விடுங்கள், விசாரித்தறிபவராக (enquirer) இருங்கள். தவறான ஊகத்துடன் எதையும் தொடங்கி விடாதீர்கள், உண்மையை விசாரித்தறியுங்கள்.

நீங்கள் சொல்கிறீர்கள், 'அவர்கள் நிறம், பழக்க வழக்கம், நம்பிக்கை என்று பல வேறுபாடுகளைக் கொண்டிருந்தாலும், இயல்பாக நேர்மையாக இருப்பதன் மூலம் மகிழ்ச்சியோடும் மனநிறைவோடும் வாழ முடியும் என நான் நம்புகிறேன்' என்று.

அமெரிக்கன் அமெரிக்க வாழ்க்கை முறையை நம்புகிறான். இந்தியனுக்கு இந்திய வாழ்க்கை முறையில் தான் நம்பிக்கை. ஆக, மோதல் ஏற்படுகிறது. உலகிலேயே இந்தியா மட்டுந்தான் புனிதமான நாடு என்று, மதப்பற்று கொண்டது என்று இந்தியன் நம்புகிறான். அமெரிக்கன் அந்த வார்த்தையை *மெட்டீரியலிஸமாகப் புரிந்து கொள்கிறான். இந்திய அறிவுக்கோ, 'அமெரிக்கன்' என்றாலே புனிதமற்றது, சமயப்பற்றில்லாதது என்றே தோன்றும். அமெரிக்கனோ தன்னை விருப்பங்களை நிறைவேற்றி வைக்கும் பிரதிநிதியாகக் காண்கிறான்.

அமெரிக்கனுக்கு இந்தியா தொடர்பானதெல்லாம் பகட்டும், பாசாங்கும், தற்பெருமையுமாகவே தெரிகிறது. இவர்கள் எப்படி ஒருவரையொருவர் எதிர்கொள்ள முடியும்? அமெரிக்கன் தனது அமெரிக்கத் தனத்தையும், இந்தியன் தனது இந்தியத் தனத்தையும் விட வேண்டும். நாம் ஒட்டு மொத்த உலகத்தைப்பற்றிச் சிந்திக்கத் தொடங்க வேண்டும். மதம் சார்ந்த, அரசியல் சார்ந்த கருத்துப் பிடிப்புகளும் மற்றும் அனைத்து வகை மூடநம்பிக்கைகளும் மக்களைப் பிரித்துப்போடுகிற வேலையைத்தான் செய்யும். அத்தனை மூடநம்பிக்கைகளும் ஆபத்தானவை, நச்சுத்தன்மை கொண்டவையே.

* **மெட்டீரியலிஸம் (materialism) - காணும் பொருளே உண்மை என்கிற இயற்பொருள்வாதம்.**

இங்கே பல்வேறு இனங்களைச் சேர்ந்த, நாடுகளைச் சேர்ந்த, மதங்களைச் சேர்ந்தவர்கள் வந்து கூடியிருக்கிறார்கள் - எவ்விதப் பிரச்னையும் இல்லை. 'மற்றவர்களைச் சகித்துக் கொள்ளுங்கள்' என்று ஒருபோதும் அவர்களுக்குச் சொல்லப்படவில்லை. காரணம் சகிப்புத் தன்மை என்கிற கருத்தே சகிப்பின்மையையும் தன்னுள் கொண்டிருக்கிறது. 'மற்றவர்களிடம் சகிப்புத் தன்மையோடு நடந்து கொள்ளுங்கள்' என்று எதற்காகக் கூறுவது? அது உங்களுடைய சகிப்பின்மையை (intolerance) விட்டு விட்டு சகிப்போடு இருக்கக் கற்றுக் கொள்ளுங்கள்' என்பதைத்தானே குறிக்கிறது.

இந்து மதமும், கிறிஸ்தவமும், இஸ்லாத்தும் ஒரே விஷயத் தைக் குறிப்பது என்று இங்கே கூறுவதில்லை. அப்படிக் கூறினால் நீங்கள் அவநம்பிக்கையும், சந்தேகமும் கொண்டிருப்பதாகி விடும். குர்ஆனும், கீதையும், தம்மபதமும் ஒரே விஷயத்தைக் கொண் டவை தாம் என்று மகாத்மா காந்தி கூறுவார். அவற்றிடையே ஒப்புமை (similarity) களைக் கண்டு பிடித்து, காட்ட முயன்றார் அவர். அந்த முயற்சி வெற்றிபெறவில்லை. காரணம் அவை எவ்வகையிலும் ஒத்திருக்கவில்லை. அவை தமக்கேயுரிய அழகும், நேர்த்தியும் கொண்டவை.

ஒப்பிட முடியாத (unique) தற்பண்பு (original) கொண்ட மறை நூல்களிடையே ஒத்த தன்மைகளைக் காட்ட முனைவது உண்மையில் வெறுப்பையே உண்டு பண்ணும். மகாவீரரும், கிருஷ்ணரும் எப்படி ஒரே செய்தியை வைத்திருக்க முடியும்? அர்ச்சுனன் மகாவீரரிடம் சென்று, 'நான் போர் செய்வதை வெறுக்கிறேன். இந்த உலகத்தைத் துறந்து, காட்டுக்குச் செல்ல விரும்புகிறேன்' என்று சொல்வதாக வைத்துக் கொள்வோம். மகாவீரர் உடனே தீட்சை கொடுத்து துறவு கொள்ளச் செய்கிறார். அவர் இப்படிச் சொல்வார் 'அதைத்தான் நீ செய்திருக்க வேண்டும். முன்பே தாமதமாகி விட்டது. ஆனால், இன்னமும் அது தகுதியான காரியந்தான். போரில் வன்முறை இருக்கிறது. நீ உலகத்தைத் துறந்து காட்டுக்குச் செல்வதே மேல்' என்று.

ஆனால் கிருஷ்ணராக இருந்தால் அவனை காட்டுக்குப் போக வேண்டாம் என்று அறிவுறுத்தியிருப்பார். 'போரில் இறங்கி சண்டை செய்வாய், அது உன்னுடைய கடமை. நீ போர் வீரனாகும் படியாகவே உன் இருப்புணர்வு இருக்கிறது. துறவெல்லாம் உனக்கு

சரியப்பட்டு வராது, அது உனக்குப் பொருந்தாது. அதற்கு நீ தகுதியில்லாதவன். அப்படியே காட்டுக்குச் சென்றாலும் அங்கேயும் வேட்டையாடத் தொடங்கி விடுவாய். நீ தியானிக்க முடியாதவனாகவே இருப்பாய். நான் உன்னைக் குழந்தைப் பருவத்தில் இருந்தே அறிவேன், நன்றாக அறிவேன். உன்னுடைய இந்த அர்த்தமற்ற பேச்சு, நியாயப்படுத்த முனைவதுதான். நீ போருக்கு எதிரானவன் அல்ல' என்றுதான் கூறியிருப்பவார். உண்மையில் அர்ச்சுனன்' தனது சொந்த மனிதர்களைக் கொல்வதற்கு முற்றிலும் எதிராகவே இருந்தான்.

அந்தப் போர் ஒரு குடும்பச் சண்டை, சகோதரர்களுக் கிடையேயானது. இரு தரப்பிலும் போரிடவந்தவர்களெல்லாம் உறவுக்காரர்கள் தாம். அவர்களில் சிலர் ஒரு பக்கமும், சிலர் பக்கமும் நின்றார்கள். சகோதரர்களும், உறவுக்காரர்களும்தான் பிரிந்து நின்றார்கள் என்றில்லை. கிருஷ்ணர்கூட பிரிந்து நிற்கும்படி ஆயிற்று. அவர் அர்ச்சுனனுக்குத் துணை புரிந்தார். அவருடைய படைகள் கவுரவர்களுக்காக (அர்ச்சுனனை எதிர்த்து)ப் போர் செய்தது. காரணம் இருதரப்புமே கிருஷ்ணரின் நண்பர்கள்தாம், இரு தரப்புமே அவருடைய உதவியைக் கோரின. எனவே அவர் சொல்லிவிட்டார், 'ஒரு சாரார் என்னுடைய படைகளை எடுத்துக் கொள்ளலாம், மற்றொரு சாரார் என்னை எடுத்துக் கொள்ளலாம்' என்று.

அர்ச்சுனனுக்கு போர் முறைகளையும், உத்திகளையும் முழுமையாக கற்பித்த துரோணர், அவனுடைய குரு எதிர்த் தரப்பில் நின்றார். அது உண்மையிலேயே குடும்பப் போர்தான். அர்ச்சுனன் போருக்கு எதிரானவல்லன். தன்னுடைய சொந்தங் களைக் கொல்வதற்கு எதிரானவன். போர்க்களம் முழுவதிலும் அவனுடைய உறவுக்காரர்களே நின்றிருந்தனர். சிலர் அந்தப் பக்கத்திலும், சிலர் தன்னுடைய பக்கத்திலும் நிற்பதை அவன் கண்டான். யார் எந்தப் பக்கத்தில் நின்றாலும் போரில் எல்லாருமே கொல்லப்பட நேரலாம். 'என்னுடைய சொந்தங்களையே நான் கொல்வதா? அதைவிட துறவு கொள்வதே மேல்' என்று அவன் எண்ணமிடலானான்.

அவன் ஒன்றும் வன்முறைக்கு எதிரானவன் அல்ல. போரில் தன்னுடைய உறவுக்காரர்கள் மட்டும் பங்கேற்காமல் இருந்திருந்

தால், போர் செய்வதில் பெருமகிழ்ச்சி கொண்டிருப்பான் அவன். அகிம்சை சமாதானம், துறவு இவையெல்லாம் வெறும் நியாயப் படுத்தல்கள் என்று கூறி அவனைப் போருக்கு இணங்க வைத்தார் கிருஷ்ணர். மனதின் தந்திரத்தைப் புரிந்து கொள்ளும்படி அவனைக் கட்டாயப்படுத்தினார் அவர். தற்போது சொல்லுங்கள், மகாவீரரும் கிருஷ்ணரும் ஒரே விஷயத்தைத்தான் கூறியிருக் கிறார்களா? இல்லை, அவர்கள் ஒரே விஷயத்தைக் கூறவில்லை.

என்னுடைய அனுபவத்தில் நான் ஒன்றைக் கூற முடியும். இந்த உலகில் மோசஸ், ஜராதுஷ்ட்ரர், லாவோட்சு, முகமது, இயேசு, கிருஷ்ணர், புத்தர், மகாவீரர், கபீர் என்று ஞானம் பெற்ற பலருக்கும் ஒரே அனுபவந்தான் கிடைத்தது. ஆனால் அவர்களுடைய ஆளுமைகள் வெவ்வேறானவை. அவர்களுடைய தனித் தன்மையை ஒப்பிட இயலாது. அவர்கள் வெளிப்படுத்தியவை களும் வெவ்வேறுதான். அவர்கள் ஒரே விஷயத்தைத்தான் சொன்னார்கள் என்று நீங்கள் எந்த உத்தியின் மூலமும் வலுக்கட்டாயமாகத் திணிக்க முடியாது.

அவர்களுடைய அனுபவம், அவர்கள் இறுதியாகப் பெற்ற அனுபவம் ஒரே மாதிரிதான். ஆனால் வாழ்க்கையை எப்படி வாழவேண்டும் என்பது பற்றிய தேர்வும், நிறைவான அனுபவத்தைப் பெறுவதற்கான அணுகுமுறையும் முற்றிலும் மாறுபட்டவை. அவர்கள் போய்ச் சேருகிற இடம் ஒன்றாக இருந்தாலும், போகிற பாதை தனித்தனி.

மகாத்மா காந்தி அனைத்து மறைநூல்களும் ஒரே கருத்தைச் சொல்வதாக நிரூப்பிக்க முயன்றார். அது ஒரு போலித் தயாரிப்பு வேலை. அவர் கீதைக்கு இசைவான சில வாக்கியங்களை குர்ஆனில் இருந்து எடுத்தார். கீதைக்கு இணக்கமில்லாத வாக்கியங்களைத் தேர்வு செய்யவில்லை. கீதை அவருடைய அடிப்படைத் தத்துவம். கீதையைத் தம்முடைய தாய் என்றார் அவர். ஆனால் குர்ஆனைத் த்மது தந்தையெனக் கூறவில்லை. கீதைக்கு இசைவான கருத்துக்களை மட்டும் மற்ற புனித நூல்களில் தேடிப் பிடிக்க முற்பட்டாரே தவிர கீதைக்கு இணக்கமில்லாதவை களை விட்டு விட்டார்.

இது ஒரு சரியான அணுகுமுறை ஆகாது. எப்படி இருந்த போதும் அவரால் எதையும் நம்பவைத்து, தன்பக்கம் திருப்ப

முடியவில்லை. அவர் முகமதியர்களை நம்பவைக்க முடியாமல், தோற்றார். இந்துக்களை நம்பவைக்க முயன்று தோற்றார். உண்மையில், ஓர் இந்து அவரைக் கொலை செய்தான்.

உண்மையில் அவரால் அவரையே நம்ப வைத்திருக்க முடியாது. தம்முடைய வாழ்க்கை முழுக்கவும் 'அல்லா ஈஸ்வர தேரி நாம்' (அல்லாவும் ஈஸ்வரனும் உன்னுடைய திருநாமங்கள்) என்று பாடிக் கொண்டிருந்தார். ஆனால், குண்டடிபட்டுச் சாய்ந்த போது அல்லாவின் திருநாமத்தை அவர் உச்சரிக்கவில்லை. துப்பாக்கிக் குண்டு அவருடைய இருதயத்தைத் துளைத்த போது, அவர் 'ராம்' என்றுதான் கதறினார். 'அல்லா' என்று குரலெழுப்ப வில்லை. தத்துவப் பேச்சு அந்தக் கணத்தில் மறந்து போயிற்று; உண்மையான இந்து மேலெழுந்தது. அவரால் அந்தக் கணத்தில் அல்லாவையோ, புத்தரையோ, மகாவீரரையோ நினைப்பு படுத்திக் கொள்ள முடியவில்லை. இந்துக் கடவுளான ராம் தான் அவருடைய நினைவுக்கு வந்தது. இது அவரையே அவரால் நம்பவைக்க முடியவில்லை என்பதைக் காட்டுகிறது.

நான் மதங்களின் கூட்டிணைவுக்கு முயலவில்லை, ஏனெனில் அது பயனற்றது என்பது எனக்குத் தெரியும். அவை வெவ்வேறானவை, ஒப்பிட முடியாதவை. அவற்றின் இணையற்ற தன்மையை நான் மதிக்கிறேன். உண்மையில் இந்த உலகம் அதிகமதிப்பும், நேர்த்தியும், ஆற்றலும் கொண்டது. காரணம் இங்கே குர் – ஆன் உண்டு, கீதை உண்டு. தம்மபதம் உண்டு. இந்த உலகம், ஜராதுஷ்ட்ரர் லாவோட்சு, புத்தர், கபீர், குருநானக், ஃபரீத் போன்றவர்கள் தோன்றியதால் வளம் பெற்றது. வண்ண வண்ணப் பூக்கள் கொண்ட இந்த உலகம் ஓர் அழகிய நந்தவனம்.

ரோஜா தாமரையல்ல, தாமரையும் ரோஜாவல்ல. இரண்டுமே பூக்கள். இரண்டுமே பூத்திருக்கின்றன. புத்தரின் மலர்ச்சி, இயேசுவின் மலர்ச்சி! இரண்டு பூக்கள்! ஆனால் ஒரு ரோஜா ரோஜாவாகவும், ஒரு தாமரை தாமரையாகவுமே இருக்க முடியும். எல்லாமே ரோஜாக்களாகவும், எல்லாமும் தாமரையாகவும் இல்லாமல் இருப்பதே விரும்பத்தக்கது.

இங்கே பல்வேறு மக்களும் இருப்பதை நீங்கள் காண்கிறீர்கள். அவர்கள் ஒவ்வொரு மதத்தைச் சேர்ந்தவர், ஒவ்வொரு நாட்டில் இருந்து வந்தவர்கள். அவர்களைச் சகிப்புத் தன்மையோடு

இருக்கும்படி, மற்றவருடைய மதத்தை மதிக்கும்படி யாரும் கற்பிக்கவில்லை. இத்தகைய விஷயங்கள் இங்கே பேசப்படுவதில்லை, இருந்தாலும் இங்கே சகிப்புத்தன்மையற்றவர் கிடையாது.

நீங்கள் சகிப்புத்தன்மையை, மதங்களின் கூட்டிணைவை, மனிதர்களால் உருவாக்கப்பட்ட எதையும் உள்வாங்கிக் கொள்ள வேண்டியதில்லை. என்னுடைய அணுகுமுறை இதுதான் - அமெரிக்க வாழ்க்கை முறை போன்றவைகளை நீங்கள் விட்டுவிட வேண்டும். நிறங்கள் வெவ்வேறாக இருந்தால் என்ன. மக்கள் பல்வேறு நிறங்களில் இருப்பது நல்லதுதான். பூக்கள் மாறுபட்ட நிறங்களில் இருக்கின்றன. உங்கள் தலை முடியின் நிறமும் வேறுபடுகிறது. நல்லது! அது வாழ்க்கையை மேலும் வாழத்தக்க தாக்குகிறது. வாழ்க்கையின் பேரில் ஆர்வத்தை உண்டு பண்ணுகிறது. பலவகை என்றாலே வளந்தான்.

பல்வேறு நம்பிக்கைகளைக் கொண்ட மக்கள் இணக்கமாக வாழ முடியும் என்கிற கருத்து தவறானது. அந்த நம்பிக்கைகள் மாறுபட்டவை என்பதுதான் பிரச்னை. உண்மையில் அறிதல் நல்லது, நம்புதல் தீது. விசாரித்தறிவது நல்லது. ஊகங்கள் தவறாகி விடும். ஆன்மசாதகராயிருங்கள், கடவுளை முழுமையாய் புரிந்து கொள்ள முடியாது என்று நம்புகிறவராகவும் (agnostic) இருங்கள்.

'எனக்குத் தெரியாது என்கிறபோது, நான் எப்படி ஒரு நம்பிக்கையைப் பற்றிக் கொள்ள முடியும்' என்று உங்களுக்கும், மற்றவர்களுக்கும் தெளிவாகச் சொல்லி விடுங்கள். 'நான் ஓர் இந்துக் குடும்பத்தில் பிறந்ததால், என்னுடைய பெற்றோர்கள் எனக்கு இந்து மதத்தைப் பற்றிப் போதித்திருக்கிறார்கள். ஆனால் எது சரி எது தவறு என்று எனக்குத் தெரியாது. அது தற்செயலாய் நிகழ்வது. ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தில் வளர்க்கப்பட்டிருந்தால் கிறிஸ்தவ மதநம்பிக்கை கொண்டிருப்பேன். அப்படித்தான், நான் ரஷ்யாவில் பிறந்திருந்தால் கடவுளிடமும், கடவுளின் குமாரனிடமும், புனித ஆவியிடமும் நம்பிக்கை வைத்திருக்க மாட்டேன். மார்க்ஸ், எங்கல்ஸ், லெனின் என்கிற மும்மூர்த்திகளிடம் நம்பிக்கை ஏற்பட்டிருக்கும். கிரெம்ளின் எனது புனித ஆலயமாகவும், 'தாஸ் கபித்தால்' (Das Kapital) எனக்கு பகவத் கீதையாகவும் இருந்திருக்கும்.

யாரும் பிறக்கும் போதே இந்துவாக, முஸ்லீமாக, கிறிஸ்தவராகப் பிறந்து விடவில்லை. இவையெல்லாம் ஒருவர் மீது சுமத்தப்படுகிறவை. உண்மையில் தடையற்ற, சுயேச்சையாய் செயல்படக் கூடிய உலகில் எந்த மதமும் எவர் மீதும் சுமத்தப்படக் கூடாது. எல்லா மதமும் எல்லாருக்கும் பயன்படுவதாய் இருக்க வேண்டும்.

தங்கள் குழந்தைகளின் மதத்தைப் பெற்றோர் தீர்மானிக்கக் கூடாது. எந்த ஒரு குழந்தையையும் குறிப்பிட்ட ஒரு மதத்தை ஏற்கும்படி கட்டாயப்படுத்துவது குற்றமாக்கப்பட வேண்டும். ஆம், விஷயங்களை எப்படி விசாரித்தறிவது என்பதை வேண்டுமானால் தங்கள் குழந்தைகளுக்கு அவர்கள் கற்றுத் தரட்டும். தான் விரும்பிய புனித நூலைக் கற்கிற, தான் விரும்பிய மதத்தை ஏற்கிற தேர்வுரிமை குழந்தைகளுக்கு இருக்க வேண்டும். உங்கள் குழந்தை ஒரு மதத்தைத் தேர்ந்து கொண்டதற்காக, பிரார்த்தனை செய்வதற்காக நீங்கள் மகிழ்ச்சியடைய வேண்டும். அவன் பிரார்த்திக்கிறான் என்பது முக்கியம். எங்கே பிரார்த்திருக்கிறான் என்பதல்ல.

ஆனால், தற்போது பரிசீலிக்க வேண்டிய நிலை இதுவல்ல. யாரும் பிரார்த்திப்பதில் அக்கறை காட்டுவதாய் தெரியவில்லை. அவர்களுடைய அக்கறையெல்லாம் குறிப்பிட்ட ஒரு மதத்தில் உங்களைக் கொண்டு சேர்ப்பதில் தான். இது மிகவும் அருவருக்கத்தக்க ஒரு நிலை - அதுவே மக்களைப் பிரித்து வைக்கிறது.

குழந்தைகளைக் கட்டாயப்படுத்தி மதங்களை ஏற்கச் செய்வது கூடாது. ஒவ்வொரு குழந்தைக்கும் தானே தேர்வு செய்து கொள்கிற வாய்ப்பு வழங்கப்பட வேண்டும். அவனுக்கு எது பொருத்தமானது என்பதை அறிந்தவர் யார்?

சமணக் குடும்பத்தில் பிறந்த ஒருவன் வேறொன்றால் ஈர்க்கப் பட்டிருக்கக் கூடும். அவன் வெளிப்பார்வைக்கு மாவீரனைப் பின்பற்றினாலும், உள்ளுக்குள் அப்படி இருக்க மாட்டான். அவனுடைய இதயம் மீராவிடமும், கிருஷ்ணரிடமும் ஈடுபட்டு தொலை தூரம் சென்று விட்டிருக்கும். மறுதலையாக ஒன்று: கிருஷ்ணரை வழிபடுகிற குடும்பத்தில் பிறந்த ஒருவனுக்கு, கிருஷ்ண உணர்வே இல்லாமல் இருக்கக்கூடும். ஆனாலும் அவன் இந்து. அந்நிலையில் அவன் என்ன செய்வான் என்று

நினைக்கிறீர்கள்? பாசாங்கு செய்வான், போலியாக நடப்பான். ஆனால், மகாவீரரின் திருவுருவைக் கண்டதும் அவனுக்குள் ஏதோ ஒன்று கிளர்ந்தெழுகிறது அவனுடைய இருப்புணர்வில் சிறகடிப்பு. ஒரு புதிய சக்தியை, புதிய ஒளியை அவன் உணர்கிறான். அந்நிலையில் அதுவே அவனுடைய மதமாகிறது.

மதம் உங்கள் இதயத்தால் கண்டடையப்பட வேண்டியது. எல்லா மதங்களுமே விரும்பத்தக்கவைதாம். மனதுக்கு நிறைவளிப்பவைதாம், அவை ஒன்றுக்கொன்று மாறுபட்டதாயினும். அவை ஒரே குறிக்கோளைக் கொண்டவை. ஆனால், ஒவ்வொரு மதமும் ஒரு வழி. யாரும் எல்லா வழிகளையும் பின்பற்றிச் செல்வதற்கில்லை. அத்தனை வழிகளிலும் ஒருவர் செல்ல முயன்றால் அவருக்குப் பைத்தியம் பிடித்தது போலாகி விடும். நீங்கள் ஒரு வழியைப் பின்பற்றிச் சொல்லுங்கள். எல்லா வழிகளிலும் மலையின் அதே சிகரத்துக்குத்தான் இட்டுச் செல்லும் என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.

நீங்கள் நம்பிக்கையில் (மூடநம்பிக்கை) தொடங்காமல், விசாரித்தறிவதில் தொடங்கினால் உலகமே முற்றிலும் மாறுபட்ட தாயிருக்கும். மூடநம்பிக்கைகளில் அது சாத்தியமில்லை. வழக்க மான செய்முறைகள் (இயற்கையான அல்லது பழக்கப்படுத்திக் கொண்டது) என்றால் எல்லாம் சரி.

இந்தியச் சூழலில் வெவ்வேறான பழக்க வழக்கங்கள். அது ஒன்றும் பெரிய பிரச்சினையாகாது. வெப்பப் பிரதேசத்தைவிட குளிர்ப்பிரதேசத்தில் வெவ்வேறு பழக்கங்கள் இருப்பதை, நீங்கள் புரிந்து கொள்ள முடியும். அது இயற்கைதான். ஆனால் நம்பிக்கைகளுக்கு வெப்பம் அல்லது குளிர்ச்சியுடன் தொடர் பில்லை. நம்பிக்கைகளுக்கும் இயற்கைக்கும் தொடர்பில்லை. நம்பிக்கைகள் மனிதனால் உருவாக்கப்பட்டவை. நம்பிக்கைகள் அடிப்படையில் அரசியல் சார்ந்ததாய், உத்திகளால், தந்திரங் களாயிருக்கும். அவை கூட்டங்களைத் திறமையாகக் கையாளவும், கட்டுப்படுத்தவும் உருவாக்கப்பட்டவை.

நீங்கள் கேட்கிறீர்கள்; 'மனித இனம் ஏன் சாத்தியமற்றவற்றை மனித இனத்தின் பொருட்டு உருவாக்கி வைத்திருக்கிறது?' என்று.

காரணம் மனிதன் இன்னமும் பிறக்கவில்லை, மனித இனம் கோட்பாட்டளவில் (கருத்தியல்) இருந்து கொண்டிருக்கிறது. ஒரு

சமயம் ஜார்ஜ் பெர்னார்ட்ஷாவிடம் ஒருவன் கேட்டான், 'நாகரிகத்தைப் பற்றித் தாங்கள் என்ன நினைக்கிறீர்கள்?' என்று.

ஷா சொன்னார், 'அது ஒரு நல்ல சிந்தனைதான். ஆனால், யாரேனும் ஒருவர் அதை முயன்று பார்க்க வேண்டும்' என்று.

மனித இனம் என்பதும் ஒரு நல்ல சிந்தனைதான். ஆனால் யாராவது அதை முயன்று பார்க்க வேண்டும். அது இன்னமும் நிகழ்ந்தபாடில்லை.

மனித இனம் இதுவரை வரவில்லை. இந்துக்கள் இருக் கிறார்கள், இஸ்லாமியர்கள், கிறிஸ்தவர்கள் இருக்கிறார்கள். இந்தியர் களும் ஜெர்மானியர்களும் இத்தாலியர்களும் இருக்கிறார்கள். ஆனால் மனித இனம் இதுவரை வரவேயில்லை. அது ஓர் எளிமையான சொல், ஆனால் முக்கியக் கருத்து ஏதும் இல்லாமல், வெற்றாக இருப்பது.

யாரேனும் உங்களிடம் 'நீ யார்?' என்று கேட்டால், 'நான் ஒரு மனிதன்' என்று மனதில் எண்ணம் கொள்வது ஏறக்குறைய சாத்தியமில்லை. 'நான் ஒரு கிறிஸ்தவன், ஓர் இந்து, ஒரு பார்ஸி அல்லது முகமதியன்'... என்று சொல்வீர்கள். 'நான் ஓர் எஞ்சினீயர், டாக்டர், புரஃபஸர், சயண்டிஸ்ட்' என்கிற மாதிரி சொல்வீர்கள் வெறுப்பு உண்டாக்குகிற விதத்தில். ஆனால் 'நான் ஒரு மனிதன்' என்பதை உள்ளடக்கியிருப்பதோ, ஏன் கற்பனை செய்வதோ கூட கிட்டத்தட்ட சாத்தியமாவதில்லை. அப்படியே நீங்கள் அதைச் சொன்னாலும், கேட்டவர் உங்களுக்கு கிறுக்கு பிடித்திருப்பதாய் எண்ணிக் கொள்வார். 'சரிதான், நீ மனுசங்கறது உண்மைதான். ஆனால் நான் கேட்டது நீ யாருன்னு தான்' என்பார்.

'மனித இனம்' என்பது இனிமேல் நிகழ வேண்டும். அது நிகழ்வதற்கான அடிப்படையை நாம் தயார்ப்படுத்த வேண்டும். அத்தனை வகை மூடநம்பிக்கைகளையும் விடுவதால் அது நிகழக் கூடும். விசாரித்தறிவதன் மூலம் ஓர் எழுச்சியை, சூழலை, இடத்தை உருவாக்கிட அது நிகழும். உங்களுக்குத் தெரிந்திருக்காது, ஆனால் தெரிந்தது போல் நடிப்பீர்கள். நம்பிக்கை என்பது தெரிந்து வைத்திருப்பது அல்ல, அது ஓர் ஏமாற்றப்படுகிற நிலை.

உண்மையான மனிதன் நம்ப மாட்டான். ஒன்று அவனுக்குத் தெரிந்திருக்கும் அல்லது தெரிந்திருக்காது. யாரேனும் உங்களிடம்,

'கடவுள் இருக்கிறாரா?' என்று கேட்டால் நீங்கள் என்ன சொல்வீர்கள். நீங்கள் உண்மையும், நேர்மையும் உடையவர் என்றால் 'எனக்குக் கடவுளிடம் நம்பிக்கை இருக்கிறது. அவர் இருப்பதை நான் நம்புகிறேன்' என்று உங்களால் கூற முடியாது. 'எனக்குக் கடவுளிடம் நம்பிக்கை கிடையாது, நான் சொல்கிறேன் அவர் இல்லை' என்றும் உங்களால் கூற முடியாது. நீங்கள் உண்மைக்கு மதிப்பளிப்பவர், உண்மையானவர் என்றால் 'எனக்குத் தெரியாது. நான் தேடிக் கொண்டிருக்கிறேன். நான் கடவுளை நம்புகிறவனுமல்ல, நம்பாதவனுமல்ல. நான் ஓர் ஆன்ம சாதகர்' என்று தான் கூறுவீர்கள்.

நீங்கள் அறிந்து கொண்ட பின்னும், நம்புகிறவராக இருப்பீர்களா என்ன? அதன் பிறகு நம்புகிற அவசியம் இருக்காது. உங்களுக்கு சூரியன் குறித்து நம்பிக்கையில்லை. சூரியன் இருக்கிறது என்றோ, சூரியன் இருக்கவில்லை என்றோ மக்கள் சண்டையிட்டு நீங்கள் பார்த்திருக்க மாட்டீர்கள். சூரியன் கிழக்கில் உதிக்கிறது இல்லை மேற்கில்தான் உதிக்கிறது தெற்கிலா இல்லை வடக்கில்... என்று அவர்கள் சண்டையிட்டு கொள்வதை நீங்கள் கண்டிருக்கிறீர்களா? மாட்டீர்கள். சூரியன் இருக்கிறது என்பதை, அது கிழக்கில்தான் உதிக்கிறது என்பதை எல்லாருமே அறிவார்கள். இதில் நம்புதல் பற்றிய பிரச்னை இல்லை.

நீங்கள் என்னிடம், 'கடவுளை நீங்கள் நம்புகிறீர்களா? என்று கேட்டால், நான் கூறுவேன், 'இல்லை. காரணம் நான் கடவுளை அறிவேன், நம்புதல் அவசியமில்லை' என்று. அறிந்திருப்பது உண்மையான செயல்நிலை, நம்புதல் - ஒரு மூடிமறைக்கிற, ஏமாற்று சாதனம் (camouflage).

மூடநம்பிக்கைகளை விடுவதில் மக்களுக்கு உதவுங்கள், மக்களை உண்மையை விசாரித்தறிபவர்களாக மாற்றுங்கள். அவர்கள் அறிந்திராத நிலையில் இருந்து கடமையைத் தொடங்க உதவுங்கள். அறிந்த நிலையில் செயல்படுகிற போது முழுக் கருத்தையும் தவறவிடும்படி ஆகும். அறிவு எப்போதுமே பழைமையானது, வாழ்க்கை ஒரு போதும் பழைமையுறுவதில்லை. அறிவும் வாழ்க்கையும் ஒன்றையொன்று எதிர் கொள்ளாது.

அதனால் தான் நான் 'அறிவு' என்பதற்குப் பதிலாக அறிந்து கொள்வது என்கிற சொல்லைத் தெரிந்தே பயன்படுத்துகிறேன்.

'அறிவு' (Knowledge) பெயர்ச் சொல். 'அறிதல்' (Knowing) என்பது வினைச் சொல். அறிவு முழுமையான கருத்தைக் கொண்டது. 'அறித்ல்' முழுமையாகாது - அது ஒரு தொடர் செயல் முறை. 'அறிவு' என்கிற சொற்பொருளில் ஒருவர் இறையுணர்வை ஒருபோதும் அறிவதில்லை. 'அறிந்து கொள்வது' என்கிற சொற்பொருளில் மட்டுமே இறையுணர்வை ஒருவர் அறிகிறார். ஆம், ஒரு தொடக்கம் இருக்கிறது, ஆனால் முடிவென்பதில்லை. ஒருவர் மேலும், மேலும், மேலும் அறிந்தபடி இருப்பார். அதிகம் அறிந்த நிலையில் ஒன்றை அவர் உணர்ந்திருப்பார். இன்னும் அறியவேண்டியது நிறைய இருக்கிறது என்பதை.

நீங்கள் சொல்கிறீர்கள்: 'அவர்கள் தங்களுக்கும், மற்றவர் களுக்கும் இயல்பாக நேர்மையாக நடந்து கொண்டால் எல்லாருமே மகிழ்ச்சியோடு மனநிறைவோடு வாழ முடியும் என்று நான் நம்புகிறேன்' என்பதாக. ஆனால், அந்த மனிதர்கள் தங்களுக்குள் மூடநம்பிக்கைகளை வைத்துக் கொண்டு, எப்படி இயல்பாக நேர்மையாக நடந்து கொள்ள முடியும்? இயல்பாக இருப்பது என்பது எந்தவொரு நம்பிக்கையும் கொள்ளாமல் இருப்பதைக் குறிக்கும். குழந்தைகள் இயல்பாக இருக்கிறார்கள். ஆனால், நீங்கள் இயல்பாக இருக்கவில்லை. மிருகங்களும் மரங்களும் கூட இயல்பாக இருக்கின்றன. ஆனால், நீங்கள் இயல்பாக இருக்கவில்லை. எது உங்களை இயற்கைக்கு புறம்பானவராக (unnatural) செயற்கையான நடவடிக்கைகளைக் கொண்டவராகச் செய்தது? உங்களுடைய நம்பிக்கை அமைவு (belief system)

ஆனால், அந்த நம்பிக்கை அமைப்பைக் கைவிடுவது கடினம். நீங்கள் மூடநம்பிக்கை கொண்டிருந்தால் உங்களால் எப்படி உண்மையாக இருக்க முடியும்? அது சொற்பாங்கில் முரண்பாடானது, உண்மையாயிருப்பதும் நம்புவதும். 'நான் கடவுளை நம்புகிறேன்' என்று ஒருவர் சொன்னால், 'எனக்குத் தெரியாது - நான் கேள்விப்பட்டேன், எனக்கு அப்படிக் கற்பிக்கப்பட்டது, அப்படிச் சொல்லப்பட்டது, நானாகத் தெரிந்து வைத்திருக்கவில்லை' என்கிற கூற்றும் அதில் இருக்கும். அது எப்படி உண்மையாகும். அதுவே நேர்மையின்மையின் தொடக்கம். தனக்குத் தெரியாது, இருந்தாலும் நம்புகிறார். அதை எந்த அளவு ஏற்பது? அதைவிடவும் நேர்மையற்ற தன்மை உண்டா என்ன?

பெற்றோர்கள் தங்களுடைய குழந்தைகளுக்குக் கற்பிக்கிறார்கள், 'கடவுளிடம் நம்பிக்கை வைத்திரு, நேர்மையும் உண்மையும் உடையவனாயிரு' என்று. இந்த சொற்பாங்கில் முரண்பாடு இருக்கிறது. இரண்டில் ஒன்றுதானே சாத்தியம் 'கடவுளை நம்பு, நேர்மையாயிரு உண்மையாயிரு' என்பதில். நீங்கள் கடவுளிடம் நம்பிக்கை வைக்க முடியும். அப்போது உங்களால் உண்மையாயிருக்க முடியாது. உண்மையாயிருப்பதாயின், 'எனக்குக் கடவுளிடம் நம்பிக்கை இல்லை, ஏன்னா அவரை நான் அறிந்திருக்கவில்லை' என்று தெளிவாக உரக்கச் சொல்லியிருக்க வேண்டும்.

மகாவீரரை பாம்பு கடித்தபோது, அவருடைய பாதத்தில் இருந்து இரத்தத்திற்கு பதிலாக பால் வடிந்தது என்பதை நம்பவும் அதே சமயத்தில் உண்மையாக இருக்கவும் எப்படி உங்களால் முடியும்? மகாவீரரின் உடம்பில் இரத்தத்திற்கு பதில் பாலாக ஓடிக் கொண்டிருக்க வேண்டும். அப்போது தான் சாத்தியம். அவருக்கு ஓர் ஐம்பது வயது என்று வைத்துக் கொள்வோம். அத்தனை காலமும் உள்ளே பால் ஓடிக் கொண்டிருந்தால் அது எப்படி பாலாக இருக்கும். ரொம்ப நாளைக்கு முன்பே தயிராகி விட்டிருக்காதா?

தயிராக இருந்தால் அது ஓடிக் கொண்டிருக்க முடியாதே? மகாவீரர் ரொம்ப காலத்துக்கு முன்பேயல்லவா செத்துப் போயிருப்பார்? நீங்கள் உண்மையானவராக இருந்தால் இத்தகைய கேள்விகள் உங்களுக்குள் தோன்றியிருக்க வேண்டும். அதையெல்லாம் நீங்கள் நம்புகிறவராயிருந்தால், அதுபோன்ற கேள்விகளை எழுப்பியருக்க மாட்டீர்கள், உள்ளேயே அடக்கி வைத்திருப்பீர்கள்.

மனிதன் இயல்பாகவும், நேர்மையாகவும் இருக்க முடியும். ஆனால் அப்போது மூடநம்பிக்கைகளை அவன் விட்டுவிட வேண்டியிருக்கும். அத்தனை வகையான நம்பிக்கைகளையும் அவன் கைவிட்டாக வேண்டும். நம்பிக்கைகளை விட்டால் செயல்படும் ஆற்றல் தடையற்றதாகி விடும். அதே ஆற்றல் விசாரித்து அறிவதாகும். அந்த ஆற்றல் உங்களை இறுதியான உண்மைக்கு உங்களைக் கொண்டு செல்லும்.

மக்கள் மிகுதியான சமய நம்பிக்கை கொண்டவர்கள். வெறித்தனமான அளவிற்கு நம்பிக்கை!

நான் கேள்வியுற்றது!

தன்னுடன் சந்திப்பு ஏற்பாடு செய்து கொண்ட (date) இளைஞனிடம் அந்தப் பெண் கேட்டாள், 'உன்னுடைய பாட்டனார் ரொம்பவும் சமய நம்பிக்கை உள்ளவராமே?' என்று.

அந்த இளைஞன் பதில் சொன்னான்.

'ஆமாம், அவர் ரொம்ப வைதீகம். 'செஸ்' (chess) விளையாடும்போது கூட 'பிஷப்'பிற்கு பதிலாக 'ரபி'யைப் பயன்படுத்துமளவிற்கு.'

(பிஷப் - கிறிஸ்தவ மதகுரு, ரபி - யூத மதகுரு)

***கடைசிக் கேள்வி:***

***ஓஷோ அவர்களே! வாழ்க்கை ஒது புதினத்தை விடவும் புரிந்து கொள்ள முடியாதது, வியப்பளிப்பது என்பது பற்றிய தங்கள் கருத்து என்ன?***

புதினம் என்பது வேறுமாதிரி இருக்க முடியாது. அது வாழ்க்கையைப் பிரதிபலிப்பது. அது வாழ்க்கையின் எதிரொலி, தொலை தூரத்தில் இருந்து கேட்கும் எதிரொலி. புதினம் எப்படி வாழ்க்கையை விட வியப்பளிப்பதாய் இருக்க முடியும்? அது வாழ்க்கையின் நிழல், வாழ்க்கையின் காலடித் தடம். வாழ்க்கை நம்ப முடியாதது, உண்மையிலேயே நம்பிச் செயல்பட முடியாத்து தான். அது அப்படி இருக்கக் கூடாது. ஆனால் இருக்கிறது. அது முற்றிலும் புரியாத புதிராகவே இருப்பது.

ஒரு புதினத்தில் உள்ள புதுமையை நீங்கள் புரிந்து கொண்டு விடுவீர்கள். ஆனால் வாழ்க்கையின் விசித்திரங்களை உங்களால் ஒருபோதும் அறிந்து கொள்ள முடியாது. காரணம் நீங்கள் அதை உண்மை என்க் கொள்கிறீர்கள். கடலைத் தனக்கு வழங்கப் பட்டதாக மீன் கருதிக் கொள்வது போல. அது கடலைப் பற்றி எதுவும் தெரிந்து கொண்டிருப்பதில்லை. மீன் எப்படி கடலை அறிந்திருக்கும்? அது கடலில் பிறந்தது, வாழ்ந்தது. அதற்கு முன்பிருந்தே கடல் இருந்து கொண்டிருக்கிறது. காற்றையும் காற்றின் எடையையும் நீங்கள் அறிந்திராதது போலவே ஈர்ப்பு சக்தி பற்றியும் அதன் இழுவை பற்றியும் அறிந்திருக்க மாட்டீர்கள். அதே போலத்தான் மீனும் கடலைப்பற்றி அறிந்திருக்காது. அதே முறையில் தான் நீங்களும் வாழ்க்கை பற்றி அறிந்திருக்க

மாட்டீர்கள். வாழ்க்கை இருக்கிறபடிக்கே இருக்கும் என்று எண்ணிக் கொள்ளாதீர்கள். அதன் ஒவ்வொரு கணமும் வியப்பைத் தருவதாயிருக்கும். ஒவ்வொரு கணமும் புதிரை விடுவிப்பதாயிருக்கும். வாழ்க்கை முற்றிலும் மாறுபட்ட பண்பையும், சுவையையும் கொண்டு விடும். உங்களுக்கு சிறகு முளைத்து விடும். அதன் பிறகு நீங்கள் சலிப்புறும் நிலை இருக்காது. வாழ்க்கை கிளர்ச்சியூட்டுவதால், பரவசமளிப்பதாய் மகிழ்ச்சிக்குரியதாகி விடும்.

உண்மையான மதமும் அதைப் போன்றதுதான். அது உங்களுக்கு வாழ்க்கையைப் புரிய வைக்கும். உங்களைச் சுற்றி நடப்பவைகளில் விழிப்போடு இருக்கச் செய்யும் – சூரியன், நிலவு, நட்சத்திரங்கள், ஆறுகள், மலைகள், இந்த அமைதி, இந்தக் கணம் நீங்கள் நான் என்று சகலத்திலும், இதைவிடவும் புதிராக என்ன இருக்க முடியும். இங்கே மூவாயிரம் பேர் ஒத்திசைவோடு அமர்ந்திருக்கிறார்கள். உங்கள் இதயத்தோடு எனது இதயமும் சேர்ந்து ஒலிக்கிறது. உங்கள் உயிர்ச்சக்தியும் எனது உயிர்ச்சக்தியும் ஒரு சீர்த்தன்மையைக் கொண்டிருக்கின்றன. இங்கு யாருமே இல்லாதது போல் இப்படியொரு நிசப்தம், அமைதி. இதில் நாம் கரைகிறோம், கலக்கிறோம். இதை விட புதிராய் என்ன இருக்கப் போகிறது. இதை விடவும் ஓர் அற்புதம் இனி விளையப் போகிறது?

அப்படி இருப்பதும் ஓர் அற்புதம். சுவாசிக்க முடிவதும், ஒளியை வானவில்லை நட்சத்திரங்கள் வானத்தைக் காண முடிவதும் அற்புதம். இதைவிட வேறென்ன வேண்டும்? இன்னும் வேறெதை உங்களால் கற்பனை செய்ய முடியும்?

நீங்களே கேட்கிறீர்கள்: 'வாழ்க்கை புதினத்தை விடவும் வியப் பூட்டுவதாய் இருப்பது பற்றித் தாங்கள் என்ன கருதுகிறீர்கள்?' என்று.

நான் எதையும் நினைக்க வேண்டியதில்லை. அது அப்படித் தானே இருக்கிறது. எண்ணுவது ஒரு தாழ்வான செயல், காண்பது உயர்வாக இருக்கும். அதை நான் தர்க்கரீதியான முடிவாகக் காணவில்லை. அது என்னுடைய வாழ்வானுபவம். நான் மாறாத வியப்பைக் கொண்டிருக்கிறேன். ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு மூச்சும் வியப்பளிக்கிற ஒன்றுதான். இது ஒன்றும் வாக்கு மூலமல்ல. இன்னும் கொஞ்சம் கவனமும், தெரிதலும், தேடலும் கொண்ட

வராயிருங்கள். உங்கள் விரல்களை சுடக்கெடுத்து (snap), முகத்தைத்தட்டி விழிப்படையுங்கள். சுற்றிவரப்பாருங்கள்... அந்த அமைதி, அழகு, உங்களுடைய பாக்கியம்.

ஹோடெய் (ஜென்குரு) ஞானம் பெற்றதும் சிரிக்கத் தொடங்கினார். அதன் பிறகு சிரிப்பதை அவர் நிறுத்தவேயில்லை. அவர் பல காலம் உயிரோடு இருந்தார். அத்தனை காலமும் சிரித்தபடிதானிருந்தார். வாழ்க்கை நெடுகிலும், மரணத்திலும் சிரித்தார். ஜப்பானில் அவர் புகழ் பெற்றவர். அவரை 'சிரிக்கும் புத்தர்' என்றே மக்கள் அழைத்தார்கள்.

'ஹோடெய், எதற்காகச் சிரிக்கிறீர்கள்?' என்று மக்கள் கேட்டனர். அதற்கு அவர் சொன்னார்: 'வாழ்க்கை நம்பமுடியாததாய், நகைக் கத்தக்கதாய் பொருத்தமற்றதாய் இருக்கிறதே' என்று. அப்படி இருக்கக் கூடாது. ஆனால், அது அப்படித்தான் இருக்கிறது. எந்தக் காரணமும் இல்லாமலேயே பூக்கள் பூக்கின்றன. பறவைகள் கீதமிசைக்கின்றன. ஒவ்வொரு காலையும் சூரியன் மேலெழுகிறது.' அது ஒரு நாள் தோன்றாவிடில் நாம் என்ன செய்ய முடியும்?

ஆக எல்லாமும் ஓர் ஒத்திசைவை இணக்கமான உறவை, சீர்த்தன்மையைக் கொண்டிருக்கின்றன. ஒரு புல்லின் இதழை நீங்கள் தொடுகிறபோது, இந்தப் பிரபஞ்சத்தையே தொட்டு ணர்கிறீர்கள். அது சூரியன் இல்லாமல் அந்த இடத்தில் இருக்க முடியாது. அது நிலம் இல்லாமல் அங்கே இருந்திருக்க முடியாது. நட்சத்திரங்களும் கிரகங்களும் இல்லை என்றால் அது இருப்பதற்கில்லை. பிரபஞ்சம் மிகச்சரியாக இருக்கிற முறையில் இல்லாவிட்டால் அந்தப் புல் இருந்திருக்காது.

அந்தப் புல்லின் வாழ்க்கை முடிந்து விட்டால் இந்தப் பிரபஞ்சத்தில் ஏதோ ஒன்று குறைந்தது போல் ஆகிவிடும். அது சிறியது என்றாலும் அதை இழந்ததில் ஒரு குறைப்பட்ட நிலை (minus) யை அடைகிறது பிரபஞ்சம்.

வாழ்க்கையை மிகச்சரியாகக் கவனியுங்கள்... நீங்கள் சிரித்து விடுவீர்கள். அது பொருத்தமற்றதாய், நகைப்பிற்குரியதாயிருக்கும். அது புரிந்து கொள்ள முடியாததாய், அற்புத நிகழ்வாயிருக்கும். எந்தக் கனவும் வாழ்க்கையை விட அதிகமாய் கனவின் குணங்களைக் கொண்டிருப்பதற்கில்லை. எந்தக் கவிதையும் வாழ்க்கையை விடவும் அதிகக் கவித்துவம் கொண்டிருக்காது.

எந்தவொரு நகைச்சுவையும் வாழ்க்கையைக் காட்டிலும் கூடுதல் சிரிப்பை வழங்க முடியாது.

அந்த மருத்துவர் வருங்கால மணப்பெண் மற்றும் மணமகனின் இரத்த மாதிரிகளை எடுத்துக் கொண்டிருந்தார். அருகில் இருந்து கவனித்த ஸெகே ஆர்வத்துடன் கேட்டான், 'டாக்டர், என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?' என்று.

மருத்துவர் சொன்னார், 'பால் வினை நோய் உள்ளதா என்று சரிபார்க்கிறோம். அப்படி ஏதாவது இருந்து விட்டால், அது குணமாகிற வரை கல்யாணம் நடக்காது' என்று.

'அது நல்லது தான். அப்படியே என்னுடைய இரத்தத்தையும் சோதித்துப் பாருங்களேன்' என்றான் ஸெகே.

'எதற்காக உனக்கும் கல்யாணமா என்ன?'

'ஓ, இல்லை. ஆனால் நானும் அவங்களோடு தான் பயணம் செஞ்சிட்டிருக்கேன்' என்றான் அந்த ஜோடியை சுட்டிக்காட்டி.

இன்றைக்கு இது போதும்.

○

நண்பனே! இந்த உலகிற்காக
நான் என்ன செய்ய முடியும்
இங்கே பொருந்தியிருந்து, பஞ்சில்
நூற்றுக் கொண்டிருப்பதன்றி?
நான் தைத்த உடைகளைத் துறந்து
தளர்த்தியான அங்கி உடுத்தியிருக்கிறேன்
ஆனால், ஒருநாள் கண்டேன்
அது நேர்த்தியாக நெய்யப்பட்டிருப்பதை
எனவே ஒரு முரட்டுத் துணியை வாங்கினேன்
இன்னமும் அது தொங்குகிறது இடது தோளில்
என் காமத்தைத் தடுத்து வைத்தேன், கடுங்
கோபமாய் அது வெடிக்கக் கண்டேன்
என் கோபத்தை நான் கைவிட்டேன், ஒரு
பேராசைக்காரனானேன் எப்போதைக்குமாய்
அந்தப் பேராசையை விட்டொழிக்க
வெகுவாய் பாடுபட்டேன்
என்னைப்பற்றி நான்
பெருமிதப்படுகிறேன் தற்போது
மனம் விரும்புகிறது உலகுடனான
தொடர்பை விட்டொழிப்பதற்கு
ஆனாலும் ஏதோ ஒன்றை
அது இன்னமும் பற்றியிருக்கிறது!

கபீர் சொல்கிறார்:

**கேளாய், எனது நண்பனே! தங்கள் பாதையைக் கண்டு கொண்டவர்கள் வெகு சிலர்தான்!**

மனிதன் ஏதோ ஒன்றைத் தேர்வு செய்து கொள்ள வேண்டி இக்கட்டான நிலையில் இருப்பவன். காரணம், அவனுடைய இரட்டைத் தன்மை (duality). அவன் ஒரேயொரு வாழ்நிலையைக் கொண்டவனல்ல. அவன் கடந்த காலத்தையும், எதிர்காலத்தையும் கொண்டிருக்கிறான். கடந்த காலம் அவனுடைய மிருகத் தன்மையைக் குறிப்பது. எதிர்காலம் அவன் அடைய விருக்கும் கடவுட் தன்மையைக் குறிக்கும். இரண்டுக்கும் இடையே இருக்கிறது அவனுடைய பிரபஞ்ச இருப்பு (வாழ்தல்). அது பிரிப்புண்டு, நைந்து, இழுபட்டுக் கிடக்கிறது எதிரெதிரான பக்கங்களில்.

மனிதன் பின்நோக்கிப் பார்த்தால் அவன் ஒரு மிருகமாகவே இருந்தது தெரியவரும். அதனால்தான் மனிதன் மிருகத்தை விடவும் மேம்பட்ட நிலையில் இருக்கவில்லை என்கிறது அறிவியல். அப்படியே இன்னொரு மிருகம்! காரணம், அறிவியல் மட்டுமே கடந்த காலத்திலுனுள் நுழைந்து ஆராய்கிறது. விலங்கில் இருந்து பிறந்தவன் மனிதன் என்று மிகச் சரியாகவே கூறியிருக்கிறார்கள். சார்லஸ்டார்வினும், மற்றவர்களும் கடந்த காலத்தைப் பொறுத்த வரை அது உண்மைதான், ஆனால், முழு மனிதனைப் பற்றிக் குறிப்பிடுகிறபோது அது உண்மையாகாது.

எது நிகழக் கூடியது, எது நேரிடுகிறது எது இன்னமும் நேரிடவில்லை என்பதை எல்லாம் மதம் கூர்ந்து கவனிக்கிறது. விதையைக் கூறுபோட்டு பகுப்பாய்வு (dissect) செய்கிற விஞ்ஞானம் உள்ளே பூக்களைக் காணவில்லை. அதற்குத் தேவைப்படுவது மனதால் உணரும் திறன், பகுப்பாய்வு செய்வதற்கான திறமை அல்ல. கொஞ்சம் கற்பனை, உள்ளுணர்வின் இயக்கம், கொஞ்சம் கவித்துவ (Poetic) அணுகுமுறை. இன்னும் நிகழ்ந்திராத ஒன்றைக் கண்டு கொள்ளக் கூடிய ஓர் உண்மையான கனவு காண்கிறவரே அதற்குத் தேவை.

மதம் நிகழக் கூடியதைப் பார்க்கிறது. மனிதன் மிருகமல்ல என்பதைக் கண்டு கொள்கிறது. மனிதனிடம் உள்ள இறையுணர்வையும் அது காண்கிறது. அறிவியலுக்கும் மதத்துக்கும் இடையேயான மோதல் பயனற்றது. அவற்றின் போக்குகளும், செயல்முறைகளும், களங்களும் முற்றிலும் மாறுபட்டவை.

அறிவியல் எப்போதுமோ எல்லாவற்றையும் மூலம் (Source) என்கிற அளவிற்குக் குறைக்கிறது. மதமோ குறிக்கோளை

நோக்கிப் பயணப்படுகிறது. மனிதன் இரண்டுமாக இருக்கிறான். இரண்டில் ஒன்றைத் தேர்வு செய்கிற சிக்கல் (dilemma) அவனுக்கு. இருக்குமோ அல்லது இருக்காதா, இதுவாக இருக்குமோ அல்லது அதுவாக இருக்குமோ?

மனிதனால் அமைதியை இரண்டு வழிகளில் கண்டடைய முடியும். ஒன்று, அவன் மறுபடியும் மிருகமாகிவிட வேண்டும். அப்போது அவன் ஒன்றாக, பிரிப்பின்றி இருப்பான். அதனால் அமைதி, நிம்மதி, இணக்கம் இருக்கும்.... எனவேதான் இலட்சோப லட்சம் மக்கள் வெவ்வேறு வழிகளில் மிருகங்களாகிக் கொண் டிருக்கிறார்கள்.

மனிதன் மிருகமாவதற்கு போர் ஒரு சந்தர்ப்பத்தைத் தருகிறது. அதன் காரணமாகவே, போர் மிகப் பெரிய கவர்ச்சி உடையதாகி விடுகிறது. மூவாயிரம் ஆண்டுகால வரலாற்றில் மனிதன் ஐயாயிரம் போர்களைச் செய்திருக்கிறான். அங்கே, இங்கே என்று எங்கெங்கோ போர் தொடர்கிறது. மனிதன் மற்றொரு மனிதனைக் கொல்லாமல் ஒரே ஒரு நாள்கூட மறைந்து போகவில்லை. அழிவிலும், கொலையிலும் ஏன் இத்தனை ஆனந்தம்? மனித உளவியலின் அடியாழத்தில் இருக்கிறது அதற்கான காரணம்.

நீங்கள் கொல்கிற நேரத்தில் நீங்கள் ஒன்றேயாகிறீர்கள். உங்களுடைய இருமைத் தன்மை (duality) மறைந்து, மிருகமாக மட்டுமே இருக்கிறீர்கள். அதனால்தான் கொலையில் தற்கொலை யில் மிகப் பெரிய ஈர்ப்பு இருக்கிறது. மனிதனை மாற்ற முடியாது. அவனுக்குள் இருந்த வன்முறை வெடித்துக் கிளம்புகிறது. பெயர்கள் மாறும், முழக்கங்கள் மாறும், ஆனால், வன்முறை அப்படியே இருக்கும். அது மதத்தின் பெயரால், அரசியல் சார்ந்த கருத்தியலின் பெயரால் அல்லது அறிவற்ற ஏதோ ஒன்றால் மக்கள் வன்முறை கொண்டு விடுகிறார்கள் - ஒரு கால்பந்து போட்டி, ஒரு கிரிக்கெட் 'மாட்ச்' போதுமானது.

மக்கள் வன்முறையின் விளைவுகளைப் பற்றிச் சிந்திப்பதால், அதில் உள்ள ஆபத்தை உணர்ந்திருப்பதால் தாங்களே அதைச் செய்யாமல் வன்முறையை வெளிப்படுத்த மாற்று முறைகளைக் கண்டு பிடித்துக்கொள்கிறார்கள். ஒரு திரைப்படத்தில்,

தொலைக்காட்சித் தொடரில் வன்முறை கட்டாயமான ஒன்றாக இருக்கிறது. மக்களுக்கு வன்முறையில் அத்தனை விருப்பம். வன்முறைக் காட்சிகளை, இரத்தம் சிந்தும் காட்சிகளைப் பார்ப்பதன் மூலம் தாங்கள் மிருகமாக இருந்த தங்களுடைய கடந்த காலத்துக்கு அவர்கள் போய் விடுகிறார்கள். கடந்த காலம் அவர்களை நிகழ்காலத்தையும், எதிர்காலத்தையும் மறக்கச் செய்து விடுகிறது. நீங்கள் திரையில் எதைப் பார்க்கிறீர்களோ அது உங்களுடைய சொந்த வாழ்க்கையாய் தெரிகிறது. நீங்கள் அதற்கு மேலும் வெறும் பார்வையாளரல்ல, அந்த நேரத்தில் அதில் பங்கேற்பவராகி விடுகிறீர்கள். வன்முறை பெரிய கவர்ச்சி கொண்டது.

பாலுணர்வும் மிகுந்த ஈர்ப்புத் தன்மை உடையது. காம வசப்படுகிற கணங்களில் நீங்கள் ஒன்றாகி விடுகிறீர்கள். இல்லையேல் நீங்கள் பிரிந்து இரண்டாக இருப்பீர்கள். உங்களுடைய வருத்தமும், துயரமும் தொடர்கிறது. வன்முறை, போதை மருந்து, பாலுறவு உங்களை மிருகமாக்கிவிடும். அந்த நிலையில் நீங்கள் எப்போதும் இருப்பதில்லை. தற்காலிகமாக இருப்பீர்கள் என்றாலும் கூட.

ஓர் அடிப்படை விதியை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். எதுவும் பின்நோக்கி போவதில்லை. நீங்கள் மிகப்பல நேரங்களில் பாசாங்கு செய்ய முடிந்தாலும் ஏமாற்றிக் கொண்டிருந்தாலும் எதுவும் பின்நோக்கி போய்விடுவதில்லை என்பதுதான். ஓர் இளைஞனை குழந்தையின் அளவுக்கு(தன்மையில் தாழ்த்துவது) உங்களால் குறைவுபடுத்த முடியாது. காலம் ஒருபோதும் பின்நோக்கிப் போகாது. அது எப்போதுமே முன்நோக்கிப் போய்க் கொண்டிருப்பது. ஓர் இளைஞனை எப்படி உங்களால் குழந்தை யாக்க முடியாதோ அப்படியே ஒரு கிழவனைக் குழந்தை யாக்கவும் உங்களால் முடியாது. மரத்தை பூர்விக நிலைக்கு (விதை)க் கொண்டு செல்ல முடியாது. அது சாத்தியமற்றது.

வளர்ச்சி தொடர்ந்து கொண்டேயிருப்பது. அதைத் தடுக்கவோ பின்நோக்கிச் செலுத்தவோ வழியில்லை. அதனால்தான் மனிதர் களின் மிருகங்களாகிற முயற்சிகளனைத்தும் தோற்றுவிடுவது. நீங்கள் மதுவிலோ, எல்.எஸ்.டி மரியுவானா போன்ற போதை

மருந்துகளிலோ உங்களை முற்றாக மூழ்கடித்துக் கொள்ளலாம். அந்த நேரத்துக்குத்தான் உங்கள் கவலைகள் மறைவதும், பிரச்னைகள் நிறைந்த உலகில் இருந்து விடுபட்டிருப்பதும் நீங்கள் முற்றிலும் மாறுபட்ட பரிமாணத்தைக் கொண்டிருப்பதும் சற்று நேரந்தான்.

மறுநாள் காலை நீங்கள் பழைய நிலைக்கே வந்து விடுவீர்கள். நீங்கள் பழைய நிலைக்குத் திரும்பியதும், உலகம் மிகவும் அருவருக்கத் தக்கதாய் தெரியும். முன்பு எப்போதும் இருந்ததை விட வாழ்க்கைப் பிரச்னைகள் தீவிரமடையும். பிரச்னைகள் மேலும் சிக்கலாகி விடும். அந்தப் பிரச்னைகள் உங்களுடைய இருப்புணர்வில் தன்னுணர்வற்ற தன்மை (unconscious) யில் வேரூன்றி விடும்.

மறுநாள் அதே உலகத்துக்கு நீங்கள் திரும்பி விடுவீர்கள். போதையில் நீங்கள் மறக்க முயன்ற போதிருந்ததை விட அதிக அருவருப்பாகி விடும் உங்கள் பிரச்னைக்குரிய உலகம். அந்தத் தற்காலிக அமைதியுடன் ஒப்பிடும்போது உலகம் ஆபத்தானதாய், சிக்கல் நிறைந்ததாய், அச்சமூட்டுவதாய் தெரியும். அப்போது உங்கள் முன்பாய் இருக்கும் ஒரே வழி உங்கள் போதை மருந்தின் அளவை மேலும் கூட்டிக் கொள்வது தான். ஆனால் அதுவும் நீண்ட நாள் கை கொடுக்காது. அது ஒன்றும் உங்களைச் சிக்கலில் இருந்து விடுவிக்காது. உங்களுக்கு இருந்த சிக்கல்கள் அப்படியே இருக்கும். தொடர்ந்து இருக்கவே செய்யும்.

தெய்விகத்தை நோக்கி முன்னேறுவதுதான் ஒரே வழி. இறையுணர்வு மட்டுமே உங்களிடம் உள்ள சாத்தியம். சாத்தியத்தை நடைமுறைப் படுத்துங்கள்.

உங்கள் இறையுணர்வை நடைமுறைப் படுத்தாவிடில் மனநிறைவை உங்களால் பெறமுடியாது. எப்படிப் புனிதம் பெறுவது, கடவுட் தன்மை உடையவராவது? உள்ளிருக்கும் மிருகத்தை முழுமையாய் அடக்குவது ஒன்றே தீர்வு.

ஒன்று கடவுட் தன்மையை அடக்க வன்முறை, காமம், போதை மருந்து இவற்றைக் கைக் கொள்ளலாம். அவற்றின் மூலம் கடவுட் தன்மையை மறந்து விடலாம். அல்லது, மிருகத்தை அடக்க,

மிருகத்தன்மையை மறக்க அதைப் பின்னுக்குத் தள்ளிவிடலாம், பிறகு எப்போதுமே அதைப் பார்க்காமல் இருந்து விடலாம். உங்கள் தன்னுணர்வற்ற தன்மையின் அடித்தள ஆழத்தில் அதைத் தள்ளி விடலாம். அதன் பிறகு உங்களுடைய அன்றாட வாழ்க்கையில் அது குறுக்கிடாது. ஆக, அதை மீண்டும் நீங்கள் காணமாட்டீர்கள்.

ஒரு நெருப்புக் கோழியின் (ostrich) வழியில்தான் ஏறக்குறைய மனிதனும் சிந்திக்கிறான். தன்னுடைய விரோதியை தான் பார்க்காவிட்டால், அந்த விரோதி இருக்கவில்லை என்று எண்ணிக் கொள்ளும். அதனால்தான் தன்னுடைய விரோதி எதிர்ப்படும்போது அது கண்களை மூடிக் கொள்வது. தன் கண்களை மூடிக்கொண்டு அது நினைத்துக் கொள்கிறது தனக்கு விரோதியே இல்லை என்று.

சமயப்பற்றுடையவர்களில் தொண்ணூற்றியொன்பது சதவீதம் பேர், இத்தனை காலமும் அதைத்தான் செய்து கொண்டிருக் கிறார்கள். அந்த ஒரு சதவீதக் கணக்கில் புத்தரை, கபீரை, கிருஷ்ணரை நான் விட்டு வைக்கிறேன். தொண்ணூற்றியொன்பது சதவீதம் பேர்களும் நெருப்புக் கோழி செய்வதைத்தான் செய்து கொண்டிருக்கிறார்கள். அந்தப் பயிற்சி சிறிதும் பயனற்றது. மிருகத்தை அடக்குவது. நீங்கள் என்னதான் முயன்று அடக்கப் பார்த்தாலும் அந்த மிருகம் பெரிய அளவில் சக்தி உடையது. உங்களுடைய கடந்த காலம் முழுவதிலும் அது இருந்திருக்கிறது. கடந்த காலமாகவே அது இருந்தது என்றால் மிகையில்லை. உங்களுக்குள் ஆழ வேரூன்றி விட்டதை அத்தனை எளிதாய் நீங்கள் வெளியேற்றிவிட முடியாது. கண்களை மூடிக் கொள்வதன் மூலம், நீங்கள் முட்டாள் என்பது தெளிவு.

அந்த மிருகம் உங்களுடைய மூலக்கூறாக - அடித்தளமாக (base) இருக்கிறது. நீங்கள் ஒரு மிருகமாய் பிறந்தீர்கள். மற்ற மிருகங்களில் இருந்து நீங்கள் வேறுபட்டவரல்ல. நீங்கள் பெற்றிருக்கிற உடம்பு வேண்டுமானால் வேறாக இருக்கலாம். அது பெரிய வேறுபாடல்ல. உங்களுடைய அறிவு வேறு வகையாய் இருக்கலாம். ஆனால் அது ஒன்றும் பெரிய வேறுபாடாகி விடாது. அளவில்தான் வேறுபாடேயன்றி தன்மையில் (குணம்) அல்ல.

நவீன ஆராய்ச்சி தெரிவிக்கிறது. தாவரங்களும் அறிவுடையவை என்று. தாவரங்களும் எச்சரிக்கை, விழிப்பு, நுட்ப உணர்வு கொண்டிருப்பது ஆராய்ச்சியில் தெரிய வந்திருக்கிறது. மிருகங்களைப் பற்றி ஆராய்ச்சியாளர்கள் சொல்லியா தெரிய வேண்டும்? சில ஆராய்ச்சியாளர்கள் சொல்கிறார்கள் உலோகங்களுக்குக் கூட ஒருவகை அறிவுத் திறன் இருப்பதாக. ஆக மிருகங்களைவிட நமக்கு அறிவு கொஞ்சம் கூடுதலாயிருக்கிறது. அவ்வளவுதான். யானை, டால்பின், குரங்கு என்று மற்றவைகளுடன் மனிதனை ஒப்பிட்டால் அறிவின் தன்மை அவற்றுக்கும் இருப்பது தெரிகிறது. என்ன, அளவுதான் வேறுபடும்.

மனிதன் புத்தனாகிற போது தான், முழுமையாக விழிப்புற்ற நிலையில்தான் உண்மையான வேற்றுமை நிகழும். அதன் பிறகும் அவன் மிருகமாயிருக்க மாட்டான். அப்போது உண்மையிலேயே அவன் கடவுட் தன்மை கொண்டு விடுவான்.

முற்றிலும் தவறான ஒன்றையே அந்த தொண்ணூற்றியொன்பது சதவீதத்தினரும் செய்து கொண்டிருக்கிறார்கள். வன்முறையாளர்களிடம் காணப்படுகிற அதே தர்க்கம் தான் அவர்களிடமும் காணப்படுகிறது. காமாந்தகாரர்களிடமும், குடிகாரர்களிடமும் உள்ள அதே தர்க்கம் மிருகத்தை மறந்து விடுங்கள். அந்த மிருகத்தை மறப்பதற்குப் பல உத்திகள் மேம்படுத்தப்பட்டுள்ளன. மந்திரங்களை உச்சரிப்பதன் மூலம் அந்த மிருகத்தை நீங்கள் மறக்கலாம். 'ராம, ராம,ராம' என்று மந்திரங்களில் மனதை நிறுத்தினால் (occupied) உங்களால் அந்த மிருகத்தை மறக்க முடியும். நீங்கள் திரும்பத் திரும்ப அதை வேகமாய் சொல்கிறபோது, அந்த ஒற்றைச் சொல் உங்கள் மனசு முழுக்க ஓர் அதிர்வை பரவச் செய்யும். மனம் அந்த ஒலி அதிர்வில் நிரம்பியிருக்க, மிருகம் மறைந்து விடாது என்றாலும், அதைத் தவிர்க்க முடியும்.

ராமமந்திரம் என்கிற தந்திரத்தை நீங்கள் காலகாலமாகப் பயன்படுத்தி வந்தாலும், அந்த மிருகம் மாறவில்லை. அந்த மிருகத்தை உங்களால் ஏமாற்ற முடியாது. அது உங்களுடைய மேம்போக்கான சமய நம்பிக்கையாகவே நின்று விடுகிறது. அது பாசாங்காகவே இருக்கும். நீங்கள் மதம் சார்ந்த எவரையும் உரசிப்

பார்க்கலாம், அவர்களுக்குள் அந்த மிருகம் அப்படியே இருப்பதைக் காண்பீர்கள்.

நீங்கள் தேவாலயத்துக்கு செல்கிறீர்கள், வேத நூல் படிக்கிறீர்கள், கீதை படிக்கிறீர்கள், சுலோகங்கள் சொல்கிறீர்கள், பிரார்த்தனை வழிபாடு என்று எதையும் விட்டு வைப்பதில்லை. ஆனால், அவை எல்லாமே வெறும் சடங்காகவே இருந்து விடுகின்றன. உங்கள் இதயம் அவற்றில் ஒன்றுவதில்லை. உங்களுக்குள் இருக்கும் மிருகம் உரக்கவே கைதட்டிச் சிரிக்கும். நீங்கள் யார், எங்கிருக்கிறீர்கள் என்பதை அது நன்கறியும்; உங்களை எப்படிக் கையாள்வது என்பதும் அதற்குத் தெரியும். மணிக் கணக்கில் நீங்கள் ஜபம் செய்வீர்கள், பாடுவீர்கள். அப்போது ஓர் அழகான பெண் உங்களைக் கடந்து சென்றால் அத்தனை மந்திர உச்சாடனங்களும், பாட்டும் மறைந்து விடும். கடவுளைப் பற்றிய சகலமும் மறந்து போகும். ரொட்டி சுடுகிற இடத்தில் கிளம்பிய வாசனை போல எல்லாமும் போயே போய்விடும். ஹரே கிருஷ்ணா, ராமா... எல்லாமுந்தான்.

மிகச் சிறிய எந்த ஒன்றும் போதுமானதாய் இருக்கும். யாரோ ஒருவர் உங்களை அவமதிக்கிறார், கோபம் வருகிறது. உங்களுக்குள் இருக்கிற மிருகம் பழி வாங்கத் தயாராகி விடுகிறது. நீங்கள் சீற்றமடைகிறீர்கள். உண்மையில், மதப்பற்று கொண்டவர்கள் மற்றவர்களைவிட அதிகக் கோபமுடையவர்களாயிருக்கிறார்கள். காரணம், மற்றவர்கள் (அவர்களைப் போல்) அடக்க முயற்சிப்பதில்லை. மதப்பற்றுடையவர்களின் கனவுகளைக் கண்காணிக்க வேண்டும். பகலில் அவர்கள் தொடர்ந்து அடக்கி வைக்கிற வேலையைச் செய்து கொண்டிருப்பார்கள். ஆனால், இரவில் தூங்கும் போது?

எழுபது வயதிலும் தனக்கு பால் சார்ந்த கனவுகள் இருந்ததாக மகாத்மா காந்தி குறிப்பிட்டிருக்கிறார். எழுபது வயதில் இச்சை மிக்கக் கனவுகள் ஏன்? அவர் சொல்கிறார், 'நான் கட்டுப்பாடாக இருக்கும் நாளில் பகல் முழுக்க ஒரேயொரு காம சிந்தனைகூட என்னுள் எழுவதில்லை. ஆனால், இரவில் என்னுடைய ஒழுங்குணர்வு, கட்டுப்பாடு எல்லாம் மறைந்து விடுகின்றன, நான் ஏதும் செய்ய முடிவதில்லை' என்று.

ஒரு மனிதனைப் பற்றித் தெரிய வேண்டும் என்றால், அவனுடைய கனவுகளைத் தெரிந்து கொள்ளுங்கள். (அவனுடைய விழித்திருக்கும் நிலைகள் பற்றி அவசியமில்லை) என்கிறார் சிக்மண்ட் ஃப்ராய்டு. அவனுடைய விழிப்பு நிலை வாழ்க்கை பொய்யானது. அவனுடைய நிஜவாழ்க்கை கனவுகளில் தன்னைப் பற்றி உறுதியாய் கூறும். காரணம் கனவுகள் இயல்பானவை. அடக்கி வைக்கப்படுவதில்லை. எவ்வித கட்டுப்பாடும் இல்லாதவை. அதனால்தான், உளப்பகுப்பாய்வு செய்பவர்கள் உங்களுடைய விழித்திருக்கும் நிலைகள் குறித்து அலட்சிக் கொள்வதில்லை. அது பொய்யானது என்பதால் உளப்பகுப்பாய்வு செய்வர்கள் அதை நம்புவதில்லை. இந்த முக்கியக் கருத்தை நீங்கள் புரிந்து கொள்ள வேண்டும். அது கொஞ்சமும் தகுதியில்லாதது (worthless). உளப்பகுப்பாய்வு உங்கள் கனவுகளில் ஊடுருவிப் பார்க்கிறது, காரணம், உங்களுடைய விழிப்பு நிலை வாழ்க்கையை விட கனவுகள் மிகச் சரியாக இருப்பதால்தான்.

நாம் உண்மையெனக் கருதிக் கொண்டிருக்கும் விழிப்பு நிலை வாழ்க்கையை உளப்பகுப்பாய்வு உண்மையாய் கருத வில்லை என்பது கொஞ்சம் எதிரிடையான பொருளைக் கொடுப்பதாய் தெரியலாம் (ironical). உங்கள் கனவுகள் மிகவும் உண்மையானவை என்றதற்குக் காரணம், அவற்றைச் சிதைப்பதற்கு அங்கே நீங்கள் இருக்கவில்லை என்பது தான். உணர்வு மனம் உறங்கும் போது உங்களுடைய தன்னுணர்வற்ற தன்மை தடையின்றிச் செயல்படும். தன்னுணர்வற்ற தன்மையே உங்களுடைய உண்மையான மனம். உங்களுடைய ஒட்டு மொத்த மனதில் உணர்வு நிலை பத்து சதவீதம் மட்டுமே, தன்னுணர்வற்ற தன்மை (unconscious) தான் தொண்ணூறு சதவீதமும்.

உங்களுடைய காமத்துக்கும், கோபத்துக்கும், பேராசைக்கும் எதிராய் போரிடுகிறபோது நீங்கள் என்ன செய்வீர்கள்? அவற்றை தன்னுணர்வின்மை என்கிற அடித்தள இருட்டில் தூக்கியெறிந்து விடுவீர்கள். அவற்றைக் காணாமல் இருப்பதன் மூலம் அவற்றிடம் இருந்து விடுபட்டு விடலாம் என்பது உங்கள் நினைப்பு. நீங்கள் அவற்றிடம் இருந்து விடுபடுவதில்லை. மகாத்மா காந்தியால் முடியாது போனது. மொரார்ஜி தேசாய் போன்ற குட்டி மகாத்மாக்களுக்குச் சாத்தியமாகி விடுமா என்ன?

மகாத்மா காந்தி போன்ற ஒருவர் தொடர்ந்து பால் சார்ந்த கனவுகளைக் காண்கிறார். அவருடைய விழித்திருக்கும் வாழ்க்கையில் அவர் மேற் கொண்ட முயற்சிகள் அத்தனையும் வீண் என்பதையே அது காட்டுகிறது. தம்முடைய ஒழுக்கக் கட்டுப்பாடுகள் பயனளிக்கவில்லை என்பதைத் தமது அந்திமக் காலத்தில் அவர் உணர்ந்திருப்பார். தாம் இறப்பதற்கு முன்,இரண்டு வருட காலம் தாந்த்ரீகவியலை அவர் பரிசோதனை செய்து கொண்டிருந்தார். 'அத்தகைய சோதனைகளைத் தயவு பண்ணிக் கைவிடுங்கள்' என்று அவருடைய சீடர்கள் அவரைக் கேட்டுக் கொண்டனர்.

மொரார்ஜி தேசாய் கூட 'அத்தகைய பரிசோதனைகள் வேண்டாம்' என்று காந்தியிடம் கேட்டுக் கொண்டதுண்டு. ஏன்? அவருடைய மதிப்பு குறித்தும், தங்களுடைய மதிப்பு குறித்தும் அவர்கள் அச்சப்பட்டனர். ஆனால், அவரோ துணிச்சல் உள்ளவர். அவரிடம் தவறுகள் இருந்திருந்தாலும் அவர் உண்மையும் நேர்மையும் உடையவர். தமது (மரபு வழி) ஒழுக்க முறை குறித்த முயற்சி தோற்றத்தை ஒப்புக் கொள்ளும் துணிவு அவரிடம் இருந்தது.

தம்முடைய தாந்த்ரீகப் பயிற்சி மூலம் ஓர் உண்மையை அவர் கண்டறிந்தார். 'பால் சார்ந்த சக்தி அடக்கி வைக்க வேண்டிய அவசியமில்லை, அதை மடைமாற்றம் செய்தால் போதும்' என்கிற உண்மை!

காந்தி இன்னும் பத்து ஆண்டுகள் கூடுதலாக வாழ்ந்திருந்தால், தம்மை காந்தியவாதி என்று சொல்லிக் கொள்கிறவர்கள் எல்லாம் அவரைவிட்டுப் போயிருப்பார்கள். இவர் இரண்டு வருட காலம் தாந்த்ரீகப் பயிற்சியை மேற்கொண்டிருந்த போதே பலரும் அவரை விட்டு விலகினர். அவர் இன்னும் பத்து வருடங்களுக்கு உயிரோடு இருந்திருந்தால் மனித குலத்துக்கு அது வரமாக - அருட்பேறாக இருந்திருக்கும்.

சமயப்பற்றுடைய தொண்ணூறு சதவீதம் பேர் தொடர்ந்து அடக்கி வைக்கும் வேலையைச் செய்கிறார்கள். நீங்கள் ஒன்றை அடக்கி வைக்க (repress) முயல்கிற போது, அது உங்களுக்குள் மேலும் ஆழப்பட்டு விடும். உங்களுடைய இருப்புணர்வின் ஒரு

பகுதியாகவே அது மாறக் கூடும். அதைப் பற்றி நீங்கள் உணராத வகையில், அத்தனை நுட்பமாக அது உங்களைப் பாதிக்கத் தொடங்கி விடும். அதன் வழிகள் மறைமுகமானவை. அது நேரடியாக வரமுடியாது. அது நேராக வந்தால் நீங்கள் அதை அடக்கி வைக்கப் பார்ப்பீர்கள். அதனால் அது நுண்ணிய வழி களை, மறைமுக வழிகளை, ஏமாற்று வழிகளை மேற்கொள்கிறது. அது பால் சார்ந்த இச்சை என்பதை நீங்கள் கண்டு கொள்ள முடியாதபடிக்கு, பல முகமூடிகளை அது பயன்படுத்தும்.

அன்பு, பிரார்த்தனை வழிபாடு, மதச் சடங்கு என்று பல முகமூடிகளை அத கைவசம் வைத்திருக்கும்.

நீங்கள் எப்போதைக்குமாய் ஒன்றைப் புரிந்து கொள்வது நல்லது. எந்த ஒரு சக்தியையும் நாம் அடக்கி ஒடுக்க முடியாது. ஒரு சக்தியை வேறொன்றாக மாற்றலாம், ஆனால் ஒருபோதும் அடக்கி வைப்பதற்கில்லை. உண்மையான மதம் ரசவாசதத்தை (alchemy) மாற்றும் உத்திகளை, செய்முறைகளைக் கொண்டதா யிருக்கும். உண்மையான மதம் மிருகத்தை புனிதப்படுத்து (தூய்மை) முயலுமேயன்றி, அடக்கி வைக்கப் பார்க்காது. மிருக நிலையில் இருந்து கடவுள் நிலைக்கு மனதைக் கொண்டு செல்வதே அதன் செய்முறை. அந்த மிருக உணர்வைப் பயன்படுத்தி, மிருகத்தின் மீதே சாவரி செய்து மனிதனை கடவுள் நிலைக்குக் கொண்டு செல்லும்.

காமத்தை - உடலுறவை பிரபஞ்ச இருப்பின் (existence) வாசலுக்குக் கொண்டு செல்கிற வாகனமாய் நீங்கள் பயன்படுத்திக் கொள்ள முடியும். அதை நீங்கள் அடக்க முயன்றால் அது உங்களைச் சிக்க வைத்து விடும். இது ஒரு நவீன அணுகுமுறை. சிக்மண்ட் ஃபிராய்டு எதைக் கண்டு பிடித்தாரோ அது கண்டு பிடிப்பல்ல என்பதை கபீரின் சூத்ரங்கள் உங்களுக்குத் தெரிவிக்கும். மேற்கத்தியர்களுக்குத் தான் அது கண்டு பிடிப்பு. கிழக்கைப் பொறுத்தவரை அது பழைமையான தொரு உண்மை. நமது மகான்கள் அதை அறிந்தேயிருக்கிறார்கள்.

இந்தச் சூத்ரங்கள் வெகு நேர்தியானவை, அறிவியல் சார்ந்தவை. ஒவ்வொரு சூத்ரமும் ஆழ்ந்து சிந்தித்துக் கொள்ளப்பட வேண்டியவை -

**'நண்பனே, இந்த உலகிற்காக நான் என்ன செய்ய முடியும்? இங்கே பொருந்தியிருந்து, பஞ்சில் நூற்றுக் கொண்டிருப்ப தன்றி'**

மூலத்தில் (original) இப்படி இருக்கிறது.

'அவத, மயா தஜி ந ஜெய்'

'அவது' என்கிற சொல்லுக்கு நேர்ச்சியான பொருள் நண்பன். ஆனால் அதற்கு விசேஷ அர்த்தமும் உண்டு. நண்பன் என்பது மட்டுமல்ல. 'அவது' என்கிற சொல்லுக்கு உண்மையான பொருளைத் தரக்கூடிய வார்த்தை ஆங்கிலத்தில் இல்லை, ஆனால் அதை விளக்கக்கூடிய ஒன்று இருக்கும். 'அவது' என்கிற சொல் ஒரு நண்பனை, கூட்டாளியை, உடன் இருப்பவனைக் குறிக்கும். கடவுளை நோக்கிச் செல்லும் பாதையில் – ஒரு சிறப்பு வகை நட்பு. அறிந்திராத, அறியமுடியாத ஒன்றைத் தேடிச் செல்லும் இரண்டு ஆன்ம சாதகர்கள் கொள்கிற நட்பு. 'அவது' – உண்மையைக் கண்டறிய முற்படும் இரண்டு நண்பர்களைக் குறிப்பிடுவது. அது இடர்ப்பாடுகளைத் துணிந்தேற்கிற நட்பு – சாதாரணமானதல்ல. அது விதிமுறைக்கு விலக்கானது. இந்த உலகத்துக்கு உரியதல்ல.

இந்த நட்பே 'சத்சங்கம்' என்றும் குறிப்பிடப்படுவது.

போற்றப்படுகிற ஒருவரைச் சுற்றி ஆன்ம சாதகர்கள் பலரும் கூடி மெய்ப்பொருள் விசாரத்தில் ஈடுபடுவது சத்சங்கம். அறிவொளி யூட்டப்பட்ட ஒரு புத்தா (buddha) வையோ, ஞானம் பெற்ற ஒருவரையோ மையமாய்க் கொண்டு அவர்கள் கூடிப் பேசுவர். 'மையம்' இல்லாமல் கூடுவதில் சிறப்பில்லை. அந்நிலையில் அது ஒரு சாதாரண கூட்டந்தான்.

கிறிஸ்து இல்லையென்றால், கிறிஸ்தவர்கள் வெறும் கூட்டந்தான். கிறிஸ்துவுடன் தான் அது தோழமை (communion) க்குரிய தாகிறது. அதுவே முடிவான குறிகோளாக அமைகிற நட்பு. கிறிஸ்து 'அவது' – எவ்வித உள்நோக்கமும் இல்லாத நட்பு. கிறிஸ்து தமது சீடர்களை 'அவது' என்று அழைக்கக் கூடும். உலகியல் சார்ந்து விளக்க முடியாத தொடர்பே 'அவது' என்கிற நட்பு. இரண்டு ஆன்மாக்கள் ஆழ்ந்த சீர்த்தன்மையில் இருப்பதே அது.

பாதை கடினமாகவும், இடையூறு நிறைந்ததாகவும் ஆபத்தானதாகவும் இருக்கிறது. அதில் தனியே கண்டறிய முற்படுவது கடினமான முயற்சியாகி விடும். கவனம் இல்லாவிடில் இழந்து விடுகிற நிலையும் உண்டு. நண்பர்களுடன் செல்கிற போதும் எல்லாமே எளிதாயிருக்கும். அது குருட்ஜீவ் சொல்லியது போலத்தான்... அவர் *சுஃபிகளின் நாடுகளில் ஒரு சமயம் பயணம் செய்தார். அப்பொழுது சுஃபி குரு ஒருவர் அவருக்கு ஓர் உத்தியை வழங்கினார். குருட்ஜீவின் நண்பர்கள் இருபது பேர் பாலைவனத்தின் உட்பகுதிக்குச் செல்ல வேண்டும், ஆனால் குறைந்த பட்சம் அவர்களில் ஒருவராவது விழிப்புடன் இரக்க வேண்டும் என்பதுதான் அந்த உத்தி. குருட்ஜீவின் குழுவில் அவரைச் சேர்த்து இருபது பேர் இருந்தனர். இருபது பேர் உறங்கலாம் ஆனால் ஒருவர் மட்டும் தொடர்ந் இருபத்தி நான்கு மணி நேரம் விழித்தபடி இருந்தாக வேண்டும். ஒருவர் களைத்துச் சோர்ந்தால், உறங்கிக் கொண்டிருப்பவர்களில், ஒருவரை எழுப்பி விட்டு விடலாம். பிறகு அப்படி எழுப்பி விடப்பட்டவர் விழித்திருக்க வேண்டும். ஆக, எப்படியும்ஒருவர் எப்போதும் விழித்திருந்தாக வேண்டும்.

நீங்கள் தனித்திருந்தால் கொஞ்ச நேரமாவது தூக்கி விடுவீர்கள். ஆனால் நண்பர்களுடன் பயணிக்கிற பொழுது யாராவது ஒருவர் விழித்திருப்பது சாத்தியமே. பாலைவனத்தில் அல்லது காட்டில் இருக்கிறபோது ஒருவர் கண்டிப்பாக தூங்காமல் இருந்தாக வேண்டும்.

இறை நம்பிக்கைக் காண பயணத்தில் உங்களுடன் ஒரு சில நண்பர்கள் உடனிருப்பது நல்லது. காரணம் ஒருவராவது விழித்திருக்கக் கூடும். விழித்திருப்பவர் மற்றவர்களுக்குப் பாதுகாப்பாக இருப்பார். விழித்திருப்பவர், உங்களை அறிந்த பாதையில் இருந்து விலகாதிருக்கும்படி (நெறி தவறாமல்) பார்த்துக் கொள்வார். உங்கள் ஆற்றல்களை ஒருங்கிணைப்பவராகவும் அவர் இருப்பார்.

இருபத்தி நான்கு மணி நேரம் விழிப்புடன் இருக்கும் ஒருவரை உங்களால் காண முடிந்தால் – ஒரு புத்தாவாக இருப்பதை அது

---

*** சுஃபி (Sufi) - மறை மெய்ஞ்ஞான வழி செல்லும் இஸ்லாமிய சமய உட்பிரிவு.**

குறிக்கும் - அப்போது இயல்பாகவே கூடிப் பேசுவதற்கு ஒரு கூட்டம் அவரைச் சூழ்ந்து கொள்ளும். அவருடைய தெளிவு, புரிதலும் கொஞ்சம் கொஞ்சமாய் அவர்களுடைய இருப்புணர்வில் ஊடுருவிப் பரவும்.

கபீர் பொதுமக்களிடையே உரை நிகழ்த்திக் கொண்டிருக்க வில்லை ஒரு சில நண்பர்களிடம் பேசுவதன் மூலம் தமது கருத்தை வெளியிடுவார்.

இந்த மனத்தை விடுவது கடினம். காரணம், யாரால் அதைக் கைவிட முடியும். அப்படி விட வேண்டும் என்கிற எண்ணம் கூட மனதின் ஒரு பகுதிதானே. மனத்தை விடுவது கடினம், காரணம் நீங்கள் அதை விட்டாலும், விடச் செய்த ஒன்று - பிறகு உங்கள் மனமாகி விடும். அது ஒரு வட்டம், தவறான வழிகளில் செயல்படுவது. அதில் இரந்து எப்படி வெளியே வருவது?

இந்த மனம் இல்லாத ஒன்றை இருப்பதாய் எண்ண வைக்கும் ஏமாற்று. அதனால் அதை 'மாயை' என்றார் அவர். உண்மையில் அது ஒரு பொருளல்ல, அங்கே அது இருக்கவில்லை. ஆனால் இன்னமும் இரவும் பகலும் விடாமல் அது தொடர்ந்து கொண் டிருக்கிறது. உங்கள் மனதில் எண்ணங்கள், கனவுகள், ஆசைகள், கற்பனை, நினைவு... என்று போக்குவரத்த இருந்து கொண்டே யிருக்கும். நீங்கள் விழித்துக் கொண்டிருக்கும் போது அத்தனை கனவுகளும், ஆசைகளும், எண்ணங்களும் மறைந்து விடுகின்றன. ஆனால் இந்த மனதை எப்படி விட்டு விடுவது? யார் அதை விடுவது? நீங்கள் அதை விடுவதற்கு முயன்றால், நீங்கள் மனமாகிறீர்கள்.

நீங்கள் இமய மலை குகைகளுக்கு இங்கிருந்து நழுவி யோடலாம். ஆனால் மனம் உங்களோடு உடன் இருக்கும். காரணம், உண்மையில் அந்த மனந்தான் இமயத்துக்குச் செல்வது; இமயத்தின் குகைகளுக்குப் போய்ச் சேருவது - வேறுயார்? நீங்கள் குடும்பத்தைத் துறக்கக் கூடும். ஆனால், யார் துறப்பது? நீங்கள் அறிவைத் துணை கொள்வீர்கள். ஆனால் அந்த அறிவாக இருப்பது அதே மனமல்லவா. நீங்கள் மதியிழந்தவர். அதைப் புரிந்து கொள்ள வேண்டும். உங்கள் பங்காக நீங்கள் எதையும் செய்ய வேண்டியதில்லை. காரணம், எதைச் செய்தாலும் அது

மனதின் செயலாகவே இருக்கும். செய்வது மனதின் வேலை. ஆக, மனதை விடுவதற்காக எதையும் செய்ய முடியாது. எனவேதான் கபீர் சொல்கிறார்:

நண்பர்களே! மனதையும் அதன் மாயைகளையும் (தவறான எண்ணங்கள்) விடுவது மிகவும் கடினம். முதலில், அவை தங்களுக்குள் பொருளாக எதையும் பொதிந்திருக்கவில்லை. அவை பொருளாக இருந்தால் அவற்றை எளிதாய் விட முடியும். உங்கள் வீட்டை நீங்க விட முடியும், உங்கள் மனைவியை உங்களால் துறக்க முடியும், உங்கள் குழந்தைகளையும் கூட. இந்த உலகை விட்ட நீங்கள் போய் விட முடியும். அதுவெல்லாம் கணிசமாய் பொருள் பொதிந்திருக்கும் (திடத்தன்மை உடையது) ஆனால் உங்கள் மனதை எப்படி விட முடியும்? அது உங்களுடன் இருப்பது.

பயாஸித் என்கிற சூஃபி மகான் தம்முடைய குருவைக் காணச் சென்றிருந்தார். தம் குடும்பத்தை நண்பர்களைத் துறந்த நிலையில் அவர் குருவிடம் சென்றார். சிதிலமடைந்த பழைய மசூதி ஒன்றில் குரு வசித்து வந்தார். பயாஸித் அங்கே நுழைந்ததும், 'எல்லா வற்றையும் துறந்தவனாய் நான் தங்களிடம் வந்திருக்கிறேன் - தயவு செய்து என்னை ஏற்றுக் கொள்ளுங்கள்' என்றார்.

குருவானவர் பயாஸித்தை நோக்கினார், சுற்றிவரப் பார்த்தார். 'ஆனால், இப்படியொரு கூட்டத்தோடு வந்திருக்கிறாயே?' என்று கேட்டார்.

பயாஸித்திற்கு ஒரே திகைப்பு. அவர் திரும்பிப் பார்த்தார். அவருக்குப் பின்னால் யாரும் இருந்திருக்கவில்லை. என்ன இவருக்குப் பைத்தியமா? 'தாங்கள் எந்தக் கூட்டத்தைப் பற்றிக் கேட்கிறீர்கள்?' என்றார்.

குரு சொன்னார், "திரும்பிப் பார்க்காதே - உள்நோக்கிப்பார். நீ விட்டு வந்த மனிதர்களெல்லாம் அங்கே இருக்கிறார்கள்.' என்று.

பயாஸித் கண்களை மூடி யோசித்தார். குரு சரியாகவே சொல்லியிருக்கிறார். அவருக் கொன்றும் கிறுக்கு பிடித்து விட வில்லை. மனைவி இன்னமும் அழுது புலம்பிக் கொண்டிருந்தாள், 'அப்பா, போகாதீங்க' என்று குழந்தைகள் சொல்லிக்

கொண்டிருந்தனர். வழி நெடுகவும் நண்பர்கள் அவருடைய கைகளைப் பார்த்துக் கொண்டனர். அவர் எல்லாரிடமும் விடை பெற்றுப் புறப்பட்டபோது, அவர்கள் அவரோடு முடிந்த அளவு தொடர்ந்து வந்தனர், 'தயவு செய்து திரும்பிப் போங்கள். நான் தீர்மானித்தாயிற்று. என்னுடைய தீர்மானம் முழுமையானது' என்று அவர் திரும்பத் திரும்பச் சொல்லி அவர்களை இணங்க வைத்தார்.

குரு சொன்னார், 'பயாஸித், உலகத்தைத் துறப்பது எளிதான காரியந்தான். ஆனால், உன் மனதை நீ எப்படித் துறக்க முடியும்? காரணம், மனம் தானே உண்மையான உலகம். அவர்கள் எல்லாரும் அங்கே இருக்கிறார்கள். கொஞ்சம் உட்கார்ந்து சிந்தனை செய். உன்னுடைய மனைவியின் நினைப்பு வரும். அவளுடன் எப்போதும் நீ இருந்து கொண்டிருந்த போது அவளைப் பற்றிய நினைவு வந்திருக்காது - மனம் அப்படித்தான் செயல்படுகிறது. உனது மனைவியிடமும், உன் குழந்தைகளிடமும் உனக்கிருந்த அக்கறை அதிகரிக்கும். அவர்களுடனான தொடர்பு அப்படியே இருக்கும். மேலும் மேலும் நினைவுகள் வந்தபடி இருக்கும். 'என் மனைவி எப்படி இருக்கிறாளோ? என் குழந்தை களுக்கு என்னவாகுமோ? என் மனைவி எனக்குத் துரோகம் செய்து விட்டு, யாருடனாவது சென்று விட்டிருப்பாளோ, அப்படி செய்யக் கூடியவளா அவள்? பொறாமை, உடைமைத்தனம் இப்படிப் பலதும் மேலெழுந்தபடி இருக்கும்' என்று.

சமணர்களின் புனித நூலில் இருந்து ஓர் அருமையான கதை.

புகழ்பெற்ற பிம்பிசார மன்னன் சமண மதத்தின் கடைசி தீர்த்தங்கரரும் - தீர்க்கதரிசியுமான மகாவீரரைக் காணச் சென்றான். வழியில், தனது பழைய நண்பனொருவன் அவன் கண்டான். அவர்கள் ஒரே குருகுலத்தில் ஒன்றாகத் தங்கிப் படித்தவர்கள். அவனும் ஓர் அரசகுமாரன்தான். ஆனால், அவன் உலகைத் துறந்து ஒரு சமணத் துறவியாகி விட்டிருந்தான். ஒரு மரத்தடியில் அவர் (ன்) நிர்வாணமாக நின்றிருந்தார்.

பிம்பிசாரனுக்கு அவரிடமிருந்த மதிப்பு அவனை அழுத்தி, தன்னைப் பற்றி குற்ற உணர்வு கொள்ளச் செய்தது: 'நான் இன்னமும் உலகத் தொடர்புகளை விட்டபாடில்லை. பணம், மதிப்பு, அதிகாரம், போர் இவற்றில் அக்கறை கொண்டவனாய்

இருக்கிறேன்... அவரும் ஓர் அரசனாக இருந்தவர்தான், அரச னாகவே அவர் இருந்திருக்க முடியும். ஆனால் அரசைத் துறக்கிற துணிவு அவருக்கிருந்தது.' அவன் தனது பழைய நண்பனின் பாதங்களைத் தொட்டு வணங்கினான். பிறகு, மகாவீரரைக் காணச் சென்றான்.

மகாவீரர் சில *கெஜ தூரத்தில்தானிருந்தார். ஒரு மரத்தடியில் அமர்ந்திருந்த அவரிடம் பிம்பிசாரன் கேட்டான், 'ஐயனே, என் மனதில் ஒரு கேள்வி எழுந்தது. தற்போது துறவியாக உள்ள எனது பழைய நண்பர் தங்கள் சீடர், பிரச்சின்ன சந்திரரைப் பார்த்ததும் 'அவர் இப்போது இறந்தால் எங்கே பிறப்பார்?' என்கிற கேள்வி எழுந்தது.'

சமணர்கள் ஏழு நரகங்கள், ஏழு சொர்க்கங்கள் இருப்பதாய் கூறுவர். 'அப்படியானால் எந்தச் சொர்க்கத்தில் அவர் பிறப்பார்?' என்று கேட்டான் பிம்பிசாரன். நரகத்தில் பிறப்பது பற்றிய கேள்விக்கே இடமில்லை. ஒரு பெரிய அரசையே துறந்து விட்டவர் அவர். எந்தச் சொர்க்கத்தில் பிறப்பார்?'

மகாவீரர் சொன்னார், 'நீ அவருடைய பாதத்தைத் தொட்ட கணத்தில் அவர் இறந்திருந்தால் ஏழாவது நரகத்திற்கு சென்றிருப்பார்' என்று.

பிம்பிசாரர் அதிர்ச்சியுள்ளார். 'என்னது. ஏழாவது நரகமா? அப்படியானால் எனக்கு. ஏழாவது நரகத்துக்கும் கீழாய் இன்னொரு நரகம் இருப்பதற்கில்லையே. எல்லாவற்றையும் துறந்து, சிறந்த பக்திமானாகவும், அமைதியும் சாந்தமும் நிரம்பியவராகக் காணப்படுகிற எனது நண்பரே ஏழாவது நரகத்தில் பிறக்க நேரிடுமாமோ!'

மகாவீரர் சொன்னார், 'கவலைப்படாதே. அவர் தற்போது இறந்தால் ஏழாவது சொர்க்கத்தில் பிறப்பார்,' என்று சில நிமிடங்கள் கடந்தன.

பிம்பிசாரன் கேட்டான், 'ஐயனே, தாங்கள் என்னைக் குழப்பத்திலாழ்த்துகிறீர்கள். அந்தச் சில நிமிட அவகாசத்தில்,

---

* **கெஜம் (yard) - பழைய நீட்டலளவு. முப்பத்தியாறு அங்குலம் அல்லது மூன்றடி கொண்ட நீளம்.**

அவர் ஏழாவது சொர்க்கத்தில் பிறக்கும்படியாய என்ன நடந்தது? என்று.

மகாவீரர் சொன்னார், 'முழுக்கதையும் உனக்குத் தெரியாது. உனக்குச் சற்று முன்பாகத்தான் உனது பிரதான அமைச்சர் இந்த வழியே சென்றார். உனது பாதுகாப்பை முன்னிட்டு, எல்லாம் சரியாக இருக்கிறதா என்று பார்க்க வந்திருந்தார் அவர். சில நிமிடங்களுக்கு முன் பிரதான அமைச்சரும், உனது படைத்தலை வர்களும் இவ்வழியே சென்றனர். அப்போது, உன்னுடைய பிரதான அமைச்சர் சொன்னார், 'பிரசன்னா சந்திரன் என்கிற இந்த முட்டாளைப் பாருங்கள். பெரிய அரசனாக இருந்திருக்க வேண்டியவரை, இந்த மகாவீரர் வசியம் பண்ணிவிட்டார். சுட்டெரிக்கும் வெய்யலில் இப்படி நிர்வாணமாக மரத்தடியில் நிற்கிற கதி, வாழ்க்கையே வீண். அவர் ஒரு காலத்தில் அழகான மனிதனாக இருந்தார். தற்போது அவருடைய உடம்பைக் கவனியுங்கள். இந்த வடிகட்டின முட்டாள் தமது ராஜ்யத்தை தம்முடைய பிரதான அமைச்சரை நம்பி ஒப்படைத்து விட்டார். தமது பிள்ளைகள் வளர்ந்து ஆளானதும், அமைச்சர் ராஜ்யத்தைத் திருப்பிக் கொடுப்பார் என்று இவர் நம்பியிருக்கிறார். அந்தப் பிரதான அமைச்சரோ ஓர் ஏமாற்றுக்காரன், வஞ்சகன். அரசனின் குழந்தைகள் ஆட்சிக்கு வரும் போது கருவூலத்தில் எதுவுமே இருக்காது' என்று.

அதைக் கேட்டதும் தான் ஒரு துறவியாகி விட்டிருப்பதையே பிரசன்னா சந்திரன் மறந்து போனார். அவர் அதிர்ச்சியும் கோபமும் கொண்டவராய் தனக்குள் இப்படிச் சொல்லிக் கொண்டார்: 'நான் இன்னமும் உயிரோடிருக்கிறேன்' என்று. அவருடைய கை பழக்கத்தின் காரணமாய் வாளைத் தேடியது. இல்லாத உறையில் இருந்து இல்லாத வாளை உருவியவர் 'இந்த மனிதனை நான் உடனே கொல்லப் போகிறேன்' என்றார். தன்னுடைய கற்பனையில் பிரதான அமைச்சரின் தலையைத் துண்டித்தார்.

மகாவீரர் சொன்னார், 'நான் அவருடைய பாதத்தைத் தொட்டு வணங்கும்போது தான் அவர் பிரதான அமைச்சரைக் கொன்றது. எனவேதான், அந்தக் கணத்தில் அவர் இறந்திருந்தார், ஏழாவது

நரகத்துக்குச் சென்றிருப்பார் என்று நான் கூறியது. அவர் கொலை வெறியோடு இருந்தார். தற்போது கருத்தும் செயலும் மாறி விட்டன. தன்னுடைய கத்தியைத் திருப்பவும் உறையிலிடும் போது உண்மை நிலைமையை அவர் கண்டு கொண்டார். 'நான் செய்கிற காரியம் என்ன? எங்கே கத்தி, எங்கே கத்தியின் உறை? 'கற்பனையில் என் பிரதான அமைச்சரைக் கொன்று விட்டேனா? உண்மையிலேயே ஒருவரைக் கொன்று விட்டது போலல்லவா அது'.

மகாவீரர் சொல்கிறார், 'நீ கொன்றாலும் கொல்வதாய் எண்ணமிட்டாலும் அதில் பெரிதாய் வித்தியாசமில்லை. உளம் சார்ந்த வகையில் அவை ஒரே மாதிரிதான். நான் துறந்தேன் என்கிற போது சகலத்தையும் துறந்திருக்க வேண்டும். தற்போது அதில் குறுக்கிட நான் யார்? அவன் துரோகம் செய்திருந்தால் அது அவனுடைய காரியம். அவன் நம்பிக்கை மோசம் செய்திருந்தால் அதற்கான துன்பம் அவனுக்கு நேர்ந் விட்டுப் போகிறது. ஆனால் அவனைத் தண்டிக்க நான் யார். அதிலெல்லாம் நான் எதற்காகச் சம்பந்தப்படுவது? யார் என்னுடைய குழந்தைகள், எது என்னுடைய நாடு?'

மிகப் பெரிய புரிதல் ஏற்பட்டது அவருக்கு. அவர் அமைதியும் சாந்தமும் கொண்டவராய் துறவியின் மனநிலைக்குத் திரும்பினார். ஏழாவ சொர்க்கத்தில் பிறப்பதற்கான ஓர் அழகிய சுழல் அப்போது ஏற்பட்டது.

மனம் பற்றிய பிரச்னை, உலகத்தினுடையதல்ல.. நீங்கள் இமயலைக் குகைகளுக்குச் சென்று வாசம் பண்ண முடியும். ஆனால் அப்போது உங்களுடைய சிந்தனை எப்படி இருக்கும்? அப்போதும் உலகத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பீர்கள்.

அதனால்தான் கபீர் சொல்கிறார்:

'அவது மாயா தஜி ந ஜெய்' என்று.

மனதை விட்டொழிப்பது கடினம்.

'நண்பரே, இந்த உலகில் நான் என்ன செய்யட்டும்?'

**மன உலகில். 'இங்கே பொருந்தியிருந்து பஞ்சில் நூல் நூற்றுக் கொண்டிருப்பதன்று. நான் தைத்த உடைகளைத்**

**துறந்து தளர்த்தியான அங்கி உடுத்தியிருக்கிறேன் ஆனால், ஒரு நாள் கண்டேன் அது நேர்த்தியாக நெய்யப் பட்டிருப்பதை..'**

அவர் சொல்கிறார்:

நான் நேர்த்தியான உடைகளை விட்டு, அங்கி அணிந்தேன். ஆனால் ஒருநாள் அந்த உடை (அங்கி) யும் நேர்த்தியானது என்பதைக் கண்டு கொண்டேன். மனதின் தந்திரம் அது. நான் இன்னமும் என் உடைகளில் அக்கறை கொண்டவனாயிருக்கிறேனே. இப்போதும் தோற்றப் பொலிவுடன் இருக்க விரும்புகிறேனே. ஒரு குறிப்பிடத்தக்க மனிதனாகக் காட்சி தருகிற விருப்பம் இன்னமும் என்னுள் இருக்கத்தானே செய்கிறது. இது என்னுடைய மனம் செய்கிற தந்திரமல்லவா! நான் அப்படியேதான் இருக்கிறேன்.

நான் எந்த உடையை அணிந்தாலும் மனம் இருந்தபடிதானே இருந்து கொண்டிருக்கிறது. தன் வெளிப்பாட்டில் எவ்வித மாற்றமுமில்லாமல். திரை ஒன்றும் பெரிய வித்தியாசத்தை உண்டு பண்ணி விடாது. படம் அப்படியே தொடர்கிறது மாற்றம் ஏதுமின்றி. நீங்கள் ஒரு சுவற்றைக் கூட திரையாக்கிக் கொண்டு அதே படத்தைக் காட்ட முடியும். முழுமையான திரை இருந்தாக வேண்டும் என்பதில்லை. சுவற்றில் விடும்படி செய்தாலும் அதே படந்தான். சுவர் கரடு முரடாக இருக்கலாம், ஓர் ஏழையின் வீட்டுச் சுவராக இருக்கலாம். ஆனால், அத வேறுபாட்டை ஏற்படுத்தாது - அதே படந்தான். கபீர் சொல்கிறார்:

மனம் இன்னமும் அதே வழியில்தான் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அதை நான் அறிய முடிகிறது. மக்கள் என்னைக் கண்டு கொள்ள வேண்டும், நான் சாதாரண ஆளல்ல என்பதை அவர்கள் புரிந்து கொள்ளட்டும் என்கிற நோக்கத்தில் நான் நடந்து கொள்கிறேன். என்னுடைய உடைகளை நேர்த்தியான முறையில் அணிகிறேன். மக்கள் எதற்காக நேர்த்தியான உடை அணிவது? தங்களைத் தனிச்சிறப்புடையவராய் காட்டிக் கொள்கிற முயற்சி. நான் ஓர் அங்கியை அணிந்து கொண்டிருந்தாலும், அடியாழத்தில் அதே விருப்பம் தொடர்கிறது.

நான் வீட்டைத் துறந்து, ஒரு சிறிய பையுடன் குகைக்குச் சென்று விட்டாலும், அந்தக் குகையும் எனது வீடாகி

விட்டிருப்பதை ஒரு நாள் நான் புரிந்து கொள்வேன். என்னிடமிருப்பது சிறிய உடைமைதான். ஆனால் என்னுடைய உடைமைத்தனம் தொடர அது வகை செய்திருக்கிறது. எனது உடைமைத்தனம் (Possessiveness) அப்படியே தானிருக்கிறது. தற்போது யாராவது என்னுடைய குகைக்குள் நுழைந்தால் ‘போ வெளியே. இது என்னுடைய குகை’ என்று நான் சொல்வேன்.

நீங்கள் இதனை உங்களுடைய அனுபவத்திலேயே அறிய முடியும். இமயமலைக்குப் போங்கள், ஏதாவது ஒரு குகையில் நுழைந்து பாருங்கள். அங்கே யோகம் பண்ணிக் கொண் டிருக்கிறவர் சொல்வார்: ‘வெளியில் போய் விடு. இங்கே உனக்கென்ன வேலை? இது என்னுடைய குகை. நான் முப்பது வருஷமாக இங்கே இருந்து கொண்டிருக்கிறேன். நீ குகையில் வசிக்க விரும்பினால், உனக்கென்று ஒரு குகையைத் தேடிக் கொள்’ என்று.

இதில் வேறுபாடு எதுவும் இருக்கிறதா? ‘என்வீடு’ அல்லது ‘எனது குகை’. ‘நான் .... எனது’ இதுதான் பிரச்னை. எனவேதான் கபீர் சொல்கிறார்: ‘நான் வீட்டை விட்டு ஒரு சிறிய பையுடன் குகைக்குச் சென்றேன், ஆனால் இரண்டும் ஒரே மாதிரி தான். அப்படியே நானும் (நான்மாறவில்லை). எனவே நான் குகையையும், என்னிடமிருந்து சிறு உடைமையையும் துறந்து, நாடோடியானேன். ஆனால், எதுவும் மாறிவிடவில்லை. நான் எவ்வித நோக்கமும் இல்லாமல் ஒரு நாடோடி போல் இருப்பதில் பெருமிதப்படுகிறேன். நான் ஒன்றும் குகையில் பத்திரத் தன்மையோடு இருந்து கொண்டிருக்கிற சாதாரண துறவியல்லவே. நான் பாதுகாப்பைப் பற்றிக் கவலைப்படாமல் வாழ்கிறேன் என்பதைக் கவனித்தீர்களா? இப்படித்தான் ஒருவர் வாழ வேண்டும். நான் பத்திரத் தன்மையையோ, பாதுகாப்பையோ கருதாத நாடோடி. இப்படித் திரிந்தலைவது என் அகந்தைக்கு ஆதாரமாகி விடுகிறது.

தற்போது நான் ஒரு நாடோடி, ஆனால், அது குறித்த பெருமிதம் இருக்கிறது எனக்குள்.

> **‘ஒரு கரடு முரடான துணியை வாங்கினேன் ஆனால், அதை மிடு’க்காகத் தோளில் போட்டபடி சுற்றிக் கொண்டிருக் கிறேன்.’**

அந்த ஆடை (மேலங்கி) நன்றாக நெசவு செய்யப்பட்டது. என்பதற்காகவே, ஒரு முரட்டுக் கித்தானை வாங்கினேன். அதை ஒரு சால்வையாக்கினேன். ஆனால், அதை எனது இடது தோளில் போட்டிருக்கிறேன். அதே மனம்!

நீங்கள் திறந்த மேனியரால் சூரிய ஒளியில் நிற்க முடியும் - அது ஒன்றும் பெரிய விஷயமில்லை. அப்போதும் உங்கள் மனம் மாறாது. மனதை எப்படித் தொலைக்க முடியுமாம்? அது புழக்கடைப் பக்கமாய் வருகிறது. திரும்பவும் உங்களுக்குள் பிரவேசிக்க புதிய வழிகளை அது கண்டு பிடித்து விடுகிறது.

**'எனது காம இச்சைகளை நான் தடுத்துப் பார்த்தேன், தற்போது அது கோபமாகி என்னுள் வெடிப்பதைக் கண்டேன்'**

இதனைப் புரிந்து கொள்வது முக்கியம். மனதையும், அதன் செயல்பாடுகளையும் கபீர் கூர்ந்து கவனிக்கிறார். அதன் நுட்பமான தந்திரம் மிக்க வழிகளை அவர் கண்டு கொள்ளவே செய்கிறார்.

நீங்கள் காமத்தை அடக்கினால் அது கோபமாக மாறிவிடும். காம இச்சையாய் உருவெடுத்த சக்தி கோபமாக மாறிவிடுகிறது. கோபத்தை விட காமமே பரவாயில்லை. காமத்தில் காதல் (அன்பு) இருக்கும் சிறிதளவேனும், கோபத்திலோ வன்முறையன்றி வேறேதுமில்லை. காமத்தை அடக்கினால் மனிதன் வன்முறையில் இறங்கி விடுவான். உணர்ச்சி வேகத்தில் தனக்கெதிராகவோ, மற்றவர்களுக்கெதிராகவோ எதையாவது செய்து வைப்பான். அதில் இரண்டு சாத்தியங்கள் உண்டு. ஒன்று - *சாடிஸ்டாக மாறி மற்றவர்களைத் துன்புறுத்துவது, அல்லது, **மாஸோக்கிஸ்டாக மாறி தன்னைத் தானே துன்புறுத்திக் கொள்வது.

இதுவரை எந்தக் காலத்திலும் போர் வீரர்கள் பாலுறவுக்கு அனுமதிக்கப்பட்டதில்லை என்பது உங்களுக்குத் தெரியுமா? ஏன்? அவர்கள் பாலுறவில் ஈடுபட்டால் தங்கள் கோபத்தை இழந்து விடுவார்கள். அவர்களிடம் கோப உணர்ச்சி போதிய அளவு இருக்காது. அவர்கள் காமத்திற்கு வடிகால் கிடைத்ததும் மென்மையாகி விடுவார்கள். மென்மையான உள்ளம் கொண்டவர்களால் எப்படிப்

---

* **சாடிஸ்ட் (Sadist): பிறருக்கு கொடுமை செய்வதில் இன்பம் காண்பவன்.**

** **மாஸோக்கிஸ்ட் (masochist) : தன்னைத் தானே வதைத்துக் கொண்டு பாலின்பம் பெறுகிறவன்.**

போரி முடியும்? போர் வீரன் காமப்பசி தீராத நிலையில் கடுமையாகப் போரிடுவான்.

சிக்மண்ட் ஃப்ராய்டு வெகு அழகாய்ச் சொன்னார், 'நம்முடைய படைப்பாற்றலின் குறியீடுகளாகவே நமது போர்க் கருவிகள் உள்ளன' என்று. வாள், கத்தி, துப்பாக்கி முனையில் செருகிக் கொள்கிற குத்து வாள் - இவையெல்லாம் ஆண் பெண் உறுப்புகளை அடையாளப்படுத்துவதன்றி வேறென்ன? மற்றொரு உடலினுள் நுழைவதற்கு போர் வீரன் அனுமதிக்கப்படுவதில்லை. அவன் அப்படி நுழைகிற வெறியோட இருப்பான். அந்த வக்கிர ஆசை தற்போது அவனுடைய இருப்புணர்வில் புகுந்து விடும். ஒரு வாள், கத்தி, அல்லது குத்துவாள் மூலாம் மற்றவர் உடம்பில் எப்படியாவது அவன் நுழைய விரும்புவான்.

கால காலமே அடக்கி வைக்கப்பட்ட காமம் அவனுடையது.

இந்த நாட்டில் நடக்கிற ஒன்றை நாம் பார்க்கிறோம் தானே. உலகிலேயே போரிடத் தேவையான அத்தனை சவுகரியங்களையும் அமெரிக்க சிப்பாய் பெற்றிருக்கிறான். அறிவியல் சார்ந்த விதத்திலும் சரி, தொழில் நுட்பங்களிலும் சரி அமெரிக்க போர் வீரர்கள் சிறந்த தயாரிப்புடன் இருப்பவர்கள். ஆனால் மற்ற நாட்டு போர் வீரர்களை அமெரிக்க போர் வீரர்கள் பலவீனமாவர்கள் என்பது பல முறை நிருபணமாகியிருக்கிறது. ஓர் ஏழை நாடான வியட்நாமிடம் பல ஆண்டுகள் போய் செய்து முடிவில் அவர்கள் தோற்கவே செய்தார்கள். காரணம், அமெரிக்க சிப்பாய் பால் சார்ந்த விதத்தில் திருப்தியடைந்தவனாக இருந்ததுதான். வரலாற்றிலேயே அதற்கு முன் எந்தச் சிப்பாயும் அப்படி இருந்ததில்லை. அவனுடைய காம இச்சை தணியாமல் இருந்திருந்தால் அது கடுமையாகப் போரிடக் கூடிய தீவிரத்தை அவனுள் ஏற்படுத்தியிருக்கும். காமம் கோபமாய் மாறி விட்டிருக்க வேண்டும். வியட்நாம் ஒரு சிறிய நாடு, ஏழை நாடு. ஓர் அற்புதத்தை நிகழ்த்தியது. அதில் உள்ள உளவியலை நீங்கள் புரிந்து கொள்ளாவிடினும் அது அற்புதமே. அத்தனை தொழில் நுட்பம், ஆற்றல் எல்லாம் இருந்தும் அமெரிக்க சிப்பாய் ஒன்றும் செய்ய முடியவில்லை.

இது ஒன்றும் புதிதல்ல. மிகப் பழமையான உண்மை! ஒட்டு மொத்த இந்தியாவும் அதை நிரூபித்திருக்கிறது. இந்தியா மிகப் பெரிய நாடு. சீனாவிற்கு அடுத்தபடியாய் உள்ள பெரிய நாடு.

உலகிலேயே இரண்டாவது பெரிய நாடு. அது பலமுறை மிகச் சிறிய நாடுகளால் வெற்றி கொள்ளப்பட்டிருக்கிறது. துருக்கியர்கள், மங்கோலியர்கள், கிரேக்கர்கள் என்று படையெடுத்து வந்த எவருமே இந்நாட்டை எளிதாய் தோற்கடித்திருக்கிறார்கள், வென்றிருக்கிறார்கள். என்ன காரணம்? வெற்றி பெற்றவர் எல்லாருமே பசியில் இருந்த ஏழைகள்.

இந்திய வரலாற்றை நான் பகுப்பாய்வு செய்ததில், கடந்த காலத்திய இந்தியா பால் சார்ந்த வகையில் எந்த அடக்கு முறையையும் மேற் கொண்டிருக்கவில்லை என்பது புரிந்தது. கஜுராஹோ, கொனாரக், புரி முதலிய கோயில்கள் கட்டிக் கொண்டிருந்த காலமது. அப்போது மகாத்மாக்கள் என்று அழைக்கப்படுகிற பலரும் இருந்திருக்கிறார்கள். அதே சமயம் நாட்டில் பெரும் பகுதி காமன் கேளிக்கைகளில் களித்திருந்தது. நேசிக்கிற பண்பும், மென்மையும், கருணையும் நிரம்பியிருந்தது. சண்டையிடுவது இந்தியர்களுக்கு சாத்தியப்படாத ஒன்று. நீங்கள் சண்டையிடுவதாயிருந்தால் சில நாட்களுக்காவது சிற்றின்பத்தில் ஈடுபடாமல் இருந்திருக்க வேண்டும். முகமது அலி போன்ற புகழ் பெற்ற குத்துச் சண்டை வீரர்கள், தங்கள் போட்டியில் பங்கேற்கு முன் சில நாட்களுக்கு பிரம்மச்சர்யத்தைக் கடைபிடிப்பார்கள். அது ஒரு கட்டாயம். நீங்கள் ஒலிம்பிக் போட்டியில் பங்கேற்பவர்களைக் கேட்டுப் பாருங்கள். அவர்கள் பாலுறவு சார்ந்த வகையில் பட்டினியாக இருப்பார்கள். அதன் மூலம் உந்தித் தள்ளி முன் செல்லும் வேகத்தை அவர்கள் பெறுவார்கள். போராடும் திறனை அவ்விதமாய் அவர்கள் மேம்படுத்திக் கொள்ள முடிகிறது. உங்களுக்குள் கொதித்துக் கொண்டிருக்கும் சக்தி, உங்களை வேகமாய் ஓட வைக்கும், நீங்கள் ஆற்றலுடன் தாக்க முற்படுவீர்கள்.

உலகிலுள்ள அத்தனை படைகளும் பால் சார்ந்த திருப்தி பெற்றுவிட்டால் அமைதியும், சமாதானமும் மேலோங்கியிருக்கும். மதவேற்றுமையால் ஏற்படும் கலகங்கள் இல்லாமல் போகும். அன்பு செழித்தால் போர் என்பதே இருக்காது. ஆனால், போரும் நேசமும் ஒன்றாக இணைந்திருப்பதில்லை.

கபீர், மிகச் சரியாகச் சொன்னார்,

> **'எனது காம இச்சைகளை நான் தடுத்துப் பார்த்தேன், தற்போது அது கோபமாய் என்னுள் வெடிக்கக் கண்டேன்' என்று.**

அவர் எதையும் கருத்தூன்றிக் கவனிப்பவர். அதுவே விழிப்புணர்வு என்பது. அவர் தமது காம இச்சையை அடக்கி வைத்து விட்டு, கவனிக்கிறார். 'தற்போது உள்ளே என்ன நடக்கிறது?' என்று, சீக்கிரமே அவருக்குள் கோபமும், சீற்றமும் கொண்டு எவருடன் சண்டையிடத் தோன்றியது.

காமத்தை வேறொன்றாக மடைமாற்றம் செய்ய முடியும். அது ஓர் இயல்பான சக்தி. கோபம் அத்தனை இயல்பானதல்ல. முதலில் அதை (கோபம்) க் காமமாக மாற்றுவது கடினமாய் தெரியும். அதை மாற்றி விட்டால் எதையும் செய்யும் முடியும். இங்கே, அதுதான் என்னுடைய வேலையாக இருக்கிறது. அது காரணமாகவே உலகெங்கிலும் நான் பழித்துப் பேசப்படுகிறேன்.

உங்களுடைய கோபத்தை நான் காமமாக மாற்றுவதற்கு முயற்சிக்கிறேன். முதலில் அதைத்தான் செய்ய வேண்டும். அகநிலை மாற்றத்துக்கு அதுவே வழி. முதலில் உங்களுக்குள் இருக்கும் வக்கிரங்கள் மறைந்து, நீங்கள் இயல்பான மனிதப் பிறவியாகிவிட வேண்டும். அதன் பிறகே கடவுட் தன்மை பெறுவது.

நான், அதனால் தான் மக்களை முதலில் குழுக்களாகவும் பிறகு தாந்த்ரீக வழியிலும் செயல்பட வைக்கிறேன். குழுக்களாக இயங்கும் போது அவர்கள் கோபத்தை வெளிப்படுத்த முடியும். பிறகு, கடுமை தணிந்து, தளர்வு நிலையுற்றதும் தாந்த்ரீகம் போன்ற வழியில் அவர்கள் செயல்படக் கூடும். பால் சார்ந்த சக்தியைக் கொண்டு உள்ளே இரசவாதம் பண்ணச் சொல்கிறேன்.

ஆனால், கேர்பக்காரர்கள் எதையும் உள்ளபடி புரிந்து கொள்ளத் தவறி விடுவார்கள். கோபம் புரிந்து கொள்ளும் திறனுக்கு இடமளிப்பதில்லை. தற்போது நீங்கள் ஓர் அரசியல்வாதியாக விரும்பினால், உங்களுடைய காமத்தைக் கட்டுப்படுத்த வேண்டும். இல்லையேல் உங்களால் போட்டியிட முடியாது. டில்லியில் பதவியைப் பிடிக்க முடியாது. மொரார்ஜி அங்கே போய்ச் சேர முடிந்தது. தற்செயலாக அது நடந்துவிட வில்லை. மனிதர் ஐம்பதாண்டு காலம் முயன்று காமத்தை அடக்கியிருந்தார். அவர் பிரதமர் நாற்காலியைப் பிடிக்க அது உதவியது. பெரிய அளவிலான கோபம், சீற்றம். அடேயப்பா அத்தகைய ஆசாமிகளுடன் போட்டி போடுவது சிரமம். அவர்கள்

வெறிபிடித்த மாதிரி போட்டியில் இறங்கி விடுவார்கள். அவர்கள் பக்கவாட்டில் பார்ப்பதில்லை. அவர்களுடைய பார்வை எப்போதுமே முன்நோக்கியே இருக்கும். எதுபற்றியும் கவலைப்படாமல் முன்னேறுகிறவர்கள் அவர்கள். நியாயமான அல்லது தவறான உபாயங்களை கைக்கொண்டு அவர்கள் உயர் நிலையை அடைகிறார்கள். அரசியல்வாதிகள் தங்களுடைய காம இச்சையை அடக்கி வைத்தால்தான் வெற்றி பெற முடியும். தம்முடைய உடலுறவு நாட்டத்தை வெகுவாய் கட்டுப்படுத்திக் கொண்டவர் ஹிட்லர். அவர் மட்டும் யாராவது ஒரு பெண்ணிடம் ஆழ்ந்த காதல் கொண்டு விட்டிருந்தால் இரண்டாவது உலகப் போரே நடந்திருக்காது. ஆனால் அவரோ அநியாயத்துக்குக் காம இச்சையைக் கட்டுப்படுத்தியிருந்தார்.

ஹிட்லர் ஒரு மகாத்மா, மொரார்ஜியை விடவும். அவர் ஒரு சைவ உணவுக்காரர். ஜெர்மனியில் ஒரு சைவச் சாப்பாட்டுக் காரரைப் பார்ப்பது அரிது. ஆனால், அவர் சாப்பாட்டில் தீவிர சைவம். அவர் புகை பிடிக்க மாட்டார். அவருக்கு மது பிடிக்காது. போதை மருந்துகளை எவ்வகையிலும் பயன்படுத்த மாட்டார். சீக்கிரமே படுத்து, சீக்கிரமே விழித்துக் கொள்வார். யாரையுமே நேசித்திராத ஒருவருக்கு, எப்படி காதல் வரும்? அவர் யாரையும்த நண்பராக்கிக் கொள்ளவில்லை. அவருக்கு யாரிடமும் நெருக்கம் இருந்தது கிடையாது. தம்முடைய காமம் குறித்து அவர் எப்போதுமே நடுங்கிக் கொண்டிருந்தார்.

உலகப் பெரும் போருக்கு அவர்தான் காரணம் என்றார்கள். என்னைப் பொறுத்தவரை, அவர் கொஞ்சமாவது புகைக்கவும், குடிக்கவும் செய்திருக்கலாம். ஒரு பெண்ணிடம் காதல் உறவு கொண்டிருக்கலாம் என்றே தோன்றுகிறது. அப்போது மனித வரலாறு மாறியிருக்கும். சிறிதளவேனும் மனிதத் தன்மையோடு' அவர் நடந்திருப்பார். தம்முடைய எல்லைகள் எதுவென அவர் உணர்ந்திருப்பார், மற்றவர்களின் எல்லைகளையும் மதித்து ஏற்றிருப்பார்.

கபீர் சொல்கிறார்:

> **'என் காமத்தைத் தடுத்து வைத்தேன் அது கோபமாய் வெடித்து என் கோபத்தை நான் கைவிட்டேன் பேராசைக் காரனானேன்' – என்று.**

ஆக, தர்க்க ரீதியால் ஒருவர் எதைச் செய்வாரோ, அதைத் தான் அவர் செய்தார் - அது கோபத்தை அடக்கி வைப்பது. அவர் எதையும் ஊன்றிக் கவனிப்பவர். 'கோபத்தை அடக்கினேன், பேராசைக்காரனானேன்' என்கிறார்.

அதற்கு ஆயிரத்தியோரு நிரூபணங்கள் உள்ளன மனித வரலாற்றில். உதாரணமாக, இந்தியாவில் அகிம்சையைக் கற்பித்தவர் மகாவீரர். அதன் விளைவாகவோ என்னவோ மகா வீரரைப் பின்பற்றியவர்கள் மகா பேராசைக்காரர்களாக மாறினர். அவர்கள் இந்திய நாட்டு யூதர்கள். அவர்கள் ஏன் இத்தனை பேராசை பிடித்தவர்களானது?

மகாவீரர் கற்பித்தார், 'வன்முறையற்றவராய் இருங்கள்' என்று. ஆனால், அவர்கள் கோபத்தை அடக்கி வைக்க வேண்டும் என்பதாய் புரிந்து கொண்டார்கள். அவர்களுடைய அறிவற்ற மனதுக்கு அது ஒன்றே சாத்தியமாய் தெரிந்திருக்கும்: 'கோபத்தை அடக்கு, வன்முறை கூடாது'. அவர்கள் வன்முறையைத் தவிர்ப்ப தற்கு எல்லா வகையிலும் முயன்றனர். விவசாயம் செய்வதையும் விட்டு விட்டார்கள். அதிலும் வன்முறைக்கு இடமிருப்பதாய் அவர்கள் கருதினர். பயிர்களை இழுத்து வேறிடத்தில் நடவு செய்வது, பயிர்களை அதன் வளர்ச்சியைக் கருத்தில் கொண்டு கவாத்து செய்வது இவையும் வன்முறை என்றே அவர்களுக்கு தோன்றியது. தாவரங்களுக்கும் உயிர் உண்டு. எனவே சமணர்கள் விவசாயத் தொழிலையே விட்டொழித்தனர்.

தற்போது, அவங்களால் இராணுவத்துக்கும் போக முடியாது. காரணம் அவர்க்ள் சத்ரியர்களல்ல - தங்களுடைய அகிம்சை கருத்தியல் காரணமாக அவர்களால் போர் வீரர்களாக முடியாது. ஒரு விவசாயியாக தோட்டக்காரனாக இருப்பதும் அவர்களுக்கு முடியாத காரியம். அவர்கள் சூத்ரர்களாகி துப்புரவு செய்வது போன்ற வேலைகளைச் செய்யயும் விரும்பவில்லை. அவர்களால் பிராமணர்களாக முடியாது. பிராமணர்கள் அதை ஒரு போதும் அனுமதிக்க மாட்டார்கள். 'அவர்கள் பல காலமாய் அதிகாரம் பண்ணிக் கொண்டிருப்பவர் என்பதால், வேறு எவருக்கும் இடமளிக்க மாட்டார்கள். பிறப்பால் மட்டுமே ஒருவர் பிராமணராக முடியும். நீங்கள் ஒரு சிறந்த அறிவாளியாக இருக்கலாம். அதுவல்ல முக்கியம். அது ஒன்றும் உங்களை பிராமணராக்கி

விடாது. நீங்கள் பிராமணராகப் பிறந்தாலொழிய பிராமணராக வேறு வழியில்லை. உங்கள் பெற்றோரைத் தேர்ந்தெடுப்பதில் கவனமாயிருங்கள், ஒரு பிராமணராக அதுவே வாய்ப்பு.

ஆக,. சமணர்கள் பிராமணராக முடியாது. சூத்ரர்களாவதிலும் விருப்பமில்லை அவர்களுக்கு. பிறகு, என்ன மிஞ்சுமாம்? வியாபரம் மட்டும். அவர்கள் வியாபாரிகளாகி விட்டார்கள். அவர்களுடைய அடக்கி வைத்த கோபமெல்லாம் பேராசையாய் உருவெடுத்தது. அவர்கள் பணப் பைத்தியங்களாகி விட்டனர். இந்தியாவில் மிகக் குறைந்த எண்ணிக்கையில் இருப்பவர்கள் அவர்கள். அவர்களுடைய எண்ணிக்கை முப்பது லட்சத்துக்கும் அதிகமிருக்காது. அறுபது கோடி மக்கள் தொகை கொண்ட ஒரு நாட்டில் முப்பது லட்சம் ஒன்றுமேயில்லை. ஆனால், மற்றவர் களைக் காட்டிலும் அவர்கள் நிறையப் பணம் வைத்திருக் கிறார்கள். நீங்கள் ஒரு ஜைன (Jain) பிச்சைக்காரரைப் பார்க்க முடியாது. அவர்கள் எல்லாரும் பணக்காரர்கள்.

மகாவீரர் விரும்பியது அவர்கள் சாத்வீகிகளாய் இருக்க வேண்டும் என்பதுதான். ஆனால் அதற்கு முற்றிலும் மாறாகவே நடந்தது. 'அவர்கள் பேராசைக்காரர்களாயினர். உங்கள் கோபத்தை அடக்குங்கள், நீங்களும் பேராசை கொண்டு விடுவீர்கள்.

**'நான் கோபத்தை விட்டேன், இப்போது பேராசை கொண்டு விட்டேன்..' பேராசை தொலையப்பாடு பட்டேன் பெருமை கொள்ளும் நிலையடைந்தேன்'**

ஆக, பேராசையை அடக்கியவர் பெரிய தற்பெருமைக்கார ராகி விடுகிறார். 'பார்த்துக் கொள்ளுங்கள், நான் காமத்தை அடக்கினேன், கோபத்தை அடக்கினேன், பேராசையை அடக்கினேன் - நான் அதைச் செய்தேன், இதைச் செய்தேன். சாத்தியமில்லாதவைகளை எல்லாம் நான் செய்து முடித்திருக் கிறேன். 'நான்' என்பது மேலெழுந்து தற்பெருமைக்கு வலிமை சேர்க்கிறது.

தூய ஸ்படிகம் போல் வடிவம் பெற்ற அகந்தையை நீங்கள் துறவிகளிடமும், பெண் துறவிகளிடமும் காண முடியும். அப்படியொரு தெளிவான அகந்தையை வேறெங்கும் நீங்கள் காண்பதற்கில்லை. எத்தனைக்கு ஒருவர் துறக்கிறாரோ அத்தனைக்கு அவர் அடக்கி வைத்து, மிகவும் தற்பெருமை

கொண்டு விடுவார். இந்தியர்களின் தற்பெருமைக்கு என்ன காரணம்? தங்களுடைய சமயப்பற்றை ஏதோ ஒரு வகையில் அவர்கள் அதிகரித்து கொள்வதால் வந்த வினையது. (உணர்ச்சி வகையில்) எதையோ அடக்கி வைக்கிற முயற்சி தற்பெருமையைத் தந்து விடுகிறது.

அடக்கி வைக்க முடியாதவரிடம் தற்பெருமை இருக்காது. அவரால் தற்பெருமை கொண்டிருக்க முடியாது. அதைத் தாங்கி நிற்க ஆதாரம் எதுவுமில்லை. அவர் மிக அடக்கமானவராய், எளிமையானவராய், மிகச் சாதாரணமாய் காணப்படுவார். தான் ஒன்றுமேயில்லை என்பது அவருக்கும் தெரியும். அதனால் அவர் உரிமைக் கோரிக்கை **(claim)** வைப்பதில்லை. கபீர், இந்த ஒட்டு மொத்த செயல் முறையையும் வெகு அழகாய் விவரித்திருக்கிறார்.

அடக்கி வைத்தல் ஒரு வழியாகாது. மாற்றமடைவதே வழி. எதையும் அடக்கி வைக்காதீர்கள். காமத்தை அடக்கி வைத்தால் அது வேறு சிக்கல்களை உண்டு பண்ணி விடும். பிறகு அதைச் சமாளிப்பது கடினம். நீங்கள் கோபத்தை அடக்கினால், பேராசை வரும். பேராசையை அடக்குவது மிகவும் கடினம். போராசையை அடக்கினால் தற்பெருமை கர்வம் தலைதூக்கும். அதை விடுவது ஆகிற காரியமாய் இருக்காது.

அப்படியே பின்னுக்குப் போங்கள். கர்வத்தில் இருந்து பேராசை, பேராசையில் இருந்து கோபம், கோபத்தில் இருந்து காமம் என்று போவீர்கள். இயல்பான காமம் மற்றவைகளை விட எளிதில் சமாளிக்கக் கூடியதாயிருக்கும். நீங்கள் கற்பனையே செய்யமுடியாத அளவுக்கு எளிதாயிருக்கும். அப்போது உங்கள் சக்தி இயல்பாகி விடும். இயல்பான சக்தி மாற்றத்துக்கு தடையாயிருக்காது. எனவேதான் நான் கூறுகிறேன் 'காமத்தில் இருந்து மெய்யுணர்விற்குப் போங்கள்' என்று.

உங்களுடைய இயல்பான இருப்புணர்வை முதலில் நீங்கள் ஏற்றுக் கொண்டால் மாற்றம் நிகழ முடியும். இயல்பான எதுவும் தகுதியானதாகவே இருக்கும். 'மிகுதியான அளவு' என்பது எப்போதும் சாத்தியந்தான். ஆனால், உங்கள் இயல்பை நீங்கள் முழுவதுமாய் ஏற்றுக் கொள்கிற போது மட்டுமே அது சாத்தியம். என்ன, அதை நீங்கள் வரவேற்கிறவராக, அது பற்றிய குற்ற உணர்வு இல்லாதவராக இருக்க வேண்டும்.

நீங்கள் எப்படிப்பட்டவராயினும் கடவுளின் படைப்பு. நீங்கள் எவ்வகையினராயினும் பிரபஞ்சம் உங்களை அப்படி உருவாக்கி வைத்திருக்கிறது. காமம் உங்களால் தோற்றுவிக்கப்பட்டதல்ல, அது பிரபஞ்ச இருப்பின் வெகுமதி. மதிப்பு மிக்க ஏதோ ஒன்று அதனுள் மறைந்திருக்கிறது. அது உங்கள் சமாதியின் சிப்பி (shell) ப் பகுதி. விதையை உடைக்கிற போது, ஓட்டுப் பகுதியும் உடைகிறது. பூ பூத்து விடும். ஆனால் எதுவுமே அடக்கி வைத்தால் ஆகாது. மனம் என்னும் நந்தவனத்தில் தோட்டம் போடக் கற்றுக் கொள்ளுங்கள். தோட்டக்காரராகி விடுங்கள். மக்கின எருவையும், உரத்தையும் எப்படி உபயோகிப்பது என்று கற்றுக் கொள்ளுங்கள். உரத்தைப் பூக்களாக உருமாற்றம் செய்யுங்கள்.

மதம் ஒரு கலை, கவனமாகக் கையாளப்பட வேண்டியது.

கபீர் சொல்கிறார்:

> **'மனம் விரும்புகிற உலகுடனான தொடர்பை விட்டொழிப்பதற்கு ஆனாலும், ஏதோ ஒன்றை அது இன்னமும் பற்றியிருக்கிறது'**

முடிவான பிரச்னை இதுதான்; நீங்கள் ஒன்றை விட்டு விடுகிற போது, இன்னொன்றை பற்றிக் கொள்கிறீர்கள். கருத்துகளையும், பொருள்களையும், செயல்களையும் உங்களால் மாற்ற முடிகிறது. ஆனால், பற்றிக்கொள்வது மட்டும் அப்படியே இருந்து கொண்டிருக்கும். பற்றிக் கொள்கிற பழக்கம் மறைய வேண்டும். அது எப்படி மறையும்? அது தொடர்பாக நீங்கள் எதையும் செய்யத் தேவையில்லை. புரிந்து கொள்ளும் திறன், விழிப்புணர்வு, ஆழ்ந்த சிந்தனை மூலம் அது சாத்தியம்.

ஒரு பழைய கதை:

ஆவிகளைப் பற்றி ரொம்பவே பயந்து கொண்டிருந்தான் ஒருவன். அது அவனைத் தொல்லைப்படுத்தும் பிரச்னை தான். தினமும் ஓர் இடுகாட்டின் வழியே அவன் வேலைக்குச் சென்று, திரும்புவான். சில சமயம் 'ஓவர் டைம்' பார்த்து விட்டு, தாமதமாக வீட்டுக்கு வர நேரிடும். அந்த இடுகாட்டைக் கடந்து வருவது பெரிய பிரச்னையாய் தெரிந்தது அவனுக்கு. அதிகம் போனால் மூன்று நான்கு நிமிடத்தில் அப்பகுதியைக் கடந்து விடலாம். ஆனால் அது செத்துப் பிழைக்கிற கதை!

அவன் துறவி ஒருவரை அணுகி, 'ஐயா, தாங்கள் அற்புதங்களை நிகழ்த்துகிறவர் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். எனக்காக ஏதாவது செய்யுங்கள். அந்த இடுகாட்டுப் பகுதியை எவ்வித பயமும் இல்லாமல் கடந்து செல்ல வேண்டும். எனக்கு பாதுகாப்பாக எதையேனும் செய்து கொடுங்கள்' என்று வேண்டினான்.

அவர் சொன்னார், 'அது எளிதான வேலை, அதிலொன்றும் பிரச்னையில்லை. நான் கழுத்தில் அணியக் கூடிய (லாக்கட்) பொருளொன்றைத் தருகிறேன். அது உன்னை ஆவிகளிடம் இருந்து காப்பாற்றும். எந்த ஆவியாலும் உனக்கு எப்போதுமே தொந்தரவு இருக்காது' என்று.

அவனும் அதை வாங்கி அணிந்து கொண்டான். எந்த ஆவியும் அவனுக்குத் தொல்லை கொடுக்கவில்லை. உண்மையில் அங்கே ஆவிகள் கிடையாது. அவனுக்குப் பயம், அவ்வளவுதான். அந்த 'லாக்கட்'டை கையில் வைத்துக் கொண்டு இடுகாட்டின் வழியே அவன் போய் வந்தான். பலமுறை அப்படிப் போய் வந்து அதை சோதித்துப் பார்த்து விட்டான். நள்ளிரவில் கூட அப்படி சோதித்தாயிற்று. அதில் பலன் இருந்தது.

'இந்த 'லாக்கட்' உண்மையிலேயே சக்தி மிக்கதுதான். அவர் வியக்கத்தக்க மனிதர்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான் அவன்.

அங்கே ஆவிகள் கிடையாது. எங்கேயும் ஆவிகள் கிடையாது. ஆனால், தற்போது தனக்கொரு பாதுகாப்பு இருப்பதான கருத்தே அவனுக்கு உதவியது.

ஆனால், தற்போது புதிதாய் ஒரு பிரச்னை முளைத்தது. யாரேனும் தன்னுடைய லாக்கட்டை திருடக் கூடும் என்று அவன் அஞ்சினான். சமயத்தில் தானே எங்காவது வைத்து விட்டு அதை மறந்து போகலாம். அல்லது அதை வெளியில் வைத்து விட்டு தான் குளிக்கும் போது ஆவிகள் வந்தால் என்ன செய்வது? எனவே, அவன் எங்கு சென்றாலும் அதைத் தன்னிடமே வைத்துக் கொண்டான். அது அவனை உலுக்கியெடுக்கிற பிரச்சினையாயிருந்தது. அவனுடைய மனைவி சொன்னாள், 'அது என்னைப் பீதி கொள்ளச் செய்கிறது. ஏன் உன்னுடைய புருஷன் ஒரு முட்டாள்தனமான லாக்கட்டை கையில் வைத்துக் கொண்டு சுற்றுகிறான் என்று அக்கம் பக்கத்தில் கேட்கிறார்கள். 'அவனுக்கு

என்ன ஆச்சு?' என்று அவர்கள் துருவிக் கேட்கிற போது. என்னால் பதில் பேச முடியவில்லை' என்று. அவன் தூங்குகிற போது கூட அது அவனுடைய கையில் இருந்தது. இரவில் ஓரிரு முறை எழுந்து அது தன்னிடம் இருப்பதை அவன் உறுதிப்படுத்திக் கொள்வான். தூக்கத்தில் அது கீழே விழுந்து விட்டால், ஆவிகள் அவனுடைய நெஞ்சின் மீது குதித்து அவனுக்குத் தீங்கு செய்யக் கூடும்!

தற்போது ஒரு பிரச்னை தீர்ந்து, வேறொரு பிரச்னை தோன்றியது. சமயத்தில் இடுகாட்டின் வழியே அவன் தாமதமாய் வரும் போது ஆவிகள் அவனைத் துன்புறுத்தத் தொடங்கின! இருபத்தி நான்கு மணி நேரத்தில் அந்தப் பிரச்னை இருந்தது ஓரிரு நிமிடங்கள் தாம். தற்போதோ இருபத்தி நான்கு மணி நேரமும் லாக்கட் பிரச்னையாகி விட்டது. அது தொலைந்து விட்டால், யாராவது எடுத்துக் கொண்டு போய் விட்டால், நானே எங்காவது மறந்து விட்டு விட்டால்...' அவன் தூங்கும்போது கூட அதே எண்ணம். முழுதாய் தூங்க முடியவில்லை எப்போதுமே கொஞ்சம் எச்சரிக்கையாய் இருக்க வேண்டியிருந்தது. நல்ல தூக்கம் இல்லாமல் போனதில் நோய்க்கு இடமாகி விட்டது. அவன் மாறாத அச்சத்திற்குள்ளானான்.

அவன் மற்றொரு துறவியிடம் சென்றான். அந்தத் துறவி சொன்னார், 'நான் உனக்கு வேறொரு பொருளைத் தருகிறேன். இது ஒரு பெட்டி, லாக்கட்டைப் போல் உனக்கு தொல்லை தருவதாய் இருக்காது. இந்தப் பெட்டி சக்தி வாய்ந்தது. அது உன்னிடம் இருந்து ஆறடி தொலைவில் இருந்தாலும் வேலை செய்யும்.

'இது எவ்வளவோ மேல். வெளியில் வைத்து விட்டுக் கூட குளிக்கப் போகலாம்' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான்.

ஆனால் தற்போது புதிதாய் வேறொரு பிரச்னை. 'லாக்கட்டாக இருந்தால் அவன் எப்போதும் தனது கையிலேயே வைத்திருப்பான். தற்போது அவன் பெட்டியை வெளியே வைத்து விட்டு, குளிக்கப் போனால்... பையன்கள் விளையாட்டாக எடுத்துப் போய் விடக் கூடும். அல்லது, எதுவும் நடக்கும்.'

இந்தக் கதை தனிச் சிறப்பு வாய்ந்தது. ஆவிகளை விட் டொழித்து இதுவல்ல வழி. நீங்கள் ஏதோ ஒன்றைப் பற்றியிருக்க வேண்டும். உங்கள் கண்களை அலகத்திறந்து வைத்திருந்தால்,

ஆவிகள் எவ்வகையிலும் இருக்கவில்லை என்பதைக் கண்டு கொள்ளலாம்.

**'மனம் விரும்புகிறது' உலகுடனான தொடர்பை விட்டொழிப் பதற்கு ஆனாலும், ஏதோ ஒன்றை அது இன்னமும் பற்றியிருக்கிறது.**

அத்தனை பற்றல்களை (linging) யும் நீங்கள் விடவேண்டும். நீங்கள் யாராகவும் இல்லாமல், உங்களுக்குள் ஏதுமற்றவராய் இருக்க வேண்டும். எவ்வித பாதுகாப்போ பத்திரத் தன்மையோ இல்லாமல் இருங்கள்... தொடக்கத்தில் அது ஒரு மரணம் போல் தெரியும். பழையது மறைந்து புதியது தோன்றும். பழையது செத்தால் தான் புதியது பிறக்கும். புதியது இருக்க வேண்டும் என்றால் புதியது முடிவுக்கு வந்தாக வேண்டும். எல்லா பற்றலும் மறைகிற பொழுது - கடவுளின் பெயரையோ, குருவையோ, மறைநூலை (Scripture) பற்றியிருக்க மாட்டீர்கள். எவ்வித பற்றலும் இல்லாத, நிலையை அடைந்திருப்பீர்கள். அப்போது சற்றும் எதிர்பாராத விதமாய் உங்களுக்குள் பேரொளியொன்றி மேலெழும். ஒரு பரம சுகம் உண்டாகும். நீங்கள் மாற்றமடைந்து விட்டீர்கள்! மனம் விடப்படுவதில்லை - அது ஓர் ஆவி. அதை விடுவதற்கு நீங்கள் வழிகளை முயன்று பார்த்தால் வழிகளைப் பற்றிக் கொண்டவராவீர்கள். பிறகு அந்த வழிகளே உங்களைத் துன்புறுத்தும். ஆனால், நீங்கள் எப்போதுமே தளைப்பட்டவராகி விடுவீர்கள்.

கபீர் சொல்கிறார்:

**'கேளாய், எனது நண்பனே! தங்கள் பாதையைக் கண்டு கொண்டவர்கள் வெகு சிலர்தான்!'**

சிலர் மட்டும் மனம் போன போக்கில் அலைபவர்களாக, மிருகங்களாக இருக்கிறார்கள். சிலர் மிருகத்தை அடக்கி, அடக்குவது தீவிரமாகி, வக்கிரமடைகிறார்கள். கண்டபடி மனதை அலைய விடாமலும், அடக்கி வைக்க முயலாமலும் இருப்பவர்கள் வெகு சிலர்தாம். ஒருவன் எதையும் செய்யாமல் இருக்கிற போது தான் தெய்வத்தின் தன்மையின் வாசலுக்கான திறவு கோலைக் கண்டடைகிறான்.

கபீர் சொல்கிறார்:

**நான் துறவியானேன். நான் உலகத்தைத் துறந்தேன். அது ஒன்றும் முக்கியமல்ல. தற்போது நான் தெய்வத் தன்மையை பற்றிக் கொண்டேன், தெய்வத் தன்மையே எனது உலகமாகி விட்டது.**

இரகசிய வழியைக் கண்டடைந்தவர்கள் வெகு சிலர்தான். நூற்றில் தொண்ணூறு பேர் மிருகமாயிருந்த இன்பம் காண்கிற வர்கள். அவர்கள் மிருக நிலையைத் தாண்டிச் செல்வதில்லை. மீதமுள்ள பத்தில் ஒன்பது பேர் அடக்கி வைப்பவர்களாகவும், நோய்க்குறி கொண்டவர்களாகவும் இருக்கிறார்கள். நூற்றில் ஒருவர் மட்டுமே உண்மையான வழியைக் கண்டடைகிறார். எது உண்மையான வழி?

மனதைக் கை விடாமல், அந்த மனதைப் புரிந்து கொள்வது தான் உண்மையான வழி. அமைதியாக இருந்து கொண்டு, மனதைக் கவனியுங்கள். அதன் தந்திரமான முறைகளை, நுட்ப முறைகளை, அதன் உத்திகளைக் கண்காணியுங்கள். உங்கள் மனதுக்கு சாட்சியாகி விடுங்கள். அதைக் கண்காணிப்பதன் மூலம் அது உங்களுடன் ஆடுகிற ஆட்டத்தை (game) மெல்ல மெல்லப் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் ஒரு கதவை மூடினால் இன்னொரு கதவின் மூலம் அது வந்து விடும். அந்தக் கதவை நீங்கள் மூடினால் மூன்றாவதாய் ஒரு கதவை அது உருவாக்கிவிடும். வெறுப்பை உண்டாக்கும் வகையில் அந்தப் போக்கு தொடரும்.

கண்காணித்திருங்கள்... உலகைத் துறக்க வேண்டியதில்லை, மனதைத் தொலைக்க வேண்டியதில்லை. விழிப்புடனிருந்தால் போதும். அந்த விழிப்பு நிலையில் மனம் மறைகிறது. மனத்துடன் ஒட்டு மொத்த உலகமும் மறைந்து விடுகிறது. மனமும், உலகமும் அங்கே இல்லாத போது தெய்வத் தன்மை இருக்கும்.

இன்றைக்கு இது போதும்.

*முதலாம் கேள்வி;*

*ஓஷோ அவர்களே! என்னுடைய வாழ்க்கை குறிக்கோள் அல்லது பயண இலக்கு என்கிற சொற்பொருளில் நான். சிந்திக்கின்றேன், என்றாவது ஒருநாள் விழித்தெழும் போது ஞானவனாகி விடலாம் என்று காத்திருக்கிறேன். எனக்கு முன் மற்றவர்கள் அடைந்து விடுவார்களோ என்கிற கவலையும் இருக்கிறது. இன்று ஓர் இறுக்கம். ஏன் இந்த நிலைபேற்றை உணர்த்தும், நினைவில் வைப்பதும் கடினமாய் தெரிகிறது. தாங்கள் எனக்கு நினைவூட்டிக் கொண்டிருந்தாலும் நான் தொடர்ந்து மறக்கவும், பொறுமையிழக்கவும் செய்கிறேன். ஏன் இப்படியொரு முட்டாளாயிருக்கிறேன். 'அதனால் என்ன?' என்று எண்ணிக் கொள்கிறேன். பிறகு, இனியும் அந்த நிலை தொடர்வதில்லை என்று வீறிடவும் செய்கிறேன்.*

கால காலமாகவே மனிதன் குறிக்கோள், பயணஇலக்கு நோக்கம், அர்த்தம் இவற்றால் கட்டுப்படுத்தப்படுகிறான் – இதுவரை குறிக்கோளை தகவாய்க் கொண்ட கருத்தியலுடன் அவன் வாழ்ந்து கொண்டிருக்கிறான்– இந்து, கிறிஸ்தவன், முகமதியன், பொது வுடைமை வாதி போன்ற கருத்துப்பாங்கு – அத்தனையும் குறிக்கோளை தகவாய்க் கொண்டகருத்தியல்கள். எப்போதுமே ஒன்று நாளை அல்லது மறுபிறப்பை நீங்கள் கவனித்திருப்பீர்கள். அந்த குறிக்கோள், அர்த்தம், பரம சுகம் (Bliss) சொர்க்கம் இக்கணத்தில் இருக்காது.

இத்தகைய கருத்தியல்களின் காரணமாகவே அந்தக் கணத்தில் உங்களால் தணிவு நிலையில் இருக்க முடிவதில்லை. நீங்கள் ஒன்றை அடைந்தாக வேண்டும், ஒன்றைச் செய்து

முடித்தாக வேண்டும் என்று அவை தார்க்குச்சி போட்டு உங்களை விரட்டிக்கொண்டிருக்கும். உங்களுடைய ஒட்டுமொத்த கல்வி முறையும் உங்கள் விழிப்புணர்வை விஷமாக்கிற உத்திதான். குறிக்கோளின் பின்னே உங்களைக் கிறுக்கனாய் ஓடவைக்கிற உத்தி. அது உங்களுக்குள் பேரார்வத்தை உண்டு பண்ணும். பேரார்வத்தின் விளைவாக நரம்புக் கோளாறு. ஆனால் ரொம்பகாலமாகவே இது மனதின் ஒருங்கிணைந்த பகுதியாய் இருந்து கொண்டிருக்கிறது.

அதனால் தான் நீங்கள் குறிக்கோள் அல்லது பயண இலக்கு என்கிற சொற்பாங்கில் சிந்தித்துக் கொண்டிருக்கிறீர்கள்; அது நீங்களல்ல. சமூகந்தான் உங்கள் மூலம், உங்களுக்குள் இருந்து சிந்திப்பது. அது உங்கள்பெற்றோர்கள், ஆசிரியர்கள், அரசியல் வாதிகள், போதகர்களின் காரியமாகி விட்டது. அவர்கள் உங்கள் மூலம் சிந்திக்கிறார்கள். உங்களை அவர்கள் மூலம் நீங்கள் அடையாளப் படுத்திக் கொள்கிறீர்கள். நீங்கள் அவர்களில் இருந்து வேறானாவர் என்பதை ஏனோஅறிந்திருக்கவில்லை.

முதலில் உங்கள் மனதில் ஓடிக் கொண்டிருக்கிற அனைத் துக்கும் சாட்சியாயிருக்கக் கற்றுக்கொள்ளுங்கள். காரணம், மனம் என்பது சமூகம் சார்ந்த நடப்பு. அது ஒன்று கடவுள் வழங்கிய வெகுமதி அல்ல. அது ஓர் ஏமாற்றுவேலை. உங்களுக்குள் ஒரு மனதை கொண்டு வைத்து சமூகந்தான். அது மனிதன் வழியே உங்களைக் கட்டுப்படுத்துகிறது. உங்களைத் தளையிட்டு, சிறைப்படுத்தி வைக்கிறது. ஓர் அடிமையின் நிலைக்கு உங்களைத் தாழ்வு படுத்திவிடுகிறது. அந்த மனமல்ல நீங்கள். மனதை எளிதாய் கண்டு கொள்கிற சாட்சியாகவே நீங்கள்இருப்பது உங்கள் தன்னுணர்வில் நகர்ந்து கொண்டிருக்கும் எண்ணங்களை உங்களால் கண்டு கொள்ள முடியும்.

இதுவே தியானம் ஆகும். உங்களுக்கும் உங்கள்மனதுக்கும் இடையே ஒரு தொலைவிடத்தை (distance) அது உண்டு பண்ணும். தொலைவு இருக்கும் போது, மனம் என்கிற அமைப்பு உங்களுக்கு வழங்கப்பட்ட சிறைத் தண்டனை என்பது உங்களை வியப் பிலாழ்த்தி விடும். நீங்கள் தடையற்றவர், அதிலிருந்து வேறானவர். மனதில் இருந்து விடுபட்டதில் மகிழ்ச்சி அடையுங்கள். அத்தனை குறிக்கோள்களும், பயண இலக்குகளும் மறைந்து விடும்.

மனம் குறிக்கோள்களில் மட்டுமே வாழக்கூடும். காரணம் மனதால் இக்கணத்தில் இருக்க முடியாது. அதன் பொருட்டு நீங்கள் முயன்று பாருங்கள், அது சாத்தியமில்லை என்பதைக் கண்டுகொள்வீர்கள். மனம் தொடர்ந்து போய்க்கொண்டிருந்தால் நீங்கள்இக்கணத்தில் இருக்க மாட்டீர்கள். அல்லது, நீங்கள் இக்கணத்தில் இருந்தால் மனம் அங்கே இருக்காது. 'நிகழ்' என்பது எவ்வகையிலும் மனதிற்கில்லை. ஒன்று அது கடந்தகாலத்தில் இருக்கிறது. அல்லது எதிர்காலத்தில் இருக்கிறது. உளதாயில்லாத (non - existential) ஒன்றிலேயே அது இருந்துகொண்டிருக்கும். அத்தனை குறிக்கோள்களையும் நீங்கள் விட்டொழிக்கிற போது ஞானம் வாய்க்கிறது – ஞானம் என்பது மனமற்றிருக்கும் நிலை.

ஞானம் பெறுவதென்பது ஒன்றும் சிறப்பானதல்ல. அது வெகுசாதாரணமானது. இயல்பாய் நிகழ்வது. அது சிறப்பாய் தெரிவதற்குக்காரணம் அதில் இருந்து குறிக்கோளை நீங்கள் உருவாக்கிக் கொள்வது தான். புத்தர் மிகவும் சாதாரணமானவர். 'சாதாரணம்' என்றது, அவர் மனமற்றவர் என்ற பொருளில் தான். இந்தக் கணத்தில் வாழ்பவர் அவர். அவரிடம் அகந்தை இருக்கவில்லை என்கிறபோது அவர் எப்படி சிறப்பானவராய் இருந்திருப்பார்? எவருடனும் தன்னை ஒப்பிட்டுக்கொள்ள முடியாதவர். எவரைவிடவும் தாழ்ந்திருக்கவுமில்லை, உயர்ந்திருக்கவுமில்லை. அப்படியிருக்க அவரால் முடியாது.

இந்தக் கணத்தில் அவர் இருக்கவில்லை – ஆனால், முற்றிலும் வேறான இருப்பு நிகழ்கிறது. அந்த இருப்புத்தன்மை (presence) ஒரு நபருக்குரியதல்ல அது இருந்தால் மட்டுமே, எவ்வகையிலும் ஒரு நபராகாது அவர் எப்படி சிறப்பானவராயிருக்க முடியும்? வாழ்க்கை எவ்வித நோக்கமுமற்றது என்பதை இந்தக் கணத்தில் அவர் கண்டுகொள்கிறார். ஒட்டுமொத்த நோக்கமும் மனதால் சுமத்தப்பட்டதுதான்.

எவ்வித நோக்கமும் இல்லாமல் இருக்கிறது மரங்கள். எவ்வித நோக்கமும் கொண்டிருக்கவில்லை. நட்சத்திரங்கள் நோக்கம், குறிக்கோள் என்பதெல்லாம் மனிதன் தோற்றுவித்துக் கொண்ட கருத்தாக்கம். எந்தவொரு குறிக்கோளுடனும் நதி ஓடிக்கொண்டிருக்கவில்லை. எந்த பயன்கருதியும் கடல்கள் இருக்கவில்லை.

மனிதனைத் தவிர்த்து விட்டுப் பார்த்தல் வேறு நோக்கம் கிடையாது. வாழ்க்கையும் சரி, பிரபஞ்ச இருப்பும் சரி எந்தவொரு முடிவையும் அடைவதற்கான வழி, முறையாயிருக்கவில்லை, காரணம், அவை தம்மளவில் தாமே முடிவாயிருப்பவை. 'நோக்கம் என்பதில்லை' என்று கூறுகிற போது நான் அதையே குறிக்கிறேன்.

அது நோக்கமற்றது (purposeless) என்று நான் கூறவில்லை, காரணம் 'நோக்கமற்றது' என்கிற சொல்லைப் பிரயோகிக்கிற போது, நோக்கம் உள்ளே கொண்டுவரப்பட்டு விடுகிறது. நோக்கம் இருந்தாலும் நோக்கம் இல்லை என்றாலும், அர்த்தம் உள்ளது அர்த்தமற்றது என்றாலும் அது எளிதில் கடந்து செல்லக் கூடிய தாகவே இருக்கிறது. வாழ்க்கைக்கென்று குறிக்கோள் எதுவு மில்லை. உங்களிடம் குறிக்கோளிருந்தால் அப்போது வாழ்க் கைக்கு எதிரான போக்கையே மேற்கொண்டிருப்பீர்கள். அதனால் துன்புறுவீர்கள். காரணம், நீங்கள் எதிர்நீச்சல் போட முயற்சிப் பீர்கள். நீங்கள் போராடும்படி இருக்கும். அத்தனை போராட்டமும் உங்கள் சக்தியை வீணடிப்பதாய் இருக்கும். அத்தனை போராட்ட மும் முட்டாள் தனமாய், அழிவைத் தருவதாகி விடும். அது உங்களை அப்படியே அழித்து விடும். நீங்கள் பரம் பொருளுக்கு எதிராய் போவதற்கில்லை. ஓய்வாக இருங்கள், அமைதியா யிருங்கள், அடையும் படியாய் எந்தக் குறிக்கோளுமில்லை, சொல்லப்போனால் குறிக்கோள் என்றே எதுவுமில்லை.

'குறிக்கோள்களை அடைய முயலாதீர்கள்' என்று நான் கூறமாட்டேன். நீங்கள் முயற்சிசெய்தாலும செய்யாவிட்டாலும் குறிக்கோள் என்பதேயில்லை. என்பதே நான் சொல்ல வந்தது. நீங்கள் செய்கிற முயற்சியில் உங்களுடைய நேரமும், ஆற்றலும் வீணாகிவிடும், நீங்கள் எந்த முயற்சியிலும் ஈடுப்படாதிருப்பின், பரவச உணர்வைப் பெறத்தொடங்குவீர்கள். காரணம் போராட் டத்தில் வீணாகியிருக்கக்கூடிய சக்தி உங்களுக்கு அனுகூலம் செய்வதாக மாறும். சக்தியில் இருக்கிறது மகிழ்ச்சி உள்ளூரம் குறைபடாது செயலாற்றும் வலிமை உங்களுக்குள் பிரவாக மெடுக்கிறபோது நீங்கள்ஒரு நடனமாகி விடுகிறீர்கள், நீங்களே ஒரு கொண்டாட்டமாவீர்கள்.

வாழ்க்கை எந்தவொரு அர்த்தமும் கொண்டிருக்கவில்லை அர்த்தங்களுக்கு அப்பாற்பட்டது வாழ்க்கை. எனவே, கூறப்படும் கருத்துகள் பற்றிய கவலை வேண்டாம். ரோஜாவின் அர்த்தம் என்ன?' என்கிற மாதிரி கேள்வி போடாதீர்கள். அப்படி எதுவும் இல்லை. சூர்யோதயம் என்பதன் பொருள் என்ன? அப்படிப் பொருளேதும் அதற்கில்லை. அதில் அழகு இருக்கிறது. ஆனால், அர்த்தம் இல்லை.

வாழ்க்கை என்பது தர்க்கம் சார்ந்த ஒரு செயல்முறையல்ல. அது கவிதை – காதல் பாட்டு – எந்தவொரு அர்த்தமும் இல்லாதது, ஆயினும், அது முழுமையான அழகுடன் இருப்பது. உண்மையில் பொருள் கொள்ளப்படுகிற, தன்னுள் ஓர் அர்த்தத்தைக் கொண் டிருக்கிற எதுவும் அழகாயிருக்க முடியாது. அது பயன்கருதிய ஒன்றாகவே இருக்கும். ரோஜா அழகாயிருப்பதற்குக் காரணம் அது பயன்படும் தன்னை (utility)யைக் கொண்டிருக்காது தான். அதன் முழுமையான இருத்தலே போதுமானது. வேறெந்த சிறப்பும் அதற்குத் தேவைப்படாது. ஆனால், ஒரு நூறுருபாய் நோட்டுக்கு எந்த அழகும் இல்லை. காரணம், அது பயன்படும் தன்மை கொண்டிருப்பது அதற்கென்று அர்த்தம், நோக்கம் இருக்கிறது. அதில் பிறிதொன்றை அடையும் வழிவகை உள்ளது.

பயன் கருதாத வாழ்க்கையை வாழுங்கள். அது அர்த்தத்தைத் தேடி அலையாதிருக்கட்டும். முற்றிலும் பரவசமான, மகிழ்ச்சியான வாழ்க்கை வாழுங்கள். அதுவே வாழும் முறை, வழி - எல்லாம் வெறெந்த வழியும் மெள்ளச் செய்து கொள்கிற தற்கொலையாகவே இருக்கும்.

நீங்கள் குறிக்கோளில் அதிக ஆர்வம் கொண்டு விடுகிற கோது அதுதான் நடக்கிறது. நாளைய பொழுதுக்கு முக்கியத்துவம் அறிந்து இன்றைய பொழுதை வாழாமல் விடுகிறீர்கள். ஆனால் அந்த 'நாளை' வருவதே இல்லை. அது வருகிற போதெல்லாம் 'இன்று' என்பதாகவே இருக்கும். எது உள்ளதோ அதை இழப்பது. எது இல்லையோ அதைப் பற்றியே எண்ணமிடுவது என்று ஒரு தவறான பழக்கத்தையே நீங்கள் கற்றுக்கொள்கிறீர்கள். ஒவ்வொரு நாளைய பொழுதும் இன்றாகவே வந்து கொண்டிருக்கும். உங்களுக்கு அதில் விருப்பம் இருக்காது. ஏனென்னால் 'நாளை'

என்பதில் நாட்டம் கொண்டவர் நீங்கள். அந்த 'நாளை' (tomorrow) ஒருபோதும் வரப்போவதில்லை.

இப்படித்தான் மக்கள் தங்களுடைய வாழ்க்கையைப் பாழடித்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்களுடைய வாழ்க்கை பாலைவனச் சோலையாகியிருக்கும். ஆனால், அவர்கள் பாலைவனத்திலேயே தொடர்ந்து இருந்து கொண்டிருக்கிறார்கள். மக்களின் வாழ்க்கை வறண்டு போகக் காரணம் அவர்கள் குறிக்கோளுடன் இயங்க முற்பட்டதுதான்.

நீங்கள் சொல்கிறீர்கள்,'நான் குறிக்கோள் அல்லது பயண இலக்கின் படி வாழ்க்கையைச் சிந்திக்கிறேன். என்றாவதொரு நாள் ஞானவனான விழித்தெழக் காத்திருக்கிறேன்' என்று.

ஏன், 'என்றாவதொரு நாள்?' என்பது ஏன் தற்போதே அது நிகழக்கூடாது? எதற்காக அதைத் தள்ளிப் போடுவது? காலம் தாழ்த்துவது ஒரு தவிர்க்கும் வழி. இப்போதே ஞானம் பெறுவதற்கு நீங்கள் விரும்பவில்லையா? அடியாழத்தில் கூர்ந்து கவனித்தால் முக்கியக்கருத்தை நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் உடனடியாக ஞானத்தை விரும்பவில்லை என்பதே அது.

நான் இப்போதே உங்களை ஞானம் பெறச் செய்வதாய் கூறினால்... நீங்கள் சொல்வீர்கள், 'எனக்குச் சிந்திப்பதற்குக் கொஞ்சம் அவகாசம் தேவை. நான் நாளைக்கு வந்து விடுகிறேன். ஏனெனில், அதற்கு முன் சில காரியங்களைச் செய்து முடிக்க வேண்டும். என் காதலி காத்திருப்பாள், குழந்தைகள் காத்திருக்கும், என்னுடைய கடையைத் திறந்தாக வேண்டும், நிறைய முதலீடு செய்திக்கிறது முதலில் வேலைகளை முடித்து விடுகிறேன். எனக்கு ஞானம் பெற விருப்பந்தான், ஆனால், தற்போது அல்ல' என்று.

உங்களுக்கு ஞானம் பெறுவதில் விருப்பமில்லை என்பதே உண்மை. தவிர்ப்பதற்கான தந்திர வழி அது. ஆக, ஞானம் குறித்து உங்களை நீங்களே ஏமாற்றிக் கொள்வீர்கள். அது தொடர்ந்து நடக்கும். உங்களுக்கு விருப்பம் இருந்தாலும் நேரம் இருக்காது. மற்றவைகளை முடித்துவிட்டு நாளை பார்த்துக் கொள்ளலாமே என்கிற எண்ணம், அவ்வளவுதான்.

ஆனால், உங்களுடைய முதலீடுகள், நீங்கள் கொண்ட கவலைகள், உங்களது செயல்கள் என்று அனைத்தும் பூர்த்தியான

பின் அப்படியொரு நாள் (நாளை) வருமென்று எண்ணுகிறீர்களா? 'எல்லா வேலைகளையும் முடித்து விட்டேன். நான் இப்போது தயார்' என்று நீங்கள் சொல்லக் கூடிய நாள் வருமா என்ன? அது ஒருபோதும் வரப்போவதில்லை, காரணம் வாழ்க்கையின் பெருஞ்சிக்கல் அது தொடங்குவதுமில்லை, முடிவதுமில்லை.

அது. ஒரு நாவலை (novel) நடுப்பக்கத்தில் இருந்து படிப்பது போன்றது. முதல் அத்யாயமும் இல்லை, கடைசி அத்யாயமும் இல்லை. நடுவில் இருப்பது மட்டுமே உங்களுக்குத் தெரியும். அதுவே, வாழ்க்கையின் புதிர். எப்போதாவது ஒரு கதையை நடுவில் இருந்து படித்துப் பாருங்கள், அப்போது சாதாரணக்கதை கூட மர்மக்கதையாகிவிடும். அந்தப் புதுமை உங்களைக் கிளர்ச்சி யடையச் செய்யும். 'கதை எப்படித் தொடங்கியிருக்கும்?' என்பதை அறிய, பலமுறை முதல்பக்கத்தைத் திருப்பிபார்க்கத் துடிப்பீர்கள். ஆனால், அந்த ஆர்வத்தை அடக்கிக் கொண்டு நடுப்பகுதியில் இருந்தே படியுங்கள்.

நாம் எப்போதுமே வாழ்க்கையின் நடுப்பகுதியில் இருக் கிறோம். நீங்கள் பிரவேசிப்பதற்கு முன்பே வாழ்க்கை அதன் போக்கில் இருந்து கொண்டிருக்கிறது. நீங்கள் சென்றபின்னர் வாழ்க்கை இருக்கவே செய்யும். நடுப்பகுதியில் சில கணநேரக் காட்சி கண் மட்டுமே உங்களுக்குத் தெரிந்திருக்கும். நீங்கள் திடுதிப்பென்று திரையரங்கில் நுழையிறீர்கள், சிலகாட்சிகளை மட்டும் காண்கிறீர்கள். நீங்கள் உள்ளே நுழைவதற்கு முன்பிருந்து படம் ஓடிக்கொண்டுதானிருக்கிறது. நீங்கள் போனபின்னும் படம் ஓடிக் கொண்டிருக்கும். தொடர்க்கதையும், முடிவையும் நீங்கள் அறிவதில்லை. வாழ்க்கை நிலையான தொடர்ச்சியான தோற்றம் உடையது. எனவே, எதையும் உங்களால் நிறைவு செய்ய முடியாது.

ஞானம் குறித்து அச்சப்படுகிறீர்கள், அந்த வகையில் மற்றவர்களைப் போலத்தான் நீங்களும் ஆனால், யாருமே. 'நான் ஒரு கோழை' என்று ஒப்புக் கொள்ள விரும்புவதில்லை. 'நான் அழகிய, வண்ணக்கனவுகள் காண்கிறேன். அதனால், இன்னும் கொஞ்ச நேரம் தூங்க விரும்புகிறேன்' என்று நிஜத்தை யாரும் ஏற்றுக்கொள்வதில்லை. 'நான் ஒரு முட்டாள், எனக்கு ஞானம் பெறுவதில் விருப்பம் கிடையாது' என்று பொறுப்பேற்க யாரும் தயாரில்லை. எனவேதான் எல்லோரும் சொல்கிறார்கள், 'ஆக.

ஞானம் பெறுவது எனக்குப் பிடித்தமான விஷயம் – ஆனால், நாளையோ மறுநாளோ என்னுடைய முதுமைக் காலத்தில் ஆகட்டும்' என்று.

எப்படித் தள்ளிப் போடுவது? குறிக்கோள் ஒன்றை அமைத்துக் கொண்டு விடுவதே சிறந்த வழி. எனவே தான் சொல்கிறீர்கள், 'என்றாவது ஒருநாள் நான் ஞானம் பெறுவேன்' என்று. ஏன், 'என்றோ ஒரு நாள்?' ஆறு ஓடிக்கொண்டிருக்கிறது.... நீங்கள் நீரைப்பருகமுடியும்.

நீங்கள் தாகமாக இருந்து கொண்டு செல்கிறீர்கள் 'என்றாவது பருகிக் கொள்கிறேன்' என்று உங்களுக்கு தாகம் இருக்கும் பட்சத்தில், உடனே பருக வேண்டியது தானே, அதை விட வேறெது முக்கியம் என்பீர்கள்? குறிக்கோள் என்று எதுவும் இல்லாத காரணத்தால், தனிப்பட்ட கனவுகளையே குறிக்கோள் என்பதால், உங்களுடைய குறிக்கோளை அமைத்துக் கொள்ளும் முயற்சிக்கு வாழ்க்கை ஆதாரமாக இருக்காது. வாழ்க்கை எல்லா வழிகளிலும் உங்கள் குறிக்கோள்களை அழிக்கவே பார்க்கும்.

தற்போது ஓய்வு கொள்வதற்கான வழிகளை நீங்கள் கற்றுக் கொள்ள வேண்டும். ஞானம் என்பது ஏதோ ஒன்றை அடைவதற் காகச் செய்கிற முயற்சியல்ல. அது முயற்சி எதுவும் தேவைப்படாத நிலை. அது எவ்விதத்திலும் செயல்படாதிருக்கும் நிலை. இணக்க மும் ஏற்புத்தன்மையும் கொண்ட நிலையது. நீங்கள் எதையும் செய்யாமல், எதுபற்றியும் சிந்திக்காமல், எந்த ஒன்றுக்காகவும் திட்டமிடாமல், யோகா போன்ற பயிற்களை மேற்கொள்ளாமல், எவ்வித உத்திகளையும் பயன்படுத்தாமல் இருப்பீர்கள், அப்படியே இருந்துக்கொண்டிருப்பீர்கள். மிகச் சரியாக அந்தக்கணத்தில்... எது எப்படி இருக்க வேண்டுமோ அது அப்படி இருப்பதை மெய்யாக உணரும் திடீர் நிகழ்வே ஞானம். பேரொளி ஒன்றைக் காண்கிற மாதிரியோ, குண்டலினி மேலெழுவது போலவோ கடவுளே நேரில் தோன்றி அருட்காட்சி வழங்குவதாகவோ எவ்வித அனுபவமும் ஞானத்தில் கிடையாது.

ஞானம் என்பது எவ்வகையிலும் ஓர் அனுபவமாகாது. நீங்கள் தண்ணீரில் நடப்பது, செத்துப்போனவரை பிழைக்கச் செய்வது, பார்வைத் திறனற்றவரை குணப்படுத்துவது, செவிடருக்குக் கேட்கும் திறனையும், ஊமைக்கு பேசும் திறமையையும் வழங்கு

வது போன்ற அற்புதங்களை ஞானத்தைக் கொண்டு நிகழ்த்த முடியாது. ஞானத்துக்கும் அவற்றுக்கும் சம்பந்தமில்லை.

எப்படி இருக்கவேண்டுமோ அப்படித்தான் எல்லாமும் இருக்கிறது. என்பதைப் புரிந்து கொள்வது ஞானம். ஒவ்வொன்றும் இருக்க வேண்டியபடி மிகச் சரியாக, முழுநிறைவெளிப்பதாய் இருக்க வேண்டும். எதுவும் தவறவிடப்படவில்லை என்கிற உணர்வைப் பெறவேண்டும். இந்த அழகான, குறிப்பிடத்தக்க முழுமையின் ஒழுங்காக அமைக்கப்பட்ட பகுதி நீங்கள் அதில் உங்களை ஒப்படைத்துக் கொண்டு தணிவாயிருங்கள், ஓய்வு காணுங்கள். நீங்கள் விலகியிருக்கப் போவதில்லை. அத்தனை பிரிவினைகளும் மறைந்து விட்டன.

அகந்தை மறைவதால் கவலை விடப்படாது. அகந்தை மறைவதால் துயரத்துக்கு இடமில்லை. அகந்தை மறைவதால் அதன் பிறகும் அழிக்க எதுவுமிருக்காது. மிகப்பெரிய அளவில் மகிழ்ச்சி உண்டாக்கும். இதுவே ஞானம் என்பது. அது எல்லோரும் விரும்பத்தக்கதாய், தகுதியாய், நிறைவெ்ளிப்பதாய் இருப்பதைப் புரிந்து கொள்கிறது.

நட்சத்திரங்கள் புல்லின் இதழ்களோடு இசைவாயிருக்கின்றன. பூமி வானத்துடன் இசைவாயிருக்கிறது. நதிகள் மலைகளுடன் இணக்கப் பொருத்தமாய் இருக்கின்றன. பிரபஞ்சஇருப்பே ஓர் இசைக்குழு என்கிற மாதிரி ஒவ்வொன்றும் அத்தகைய இசைவைக் கொண்டிருக்கின்றன. இருப்பே இசையாகி விடுகிறது. அந்த அனுபவமே ஞானம். ஒவ்வொன்றும் சீர்த்தன்மையோடு ஒத்திருப் பதைக் காணுங்கள். ஒரு பார்வையாளரைப்போல் நீங்கள் அதில் இருந்து விலகியிருக்கவில்லை. காண்பவரும் காணப்படுவதும் ஒன்று. நீங்கள் அதுவாகிறீர்கள்.

அது ஒரு சிறந்த பங்கேற்பு. நீங்கள் பரம் பொருளிலும், பரம் பொருள் உங்களிலும் பகுதியாகி விடுகிறீர்கள். கடலில் விழுந்தது துளி, துளியில் இருக்கிறது கடல். அதைப்பற்றி அதிகம் சொல்வது சாத்தியமில்லை. அது அனுபவித்து உன்ரக்கப்பட வேண்டியது.

ஆனால், தயவு செய்து கால தாமதம் செய்யாதீர்கள், காரணம் தற்போதே அது கிடைக்கக் கூடியதாயிருக்கிறது. ஞாபகமிருக் கட்டும். இப்போது இல்லையென்றால் எப்போதுமே இல்லை.

**தே.தே.பெ. 30**

நீங்கள் தொடர்ந்து கற்பிக்கப்படுவதை நான் அறிந்திருக்கிறேன் - ஒருவகை அறிதுயிலில் நீங்கள் வாழ்ந்து கொண்டிருக்கிறீர்கள். சமூகம் உங்களை அறிதுயிலில் (Hypnotize) ஆழ்த்தியிருக்கிறது. நீங்கள் குறிக்கோளின் படி செயல்படுமாறு கட்டாயப்படுத்தப்படுகிறீர்கள். பேரார்வமும், போட்டிமனப்பான்மையும் உங்கள் மீது திணிக்கப்படுகிறது. எனவே, நீங்கள் அச்சத்துக்குள்ளாகிறீர்கள். மற்றவர்கள் உங்களை முந்திவிடுவார்களோ என்ற கவலையில் வருகிற அச்சம்.

ஞானவான்களின் உலகில் போட்டிபோடுகிற மனங்கள் பிரவேசிக்க முடியாது. ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் தள்ளிவிலகி நின்றிட நேரும். போட்டிக்கு இடமளிக்காத மனம், உண்மையான ஆர்வம் தேவை. ஒப்பிடுகிற போக்கை விட்டொழிக்க வேண்டும், ஏனெனில், நீங்கள் ஞானம் பெற்றதும் தனித்தே இருப்பீர்கள், உங்கள் நேசத்திற்குரியவர் உட்பட வேறுயாரும் இருக்கமாட்டார்கள். நீங்கள் மட்டும் தனியாக இருப்பீர்கள், வேறுயாரும் உடனிருக்க முடியாது.

யார் முன்னதாக அடைகிறார்கள் என்பதல்ல பிரச்சினை, காரணம் ஞானத்துக்கு முந்தி, பிந்தி எல்லாம் கிடையாது. ஞானம் இந்தக் கணத்தில் இருக்கிறது. ஏன் முன்பாக, பின்பாக என்றெல்லாம் எண்ணிக்கொள்வது? இந்தக் கணத்தில்... அதை உங்களுக்குள் மூழ்கவிடுங்கள். உங்களிடமிருநது வேண்டப்படுவது வரவேற்றுக் கொள்ளும் பண்பு (receptivity) ஒன்றே. அத்தனை கதவுகளையும் அடித்துத் திறவுங்கள், விரியத்திறந்து வையுங்கள். சூரியனை, காற்றை, மழையை உள்ளே வரவிடுங்கள்.

"ஞானம் என்பது பணம் போன்றதல்ல, அரசியல் அதிகாரத்தைப் போன்றதுமல்ல. வாழ்க்கையில் நீங்கள் அறிந்திருக்கிறது எந்த ஒன்றுமல்ல. அது நீங்கள் எப்போதுமே அறிந்திராது. அது இணையற்றது, பிரபஞ்சத்தில் அதனுடன் ஒப்பிடும்படியாய் எதுவுமில்லை. அது தன்னளவில் தானாகவே இருப்பது. அதை ஒப்பிடுவதாயின் அதனுடன் தான் ஒப்பிடும்படி இருக்கும்.

ஞானம் பெறுவதற்கென்று உறுதியான திட்டமோ, முறை (method)யோ தேவையில்லை. உங்களுடைய மனம் முழுவதும் துன்பத்தை உண்டு பண்ணும் தொழிற்சாலையாக இருக்கிறது

என்பதை உள்நோக்கி உணர்ந்தால் போதும். அதை ஒரு பக்கத்தில் இருந்து மறுபக்கம் வரை (through) பார்த்துபுரிந்து கொள்கிறபோது ஒரு மாற்றம் வரும். உங்கள் பார்வையை மிகச் சரியாக உள்நோக்கிக் திருப்பினாலே போதும். மனதின் பயணற்ற தன்மையை உணர்ந்து மனதைக் கைவிடுங்கள். கணப்பொழுது மனம் இல்லை என்றாலும் அந்தக் கணத்தில் ஞானம் வந்து விடும்.

தொடக்கத்தில் அந்த ஒளியானது மிகவும் குறுகிய நேரமே (கணங்கள்) வரும். ஆனால், அந்தக் கணங்கள் நிலைபேறு டையவை. பிறகு, மெல்ல, மெல்ல, மேலும், மேலும் அத்தகைய கணங்கள் வந்தபடி இருக்கும். காரணம், உங்களுடைய உபசரிக்கும் பண்பு அதிகரிப்பது தான். ஒருநாள் விருந்தளிப்பவரும், விருந்தாளியும் ஒருவருக்குள் ஒருவர் மறைந்து விடுவார்கள். பிறகு அது உங்களை விட்டுச் செல்வதில்லை. புறத்தே நீங்கள் எப்போதும் போலவே காணப்படுவீர்கள், உங்கள் வேலைகளைச் செய்து கொண்டு, விறகு தரிப்பது, கிணற்றில் இருந்து தண்ணீரை எடுத்து வருவது என்று அதே பழைய நபராக இருக்காது.

இந்த ஓய்வை - தணிவுநிலையை நான் உங்களுக்குக் கற்பிக்கிறேன். செயலற்றிருக்கும் நிலையை நான் உங்களுக்கு விளக்குகிறேன். கடினமான முயற்சிகளை நான் சொல்லித்தர மாட்டேன், காரணம் அவையெல்லாம் அகந்தையைத் திருத்திப் படுத்துகிறவை. நீங்கள் ஞானம் பெறுவதற்கு எந்த முயற்சியும் உதவாது. அது உங்களைத் திசை திருப்புவதாய், உங்கள் கவனத்தைச் சிதறடிப்பதாகவே இருக்கும். எவ்விதமுயற்சியுமின்றி இருங்கள், அமைதியாக.

**அப்படியே அமர்ந்திருங்கள், எதுவுமே செய்யாமல், வசந்தம்
வருகிறது, புற்கள் தானாகவே வளர்கிறது.**

***இரண்டாம் கேள்வி:***

***'ஓஷோ அவர்களே! தயவு செய்யுங்கள் எனது இருப் பிடத்தை நான் அடைய விரும்புகிறேன்.'***

நீங்கள் அடைந்து விட்டீர்கள். நானே உங்கள் இருப்பிடம். அதைக் கண்டுகொள்ளத்தான் காலமானது. உங்கள் இடத்துக்கு நீங்கள் வந்து விட்டதை உணர்ந்து கொள்ள சிலசமயம் ஆண்டுக்

கணக்கிலும் ஆகும். முதலாவது எது உங்கள் இடமென்றே நீங்கள் அறியாமல் இருப்பது - பிறகெப்படி கண்டுகொள்ள முடியுமாம்? இரண்டாவது, அது உங்களுடைய மனதில் ஆழப்பதிந்துள்ள பழக்கங்கள் ஒன்றைக் கூர்ந்து கவனிப்பதற்குப் பதிலாக அதைப் புறக்கணிப்பது போன்ற மனதின் பழக்கம். கவனம் செலுத்தி இடர்பாட்டுக்குள்ளாவதைவிட, கவனிக்காமல் விடுவதையே மனம் விரும்பும்.

உங்கள் இடத்துக்கு நீங்கள் வந்துவிட்டதை உணர்ந்த கொண்டால், தற்போது மேலும் முயற்சிகள் தேவைப்படாது. வேறு எங்கும் செல்ல வேண்டியிருக்காது. உங்களுடைய பழைய வாழ்க்கை முறை, செயல்கள். அனைத்தும் அத்துடன் முடிவுக்கு வந்துவிடும். திடீரென்று நீங்கள் வெறுமையாய் உணர்வீர்கள். திடீரென்று நீங்கள் ஒருவராகவுமில்லை. (nobody) என்பதை, எதுமில்லை. (nothing) என்பதை உணர்வீர்கள். அந்தநிலை அச்சமூட்டுவதாகயிருக்கும். அதுகாரணம் பற்றியே ஒருவர் 'ஓஷோ, நான் வீட்டுக்கு வந்துவிட விரும்புகிறேன்' என்று திரும்பத் திரும்பத் சொல்வது. (இங்கே வீடு இருப்பிடத்தை மட்டுமன்றி புகலிடத்தையும் குறிக்கும்.)

நீங்கள் வந்தாயிற்று. இங்கே என்னுடன் இருப்பது வீட்டில் இருப்பதுதான். என்னுடைய ஒட்டுமொத்த அணுகுமுறையும் உங்களை மேம்படுத்துவதல்ல, உங்களை நிலைகுலையவைத்து, அதிர்ச்சிக்குள்ளாக்கி உங்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துவது. அதன் மூலம் உங்கள் வீட்டில் இருந்த நீங்கள் எங்கேயும் சென்று விடவில்லை என்பதை முதற்கண் உங்களுக்குப் புரிய வைப்பது.

பைபிள் சார்ந்த கதையொன்றில் ஆதாம் ஏவாள் இருவரும் ஏடன் தோட்டத்தில் இருந்து வெளியேற்றப்பட்டதாய் சொல்லப்படு கிறது. அவர்கள் ஒருபோதும் அங்கியிருந்து வெளியேற்றபட வில்லை என்பதே நான் உங்களுக்குச் சொல்ல விரும்புவது. அவர்கள் ஏடன் தோட்டத்தில், ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தனர். அந்தக் காலகட்டத்தில், கடவுளின் அந்தத் தோட்டம் மட்டுமே பிரபஞ்ச இருப்பாக இருந்தது.

ஒரு சமயம் கிறிஸ்துவ சமயப்பரப்புக் குழுவைச் சேர்ந்த ஒருவர் என்னிடம் கேட்டார், 'ஆதாமும், ஏவாலும் எங்கே

வெளியேற்றப்பட்டிருப்பார்கள்?' என்று. கடவுள் ஒன்றும் சாதாரண அரசரல்ல, தம்முடைய ராஜ்யத்தில் இருந்து மகனை வெளியேற்று வதற்கு சாதாரண அரசனுடைய ராஜ்யத்துக்கு எல்லைகள் இருக்கும். அப்போது தனது அதிகார எல்லையில் இருந்து வேறொரு இடத்துக்கு ஒருவரை வெளியேற்றுவது சாத்தியம். கடவுளின் ராஜ்யத்துக்கு எது எல்லை? ஏடன் தோட்டம் எல்லை யற்றது. ஒட்டு மொத்த பிரபஞ்சமும் ஏடன் தோட்டமாயிருந்தது.

அப்படியிருக்க கிறிஸ்து மதக்குழு - வைச் சேர்ந்தவர் என்னிடம் கேட்கிறார், 'என்னஆயிற்று, விளக்கமளியுங்கள்?' என்று.

நான் சொன்னேன்; 'அவர்கள் உறக்கத்தில் இருந்தனர். அறிவு என்கிற கனியைப் புசித்ததால் உறக்கம் அவர்களை ஆட் கொண்டது. அவர்கள் அறிவின் காரணமாய் மனமாகிப் போயினர். அறிவு அவர்களுடைய பிரக்ஞையை இழக்கச் செய்தது. பிரக்ஞையற்ற நிலை உறக்கம். அறிவுக் கனியைப் புசித்தால் அவர்கள் அதிகம் தெரிந்து கொண்டனர். (Knowledgeable). அவர்கள் மனங்களாயினர். மனம் சிந்திக்கச் செய்வது கதை எளிமையுடன், தனிச்சிறப்பும் கொண்டது என்றே சொல்ல வேண்டும். அறிவு மரத்தின் கனியைப் புசிக்க வேண்டாம் என்று கடவுள் அவர்களிடம் கூறியிருந்தார். அந்த உத்தரவு ஒன்று மட்டும கடவுளால் அவர்களுக்குப் பிறப்பிக்கப்பட்டது. அவர்கள் சிந்தனைகளுக்கு இடமளிக்காமல், ஏதும் அறியாதவர்களாய், கள்ளம் கபடமற்றவராய் இருக்கவேண்டும் என்பதே கடவுளின் விருப்பம். அவர்களால் மனத்தூண்டலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவர்கள் எதையும் ஊடுருவித் தெரிந்துகொள்ளத் தொடங்கினர்.

நீங்கள் அறியத் தொடங்கிவிட்டால் உங்கள் பிரக்ஞை திசைமாறி (நிலைமாற்றம் கொள்ளல்) விடும். மூளை விழித்துக் கொள்ள, இதயம் உறக்கத்திலாழ்ந்து விடும். எங்கும் பரவிருக்கும். இறையுணர்வை (godliness) மூளையால் அறிந்து கொள்ள முடிவதில்லை. நீங்கள் முன்பே இறையுணர்வுடன் இருப்பதை அறிந்துகொள்ளும் திறன் மூளைக்கு கிடையாது. நீங்கள் வேறெங்கும் இருக்கமுடியாது என்பதை உங்கள் மூளை

அறிந்திருப்பதில்லை. சரி, மூளையில் இருந்து அப்படியே இதயத்துக்கு வாருங்கள். நீங்கள் மறுபடியும் ஏடன் தோட்டத்தில் இருக்கிறீர்கள். அது காரணம் பற்றியே நான் அறிவைத் துறக்க வேண்டும் என்பது உலகத்தைத் துறக்காதீர்கள், உலகம் அழகானது. உங்கள் மனைவியைத் துறக்காதீர்கள் அவள் உங்களுடைய உயிர். மனிதப்படைப்பில் முதல் பெண்ணான ஏவாள் (Eve) என்கிற பெயருக்கு அதுதான் பொருள்.

கதை இப்படி:

ஆதாம் தனிமையில் இருந்தான், தனித்து விடப்பட்டதாய் உணர்ந்தான். கடவுள் ஏவாளைப் படைத்தார் – தம்முடைய விலா எலும்பில் இருந்து அவளைப் படைத்தார் அவர். அவர்கள் புறத்தேதான் ஆணும், பெண்ணுமாய் இருவேறாய் இருந்தனர். அடியாழத்தில் அவர்கள் ஒன்றாகவே இருந்தனர். கடவுள் ஆதாமிடம் கேட்டார், 'இவளை என்னவென்று அழைப்பாய்?'

ஆதாம் சொன்னான், 'நான் அவளை ஹவ்வா (Haavvah), ஏவா (Eve) ஈவ் (Eve) என்று அழைப்பேன். (இவை வெவ்வேறு விதமாய் கருத்தை வெளியிடும் பெயர்கள், ஆனால் இவை எல்லாமே உயிர் என்கிற பொருள்கொண்டவை)

கடவுள் கேட்டார் 'ஏன்?'

ஆதாம் சொன்னான், 'ஏனா? அவள் என்னுடைய உயிர் அவளில்லாவிடில் நான் செத்தவன்' என்று.

உங்கள் மனைவியை நீங்கள் விடவேண்டியதில்லை, அவள் உங்களுடைய உயிர். உங்கள் கணவரை நீங்கள் விடவேண்டிய தில்லை, உங்கள் குழந்தைகளை நீங்கள் விடத் தேவையில்லை. ஆனால் ஒன்றைமட்டும் துறந்துவிடுங்கள், அது ஊடுருவித் தெரிந்து கொள்ளும் திறன் (Knowledgeability). ஒன்றை நீங்கள் துறக்க வேண்டும், அது உங்கள் மனம். இதில் உள்ள *ஐரனி (Irony)யைக் கவனியுங்கள்'மக்கள் உலகத்தைத் துறக்கிறார்கள், தங்கள் உள்ளத்தை அவர்கள் துறப்பதில்லை.'

---

* **ஐரணி (Irony) - வஞ்சப் புகழ்ச்சி, நேர் எதிரிடையான பொருள் கொடுக்கும் சொற்றொடர்.**

ஒரு சமணர் உலகத்தைத் துறந்து திகம்பரர் (நிர்வாணத்துறவி) ஆகிறார். ஆனால் அதன் பிறகும் அவர் சமணராகவே இருக்கிறார். நான் சமணத்துறவிகள் பலரிடம் கேட்டிருக்கிறேன், 'இது நகைக்கத்தக்கதாய் இருக்கிறதே! நீங்கள் சமூகத்தைத் துறந்தாலும், சமூகம் உங்களுக்குக் கொடுத்த அறிவை ஏன் துறக்காதிருப்பது இன்னமும் உங்களைச் சமணர் என்று எப்படி அழைத்துக் கொள்ளலாம்!' என்று.

கிறிஸ்துவ கத்தோலிக்கர் உலகைத் துறந்து, மடத்துக்குப் போகிறார். ஆனால் கத்தோலிக்க கிறிஸ்தவராகவே இருக்கிறார். அவர் சமூகத்தைத் தமது மனத்தில் சுமந்து செல்கிறார், அந்த மனத்தில் சமூகத்தால் திணிக்கப்பட்டவைகளையுந்தான். இது எப்படியான துறவு?

நான் உங்களுக்குச் சொல்வேன் ஒரு கிறிஸ்தவராக இருப்பதை விடுங்கள், ஓர் இந்துவாக இருப்பதை விடுங்கள். அதுவே மனதின் துறவாக இருக்கமுடியும். உலகத்தைத் துறக்காதீர்கள், உலகம் இறையுணர்விற்குரியது. உலகம் அழகானது, மனிதன் குறுக்கீடின்றி உலகத்தைப் பாருங்கள், அது எத்தனை அழகு என்பதைக் காண்பீர்கள்.

நீங்கள் வீட்டுக்குவந்தாயிற்று. ஆனால், இன்னும் விழித்துக் கொள்ளாமல் உறக்கத்திலேயே இருக்கிறீர்கள். உங்களால் விழித்தெழ முடியவில்லை, காரணம் நீங்கள் இன்னமும் மனத்தில் இருக்கிறீர்கள். இதயத்திற்கு இறங்கி வாருங்கள். உங்களுடைய நற்பேறுகளை நீங்கள் அறிந்து,கொள்ளவில்லை. உன்னுடைய பாக்கியத்தை நீங்கள் தெரிந்து கொண்டிருக்கவில்லை. ஒரு வீட்டைக் கண்டுபிடிப்பது அரிது, அதை விட அரிது சுறுசுறுப்பாக இயங்குகிற ஒரு குருவுடன் இருக்க முடிவது.

யார்க்கோனி, டான்பெர்க் இருவரும் இஸ்ரேல் நாட்டு போர்வீரர்கள். எகிப்தியர்களுக்கு எதிராய் ஆண்டுக்கணக்கில் போரிட்டு, பட்ட துன்பத்தைப் பற்றி புலம்பிக் கொண்டிருந்தனர்.

யார்க்கோனி கூறினான், 'அவர்கள் அமெரிக்காவுக்கு எதிராய் போரை அறிவித்து விட்டால் நாம் என்ன செய்வது? அவர்கள் நம்மைத் தோற்கடித்து விடுவார்கள். தங்கள் தோற்கடித்த மற்ற நாடுகளுக்குக் கொடுக்கிற மாதிரி நமக்கும் கோடிகோடியாய்

பணம், நிறைய உணவுப் பொருள், வீடுகள், கார்கள், தொழிற் சாலைகள் என்று வாரி வழங்குவார்கள்' என்று.

டான்பெர்க் பெருமூச்சுவிட்டபடி சொன்னான், 'அது விரும்பத்தக்கதல்ல. நம்முடைய அதிர்ஷ்டத்தைக் கொண்டு நாம் வெற்றி பெறுவோம்' என்று.

நீங்கள் எவ்வளவு அதிர்ஷ்டக்காரர் என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கவில்லை. உண்மையில் நீங்கள் முன்பே வெற்றி பெற்று விட்டீர்கள். ஆனால் அதை அறிந்து கொள்வதில் தாமதம். இதயத்தில் இருந்து செய்திகள் மூளையைச் சென்றடைய வேண்டுமல்லவா இடையில் உள்ள தொலைவு அதிகம். உடல் சார்ந்த விதத்தில் பார்த்தால் அது அதிகமில்லைதான், ஆனால், ஆன்மா சார்ந்த வகையில் தூரம் ரொம்ப அதிகம். அந்த இரண்டுமே (இதயம், மூளை) பிரபஞ்ச இருப்பில் மிகப் பெருமளவு தூரத்தில் இருவேறு முனைகளாய் இருக்க கூடும். ஆன்மா சார்ந்த வகையிலான தொலைவு! உடல் சார்ந்த விதத்தில் பார்த்தால் ஓரிரு அடிகள் தான் இருக்கும். ஆனால் ஆன்மா சார்ந்த விதத்திலோ அந்தத் தொலைவை அளவிடுவதற்கில்லை.

அது நிகழ்ந்திருப்பதை உங்கள் இதயம் அறியும். ஆனால் உங்கள் மூளைக்கு இன்னுமும் அது எட்டியிருக்காது. நீங்கள் மூளையின் துணை கொண்டு வாழ்கிறீர்கள். உங்கள் இதயத்தினுள் நான் கூர்ந்து கவனிக்கிற பொழுது, இதயம் அறிந்திருப்பதை என்னால் கண்டு கொள்ள முடிந்தது.

உங்களை நான் தீண்டுகிற பொழுது, ஒவ்வொரு நாளும் இதுவே என்னுடைய அனுபவமாகிறது. நீங்கள் என்னை நெருங்கி வருகிற பொழுது, உங்கள் சக்தியில் எனது சக்தி கரைகிற பொழுது, உங்கள் இதயம் அறிந்து கொண்டிருப்பதை, உங்கள் மூளை இன்னமும் அறியாதிருப்பதை நான் கண்டுகொள்கிறேன். உங்கள் அறிவு இன்னமும் எதிர்த்து, போரிட்டுப் கொண்டிருக்கிறது. உங்கள் மூளை தனது பழைய நடைமுறை ஒழுங்கையே தொடர்ந்து கொண்டிருக்கிறது. உங்கள் இதயமோ முன்பே மாற்றம் கொண்டுவிட்டது. அங்கே பூ மலர்ந்திருக்கிறது.

உணர்வின் மொழி கருத்து வெளியிடும் முறையைக் கற்கத் தொடங்குங்கள்.சிந்தனையின் மொழியை மறந்து விடுங்கள்.

மேலும் மேலும் அமைதியாயிருக்கப் பாருங்கள், காரணம் இந்த வம்பளக்கிற மனம் நீங்கள் வீடுவந்து சேர்ந்து விட்டதை அறிந்து கொள்ள அனுமதிக்காது. உள்ளாக நடக்கும் உரையாடல் நிற்க வேண்டும். அந்த இடைவெளிகளில், இதயத்தின் சன்னக்குரல் உங்களுக்குக் கேட்கக் கூடிய தாயிருக்கும்.

என்னைக் கேட்டால், நீ வந்து விட்டிருப்பதை நான் முழுமையாகய் அறிவேன். நீங்கள் அதை அறிந்து கொண்டிருக்கிறீர்களா இல்லையா, என்பதல்ல முக்கியம். சற்று முன்பின்னாகவேனும் நீங்கள் அதை அறிவீர்கள். உங்களைப்போல பலரும் வந்தாயிற்று, ஆனால், அதை உணர்ந்திருக்கவில்லை. நீங்கள் தனியாக இருக்க வில்லை. அவர்கள் இன்னமும் தங்கள் மூளைக்குள் சண்டை யிட்டுக் கொண்டிருக்கிறார்கள், தப்புவதற்கு முயல்கிறார்கள். தங்களுக்கும் எனக்கும் இடையில் அவர்களே தடுப்புச் சுவர் (தடை) எழுப்பிக்கொண்டிருக்கிறார்கள். காரணம், அறிவு சாத்திய மான அத்தனை வழியிலும் முயன்று பார்க்கும். மூளை தந்திர மானது, ஏமாற்றும் திறன் கொண்டது. இதயத்திற்குள் மீண்டும் நுழைய, அத்தனை அனுவாய் அது உங்களை அனுமதிக்காது. உங்கள் மீது தான் கொண்ட ஆதிக்கத்தை அது விட்டு விடாது.

நான் கேட்டறிந்தது:

ஒரு மனிதனும், சின்னப்பையன் ஒருத்தனும் முடிதிருத்தும் கடைக்குச் சென்றார்கள். அந்த மனிதனுக்கு சவரம், ஷாம்பு, நகம் வெட்டுதல், முடிவெட்டுதல் என்று வழக்கமான சடங்குகள் நடந்தன. அடுத்து, பையன் நாற்காலியில் உட்கார்த்தி வைக்கப்பட்டான்.

'நான் அணிவகுப்பில் கலந்துகொள்ள, பச்சைநிற கழுத்துப் பட்டி வாங்க வேண்டும். சில நிமிடங்களில் திரும்பி விடுவேன்' என்று சொல்லிச் சென்றான் அந்தமனிதன்.

பையனுக்கு முடிவெட்கிற வேலை முடிந்தது. அந்த மனிதன் இன்னமும் வந்தபடியில்லை. கடைக்காரன் பையனிடம் சொன்னான். 'பார்த்தாயா உன்னுடைய அப்பாவுக்கு உன்னைப் பத்தின ஞாபகமே இல்லை போலிருக்கு' என்று.

பையன் சொன்னான், 'அவர் என்னோட அப்பா அல்ல. வழியில் வருகிற போது, என்னுடன் கைகோர்த்துக் கொண்டு,

சொன்னார், 'குழந்தே, நாம ரெண்டுபேரும் ஃப்ரீயா முடி வெட்டிக்கலாம்'னு!

அறிவின் (மனதின்) ஒட்டு மொத்த செய்கையும் தந்திரமானது. மற்றவர்களுடன் போட்டிப்போடுவதற்கான உத்தியை நீங்கள் உருவாக்கிக் கொள்கிறீர்கள், சாமர்த்தியமாக மனிதர்களை ஏமாற்றுகிறீர்கள். காலப்போக்கில் ஏமாற்றிக் கொண்டு விடுவீர்கள். மனம் அதைத்தானே செய்கிறது. அது மற்றவர்களை ஏமாற்றுகிறது. உங்களையும் ஏமாற்றுகிறது.

தற்போது உங்கள் மனம் பிரச்சினையை உண்டாக்குகிறது. 'வீட்டைத்தேடு, கடவுளைத்தேடு, ஞானம் பெற முயற்சி செய் என்று மனம் சொல்லிக் கொண்டேயிருக்கும். அது தற்போது பல புதிய குறிக்கோள்களை உங்களுக்காகத் தயார்ப்பண்ணும். குறிக்கோள் உங்களைப் பற்றிக் கொண்டதும், நீங்கள் மனதின் பிடியில் சிக்கிக் கொள்கிறீர்கள். 'நான் வந்தாச்சு, நீ போய்த் தொலை' என்று மனதிடம் உங்களால் சொல்ல முடிந்தால், இதுதான் உங்கள் வீடு, 'இதற்கு மேல் எங்கும் போவதில்லை' என்று நீங்கள் சொல்கிற போது இதுவே ஞானம்... வழக்கமாக நீங்கள் இப்படி நடந்துக்கொள்வதில்லை என்பதால் மனம் சிறிது குழப்பமடையும், அதிர்ச்சி கொள்ளும். நீங்கள் தொடர்ந்து அதே சங்கதியைச் சொல்லிக் கொண்டிருந்தால், மெல்ல மெல்ல அது புரிந்து கொள்ளும் தன்னுடைய அதிகாரத்தில் நீங்கள் இருக்க வில்லை என்பதை அப்போதுதான் அது நிற்கிறது. தனக்குத் தெரிந்த வாறெல்லாம் அது முயன்றபடி இருக்கும். அந்த முயற்சிகளில் அகப்பட்டுக் கொள்ளாது, நீங்கள் கவனமாயிருக்க வேண்டும்.

அதுவே நான் உங்களுக்காகச் செய்கிற வேலை, நீங்கள் உங்களுடைய இடத்துக்குச் வந்துவிட்டதை தொடர்ந்து நினைவு படுத்திக் கொண்டிருக்கிறேன். இப்போது உங்களுக்கு இறை யுணர்வு கிடைத்துவிட்டிருப்பதை, இந்தக் கணத்திலேயே உங்கள் மீது வர்ஷிக்கப்படுவதை உங்களுக்குத் தெரிவிப்பதே என்னுடைய வேலை. இறையுணர்வு எங்கும் பரவிக்கிடக்கிறது - காற்றில், சூரியனில், பூக்களில், பறவைகளில் கீதத்தில், உங்களுக்கும் எனக்கும் இடையிலான அமைதியில், நமக்கிடையேயான வார்த்தைப் பரிமாற்றத்தில், தோழமையில் இருக்கிறது இறையுணர்வு. இந்த

மவுனம். இந்த இருப்பு நம்மிடையே மலர்ந்திருக்கும் அன்பு இவையெல்லாம் இணையுணர்வுதான். இந்த அன்பு தான் வீடு.

ஆனால் மனதிடம் எச்சரிகையாயிருங்கள். உண்மையில் எல்லா மரபுகளிலும் மனதிற்குப் பல்வேறு பெயர்கள் உண்டு. ஒரு மரபில் அது 'பேய்' என்றும், மற்றொன்றில் 'சாத்தான்' என்று அழைக்கப்படுகிறது. ஆனால் அதுவெல்லாம் மனதைப் பற்றிய உருவகங்களேயாகும்.

இயேசு மலைகளில் சஞ்சரிக்கிறார், தியானம் பண்ணுகிறார், அப்போது பேயை எதிர்கொள்கிறார். அந்தப்பேய் யாரென்று உங்களுக்குத் தெரியுமா? அது புறத்தேயிருக்கிற யாரோ அல்ல. குழந்தைகளுக்காக எழுதப்படுகிற கதைகளில் தலையில் கொம்பு, நீண்ட வால், குளம்புகளும் உறுமிக் கொண்டிக்குமே அந்தப் பேய்களில்ல அது.

இயேசுவைக் கவர்ந்திழுக்க முயன்ற பேய் எது? அதுதான் மனம். பேய் என்பது மனம் குறித்த மிகப் பழைமையான உருவகம் (metaphor) நீங்கள் என்ன செய்கிறீர்கள் என்பதை அது கண்காணித்தபடி இருக்கும். நீங்கள் அதை ஊட்டி வளர்த்துக் கொண்டிருந்தால் அது சமர்த்தாக இருக்கும். அதனிடமிருந்து நீங்கள் விலக முற்பட்டால் அது உங்களுக்குத் தொல்லை கொடுக்கத் தொடங்கிவிடும். ஒரு திட்டம் பலிக்கவில்லை என்றால், தன் திட்டத்தை அது உடனே மாற்றிக் கொள்ளும். அது உண்மையி லேயே சமர்த்துதான்.

பிறிதொருநாளில் கபீரின் சூத்ரங்களை நீங்கள் கேட்டிருக் கிறீர்கள். அவர் கூறினார்.

'நான் காமத்தை அடக்கினேன், அது கோபமாக மாறியது, நான் கோபத்தை அடக்கினேன் அது பேராசையானது. நான் அடக்கிய பேராசை கர்வமாய் முகம்காட்டியது அதே மனந்தான், ஒரே மனந்தான்.நீங்கள் அதனுடன் சண்டையிடத் தொடங்கினால், தன்னுடைய நிறங்களை அது மாற்றிக் கொண்டேயிருக்கும் - அது ஏமாற்றுவதற்காகத் தான்?

அடக்கிவைத்த காமம் கோபமாக மாறுகிற பொழுது, அது காமந்தான் என்பதை நீங்கள் புரிந்து கொள்வதில்லை. கோபம்

என்றே பாசாங்கு செய்கிறீர்கள். கோபம் காமத்தில் இருந்து முற்றிலும் மாறுபட்டதாய் காட்சியளிக்கும். உண்மையில் அவை துருவ முனைகளாய் தெரியும். காமத்தில் நேசம் இருக்கிறது. கோபத்தில் வெறுப்பு இருக்கிறது - அவை எப்படி ஒன்றாக இருக்க முடியும்? மனம் எதிரிடையானதை மறைக்கமுயலும் விளங்காததைக் கண்டுக்கொள்ள பெரிய அளவில் அறிவுத் திறன் தேவைப்படும். இல்லையேல் நீங்கள் ஏமாற்றப்படுவீர்கள். பிறகு, கோபம் உங்களை வேதனைக்குள்ளாக்கும்.

நீங்கள் கோபத்தை அடக்கிவைத்தால் அது பேராசையாக மாறும். கோபம் பேராசையாகிறது என்பதை தர்க்கரீதியாக யார்தான் சிந்திக்க முடியும்? அவை ஒன்றுக்கொன்று தொடர்புடையதாய் தெரியவில்லை. உள்ளார்ந்து நிகழ்வுகளை நீங்கள் ஊன்றிக் கவனித்தால் ஒழிய அந்தத் தொடர்பை உங்களால் புரிந்துக் கொள்ளமுடியாது. மனம் அப்படி பல புதிய முகங்களை, புதிய முகமூடிகளை தரித்துக் கொண்டுவிடும். அதன்பிறகு நீங்கள் பேராரசையை அடக்க அது கர்வமாய் முகங்காட்டுகிறது அது எல்லையற்றதாய் என்றென்றும் தொடரக் காண்பீர்கள்.

திருமதி. ஃப்ளெஷ்மன் என்பவரும், திருமதி. ருட்கின் என்பவரும் கேட்ஸ்கில் மவுண்டன் ஓட்டலில் முன்பகுதியில் இருந்த ஆடு நாற்காலிகளில் ஆடிக் கொண்டிருந்தனர்.

திருமதி. ஃளெஷ்மன் 'அடிக்கடவுளே! அந்தப் பையனைப் பார், எவ்வளவு பெரிய மூக்கு. இப்படியொரு மூக்கை பார்த் திருக்கிறாயா? இது போன்ற தொங்கு வாயைப் பார்த்ததுண்டா?' என்று வியப்புடன் கூவினார். 'கண்ணுகூட ஓரப்பார்வையா இருக்கு!'

திருமதி. ருட்கின் சொன்னாள், 'தெரியலையா, என்று அது என்னோட பையன்' என்று.

திருமதி. ஃப்ளெஷ்மன் சொன்னாள், 'நல்லது, பையனின் தோற்றம் ரொம்பவே நல்லாயிருக்கு' என்று.

மனம் ஒரு ராஜதந்திரி, அரசியல்வாதி - அதுஒரு பேய். நீங்கள் அதனிடம் ஏமாற்றிக் கொண்டேயிருக்கும், அத்தனை பிறவிகளிலும் ஒரு சிறிய மெழுகுவர்த்தியைப் போல் கொஞ்சம்

நுண்ணறிவைப் பயன்படுத்தி உள்ளே கண்காணியுங்கள், மனம் என்ன செய்கிறது என்பதை அமைதியாய் கவனித்திருங்கள். மெல்ல மெல்ல உங்கள் அறிவுத்திறன் வலுப்படும். அறிவுத்திறன் அதிகரிக்கிற பொழுது மனம் செயலிழக்கும்.

நுண்ணறிவிற்கும் (intelligence), அறிந்து கொள்ளும் திறனுக்கும் (intellect) வேறுபாடு இருக்கிறது அறிந்து கொள்ளும் திறன் மனதின் ஒரு பகுதி. நுண்ணறிவு இதயத்தின் ஒரு பகுதி. இரண்டும் ஒன்றாகாது. நான் நுண்ணறிவு என்றதன் மூலம் பிரத்யேக அறிவு பெற்றவர்களின் குழுவை (intelligentsia)க் குறிப்பிடவில்லை. அந்த அறிஞர்கள் பெரியதாய் பல்கலைக்கழகப் பட்டங்கள் பெற்றிருக்ககூடும். நிறைய அறிவை சேகரித்திருந் தாலும் அவர்களுக்கு எதுவும் தெரியாது. எல்லாமே இரவலாய் பெறப்பட்ட அறிவு. அது கிளிப்பிள்ளை அறிவு, எந்திர கதியி லானது. அந்த அறிவுக்கும் அவர்களுடைய இருப்புணர்விற்கும் தொடர்பிருக்காது. அது அவர்களுடைய இதயத்தில் ஊற்றெடுப்ப தல்ல. நான் நுண்ணறிவு பற்றிப் பேசுகிறபோது இதயத்தை குறிக்கிறேன் - உங்களுக்குள் குறிப்பிடத்தக்க ஏதோ ஒன்று நிகழ் கிறது. அது புறத்தேயிருந்து வந்ததல்ல. அது புறத்தில் இருந்து வந்ததாயின் அறிந்து கொள்ளும் திறனை அது தோற்றுவிக்கும், அது உள்ளில் இருந்து வந்திருந்தால் அது நுண்ணறிவு எனலாம்.

இந்தச் சூழ்நிலையை, இந்த வாய்ப்பை, இந்த இடத்தை நான் உருவாக்குகிறேன். அத்தனை விதமான சவால்களையும் நான் உங்களுக்குத் தருகிறேன். சமுதாயப் பண்ணை வளர்வதைப் போலவே சவால்களும் அதிகரிக்கும். இச்சவால்கள் ஒரு குறிப் பிட்ட நோக்கத்தைக் கொண்டிருக்கும் - அவை உங்களுடைய அறிவுத் திறனைத் தூண்டி செயல்படும் தன்மையாக்கு வதற்குகாகவே சிந்தித்துச் செய்யப்பட்டவை. உங்கள் அறிந்து கொள்ளும் திறனால் (intellect) சமாளிக்க முடியாத புதிய சூழ்நிலைகள் அவை. உங்கள் நுண்ணறிவை (intelligent) மேலே கொண்டு வருவதற்கு அந்தப்புதிய சூழ்நிலைகள் உதவும்.

நீங்கள் வீடு வந்து சேர்ந்ததை அறிந்துக்கொள்ள நுண்ணறி வும், புரிந்து கொள்ளும், விழிப்புணர்வும் தேவைப்படும். உங்கள் இருப்புணர்வில் நன்றியறிதலும் நன்றிசெலுத்துகிற தன்மையும் பெரிய அளவில் தோன்றும். அவையே பிரார்த்தனையாகிறது.

*மூன்றாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! நான் எதற்காக இவ்வளவு அவசரப் படுகிறேன்? என்னுடைய செயல்முறை கடவுளை தூரத்தில் வைத்திருப்பதை இன்று நான் புரிந்து கொண்டேன், இந்தச் செயல் முறையின் பொருத்தமின்மையைக் காண்கிறேன், நம்பவே கடினமாயிருக்கும் நான் அடைந்திருக்கும் வருத்தம்?***

விரைவு கொள்ள வேண்டும், வேகம் காட்ட வேண்டும் என்றே மனிதனுக்குத் திரும்பத் திரும்பச் சொல்லப்படுகிறது. காரணம் வாழும் காலம் மிகக் குறுகியது, செய்து முடிக்க வேண்டிய காரியங்களோ, அதிகம், பல ஆசைகளைப் பூர்த்தி செய்து கொள்ளும்படி இருக்கும். பல மகிழ்ச்சிகளைப் பெறும் படியாகவும், பலகுறிக்கோள்களை அடையும் படியாகவும் இருக்கும். எனில், வாழ்க்கையோ உண்மையில் மிகக் குறுகியதாயிருக்கிறது. ஆசை களுக்கு அளவேயில்லை. அனைத்தும் நடந்தாக வேண்டும், ஆனால் போதிய கால அவகாசந்தான் இல்லை.

நீங்கள் அறுபது ஆண்டுகள் இருப்பதாக வைத்துக் கொண்டால், இருபது ஆண்டுகள் உறக்கத்தில் கழிந்துவிடும். மூன்றில் ஒரு பகுதி! மீதமிருப்பது நாற்பது ஆண்டுகள். வயிற்றுப் பிழைப்புக்கு வழி - செய்வதில் இருபது ஆண்டுகள் போய்விடும். அது - அலுவலகம் செல்வது, வீடுதிரும்புவது என்கிற நடைமுறை ஒழுங்கைக் கொண்டிருக்கும்.

இருபது ஆண்டுகள் மட்டுமே எஞ்சியிருக்கும் அந்த இருபது ஆண்டுகளில் கிட்டதட்ட பதினைந்து ஆண்டுகள் - தொலைக் காட்சி, சினிமா பார்ப்பது, சூதாடுவது அண்டை அயலாருடன் அரட்டை, வம்பளப்பு என்று தீர்ந்துவிடும். ஆக, கையில் இருப்பது ஐந்து ஆண்டுகள் மட்டுமே. அந்த ஐந்து ஆண்டுகளில் பல நோய்களைச் சமாளிப்பது, திருமணம் போன்ற நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வது, மனைவி குழந்தைகளுடன்... என்று ஆயிரத்தி யொரு சங்கதிகள். பட்டியலிட்டால் நீண்டு கொண்டே போகும்.

இப்படிப்பட்டியல் போடுகிறவர்கள் சொல்கிறார்கள், அறுபது ஆண்டுகளில் ஒரு சில மாதங்கள் மட்டுமே உங்களுடையதாக விடப்பட்டிருக்கும் என்று. அந்தச் சில மாதங்களில்தான் உங்க ளுடைய இலட்சோலட்சம் ஆசைகளை நீங்கள் நிறைவேற்றிக்

கொள்ளும்படி இருக்கும். இயற்கையாகவே, விரைவுணர்ச்சி இருக்கவே செய்யும். அது மேற்கில் அதிகம். காரணம் கிழக்கில், பல பிறவிகள் இருப்பதாக ஓர் அழகான கருத்தினை (concept) நாம் வைத்துக் கொண்டிருக்கிறோம். எனவே இங்கு (கிழக்கில்) அவசரம் காட்டுவதில்லை. இறப்பது பற்றிய கவலை கிடையாது. அடுத்தடுத்து பிறக்கப்போகிறோமே.

மேற்கில் தோன்றிய கிறிஸ்தவ, யூத, இஸ்லாம் மதங்கள் - ஒரே பிறவி என்று நம்புகின்றன. வாழ்க்கைச் சட்டங்களைக் கடவுள் வெளிப்படுத்துவதாக கூறும் யூதக் கொள்கையை மூல மாய்க் கொண்டவை அவை. உண்மையில் ஆதி மதங்கள் இந்து மதமும், யூதமதமுமே. புத்தம், சமணம், சீக்கியம் போன்றவற்றை முக்கியக் கிளையில் இருந்து பிரிந்த சிறு கிளைகள் எனலாம். அவை இந்து மதத்தின் கிளைகள். இந்து மதம் பல பிறவிகள் உண்டு என்று நம்புகிறது. இந்தியர்கள் சோம்பேறிகளாக இருந்ததற்கு அவர்களுடைய பிறவிக்கொள்கை காரணமாக இருந்திருக்கும். இந்தியர்கள் காரணமாக இருந்திருக்கும். இந்தியர்களின் பிரச்சினை வேகம் அல்ல, சோம்பேறித்தனம், அவர்களிடம் செயல் நோக்கம் (motive) இல்லாததும் பிரச்சினை.

இந்தியா ஏழைநாடு என்கிறார்கள் - காரணம் செயல்படுவதில் இவர்களுக்கு விருப்பம் இருப்பதில்லை. செய்யவேண்டிய காரியங்களை அடுத்த நாளைக்கு அடுத்தபிறவிக்கு தள்ளிப் போட்டுவிடுகிறார்கள். மேற்கிந்திய வேகம் இங்கேகிடையாது. காலம் நிரம்ப இருக்கிறது, எதற்கா்க அவசரம் காட்டவேண்டும்? மேற்கிந்திய கவலை, இறுக்கம் எல்லாம் நம்மவர்க்கில்லை.

நீங்கள் மேற்கிலிருந்து வந்தவர் என்பதால் உங்களிடம் அவசரம் தெரிகிறது. இருக்கிற ஒரு பிறவியில் செய்ய வேண் டியவை ஏராளம். யூத - கிறிஸ்தவ மரபுக்காரர்கள். இயல்பாகவே அவசரம் காட்டுவார்கள். அவர்கள் எப்போதும் ஓடிக் கொண்டிருப் பவர்கள். உறக்கத்தில் கூட அவர்கள் அமைதிகாண்பதில்லை. உறங்கும்போதும் அவர்கள் இயங்குகிறார்கள், தொலை தூர நாடுகளுக்குப் பயணம் போகிறார்கள். உறக்கத்தில் கூட தங்கள் அறையில் இருப்பதில்லை. தாங்கள் இருக்கிற இடத்தில் இல்லாமல் வேறெங்கோ இருக்கிறார்கள்.

நீங்கள் என்னிடம் கேட்கிறீர்கள், 'நான் எதற்காக எப்போதும் அவசரத்தில் இருக்கிறேன்' என்று.

நீங்கள் யூதமதத்தில் இருந்து வந்தவர்.செயல்படுங்கள். செயல்படுகிறவருக்கு எப்போதுமே மதிப்பு உண்டு. சுறுசுறுப்பாக இருங்கள். துரிதமாய் செயல்படுங்கள்.

யூதர்கள் எங்கிருந்தாலும் தங்களுடைய செயல்திட்டங்களைக் கையோடு கொண்டு செல்வார்கள். நரகத்தில் கூட பேயை ஓய்வாக இருக்க விடுவதில்லை இது யூத மரபு. ஒரு பிறவி குறுகிய வாழ்க்கை. செய்து முடிக்க வேண்டியவை நிறைய செய்தாக வேண்டும்.

நீங்கள் யூதர்களுக்கான மரபை விட்டு, வெளியே வந்துவிடுங்கள். அதற்காக இந்தியனாகி விடவேண்டாம் என்று கூற மாட்டேன். அது ஒரு தவறுக்குப்பதில் வேறொரு தவறைச் செய்வதாகி விடும். எல்லா மரபுகளில் இருந்தும் வெளியே வந்து விட வேண்டும். இந்துக்களுக்கு நான் சொல்லக்கூடியது இந்து மரபிற்குரிய சோம்பலை, மகிழ்ச்சியற்ற தன்மையை விட்டொழி யுங்கள். என்பதுதான். யூத, கிறிஸ்துவ, இஸ்லாமியர்களுக்குச் சொல்வேன், இடைவிடாத வேகம், மன இறுக்கம் இவற்றை விட்டுவிடுங்கள் என்று.

வாழ்க்கையை மகிழ்ச்சியாக வாழுங்கள், செயல்படுங்கள், ஆனால் கடுமையில்லாமல் தணிவு நிலையில் செயல்படுங்கள், ஓய்வாக செயல்படுவதை வாழ்க்கையின் கலைத்திறன் என்றே கூறலாம். செயல் (action) என்பது கட்டாயம், நீங்கள் செயல்படாமல் வாழ முடியாது – ஆனால் செயலை அலட்டிக்கொள்ளாமல் வாழமுடியாது – ஆனால் செயலை அலட்டிக் கொள்ளாமல் செய்ய முடியும் – 'wu - wei' என்ற சொல்லைப் பயன்படுத்துகிற போது லாவோட்சு அதையே கருத்தில் கொள்கிறார். அது லாவோட்சுவிற்கு முக்கியத்துவம் வாய்ந்த ஒன்று, லாவோட்சுவைப் போலவே எனக்கும் 'wu wei' என்கிற சொல்லின் பொருள் 'செயலை வேகமின்றிச் செய்வது' ஆகும். ஒரு செயலை நீங்கள் செய்கிறபோது உங்களுக்கு இறுக்கம் (மனம் அமைதியற்று அலைவுறல்) ஏற்பட்டு விடக் கூடாது. அதை ஒரு விளையாட் டாகவே போல் செய்யவேண்டும். அது குறித்த கவலை

இருக்ககூடாது. ஒரு சாட்சி பாவத்தில் இருந்து கொண்டு செய்ய வேண்டும்.

லாவோட்சுவின் வழி இந்துக்களுடையதல்ல, யூதர்களுடையதுமல்ல. லாவோட்சு ஒரு மரபையோ, மதத்தையோ தோற்றுவித்து விடவில்லை. யூதர்கள் மூன்று பெரிய மதங்கள் தோன்றக் காரணமாயிருந்தார். இந்துக்கள் மூன்று பெரிய மதங்களை தோற்றுவித்தனர். ஆக, இவர்கள் இரு வகையினரும் ஆறுமதங்களைத் தோற்றுவித்திருக்கிறார்கள். லாவோட்சு தனியொருவராக இருந்தார். சிலர் மட்டுமே அவரைப் பின்பற்றினர். ஆம் லாவோட்சுவின் உலகில் பிரவேசித்திருப்பவர்கள் வெகுசிலர் தாம். தனி நபர்கள் அவர்கள் அந்த வழியில் ஒரு மதம் உருவாகி விடவில்லை. காரணம் தாவோ கோட்பாடு மதவெறியர்களை உருவாக்கவில்லை, அதன் அணுகுமுறை அத்தகையது. உங்களால் மதவெறியர்களை உருவாக்க முடியும்? தாவோ கோட்பாடு மனதின் சமநிலையை, அமைதியை, சாந்தத்தை, வழங்குவது. தாவோ வழியில் வெறியர்களைத் தோற்றுவிப்பதற்கில்லை. அது நரம்பு மண்டலக் கோளாறு உள்ளவர்களுக்கு மட்டுமே சாத்தியம்.

இந்துக்கள் ஒருவித நரம்புக்கோளாறை உண்டு பண்ணுகிறார்கள், யூதர்கள் வேறு வகையான நரம்புக் கோளாறை உண்டாக்குகிறார்கள், இரு சாராருமே பெரிய மதங்களைத் தோற்றுவித்தவர்கள். இப்படி மதங்கள் என்று அழைக்கப்படுகிறவை எல்லாம் கருத்தாகவே சங்களின் (மன உறுத்தல்) தொகுப்பு என்கிறார் சிக்மண்ட் ஃப்ராய்டு. புத்தர், இயேசு, லாவோட்சு, ஜராதுஷ்ட்ரர் - இவர்களெல்லாம் மதப்பற்றுடையவர்கள் அல்லர். அவர்கள் சமச்சீர் நிலைகொண்ட சாந்த சொரூபிகள், முழுமையுற்றவர்கள். ஒரு கூட்டத்தின் பகுதியல்ல அவர்கள்.

தேவாலயத்தில் கூடுகிற மக்களுக்கு தனிமை ஓர் அச்சுறுத்தல். தங்களுடைய உளக்கோளாறு பற்றிய பயம் அவர்களுக்கு. தங்களைப் போன்றவர்களுடன் ஒன்றாகக் கூடியிருக்கும் போது சவுகர்ய உணர்வை அவர்களால் பெற முடிகிறது. எவ்வித இடர்ப்பாடும் இல்லாமல், கலக்கமற்று இருக்கிறார்கள். உங்களைப் போன்ற பலருடன் இருக்கும்போது உங்கள் உபாதையை நீங்கள் மறந்து விடுவீர்கள்.

மனிதஇனம் அப்படியொரு குழப்பநிலையில் வாழ்ந்து கொண்டிருக்கிறது. ஒன்று, ஓர் உச்சமுனைக்குச் சென்று அங்கேயே நிலைத்து விடுவது அல்லது மறு உச்சத்திற்குச் சென்று அங்கேயே நகராமல் இருந்துவிடுவது.

உடல், மன ஆரோக்கியம் உள்ள ஒருவரால் ஒரே இடத்தில் ஒட்டிக் கொண்டிருக்கமுடியாது. அவர் தேங்கி கிடப்பவர் அல்ல. அவர் செயல் வேகம் உடையவர். அவரால் வேகமாகச் செயல்பட முடியும், வேகமற்றவர்களாக இருந்து கொண்டு அவர் **'wu wei'** செயல்முறை அறிந்தவர். நீங்களும் அதைக் கற்றுக் கொள்ளலாம்.

வேகம் மேற்கிந்திய சிந்தனையில் குறியீடு எனலாம். வேகத்தின் **(hurry)** காரணமாகவே விரைவாகச் செல்லும் வாகனங்களை அவர்கள் அதிகம் உற்பத்தி செய்கிறார்கள். கிழக்கில் கட்டை வண்டிகள் அதிகம். கிழக்கில் மிகப்பெரிய விஞ்ஞானிகள் இருந்தாலும் அவர்கள் ஆராய்ச்சியில் முனைப்பு காட்டுவதில்லை. சிறந்தகாலைகளை, சிறந்த வாகனங்களை, விமானங்களை விண்கலன்களை உருவாக்கக் கடினமாய் உழைப்ப தில்லை. அவர்களுக்கு வேகத்தில் விருப்பம் இல்லை. அப்படி யென்ன தலைபோகிற வேலை? எதுக்காக அவசரப்படணும்!

மேற்கில் தொடர்ந்து அதிவேக சாரனங்களை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் ஒலியின் வேகத்தை மிஞ்சி விட்டார்கள். தற்போது மனிதன் ஒலியை விட வேகமாய் பயணம் செய்கிறான். மேற்கிந்திய தொழில் நுட்பம் ஒளியுடன் போட்டி போடுகிறது. மனிதன் ஒளியை விடவும் விரைந்து பயணம் செய்ய விரும்புகிறான். யாரும் கேட்பதில்லை, 'நீ எங்கே போகிறாய்? அங்கே என்ன செய்யப் போகிறாய்?' இன்று நீங்கள் நிலவுக்குப் போகலாம். ஒரு நாள் ஏதோ ஒரு நட்சத்திரத்துக்குப் போய்ச் சேரலாம். ஆனால், என்ன செய்வீர்கள்? கல்ப்போர்னியாவில் என்ன செய்து கொண்டிருந்தீர்களோ அதைத்தான் அங்கேயும் செய்வீர்கள், காரணம் நீங்கள் அதே பழைய ஆள்தான். அதே பொருளற்ற செயல்களையும், தொல்லைகளையும் உண்டு பண்ணிக் கொண்டிருப்பீர்கள். அந்த பாவப்பட்ட நட்சத்திர மண்டலத்தை பாழபடித்து விடுவீர்கள். அதன் ஆறுகளை அசுத்தமாக்கி வைப்பீர்கள், அதன் கடல்களை அழிப்பீர்கள், அங்குமிங்கும் தேவையில்லாதவைகளை உபயோக மற்றவைகளைக் குவிப்பீர்

கள். அங்கேயும் அரசியல், சமூக, பொருளாதார க் கொள்கை களுக்காகச் சண்டை போடுவீர்கள். அங்கேயும் உங்களால் அமைதியாயிருக்க முடியாது. போனகையோடு பிரிவினை பண்ணுவீர்கள். அணுகுண்டுகளைத் தயாரிப்பீர்கள், அல்லது இங்கிருந்தே கொண்டு போவீர்கள்.

செயலிலும், வேகத்திலும் அதிக விருப்பம் மேற்கிற்கு. ஆனால் செய்கிறவையெல்லாம் பயனற்றவைகளாக இருக்கும். காரணம் அது நரம்புக் கோளாறுள்ள மனதின் வேலை. கிழக்கிற்கு செயல்படுவதில் விருப்பம் இல்லை. எவ்வகை செயலிலும் ஆர்வம் இருக்காது. காரணம் அது இன்னொரு வகை நரம்புக் கோளாறு கொண்டது. மக்கள் சோம்பேறிகள், தங்கள் சோம்பலைப் பற்றி தத்துவார்த்தமாக பேசுவார்கள், ‘வேலை செய்து, சம்பாதித்து என்ன ஆகப்போகிறது? ஒரு நாள் போயத்தான் ஆகவேண்டும், ஏன் வீணே கவலைப்படுவது? இருக்கிறவரை நிம்மதியாய் இருந்து போகலாமே’ என்று.

மனிதனுக்கு தேவை ஒரு சமச்சீர்நிலை. புறத்தே சுறுசுறுப்பாக செயல்பட்டுக் கொண்டு, அகத்தே செயலற்றிருக்கக் கற்றுக் கொண்டால் அந்தச் சமநிலை சாத்தியப்படும். நாங்கள் அதைத் தான் இங்கே செய்ய முயற்சிக்கிறோம்.

ஆசிரமத்துக்கு வருகிறவர்கள் கொஞ்சம் குழப்பத்திற்குள்ளா கிறார்கள். ‘எல்லாமே செயல்பட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் யாரும் இறுக்கம் அடைவதாய், தெரியவில்லை’ என்று, பலர் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள். பொது அலுவலகத்திலும், பணிக்கூடத்திலும், பத்திரிக்கை அலுவலகத்திலும் நிறைய பேர் வேலைப்பார்க்கிறார்கள். சுமார் முந்நூறு பேர் விடுமுறையேயில் லாமல் வேலைப்பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் யாரும் இறுக்கமடையவில்லை.

மன அலைவு இல்லாமல் செய்கிற எந்த வேலையும் நேர்த்தியாக அமையும். அவசரம் காட்டாமல், விளையாட்டுபோல் செய்ய வேண்டும். அது நுட்பநயம் கொண்டாதாயிக்கும். அப்போது நீங்கள் கிழக்கிந்தியராகவோ மேற்கிந்தியராகவோ இருக்க மாட்டீர்கள். நான் அதைத்தான் ‘புதிய மனிதன்’ என்கிறேன். என்னுடைய சந்நியாசிகள் அதை நிருபித்துத்திருக்கிறார்கள்.

லாவோட்சு அதைப்பற்றி கூறியிருக்கிறார். ஒரு சிலர் அதை முயன்று பார்த்திருக்கிறார்கள். நான் இலட்சோபலட்சம்பேர் முயன்று பார்க்குமளவிற்கு அதைப்பெரிய அளவில் உருவாக்க முயற்சி மேற்கொள்கிறேன். செயலற்ற நிலையில் இருந்து கொண்டு செயல்படுவதென்பது பெரும்பாக்கியம், ஒவ்வொருவரும் அதைச் சிறிதேனும் ருசிக்க வேண்டும்.

நீங்கள் வேலை செய்கிறபோது, அதை ஞாபகத்தில் வையுங்கள், உலவச் சென்றாலும் அது ஞாபகத்தில் இருக்கட்டும் - அவசரப்படத் தேவையில்லை. நடைப்பயிற்சியில் மகிழ்ச்சி கொள்ள வேண்டும். நிதானமாக நடந்து செல்லுங்கள். அதிலென்ன குறிக்கோள் வேண்டிக் கிடக்கிறது. போகிற வழியில் மரங்களை, பறவைகளை சூரியனை, வானத்தை, மேகத்தைக் கண்டு மகிழுங்கள். மண்ணில் இருந்துகிளம்பும் வாசனை, எதிர்ப்படும் மனித முகங்கள் எல்லாமே மகிழ்ச்சியளிப்பவைதாம். விழிப்போடு இருங்கள்.

சோம்பல் உள்ளவர் கவனமற்றவராயிருப்பார். துரிதச் செயல்பாடுள்ள வரும் கவனமாயிருக்கமாட்டார். தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அவரால் கவனிக்க முடியாது. எங்கேயும் பார்வையைத் திருப்ப முடியாத வேகம் இருக்கும் அவரிடம். தம்முடைய குறிக்கோளிலேயே கருத்தூன்றியவராய், கவனத்தைக் குவித்திருப்பார் அவர். சோம்பேறியோ எச்சரிக்கை யில்லாமல், தன்னுணவற்றவராய் இருப்பார். அவரால் எதையும் கண்டு கொள்ள இயலாது. ஆக, இருவருமே பார்க்கும் திறன் இல்லாதவர்கள்தாம்.

நீங்கள் ஒரு கூட்டிணைவைக் கண்டுபிடித்துக் கொள்ள வேண்டும். உங்களிடம் துரிதச் செயல்பாட்டுடன் கவனமும், சோம்பேறியின் இறுக்கமற்ற தன்மை (relaxation)யும் ஒருசேர அமைந்திருக்க வேண்டும். இரண்டு தன்மைகளும் இணைந்தால் உங்களிடம் ஒரு சமநிலை வந்துவிடும். வாழ்க்கை ஒரு புதியசுவை உடையதாகும். ஒரு புதிய மகிழ்ச்சியும், பரவசமும் கொண்டவ ராவீர்கள்.

சில் வர்ஸ்டெயின், பழக்கங்களில் தீவிரமுடைய தச்சர் - ஓர் அமைப்பில் இணைந்தார். தமக்கு வழங்கப்பட்ட உறுப்பினர் சீட்டுடன் வீட்டுக்கு வந்தார்.

தமது மகனிடம் , 'பார்த்தாயா, நான் 'ப்ராஸ்டிட்யூட் (prostitute) க்ளப்' பில் சேர்ந்திருக்கிறேன்' என்று மகனிடம்.

கார்டை (card)க் காண்பித்து, பெருமைப்பட்டுக் கொண்டார்.

'என்னது?' திகைப்புற்ற மகன் கார்டை வாங்கிப் படித்துக் பார்த்தான்.

'அப்பா , அது' 'பாராசூட்' (parachute)க் ளப்' என்றான்.

'வருஷத்திற்கு அறுபத்தியஞ்சு தடவை குதிக்க உத்தரவாதம் கொடுத்திருக்காங்க. அதான் எனக்குத் தெரியும்' என்றால் சில்வர்ஸ்டன்.

ஏதாவதொரு அமைப்பு அல்லது கழகத்தில் இப்படிச் சேர்ந்து கொள்பவர்கள் இருக்கிறார்கள். தாங்கள் தாங்களாகவே இருப்பதில் அச்சப்படவார்கள். அவர்களால் தனித்திருக்க முடியாது. எப்போதும் தலைதெறிக்க ஓடிக் கொண்டிப்பவர்களிடம், 'எங்கே போகிறீர்கள் என்று கேட்காதீர்கள். எங்கே என்று அவர்களுக்கே தெரியாது. ஆனால், வேகமாகவும், அவசரமாகவும் வேலை பார்ப்பவர்கள் அவர்களுடைய வேலை (தொழில்) அவர்களிட மிருந்தே அவர்களைச் தள்ளியிருக்கச் செய்துவிடும். தங்களுக் குள் இருக்கும் வெறுமை (hollowness)யை அவர்கள் காணத் தவறிவிடுவார்கள்.

உங்கள் வேகம் உங்களுடைய ஆத்மாவிடம் இருந்து உங்களை நழுவியோட வைக்கும். நீங்கள் வேகம் போனால், அவசரக்காரராயிருந்தால், வேலை உங்களை ஆக்ரமித்துக கொண்டால், உங்களைப் பற்றியே உங்களுக்கு அச்சம் உண்டாகி விடும். உள்ளிருக்கும் வெறுமையின் அழகுகளை அறியா திருப்பதால் உண்டாகிற அச்சம் அந்த வெறுமையை எதிர்பட நீங்கள் விரும்பமாட்டீர்கள்.

உண்மையில், உள்ளிருக்கும் அந்த வெறுமை வாழ்க்கையின் மிகச் சிறந்த அனுபவமாகும். அது ஞானம், அது முழுமையான அமைதி, ஒற்றைச் சொல்லும் இல்லாத மவுனம். யாருமில்லை, எதுவுமில்லை, அகந்தையோ, அடையாளமோ இல்லை என்பது மிகச் சிறந்த அனுபவம், நிறைவான மகிழ்ச்சி! மக்கள் நாள் முழுக்க வேலையாயிருந்துவிட்டு, அடித்துப் போட்டாற்போல்

தூங்குகிறார்கள், கனவுகளிடம் தங்களை ஒப்படைத்துக் கொள் கிறார்கள். ஆக, இருபத்து நான்கு மணி நேரமும் ஏதோ ஒரு வேலை.

தியானம் என்பது சில நிமிடங்களாவது எதையும் செய்யாமல் இருப்பது தினமும் ஒரு மணிநேரம் எந்த வேலையும் செய்யாமல் இருங்கள். அப்படியே ஒன்றும் செய்யாமல் உட்கார்ந்திருங்கள். அது தொடக்கத்தில் சிரமமாகத் தெரியலாம். தொடங்கும்போது உலகத்திலேயே கடின காரியமாய் தெரிந்தாலும் முடிவில் ரொம்ப எளிதாகிவிடும். யாராவது ஒருவரிடமும், 'நீ எதையும் செய்யாமல் சும்மா உட்கார்ந்திரு' என்று சொல்லிப்பாருங்கள், அவர் படபடப்பாகிவிடுவார். தம்முடைய காலில் ஏதோ எறும்பு ஊர்வது போல் உணரத் தொடங்குவார். அல்லது உடம்புக்கு என்னவோ ஆகிவிட்ட மாதிரி இருக்கும். அமைதியற்ற வராகி விடுவார். காரணம், அவர் எப்போதுமே ஏதாவது செய்து பழக்கப்பட்டவர். அவர் சூடேறிய கார் மாதிரி, எஞ்சின் ரீங்கதித்துக் (humming) கொண்டிருக்கும். கார் நகராதிருந்தாலும் எஞ்சின் சூடேறியதால் ரீங்கரிப்பு கேட்கும். மேலும் மேலும் சூடேறும். நீங்கள் இக்னிஷனை அணைக்க மறந்திருப்பீர்கள். அதுதான் தியானத் திலும் நீங்கள் இக்னிஷனை நிறுத்தும்படி செய்வது அது.

சில நிமிடங்களுக்கு,சிலமணி நேரத்துக்கு உங்களால் முடிந்த அளவு நேரம் அமைதியாக உட்கார்ந்திருங்கள். தொடக்கத்தில் சிரமம் இருக்கும். குறைந்தது மூன்று முதல் ஆறு மாதங்களுக்கு எதையும் செய்யாமல், பாடாமலும் கூட இருக்க வேண்டும். மக்கள் உட்கார்ந்து கொண்டு 'ராமா, ராமா' என்று மந்திரம் உச்சரிக்கவோ பாடவோ, தொடங்கி விடுவார்கள். பிறகென்ன, அதுவே ஒரு வேலையாகி விடும். வேறு வகையான வேலை, மதம் சார்ந்த வேலை.

மனம், மந்திரம் என்கிற இரண்டு சொற்களும் ஒரே மூலத்தைக் கொண்டவை. அவை 'மன்' என்பதில் இருந்து வந்தன. வடமொழி யில் 'மன்' என்பார்கள், 'மனம்' என்று பொருள். மனதை இயக்கத் தில் வைத்திருக்கிறது மந்திரம். எது மனதைப் போஷிக்கிறதோ அது மந்திரம் ஆக, ஒருவருடைய மந்திரம் பணமாக இருக்கும். அவர் பணத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருப்பார். ஒருவருக்கு அரசியல் தான் மந்திரம். சிலர் 'ராமா, ராமா' என்று

உருப்போட்டுக் கொண்டிருப்பார்கள். அவர்களுடைய மந்திரம் அது. ஆனால் எல்லா மந்திரங்களுமே மனதுக்குத் தீனியாகிற வைதாம். மனம் ஒரு பிரச்சினை. நாம் மனதை விட்டு வெளியேறி விட வேண்டும்.

ஒரு மூன்று அல்லது ஆறு மாதங்களுக்கு அமைதியாக உட்கார்ந்து பழகுங்கள். உங்கள் இருப்புணர்வின் தூய்மை, இதயத்தின் சுறுசுறுப்பு, சுவாசத்தின் சீர்த்தன்மை என்று குறிப்பிடத்தக்க, நேர்த்தியான ஒன்று உங்களுக்கு அனுபவமாகும். உங்கள் உள்ளார்ந்த இருப்பில் கேட்கும் இசை மகிழ்ச்சியளிப்பதாயிருக்கும். அது நிரம்பி வழிந்து பிரவாகமெடுக்கும். உங்களுக்குள் கொப்பளிக்கிற மகிழ்ச்சி உங்களைச் சுற்றிலும் பரவும். உங்களைத் தொடர்பு கொள்கிறவர்களுக்கும் அது தொற்றிக்கொள்ளும். ஆம், உங்கள் மகிழ்ச்சி மற்றவர்களிடத்தும் பரவக்கூடியது. அதில் ஒரு நேர்த்தியும், அழகும் இருக்கிறது. ஒரு நிம்மதி உங்களைச் சூழ்ந்து கொள்ளும்.

இதயத்தில் மகிழ்ச்சி பரவி, உள்ளுக்குள் அமைதி இருக்க, நிம்மதி உங்களைச் சுற்றி வளைத்துக் கொள்கிறது,இறையுணர்வு உங்களை எல்லாப்பக்கங்களிலும் சூழ்ந்து கொண்டிருக்கும்.

*கடைசிக் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! இந்தத் தொடரில் ஒரு நாளேனும் தீவிரக்கருத்துடன் உங்கள் உரையை முடிக்கக் கூடாதா? ஒவ்வொரு நாளும் ஒரு நகைச்சுவையுடன் நீங்கள் முடிக்கிற போது எனக்குச் சிரித்து சிரித்து கண்களில் கண்ணீர் வந்து விடுகிறது. நீங்கள் கடலில் ஒரு வெண்ணிற குமிழிபோல் (விவாதம், எண்ணம் முதலானவற்றின் போக்கில் காணாமல் மறைந்து விடுகிறீர்கள்.***

இன்று ஒரு குதூகலமான ‘ஜோக்’கைச் சொல்வதாக இருந்தேன். ஆனாலும், கஷ்டப்பட்டு அதற்கான தூண்டுதலை அடக்கிக் கொண்டேன்.

இன்றைக்கு இது போதும்.

○

*முதலாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! நான் மரணத்தைப் பற்றி அச்சப் படுகிறேன். ஆயினும், அதே நேரத்தில் அது நம்ப முடியாத அளவில் என்னை ஈர்க்கிறது அதற்கு என்ன அர்த்தம்?***

வாழ்வின் மிகப்பெரிய புதிர் மரணம். வாழ்க்கை மறை பொருளான பலவற்றை, புதிர்களை இரகசியங்களைத் தன்னுள் கொண்டிருக்கிறது. ஆனால், மரணத்துடன் ஒப்பிடக்கூடியதாய் எதுவுமில்லை. மரணம் ஓர் உச்சம், படிப்படியான ஒலியின் ஏற்றம் (erescendo) எங்கே அதில் நாம் தொலைந்து விடுவோமா, கரைந்து விடுவோமோ என்கிற அச்சம் ஒருவருக்கு இருக்கவே செய்யும் – அகந்தையால் மரணத்தில் தப்பிப் பிழைக்க முடியாது.

மரணம் முதல்முறையாக உங்களுக்குள் இருக்கும் அகவுணர்வை (subjectivity) எவ்வித மறைப்பு சாதனமும் பாசாங்கும் இல்லாமல் எதிர்கொள்ள வைக்கும்.

எல்லாருக்கும் மரணம் பற்றிய அச்சம் இருக்கிறது, மரணத்திடம் கவர்ச்சி இருக்கிறது. இந்தக் கவர்ச்சியை சிக்மண்ட் ஃப்ராய்டு தவறாக புரிந்து கொண்டதுடன், மனிதனுக்குள் ஒரு 'மரணத்தில் விருப்பம்' இருப்பதாகவும் கருதுகிறார். அவர் அதனை 'தனடோஸ்' (thanatos) என்கிறார். மனிதனுக்குள் இரண்டு இயல்புகள் – உள்ளுணர்வுகள் இருக்கின்றன. ஒன்று ஈராஸ் (Eross) – உயிரோடு இருக்க வேண்டும் என்கிற வேட்கை. எப்போதைக்குமாய் இருத்தல் இறவாநிலை அடைதல். மற்றது 'தனடோஸ்' இறந்துவிடுவதில் விருப்பம் கொண்டிருப்பது. எல்லாமே அத்துடன் ஒரு முடிவுக்கு வந்து விடும் அல்லவா. மொத்தக் கருத்தையுமே அவன் தவறாகப் புரிந்துகொள்கிறான்.

காரணம் அவன் ஒன்றும் ஞானியல்லவே. மரணத்தின் ஒரு முகத்தை மட்டுமே தெரிந்து வைத்திருக்கிறான் அது வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைத்துவிடுகிறது. அவன் ஒன்றை மட்டுமே அறிவான் மரணம் ஒரு முடிவு என்பதான் அது. மரணம் ஒரு தொடக்கமும் ஆகும் என்பது அவனுக்குத் தெரியாது. ஒவ்வொரு முடிவும் மற்றொன்றின் தொடக்கமாகிவிடும். எதுவுமே முற்றாக முடிந்து விடாது. உருவகங்கள் மாறும் வடிவங்கள் மாறும் ஆனால் அவை தொடர்ந்தபடி இருக்கும்.

உங்கள் உருவம் மாறலாம், மறையலாம். ஆனால் உருவமற்ற ஒன்று ஏதோ ஒன்று உங்களுக்குள் இருக்கவே செய்கிறது. உங்கள் சரீரம் இல்லாது ஒழியலாம். ஆனாலும் உங்களுக்குள் குறிப்பிடத்தக்க ஒன்று சரீரத்தினுள் இருக்கத்தான் இருக்கும். அது சரீரத்தின் ஒரு பகுதியாக இல்லா விடினும், உங்கள் மண்சார்ந்த பகுதி மண்ணில் விழும். ஆனால் அது ஒரு புதிய பயணத்தை யாத்திரையைத் தொடங்கும்.

நீங்கள் அகந்தையை நினைக்க, மரணம் அச்சத்தைத் தருவதாகி விடும். உங்கள் உண்மையான சுயத்தை (ஆத்மா) பற்றி எண்ணுகிற போது, மரணம் உங்களைக் கவர்ந்திருப்பதாய் இருக்கும். நீங்கள் அதைப்பற்றிய தெளிவுடன் இருந்தால் அது ஒரு புரிதலாய், மாறுதலை ஏற்படுத்துகிற சக்தியாகி விடக்கூடும்.

அச்சம், கவர்ச்சி இரண்டையும் புரிந்து கொள்ளுங்கள். அவற்றை எதிரிடையானவைகளாய் கருதிக் கொள்ளாதீர்கள். அவை ஒன்றோடொன்று குறுக்கிடுவதில்லை, ஒன்றின் மீது ஒன்று கவிழ்ந்து கொள்வதில்லை. அச்சம் ஒரு பக்கத்தில் செலுத்தப் படுகிறது - அகந்தையின் பக்கம் கவர்ச்சி முற்றிலும் வேறான பரிமாணத்தை நோக்கிச் செலுத்தப்படும் - அது ஆன்மாவின் பக்கம். அச்சத்தை விடவும் கவர்ச்சி முக்கியத்துவம் பெறும். காரணம் அது ஈர்க்கிற ஆன்மா அகந்தை பற்றிபதுதான்.

ஆழ்ந்து சிந்திப்பவருக்கு அச்சம் இருக்கக்கூடாது. அவர் மரணத்தை விரும்பி ஏற்பவராய் இருக்கவேண்டும். அதற்காக அவர் காத்திருக்கக்கூடாது. அவர் அதனை ஒரு நண்பனாய் கருதி அழைப்பு விடுக்க வேண்டும். சிந்திப்பவனுக்கு சரீரம் மரிப்பதற்கு முன்பே மரணம் ஏற்பட்டுவிடுகிறது. அது வாழ்க்கையின் நேர்த்தி

மிக்க அனுபவங்களுள் ஒன்று. சரீரம் இருந்து கொண்டிருக்கிறது. எப்போதும் போல நீங்கள் இயங்கிக் கொண்டிருக்கிறீர்கள். ஆனால் அகந்தை அதன் பிறகும் இருந்த கொண்டிருக்காது 'நான்' என்கிற அகந்தை செத்துவிடும்.

நீங்கள் உயிருடன் இருந்து கொண்டே மரண அனுபவத் தையும் பெறுகிறீர்கள். நீங்கள் உயிருக்கும் மரணத்துக்கும் ஒரு 'சந்திப்பு முனை' யாகி விடுகிறீர்கள். இரண்ட எதிரெதிர் முனைகளைப் பெற்றதால் உண்டாகும். வளமை பெரிது. ஆம், உயிரும் மரணமும் இரண்டு துருவங்கள்! இரண்டையும் ஒரு சேரப் பெறுதால் பிரபஞ்ச இருப்பினை உட்கொண்டவரதாகிறீர்கள். அதன் ஒரு முகம் உயிராகவும் மற்றொரு முகம் மரணமாகவும் இருக்கிறது.

*இரண்டாம் கேள்வி:*

***இன்று சமாதிக் குளத் தருகே உங்களுடைய முன்னிலை (தோற்றம்)யை நான் காணப்போகிறேன். அதை நான் ஆணையிட்டுச் சொல்வேன். நான் அப்படியே பயந்துவிட்டேன். மற்றவர்கள், தங்கள் இருப்பை இங்கிலாந்து போன்ற தொலை தூரப் பிரதேசங்களிலும் கண்டதாய் சொல்கிறார்கள். அது என்ன கற்பனையா? திட்டமிட்டு அமைத்துக் கொள்வதா? அல்லது வேறெது?***

அது திட்ட ஏற்பாடாக (projection) இருக்கக்கூடும், கற்பனையாகவும் இருக்கக் கூடும். அல்லது வேறெது கூட இருக்க முடியும். அது உங்களைப் பொறுத்தது. அது என்னவென்று நீங்கள் தான் தீர்மானிக்க வேண்டும். உதாரணமாக, அது நிகழ்வதற்கு முன் என்னைப்பற்றி நீங்கள் நினைத்துக் கொண்டிருந்தீர்களா? அது நிகழ வேண்டும் என்று விரும்பினீர்களா? உங்களுக்குள் எங்காவது கற்பனை செய் பரவாயிருந்தால் அந்நிலை அது கற்பனையாகவோ, திட்டமிட்ட ஏற்பாடாகவோ இருக்கலாம்.

அது எங்கியிருந்தும் பெறப்படவில்லை, நீங்கள் எவ்வகை யிலும் என்னை நினைத்திருக்கவில்லை என்றால், பிறகு வேறு எதுவாகவும் அது இருக்கலாம்.

'அப்படியே நான் பயந்து போனேன் என்கிறீர்கள்.'

அது உங்கள்கற்கனையாயிருந்தால் நீங்கள் எவ்விதத்திலும் பயந்திருக்கமாட்டீர்கள். அது உங்கள் கற்பனை என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அது உங்கள் மனதின் திட்ட ஏற்பாடாக இருந்திருந்தால் அதுவும் உங்களுக்குத் தெரிந்திருக்கும். அது உங்கள் மனதுடன் சம்பந்தப்படவில்லை என்பதால் நீங்கள் பயந்து விட்டீர்கள்.

நீங்கள் சொல்கிறீர்கள்: 'உங்கள் இருப்பை நான் சில கணங்களுக்கு உணர்ந்தேன். அதைநான் ஆணையிட்டுச் சொல்ல முடியும்'

அத்தகைய அனுபவங்கள் (மற்றவர்களிடமிருந்து) தனிப் படுத்தப்பட்ட நிலையில் வெகு எளிதாய் நிகழக்கூடும். மலைகளில் தனியாக இருக்கும்போது பலருக்கும் அது நிகழ்ந்திருக்கிறது. முன்பு எப்போதும் இருந்திராத புதுமையான இடத்தில் இருக்க நேர்ந்த பலருக்கும்அது நிகழ்ந்திருக்கிறது.

ஓட்ட வீரர்களுக்கு அப்படி நிகழ்ந்திருக்கிறது. மைல் கணக்கில் தொடர்ந்து ஓடுகிற போது, ஓடுகிறவர் மறைய, ஓடுதல் மட்டும் இருக்கும். அதற்கு முன் நீங்கள் உணர்ந்திராத ஒன்றை அப்போது உணர்ந்து கொள்வீர்கள். காற்றில் கலந்துவரும் நுண்ணிய வாசத்தையும் உணர்வீர்கள். உங்கள் புலன்கள் மிகுந்த விழிப்புடன் இருக்கும். தொட்டுணர முடியாதவைகளையும் அந்தக் கணத்தில் தொட்டுணர்வீர்கள். அல்லது அவற்றால் நீங்கள் தொடப்படக்கூடும்.

பல சூழ்நிலைகளில் மக்களுக்கு அப்படி நடந்திருக்கிறது. ஆனால் அந்தச் சூழ்நிலைகள் அசாதாரணமானதாய் இருந்திருக்க வேண்டும். காரணம் நாம் பொருத்திக் கொள்ளும் வழக்கமான சூழ்நிலைகளில் இருந்து அது மாறுபட்டிருப்பது வழக்கமான சூழ்நிலைகளில் நடப்பவைகளை நாம் உணர்ந்திருப்பதில்லை.

சமாதிகுளம் ஒரு பிரத்தேக சூழலை உங்களுக்குத் தந்திருக்கும். அதிக வெளிச்சமின்மை, தனிமை, நிசப்தம் இவை காரணம். அப்போத நீங்கள் தண்ணீரில் மிதந்து கொண்டிருக் கிறீர்கள். திரும்பவும் உங்கள் தாயின் கர்ப்பத்தில் இருக்கிற நிலை அது. அந்த அனுபவ்த்தை சமாதிக்குளம் உங்களுக்கு வழங்கி யிருக்கும்.

தாயின் கர்ப்பத்தில் உள்ள திரவத்தில் கரு மிதந்தபடி இருக்கும். சமாதிக்குளத்தில் அதே வகை திரவத்தின் தான் நீங்கள் மிதந்திருக்கிறீர்கள். அதே வகை வேதியியல் பொருட்கள் கொண்ட திரவம். அதனால்தான் நீங்கள் அதில் மூழ்கவில்லை. கருவறையும் இருட்டாக வெளிச்சமின்றி, ஒலியின்றி இருப்பது. உங்கள் நுட்ப உணர்வும், விழிப்புணர்வும், உள்ளுணர்வும் செயல்படத் தொடங்கும். ஒரு புதிய இடத்துக்கு நீங்கள் வீசியெறியப் பட்டீர்கள். கருவறையில் இருக்கும் குழந்தை போலவே நீங்களும் உள்ளுணர்வைப் பெற்றீர்கள். குழந்தையின் கபடமற்ற தன்மையை நீங்களும் கொண்டீர்கள். வழக்கமான இடத்திலோ, நேரத்திலோ பகுதியாய் இருந்திராத ஒன்று அந்த கபடமற்ற தன்மையால் நேரிடக் கூடும்.

காலமும், இடமும் மறையக் காணலாம். அப்போத என்னுடைய இருப்பை நீங்கள் உணர்கிற சாத்தியம் உண்டு. எப்போத எனது சந்நியாசிகளின் பக்கமாகவே நான் சுற்றிச் சூழ்ந்திருக்கிறேன். நீங்கள் அதை உணரலாம், உணராமலும் இருக்கலாம். இசைவான ஒரு கணத்தில் அதை நீங்கள் உணர்வீர்கள். அப்போது நீங்கள் இருப்பது இங்கிலாந்திலா ஜப்பானிலா என்பது முக்கியமில்லை. இடமும் தொலைவும் வேறுபாட்டை உண்டு பண்ணாது.

உங்களுக்கு சந்நியாசம் வழங்கவதன் மூலம் நீங்கள் எங்கிருந் தாலும் என்னை உணரும் உரிமையை (தகுதி) உங்களுக்கு வழங்கியுள்ளேள். தற்போதே, எல்லாம் உங்களைப் பொறுத்தது. வாழ்விலும் மரணத்திலும் என்னுடைய இருப்பு உங்களுடன் இருக்கும், உங்களைச் சுற்றி வளைத்திருக்கும். ஆனால், நீங்கள் புரிந்து கொள்ளலாம், புரிந்து கொள்ளாமலும் இருக்கலாம். நீங்கள் தன் உணர்வுற்றவராகவும் இருக்கலாம்.

மிகவும் அழகான, நேர்த்தியான ஒன்று நிகழ்ந்திருக்கிறது. வாழ்வின் புதுமையான அனுபவங்களை பெறக்கூடியவரா யிருங்கள். வியப்பூட்டும் அனுபவங்களை ஏற்க மறுத்து விடாதீர் கள். அப்படித்தான் பலரும் மிகப்பெரிய வாய்ப்பை ஏற்காமலிருப்பது.

உதாரணமாக, ஒருநாள் இரவு நீங்கள் திடுதிப்பென்று விழித்துக் கொள்கிறீர்கள் – இருட்டில், தனிமையில், நிசப்தத்தில் அப்போது

ஏதோ ஒன்று அருகில் இருப்பதாய் அறிகிறீர்கள். அது உங்களுடைய செத்துப் போன நண்பனாக இருக்கலாம், மூதாதையரில் ஒருவராக இருக்கலாம், ஏன் இறந்து போன உங்கள் தாயாகவும் இருக்கலாம். ஆனாலும், நீங்கள் ரொம்பவே பயந்து விடுகிறீர்கள். அந்த பயத்தில் உங்களுடைய கண்டு உணரும் திறனை இழந்து விடுகிறீர்கள். அந்த இருக்கும் தன்மை அப்படியே இருக்க, நீங்கள் தொடர்பற்றுப் போகிறீர்கள். நீங்கள் விளக்கைப் பொருத்தி, ஏதோ ஒன்றில் உங்களை ஈடுப்படுத்திக் கொள்கிறீர்கள். ஒரு புத்தகத்தைப் படிக்கத் தொடங்குகிறீர்கள். அல்லது வானொலியைத் திருப்புகிறீர்கள் நிகழ்ந்து கொண்டிருக்கும் விநோத அனுபவத்தில் இருந்த உங்களைத் துண்டித்துக் கொள்வதற்காக.

அச்சம் வேண்டாம். இந்தப் பிரபஞ்ச இருப்பு உங்களுடையது. இந்த இருப்பு நட்பார்ந்தது. அத்துடன் இன்னும் நீங்கள் அறிந்து கொள்ளவும், அனுபவித்து உணரவும் ஏரான புதிர்கள் காத்திருக் கின்றன.

இது உங்களுக்காகவே அமைந்த நேர்த்தியான தருணம். தற்போது அது நிகழ்ந்திருக்கிறது. நீங்கள் அதை திரும்பத் திரும்ப நிகழ்த்த முடியும். சமாதிக் குளத்துக்குப் போகத் தேவையில்லை. உங்கள் அறையில் நீங்கள் தனித்திருக்கும் இரவில் அது நிகழக்கூடும். நீங்கள் அதற்கு இடமளித்தால் அது எங்கும் நிகழும்.

தற்கால மனிதனுக்கு ஏற்பட்டிருக்கும் மிகப்பெரிய விபத்து களில் ஒன்று அவன் மிகவும் உலகியல் சார்ந்தவனாகி விட்டிருப் பதுதான். அவன் விளக்க முடிகிறவற்றையும், வரையறுக்கப் பட்டவற்றையும் மட்டுமே ஏற்றுக்கொள்கிறான். அறிவியல் பூர்வமாக நடைமுறைக்கு ஏற்ப நிரூபிக்கப்பட்டவைகளைத்தான் அவன் ஏற்கிறான். ஆனால் அப்போது நீங்கள் பிரபஞ்ச இருப்பின் முதற்படியில் இருக்கிறீர்கள். எத்தனைக்கு அதிக படிகள் இருக்கின்றனவோ அத்தனைக்கு அது வரையறுத்துச் செல்ல இயலாததாகி விடுகிறது. விளக்க முடியாத ஒன்று உங்கள் பிடிக்கு அகப்படாமல் நழுவி போகவே செய்யும். அதை நீங்கள் கைப்பற்றி யாருக்கும் காண்பிக்க முடியாது. அது ரொம்பவும் அந்தரங்கமாகி விடும்.

நிறைய பேருக்கு அந்த அனுபவம் இருந்திருக்கும். ஆனால் அவர்கள் மற்றவர்களிடம் அதைத் தெரிவிப்பதில்லை. சரியான கிறுக்கு என்று அவர்கள் நினைத்து விடுவார்களே. நானே அதைக் கூர்ந்து கவனித்திருக்கிறேன். தங்களுடைய அனுபவத்தை பலரும் என்னிடம் சொல்லியிருக்கிறார்கள், அதற்கு முன் தாங்கள் யாரிடமும் அதைச் சொன்னதில்லை என்று. 'என்ன இந்த ஆளுக்கு மரை கழன்று விட்டதா, பிரமை கொண்டுவிட்டாரா' என்று அவர்கள் முடிவுகட்டிவிடக் கூடாதே என்கிற பயந்தான். 'எனக்குள் ஏதோ கோளாறாகி விட்டது. வழக்கமாக மற்றவர்களுக்கு இதுபோல் நடக்கிறதல்லை. ஏன், எனக்கு மட்டும்...? இதை எப்படியாவது மறந்து விட வேண்டும்' என்று தங்களுக்குள்ளேயே அவர்கள் நினைப்பார்கள்.

நீங்கள் கொஞ்சம் இரக்க உணர்வுடனும், அன்புடனும் கேட்டுப்பாருங்கள், ரொம்ப பேர் புதிரான விஷயங்களை உங்க ளிடம் வெளிப்படுத்தி விடுவார்கள். இத்தகைய அனுபவங்கள் ஒன்றும் மதத்துடன் தொடர்புடையதல்ல.

இது மலையேறிகளுக்கு நிகழ்ந்திருக்கிறது. தனியாக, ஆபத்தான சூழ்நிலையில் ஒருவர் மலையேறுகிறார். திடீரென்று அந்த மலையேறி தனக்குப் பக்கத்தில் யாரோ இருப்பது போல் உணர்கிறார். அது அவருக்கு உதவவும் கூடும். 'கவலைப்படாதே. நான் உன்னுடைய நணபன்தான். நான் உன்னைப் பாதுகாப்பேன். தொடர்ந்து ஏறிச்செல், ஆபத்து எதுவும் இல்லை' என்று இயல்பாக உரையாடவும் செய்யும்.

சில நேரத்தில் ஒருவன் காட்டில் வழி தெரியாமல் அலைகிறான். ஒருநாள் இரண்டு நாள் அல்லது மூன்றுநாள் சாப்பாடில்லாமல், வழியைக் கண்டுபிடிக்க முடியாமல் தவிக்கிறான். திடீரென்று.இருப்பு (presence) ஒன்று பக்கத்தில் இருப்பதாய் உணர்கிறான். அது மிகவும் பாதுகாக்கிற ஒன்றாகத் தெரிகிறது. அவன் சற்றும் எதிர்பாராத விதமாய் அது பேசுகிறது. கவலை பாடாதே நீ சரியான வழியில்தான் போகிறாய், காட்டை விட்டு வெளியில் போய்விடுவாய்' என்று.

ஆனால், இத்தகைய நிகழ்வுகளை அவர்கள் மற்றவர்களிடம் சொல்வதில்லை. இறைத்தன்மையை உணர்த்தும் இத்தகைய

அனுபவங்கள் விளையாட்டு மைதானத்திலும் நிகழ்வதுண்டு. குறிப்பாக ஜாகிங் (Jogging) போகிறவர்களும், ஓட்ட வீரர்களும் இது போன்ற அனுபவங்களைப் பெற்றிருப்பார்கள். புதிய கொம்யூனில் (commune) ஓடுவதற்கும், ஜாகிங் செய்வதற்கும் வசதிகள் உண்டு. தினமும் நூற்றுக்கணக்கான சந்நியாசிகள் மைல்கணக்கில் ஓட வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

அரைமணி அல்லது ஒரு மணிநேரத்துக்குப் பிறகு, நீங்கள் களைத்திருந்தால்கூட களைப்பு மறைந்து விடும். இது கொஞ்சம் புதுமையாய், தர்க்கத்துக்கு (பகுத்தறிவு)ப் பொருந்தாததாய் தெரியலாம். நீங்கள் சோர்வாக இருந்திருப்பீகள், ஒரு தூக்கம் போட விரும்பியிருப்பீர்கள். ஆனால், ஓடுகிற போது இரண்டாவது, மூன்றாவது சுற்றிலேயே உங்கள் சோர்வு மறைந்து விட்டிருக்கும். உங்களுக்குள் சக்தி நிரம்பியிருக்கும். எடை குறைந்து, காற்றில் மிதக்கிற மாதிரி உணர்வீர்கள். நீங்கள் ஓடும் போது, ஓடிக்கொண் டிருப்பது நீங்களல்ல உங்களுக்குள் ஏதோ ஒரு சக்தி புகுந்து கொண்டு ஓடுவதாய் உணர்வீர்கள்.

பிரபஞ்ச இருப்புடன் ஒருங்கிணைந்த அனுபவம் ஓர் ஆழ்ந்த, இதமான, உச்சக்கட்ட சக்தியொன்று உங்களைச் சுற்றி வளைத்திடும் அனுபவம்.... அலைகளில் மிதந்து நீர்ச்சலுக்கு போகிறவர்களுக்கும் (surfers) ஏந், மற்போர் செய்பவர்களுக்கும் கூட அது நிகழ்திருக்கிறது. அதனால்தான், ஜப்பானில் தியானத்தில் ஈடுபடுவர்கள் பல தற்காப்புகளைப் பயின்றதுடன், வளர்க்கவும் செய்திருககிறார்கள். இது உங்களுக்கு விநோதமாக தெரியலாம். ஜூடோ, அகிடோ, கராத்தே வீரவிளையாட்டுக்களை அவர்கள் ஏன் கற்க வேண்டும்? அவர்கள் அந்தக் கலைகளை வளர்க்கக் காரணம் இருந்தது.

நீங்கள் அவற்றில் ஆழ்ந்து விடுகிறபோது, அகந்தை மறைவ துடன், ஒரு புதிய வெளியை – அதுவரை அறிந்திராத இடத்தைக் கண்டு அதில் பிரவேசிக்கிறீர்கள். அப்போது சற்றும் எதிர்பாரத விதமாய் உங்களுக்கே உரிய முறையில் நீங்கள் இயங்காமல், பிர பஞ்ச இருப்பு உங்களை சுவாதீனப்படுத்தி இயங்கத் தொடங்கும்.

ஒன்றை மட்டும் நான் அழுத்தமாய் கூறுவேன் – அத்தகைய செயல்கள் நிகழ்ந்தால் ஏற்றுக் கொள்ளுங்கள், மறுத்து

ஒதுக்கிவிடாதீர்கள். அவற்றை கற்பனை என்றோ, திட்ட ஏற்பாடு என்றோ, மாயை, ஏமாற்றுவேலை என்றோ எண்ணிவிடாதீர்கள். இவை மனதின் தந்திரங்கள் அதற்காக உருவெளித் தோற்றங்களே (hallucinations) கிடையாது என்று நான் சொல்லமாட்டேன் - இருக்கவே செய்யும் - மேலும், சித்தப்பிரமையில் அவதிப் படுகிறார்களே இல்லை என்றும் நான் சொல்லவில்லை இருக் கிறார்கள். ஆனால், கள்ள நாணயங்கள் இருக்கிறது என்பதற்காக நல்ல நாணயங்களை ஒதுக்கி விடக்கூடாது. உண்மையில், நல்ல நாணயங்கள் இருப்பதற்கு, கள்ள நாணயங்கள் நிரூபணம்.

ஒரு மனிதன் மதுபான விடுதிக்குச் சென்று, 'பீர்' கொண்டு வரச் சொன்னான். பீர் பரிமாறப்பட்டதும், தன்னுடைய சட்டைப் பையில் இருந்து நான்கு அங்குல உயரமுள்ள உருவமென்றை வெளியில் எடுத்தான். விரல் சிமிழ் ஒன்றைத் தயாரித்தான். 'நண்பன் பால் இந்த பீரைப் பருகுவான்' என்றான்.

மதுபானம் பரிமாறுகிறவன் கேட்டான். 'அது உண்மையி லேயே அவனுக்குத்தானா?' அவன் மனிதனா?

'அவன் உண்மையிலேயே மனிதன்தான்' என்றான் குடிக்கவந்தவன்.

'ஆனால் பேசமுடியமா?'

'அவன் பேசுகிறவன்தான் 'என்றவன், 'பால், இந்த ஆளிடம் நம்பயணத்தின் போது நடந்ததைச் சொல்லு, சூன்யக்காரை வைத்தியனை, 'கறுத்ததே... யாமவனே' என்று கூப்பிட்டாயே அதையுந்தான்' என்றான்.

வாழ்க்கை கணிதவியலோடு முடிந்துவிடுவதாக எண்ணிக் கொள்ளாதீர்கள் - அதில் மந்திரவித்தை (magic)யும் உண்டு. மந்திரவித்தை என்றதன் மூலம் வழக்கத்தில் இல்லாததும் நிகழ்வதைக் குறிக்கிறேன். 'மாஜிக்' என்கிற வார்த்தை தற்போது பயனற்றதாய் கருதப்படுகிறது. காரணம், வாழ்க்கையின் விளக்க முடியாத விளைவுகளைக் கெடுக்கும் பரிமாணத்தை (magical dimension) நாம் மறந்துவிட்டதுதான்.'மாஜி' (magi) என்கிற புகழ்பெற்ற மறை ஞானியின் பெயரே மருவி 'மாஜிக்' என்றானது. கிறிஸ்தவ மதம் பரவுவதற்குமுன் 'மாஜி' என்கிற மதம் ஐரோப்பா

எங்கும் பரவலாக இருந்திருக்கிறது. மாஜிக் மரபை கிறிஸ்தவம் அழித்தது.

நீங்கள் மீண்டும் மாயாஜாலக் காரராக வேண்டும் என்று நான் விரும்புகிறேன்.

கணிதம் எந்த அளவு இயங்கினாலும் நல்லதுதான். தர்க்கவியலும் அப்படியே, ஆனால் வாழ்க்கைக்கு தர்க்கம் மட்டும் போதாது, மிகுதியாய் தேவைப்படும். அரிஸ்டாடிலுடன் திருப்தியடைந்து விடுவதற்கில்லை. நவீன அறிக்கு அரிஸ்டாட்டில் திகட்டலாகிவிட்டார். காரணம் அத்தனைக்கு சலிப்பூட்டிவிட்டது அவருடைய தத்துவம். கொஞ்சமும் மறைபொருள் இல்லாத விஷயங்கள் மக்களை மந்தப்படுத்தி விட்டது. எண்ணி வியப்பதற்கு இரகசியங்கள் இருக்க வேண்டாமா?

மனிதன் வியக்கும் திறனுடையவனாக இருந்தால் பிரபஞ்ப இருப்பை அறிந்துகொள்பவனாகவும் அவன் இருப்பான். பயம் கலந்த மரியாதை உள்ளவனிடம் பிரபஞ்ச இருப்பை அறிந்து கொள்ளும் திறமை இருக்கும்.

*மூன்றாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! ஆசிரமத்தில் பிரேம்சின்மயா பகிர்ந்து கொள்ளும் அன்பை நான் முழுமையாக அறிவேன் என்று காட்டக் கூடிய ஒரு கேள்வியை உங்களிடம் கேட்பதற்காக நான் சிந்திக்க முயல்கிறேன். எனவே, இன்றிவு தரிசனத்திற்குப் பிறகு தாங்கள் என்ன செய்ய விருக்கிறீர்கள்?***

இந்தக் கேள்வி சின்மயாவின் தாய் கேட்டது. பல வருஷங்களாகவே, தரிசனத்துக்கு முன்பும் சரி, பின்பும் சரி நான் ஒரு காரியமும் செய்ததில்லை. பல வருஷங்களாகவே நான் வாழவில்லை. நான் இறந்தாயிற்று. ஒரு நபராக நான் எந்த இயக்கமும் இல்லாமல் இருக்கின்றேன். செயல்கள் நடக்கின்றன, ஆனால் உண்மையில் நான் செய்வில்லை. நான் செயபவராக இல்லை. விளைவுகள் பற்றி நான் கவலைப்படமாட்டேன். செயலுடன் தொடர்பில்லாதவன் விளைவுடன் எப்படி தொடர்பு படுவேன்? முதற்கண் நான் செய்பவன் அல்ல. பயன்கள் பற்றிய கவலை எனக்கு கிடையாது. நான்ஒரு சாதனம் (vehicle), உள்ளீற்ற

மூங்கில், பிரபஞ்சஇருப்பைக் கொண்டிருப்பவன். தான் பாட விரும்பிய எந்தப் பாட்டையும் அதுபாடிக்கொண்டிருக்கும். பாட விரும்பவில்லை என்றாலும் அதுவே அதைத் தீர்மானிக்கும். எனக்குப் பாட்டு இருந்தாலும், இல்லை என்றாலும், சில நேரங்களில் மவுனமாக இருக்கும், அதில் நான் குறுக்கிடுவதில்லை. பிரபஞ்ச இருப்புடன் நிம்மதியாக நான் இருந்து கொண்டிருக் கிறேன்.

இங்கே நான் கற்பிப்பது இதுதான். உங்கள் மகனுக்கு இதையே நான் கற்பிக்கிறேன். அவன் குறிப்பிடும்படியாய் வளர்வதை உங்களுக்குச் சொல்வதில் மகிழ்ச்கி அடைகிறேன். முற்றிலும் மாறுபட்ட ஒரு சூழ்நிலையில் வளர்ச்சி காண்பது கடினமான விஷயம் அவனுடைய வளர்ச்சி சிறப்பாக இருக்கிறது.

அவன் புற்று நோயில் அவதிப்படுகிறான். தனக்கு என்று வேண்டுமானாலும் மரணம் வரக்கூடும் என்பதை அவன் அறிவான். ஆனால் உங்களிடம் மகிழ்ச்சியோடு சொல்வேன், அது அவனிடம் எந்த வித்தியாசத்தையும் உண்டு பண்ணிவிடாது என்பதை வாழ்க்கையோ மரணமோ - அவன் ஒரு சாட்சியாகவே இருப்பான். அப்படியொரு முழுமையை அவன் அடைந்திருக் கிறான். அந்த அளவு மையப்படுதல் (centering) அவனுக்கு நிகழ்ந்திக்கிறது. தொடக்கத்தில் இங்கே வந்த புத்தில் சாவை பற்றி மிகவும் பயந்துகொண்டிருந்தான். இயல்பாக - எல்லாருக்குமே இருப்பதுதான். அது எதிர்பார்க்கப்பட்டது. மெல்ல மெல்ல, இங்கே என்னுடனும் மற்றவர்களுடனும் இருப்பதில், இந்த புத்த வெளியில் அவன் ஒன்றைப்புரிந்து கொண்டான். அது நாங்கள் செயல்படு பவர்களல்ல என்பது. சில நேரங்களில் பிறப்பு, சிலநேரங்களில் இறப்பு இரண்டுக்கும் நாம்நன்றி தெரிவிப்பவராய், நன்றியோடு இருக்க வேண்டும்.

ஆக, தற்போது நான் அறிந்திருப்பது: எப்போத உயிர் துறப்பதாயினும் அவன் பெரிய அளவில் நன்றியுடையவனாய், உதடுகளில் பிரார்த்தனையுடனும், இதயபூர்வமாக நன்றி சொல்லிய படி சென்றுவிடுவான். அதுவே சரியான முறையில் இறப்பது. அதுவே சரியான முறையில் வாழ்வதும் அவன் உண்மையில் உற்சாகத்தோடு மரணத்தை ஏற்பவனாக இருக்கிறான்.

இல்லையேல் அவன் எப்போதோ செத்து விட்டிருப்பான். டாக்டர்களுக்கு அவனைப் பற்றிய குழப்பம் உண்டு, அவனால் எப்படி இத்தனை சுறுப்பாக உயிருடன் இருக்க முடிகிறது என்று.

அவன் இனியும் இருக்கமுடியும் என்பதற்கான அடை யாளங்கள் அவனுடைய உடம்பில் காணப்படவில்லை. ஆனால், அடியாழத்தில் மிகவும் தணிவாக நிம்மதியாக அவன் இருக்கிறான். அந்த ஓய்வு புற்றை (cancer)விடவும் ஆழம் கொண்டது. அதுதான் அவனை இயக்கிக் கொண்டிருக்கிறது. அவன் நீண்ட நாள் வாழவும் கூடும் யாருக்குத் தெரியும். அவன் இந்த ஓய்வு நிலையில் நீண்டநாள் வாழலாம். அதிசயங்கள் நிகழ்கின்றன.

அவனுக்கு என்று வேண்டுமானாலும மரணச் சான்றிதழ் வழங்க மருத்துவர்கள், தயாராக இருக்கிறார்கள். ஆனால் அவன் நிம்மதியாக தியானம், மகிழ்ச்சி, மனநிறைவு கொண்டவனா யிருப்பதால், இருந்து கொண்டிருக்கின்றன. அவனுடைய நிலையில் நிறைவோடு இருப்பது கடினம். ஆனால் அவன் இருக்கிறான். மூச்சுவிடுவதும் சிரமமாக உள்ளது. ஆனால் அவனோ எதையும் ஏற்றுக் கொண்டவனாய் இருக்கிறான்.

உங்கள் மனம் உயிரோடு இருப்பின் அவனுடைய ஆன்மா சார்ந்த பக்குவம் அதிகரிக்கும், அவன் வளர்ச்சியடைவான். அவன் இறப்பானெனில் அதிலும் இருக்கவே செய்யும். வழியை, செயல்படாமல் இருக்கும் வழியை அவன் கண்டு கொண்டான். அல்லது செயலற்ற நிலையிலேயே செயல்படும் வழி என்றும் அதைக் கூறலாம். அது வூ - வெய் (wu -wei)

*நான்காம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே, தாங்கள் பிரச்சினையில் இருப்பதாக இன்று சிலர் பேசிக் கொண்டதை நான் தற்செயலாக ஒட்டுக் கேட்டேன், தாங்கள் அப்படி இருக்கிறீர்களா?***

சிலரல்ல பலர் - நீங்கள் தாம் எனக்குப் பிரச்சினையாக இருப்பது. ஒன்றல்ல ஆயிரம் பிரச்சினைகள்! சந்நியாசிகள் மேலும் மேலும் வந்து கொண்டிருப்பதில் தொடர்ந்து பிரச்சினைகள் இருக்கவே செய்யும். ஒவ்வொரு சந்நியாசியும் பல பிரச்சினை களைக் கொண்டுவருவார்கள். நான் இங்கியிருக்கிறேன், உங்கள் பிரச்சினைகளை என்னிடம் நீங்கள் ஒப்படைக்கிறீர்கள்.

உங்களுடைய அத்தனை பிரச்சினைகளையும் நான் ஏற்கிறேன். காரணம் என்னுடைய தென்று நான் எதையும் கொண்டிருக்க வில்லை. எனக்கென்று எதுவும் இல்லை என்பதால், உங்கள் பிரச்சினைகளை நீங்கள் என்னிடம் விட்டு விடமுடியும், அவை மறைந்துவிடும். அவை பற்றிக்கொள்ள இடம் கிடையாதே. அவை மறைகிற இடமாக - பலிபீடமாக நான் இருக்கிறேன்.

*ஐந்தாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே, நான் கலிஃபோர்னியாவில் இருந்து வந்திருக்கிறேன். 'கலிஃபோர்னியா'வில் 'நேற்று என்கிற சொல்லைத்தங்கள் பயன்படுத்தியமுறை எனக்குப் பிடிக்க வில்லை.'***

நீங்கள் சந்திரனில் இருந்தாலும் அல்லது நட்சத்திர மண்டலத்தில் இருந்தாலும், கலிஃபோர்னியாவில் எதையெல்லாம் செய்து கொண்டிருந்தீர்களோ அதைத்தான் அங்கேயும் செய்யத் தொடங்குவீர்கள். நான் ரொம்பவும் மென்மையான சொல்லையே பயன்படுத்தினேன். அதற்கு மோட்சா என்கிற சொல் ரொம்பவும் வேறாக இருக்கும். 'நீங்கள் எங்கியிருந்தாலும் கலிஃபோர்னியாக் காரன்' என்று சொல்லியிருக்க வேண்டும்.

*ஆறாம் கேள்வி:*

***ஓஷோ அவர்களே! என்னால் விவரிக்க முடியாத ஏதோஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது அது நான் அறிந்தது என்பதை விட உணர்ந்தது எனலாம்.***

நீங்கள் விவரிக்க முடியாமல் அனுபவித்துக் கொண்டிருப் பவற்றை, உங்களுக்கு உணர்த்துவதற்குத்தானே நான் இங்கிருக்கிறேன். அவற்றைச் சுட்டிக் காட்டுவதற்கு வார்த்தைகள் போதுமானதாயிருக்காது. ஆனால் அவை உணரக் கூடியதா யிருக்கும்.

வார்த்தையில் எதைச் சொன்னாலும் அது மேலோட்டமாகவே இருக்கும். மனிதனால் தான் அறிந்ததை விட அதிகமாய் உணர முடியும். அவனால் தான் உணர்ந்ததை விட அதிகமாய் இருக்க முடியும். அத்தனை அடுக்குகள் பற்றியும் உங்களுக்குத் தெரிந்திருக்கவேண்டும்.

ஒன்றைத் தெரிந்திருந்தும் சொல்ல முடியவில்லை என்றால் அது ஆழமானது. ஆனால் அதைவிடவும் அதிகமாய் உணர முடியும். ஆனால் அதைவிடவும் அதிகமாய் உணரமுடியும். எது உணரப்பட்டும் தெரிந்திருக்க முடியவில்லையோ அது இன்னும் ஆழ்ந்தது, ஒருவர் தாம் உணர்ந்ததைவிடவும் அதிகமாய் இருக்க முடியும். அந்தநிலை இன்னும் ஆழம் கொண்டதுழு

உங்கள் உள்ளார்ந்த மையப்பகுதி (core)யை நீங்கள் சென்றடைவதற்கு உதவுவதே என்னுடைய முயற்சி. அறிவதில் இருந்து அறிபவராக, காண்பதில் இருந்து காண்பவராக, உணர்நிலைப் பொருளில் இருந்து விழிப்புணர்வாக நீங்கள் மாற்றமடைவீர்கள்.

மனிதன் ஒரு வாழ்க்கையை செய்வன் மூலம், பெறுவதன் மூலம், இருப்பதன் மூலம் அடைகிறேன். செய்வது என்பது மேம்போக்கானது. செய்வதை பெற்றிருப்பது மேலானதாகும். ஏழை, செயல்படும் உலகில் தேவைகளுக்காக முயற்சியெடுக்கிற உலகில் இருக்கிறான், செல்வந்தனோ தன் வேலைகளை அடையப் பெற்றவனாக இருக்கறான். ஆனால் இருப்புணர்வைக் கொண்டே உலகமே சிறந்தது. ஏழை எதையும் பெறாமலே இருப்புணவின் உலகைச் சென்றடையலாம். ஆனால் அது கடினம்.

ஏனெனில் உங்களிடம் இருப்பதைக் துறக்கவேண்டும்.

இருந்தால்தானே துறக்கமுடியும். இல்லையென்பதால் ஏழைக்கு அது மிகவும் கடினம். கபீர் போன்ற உங்களுக்கு மட்டுமே அதாக நிகழ்கிறது. தன்னிடம் இல்லாததையும் துறந்து அற்புதம் நிகழ்ந்த அவரால் முடிந்தது. தன்னிடம் இல்லாததையும் அவரால் அறிய முடிந்தது.

செயல்படும் உலகில் இருந்து, இருப்புணர்வின் உலகிற்குச் செல்ல மிகப்பெரிய நுண்ணறிவு (intelligence) தேவை ஒருவர் ஏழ்மையில் இருந்து கொண்டு இறைத்தன்மையை - ஆன்மிக உணர்வைப் பெறுகிறார். என்றால் அவசியம் சிறந்த நுண்ணறிவு இருக்க வேண்டும். அதே சமயம் ஒருவர் பணக்காரராக இருந்தும் இறைத்தன்மையை - ஆன்மிக உணர்வைப் பெறவில்லை என்றால் அது முட்டாள் தனம். ஏழை ஆன்மிக உணர்வு இல்லா திருத்தல் மன்னித்து விடலாம். ஆனால் பணக்காரனை அப்படி

மன்னிக்க முடியாது. அவனிடம் எல்லாம் இருந்தும் எதுவுமே இல்லாதவன்தான் அவன். தன்னுடைய நிலையை அவன் புரிந்து கொண்டிருக்க வேண்டும். மரணம் வரும்போது அவனிடம் இருப்பதெல்லாம் அவனை விட்டுப் போய்விடும்.

செய்வதென்பது (doing) பெறுவதற்கான உபாயம். செய்வதில் வெற்றிபெற்றால் உங்கள் தேவையை நீங்கள் அடைய முடியும். ஆனால், நீங்கள் சகலத்தையும் பெற்றிருக்கிறபோது எல்லாமே தோற்கத்தொடங்கும், எதுவுமே விரும்பிய விளைவை உண்டு பண்ணாது. எல்லாமே குழந்தைத்தனமாயிருக்கும். இந்த உலகில் உள்ளவைகள் பயனற்றவை என்று தெரிவது, உள்நோக்கித் திரும்புவதன் தொடக்கமாகும், மாற்றத்தின் தொடக்கமும்.

மிக நேர்த்தியானது உங்களுக்க நெருக்கமாகவே இருக்கிறது.

'என்னால் விளக்க முடியாத ஏதோ ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிது' என்கிறீர்கள்.

நீங்கள் நல்வாய்ப்புடையவர் (fortunate) தங்களுக்கு எது நடந்தாலும் சொல்லக் கூடியவர்கள் பரிதாபத்துக்குரியவர்கள். சொல்லமுடிகிற எதுவும் சிறப்புத் தன்மையற்றதுதான். ஆழ்ந்த நிகழ்வினை நீங்கள் வார்த்தைகளில் வெளிப்டுத்த முடியாது.

லாவோட்சு கூறுவார், 'தாங்கள் சொல்ல விரும்புகிற எதையும் அவர்களால் சொல்லிவிட முடிகிறது - என்னைத்தவிர அவர் களுடன் ஒப்பிடும் போது நான் கொஞ்சம் குழப்பத்தில் இருப்பவன்தான். மக்கள் ரொம்பவும் தெளிவாக இருக்கிறார்கள், நானோ அத்தனை தெளிவில்லாதவன்' என்று மக்கள் தெளிவாக இருப்பதற்குக் காரணம் அவர்களுக்கு மறைபொருளானவை (mysterious)கள்அனுபவமாகவில்லை என்பதுதான்.

லாவோட்சு கேலி செய்கிறார். 'உங்களால் தெரிந்த எதையும் சொல்லமுடிகிறது. அப்படியொரு பரிதாபநிலையில் நீங்கள் இருக்கிறீர்கள். உங்கள் வாழ்க்கை பற்றிய தெளிவும் உங்களுக்கிருக்கிறது. நீங்கள் எப்படி மர்மங்களை விளங்கிக் கொள்ள முடியும்? என்று. பனிமூட்டத்தில் மறைந்து கிடக்கிறது திகைபூட்டும் விஷயங்கள்! ஒருவர் அதைஉணர முடியும். ஆனால், கைப்பறிக்கொள்ள முடியாது. நீங்கள் அதைப்பற்றி முனைந்தால்

அது உருக்குலைந்துவிடும். துண்ட துண்டாகிவிடும் பாதரசத்தைப் போல. பிறகு அது மறையவும் செய்யும்.

'என்னால் விளக்க முடியாத ஏதோ ஒன்று நிகழ்ந்து கொண்டிருக்கிறது' என்கிறீர்கள்.

அதற்கு அவசியமில்லை; அதை விளக்கமுயல வேண்டாம். முயன்றால் அது நிகழ்வது நின்றுவிடும். விளக்குதல் (explanation) மூளையின் காரியம், நிகழ்தல் என்பது இதயத்தில் நிகழ்வது மூளை மிகவும் சாமர்த்தியமாகத் தலையிடும், சம்பந்தமேயில்லாமல் தலையிட்டு தடையேற்படுத்தும். மூளை தலையிடுவதை அனுமதிக்காதீர்கள். விளக்கப்டாததை,விளக்கப்படாமலே ஏற்றுக்கொள்ளுங்கள். விளக்கம் அவசியமில்லை. வாழ்ந்துபாருங்கள், அனுபவித்தறியுங்கள். அதில் அப்படியே மூழ்கிவிடுங்கள். அதை வெளிப்படுத்தத் தேவையில்லை.

'அது நான் அறிந்திராத, உணர்ந்து கொண்ட ஒன்றாகக் கூட இருக்கும்' என்கிறீர்கள்.

ஆம், அப்படித்தான் அது நிகழ்கிறது. அறிந்து கொள்வது (Knowing) என்பது தெளிவடைவதைக் குறிக்கும். நீங்கள் அறிந்திருந்தால் உங்களால் விளக்க முடியும். அறிந்ததிருத்தல் என்பது நீங்கள் முன்பே அதை உங்களுக்கு விளக்கிக் கொண்டீர்கள் என்பதைக் குறிக்கும். உங்களுக்கு நீங்கள் விளக்க முடிகிறபோது, மற்றவர்களுக்கு ஏன் விளக்கமுடியாது? உணர்வது என்பது, ஒன்றை உங்களுக்கே நீங்கள் விளக்கமுடியாமல் இருப்பது. அது உணர்வு, அவ்வளவே நீங்கள் அதைப்பற்றி முயன்றால் அது மறைந்துவிடும்.

மிகப்பெரிய உண்மைகளை மறைமுகமாகத்தான் அணுகும் படி இருக்கும், நீங்கள் அவற்றை நேரடியாகத் தாக்கக்கூடாது. நீங்கள் மிக வெண்மையாகவும், மறைமுகமாகவும் செயல்பட வேண்டும்.

நீங்கள் இரவில் பார்த்ததுண்டா? சிறிய நட்சத்திரங்களை நீங்கள் நேரடியாக நோக்கினால், அவை மறையச் செய்யும். இன்றிரவு சோதித்துப் பாருங்கள். நீங்கள் சிறிய நட்சத்திரத்தை உற்றுக்கவனித்தால் அது மறைவதைக் காண்பீர்கள். அது

நேரடிப்பார்வைக்கு அகப்படுவதில்லை. அப்படியானால் சிறிய நட்சத்திரத்தை எந்தவழியில் கண்ட கொள்வது? பக்கவாட்டில் பாருங்கள், சுற்றிவரப் பாருங்கள், மிகச்சரியாகக் குறிப்பிட்ட பகுதியைப் பார்க்காதீர்கள். நீங்கள் இயல்பாக நட்சத்திரங்களைப் பார்க்கும்போது திடீரென்று சிறிய நட்சத்திரங்கள் தெரியத் தொடங்கும்.

உள்ளார்ந்த அனுபவங்களிலும் அதே நிலைதான். நேரடியாகப் பார்க்காதீர்கள் - உள்ளார்ந்த அனுபவங்கள் கூச்சமுடையவை. நீங்கள் நேரடியாகப்பார்த்தால் அவை ஒளிந்து கொள்ள முற்படும். அறிதல் அவசியமில்லை, உணர்வதே, போதுமானது, ஏன் அறிவதில் தீவிரம்? நீங்கள் அறிந்து கொள்வதில் தீவிரம் காட்டினால், பிறகு அதை விளக்குவதிலும் தீவிரம் காட்டுவீர்கள். நீங்கள் யாருக்கும் விளக்குகிற கட்டாயத்தில் இல்லை.

புத்தர் எங்கு செல்வதாயினும் அறிவிப்பதை வழக்கமாய் கொண்டிருந்தார். அவருடைய சீடர்கள் அவருக்குமுன் அங்கே சென்று, 'இந்தப் பன்னிரெண்டு கேள்விகளை புத்தரிடம் கேட்காதீர்கள். இவற்றைத் தவிர்த்து வேறு எதை வேண்டுமானாலும் கேளுங்கள்' என்று நகரத்துக்கு அறிவித்துவிடுவார்கள். அந்தப் பதினோரு கேள்விகள் 'அவ்யக்யம்' என்று அறியப்பட்டன - விளக்கமுடியாதாவை. நீங்கள் அந்தப் பதினோரு கேள்விகளையும் கருத்தூன்றிக் கவனித்தால், வியப்படைவீர்கள். அவை முக்கியத்துவம் உடையவை, தனிச்சிறப்பு வாய்ந்தவை. புத்தர் எதற்காக 'கேட்காதீர்கள்' என்றது? காரணம் அவரால் விளக்க முடியாது என்பதுடன், உங்களுடைய கேட்டால் உங்களைத்தவறான பாதையில் செலுத்திவிடும்.

நீங்கள் ஏதோ ஒன்றைக் கேட்டு, பதிலை எதிர்பார்க்கிறீர்கள். நீங்கள் ஒருகேள்வியை முறைப்படுத்திக் கொண்டாதாலேயே, பிரபஞ்ச இருப்பு அதற்கு விடையளித்தாக வேண்டும் என்தில்லை. உங்கள் கேள்விகளை நிறைவு செய்கிற கட்டுப்பாடு பிரபஞ்சத்திலில்லை.

அறிக்குப் பொருந்தாத கேள்விகளையும் முறைப்படுத்த முடியும் - அவை தகுதியாய், அறிவுக்குப் பொருத்தமானதாய், இலக்கணம் சார்ந்ததாய் தெரியும். மொழி வகையிலும்

குறையற்றதாகவே இருக்கும். உதாரணமாக, 'ஒலியின் (sound) நிறம் என்ன?' என்று உங்களிடம் கேட்கக் கூடும். கேள்வி என்கிற வகையில் அது யாரும் குறைகாணமுடியாத படிக்கு மிகச்சரியாக இருக்கும். மொழிசார்ந்தது குறையிருக்காது. ஆனால் ஒலியும் நிறமும ஒன்றுக்கொன்று தொடர்வுடையதாகவும் அல்லவே.

'பச்சை நிறத்தின் சுவை எப்படி' என்று யாரேனும் கேட்கக் கூடும், ஆனால், அதற்கு விடைதான் இருக்காது. உங்களுடைய கேள்விகளும் அத்தகையவைதாம்.'உலகத்தை யார் படைத்தது?' என்று ஒருவர் கேட்கிறபோது, அது தத்துவார்த்தமாய், தனிச்சிறப்புடையதாய் தெரியும். ஆனால் அது அறிவுக்குப் பொருத்தமானதல்ல. காரணம், உலகம் படைக்கப்பட்டதல்ல. ஆகா, ஒட்டுமொத்த கேள்வியுமே பொருளற்றதுதான். அது(உலகம்) எப்போதுமே இருந்து கொண்டிருப்பது.

கடவுள் படைப்பாளியல்ல. இறையுணர்வே உலகமா யிருக்கிறது. அதுவே மரங்களாகவும், பாறைகளாகவும், நதி களாகவும் இருப்பது அதுவே நீங்களாகவும், நானாகவும் இருக்கிறது. இந்தப் பிரபஞ்சமின்றி வேறு கடவுள்ளில்லை. இறையுணர்வு பிரபஞ்ச இருப்பில் இருந்து வேறாதல்ல. அது ஒன்றும் சீலையில் வரையப்படுகிற ஓவியமல்ல, ஓவியம் என்றுக் வரைந்தவர் என்றும் பிரித்துப்பார்ப்பதற்கு இறையுணர்வு நடன மாடுகிற நடனக்காரரைப் போன்றது. நடனமும் நடனமாடுகிறவரும் ஒன்றேதான். அவற்றைப் பிரிக்க முடியாது. நடனமாடுகிறவரிட மிருந்து நடனத்தையோ, நடனத்திடமிருந்த ஆடுகிறவரையோ நீங்கள் பிரிக்க முடியாது. காரணம் அவர் நடனத்தை விட்டு விட்டால் நடனக்காரரேல்ல.

உலகமே ஆடலாகவும், இறையுணர்வு ஆடுபவராகவும் இருக்கிறது. நீங்கள் ஆட்டத்தின் அங்க அசைவுகள்.ஆனால், நீங்கள் கேட்கமுடிகிறது, 'உலகத்தைப் படைத்து யார்?' என்று அதற்கு விடையளிக்க முயல்கிற முட்டாள்களும் இருக்கிறார்கள்.

'கடவுள் உலகத்தைப்படைத்தார்' என்று கேள்விக்கு விடையளித்து விடமுடியும்.'யார் உலக்த்தைப் படைத்தது?' என்ற கேள்விக்கு விடைதேடி நீங்கள் பின்னோக்கிச் சென்றால் அதற்கு முடிவே இருக்காத. 'ஏ' - 'பி'யைப்படைத்தது, 'பி' –'சி'யைப்

படைத்து 'சி' -'டி'யைப்படைத்தது... சரி அப்படியானால் 'டி'யைப் படைத்தது யார் என்று கேட்டால், அதற்கு விடையளிப்பதற் கில்லை. அது விடையைத் தேடும் கேள்வியாகிவிடும்.

பெரிய தத்துவமேதைகள் உட்பட பலரும் கேட்பதுண்டு, 'யார் முதலில் தோன்றியது முட்டையா, கோழியா?' என்று. கேள்வி என்னவோ சரியாக்த்தான் தெரியும் - நிச்சயமாக ஒன்று முதலில் தோன்றியிருக்கும். ஆனால், பொருட்கள் ஒருவட்டத்தில் நிற்க முடியும் என்று நீங்கள் எண்ணியதுண்டா? எல்லாரும் ஒரு வரிசையில் நின்று கொண்டிருப்பதாய் நீங்கள் நினைத்தால் அந்நிலையில் யாரோ ஒருவர் முதலாவதாகவும், யாரோ ஒருவர் கடைசியாகவும் நின்று கொண்டிருப்பதாய் நீங்கள் நினைத்தால் அந்நிலையில் யாரோ ஒருவர் முதலாவதாகவும், யாரோ ஒருவர் கடைசியாகவும் நிற்கும்படி இருக்கும் அல்லவா. ஆனால் மக்கள் வட்டமாக நின்றால் அவர்களில்யார் முதலில் நிற்பவர், யார் கடைசியில் நிற்பவர்?

மறைஞானிகள் கூறுகிறார்கள் உலகம் வட்டமாக இயங்கிக் கொண்டிருக்கிறது என்று. அவர்கள் சொல்வது ஓர் ஆழ்ந்த உண்மைக்கு சாடைக்குறிப்பாக (hint) இருக்கும் நட்சத்திரங்கள் வட்டத்தில் சுழல்கின்றன, பூமிவட்டத்தில் சுற்றுகிறது, சூரியன் வட்டத்தில் நகர்கிறது. பருவகாலங்கள், ஒருவட்டத்துக்குள் வந்து போய்க்கொண்டிருக்கின்றன வாழ்க்கையும் ஒரு வட்டத்திற்குள் ளாகவே இயங்கி கொண்டிருக்கிறது, மனிதனின் படைப்பு ஒரு நேர்க்கோட்டில் இருக்கிறது. யூக்ளிட் (Euclid) செய்து வைத் திருக்கிற ஒட்டு மொத்த ஜியோமிதி (வடிவியல்)யும் தவறாகி விட்டது.

தற்போது கணிதவியல் வெகுவாய் மேம்படுத்தப்பட்டு விட்டது. இனியும் யூக்ளிடிற்கு செல்லுபடித்தன்மை கிடையாது. யூக்ளிட் நேர்க்கோட்டில், நம்பிக்கை கொண்டவர். ஆனால் யூக்ளிட் சாராத (non -Euclidern) வடிவியலோ நீங்கள் ஒரு நேர்க்கோட்டை வரைய முடியாது என்கிறது. எப்படி நேர்க்கோடு வரையமுடியம்? நீங்கள் தரையில் ஒரு நேர்க்கோடு போட்டால் அது நேராக இருக்காது. காரணம் பூமி வட்டவடிவில் இருக்கிறது. அது நேராக இருப்பது போல் தெரியும். காரணம், அது ஒரு பெரிய வட்டத்தின் பகுதி. அது வட்டப்பரிதி (சுற்றளவு)யின் ஒரு பகுதி

(arc), அது நேர்க்கோடாகாது. பூமி உருண்டையாயின், அதன் மீது உட்கார்ந்து கொண்டு ஒரு நேர்க்கோட்டை நீங்கள் இழுத்தால், அதன் இரண்டு முடிவுப்பகுதிகளையும் (ends) நீட்டிக் கொண்டேபோனால் ஒருநாள் அது வட்டமாகிவிடும். எனவேதான், அதனை ஒருவட்டத்தின் பகுதி என்றது.

ராகுல் சாங்கிருத்யாயன் என்கிற தத்துவமேதை (புத்த மதத்தைச் சார்ந்தவர்)யை நான் அறிந்திருக்கிறேன். அவர் முட்டைதான் முதலில் வந்தது என்று நம்பினார். முட்டையே முதலாவது என்பதை நிரூபிக்க, பலகட்டுகரைகளை அவர் எழுதியதுண்டு. ஆனால், முட்டை எப்படி முதலாவதாய் இருக்க முடியும்? ஒரு கோழி தேவைப்படும். ஆனால் கோழி எப்படி முதலாவதாகும்? அது தோன்றுவதற்கு ஒரு முட்டை இருந்தாக வேண்டும். ஒரு முட்டையில் இருந்து தோன்றுகிற கோழி, பலமுட்டைகளை உற்பத்தி செய்கிற வழியாக இருக்கும். முட்டை என்பது பல கோழிகளை உற்பத்தி செய்கிற வழியாக இருக்கும். ஆனால் அவை இரண்டுமே செயல்முறைகளிளல்ல. கோழியில் இருந்து முட்டை, முட்டையில் இருந்து கோழி என்பது ஒரே செயல் முறைதான். இதில் எப்படி ஒன்று முதலில் வந்தது, மற்றொன்று இரண்டாவதாக வந்தது என்று கூறமுடியும்? கோழி – முட்டையாகிறது....

இது போன்ற கேள்விகள்காலம்தோறும் தொடர்பவை. இத்தகைய முட்டாள்தனமான கேள்விகளையை பற்றிச் சிந்திக்கிற போது தாங்கள் ஏதோ பெரிய காரியத்தைச் செய்வதாய் அவர்கள் எண்ணிக் கொள்கிறார்கள். புத்தர் சரியாகச்சொன்னார், 'கேள்வி கேட்காதீர்கள்' நடைமுறை சார்ந்தவராயிருங்கள்' என்று.

புத்தநெறியில் உள்ள ஒவ்வொருவரும் 'மனிதனுக்குக் கொடுக்கிற பயனைப் பொறுத்ததே ஒவ்வொன்றையும் மதிப்பீடு செய்பவர்கள்' (pragmatic) புத்தனைப்பற்றி நீங்கள் ஒர கேள்வி கேட்டால் அவர்கள் கேட்பார்கள், 'முதலில் சிலவற்றுக்குப்பதில் கூறுங்கள்: நான் ஆம் என்றோ இல்லை என்றோ கூறுவதால் அது உங்களுடைய வாழ்க்கையை மாற்றிவிடுமா? என்று.

நீங்கள் கேட்கிறீர்கள், 'உலகைப் படைத்தது யார்?' என்று. 'கடவுள்' என்ற நான் சொல்வதால் உங்கள் வாழ்க்கை மாறிவிடுமா

என்ன? 'யாருமில்லை' என்று நான் சொன்னால் அது உங்கள் வாழ்க்கையை மாற்றிவிடப் போகிறதா?'

உண்மையில், கடவுள் நம்பிக்கை உள்ளவரை (theist)யும் கடவுள் நம்பிக்கை இல்லாதவரையும் (atheist) நீங்கள் கூர்ந்து கவனித்தால் தெரியவரும். அவர்ளுடைய வாழ்க்கையில் எவ்வித வேறுபாடும் இல்லை என்பது. அவர்கள் ஒரே திரைப்படத்துக்குப் போகிறார்கள், ஒரே தொலைக்காட்சி நிகழ்ச்சியைப் பார்க்கிறார்கள். சாப்பிடுவதும் ஒரே மாதிரி உணவு. இருவருமே 'ரோட்டரி க்ளப்' உறுப்பினர்கள்.... நீங்கள் அவர்களிடையே எந்தவொரு வேறு பாடும் காணமுடியாது. ஒருவர் நடந்து கொள்வதை வைத்தே இவர் ஆத்திகர், அவர் நாத்திகர் என்று உங்களால் சொல்ல முடியுமா? முடியாது. அவர்கள் ஒரே மாதிரியாகத்தான் இருப்பார்கள்.

எனவே புத்தர் சொல்கிறார், 'உண்மையில் உங்கள் வாழ்க்கையில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாத கேள்வியை மறந்துவிடுங்கள். அது அர்த்தமற்றது. உங்கள் தியானத்தில் முன்னேற உதவும் கேள்வியை என்னிடம் கேளுங்கள், உங்களுக்கு ஞானத்தைக் கொண்டு வரக்கூடிய கேள்வியை என்னிடம் கேளுங்கள். உங்களைச் சிறையில் இருந்த விடுவிக்கக் கூடியதை என்னிடம் கேளுங்கள். அத்தனை துன்பங்களையும், மரணத்தையும் கடந்து செல்வதற்குத் தேவையானதை என்னிடம் கேளுங்கள். காலமும், இடமும் கடந்த வெளிக்கு உங்களைக் கொண்டு செல்வது பற்றிக் கேளுங்கள். சாசுவதமான ஒன்றின் (eternity) பகுதியாக ஆவதற்கு என்னிடம் கேளுங்கள்.

என்ன நடக்கிறது என்பதை அறியத் தேவையில்லை. நடக்கட்டும் என்று விட்டுவிடுங்கள், குறுக்கிடாதீர்கள். அதை விளக்கத் தேவையில்லை. அமைதியாய் இருந்து விடுங்கள். உங்களுக்குள் ஒரு ரகசியமாய் அதை வைத்துக் கொள்ளுங்கள். ஞாபகமிருக்கட்டும், மிகச் சிறந்தவைகள் இரகசியமாய் இருக்க வேண்டும. மன்னுக்குள் விழுந்த விதை, அங்கேயே இருந்துதான், பெரிய மரமாகிறது. தாயின் கர்ப்பத்தில் வளர்ச்சியடைகிற குழந்தையைப் போல இவையெல்லாம் கெரிய இரகசியங்கள். அவை உங்களுக்கு நிகழும்போது, உங்கள் இதயத்தின் அடியாழத்தில் பத்திரமாக வைத்துக் கொள்ளுங்கள், அவை அங்கேயே வளர்ச்சி காணட்டும்.

ஆம் அவை பெரிய மரமாகி, பெரிய இலைகளும், பூக்களும், பழங்களுமாய் குலுங்கும்போது மக்கள் அவற்றைத் தெரிந்து கொள்கிறார்கள். பலரும் அதனால் பயனடைகிறார்கள். உங்கள் நிழலில் பலரும் வந்து தங்குவார்கள், தங்கள் தாகத்தையும், பசியையும் தணித்துக் கொள்வார்கள். பலரும உங்கள் மலர்களால் பனிச்சிடக் கூடும். பலரும் இறையுணர்வு கொள்ளக் கூடும். உங்களைப் பார்த்த மாத்திரத்திலும், உங்களைப் பற்றி உணர்வதிலும், உங்கள் அருகாமையில் இருப்பதிலும் இத்தகைய அனுபவங்களை அவர்கள் பெறுவார்கள்.

ஆனால் எதையும் கூறவேண்டியதில்லை, விளக்க வேண்டிய தில்லை. அப்படியே நீங்கள் முயன்றாலும் அது சாத்தியமில்லை. விளக்க முயற்சிப்பதும், அறிந்து கொள்ள முயற்சிப்பதும் ஒட்டு மொத்த செயல்முறையையும் ஒழுங்கற்றதாக்கிவிடும்.

*ஏழாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே! அரசியல் வாதிகள் உண்மையிலேயே நீங்கள் சொல்கிற மாதிரி முட்டாள்தனமானவர்கள்தானா?***

அவர்கள்,நான் சொல்வதை விடவும் அதிக முட்டாள் தனம் உடையவர்கள். உண்மையில் ஒருவர் முட்டாளாக இல்லையெனில் அரசியல் வாதியாகியிருக்க முடியாது. அதனால், அரசியல் வாதிகள் எல்லாருமே முட்டாள்கள் என்பதல்ல. உண்மையில் முட்டாள்கள் மட்டுமே அரசியலின்பால் ஈர்க்கப்படுகிறார்கள்.

அடிப்படையில் அரசியல் என்ன? மற்றவர்கள் மீது ஆதிக்கம் செலுத்துவது, அவர்கள் அடக்கி அதிகாரம் பண்ண விரும்புகிற வர்கள் அறிவாளி தனக்குத்தானே எஜமானனாக இருக்க முயல்வான். முட்டாளோ மற்றவர்களுக்கு எஜமானாக முயற்சிக் கிறவன். தன்னைத்தானே வெல்ல முடியாதவனால் எப்படி மற்றவர்களை வெல்ல முடியும்?

தனக்குத்தானே தலைவனாக இல்லாதவன், மற்றவர்களுக்கு தலைவான முயற்சிப்பது மற்றவர்களை ஏமாற்றவும், முட்டா ளாக்கவுமே.

நியூடெல்லி பூங்காவொன்றில் இரண்டு அரசியல் வாதிகள் அமர்ந்து, பேசிக்கொண்டிருந்தனர். 'உம்மிடம் ஓர் உண்மையை

நான் சொல்ல வேண்டுமே எனக்குப் பறப்பதென்றால் பயம். ஆகாயவிமானங்கள் ஒன்றும் அத்தனை பாதுகாப்பாக இல்லை' என்றார் ஒருவர்.

'குழந்தை மாதிரி பேசாதீர். சென்றவாரம் பெரிய இரயில் விபத்து நடந்து முந்நூறுபேர் செத்துப்போனார்கள். அந்தச் செய்தியை நீர்படிக்கவில்லையா?' என்றார் மற்றவர்.

'இரயில் முந்நூறுபேர் சாவா? என்ன ஆச்சு?'

'ஒரு விமானம் அதன் மீது விழுந்து விட்டதாம்! சந்தைக்குச் சென்றிருந்த தீக்ஷன்வின் காதில் தற்செயலாக விழுந்த உரையாடல்.

'நான் சதுக்கத்தின் மையத்தில் மொரார்ஜி தேசாய்க்கு சிலை வைக்க ஆதரவு தெரிவிப்பேன்'

'எதற்காக?'

'கோடைகாலத்தில் அது நமக்கு நிழல் கொடுக்கும். பனிவிழும் குளிர்காலத்தில் பாதுகாப்பாக தாங்கிக் கொள்ளலாம்.

நம் சார்பாக பேச பறவைகளுக்கும் சந்தர்ப்பம் கிடைக்கும்.

*எட்டாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே, சில நாட்களுக்கு முன் உரையாற்றும் போது தாங்கள் சொன்னீர்கள் 'நாம் தளர்வாக (relaxed) இருக்கும்போது, சரீரமும் அதற்கு இசைவாக, ஒரு சவுகரியமான தோற்ற அமைவைக் கொண்டிருக்கும். நான் அதைத் தெளிவாகப் புரிந்து வைத்திருக்கிறேன்' என்று இது நம்பிக்கையின் தொடக்கம் என்பதா?***

ஆம். இது நம்பிக்கையின் தொடக்கமே. 'நடப்பது நடந்தே தீரும்' என்பதைப் புரிந்து கொள்வதற்குந்தான். நீங்கள் விழிப்போடும், இணக்கமாகவும் இருக்கவேண்டும். கண்காணிப்பாகவும், நிகழ்வுகளை வரவேற்கும் தன்மையோடும் இருந்து கொள்ள வேண்டும். வாழ்வின் முழுமையான இரகசியம் இது.

உங்களுக்குப் பணம் வேண்டும், நிறையப் பணம் வேண்டும் என்று நீங்கள் விரும்பினால் போதுமா? அது தானாகவே உங்களிடம் வந்து சேருமா? நீங்கள் தான் பணத்தைத் துரத்திக்

கொண்டு அதன் பின்னால் போக வேண்டும். உங்களுக்கு அரசியல் அதிகாரம் வேண்டும் என்றால் அது உங்களிடம் தன்னால் வந்து விடாது. நீங்கள் அதற்காகப் போரிட வேண்டும், போராட வேண்டும்.சின்ன சின்ன விஷயங்களுகெல்லாம் பிரபஞ்ச இருப்பை எதிர்பார்த்துக் கொண்டிருக்கக்கூடாது. மனிதன் தான் போராடி, அவற்றைச் செய்வதாக வேண்டும். பெரிய காரியங்களை நீங்களே செய்ய முயற்சிப்பீர்கள், ஆனாவ்ல தவற விடுவீர்கள். நீங்கள் முற்றான தணிவு நிலையில் (relaxation) இருந்து கொண்டுதான் அவற்றைச் செய்து முடிக்க வேண்டும்.

நான் சொல்வதை அப்படியே கேட்டுக்கொள்வதற்காக நீங்கள் இங்கே இருக்கவில்லை. என்னுடன் இருந்த கொண்டிருந்தாலே போதும். பேசுவதும் கேட்பதும இங்கே இருப்பதற்கு ஒரு சாக்கு. நான் உங்களிடம் பேசிக்கொண்டிருக்காவிடில் ஒன்றை மணி நேரம் போல் அசைவற்று, அமைதியாய் உட்கார்ந்திருப்பது கடினம். நான் உங்களிடம் பேசிக் கொண்டிருந்தால் உங்கள் மனம் அதில் ஈடுபட்டிருக்கும். அத்துடன் உங்களுடைய இருப்புணர்வும் முழுமையாய் தணிவு நிலையில் இருக்கும்.

இது ஒரு தியானம், சமய போதனை (discourse) அல்ல. நான ஒன்றும் போதகரல்ல, போதிப்பதற்கு நான்ஓர் ஆசானும் அல்ல, உங்களுக்கு வழங்க என்னிடம் கோட்பாடு எதுமில்லை, உங்களிடம் ஒப்படைக்க அறிவு ஏதுமில்லை. என்னுடைய பேச்சு ஓர் உபாயம், உபாயம் மட்டுமே.

இது இன்னொருவனாக தியானம் நான் பேசிக்கொண்டிருக்கிற போது உங்கள் மனம் என்னுடைய வார்த்தைகளை அனுபவித் திருக்கும். உங்களுடையு இருப்புணர்வு என்னுடன் ஓய்வாக இருக்கும். உண்மையான செயல் ஓய்வு நிலையில் இருப்பது.

நீங்கள் சொல்கிறீர்கள்: 'நான் தளர்வாக இருக்கும்போது சரீரமும் அதற்கு இசைவாக, ஒரு சவுகரியமான தோற்ற அமைவைக் கொண்டிருக்கும். நான்அதைத் தெளிவாக புரிந்துவைத்திருக்கிறேன்.' என்று சில நாட்களுக்குமுன் நிகழ்த்திய உரையில் நான் இவ்வாறு கூறியதாக,'

சரீரம் பெரிய அளவில் அறிவு நுட்பம் உடையது. தன்னுடைய அறிவை அது மேலும் மேலும் எற்று நடப்பதற்கு அனுமதியுங்கள்.

உங்களுக்கு நேரம் கிடைக்கிற போதெல்லாம் தளர்வு நிலை அடையப்பாருங்கள். சுவாசம் அதன் இயல்பில் நடைபெறட்டும். அதில் தலையிடாதீர்கள். குறுக்கிடும் பழக்கம் நம்முள் ஆழப்பதிந்திருப்பது, குறுக்கீடு இல்லாமல் சுவாசிக்கவே முடியாது என்கிற அளவிற்கு நீங்கள் தொடர்ந்து சுவாசிக்கிற நிலையில், சுவாசத்தை கண்காணியுங்கள், உங்களை அறியாமலே சுவாச இயக்கத்தில் குறுக்கிட்டிருப்பீர்கள். ஒன்று ஆழ்ந்து மூச்சு விடுவீர்கள் அல்லது அதிக அளவில் வெளிச்சுவாசம் பண்ணுவீர் கள். எவ்வகையிலும் குறுக்கிடத் தேவையில்லை. சரீரம் அறியும் தனக்கு என்ன தேவையென்பதை அதற்கு பிராணவாயு அதிகம் தேவைப்பட்டால் அது நிறைய சுவாசிக்கும், பிராணவாயு குறைந்த அளவே தேவையென்றால் குறைவாக சுவாசிக்கும்.

அதை சரீரத்திடம் விட்டுவிடுங்கள் சிறிதளவும் குறுக் கிடாதீர்கள். எங்காவது இறுக்கமாக உணர்ந்தால் அந்தப்பகுதியை கடுமைதணியச் செய்யுங்கள். (relax) மெல்ல மெல்ல... அமர்ந்த நிலையிலும், இளைப்பாறும் நிலையிலும் பிறகு செயல்படுகிற போதும், சமயலறையில் அல்லது அலுவலகத்தில் வேலை பார்க்கிற போதும் தணிவு நிலையில் குறுக்கிடுவதாகாகது. உங்கள் செயலில் அப்போது ஓர் அழகும், நேர்த்தியும் வந்து விடும். உங்கள் செயல் தியானத்தின் தரத்தைப்பெற்றிருக்கும்.

ஆம், உங்களுடைய முழு வாழ்க்கையும் மிகச்சரியாக, அப்படியே இருக்கும். இதுதான் இரகசியம். ஆனால் மக்கள் வீண் முயற்சிகள் பலவும் செய்து கொண்டிருக்கிறார்கள். சில நேரங்களில் அவர்களுடைய முயற்சியே அவர்களுக்குத் தடையாகி விடக்கூடும்.

பெரிய பனிப்புயல் வீசியதில் நகரின் வணிகத்தலத்தில் குழப்பம். முல்லா நஸ்ருத்தீன் ஒரு பருமனான பெண்ணுக்கு வாடகைக் காரில் ஏற உதவிக் கொண்டிருந்தார். பனி சறுக்கும் தரையில் பாய்ந்து, உந்தி கீழே விழுந்து ஒருவாறு சமாளித்தவர், 'உங்களைக் காருக்குள் உட்கார்த்த முடியாது போலிருக்கே' என்றார். அந்தப் பெண்மணி சொன்னாள், 'என்னது, உள்ளேயா? நான் வெளியே வரத்தானே முயற்சி பண்ணிக் கொண்டிருந்தேன்' என்று.

மிகச் சரியாகக் கவனியுங்கள். சிலவற்றை வேகமாய் செய்ய முற்பட்டால் தவறவிடுவீர்கள் ஆற்றில் ஓடும் தண்ணீர் உந்தித் தள்ளவோ, அதில் எதிர்நீச்சல் போடவோ முனையாதீர்கள். ஆறு கடலை நோக்கி இசைவாகப் போய்க்கொண்டிருக்கும். அதில் ஒரு பகுதியாய், அதன் பயணத்தில் ஒரு பகுதியாகி விடுங்கள். தளர்வாக ஆடிக் கொண்டும், பாடிக்கொண்டும் இறையுணர்வை நோக்கிப்போங்கள்.

எந்தவித முயற்சியும் தேவையில்லை. இறையுணர்வு என்பது நமது உள்ளார்ந்த இயல்பு. நாம் முன்பே கடவுளாகத்தான் இருக்கிறோம். நாம் நிம்மதியாக இருந்தால் நமக்குத் தெரியும், நிம்மதியாக இல்லை யென்பது நமக்குத் தெரியும். நிம்மதி ஞானத்தின் வாயில்.

*ஒன்பதாம் கேள்வி:*

***'ஓஷோ அவர்களே, நான் உங்களைத் தவறாகவே புரிந்து கொள்கிறேன். அது ஏன்?***

அது இயல்புதான். புரிந்த கொண்டால் அதுவியப்பு. தவறாகப் புரிந்து கொள்வதில் வியப்பதற்கு ஒன்றுமில்லை. நீங்கள் என்னைப் தவறாகப் புரிந்துக்கொள்ளும் படி , உங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கும். அத்தனை தவறான புரிதல்களுக்கும் 'நான்' என்பதே காரணம். அது உங்களுக்கும், எனக்கும் இடையே இருக்கிறது. நான் சொல்ல வேண்டியதை அது சொல்ல விடாது - அது குறுக்கிடும், விளக்கம் தரும், கருத்தை தரித்துக் கூறும், தெரிவு செய்யும், சேர்க்கும், நீக்கும் - இப்படி ஆயிரத்தியோரு வேலைகளை பண்ணும். அதன்பிறகே அது முற்றிலும் வேறானதாகி விடும். அது உங்களுக்கு, என்ன சொல்லப்பட்டதோ அதுவாக இருக்காது. அது உங்கள் மனம் அதிலிருந்து புரிந்து கொண்டதாகியிருக்கும்.

'நான்' என்பது மறைந்தால் தான் நீங்கள் என்னைப் புரிந்து கொள்ள முடியும். அல்லாதவரைக்கும் அது பயன்படாது.

தான் புதிதாக ஏற்றுக்கொண்ட தாய்நாட்டைப் பற்றி ஒரேயடியாய் புகழ்ந்து பேசினான்லோரென்ஸோ. 'இது மிகவும் சிறந்த நாடு. சினாட்ரா வைப்பாருங்கள். ஒரு துண்டு ஸ்பாகெட்டிக்கு இந்த அளவு அதிகமா இறைச்சிக் குழம்பு வேறெங்கே கிடைக்கும்?' என்று.

அவனுடைய கருத்தைப் போலத்தான் ஒவ்வொருவரும் தமது அறிவுக்கெட்டின கருத்தைவெளிப்படுத்துகிறார்கள். அதுதான் உங்கள் 'நான்' என்பதிலும் இணைந்திருக்கிறது.

ஓசார்க் விவசாயியின் மனைவி வருஷத்திற்கொரு பிள்ளை என்கிற கணக்கில் கடந்த பன்னிரண்ட வருஷங்களாய் பெற்றுத் தள்ளிக் கொண்டிருந்தாள். அவன், கடைசியாக ஒரு மருத்துவரிடம் ஆலோசனை கேட்டுச் சென்றான். 'இதில் பன்னிரண்டு ரப்பர் பொருட்கள் அடங்கிய தொகுதிகள், பன்னிரண்டு (gross) உள்ளன. குறிப்புச் சீட்டில் என்ன விவரம் இருக்கிறதோ அதைப் படித்துக்கொள்' என்றார் மருத்துவர்.

ஓராண்டுக்குப் பிறகு அந்த மனிதன் தன்னுடைய மனைவியை அழைத்துக் கொண்டுவந்தான். அவள் மறுபடியும் கர்ப்பமாக இருந்தாள்.

மருத்துவர்கேட்டார், 'என்ன பெட்டியில் எழுதப்பட்டிருந்த ஆர்கன் இல்லாத படியால் அவற்றை பியானோ மீது வச்சிட்டேன்' என்றான் விவசாயி.

(லேபிளில் ஆர்கன் (organ) என்று குறிப்பிட்டதற்கு அர்த்தம் உறுப்பு. அவன் இசைக் கருவி என்று எண்ணிக்கொண்டான்.)

உங்கள் அறியும் திறன் உங்களுடையதாகத்தான் இருக்கம். அது என்னுடைய அறிவுத்திறனாக இருக்கமுடியாது. நீங்கள் 'நான்' என்பதை ஒதுக்கிவிட்டால் அப்போது தடையெதுவும் இருக்க முடியாது, உங்களுக்கும் எனக்கும் இடையே தணிக்கைக்குரியதாய் (ஏற்கத்தகாதது) எதுவும் இருப்பதற்கில்லை. அப்போது உடனடியாக பேசவும், தொடர்புகொள்ளவும் முடியும்.

உங்கள் மனதை ஒருபுறமாய் வைத்துவிட்டால் எனது அதிர்வு உங்களுடைய இதயத்தைக் கிளர்ந்து எழுப்பச் செய்யும். உங்க ளுக்குள் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்கிற ஒன்றை விழிப் படையத் தூண்டும்.

அதிக எண்ணிக்கையில் எனது சந்நியாசிகள் அகந்தையை விடவும், எனது வேலையும் மிகுதியான அளவு மாறிவிடும். அது குறைந்தளவே சொற்களின் தொடர்புடையதாயும் ஆற்றலின் மீது பெரிதும் கவனத்தை ஒரு முனைப்படுத்துவதாயும் மாறிவிடும். அதுதான் மெல்ல மெல்ல நிகழ்ந்து கொண்டிருக்கிறது.

நான் உங்களிடம் மிகக் குறைவாகவே பேசிக்கொண்டிருப்பேன். நீங்கள் உறங்கிக் கொண்டிருந்தால் நான் உங்களை இருப்புணர்வில் பிரவேசித்து, 'நண்பனே விழித்துக்கொள்' என்று அழைப்பு விடுப்பேன்.

ஒரு நாளிரவு திருமதி. மண்டோனி வாடகைக் காரில் ஏறி அமர்ந்தாள். கொஞ்ச தூரம் சென்றதுந்தான். குறிப்பு புத்தகத்தை மறந்து விட்டு வந்தது ஞாபகமானது வாடகைக்கு காருக்கு கட்டணம் செலுத்தவும் பணமில்லை. மீட்டர் 7.50 டாலர் காண்பித்தது.

'ட்ரைவர், வண்டியை நிறுத்துங்கள். நான் உங்களுக்குப்பணம் கொடுக்க முடியாது போலிருக்கு' என்று கத்தினாள்.

'ஆகா, ரொம்பசரி. வண்டியை ஓர் இருட்டான தெருப்பக்கம் நிறுத்தி, பின் சீட்டுக்குவருகிறேன். உனது உள்ளாடையை அவிழ்த்து....

'மிஸ்டர் என்னைத் திட்டாதே. என்னோட உள்ளாடை நாற்பத்தி ஒன்பது சென்ட்டுக்குத்தான் வாங்கினது' என்றாள் அந்த இத்தாலிக்காரி.

தயவுசெய்து எனக்கும் உங்களுக்கும் இடையில் வராமல் அந்த அகந்தையை மறையச் செய்து விடுங்கள். உடனடியாய் தொடர்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். நேரடியாய் இதயத்தோடு இதயமாய் தொடர்புப்படுங்கள். அது வெறும் மனத்தொடர்பாய் இருந்து விடக்கூடாது. உங்கள் மனதை நான் வசப்படுத்துவேன். அது வசப்பட்டதும், நீங்கள் சந்நியானதும் இரண்டாவது படி உங்கள் மனதை ஒதுக்கித் தள்ளுவதுதான். மனதை ஒதுக்கி, உங்கள் இதயத்துடன் தொடர்பு கொள்ள எனக்கு இடமளியுங்கள்.

முடிவாக, உங்களுக்கு இதயத்தையும் ஒதுக்கிவிட வேண்டும். அப்போது உங்களுக்கும் எனக்கும் இடையே எந்தவேறுபாட்டையும் நீங்கள் காணமாட்டீர்கள். அப்போது என்னுடைய மனதால் உணரும் திறன் உங்களுடையதாகிவிடும், இடப்பெயர்ச்சியோ தகவல் தொடர்போ இல்லாமல் காரணம், அப்போது நாம் மையத்தில் சந்தித்துக் கொள்கிறோம். உங்கள் மையமும் என்னுடைய மையமும் வெவ்வேறாக இருக்காது. நம்முடைய

உடம்பில் வேறுபாடு இருக்கலாம், மனங்களிடையேயும் சிறிதளவு வேறுபாடு இருக்ககூடும். ஆனால் நம் இருவருடைய இருப்புணர்வும் ஒரே மாதிரி ஆகிவிடும. அவற்றிடையே எந்த வேறுபாடும் இருக்காது.

மனதை விடுவதற்கு சீடன் தயாராக இருக்க வேண்டும். இதயத்தையும், மற்றவைகளையும் விடுவதற்கு அவன் தயாராகிவிட்டால், உடனே அவன் பக்குவம் பெற்ற குருவாகி விடுவான். அதன் பிறகு அவன் கற்கவோ, அறிந்துகொள்ளவோ, அனுபவம் பெறவோ எதுவும் இருக்காது. வாழ்க்கை எப்போதும் போல் தொடர்ந்தாலும் தற்போது துன்புறவும், கனவுகாணவும், பரபரப்படையவும் உள்ளே எவரும் இருக்கமாட்டார் அந்நிலையில் இறையுணர்வில் இருப்பார். அந்நிலையில் அவர் இறையுணர்வில் இருப்பார், இறையுணர்வு அவருள் இருக்கும்.

*கடைசிக் கேள்வி:*

*'ஓஷோ அவர்களே! காமத்தை அடக்குவது நரம்பு உபாதைகளை ஏற்படுத்தும் என்பதை நான்அறிகிறேன். ஆனால், அதைத்தொடர்ந்து அடக்கி வைக்கமுயல்கிறேனே அது, ஏன்?'*

தொடக்கத்தில் இருந்தே அதை அடக்கிவைக்கும்படி நீங்கள் கற்பிக்கப்பட்டிருக்கிறீர்கள். அது உங்களில் ஒரு பகுதியாய், உங்களுடைய மனசாட்சியாய் ஆகிவிட்டது. நான் சொல்வதைக் கவனமாய் கேளுங்கள், காமத்தை அடக்கிவைப்பதே அத்தனை நரம்பு கோளாறுகளுக்கும் மூலக்காரணம் என்பதை புரிந்து கொள்வீர்கள். ஆனால் இந்தப்புரிதல் ரொம்பப் புதியது. 'காமம் அசிங்கம்' 'உடலுறவு பாவகாரியம்' என்கிற எண்ணம் ரொம்ப பழையது. ஐம்பதாண்டுப் பழைமை பழசின் மதிப்பும், அதிகாரமுமே ரொம்பவே இருக்கும்.

ஆக, காமத்தை அடக்குவதே நரம்புக்கோளாறுகளுக்கு மூலக்காரணம் என்பதை அறிவார்ந்த விதத்தில் நீங்கள் புரிந்து கொள்கிறீர்கள். ஆனால் அடியாழத்தில் உங்கள் சரீரத்திலும், வேதியியலிலும் (சரீர ரசாயனம்) அந்தக் கருத்து ஊடுருவி யிருக்கும். ஊடுருவிப்பரவியிருக்கும். பாலைக்கொடுத்த கணத்தில் இருந்து குழந்தைப் பருவம் காமத்தைப்பற்றியே நஞ்சூட்டப் பட்டவராகி விடுகிறீர்கள். அது பாவம் என்கிற நச்சுக்கருத்து

உங்களுள் பதிந்த விடுகிறது. நீண்டகால ஆழ்துயில் (hypnosis), நீங்கள் விழிப்படைய அவகாசம் தேவைப்படும்.

அறிவார்ந்த புரிதல் ஏற்பட்டிருப்பது ஒரு நல்ல தொடக்கம். அது அறிவார்ந்ததாய் மட்டுமே இருக்கிறது. வாழ்தலால் (existential) மாற வேண்டும்.

வாழ்வின் உண்மைகளை சிந்தியாவின் தாய், அவனுடைய திருமணத்துக்கு முதல்நாள் விளக்கிக் கொண்டிருந்தாள்.

'கண்ணு, உனக்குக் கல்யாணமானதும் பெர்ட்டி உன்னிடம் மிருகத்தனமாக நடந்துப்பாணோன்னு எனக்குப் பயமாருக்கு' என்றாள்அவள்.

தன்னுடைய பிரியமான பெர்ட்டி தன்னிடம் அப்படி நடந்து கொள்வான் என்பதையே சிந்தியாவால் நம்ப முடியவில்லை. அவள் அதிர்ச்சியுற்றாள்.

'ஆமாம், அப்படித்தான்' தாய் அழுத்தமாய் கூறுகிறாள். 'மேலும் உனக்கு ஞாபகப்படுத்த விரும்புகிறேன். அவன் மிருகத்தனமாய் நடந்துக்கறப்போலாம் நீ பல்லைக் கடிச்சிட்டு, முஷ்டிகளை இறுக்கிட்டு இங்கிலாந்தை நினைச்சிக்கோ' என்று.

இத்தகைய கருத்துகளே எல்லாருக்கும் வழங்கப்படுகிறது. இப்படியான பொருளற்ற விஷயங்களையே எல்லாரும் பெரிய சுமையாய் தங்களுள் சுமந்து கொண்டிருக்கிறார்கள். உடலுறவு ஓர் இயற்கையான நிகழ்வு. அதை ஏற்க வேண்டும். அதை நேசிக்கவும், மதிக்கவும் வேண்டும். அது வாழ்க்கைக்கு மூலாதாரம். அதை மதிக்காமல் இருப்பது வாழ்க்கையை அவமதிப்பதாகும். அதை மதிக்காமல் இருப்பது பிரபஞ்சஇருப்பையே கண்டனம் செய்வதாகும். அதை மதியுங்கள், நேசியுங்கள்அதை ஒரு வழிபாட்டு ஒழுக்கமாய் மேற்கொள்ளுங்கள். ஒருநாள் அந்தக் காமத்தை நீங்கள் கடந்து சென்று விடுவீர்கள். ஆனால் கடந்து அப்பால் செல்வதென்பது காமத்திற்கு எதிராக அல்ல, காமத்தின் வழியேதான். அதை ஒரு படிக்கல்லாகப் பயன்படுத்திக்கொள்ள வேண்டும். அதனிடம் நன்றியறிதலோடு இருங்கள்.

உண்மையிலேயே நீங்கள் என்னைப் புரிந்துகொள்ள விரும்பினால், கபீரைப் புரிந்துகொள்ள விரும்பினால் இதுவே

மிகச்சரியான அடித்தளமாயிருக்கும். வாழ்க்கையை நேசிக்க வேண்டும். காரணம், அது கடவுட்தன்மை கொண்டது. வாழ்க்கையை உங்கள் இருப்புணர்வுடன் உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள். காரணம் அதனுள் மறைந்திருக்கிறது. கடவுட்தன்மை. கடவுளை வாழ்க்கையின் மறுபெயராய், காதலின் மறுபெயராய் கொள்ளலாம். வாழ்க்கை உங்களுடைய கடவுளாகி விடவேண்டும். அப்போத வாழ்க்கை எதை உணர்த்தினாலும் அது கடவுட் தன்மை உடையதாகிவிடும்.

ஆனால், அதற்கு அவகாசம் தேவைப்படும். மெல்ல மெல்ல உங்களுடைய பழைய கட்டு திட்டங்கள் துண்டு துண்டுகளாய் கைவிடப்படும். நீங்கள் இங்கே சில மாதம் இருந்தால் அற்புதம் நிகழ சாத்தியம் உண்டு. மற்றவர்களுக்கு அப்படி நிகழந்திருக்கிறது. ஆயிரக்கணக்கான எனது சந்நியாசிகள் வாழ்க்கையை (வேறு வழியில்லாமலல்ல) ஏற்கத் தொடங்கி விட்டார்கள். பெரு மகிழ்ச்சியுடன், மகிழ்ச்சி பொங்கும் இதயத்துடன்.

நான் மகிழ்ச்சிக்காகவே இருக்கிறேன். நான் எல்லா வகையிலும் துறவுக்கு எதிரானவன், துறப்பதை கடுமையாய் எதிர்க்கிறேன்: நான் மாற்றத்தின் பொருட்டு இருக்கிறேன். அடக்க வைத்தலை கடுமையாய் எதிர்க்கிறேன்.

நீங்கள் அடக்கி வைப்பதாயின் கபீரை நினைவுபடுத்திக் கொள்ளுங்கள் – அடக்கி வைக்கிற காமம் கோபமாக மாறிவிடும். அடக்கி வைக்கிற கோபம் பேராசையாகி விடும். அடக்கி வைக்கிற பேராசை தற்பெருமையாகி விடும்... அப்படியே அது தொடரும். நீங்கள் இயற்கையிடமிருந்து வெகுதூரம் விலகிச் செல்கிற போது உங்கள் பயணம் சிக்கலாகி விடும். வீடு திரும்புவதும் கடினம்.

உங்கள் கர்வத்தை விட்டு, நெருங்கி வாருங்கள். அது பேராசையாகட்டும். பேராசையை இழந்து விடுங்கள். அது கோபமாக மாறும் கோபத்தை விடுங்கள். அது காமமாகி விடும். காமம் உங்களிடம் இயல்பாயமைந்த சக்தி. காமத்தில் இருந்து மாற்றம் பெற சாத்தியமிருக்கிறது. காரணம், உடலுறவின் போது சமாதி நிலை கணநேரக் காட்சியாகும். உடலுறவை முழுமையாய் அனுபவிக்கிற போது, காமத்தை முழுமையாய் நேசிக்கிற போது, உச்சகட்ட இன்பத்தை முதல் முறையாக நீங்கள் உணர்ந்து கொள்வீர்கள்.

அந்த ஒளி பரவிய சிகரங்களில் பேரமைதியே விஞ்சியிருக்கும். தொலைதூரப்பள்ளத்தாக்குகளில் அகந்தை தூக்கியெறியப்பட்டிருக்கும் காலம் எங்கோ வழியில் காணாமல் போயிருக்கும். நீங்கள் தனியாக இருக்கமாட்டீர்கள், நீங்கள் ஒரு நபராகவும் இருக்க மாட்டீர்கள். ஒரு துடிப்பாக, இருப்பாக மட்டுமே இருப்பீர்கள். நீங்கள் பரம்பொருளுடன் சீர்த்தன்மையில் துடிப்புறுகிற பொழுது அந்த அற்புதகணங்களை உடலுறவு உங்களுக்கு வழங்குகிறது. அந்தத்துடிப்பே உச்சக்கட்ட இன்பநிலை, சிற்றின்பம் பேரின்பத்திற்கு (சமாதி) ஏதுவான சன்னல்.

தற்போது அறிவார்ந்தவிதத்தில் என்ன நிகழ்கிறதோ அதை பிரபஞ்ச இருப்பிலும் நிகழ இடமளியுங்கள். அப்போதுதான் நீண்டகாலாமாய் இருந்த மரபு கைவிடப்படும். அது பெரிய அளவில் வலிமை தேவைப்படுகிற, கடுமையான முயற்சிதான். ஆனால், அதற்கேற்ற பெறுமானம் இருக்கிறது.

மேலும், உங்களுடைய கட்டுத்திட்டங்கள் துண்டு துண்டாகி மறையத் தொடங்கியதும் அதுபோன்ற சுதந்திரத்தை, உற்சாகத்தை, இலேசாகி மிதக்கிற உணர்வைப் பெறுவீர்கள். உங்களுக்குள் சிறகுகள் வளர்ந்திருப்பதாய் உணரத் தொடங்குவீர்கள். எதையும் உங்களால் செய்யமுடியும் என்கிற உணர்வு ஏற்படும். அற்புதங்கள் நிகழ்த்தும் தகுதியைப் பெற்றதாய் உணர்வீர்கள்.

ஆம் அப்படித்தான் அற்புதங்களை நிகழ்த்த உரிமை பெற்று விடுகிறான் மனிதன். ஆனால், அத்தனைக்கும் தொடக்கமாய் உங்களிடம் அன்பு இருக்க வேண்டும். எவ்வித புறக்கணிப்பும், கட்டுப்படுத்தலும், மறுத்து ஒதுக்குதலும் இருக்ககூடாது. நீங்கள் எப்படி இருக்கிறீர்களோ அப்படியே உங்களை ஏற்றுக் கொள்ளுங்கள். மாற்றமே திறவுகோலாகும்.

இன்றைக்கு இது போதும்.